உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# காஞ்சிப்புராணம்

திருக்கைலாயபரம்பரைத்திருவாவடுதுறையாதீனத்து

மஹாசந்நிதானம்

**ஸ்ரீ@ஸ்ரீ-அம்பலவாணதேசிகசுவாமிகள்.**

கட்டளையிட்டருளியபடி



சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

மாணவகரும்

மதுரைத்தமிழ்ச்சங்கத்துப்புலவரும்

மெய்கண்டசித்தாந்தசாத்திரப்பிரசாரகருமாகிய

வண்ணக்களஞ்சியம்

**காஞ்சி-நாகலிங்கமுதலியாரவர்களால்**

பலபிரதிரூபங்களைக்கொண்டுபரிசோதித்து

பெரியமேட்டு - வேங்கடாசலஞ்செட்டியாரவர்கள்

குமாரர்

ஆதிமூலஞ்செட்டியாரால்

சென்னை:

கலாரத்நாகரவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

சாதாரண௵-வைகாசிமீ

# இப்புத்தகத்திலடங்கியவை





# பிரகடனம்.



| | | |
|---|---|---|
| திருமுறைத்திரட்டு. இதனுள் சைவம் பன்னிரு திருமுறையும் அடங்கும். உயர்ந்த காலிகோகட்டடம். | ௧ | ௮ |
| சுந்தரமூர்த்திநாயனூர் அருளிச்செய்த தேவாரம். பல அரிய குறிப்புகளுடன் உயர்ந்த காலிகோகட்டடம். | ௧ | ௮ |
| சிவஞானபோதம் மூலமும் சிற்றுரையும். திராவிடமாபாடிய குறிப்புடன் உயர்ந்த காலிகோகட்டடம். | ௧ | ௦ |
| ஒருபாவுண்மையுபதேசம் மூலமும் சிதம்பரமுனிவர் விருத்தியுரையும். சாதாரணகட்டடம் | ௦ | ௬ |
| காஞ்சிப்புராணம். இதனுள் இரண்டுகாண்டமும் அடங்கும் உயர்ந்த காலிகோகட்டடம். | ௨ | ௮ |

இங்ஙனம்,

பெரியமெட்டு - ஆதிமூலஞ்செட்டியார்,

செந்தமிழ்ப்புத்தகசாலை,

சென்னை

சிவமயம்.

# முகவுரை.

## வழிபடுகடவுள்வணக்கம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இதுவுமது.

நதிகாட்டுஞ் செஞ்சடையு நடங்காட்டுந் திருவடியு நஞ்சை யுண்டு
துதிகாட்டுங் கருமிடறுந் துணைகாட்டு மொருசிவையுந் துரிசே யில்லா
விதிகாட்டுங் கனிவாயும் விடைகாட்டும் பரசிவனுர்.விதியி னேத்தப்
பதிகாட்டும் பிரணவத்தின் பயன்காட்டுந் தணிகைவரைப் பகவன் வாழி. *

---

அநாதிமலமுத்தராய் பஞ்சமந்திர சரீரியாய் அஷ்டகுண சம்பன்னராய் சகள நிஷ்கள நிஷ்கள சகள சொரூபியா யுள்ள சதாசிவ நாயனுராலே பிரதம மஹாசிருஷ்டி ஆரம்பத்திலே அநாதிமல பெத்தராகிய ஆன்மாக்கள் விதிவிலக் கறிந்து கடைத்தேறும் பொருட்டுத திருவாயமலாந்தருளிய வேதவேதாந்தங்களிலே பரமாகாசமென்றும் பிரமபுரமென்றும் ஜோதிசுவாக்கமென்றும் சுவாக்கமென்றும் ஆங்காங்கு,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என்று பிரதிபாதிக்கப்பட்டதாயும், "தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும் பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை - மூவர்கோ னாய்நின்ற

---

* திருவூறைபுராணம், கடவுள்வாழ்த்து, செய்யுள் - ௯.

# முகவுரை.

"முதல்வன்" * விரும்பத்தக்க நித்திய நைமித்திக காமிகம் என்னும் மூன்றனுள் நித்தியார்ச்சனைப் பயன் ஒன்றனையே தரவல்ல மற்றைய கண்டங்களைப் போலாது அம்மூன்றருச்சனைப் பயனையும் ஒருங்கே கொடுக்க வல்ல, கீழ்க்கடல் மேற்கடல் குமரி இமயம் என்னும் நாற்பாங்கெல்லைக் குட்பட்ட பரதகண்டத்தில் சிறந்ததாயும், மங்கல நகரமாகிய அயோத்தியாமுதலிய சப்த புரிகளுள் ஒன்றாய் வைத்துப் போற்றப்பட்டதாயும், "நகரேஷு காஞ்சி" என்று காளிதாசமஹாகவியால் எடுத்தாளப்பட்டதாயும், திருக்கைலாயதுல்லியம் புவனசாரம் மும்மூர்த்திவாசம் விஷ்ணுபுரம் இலயசித்து கலிசித்து சகலசித்தி தபோமயம் பிரமபுரம் ஆதிபீடம் கன்னிகாப்பு சிவபுரம் என்று மஹாருஷிகளால் துதிக்கப்பட்டதாயும், பலவூழி காலத்தினும் ஓங்கிவிளங்கிவருவதாயும் உள்ளது காஞ்சி மஹாக்ஷேத்திரமேயாம். இதனை, "இப்படி யாவரு மெய்திய திறலை - ஒப்பன போல வுரைத்திட லொப்போ - அப்பதி யேயத னுக்கிணை யனதீச - செப்பரி தாற்பிற சீர்கெழு காஞ்சி." † எனவும், "வானோக்கி நிற்குமூலகென்னவு மன்னவன்செங் - கோனோக்கி நிற்குங் குடியெனவுங் கோதிலும்பர் - ஆனோர்க்கு நாக ருலகோர்க்கு மவனி யோர்க்கும் - ஏனோர்க்கு நாடு நகராகி யிருந்ததவ்வூர்." ‡ எனவும் பாராட்டிப் போந்தார் கந்தபுராண வாசிரியராகிய கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்.

இத்தெய்வத் திருப்பதி, கிழக்கில் பெருந்தவசியாகிய அமிர்தருஜத்தினின்றும் பெருகிய க்ஷீரநதி சங்கமமாகிய கடற்கரையையும் தெற்கில் பிநாகத்தினால் வெளிப்பட்ட கங்கையாகிய தக்ஷிண பிநாகினியையும் மேற்கில் அமிர்த சஞ்சீவி கலந்த சிலாஹ்ருத நதியையும் வடக்கில் விரஜாநதி சம்பந்தமுடைய சுவாமி புஷ்கரணியையும் முதலாவரணமாகவும், கிழக்கில் பரசிவானுக்கிரகம் பெற்று வாழ்ந்திருந்த மஹாபலிச்சக்கிரவர்த்தி புரத்தையும் தெற்கில் உக்கிரசேனன் பெருந்தவம் பிடித்துப் பெற்ற பெண்கொடி பேராற்கண்ட தேவகி புரத்தையும் மேற்கில் அரம்பையின் வேண்டுகோளின்படி பிரமனெடுத்த விரிஞ்சி புரத்தையும் வடக்கில் உலகநாசம் பெறததோன்றிய நாகத்தை எல்லாம் வல்ல சித்தராட்டிய நாகலா புரத்தையும் இரண்டாமாவரணமாகவும், கிழக்கில் திருவேணி சங்கமமெனனும் திருமுக்கூடலையும் தெற்கில் வியாக்கிர புரமென்னும் திருப்புலி வனத்தையும் மேற்கில் க்ஷீராப்தி நகரமென்னும் திருப்பாற்கடலையும் வடக்கில் நந்திகங்கா புரமென்னும் தக்கோலத்தையும் மூன்றாமாவரணமாகவும் உடையது.

இதனுண்ணகரமானது பரசிவம் பராசத்தி குடிலாசத்தி இம்மூன்றின் சொரூபமாயும், நிஷ்கள சகள சகளநிஷ்கள சொரூபமாயும், சோமாஸ்கந்த சொரூபமாயும், சத்தி பின்னுபின்ன சொரூபமாயும் விளங்குவதாம். அஃது ஆகம வசனங்களிலே,

---

* திருவாசகம், திருச்சதகம், சுட்டறுத்தல், செய்யுள் - ௯௰.

† திருநகரப்படலம், செய்யுள் - ௯. ‡ ஷை படலம், செய்யுள் - ௯௨.

[illegible]
[illegible]

என்று விதந்தோதப்பட்டதாம். இதனால் இந்த க்ஷேத்திரம் முத்திக்ஷேத்திரமெனவும், புத்திக்ஷேத்திரமெனவும், புத்திமுத்திக்ஷேத்திரமெனவும், மூர்த்தி தலம் தீர்த்தம் பர்வதம் வனம் முதலிய பல விம்மிதம் அமைந்த சைவக்ஷேத்திரமெனவும் கூறப்படும்.

இங்கே மாவிருக்ஷவடியில் "ஆரு மெய்தற் கரிது பெரிதுமே - ஆற்ற லெய்தற் கரிது பெரிதுமே - தேரு மெய்ம்மறி யாது திகைப்பரே - சித்த மும்மறி யாது திகைப்பரே - கார்நிறத்த மணாக்கொரு கம்பமே - கடவுணீ யிடங் கொண்டது கம்பமே." * என்று திருக்கடைக் காப்பால் போற்றப்பட்டதாய், ஜோதிலிங்க சொரூபமாய் வேண்டுவார் வேண்டுவதை வெறுப்பக் கொடுக்க எழுந்தருளிய பரசிவம்,

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

என்று தோத்திரிக்கப்பட்ட ஏகாம்பரநாத சுவாமியாம்.

இனி, பிலாகாச சொரூபியாய் "எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்." † எனவும் "சத்திதன் வடிவேதென்னில் தடையிலா ஞானமாகும்." ‡ எனவும், "வாரிருங்குழல் மைவா ணெடுங்கண் மலைமகண் மதுவிம்மு கொன்றைத் - தாரிருந் தடமார்பு நீங்காத் தையலா ளுலகுய்ய வைத்த - காரிரும் பொழிற் கச்சி மூதூர் காமக் கோட்டம்." ¶ எனவும் திராவிடசுருதி ஆணையிட்டருளியபடி எழுந்தருளிய பராசத்தி,

[illegible]
[illegible]

* திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருவியமகம், செய்யுள் - ௧௦.
† சிவஞானசித்தியார்சுபக்கம், இரண்டாஞ் சூத்திரம், செய்யுள் - ௭௫.
‡ சிவஞானசித்தியார்சுபக்கம், முதற்சூத்திரம், செய்யுள் - ௬௨.
¶ சுந்தரமூர்த்திநாயனார், திருவோணகாந்தன்றளி, செய்யுள் - ௬.

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

என்று தோத்திரிக்கப்பட்ட காமாக்ஷியம்மையாம்.

இச் சகதாம்பிகை நாதபிந்து சம்யுதம் பரமம் வியோமம் எனவும், ஆகாசசரீரம் பிரஹ்மம் எனவும் சம்புசரீரம் எனவும், பிரத்தியக்ஷம் மோக்ஷதம்பரம் எனவும், தேவசின்னப: எனவும், ஜகத்காம கலாகாரம் எனவும், குண்டலினீபதம் எனவும், ஆதிபௌதிக மாமாங்கம் எனவும், காமநகரம் எனவும், திவ்வியம் எனவும், அகநம் எனவும், சாவ சித்தி தம் தபஸ்தானம் எனவும், சூக்ஷுமம் பிலம் எனவும், பூயோனி எனவும், காமகோடி எனவும், காமகோஷ்டம் எனவும் வேதாகம புராண வீதி காசங்களால் ஆங்காங்கு,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என்று விதந்தோதும பிலாகாச சொரூபமானபடியால் அதனிடமிருந்து சகளீகரித்துப் பரசிவத்தை அதிஷ்டிக்க, குடிலா சொரூபமான ஸகந்த கௌமார கோலம குடிலாசத்தி சொரூபமாய் மத்தியில அநுக்கிரகார்த்தம் தோன்றி நின்றது; அதுவே சோமாஸ்கந்த சொரூபமாம். இது நிஷ்களசகள சொரூபமாயுள்ளது இப * பரஞ்சோதி,

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

என்று தோத்திரிக்கப்பட்ட குமரகோட்டக்கடவுளாம்.

---

* இவ்விஷயம் கூறும் வடமொழி காஞ்சிமஹாத்மியத்தில சுப்பிரமணியக் கடவுளைப் பரஞ்சோதி என்றே பேசப்பட்டுள்ளது.

இதனால் பரசிவம் பரசிவை பரஞ்சோதி இம்மூன்றும் அருட்பெருஞ்சோதி வடிவமெனவும், இம்மூர்த்திகளைத் தனித்தனி தியானித்துப் பூசிப்பது நிஷ்களசொரூப பூசையெனவும், ஒன்றுபடுத்தித் தியானித்துப் பூசிப்பது சகளசொரூப பூசையெனவும் வேதாகமங்கள் விளங்க எடுத்துக்கூறும். இது கொண்டன்றே இம்மஹாக்ஷேத்திரம் சகள நிஷ்கள சொரூபமான க்ஷேத்திரமெனவும், ஏகீபாவ க்ஷேத்திரமெனவும் ஆன்றோர்களால் அநுட்டானத்தில் வைத்து மிகப் பெரிதும் போற்றப்பட்டு வருகின்றது.

மேற்கூறிய போந்த ஒப்பற்ற மாட்சிமையை ஆட்சியாகக் கொண்ட இத்தெய்வ மஹாக்ஷேத்திரத்திலே,

ஶிவவீஜஸ்ஸ்ரீ ஹூ ஶக்தம் வெஶஸாவாஹிரஜ்ஜ்வலம் ।
ஶ்ரீகண்டநாதநயாயாஸ்ஸவஸாஷம் ஶம்ஹரோத்ஸவம் ॥

என்று எடுத்துக்கூறும் மாவிருக்ஷத்தின் கீழ் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கின்ற ஏகாம்பரர் முதலிய சிவாலயங்களில் சத்தி மூர்த்தமும் சத்தி ஆலயமும் கிடையா? ஆனால், நித்தியாதி நடைபெறும் ஆன்மார்த்த பரார்த்த பூஜா காலங்களிலும் தியான காலங்களிலும் சொரூப சத்தியாக அநுஷ்டிக்கப்பட்டு இல மூர்த்தமாய்ப் பூசிக்கப்பட்டு வருகின்றது. இவ்வாறாகவே குமரகோட்டம் கந்தபரா என்னும் சுப்பிரமணியர் ஆலயத்திலும் ஸ்ரீவல்லியம்பாள், தெய்வசேனையம்பாள் என்கிற இருமூர்த்தங்களும் இல மூர்த்தமாகவே அமைத்துப் பூசிக்கப்பட்டு வருகின்றன. இதனுண்மை, "பாயன்னை புறச்சமயப் பிணக்குநூல் வழியனைத்தும் பிழையே யன்று - வாயண்மை தெளிந்து சைவ சித்தாந்த வழி நின்று அதீத வாழ்வில் - போயண்மி அஞ்செழுத்தும் திருநீறும் கண்டிகையும் பொருளாகக் கொண்ட - நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும் பெருமைபெறு" * பெற்றவாற்றாக விளங்கக் கிடக்கும்.

இனி, முற்கூறிய முதலாவரணத் துட்பட்ட பூமியிலே எண்ணிறந்த சிவாலயாதி பல் தேவாலயங்கள் உள்ளன. ஆனால் அத்தனையும் காண்டற் கரியனவாம். அவற்றுள் காண்டற்குரியனவாய் விளங்குவன அறுபத்தாறாயிரம். இவற்றுள் சிவாலயம் பதினாறாயிரம், சத்தியாலயம் ஐயாயிரம், கணேசராலயம் ஐஞ்ஞூறு, கந்தராலயம் ஐஞ்ஞூறு, விஷ்ணு ஆலயம் பன்னீராயிரம், சூரியனாலயம் ஐஞ்ஞூறு, பிரமனாலயம் பதினாயிரத் தெழுநூறு, துர்க்கையாலயம் ஆயிரம், வைரவராலயம் ஆயிரம், சாத்தனாலயம் ஆயிரம், புத்தனாலயம் எண்ணாயிரம், அருகனாலயம் ஒன்பதினாயிரத் தெழுநூறு, அநந்தனாலயம் நூறும். இக்காலத்தில் சூரியன் பிரமன் புத்தன் அருகன் அநந்தன் முதலாயினோருக்கு ஆலயங்கள் உண்டென்பதற்குச் சிற்சில இடங்களிலே பற்பல குறிகள் காணப்படுகின்றன.

* இந்நூல், கடவுள்வாழ்த்து, செய்யுள் - கக.

பிரசித்தமா யுள்ளன சிவாலயங்களும் சததியாலயங்களும் கணபதியால யங்களும் கந்தனுலயங்களும சாததனுலயஙகளும விஷ்ணு ஆலயங்களுமே யாம். இரணடொரு பௌத்தராலயங்களும நல்ல நிலைமையில் காணக் கிடைப்பதுணடு; அதுவே திருப்பருததிக்குனறு முதலியன வாகும.

இம்மஹாபுரியினுள மகிமாதிசயம் தங்கிய நிததிய தீர்த்தம் வார தீர்த்தம் பக்ஷ தீரததம் மாச தீரததம் வருஷ தீரததம்,

[illegible]
[illegible]

என்று துதிக்கபபட்ட சாவதீர்ததம்,

[illegible]
[illegible]

என்று போற்றப்பட்ட வேகவதி தீரததம் முதலிய பலவுளவாம். அததீரதத விசேஷததினே, "ஈணடு தீவினே யாவையு நீக்கி யின்பமே தரும் புணணிய தீர்த்தம் - வேணடி ஞாதமக கிட்ட சித்தியதாய் விளங்கு தீர்த்தநன் மங்கல தீர்த்தம் - நீணட காபபுடைத் தீரதத மூன்றுலகி னிகழ்ந்த சாறுவ தீர்த்தமு முதலா - ஆணடு நீடிய தீர்த்த மெணணிலவு மமர நாட்டவ ராடித லொழியா." * என்று பெரியபுராணம் போறறிப புகழ்ந்து மகிழும்.

இக்காஞ்சி மஹாக்ஷேததிர பிரபாவம வடமொழியில ஸ்காந்த புராணம சனத்குமார சம்ஹிதை காளிகா கணடததில தீரததமான் மியத்தில் கூறப்பட்டுள்ள ஐமபததைந்து அததியாயமாகிய பஞ்சாசத் என்கிற நூலினும், சிவபுராணம பிரமாணட புராணம முதலிய பல புராணங்களி னின்றும திரட்டபபட்டுள்ள நூறு அத்தியாயமாகிய சதாத்தியாயம் என்கிற நூலினும, மாரக்கணடேயபுராணம விததியா கணடத தில் பேசப்பட்டுள்ள பதினைகு அததியாயமாகிய காமாக்ஷிவிலாசம் என்கிற நூலினும் விஸ்தரிக்கபபட்டுள்ளது. இதனுள பஞ்சாசத் என்கிற நூல் சிவமூரததங்களுடைய கௌரவ பிரபாவங்களையும, சதாததியாயம என்கிற நூல் தலம் தீரததம் என்கிற இரணடின் கௌரவ பிரபாவங்களை யும், காமாக்ஷிவிலாசம என்கிற நூல் மஹாதேவியினுடைய கௌரவ பிரபாவங்களையும் எடுத்துக்கூறும்.

இம்மூன்றனுள் பஞசாசத் என்கிற நூலைத திருக்கைலாய பரம்ப ரைத் திருவாவடுதுறை ஆதீனததுத் திராவிட மஹாபாஷ்ய காததரா கிய சிவஞானயோகிகள தென்மொழியிலே காஞ்சிப்புராணம் முதறகா ண்டம் என்னும் பெயரினுல் செய்தருளினா. சதாததியாயம் என்கிற நூலை மேற்படி சிவஞானயோகிகள் மாணுககருள்ளே சிறந்த கச்சியப்ப முநிவரா் காஞசிப்புராணம இரணடாங்காணடம் என்னும் பெயரினுல்

* திருக்குறிப்புத்தொண்டநாயனுர்புராணம், செய்யுள - ௭௮.

தமிழிலே செய்தருளினர். காமாக்ஷிவிலாசம் என்கிறதால் தமிழிலே செய்யுள் ரூபமாகக் காணப்படவில்லை. இதனை ஸ்ரீ கோளகிமட நிவாச பஞ்சாக்ஷர சிவாசாரியார் மரபில் வந்தவரும், உபயவேதாந்த பிரவர்த்தகா சாரியரும், சிவாகம ஞானநிஷ்டாபரரும், திருவேகம்பநாதர் பூஜகரும், எனது ஞானசாரியரும் ஆகிய ஸ்ரீமது முத்துகச்சபேச்வர சிவாசாரிய சுவாமிகள் கட்டளையின்படி காமகோட்டபுராணம் என்னும் பெயரினால் பாடிக்கொண்டு வருகின்றேன்; சீக்கிரமே முடிந்து அச்சுவாகனமேறி வெளிவரக்கூடும்.

இஃதன்றித் தென்மொழியில் கவித்துறைக் காஞ்சிப்புராணம் என ஒன்றும், பண்டைய காஞ்சிப்புராணம் என ஒன்றும் காணப்படுகின்றன. இவ்விரண்டும் சொற்சுவை, பொருட்சுவைகளில் தனக்குத்தானே ஒப்பானவை. முறையே இதனாசிரியா பிள்ளையார்பாளையம் ஆனந்ததேசிகராதீனத்துச் சிதம்பர தேசிகரென்றும், வாலியூர் பிரதாபமுதலியாரென்றும் கூறுகின்றனர். இப்புராணம் இரண்டனுள்ளும் கூறப்பட்டுள்ள சரித்திரம் வேறு என்று மயங்கவேண்டாம்; முதலிரண்டு காண்டம் அடங்கிய காஞ்சிப்புராணத்துள் கூறப்பட்ட சரித்திரங்களேயாம்.

இவ்விரண்டு புராணத்தையும் தக்கோலம் ஐயா செல்லப்ப நாகமணி முதலியார் அவர்கள் குமாரராகிய இராமசாமிமுதலியார், இராமகிருஷ்ண முதலியார் என்னும் வித்துவஜன பரிபாலகர் வேண்டுகோளினபடி அவர்கள் செலவில் பல கையெழுத்துப் பிரதிகள்கொண்டு செவ்வையாகப் பரிசோதித்து அருமபதவுரையுடன் அச்சிடலாமென்று மிக முயன்று வருகின்றேன் ; ஆனால், காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் மஹாவித்துவான் ஸ்ரீ நமச்சிவாயமுதலியார் அவர்கள் மாணாக்கர் பலர்கூடிப் பாடங்கேட்டபடி எழுதிவைத்துள்ள * தணிகைப்புராணக்குறிப்புரை என்னும் அரியபெரிய நூலை முந்தி வெளியிடுவது நலமெனப் பலர் கூறுகின்றனர். அவ்வாறு செய்வது உசிதமென்றே நினைக்கின்றேன்; திருவருள்கூட்டி முடிக்கவேண்டும். இதுநிற்க,

இக்காஞ்சிப்புராணத்தைப் பலதேசப் பிரதிரூபங்கள் கொண்டு நன்றாகப் பரிசோதித்துச் செவ்வனே அச்சிட்டு வெளியிட வேண்டுமென்றென்னிட மெழுந்த பேராசை பிடர் பிடித்துத் தள்ள அதன் வயப்பட்டு அவ்வாறு செய்யத் தொடங்கினேன்; நடைபெற்று வருங்காலத்தில இடையிடையே உண்டான கஷ்ட நஷ்டங்கள் மிகப் பலவாம். அவ்வக்காலங்களில் அடியேன் மனந்தளராமல் ஊக்கத்துடன் எடுத்த வேலையை இனிது முடிக்கும்படி உடனிருந்து வேண்டியபடி சகாயம்

* இம்முயற்சி சைவசமயாபிமானமும், தமிழ் சம்ஸ்கிருத பாஷாபிமானமும், கல்வி கேள்விகளும், அவற்றின் பயனாகிய அறிவும், அதன் பயனாகிய சிவாலய தரும பரிபாலனமும் ஒருங்குடைய ஸ்ரீமான் காஞ்சிபுரம் மு-சுப்பராய முதலியார் அவர்கள் பேருதவியால் முற்றுப்பெறலாம்.

செய்து முற்றுப்பெறச் செய்த எனது போதகாசிரியரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து மஹாவித்துவானும், சித்தாந்த சரபமும் ஆகிய அஷ்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் அவர்கள் பெருந் தகைமைக்கு மனப்பூர்வமாக வந்தனஞ் செய்கின்றேன்.

இந்நூலோடு சேர்த்தச்சிடுதற்பொருட்டு எழுதப்பட்ட அரும்பத வுரையையும், ஆங்காங்கு மிக முயன்று தேடிப்பிடித்த சிலாசாசனக் குறிப்புரையையும், ஒவ்வொரு படலச் செய்யுளின் பின்றொடர்ந்தெழுதிய வசனவுரையும் காலநீட்டித்தலையும் பாரமதிகப்படுதலையும் நோக்கி இப்பொழுதச்சிடாமல் நிறுத்தப்பட்டன; பிறகு பிழைதிருத்தத்துடன் தனியே அச்சிட்டு வெளியிடக்கூடும்.

இப்புராணத்தை முற்றுப்பெறச்செய்த எல்லாம் வல்ல இறைவன், ஊரொடு பேரும் ஒன்றும் இல்லான்-ஊரொடு பேரும் உண்டென வந்து-பூவடு வண்டுறை பொன்னிநாட்டகத்து-ஆவடு துறையில் அமர்ந்தினி தருளும்-மகாசந்நிதானமாகிய ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகசுவாமிகள் ஆஞ்ஞையின் கீழ் நடைபெற்று வரும் உரையோடு கூடிய சித்தாந்த ஞானசாத்திரம் பதினான்கும் அடங்கிய மெய்கண்டசாத்திரம், பண்டார சாத்திர்ம், திருமுறைத்திரட்டு முதலியவற்றையும் இந்தப்படி முடித்துத் தருவனென்று நினைக்கின்றேன்.

இப்பதிப்பில் ஆங்காங்குக் காணப்படும் பிழைகளையும் அவற்றின் திருத்தங்களையும் தயைசெய்து விவேகிகள் குறித்தனுப்பின் அவர்கள் பெயருடன் அவற்றைப் பின்னரச்சிட்டுப் பலர்க்கும் பயன்படும்படி செய்வேன். சுபம்! சுபம்!! சுபம்!!!



யாப்பருங்கலவிருத்திமேற்கோள்.

"வையக மெல்லாங் கழனியா—வையகத்துச்
செயயகமே நாற்றிசையிற் றேயங்கள்—செயயகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு—வான்கரும்பின்
சாறே யந்நாட்டுத் தலையூர்கள்—சாறட்ட
கட்டியே கச்சிப் புரமெல்லாங்—கட்டியுட்
டானேற்ற மான சருக்கரை மாமணியே
யானேற்றான் கச்சி யகம்."



சென்னை:
11—2—12.

இங்ஙனம்,
காஞ்சி - நாகலிங்கன்.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

திருச்செந்தூர்ச் சுப்பிரமணிய வித்தியாசாலைக்கும்,
காவிரிப்பூம்பட்டினத்து மேலையூர் அறுபத்துமூவர் வித்தியாசாலைக்கும்,
சென்னைச் சைவ வித்தியாநுபாலன யந்திரசாலைக்கும்
அதிபதியாகிய
யாழ்ப்பாணத்து வண்ணைநகர்

## ஸ்ரீமத். சுவாமிநாதபண்டிதரவர்கள்

இயற்றியது.

திருவினை புரியும் பெருமைசா லுயிர்க்குங்
கருவினை புரியுங் கருமைசா லுயிர்க்கு
மிருவினைக் கேற்ப வியற்றுநிக் கிரகமும்
புரியநுக் கிரகமும் பரிவுட னியற்ற
றன்னருட் டொழிலென மன்னுயிர்த் தொகையுள
ஞாயிறுந் திங்களு மாயிருஞ் சுடரு
மோய்வின் றோரிடத் தொருங்குறீஇ யுதித்துச்
செம்மையாய் மிளிர்ந்து திசைதொறுந் திசைதொறும்
வெம்மையுந் தண்மையும் வீற்றுவீற் றுய்க்குமா
பால மேற்கொண் டாலக் கீழான்
ஞாலமேல் வாழ்குநர் சால வியப்ப
விருளறு மாயை யெனுமொரு பீடத்
தருளுடன் குருவா யமர்ந்துவீற் றிருந்த
தென்முகக் கடவு டன்னருட் டிறத்தாற்
பன்முகச் சமயப் பான்மையை மறுக்கு
மான போத மன்னிய நற்சிவ
ஞான போத நவிலரு நூலினை
நந்தியெம் பெருமான் புந்தியிற் கொள்ளச்
சுந்தர மாகமுன் சொற்றன னாகச்
*சைவா கமங்க டம்மின் முரணுவ
செய்யா வென்பது தேற்றியக் நந்தி

யெய்யாமை யகற்றி யினிதருள் பூத்துப்
பொய்யா வுளத்துக் கையாத் தவச்சனற்
குமார மாமுனி கொண்டிடக் கொளுவ
வமார ருகு மமாரனை வென்ற
சத்திய ஞான தரிசனி பெற்றுச்
சுத்திய மாப்பரஞ் சோதி முனிக்கு
வைத்தருள் கூர வித்தக முனிவனு
மத்தலை யகன்று மெய்த்தவந் தவக்கூர்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
கைகண் டறியக் கழறிட வன்பா
லவன ருணர்ந்திக் களித்திட வுவன்பா
ளவமிகு மறைஞா னப்பண் ணவனு
முவனுமை யுமாபதி யொப்பில் சிவனுந்
தவமிகு ஞானஞ் சார்ந்துவந் தருள்புரி
கயிலைமா மரபின் மயிலைப் புறங்கா
ணயிலை நோக்கிய வங்கனை யாரை
வென்று ஞான மிளிர்வா ளகவுறை
நின்று கழியா நின்மல நமச்சி
வாய னென்னு மறுவில் ஞான
குரவனை யடியாக் கொண்டிடு துறைசை
யுரவா தீனத் தோங்குபே ரெழிலான்
வேண்டா தீதலின் மாண்டகு மாமுகில்
வேண்டிய துதவலிற் காண்டகு கற்பக
மெண்ணிய தருதலிற் கண்ணுசிந் தாமணி
புண்ணியம் பூசுங் கண்ணிய மேரு
கற்றவ ருசாவுங் கல்விக் களஞ்சிய
முற்றவர்த் தாங்கு மொருபெரும் வங்கம்
நாவியும் பூவியு நலத்தகப் புல்லி
யாவியிற் போற்றுங் காவி யுடையோ
னும்பர்த் தலத்தும் பம்பிடு சீர்த்தி
யம்பல வாண வருட்குரு ராய
னகத்தியன் வரத்தா லன்றவ தரித்துச்
சகத்தியல் கடந்த மகத்துவ முடையோன்
விற்பனக் குரிசி லுற்பவந் தொடங்கி
யற்புத னடியரைச் சிற்பர னுக
வொழியாப் பவக்கட லோட்டந் தொளிப்ப
வழிபா டுஞற்றி வரம்பெறு சீலன்
பாடிய முந்திய பற்பல வுரைகள்
பாடிய நூல்கள் பற்பல வகுத்தோ
னவனூ னமகல வரனரு ளாலே

தவஞா னம்பெறு சிவஞான முனிவனும்
மற்றவன் மாணவர் பற்பல ருள்ளும்
பொற்புறு வித்தை கற்றொளி மிக்கோன்
பலப்பல நூல்கள் பண்ணிய விபுத
னுலப்பிலா மதியினோ னெங்கருள் வசத்த
னுச்சிமேற் புலவர் வைச்சிடு சீர்த்தியான்
கச்சி யப்பனுங்.கவின்பெறு முனிவனுஞ்
சொற்றிடு வளப்பெலா மற்றதின் விரவக்
கற்றிடு ஞானநூற் கருத்தெலாம் பொலிய
வியற்றிமுன் வைத்த வினையிலா நூலாங்
காஞ்சிமான் மியத்தைக் கசடற வச்சில்
வாஞ்சையிற் றருகென வழங்கின னகச்
சான்றோ ருடைத்தென வான்றோர் புகழ்தரு
தொண்டைநன் னாட்டிற் கெண்டகு சிரமாய்
மண்டல மதித்த விண்டொடர் மாடச்
சென்னைமா நகரிற் சொன்னமா வதிவோன்
சொன்னயம் பொருணயந் துறுமிய தருக்க
நன்னய விலக்கண நால்வகைப் பௌத்த
மாதிய மதங்க ளவற்றின் மறுப்பு
நீதியிற் றடைவிடை நிரம்புத லுற்ற
போதமுன் னகப் புகல்பதி னன்கு
மோதியி னேதி வாதிக ளோங்க
மாப்ர சங்க மாமழை பொழியு
மாப்த சிகாமணி யன்பர்தங் கண்மணி
மறுவின் மதிபுனை இறலின் மிகுமர
னறுபா னன்கா மாட லியற்றிய
மதுரைமா நகரில் வயங்கிடு சங்கப்
புலவரு ளொருவனுப் போற்றுமா வித்துவா
னையுந் சென்னை மெய்கண்ட சபைக்குஞ்
சிவனடி யார்தங் தவமிகு சபைக்கு
மதிபதி யாக வதிதரு வள்ள
லழுக்கா றுதிய விழுப்பமில் குணங்க
ளிழுக்கா வியன்ற வொழுக்கா றுடையோன்
றன்னயங் கருதாச் சால்போ டியார்க்கு
நன்னயம் புணர்க்கு நலத்தகு குன்றஞ்
சைவவான் பயிர்க்கோர் தெய்வவான் மேக
மும்வகை நாடு மெய்வகை யடியரைச்
சிவனெனப் பாவனை சிந்தையி னிறீஇப்
பவவினை பாற்றி யவமகன் றொளிர்வோன்

சூத னொலிமாலை யாதிய வேண்டினர்
மாதுய ரகல வழங்கிடு முரவோ
னட்டாவ தானங் கட்டவும் வல்லோ
னெட்டா மூர்த்தி யிணையடிக் கன்பன்
கத்தார் மதங்களாம் பொய்த்தசீ யங்கொலுஞ்
சித்தாந்த சரபமாத் திகழ்ந்திடு திறலோன்
பூவையுங் கிள்ளையும் பொலிந்தினி துறையுங்
காவையுந் தடத்தையுங் காட்டிடும் பூவைக்
கலியாண சுந்தரக் கவிஞன் றன்பா
னலியா வண்ண நன்குறக் கற்ற
மாணவர் குழாத்துண் மாட்சிமிக் குடையோ
னுணவ மில்லா வமைகுண சீலன்
வண்ணக் களஞ்சியம் வண்ணக் களஞ்சிய
மெண்ணக் களஞ்சிய மெண்ணக் களஞ்சிய,
மென்னப் பகர்ந்துற வுன்ன வபய
நன்னர்க் கொடுத்து நயக்குறு மின்பன்
மெய்கண்ட சாத்திரம் விழுத்தக வச்சிற்
பொய்கண் டிடாவணம் போற்றித் தந்தோன்
விதிக்குரி மாந்தர் வியந்திடப் பின்னு
மதிப்புறு நூல்பல வாய்ப்பவச் சிட்டோன்
செம்மையிற் கம்பைத் தீரத் துமையா
மம்மை யிருந்தவ மாற்றிய காஞ்சி
நாக லிங்க நற்கவி ராயன்
மாகர லிகித வழுக்களைக் களைஇப்
பெரிய மெட்டிற் பிறங்கிடு வைசிய
ரரிய குழாத்துட் டெரிய நின்ற
வேங்க டாசல விழுத்தகு வைசிய
னேங்கப் பெற்ற வுத்தம குமாரனு
மாதி மூலனென் றறைதரு வைசிய
னேதிய கருத்து மேதக முற்றுற
வச்சினில் வயக்கி யளித்தான்
மெச்சிட யாரு மேதினி தனிலே.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கைலாயபரம்பரைத்திருவாவடுதுறையாதீனத்துத்

திராவிடமகாபாஷ்யகர்த்தராகிய.

# சிவஞானயோகிகள்வரலாறு

---

கயிலாயபரம்பரையிற்சிவஞானபோதநெறிகாட்டும்வெண்ணெய்
பயில்வாய்மைமெய்கண்டான்சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபானுவாகிக்
குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ்குருநமச்சிவாயதேவன்
சயிலாதிமரபுடையோன்றிருமரபுநீடூழிதழைகமாதோ.

---

திருக்கைலாயமலையிலே, அருள்வடிவாகிய கல்லாலமரநிழலிலே, தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீகண்டபரமசிவன்பால், ஆகமங்களை யெல்லாம் கேட்டருளிய நந்தியம்பெருமான் ஸ்ரீகண்டமுதல்வரை வணங்கி நின்று, காமிகமுதலிய சைவாகமங்களின் ஞானபாதப்பொருளின் இகலறுத்து அவற்றின் பொருளுண்மை போதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அம்முதல்வர் நன்றேவினாயினும் அவ்வுண்மை ரௌரவாகமத்துட் பன்னிரு சூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞானபோதமென்பதோர்படலம், அதுகேட்டவர்க்கு எல்லா ஆகமப்பொருள்களும், மாறுகோளின்றி இனிதுவிளங்குமெனக்கூறி, அச்சிவஞானபோதத்தை நந்தியம்பெருமானுக்கு அருளிச் செய்தார். நந்தியம்பெருமானும் அதுகேட்டதுணையானே எல்லா ஐயமுநீங்கி, மெய்ப்பொருள் தெளிந்து, பின் அதனைத் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சநற்குமார முனிவருக்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச் செய்தார். அவர்தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதி முனிவருககு அருளிச்செய்தார்.

பின்பு நடுநாட்டிலே, திருப்பெண்ணாகடத்திலே, பரம்பரைச் சைவவேளாள குலதிலகரும், சிவபத்தி அடியார் பத்திகளினும் கல்வி செல்வங்களினுஞ் சிறந்தவரும், அச்சுதர் களப்பாளர் என்னும் பெயருடையவரும் ஆகிய ஒருவர் இருந்தார். அவர் நெடுங்காலம் பிள்ளைப்

பேறின்மையால், அதற்கு உரிய அரிய விரதாதிகளையெல்லாம், ஆதிசைவரும், சகலாகமபண்டிதரும் ஆகிய தம்முடைய குலாசாரியர் முகமாக உணர்ந்து அநுட்டித்துவந்தனர்; வந்தும் சித்திபெறாது வருந்தி, பின்னும் சகலாகம பண்டிதரிடத்தில் விண்ணப்பஞ் செய்தனர்; அதனை உணர்ந்த சகலாகமபண்டிதர் உற்றுநோக்கி அறிவித்தபடி, அச்சுதர் களப்பாளர் தமிழ்வேதமாகிய தேவாரத்திலே, விதிப்படி அருச்சித்து வணங்கிக் கயிறுசாத்தினர்; சாத்தியவழி, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் திருவாய்மலர்ந்தருளிய "கண்காட்டு நுதலானும்" என்னுந் திருவெண்காட்டுத் திருப்பதிகத்திலே, அருட்சத்தியாகிய உமாதேவியார் திருநாமசம்பந்தமான "பேயடையா பிரிவெய்தும்" என்னுந் திருப்பாடல் உதயமாயிற்று; அதிலே "வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார் பிள்ளையினேடு உள்ளநினை வாயினவே வரம்பெறுவர் ஒன்றும் ஐயுறவேண்டா" என்னும் பொருளைச் சகலாகமபண்டிதர் நோக்கி நோக்கி, மிகமகிழ்ந்து கொண்டாடி அச்சுதர் களப்பாளர்க்கு உரைத்தனர்.

அதன்பின் அச்சுதர் களப்பாளர் ஆசிரியரிடத்தே விடைபெற்றுக் கொண்டு, திருவெண்காடு என்னுந் திருப்பதியைத் தம்முடைய மனைவியாரோடு அடைந்து, திருக்கோயிலின்கண்ணே, சோமசூரியாக்கினி என்னும் முச்சுடர்களின் திருநாமம்பெற்ற முக்குளத்திலே, விதிப்படி ஸ்நானம்பண்ணி, சிவபிரானையும் உமாதேவியாரையுந் தரிசித்து வழிபடுவாராயினர். அங்ஙனம் வழிபடுநாளிலே, ஒருநாள் அவருக்குச் சொப்பனத்திலே, சிவபிரான்தோன்றி, "உனக்கு இப்பிறவியிலே, பிள்ளைப்பேறு அரியதாயினும், சர்வாபீஷ்டமும் தரத்தக்கதாய், நமக்கு மிக்க பிரீதியுடையதாயுள்ள தேவாரத்தைப் பரமப் பிரமாணமாகக் கொண்டு நீ ஒழுகுகின்றமையால், அத்தேவாரத்தைப்பாடிச் சைவஸ்தாபனஞ்செய்த திருஞானசம்பந்தப்பிள்ளை என்றே கொள்ளும்படி நமது திருவருளினலே, இன்னும் தமிழ்நாடு உய்யும்வண்ணம், அத்தேவாரத்தின் மெய்ப்பொருளை உள்ளடக்கிய சைவசித்தாந்த சாத்திரத்தை வெளிப்படுத்திச் சைவஸ்தாபனஞ் செய்யத்தக்கவனாக; உன்னிடத்தில் ஒருபுத்திரன் அவதரிப்பான்" என்று சொல்லி மறைந்தருளினர்; உடனே விழித்தெழுந்த அச்சுதர் களப்பாளர் பெருமகிழ்ச்சிகொண்டு மனைவியாருக்குத் தெரிவித்து, அவரோடு தாமும் பேரன்புடன் சுவேதாரணியரையும், பிரமவித்தியா நாயகியாரையும் வழிபட்டு வசித்தார்; அங்ஙனம் வசிக்குநாளிலே, தம்முடைய மனைவியாரது அருமைத்திருவயிற்றிலே, கருப்பம் உண்டாகி, ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ்செய்தார். பின்பு தந்தையார் அப்பிள்ளையாருக்கு உரிய பருவத்திலே சுவேதவனப்பெருமாள் என்னுந் திருநாமம் சாத்தினர்.

அதன் பின்பு சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமமுடைய அப்பிள்ளையார் திருவெண்ணெய் நல்லூர் என்னுந் திருப்பதி

யிலே தம்முடைய நன்மாமனார்வீட்டிலே வளருவாராயினார். வளர்ந்து; இரண்டு பிராயத்திற்றானே மெய்யுணர்வின் முற்றுப்பே றுடையராய், எழுந்தருளியிருந்தார். இருக்குநாளிலே, பரஞ்சோதிமுனிவர் திருக்கைலாய மலையினின்று நீங்கி, திருவெண்ணெய்நல்லூரை அடைந்து, அம்மெய்யுணர் வுடையாரைச் சந்தித்து, சிவஞானபோதத்தை நல்கி, இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்துய்தற்பொருட்டு, மொழிபெயர்த்துப் பொழிப்பும் உரைக்கவென்றருளிப் பொழிப் புரைக்குமாறும் சத்தியஞான தரிசனிகள்பால், தாங்கேட்டவாறே வகுத்தருளிச்செய்து, பொய்ச்சமயங்களின் நெறி இது இது என்று கண்டு கழிப்பித்து, மெய்ச்சமயமாகிய சைவத்தின் உண்மை உணர்ந்து, அதனை ஸ்தாபனஞ்செய்யும் காரணத்திற்கும், தம்முடைய ஆசிரியர் சத்தியஞான தரிசனிகள் திருநாமத்திற்கும் இணங்க, அம்மெய்யுணர் வுடையாருக்கு மெய்கண்டதேவர் எனத் திருநாமம் சாத்தி நீங்கினார்.

பின்பு மெய்கண்டதேவர் அத்திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருக்கின்ற சுயம்புமூர்த்தியாகிய பொல்லா விநாயகக்கடவுள் சந்நிதியில் சிவஞானபோதத்தைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடி, சிவபிரான் திருவருளும், ஆசிரியர் பரஞ்சோதிமுனிவர் கருத்தும்நோக்கி, தமிழ்நாடு உய்யும்வண்ணம், அவ்வடமொழிச் சிவஞான போதத்தைத் தமிழில் வார்த்திகப் பொழிப்பாக மொழிபெயர்த்து, பல அற்புதங்களை விளக்கி, சைவஸ்தாபனஞ்செய்து, தம்முடைய மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருள்ளும் சிறந்தவரும், திருத்துறையூரிலே அவதரித்தருளிய ஆதிசைவரும், சகலாகமபண்டிதரென்னுங் காரணப்பெயருடையவருமாகிய அருணந்தி சிவாசாரியருக்கு அளித்தருளினார்.

அருணந்தி சிவாசாரியர் முதனூலாகிய சிவஞானபோதத்திற்கு வழிநூலாகச் சிவஞானசித்தியாரும், இருபாவிருபதும் ஆகிய இரண்டு சைவசித்தாந்தசாத்திரங்களை அருளிச்செய்து, அவைகளையும் சிவஞானபோதத்தையும் திருப்பெண்ணாகடத்திலே பிராமணகுலத்திலே அவதரித்தருளிய மறைஞானசம்பந்தசிவாசாரியருக்கு உபதேசித்தருளினார்.

மெய்கண்டதேவர் மாணாக்கருள்ளே திருவதிகை மனவாசகங்கடந்தார் உண்மைவிளக்கமென்னுஞ் சைவசித்தாந்த சாத்திரத்தை இயற்றியருளினார்.

மேற்கூறிய மறைஞானசம்பந்த சிவாசாரியர் சிதம்பரத்தைச்சார்ந்த திருக்களாஞ்சேரியில், சிருங்காரவனத்தில், பிரமபுரீசுரர் சந்நிதியில் எழுந்தருளி யிருந்துகொண்டு, தில்லைவாழந்தணர்களுள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியருக்கு உபதேசித்தருளினார்.

உமாபதிசிவாசாரியர் சிதம்பரத்தைச்சார்ந்த கொற்றவன்குடியிலே எழுந்தருளியிருந்துகொண்டு, வடமொழியிலே பௌஷ்கராகமத்துக்கு

வியாக்கியானத்தையும், தமிழிலே புடைநூலாகிய சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் எட்டுச் சைவசித்தாந்த சாத்திரங்களையும், கோயிற்புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்ட புராணம், சேக்கிழார்நாயனார் புராணம், திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவை, சிவக்ஷேத்திர சிவநாமக் கலிவெண்பா முதலியவற்றையும் செய்தருளினார். சங்கற்பநிராகரணம் செய்தருளியகாலம் சாலிவாகன சகாப்தம். ௧௨௩௫.

உமாபதிசிவாசாரியர் அருணமச்சிவாயதேசிகர் முதலிய மாணாக்கர்களுக்கு உபதேசித்தருளினார். அன்றியும் சபாநாயகர் விடுத்தருளிய,

"அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியாற் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை."

என்னுந் திருமுகத்தைப் பெற்றுக்கொண்டு, பெற்றான் சாம்பானுக்கு உடனே முத்தி கொடுத்தருளினார். பின்பு அப்பெற்றான் சாம்பானுடைய மனைவியும் அரசன் முதலாயினோருங் காண அதனுண்மையை வெளிப்படுத்தி அவர்கள் ஐயத்தை ஒழித்தற்பொருட்டுத் தம்முடைய ஆன்மார்த்தபூசை கொண்டருளிய சிவபிரான் ஆடியருளிய தீர்த்தத்தினால் வளர்ந்து பரிபக்குவமடைந்துள்ள முள்ளிச்செடிக்கு முத்தி கொடுத்தருளினார்.

சிதம்பரமான்மியத்தின் வழித்தாக அருளிச் செய்யப்பட்ட கோயிற்புராணம் அரங்கேற்றப்படாது பேடகத்துள் இருந்தபொழுது, சபாநாயகர் தில்லைவாழந்தணர்களுக்குச் சொப்பனத்திலே தோன்றி "நாம் கொற்றவன்குடி உமாபதியுடைய பேடகத்துள் இருக்கின்றோம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதனைத் தில்லைவாழந்தணர்கள் உமாபதி சிவாசாரியருக்கு விண்ணப்பஞ்செய்ய, அவர் கோயிற்புராணத்தைச் சபாநாயகர் சந்நிதியில விரைவில் அரங்கேற்றியருளினார்.

திருக்கடவூரிலே அவதரித்தருளிய உய்யவந்ததேவ நாயனார் பெரும்பற்றப்புலியூரில எழுந்தருளியிருந்தபொழுது, தம்முடைய ஆசாரியராகிய திருவியலூர் ஆளவந்ததேவநாயனார் தமக்கருளிச்செய்த திருவுந்தியாரென்னுஞ் சைவசித்தாந்த சாத்திரத்தை விரித்துத், தம்மையடைந்த ஓரதிபரிபக்குவர்பொருட்டு ஒருசைவசித்தாந்த சாத்திரத்தை அருளிச்செய்து, அதன் பெருமையை உலகத்துள்ளாரும் உணர்ந்துய்யுமாறு திருவுளங்கொண்டு, திருவம்பலத்திற்சென்று வணங்கி, திருக்களிற்றுப்படியிலே அந்நூலை வைக்குமளவில், அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந்து அதனை வாங்கிப் பரமகருணாநிதியாகிய நடராஜரது திருவடி

பிலே கொடுத்தமையால், அத்திருப்படைவீட்டிலுள்ள எழுநூறு திருமடத்துமுதலிகளும் தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் மாகேசுரர் நாற்பத்தெண்ணாயிரவரும் திருக்கோயிற்றிருத்தொண்டுசெய்யுந் திருப்பேர் ஏழாயிரத்துத் தொளாயிரவரும் பிறரும் சந்நிதியிலே கூடிநின்று வியப்புற்று, அந்நூற்குத் திருக்களிற்றுப்படியாரெனத் திருநாமஞ் சாத்தினர்கள். ஆகலான் மேற்கூறிய திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய இரண்டும், மெய்கண்டதேவர் அருளிச்செய்த சிவஞானபோதம் ஒன்றும், அருணந்திசிவாசாரியர் அருளிச்செய்த சிவஞானசித்தியார், இருபாவிருபது ஆகிய இரண்டும், மனவாசகங்கடந்தார் அருளிச்செய்த உண்மைவிளக்கம் ஒன்றும், உமாபதிசிவாசாரியர் அருளிச்செய்த சிவப்பிரகாசமுதலிய எட்டும் ஆகப் பதினன்கு சைவசித்தாந்த சாத்திரங்களும் மெய்கண்டசாத்திரம் என அடிப்பட்ட சான்றோரால் வழங்கப்பட்டு வருகின்றன.

"உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று."

"வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் திருப்பாட்டே யுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்."

மேற்கூறிய உமாபதி சிவாசாரியரிடத்தே அநுக்கிரகம்பெற்ற அருணமச்சிவாயதேசிகர் நவகோடிசித்தவாசபுரமென்னுந் திருநாமமுடைய திருவாவடுதுறையிலே சித்தமூர்த்தியாக எழுந்தருளியிருந்த சித்தர் சிவப்பிரகாசதேசிகருக்கு உபதேசித்தருளினர்.

சித்தர்சிவப்பிரகாச தேசிகர் திருமூவலூரிலே பரம்பரைச்சைவ வேளாளர்குலத்திலே திருவவதாரஞ்செய்து, பிரமசரியநிலையிலே துறவறத்தினராய்ச் சத்திநிபாதத் துத்தமராய், எழுந்தருளியிருந்த நமச்சிவாய மூர்த்திகளுக்கு உபதேசித்தருளினர்.

நமச்சிவாயமூர்த்திகள் தம்முடைய ஆசாரியர் ஆஞ்ஞாபித்தருளியபடி திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்து கொண்டு, சிவப்பிரகாசதேசிகருக்கு ஞானவதிமுறைப்படி சிவதருமணியென்னும் நைட்டிகதீக்ஷைசெய்து, அபிஷேகம்பண்ணிச் சைவசித்தாந்த சாத்திரத்தை உபதேசித்தருளினர். சிவப்பிரகாசதேசிகர் வைணவர்களாலே சிதம்பராலய பூஜைக்கு முட்டுப்பாடுவந்தவழி, ஞானதேசிகராகிய நமச்சிவாய மூர்த்திகள்பால் ஆஞ்ஞைபெற்றுக்கொண்டு சென்று, தம்மைவழிபடும் வண்ணம் அக்காலத்துள்ள அரசரை வசப்படுத்திச் சிதம்பராலயபூஜை சிறப்புற நடாத்துவித்துப் பின்பு கிட்டையிலே வீற்றிருந்தருளினர்.

பின்பு பஞ்சாக்கரதேசிகமூர்த்திகள் திருவாவடுதுறையிலே திருவவதாரஞ்செய்து, தீவிரதரபக்குவராய் எழுந்தருளியிருந்த மறைஞானதேசிகருக்கு அபிஷேகஞ்செய்து உபதேசித்தருளினர். மறைஞானதேசிகர் சைவசித்தாந்தசாத்திரோபதேசம் கேட்டதுணையானே, சிந்தித்துத் தெளிந்து, தைலதாரைபோல இடையறாது நிட்டையிலே வீற்றிருந்தருளினர்.

பின்பு நமச்சிவாயதேசிகோத்தமர் ஆதீனபரம்பரையாகச் சித்தாந்தோபதேசம் விளங்கிவரும்வண்ணம் திருவுளங்கொண்டு, அம்பலவாணதேசிகருக்கும், தக்ஷிணாமூர்த்திதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்த சாஸ்திரத்தை உபதேசித்தருளினர்.

தக்ஷிணாமூர்த்திதேசிகர் மெய்கண்டசாத்திரத்தின் கருத்தை உள்ளடக்கிய தசகாரியம், உபதேசப்பஃறொடை யென்னும் இரண்டு ஞானநூல்களைச் செய்தருளிச் சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்தபடியே பரிபூரணதசை அடைந்தார்.

அம்பலவாணதேசிகர் தசகாரியம், சன்மார்க்கசித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்தப்பஃறொடை, சித்தாந்தசிகாமணி, உபாயநிட்டைவெண்பா, உபதேசவெண்பா, நிட்டைவிளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை எனப் பத்தியரூபமாகப் பத்துஞானநூல்களையும், பூப்பிள்ளை என்னுந் திருப்பெயருடைய ஒருபரிபக்குவர்பொருட்டு, உயிரட்டவணை எனவும் பூப்பிள்ளை அட்டவணை எனவும் பெயர்பெற்ற கத்தியரூபமாகிய ஒருஞானநூலையும் செய்தருளினர்.

அன்றியும் அம்பலவாணதேசிகர் தம்மையடைந்த வைணவப்பிராமணரும் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த பரிபக்குவருமாகிய உலகுடையநாயனர் என்பவருக்குச் சைவசந்நியாசங்கொடுத்து, நைட்டிக நிருவாணதீக்ஷைசெய்து, மெய்கண்டசாத்திரங்களையும், தாம் இயற்றியருளிய தசகாரியமுதலிய நூல்களையும் உபதேசித்தருளினர். உலகுடையநாயனர் தம்முடைய ஞானசாரியர்மீது சைவசித்தாந்தசாத்திரக் கருத்தை யுள்ளடக்கிய தோத்திரரூபமாக,

"மலமெனுந் தடத்திற் கருமசேதகத்தின் மாயையாங் கிழங்கிலங்குரித்து
மன்னுமூ வெட்டாந் தத்துவ நாள மலரிதழ் வித்தையேழ் வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டு கண்ணுகே சரங்களாஞ் சத்தி
நற்பொகுட்டாகு நாதமே விந்து நயந்தகண் ணுமென் விரவி
இலகுமென் னுடலப் பதுமபீ டிகைநீ யிருந்தரு ளாசன மெனுமல்
எனதுபக்கிலதா வெண்ணினேன் றெளிய வியலருட் பார்வைதந் தனையே
அலகிலா வுயிர்கண் மலகடைக் கிலேயா யருணடைக் குண்மையாய் நின்ற
ஆவடு துறைசை யம்பல வாண வடியவர்க் கருளுமா நிதியே."

என்றற் றொடக்கத்துப் பத்துத் திருவிருத்தங்களைப் பாடியருளினர்.

பின்னும் அம்பலவாண தேசிகரிடத்தே சிவதீக்ஷை பெற்றுச் சித்தாந்த சைவோபதேசமும் கேட்டருளிய சிவபுரம் பெரியபிள்ளை என்பவர் தம்முடைய ஆசாரியர்மீது,

"அந்தமலத் தத்துவித மானபணி யாலகற்றி
வந்தமலத் தத்துவிதம் வைததாயே—யெந்தாய்
திருவா வடுதுறைவாழ் தேசிகா பொய்யின்
மருவாத வம்பல வாணா."

என்றற் றொடக்கத்துப் பத்துத் திருவெண்பாக்களைப் பாடியருளினர்.

பிரமசரிய நிலையிலே துறவறத்தினராய்த், திருவாவடுதுறையின் கண் எழுந்தருளி யிருந்துகொண்டு, ஆதீன பரம்பரையாகச் சித்தாந்தோபதேசம் நிகழ்ந்துவரும் வண்ணம் திருவுளங்கொண்டு, மாணாக்கர்களுக்கு அபிஷேகஞ்செய்து, உபதேசித்தருளிய ஞானசாரியராகிய நமச்சிவாய மூர்த்திகள் ஆதீனத்துக்குப் பிரதம பரமாசாரியரும், உபதேச பரம்பரை அங்குரித்தற்கு அருகமாய் அப்பிரதமாசாரியர் காலத்தில் இருந்தருளிய அம்பலவாணதேசிகர் துவிதீயாசாரியருமானதால், இந்த ஞானாதீனத்துக்கு வந்தருளும் ஆசாரியர்கள் நைட்டிக துரியாச்சிரமிகளா யிருத்தலும், பெரியபட்டத்தில எழுந்தருளி யிருக்கும் பொழுது, அடியவர் முதலாயினருக்கு அனுப்பியருளும் திருமுகங்களில் "நமசிவாய" எனவும், சின்னப்பட்டத்தில எழுந்தருளி யிருக்கும்பொழுது "சுபமஸ்து" எனவும் திருகைச் சாத்திடுதலும், சாம்பிரதாயமாகப் பண்டைக்காலந் தொடங்கி இன்றுகாறும் நிகழ்ந்து வருகின்றன.

அம்பலவாண தேசிகர் உருத்திரகோடி தேசிகருக்கும், அவர் வேலப்ப தேசிகருக்கும், அவர் குமாரசுவாமி தேசிகருக்கும், அவர் பிற் குமாரசுவாமி தேசிகருக்கும், அவர் மாசிலாமணி தேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து, சைவசித்தாந்த சாத்திரத்தை உபதேசித்தருளினர்.

மாசிலாமணி தேசிகர் திருவாவடுதுறையிலே மாகேசுவரபூசை சிறப்புறநடாத்தி மடாலயத்தில எழுந்தருளியிருக்குங் காலத்திலே, ஒருநாள் இரவிலே பேயும் உறங்கும் அர்த்தயாமத்திலே, தஞ்சைநகரத்து மன்னவர் பஞ்சமவேடம் பூண்டுசென்று, அம்மடாலயத்தின் புறத்தே தூரத்தேநின்று "ஓசாமீ அடியேனைப் பசிவருத்து கின்றதே" என்று பேரொலியிட்டு அழைத்தபொழுது, ஒடுக்கத்திலே சிவத்தியானத்தோடு அறிதுயிலமர்ந்த மாசிலாமணிதேசிகர் ஓலமிட்டு அழைப்பவன் நீசன் என்றும் பசியால்வருந்தி அழைக்கின்றான் என்றும், உணர்ந்து மடைப்பள்ளியிற் புகுந்து, ஒரு பாத்திரத்தில் அன்னமும் கறிமுதலியவும் எடுத்துவைத்துத் தலைவாயிற்கதவைத் திறந்து புறத்தே வந்து, தூரத்தே அப்பாத்திரத்தை வைத்துப் பசிநீங்கப் புசிக்கும்படி அருமையாகச்சொல்லி, மடாலயத்துள்ளே புகுந்து, விடிந்தபின்னர்த்

தவசிப் பிள்ளைகளை அழைப்பித்து, இராத்திரி மடைப்பள்ளி திறந்திடக்கமையால், சுவானம் உள்ளே பிரவேசித்துவிட்டது; ஆகையால் மடைப்பள்ளியிலுள்ள அமுதுமுதலியவற்றை வெளிப்படுத்தி முற்றுஞ் சுத்திசெய்து, புண்ணியாகவாசனம் செய்வித்தபின்பு பாகஞ்செய்யத் தொடங்கும்படி கட்டளையிட்டருளினர். அரசர் அப்பாத்திரத்தைச் சேமித்துவைத்து, தருமபுர ஆதீனஞ்சார்ந்து பேரொலியிட்டும் பிக்ஷை கேட்டவழி, பண்டாரக்கட்டிலே திருவடிச் சிந்தனையோடு சயனித்திருந்த பண்டாரசந்நிதிகள் "பிக்ஷைகேட்பவன் பஞ்சமன்போலும்" என்று திருவுளங்கொண்டு "மடாலயத்திலே நீசனுக்குப் பிக்ஷையிடமாட்டார்கள்" என்று சொல்லிப் போக்கிவிட்டார்கள். இங்ஙனம் இரவிலே நிகழ்ந்த செய்திகளை அரசர் தஞ்சைநகாஞ் சேர்ந்து அரசிருக்கை மண்டபத்தில வீற்றிருந்து சமஸ்தரும் அறியச்செய்தனர்.

பின்பு ஒரு விசேட புண்ணியகாலம் வந்தபொழுது, மாசிலாமணி தேசிகர் காவேரிசங்கம ஸ்நாநத்துக்கு எழுந்தருளினர். அப்போது தஞ்சைநகரவேந்தரும போந்து, காவேரி சங்கமஸ்நாநஞ்செய்து திருவெண்காடு சேர்ந்தனர். மாசிலாமணி தேசிகரும் திருத்தொண்டர் திருக்கூட்டத்துடன் ஸ்நாநஞ் செய்துகொண்டு அச்சுவேதாரணியத்துக்கு வந்தருளினர். பின்னர் ஞானதேசிகரும் அரசரும் கலந்து வசிக்குங் காலத்திலே, அரசர் ஒரு மண்டலங்காறும் பிராமணபோஜனம் பெரிதுஞ் சிறப்புறச்செய்வித்து அவ்வுயர்ச்சி அனைவர்க்கும் புலப்படும் வண்ணம் அவ்வுச்சிட்டத்தை உவர்க்கூபத்திலே போடச்செய்து, முடிவிலே தூர்வை எடுப்பித்தபின்பு அக்கிணற்றுநீரிலே புழுக்களும் உவரும் நீங்காமலிருந்தன. இதனையுணர்ந்த ஞானதேசிகர் ஒருமண்டலங்காறும் அரசர்முகமாக மாகேசுரபூசை சிறப்புற நடாத்தித் தம் மடாலயத்துள்ள உவர்க்கூபத்திலே அடியவர் பரிகலத்தைப் போடச்செய்து, இறுதியிலே அரசரையும் அழைத்து வைத்துக்கொண்டு அக்கிணற்றைத் தூர்வை யெடுப்பித்தபொழுது, அதிலுள்ள உவர்நீங்கிக் கங்காஜலம்போல நறுநீர்சுரந்து பெருகியது. அரசர் "அக்கிணற்றுக்குப் பரிகலக்கிணறு" என்று நாமம் இட்டு அம்மடாலயத்துக்குச் சருவமானியநிலமும் விட்டனர். அப்பரிகலககிணறும், சருவமானிய நிலமும் இப்போதும் விளக்கமாயுள்ளன. ஞானதேசிகர் அம்மடாலயத்திலே நெடுங்காலம் அமர்ந்து நிட்டையில் இருந்தருளினர்.

பின்னும் அக்காலத்திலே ஆதீன சிஷ்யவர்க்கங்களிலே கல்வியினும் செல்வத்தினும் அதிகாரத்தினும் சிறந்து திருநெல்வேலியிலிருந்த மயிலேறும் பெருமாள் பிள்ளை யிடத்தே தமிழிலே தொல்காப்பிய முதலிய இலக்கண இலக்கியங்களை உணர்ந்தவரும், செப்பறைப்பதியிலிருந்த சிவப்பிராமணராகிய கனகசபாபதி சிவாசாரியரிடத்தே வடமொழியை உணர்ந்தவரும், ஆதீன ஞானதேசிகரிடத்தே சங்காபிஷேகமும் ஈசான தேசிகரென்னுஞ் சிறப்புத் திருநாமமும் சைவசித்தாந்த

சாத்திரோபதேசமும் பெற்றுத் திருநெல்வேலியில் ஆதீனத்தைச் சார்ந்த ஈசான மடாலயத்தில் இருந்தவருமாகிய சுவாமிநாத தேசிகர் அரிய இலக்கண விதிகளைத் திரட்டி இலக்கணக்கொத்தென்னும் நூலை யும் தசகாரியமாகிய ஞானநூலையும் இயற்றியருளினர். அன்றியும் நன் னூலுக்கு விருத்தியுரைசெய்த சங்கரநமச்சிவாயப் புலவர் முதலாகிய மாணாக்கர்களுக்குக் கல்விகற்பித்தருளினர்.

மாசிலாமணி தேசிகர் இராமலிங்க தேசிகருக்கும், அவர் வேலப்ப தேசிகருக்கும், அவர் பின் வேலப்ப தேசிகரெனப் பெயர்பெற்ற இருவ ருக்கும் அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்த சாத்திரத்தை உபதேசித் தருளினர்.

பெரியபட்டத்தில் எழுந்தருளியிருந்த பின்வேலப்பதேசிகர் திருப் பறியலூர்ப்புராணத்தை மொழிபெயர்த் தருளினர்.

சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த பின்வேலப்பதேசிகர் பஞ் சாக்கரப்பஃறொடை யென்னும் ஞானநூலைச் செய்தருளினர்.

பின்னும் வாதுளாகமப்படி ஞானபூஜாவிதி மொழிபெயர்ப்பு, மர பட்டவணை, அநாதியட்டவணை, அனுபோகவெண்பா, வருணசிவாசாரி யர்பத்ததிப்படி கிரியாபூஜாவிதி மொழிபெயர்ப்பு, முதலாயின அம்மர பில் அனுக்கிரகம்பெற்ற ஆன்றோராற் செய்தருளப்பெற்று வழங்கு கின்றன.

அம்பலவாண தேசிகர் அருளிச்செய்த தசகாரியமுதலாயின பத் தும், தக்ஷிணாமூர்த்தி தேசிகர் அருளிச்செய்த தசகாரிய முதலாயின இரண்டும், சுவாமிநாத தேசிகர் அருளிச்செய்த தசகாரியம் ஒன்றும், பின்வேலப்ப தேசிகர் அருளிச்செய்த பஞ்சாக்கரப்பஃறொடை ஒன் றும் ஆகப் பதினன்கு ஞானநூல்களும் பண்டாரசாத்திரம் என ஆன் றோரால் வழங்கப்பட்டு வருகின்றன.

அவ் வேலப்ப தேசிகராகிய ஞானசாரியர் காலத்திலே, பாண்டி வளநாட்டிலே, பொதியமலைச் சாரலிலே, பாவநாசமென்னுந் திருப் பதியைச்சார்ந்த விக்கிரமசிங்க புரத்திலே, அகத்திய மகாமுனிவ ரிடத்தே ஏழுதலைமுறையளவும் பிறைமதிபோல முறையே வளர்ந்து அருட்புலமை நிரம்பும்வண்ணம் வரம்பெற்ற பரம்பரைச் சைவவேளா ளர்குலத்திலே, சிவபத்தி அடியார்பத்தியிற் சிறந்தவராய்க் கல்விச் செல்வம்போலப் பொருட்செல்வமும் ஒருங் குடையராய் இருந்த ஆனந்தக்கூத்தர் என்பவருக்கு, அவர்மனைவியாராகிய கற்பினிற்சிறந்த மயிலம்மையார் திருவயிற்றிலே ஏழாவது தலைமுறையாகத் தமிழ் நாடுசெய்த தவத்தானே ஒருவர் திருவவதாரஞ்செய்து, முக்களாலிங் கர் என்னும் பிள்ளைத் திருநாமம்பெற்று, ஒழுக்கம் அன்பு அருள் முத லிய நற்குணங்களோடு வளருவாராயினர்.

பின்பு முக்களாலிங்கர் ஐந்து பிராயத்திலே, பிதாமாதாக்களாலே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுப் பாடசாலையில் அமர்ந்தனர். அங்ஙனம் அமரும்பொழுது, திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து சிவஸ்தல யாத்திரையாகப் புறப்பட்ட சில முனிவர்கள் விக்கிரமசிங்கபுரத்துத் திருவீதியிலே சென்றார்கள். பாடசாலையினின்றும் புறப்பட்ட முக்களாலிங்கர் அம்முனிவர்களைச் சந்தித்துத் தரிசித்து வணங்கி "சுவாமிகள் அடியேன் கிருகத்துக்கு எழுந்தருளித் திருவமுதுசெய்து பின்பு சென்றருள வேண்டும்" என்று பிரார்த்திக்க, அம்முனிவர்கள் ஆண்டின் இளையரும் அறிவின் முதியருமாகிய முக்களாலிங்கர் வழிபாட்டுக்கு இரங்கி, விருப்பத்தோடு உடன்பட்டனர். உடன்பட்ட முனிவர்கள் முக்களாலிங்கர் பிறகே கிருகத்துக்குப்போய், முக்களாலிங்கர் அருமைக் கருத்தை யுணர்ந்து அருந்ததியினுஞ் சிறந்த மயிலம்மையார் உபசரிக்கத் திருவமுதுசெய்து சென்றருளினார்கள் முக்களாலிங்கர் தமது கருத்தின்படி அடியார்களை உபசரித்த தாயாரைப்பற்றி,

"அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றும்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
பானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு
மானந் தவாத மயில்"

என்னுஞ் செய்யுளை யியற்றி யருளினார். புறத்தேபோயிருந்த ஆனந்தக் கூத்தர் வீட்டிற்குவந்து, நிகழ்ந்த அற்புதச்செய்திகளைக் கேள்வியுற்றுப், பேரின்பக்கடலிலே முழுகினார்.

உடனே ஆனந்தக்கூத்தர் புத்திரராகிய முக்களா லிங்கரோடு ஆதீன முனிவர்களிடத்தேபோய் வணங்கியவழிச் சத்திநிபாதமுடைய புத்திரர் பிறவிப் பெருந்துன்பக் கடலினின்றுங் கரையேறக் கருதி, அம்முனிவர்களோடு தாஞ் செல்லவேண்டு மென்னுங் குறிப்பினை யுணர்த்தப் புத்திரரைப் பிரியச் சிறிதும் மனமில்லாதிருந்தும் தந்தையார் ஒருவாறிசைந்து வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

தந்தையார் நீங்கியபின்பு, முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு வழிக்கொண்டு, மார்க்கங்களிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு, சோணாட்டிலுள்ள திருவாவடுதுறையை அடைந்து, மடாலயத்தினுள்ளே புகுந்து, ஆதீன பரமமுதற் குரவராகிய நமச்சிவாய மூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணோக்கம் பெற்றுக்கொண்டு, அப்பொழுது சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானாசாரியராகிய பின் வேலப்பதேசிகரை ஒடுக்கத்திலேபோய்த் தரிசித்துப் பேரன்போடு வணங்கினர்.

வணங்கியவர் ஞானதேசிகரிடத்தே சைவசந்நியாசமும், சிவதீக்ஷையும் சிவஞானயோகிகளென்னுந் தீக்ஷாநாமமும் பெற்று, மெய்கண்ட

சாத்திர பண்டார சாத்திரங்களைக் கேட்டருளினார். சிவஞானயோகிகள் அகத்தியமகாமுனிவர் வரத்தால் அவதரித்தருளியவராகலின், எளிதிலே வடமொழிக்கடலும் தென்மொழிக்கடலும் முற்றொருங் குணர்ந்து, மெய்யுணர்வின் முற்றுப் பேறுடையராய் அமர்ந்தருளினார். வேலப்பதேசிகர் சிவஞான யோகிகளுக்கு உபதேசித்தருளிய ஞானாசாரியரென்பது,

"எவ்வெவகோட் படுபொருளு மஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி, மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை யோதுமுறை விளங்கத் தேற்றி, யவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன், செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்."

எனக் காஞ்சிப் புராணத்துட் கூறியவாற்றால் விளங்கும்.

சிவஞானயோகிகள் ஜமதக்கினி மகாமுனிவருடைய புத்திரரும், அகத்திய மகாமுனிவருடைய முதன்மாணாக்கரும், இடைச்சங்கப்புலவர் ஐம்பத் தொன்பதின்மருள் ஒருவருமாகிய திரணதூமாக்கினியென்னுந் தொல்காப்பிய முனிவர் அருளிச்செய்த இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திற்கு, உரையாசிரியராகிய இளம்பூரணர்செய்த உரையாகிய இளம்பூரணமும், சேனாவரையர்செய்த உரையாகிய சேனாவரையமும், நச்சினார்க்கினியர்செய்த உரையாகிய நச்சினார்க்கினியமும் எனப்படு மூன்றுரைகளினுமுள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும்பொருட்டு, அத் தொல்காப்பியத்தின பாயிரத்திற்கும், முதற்சூத்திரத்திற்கும் சூத்திரவிருத்தியெனப் பெயர்பெற்ற பாஷ்யமும், வடமொழித் தருக்கசங்கிரக அன்னம்படீயங்களின் மொழிபெயர்ப்பும், நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயப் புலவர்செய்த புத்துரையாகிய விருத்தியுரைத் திருத்தமும் செய்தருளினார். இவை மூன்றும் திராவிடமகாபாஷ்யத்திற்கு அங்கங்கள் எனப்படும்.

அன்றியும் சர்வாத்மசம்பு சிவாசாரியர் அருளிச்செய்த சத்தியரூப சித்தாந்தப் பிரகாசிகையை அவ்வாறே மொழிபெயர்த்தருளினார்.

அன்றியும் மெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளிய வார்த்திகப் பொழிப்பாகிய சிவஞான போதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் விளங்கும்வண்ணம் திராவிடமகாபாஷ்யம் எனப் பெயர்பெற்ற விருத்தியுரையும், இலகு வியாக்கியானமாகிய சிற்றுரையும், அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்த சிவஞானசித்தியார் சுபக்ஷத்திற்குப் பொழிப்புரையும் செய்தருளினார்.

அன்றியும் காஞ்சிப்புராணத்தின் முதற்காண்ட மொழிபெயர்ப்பும், சிவாக்கிய சோழமகாராஜா காலத்திலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய ஆசாரியசரணராகிய ஸ்ரீ அரதத்த சிவாசாரியர் வைணவமத கண்

டனஞ்செய்து சைவமதஸ் தாபனஞ் செய்யும்பொருட்டு, நெருப்பிலே பழுக்கக்காய்ச்சிய இருப்பு முக்காலியிலே, எழுந்தருளியிருந்து, சிவபெருமானே பரம்பொருளென இருபத்திரண்டு ஏதுக்களாலே நாட்டியருளிய சுலோகபஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும், ஸ்ரீ அப்பதீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவ விவேகமூல சுலோகங்களின் மொழிபெயர்ப்பும் செய்தருளினர்.

அன்றியும் பெரும்பாலும் உண்மை நாயன்மார் சரிதமுதலியவற்றைத் தழுவிப் பூருவார்த்தமும், அதற்கு எடுத்துக் காட்டாகத் திருவள்ளுவ நாயனர் திருக்குறள் உத்தரார்த்தமுமாகக் கொண்டு குளத்தூர்ச் சோமேசர்மீது முதுமொழிவெண்பா, யமகரூபமான திருவேகம்பரந்தாதி, திரிபுரூபமான வடதிருமுல்லைவாயிலந்தாதி, குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி, இளைசைப் பதிற்றுப்பத்தந்தாதி, கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம், மார்கழிமதித் திருவாதிரை யுற்சவத்திலே தேவார முதலிய திருமுறைகள் திருக்காப்பிடப்பட்டுத் திருவெம்பாவையென்னுந் திருவாசகத் திருப்பதிகம் ஒன்றுமே ஆன்மார்த்த பரார்த்த சிவபூஜா காலங்களில் ஓதப்பெற்றுவருஞ் சாம்பிரதாயத்தால் நித்த நியம மந்திரமாகத் திருத்தொண்டர் திருநாமத்தை ஓதியுய்ய வேண்டுவோர் கருத்துத் தடையுறுவண்ணந், திருத்தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியராகிய நமச்சிவாய மூர்த்திகண்மீது மாலை முதலிய பிரபந்தங்களைச் செய்தருளினர்.

அன்றியும் மரபட்டவணை எனப் பெயர்பெற்ற திருவாவடுதுறை ஆதீன சாம்பிரதாயக் கட்டளையைத் தருமபுர ஆதீனத்தார் மறுத்தெழுதியதற்கு மறுப்பின்மறுப்பு என ஒன்று செய்தருளினர்.

அன்றியும் காஞ்சிபுரத்தில் யாத்திரையாக வந்தருளிய திருவண்ணாமலை ஆதீனத்துப் பண்டார சந்நிதிகள் சிவஞான சித்தியாரில் "என்னையிப் பவத்திற்சேரா வகையெடுத்து" என்னுஞ் செய்யுளில் "எடுத்து" என்னுஞ் சொல்லுக்குப் பொருள் என்னை என்று, தம்மாதினத்து ஞானப்பிரகாச முனிவர் இயற்றிய சிவசமவாத உரையின் உயர்வு தொனிக்கும் வண்ணம், சிவஞான யோகிகளிடத்தே வினவுவித்த பொழுது, "எடுத்து" என்னுஞ் சொல்லுக்குச் சிவசமவாதவுரை மறுப்பு என ஒன்றும், அதன்மேற் பிரதிகண்டனம் உண்டாயவழி மேன்மறுத்த மறுப்பு குதர்க்கவுரையாளராற் போழ்படாதவாறு "எடுத்து" என்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம் என ஒன்றும், சிவஞான சித்தியாருக்கு ஞானப்பிரகாச முனிவர் இயற்றியவுரை முற்றும் போலியுரை என விளக்கச் சிவசமவாதவுரை மறுப்பு என ஒன்றும் சிவஞான யோகிகள் செய்தருளினர்.

அன்றியும் கம்பராமாயணகாவியம் ஒன்றுமே தமிழிற் சிறந்திருப்ப தெனச் செருக்கொடு கழறிய காஞ்சிபுரத்து வைணவர்கள் வாயை அடைக்கக்கருதி அக்கம்பராமாயணத்து காந்தியாகிய "காடிய பொருள் கைகூடும்" என்னுஞ் செய்யுள் முற்றும் குற்றமே எனச் சங்கை செய்தவழி, அவ்வைணவர்கள் அச்சங்கைக்கு உத்தரஞ்சொல்ல இயலாமல் வருந்தித் தெரியாது பிதற்றினோம் எனச் சொல்லி வணங்கித் துதித்தவழி, சிவஞான யோகிகள் மகிழ்ந்து உத்தரங்கூறி, அவ்வைணவர்களை உவப்பித்தருளினார்; அச்சங்கை யுத்தரங்களை வரைந்த நூலுக்கு "கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி" என்று பெயர் வழங்கி வருகின்றது.

அன்றியும் திருவாரூர் வைத்தியநாத நாவலர் இயற்றிய இலக்கண விளக்கத்தில், எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் முதலியவற்றிலுள்ள வழுக்களை வெளியிடக்கருதி இலக்கண விளக்கச் சூறாவளி என ஒன்று செய்தருளினார்.

திருநாவுக்கரசு நாயனார் கடலினின்றும் கரையேறிய திருப்பாதிரிப்புலியூர்ச் சிவாலயத்தின்கண்ணே, சில வித்துவான்களும் பிரபுக்களுங் கூடிய சபையில் நூறு பொன்னைக் கிழியாகக் கட்டிவைத்து "கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண்டாமோ" என்று ஈற்றடி யெடுத்துக் கொடுத்துச் செய்யுளைப் பூர்த்தி செய்பவர் இப் பொற்கிழியை யெடுத்துக் கொள்ளலாம் என்று சொன்னார்கள். அப்பொழுது யாத்திரையாக வந்தருளிய சிவஞான யோகிகள் ஆலயத்திற்கு எழுந்தருளுங்கால் அங்கு நிகழ்ந்த செய்தியை யுணர்ந்து, ஒரு ஏழைப்பிராமணனை நோக்கி அப்பொற்கிழியை யெடுத்துக் கொள்ளும்படி கட்டளையிட்டு,

"வரையேற விட்டமுதஞ் சேந்தனிட வருந்திணைவல் வினமென்றூறு
முரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென் றுரைக்கிலென்னு
நரையேற விட்டமுத னாவனுக் கொண்டுரறும் புலிசை மேவுங்
கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண்டாமோ."

என்று செய்யுளைப் பேசுவதுபோலப் பூர்த்திசெய் தருளினார்.

இங்ஙனம் உலோகோபகாரமாகப் பலவுரைகளையும், பலநூல்களையும், பலகண்டனங்களையுஞ் செய்து, பலநன்மாணுக்கர்களுக்குப் போதித்து, வடமொழியினுந் தென்மொழி சிறந்ததென்னும்படி அபிவிருத்திசெய்து, தவமே திருவுருக் கொண்டாற்போலும் விளங்கிச் சிவப்பேற்றிற்குக் காரணமாகிய நிட்டையில் வீற்றிருந்தருளிய திராவிடமகாபாஷ்ய கர்த்தாகிய சிவஞான யோகிகள் திருவாவடுதுறையிலே விசுவாவசு வருஷம் சித்திரைமாதம் ஆயிலிய நக்ஷத்திரத்திலே சிவபரிபூரணதசை அடைந்தனர்.

"மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்கு தினம்."

சிவஞான யோகிகளுக்கு மாணுக்கர்கள் இலக்கணம் சிதம்பரநாத முனிவர், காஞ்சிபுரம் சிதம்பரமுனிவர், திருத்தணிகைக் கச்சியப்பமுனிவர், காஞ்சிபுரம் முத்துக்குமாரசுவாமிதேசிகர்; தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர், காஞ்சிபுரம் சரவணதேசிகர், இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளை, திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார், கடம்பர்கோயில் ஸ்தானிகர் கலியாணசுந்தர வாத்தியார், காவாந்தண்டலம் அடைக்கலங்காத்தமுதலியார் முதலிய பன்னிருவர் உளர்.

அவருள்ளே இலக்கணம் சிதம்பரநாதமுனிவர் திருப்பாதிரிப்புலியூர்ப் புராணத்தை மொழிபெயர்த்தருளினர்.

காஞ்சிபுரம் சிதம்பரமுனிவர் சுப்பிரமணியர் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ், காஞ்சி காமாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் முதலியவற்றை இயற்றியருளினர்.

திருத்தணிகைக் கச்சியப்பமுனிவர் திருவானைக்காப்புராணம், பூவாளூர்ப்புராணம், பேரூர்ப்புராணம், திருத்தணிகைப்புராணம், விநாயக புராணம், காஞ்சிப்புராணத்து இரண்டாங்காண்ட மொழிபெயர்ப்புகளையும், சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், யமகவந்தாதி, கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது, பதிற்றுப்பத்தந்தாதி, தணிகையாற்றுப்படை, பதிற்றுப்பத்தந்தாதி, பஞ்சாக்கரதேசிகரந்தாதி முதலியவற்றையும் இயற்றியருளினர்; தம்மாணுக்கரிற் சிறந்த கந்தப்பையர்க்குண்டான குன்மநோயை மாற்றுதற்பொருட்டுத் தணிகையாற்றுப்படை பாடியருளினது; பின்னும் பேரூரில் வசித்தபோது அரசம்பலவாணர்மீது ஒரு பிரபந்தம்பாடி மழை வருஷிக்கவும், பட்டீசர்மீது பலபதிகங்கள்பாடிப் பலருக்குக் குட்டநோய் முதலியவற்றைப் போக்கியுமருளினர்.

காஞ்சிபுரம் முத்துக்குமாரசுவாமி தேசிகர் திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம், திருவேகம்பர் வெண்பாவந்தாதி பதிற்றுப்பத்தந்தாதி முதலியவற்றை இயற்றியருளினர்.

தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் துறைசைக்கோவை, கலைசைக்கோவை, கலைசைச் சிலேடைவெண்பா, சிதம்பரேசர் வண்ணம், திருக்குற்றாலச் சித்திரசபைத் திருவிருத்தம், பழநிமுருகக்கடவுள் பஞ்சரத்நமாலை, சுப்பிரமணியர் திருவிருத்தம், திருத்தணிகைத்திருவிருத்தம், திருச்சிற்றம்பல தேசிகர்மீது சிந்து, பஞ்சரத்நமாலை, அம்பலவாண தேசிகர்மீது ஆனந்தக்களிப்பு, சிவஞானயோகிகள்மீது கீர்த்தனை, செய்யுள் முதலியவற்றை இயற்றியருளினர். சுப்பிரமணியர் திருவிருததமும், திருத்தணிகைத் திருவிருததமும், முறையே குட்டரோகியும், அந்தகனுமாகிய இருவர்பொருட்டுச் செய்து கொடுத்தவளவில், அவைகளை அவ்விருவரும் முருகக்கடவுள் சந்நிதியில் ஓதிக், குட்டரோகமும், அந்தகத்தன்மையு நீங்கி உய்ந்தனர்.

காஞ்சிபுரம் சரவணதேசிகர் ஒருபாவுண்மை யுபதேசம், வீட்டுநெறியுண்மை, பஞ்சாக்கரவநுபூதி, உபதேசசித்தாந்தவிளக்கம், ஒருபாவொருபது, முத்திமுடிவு, ஆனந்த ருத்திரேசர்பதிகம், சிவஞான யோகிகள் தோத்திரம் முதலியவற்றை இயற்றியருளினர்.

இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளை திருக்கழுக்குன்றக்கோவை, பர்வதவர்த்தனிமாலை முதலியவற்றை இயற்றியருளினர்.

திருமுக்கூடல் சந்திரசேகரமுதலியார் கடம்பர்கோயில் புராணம், மாலை, கலம்பகம் முதலியவற்றை இயற்றியருளினர்.

காவாந்தண்டலம் அடைக்கலங்காத்த முதலியார் மாகறலந்தாதி, இளையநாயனார்வேலூர் வெண்பாவந்தாதி, கடம்பர்கோயில் பதிற்றுப் பத்தந்தாதி முதலியவற்றை இயற்றியருளினர்.

மேற்கூறிய பின் வேலப்பதேசிகர் திருச்சிற்றம்பல தேசிகருக்கு அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்த சாஸ்திரத்தை உபதேசித் தருளினர்; பின்பு வடமொழிப் பயிற்சியின் வல்லுநராய்ச் சிவாகமங்களில் இரண்டிலக்ஷங் கிரந்தம்வரையுணர்ந்த உத்தமோத்தம குரவராகிய திருச்சிற்றம்பல தேசிகர் சிவக்ஷேத்திர யாத்திரையாகத் திருக்கூட்டத்துடன் செல்லும்பொழுது, மார்க்கத்திலுள்ள இராமநாதபுரத்தில் வசித்தவழி, அந்நகரத்தில் அமர்ந்த சேதுபதி யென்னும் மன்னவர்க்கு அமைச்சர் முதலாயினோர் ஞானாசாரியார் எழுந்தருளி யிருத்தலைத் தெரிவித்தனர்; "அப்போது மழையில்லாது ஜனங்கள் வருந்துங்காலமாயிருந்தமையால், மழை வருவிக்கும்படி உங்கள் குருமூர்த்திகள் செய்விப்பார்களா" என்று அரசர் வினவியதற்கு அமைச்சர் "அங்ஙனம் அநுக்கிரகஞ் செய்வார்கள்" என்று தெரிவித்து, அரசரை அழைத்துக்கொண்டுபோய் ஞானாசாரியர் திருவடிகளில் வணங்கச்செய்து அரசர் கருத்தையும் விண்ணப்பம் பண்ணினர்; அதற்கு "அவ்வண்ணமே திருநடராஜர் திருவருள்செய்வார்" என்று ஞானாசாரியர் திருவாய் மலர்ந்து, திருநடராஜர்பூஜை சிறப்புறச் செய்து அச்சந்நிதானத்திலே திருவடித் தியானத்தோடு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜபித்துக்கொண் டிருந்தனர்; உடனே மேகங்கள் மழைபொழிந்து நாடுகளை வளப்படுத்தின: சேதுபதி பெரிது மகிழ்ந்து திருவாவடுதுறை ஆதீனத்துக்கே அடிமையாகிச் சருவமானியக் கிராமங்கள் விட்டுத் தமமாசாட்சிக்குரிய அம் முகவை நகரத்தில் மடாலயஞ் சிறப்புறக் கட்டுவித்து ஆதீன பரமாசாரியராகிய ஸ்ரீபஞ்சாக்கரதேசிகர் குருபூஜை வருடந்தோறும் முன்னை நாளிலும் சிறப்பாக எந்நாளும் நடந்து வரும்படி அநுமதி செய்தனர்: அவ்வாறே இந்நாள் வரையும் நடந்து வருகின்றன.

'சிற்றம்பலதேசிகர் அம்பலவாண தேசிகருக்கும், அவர் சுப்பிரமணிய தேசிகருக்கும், அவர் அம்பலவாண தேசிகருக்கும, அவர் சுப்பிரமணிய தேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்த சாஸ்திரத்தை உபதேசித்தருளியபின்பு, சுப்பிரமணிய தேசிகரிடத்தே அபிஷேகமும சைவசித்தாந்தோபதேசமும்பெற்று, வடமொழி தென்மொழிகளிற் பாரங்கதராய், வைதிக சைவத்திருமுறை யாராய்ச்சி மிக்குடையராய், சுத்தாத்துவித சித்தாந்த மெய்கண்ட ஞானசாத்திரங்களில் வல்லுநராய், சிவஞான தான வள்ளற் பெருந்தகையராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ. அம்பலவாணதேசிகமூர்த்திகள் கட்டளையிட் டருளியபடி இவ்வரலாறு பதிப்பிக்கப் பெற்றது.

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# திருக்கைலாயபரம்பரை ஆசாரியர்கள் பரிபூரணதசை அடைந்ததலமும் திருநக்ஷத்திரமும்வருமாறு.

| ஆசாரியர்கள். | பரிபூரணமான ஸ்தலம். | மாசம். | நக்ஷத்திரம். |
|---|---|---|---|
| மெய்கண்டதேவர் | திருவெண்ணெய் நல்லூர் | ஐப்பசி | சுவாதி |
| அருணந்திசிவாசாரியர் | திருத்துறையூர் | புரட்டாசி | பூரம் |
| மறைஞானசம்பந்தசிவா [சாரியர் | திருக்களாஞ்சேரி | ஆவணி | உத்திரம் |
| உமாபதிசிவாசாரியர் | கொற்றவன்குடி | சித்திரை | அஸ்தம் |
| அருணமச்சிவாயதேசிகர் | ஷை | மார்கழி | திருவாதிரை |
| க. நமச்சிவாயதேசிகர் | திருவாவடுதுறை | தை | அசுவதி |
| துவிதீய. சிவப்பிரகாசதேசிகர் | பட்டீச்சுரத்துக் கடுத்தவடதளி | ஆனி | பரணி |
| உ. மறைஞானதேசிகர் | திருவாவடுதுறை | தை | சுவாதி |
| ௩. அம்பலவாணதேசிகர் | ஷை | சித்திரை | அவிட்டம் |
| துவிதீய. தக்ஷிணாமூர்த்திதேசிகர் | ஷை | மாசி | சித்திரை |
| ௪. உருத்திரகோடிதேசிகர் | மதுரை | கார்த்திகை | அநுஷம் |
| ரு. வேலப்பதேசிகர் | திருப்பூவணம் | ஷை | உத்திராடம் |
| சு. குமாரசுவாமிதேசிகர் | சுசீந்திரம் | ஷை | ஷை |
| எ. பிற்குமாரசுவாமிதேசிகர் | ஷை | ஆவணி | உத்திரட்டாதி |
| துவிதீய. முத்தம்பலவாணதேசிகர் | திருக்குற்றாலம் | மாசி | சித்திரை |
| அ. மாசிலாமணிதேசிகர் | திருவெண்காடு | சித்திரை | உரோகிணி |
| துவிதீய. சிவக்கொழுந்துதேசிகர் | திருவாவடுதுறை | மார்கழி | மூலம் |
| திரிதீய. சுவாமிநாததேசிகர் | திருவண்ணாமலை | கார்த்திகை | உத்திரம் |
| கூ. இராமலிங்கதேசிகர் | திருவாவடுதுறை | ஷை | அநுஷம் |
| க0. வேலப்பதேசிகர் | சங்கரநாயனார் கோயில் | புரட்டாசி | மூலம் |
| கக. பின்வேலப்பதேசிகர் | திருப்பெருந்துறை | வைகாசி | பூரட்டாதி |
| துவிதீய. வேலப்பதேசிகர் | பேரூர் | ஆனி | பரணி |
| கஉ. திருச்சிற்றம்பலதேசிகர் | திருவாவடுதுறை | ஷை | ஷை |
| க௩. அம்பலவாணதேசிகர் | ஷை | மார்கழி | கேட்டை |
| க௪. சுப்பிரமணியதேசிகர் | ஷை | கார்த்திகை | கார்த்திகை |
| துவிதீய. கனகசபாபதிதேசிகர் | தளிகை | தை | ஷை |
| ஷை. சுப்பிரமணியதேசிகர் | திருவாவடுதுறை | மாசி | அவிட்டம் |
| கரு. அம்பலவாணதேசிகர் | ஷை | ஆனி | பூரம் |
| கசு. சுப்பிரமணியதேசிகர் | ஷை | மார்கழி | சுவாதி |
| துவிதீய நமச்சிவாயதேசிகர் | தளிகை | தை | கார்த்திகை |

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருமுறைத்திரட்டு.

## க. தேவாரம்.

### க. திருவேகம்பம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

க. பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வெந்தவெண்பொடிப்பூசுமார்பின்விரிநூலொருபால்பொருந்தக்
கந்தமல்குகுழலியோடுங்கடிபொழிற்கச்சிநகருள்
அந்தமில்குணத்தாரவர்போற்றவணங்கினொடாடல்புரி
எந்தைமேவியவேகம்பந்தொழுதேத்தவிடர்கெடுமே. க

வரந்திகழுமவுணர்மாநகர்மூன்றுடன்மாய்ந்தவியச்
சரந்துரந்தெரிசெய்ததாழ்சடைச்சங்கரன்மேயவிடம்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவம்
திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. உ

வண்ணவெண்பொடிப்பூசுமார்பின்வரியரவம்புனைந்து
பெண்ணமர்ந்தெரியாடல்பேணியபிஞ்ஞகன்மேயவிடம்
விண்ணமர்நெடுமாடமோங்கிவிளங்கியகச்சிநகருள்
திண்ணமாம்பொழில்சூழ்ந்தவேகம்பஞ்சேரவிடர்கெடுமே. ௩

தோலுநூலுந்துதைந்தவரைமார்பிற்சுடலைவெண்ணீறணிந்து
காலன்மாள்வுறக்காலாற்காய்ந்தகடவுள்கருதுமிடம்
மாலைவெண்மதிதோயுமாமதிற்கச்சிமாநகருள்
ஏலநாறியசோலைசூழேகம்பமேத்தவிடர்கெடுமே. ௪

தோடணிமலர்க்கொன்றைசேர்சடைத்தூமதியம்புனைந்து
பாடனான்மறையாகப்பல்கணப்பேய்களவைசூழ
வாடல்வெண்டலையோடனலேந்திமகிழ்ந்துடனாடல்புரி
சேடர்சேர்கலிக்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. ௫

சாகம்பொன்வரையாகத்தானவர்மும்மதில்சாயவெய்து
ஆகம்பெண்ணொருபாகமாகவரவொடுநூலணிந்து
மாகந்தோய்மணிமாடமாமதிற்கச்சிமாநகருள்
ஏகம்பத்துறையீசன்சேவடியேத்தவிடர்கெடுமே. ௬

வாணிலாமதிபுல்குசெஞ்சடைவாளரவம்மணிந்து
நாணிடத்தினில்வாழ்க்கைபேணிநகுகலையிற்பலிதேர்ந்
தேணிலாவரக்கன்றனீண்முடிபத்துமிறுத்தவனூர்
சேணுலாம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. ௮

பிரமனுந்திருமாலுங்கைதொழப்பேரழலாயபெம்மான்
அரவஞ்சேர்சடையந்தணனணங்கினொடமருமிடம்
கரவில்வண்கையினார்கள்வாழ்கலிக்கச்சிமாநகருள்
மரவஞ்சூழ்பொழிலேகம்பந்தொழவல்வினைமாய்ந்தறுமே. ௯

குண்டுபட்டமணாயவரொடுங்கூறைதம்மெய்போர்க்கும்
மிண்டர்கட்டியகட்டுரையவைகொண்டுவிரும்பேன்மின்
விண்டவர்புரமூன்றும்வெங்கணையொன்றினாலவியக்
கண்டவன்கலிக்கச்சியேகம்பங்காணவிடர்கெடுமே. ௧௦

ஏரினார்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரினார்மணிமாடமோங்குகழுமலநன்னகருள்
பாரினார்தமிழ்ஞானசம்பந்தன்பரவியபத்தும்வல்லார்
சீரினார்புகழோங்கிவிண்ணவரோடுஞ்சேர்பவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௨. பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
இறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே. ௧

நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிளம்
உச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பமேயகறைகண்டனை
நச்சியேதொழுமினும்மேலவினையுமே. ௨

பாராருமுழவமொந்தைகுழல்யாழொலி
சீராலேபாடலாடலசிதைவில்லதோர்
ஏரார்பூங்கச்சியேகம்பனையெம்மானைச்
சேராதாரின்பமாயந்நெறிசேராரே. ௩

குன்றேய்க்குநெடுவெண்மாடக்கொடிகூடிப்போய்
மின்றேய்க்குமுகில்கடோயும்வியன்கச்சியுள்
மன்றேய்க்குமல்குசீரான்மலியேகம்பம்
சென்றேய்க்குஞ்சிந்தையார்மேல்வினைசேராவே. ௪

சடையானைத்தலைகையேந்திப்பலிதருவார்தம்
கடையேபோய்மூன்றுங்கொண்டான்கலிக்கச்சியுள்
புடையேபொன்மலருங்கம்பைக்கரையேகம்பம்
உடையானையல்லதுள்காதெனதுள்ளமே. ௫

மழுவாளோடெழில்கொள்சூலப்படைவல்லார்தம்
கெழுவாளோரிமையாருச்சியுமையாள்கங்கை
வழுவாமேமல்குசீராலவளரேகம்பம்
தொழுவாரேவிழுமியார்மேல்வினைதுன்னாவே. ௬

விண்ணுளார்மறைகள்வேதம்விரித்தோதுவார்
கண்ணுளார்கழலின்வெல்வார்கரிகாலனை
நண்ணுவாரெழில்கொள்கச்சிநகரேகம்பத்
தண்ணலாராடுகின்றவலங்காரமே. ௭

தூயானைத்தூயவாயம்மறையோதிய
வாயானைவாளரக்கன்வலிவாட்டிய
தீயானைத்தீதில்கச்சித்திருவேகம்பம்
மேயானைமேவுவாரென்றலைமேலாரே. ௮

நாகம்பூணேறதேறனறுங்கொன்றைத்தார்
பாகம்பெண்பலியுமேற்பர்மறைபாடுவர்
ஏகம்பமேவியாடுமிறையிருவர்க்கும்
மாகம்பமறியும்வண்ணத்தவனல்லனே. ௯

போதியார்பிண்டியாரென்றிவர்பொய்ந்நூலை
வாதியாவம்மினம்மாவெனுங்கச்சியுள்
ஆதியார்மேவியாடுந்திருவேகம்பம்
நீதியாற்றொழுமினும்மேல்வினைநில்லாவே. ௧௦

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக்
கந்தண்பூங்காழியூரன்கலிக்கோவையால்
சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம்
பந்தன்சொற்பாடியாடக்கெடும்பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## ௩. திருவிருக்குக்குறள். பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கருவார்கச்சித்
திருவேகம்பத்
தொருவாவென்ன
மருவாவினையே. ௧

மதியார்கச்சி
நதியேகம்பம்
விதியாலேத்தப்
பதியாவாரே. ௨

கலியார்கச்சி
மலியேகம்பம்
பலியாற்போற்ற
நலியாவினையே. ௩

வரமார்கச்சிப்
புரமேகம்பம்
பரவாவேத்த
விரவாவினையே. ௪

படமார்கச்சி
இடமேகம்பத்
துடையாயென்ன
அடையாவினையே. ௫

நலமார்கச்சி
நிலவேகம்பம்
குலவாவேத்தக்
கலவாவினையே. ௬

கரியின்னுரியன்
திருவேகம்பன்
பெரியபுரமூன்
றெரிசெய்தானே. ௭

இலங்கையரசைத்
துலங்கவூன்றும்
நலங்கொள்கம்பன்
இலங்குசரணே. ௮

மறையோனரியும்
அறியாவனலன்
நெறியேகம்பம்
குறியாற்றொழுமே. ௯

பரியாத்தேரர்
நெறியில்கச்சிச்
செறிகொள்கம்பம்
குறுகுவோமே. ௧௦

கொச்சைவேந்தன் - கச்சிக்கம்பம்
மெச்சுஞ்சொல்லை - நச்சும்புகழே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௩. திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவர்வேதத்துவனியேசோதிமாலெரிவேதத்துவனியே
ஆயுநன்பொருணுண்பொருளாதியேயாலநீழலரும்பொருளாதியே
காயவின்மதன்பட்டதுகம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே. ௧

சடையணிந்ததும்வெண்டலைமாலையேதம்முடம்பிலும்வெண்டலைமாலையே
படையிலங்கையிற்சூலமதென்பதேபரந்திலங்கையிற்சூலமதென்பதே
புடைபரப்பனபூதகணங்களேபோற்றிசைப்பனபூதகணங்களே
கடைகடோறுமிரப்பதுமிச்சையேகம்பமேவியிருப்பதுமிச்சையே. ௨

வெள்ளெருக்கொடுதும்பைமிலைச்சியேவேறுமுன்செலத்தும்பைமிலைச்சியே
அள்ளிநீறதுபூசுவதாகமேயானமாசுணமூசுவதாகமே
புள்ளியாடையுடுப்பதுகத்துமேபோனவூழியுடுப்பதுகத்துமே
கள்ளுலாமலர்க்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. ௩

முற்றலாமையணிந்தமுதல்வரேமூரியாமையணிந்தமுதல்வரே
பற்றிவாளரவாட்டும்பரிசரேபாலுநெய்யுகந்தாட்டும்பரிசரே
வற்றலோடுகலம்பலிதேர்வதேவாணினோடுகலம்பலிதேர்வதே
கற்றிலாமனங்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. ௪

வேடனாகிவிசையற்கருளியேவேலைநஞ்சமிசையற்கருளியே
ஆடுபாம்பரையார்த்ததுடையதேயஞ்சுபூதமுமார்த்ததுடையதே
கோடுவான்மதிக்கண்ணியழகிதேகுற்றமின்மதிக்கண்ணியழகிதே
காடுவாழ்பதியாவதுமும்மதேகம்பமாபதியாவதுமும்மதே. ௫

இரும்புகைக்கொடிதங்கழல்கையதேயிமயமாமகடங்கழல்கையதே
அரும்புமொய்த்தமலர்ப்பொறைதாங்கியேயாழியான்றன்மலர்ப்பொறைதாங்கியே
பெரும்பகனடமாடுதல்செய்துமேபேதைமார்மனம்வாடுதல்செய்துமே
கரும்புமொய்த்தெழுகம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. ௬

முதிரமங்கைதவஞ்செய்தகாலமேமுன்புமங்கைதவஞ்செய்தகாலமே
வெதிர்களோடகில்சந்தமுருட்டியேவேழமோடகில்சந்தமுருட்டியே
அதிரவாறுவரத்தழுவத்தொடேயானையாடுவரத்தழுவத்தொடே
கதிர்கொள்பூண்முலைக்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே.

பண்டரக்கனெடுத்தபலத்தையேபாய்ந்தரக்கனெடுத்தபலத்தையே
கொண்டரக்கியதுங்கால்விரலையேகோளரக்கியதுங்கால்விரலையே
உண்டுழன்றதுமுண்டதலையிலேயுடுபதிக்கிடமுண்டதலையிலே
கண்டநஞ்சமடக்கினதம்பமேகடவுணீயிடங்கொண்டதுகம்பமே. ௮

தூணியானசுடர்விடுசோதியேசுத்தமானசுடர்விடுசோதியே
பேணியோடுபிரமப்பறவையேபித்தனைபிரமப்பறவையே
சேணினோடுகீழூழிதிரிந்துமேசித்தமோடுகீழூழிதிரிந்துமே
காணவின்றனரூற்றதுகம்பமேகடவுணீயிடமுற்றதுகம்பமே. ௯

ஒருடம்பினையீருருவாகவேயுன்பொருட்டிறமீருருவாகவே
ஆருமெய்தற்கரிதுபெரிதுமேயாற்றவெய்தற்கரிதுபெரிதுமே
தேருமறியாதுதிகைப்பரேசித்தமும்மறியாதுதிகைப்பரே
கார்நிறத்தமணர்க்கொருகம்பமேகடவுணீயிடங்கொண்டதுகம்பமே. ௧௦

கந்தமார்பொழில்சூழ்தருகம்பமேகாதல்செய்பவர்தீர்த்திடுகம்பமே
புந்திசெய்துவிரும்பிப்புகலியேபூசுரான்றன்விரும்பிப்புகலியே
அந்தமில்பொருளாயினகொண்டுமேயண்ணலின்பொருளாயினகொண்டுமே
பந்தனின்னியல்பாடியபத்துமேபாடவல்லவராயினபத்துமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### ௪. பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறும்வித்தகனை
அரவாடச்சடைதாழவங்கையினிலனலேந்தி
இரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. ௧

தேனோக்குங்கிளிமழலையுமைகேள்வன்செழும்பவளம்
தானோக்குந்திருமேனிதழலுருவாஞ்சங்கரனை
வானோக்குமவளர்மதிசேர்சடையானைவானோர்க்கும்
ஏனோர்க்கும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. ௨

கைப்போதுமலர்தூவிக்காதலித்துவானோர்கள்
முப்போதுமுடிசாய்த்துத்தொழநின்றமுதல்வனை
அப்போதுமலர்தூவியைம்புலனுமகத்தடக்கி
எப்போதுமினியானையென்மனத்தேவைத்தேனே, ௩

அண்டமாயாதியாயருமறையோடைம்பூதப்
பிண்டமாயுலகுக்கொர்பெய்பொருளாம்பிஞ்ஞகனைத்
தொண்டர்தாமலர்தூவிச்சொன்மாலைபுனைகின்ற
இண்டைசேர்சடையானையென்மனத்தேவைத்தேனே. ௪

ஆறேறுசடையானையாயிரம்பேரம்மானைப்
பாறேறுபடுதலையிற்பலிகொள்ளும்பரம்பரனை
நீறேறுதிருமேனிநின்மலனைநெடுந்தூவி
ஏறேறும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. ௫

தேசனைத்தேசங்கடொழநின்றதிருமாலால்
பூசனைப்பூசனைகளுகப்பானைப்பூவின்கண்
வாசனைமலைநிலநீர்தீவளியாகாசமாம்
ஈசனையெம்மானையென்மனத்தேவைத்தேனே. ௬

நல்லானைநல்லானநான்மறையோடாறங்கம்
வல்லானைவல்லார்கண்மனத்துறையுமைந்தனைச்
சொல்லானைச்சொல்லார்ந்தபொருளானைத்துகளேதும்
இல்லானையெம்மானையென்மனத்தேவைததேனே. ௭

விரித்தானைநால்வர்க்குவெவ்வேறுவேதங்கள்
புரித்தானைப்பதஞ்சந்திப்பொருளுருவாமபுண்ணியனைத்
தரித்தானைக்கங்கைநீர்தாழ்சடைமேன்மதின்மூன்றும்
எரித்தானையெம்மானையென்மனத்தேவைத்தேனே. ௮

ஆகம்பத்தரவணையானயனறிதற்கரியானைப்
பாகம்பெண்ணுண்பாகமாய்நின்றபசுபதியை
மாகம்பமறையோதுமிறையானைமதிற்கச்சி
ஏகம்பமேயானையென்மனத்தேவைததேனே. ௯

அடுத்தானையுரித்தானையருச்சுனற்குப்பாசுபதம்
கொடுத்தானைக்குலவரையேசிலையாகக்கூரம்பு
தொடுத்தானைப்புரமெரியச்சுனைமல்குகயிலாயம்
எடுத்தானைத்தடுத்தானையென்மனத்தேவைத்தேனே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

## ௪. திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநகரமூன்றுமெரியுணவெருவநோக்கும்
அம்பனையமுதையாற்றையணிபொழிற்கச்சியுள்ளே
கம்பனைக்கதிர்வெண்டிங்கட்செஞ்சடைக்கடவுடன்னைச்
செம்பொனைப்பவளத்தூணைச்சிந்தியாவெழுகின்றேனே. ௧

ஒருமுழமுள்ளகுட்டமொன்பதுதுளையுடைத்தாய்
அரைமுழமதனகலமதனில்வாழ்முதலையைந்து
பெருமுழைவாய்தல்பற்றிக்கிடந்துநான்பிதற்றுகின்றேன்
கருமுகிறவழுமாடக்கச்சியேகம்பனீரே. ௨

மலையினார்மகளோர்பாகமைந்தனார்மழுவொன்றேந்திச்
சிலையினான்மதில்கண்மூன்றுந்தீயெழச்செற்றசெல்வர்
இலையினார்சூலமேந்தியேகம்பமேவினாரைத்
தலையினால்வணங்கவல்லார்தலைவர்க்குத்தலைவர்தாமே. ௩

பூத்தபொற்கொன்றைமாலைபுரிசடைக்கணிந்தசெல்வர்
தீர்த்தமாங்கங்கையாளைத்திருமுடிதிகழவைத்து
ஏத்துவாரேத்தநின்றவேகம்பமேவினாரை
வாழ்த்துமாறறியமாட்டேன்மால்கொடுமயங்கினேனே. ௪

மையினார்மலர்நெடுங்கண்மங்கையோர்பங்கராகிக்
கையிலோர்கபாலமேந்திக்கடைதொறும்பலிகொள்வார்தாம்
எய்வதோரேனமோட்டியேகம்பமேவினாரைக்
கையினாற்றொழவல்லார்க்குக்கடுவினைகளையலாமே. ௫

தருவினைமருவுங்கங்கைதங்கியசடையனெங்கள்
அருவினையகலநல்குமண்ணலையமரர்போற்றும்
திருவினைத்திருவேகம்பஞ்செப்பிடவுறையவல்ல
உருவினைவுருகியாங்கேயுள்ளத்தாலுகக்கின்றேனே. ௬

கொண்டதோர்கோலமாகிக்கோலக்காவுடையகூத்தன்
உண்டதோர்நஞ்சமாகிலுலகெலாமுய்யவுண்டான்
எண்டிசையோருமேத்தநின்றவேகம்பன்றன்னைக்
கண்டுநானடிமைசெய்வான்கருதியேதிரிகின்றேனே. ௭

படமுடையரவினோடுபனிமதியதனைச்சூடிக்
கடமுடையுரிவைமூடிக்கண்டவாஞ்சவம்ம
இடமுடைக்கச்சிதன்னுளேகம்பமேவினான்றன்
நடமுடையாடல்காணஞாலந்தானுய்ந்தவாறே. ௮

பொன்றிகழ்கொன்றைமாலைபொருந்தியநெடுந்தண்மார்பர்
நன்றியிற்புகுந்தென்னுள்ளமெள்ளவேநவிலநின்று
குன்றியிலடுத்தமேனிக்குவளையங்கண்டரெம்மை
இன்றுயில்போதுகண்டாரினியரேகம்பனாரே. ௯

தருக்கியார்பழனத்துள்ளார்தொண்டர்கள்பலருமேத்த
அருத்தியாலன்புசெய்வாரவரவர்க்கருள்களசெய்தே
எருத்தினையிசையவேற்றியேகம்பமேவினார்க்கு
வருத்திநின்றடிமைசெய்வார்வல்வினைமாயுமன்றே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## ௪. திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஓதுவித்தாய்முன்னறவுரைகாட்டியமணரொடே
காதுவித்தாய்கட்டநோய்பிணிதீர்த்தாய்கலந்தருளிப்
போதுவித்தாய்நின்பணிபிழைக்கிற்புளியம்வளாரால்
மோதுவிப்பாயுகப்பாய்முனிவாய்கச்சியேகம்பனே. ௧

எத்தைக்கொண்டெத்தகையேழையமணொடிசைவித்தெனை
கொத்தைக்குமூங்கர்வழிகாட்டுவித்தென்னைக்கோகுசெய்தாய்
முத்திற்றிரளும்பளிங்கினிற்சோதியுமொய்ப்பவளத்
தொத்தினையேய்க்கும்படியாய்பொழிற்கச்சியேகம்பனே. ௨

மெய்யம்புகோத்தவிசையனொடன்றொருவேடுவனாய்ப்
பொய்யம்பெய்தாவமருளிச்செய்தாய்புரமூன்றெரியக்
கையம்பெய்தாய்நின்கழலடிபோற்றாக்கயவர்நெஞ்சில்
குய்யம்பெய்தாய்கொடிமாமதில்சூழ்கச்சியேகம்பனே. ௩

குறிக்கொண்டிருந்துசெந்தாமரையாயிரம்வைகல்வைகல்
நெறிப்படவிண்டைபுனைகின்றமாலைநிறையழிப்பான்
கறைக்கண்டநீயொருபூக்குறைவித்துக்கண்சூல்விப்பதே
பிறைத்துண்டவார்சடையாய்பெருங்காஞ்சியெம்பிஞ்ஞகனே. ௪

உரைக்குங்கழிந்திங்குணர்வரியானுள்குவார்வினையைக்
கரைக்குமெனக்கைதொழுவதல்லாற்கதிரோர்களெல்லாம்
விரைக்கொண்மலரவன்மாலெண்வசுக்களேகாதசர்கள்
இரைக்குமமிர்தர்க்கறியவொண்ணாவெங்களேகம்பனே. ௫

கருவுற்றநாண்முதலாகவுன்பாதமேகாண்பதற்கு
உருகிற்றென்னுள்ளமுநானுங்கிடந்தலந்தெய்த்தொழிந்தேன்
திருவொற்றியூராதிருவாலவாயாதிருவாரூரா
ஒருபற்றிலாமையுங்கண்டிரங்காய்கச்சியேகம்பனே. ௬

அரியயனிந்திரன்சந்திராதித்தரமரரெல்லாம்
உரியநின்கொற்றைக்கடைத்தலையாருணங்காக்கிடந்தார்
புரிதருபுன்சடைப்போகமுனிவர்புலம்புகின்றார்
எரிதருசெஞ்சடையேகம்பவென்னோதிருக்குறிப்பே. ௭

பாம்பரைச்சேர்த்திப்படருஞ்சடைமுடிப்பால்வண்ணனே
கூம்பலைச்செய்தகரதலத்தன்பர்கள்கூடிப்பன்னாள்
சாம்பரைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்சரணென்
றேம்பலிப்பார்கட்கிரங்குகண்டாய்கச்சியேகம்பனே. ௮

ஏன்றுகொண்டாயென்னையெம்பெருமானினியல்லமென்னில்
சான்றுகண்டாயிவ்வுலகமெல்லாந்தனியேனென்றென்னை
ஊன்றிநின்றாரைவர்க்கொற்றிவைத்தாய்பின்னையொற்றியெல்லாம்
சோன்றுகொண்டாய்கச்சியேகம்பமேயசுடாவண்ணனே. ௯

உந்திநின்றாருன்றனோலக்கச்சூளைகள்வாய்தல்பற்றித்
துன்றிநின்றார்தொல்லைவானவரீட்டம்பணியறிவான்
வந்துநின்றாரயனுந்திருமாலுமதிற்கச்சியாய்
இந்தநின்றோமினியெங்ஙனமோவந்திறைஞ்சுவதே. ௧0

திருச்சிற்றம்பலம்.

## ௫. திருக்குறுந்தொகை.



திருச்சிற்றம்பலம்.

பண்டுசெய்தபழவினையின்பயன்
கண்டுங்கண்டுங்களித்திகாணெஞ்சமே
வண்டுலாமலர்ச்செஞ்சடை யேகம்பன்
தொண்டனாய்த்திரியாய்துயர்தீரவே. ௧

நச்சிநாளுநயந்தடியார்தொழ
இச்சையாலுமைநங்கைவழிபடக்
கொச்சையார்குறுகார்செறிதீம்பொழிற்
கச்சியேகம்பமேகைதொழுமினே ௨

ஊனிலாவியியங்கியுலகெலாம்
தானுலாவியதன்மையராகிலும்
வானுலாவியபாணிபிறங்கவெம்
கானிலாடுவர்கச்சியேகம்பரே. ௩

இமையாமுக்கண்ணரென்னெஞ்சத்துள்ளவர்
தமையாரும்மறிவொண்ணாத்தகைமையர்
இமையோரேத்தவிருந்தவனேகம்பன்
நமையாளும்மவனைத்தொழுமின்களோ. ௪

மருந்தினோடுநற்சுற்றமுமக்களும்
பொருந்திநின்றெனக்காயவெம்புண்ணியன்
கருந்தடங்கண்ணினாளுமைகைதொழ
இருந்தவன்கச்சியேகம்பத்தெந்தையே. ௫

பொருளினோடுநற்சுற்றமும்பற்றிலார்க்
கருளுநன்மைதந்தாயவரும்பொருள்
சுருள்கொள்செஞ்சடையான்கச்சியேகம்பம்
இருள்கெடச்சென்றுகைதொழுதேத்துமே. ௬

மூக்குவாய்செவிகண்ணுடலாகிவந்
தாக்குமைவர்தமாப்பையவிழ்த்தருள்
நோக்குவானமைநோய்வினைவாராமே
காக்குநாயகன்கச்சியேகம்பனே. ௭

பண்ணிலோசைபழத்தினிலின்சுவை
பெண்ணொடாணென்றுபேசற்கரியவன்
வண்ணமில்லிவடிவுவேறாயவன்
கண்ணிலுண்மணிகச்சியேகம்பனே. ௮

திருவினாயகன்செம்மலர்மேலயன்
வெருவநீண்டவிளங்கொளிச்சோதியான்
ஒருவனாயுணர்வாயுணர்வல்லதோர்
கருவுனாயகன்கச்சியேகம்பனே. ௯

இருநண்ணிடையேந்திளமென்முலை
வடிவின்மாதர்திறமனம்வையன்மின்
பொடிகொண்மேனியன்பூம்பொழிற்கச்சியுள்
அடிகளெம்மையருந்துயர்தீர்ப்பரே. ௧0

இலங்கைவேந்தனிராவணன்சென்றுதன்
விலங்கலையெடுக்கவ்விரலூன்றலும்
கலங்கிக்கச்சியேகம்பவோவென்றலும்
நலங்கொள்செலவளித்தானெங்கணுதனே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## ரு. திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பூமேலானும்பூமகள்கேள்வனும்
நாமேதேவரெனுமைநடுக்குறத்
தீமேவும்முருவாதிருவேகம்பா
ஆமோவல்லற்படவடியோங்களே. ௧

அருந்திறலமரரயன்மாலொடு
திருந்தநின்றுவழிபடத்தேவியோ
டிருந்தவன்னெழிலார்கச்சியேகம்பம்
பொருந்தச்சென்றுபுடைப்பட்டெழுதுமே. உ

கறைகொள்கண்டத்தெண்டோளிறைமுக்கணன்
மறைகொணுவினன்வானவர்க்காதியான்
உறையும்பூம்பொழிலசூழ்கச்சியேகம்பம்
முறைமையாற்சென்றுமுந்தித்தொழுதுமே. ௩

பொறிப்புலன்களைப்போக்கறுத்துள்ளத்தை
நெறிப்படுத்துநினைந்தவர்சிந்தையுள்
அறிப்புறும்மமுதாயவனேகம்பம்
குறிப்பினாற்சென்றுகூடித்தொழுதுமே. ௪

சிந்தையுட்சிவமாய்நின்றசெம்மையோ
டந்தியாயனலாய்ப்புனல்வானமாய்ப்
புந்தியாய்ப்புகுந்துள்ளநிறைந்தவெம்
எந்தையேகம்பமேத்தித்தொழுமினே. ரு

சாக்கியத்தொடுமற்றுஞ்சமண்படும்
பாக்கியம்மிலார்பாடுசெலாதுறப்
பூக்கொள்சேவடியான்கச்சியேகம்பம்
நாக்கொடேத்திநயந்துதொழுதுமே. ௬

மூப்பினோடுமுனிவுறுத்தெந்தமை
ஆர்ப்பதன்முன்னணியமரர்க்கிறை
காப்பதாயகடிபொழிலேகம்பம்
சேர்ப்பதாகநாஞ்சென்றடைந்துய்துமே. எ

ஆலுமாமயிற்சாயனல்லாரொடும்
சாலநீயுழுமாறவிர்நெஞ்சமே
நீலமாமிடற்றண்ணலேகம்பனார்
கோலமாமலர்ப்பாதமேகும்பிடே. ௮

பொய்யனைத்தையும்விட்டவர்புந்தியுள்
மெய்யனைச்சுடர்வெண்மழுவேந்திய
கையனைக்கச்சியேகம்பமேவிய
ஐயனைத்தொழுவார்க்கில்லையல்லலே. ௯

அரக்கன்றன்வலியுன்னிக்கயிலையை
நெருக்கிச்சென்றெடுத்தான்முடிதோணெரித்
திரக்கவின்னிசைகேட்டவனேகம்பம்
தருக்கதாகநாஞ்சார்ந்துதொழுதுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

## ௬. திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவன்காண்கூற்றுவனைக்குமைத்தகோன்காண்
குவலையன்காண்குவலயத்தினீரானான்காண்
காற்றவன்காண்கனலவன்காண்கலிக்குமின்காண்
கனபவளச்செம்மேனிகலந்தவெள்ளை
நீற்றவன்காணிலாவூருஞ்சென்னியான்கா
ணிறையார்ந்தபுனற்கங்கைநிமிர்சடைமேல்
ஏற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௧

பரந்தவன்காண்பல்லுயிர்களாகியெங்கும்
பணிந்தெழுவார்பாவமும்வினையும்போகத்
துரந்தவன்காண்டூமலரங்கண்ணியான்காண்
தோற்றநிலையிறுதிப்பொருளாய்வந்த
மருந்தவன்காண்வையங்கள்பொறைதீர்ப்பான்காண்
மலர்தூவிநினைந்தெழுவாருள்ளநீங்கா
திருந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௨

நீற்றவன்காணீராகித்தீயானான்கா
ணிறைமழுவுந்தமருகமுமெரியுங்கையில்
தோற்றவன்காண்டோற்றக்கேடில்லாதான்காண்
துணையிலிகாண்டுணையென்றுதொழுவாருள்ளம்
போற்றவன்காண்புகழ்கடமைப்படைத்தான்றான்காண்
பொறியரவும்விரிசடைமேற்புனலுங்கங்கை
ஏற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௩

தாயவன்காணுலகுக்குத்தன்னொப்பில்லாத்
தத்துவன்காண்மலைமங்கைபங்காவென்பார்
வாயவன்காண்வரும்பிறவிநோய்தீர்ப்பான்காண்
வானவர்க்குந்தானவர்க்குமண்ணுளோர்க்கும்

சேயவன்காணினைவார்க்குச்சித்தமாத்
திருவடியேயுள்கினைந்தெழுவாருள்ளம்
ஏயவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ச

அடுத்தானையுரித்தான்காண். ரு

அழித்தவன்காணெயின்மூன்றுமயில்வாயம்பா
லேபாறுமிடைமருதுமாள்வான்றான்காண்
பழித்தவன்காணடையாரையடைவார்தங்கள்
பற்றவன்காண்புற்றரவநாணினான்காண்
சுழித்தவன்காண்முடிக்கங்கையடியேபோற்றுந்
தூயமாமுனிவர்க்காப்பார்மேனிற்க
இழித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. சு

அசைந்தவன்காணடமாடிப்பாடல்பேணி
யழல்வண்ணத்தில்லடியுமுடியுந்தேடப்
பசைந்தவன்காண்பேய்க்கணங்கள்பரவியேத்தும்
பான்மையன்காண்பரவினைந்தெழுவார்தம்பால
கசிந்தவன்காண்கரியினுரிபோர்த்தான்றான்காண்
கடலில்விடமுண்டமரர்க்கமுதமீய
இசைந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே எ

முடித்தவன்காண்வன்கூற்றைச்சீற்றத்தீயால்
வலியார்தம்புரமூன்றும்வேவச்சாபம்
பிடித்தவன்காண்பிஞ்ஞகனும்வேடத்தான்காண்
பிணைபலவெறிகமழ்கொன்றையரவுசென்னி
முடித்தவன்காண்மூவிலைநல்வேலினான்காண்
முழங்கியுருமெனத்தோன்றுமழையாய்மின்னி
இடித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. அ

வருந்தான்காண்மனமுருகிநினையாதார்க்கு
வஞ்சன்காணஞ்செழுத்துநினைவார்க்கென்றும்
மருந்தவன்காண்வான்பிணிகடீரும்வண்ணம்
வானகமுமண்ணகமுமற்றுமாகிப்
பரந்தவன்காண்படர்சடையெட்டுடையான்றான்காண்
பங்கயத்தோன்றன்சிரத்தையேந்தியூரூர்
இரந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. கூ

வெம்மானவுழுவையதளுரிபோர்த்தான்காண்
வேதத்தின்பொருளான்காணென்றியம்பி
விம்மாநின்றழுவார்கட்களிப்பான்றான்காண்
விடையேறித்திரிவான்காணடஞ்செய்பூதத்

தம்மான்காணகலிடங்கடாங்கினான்கா
ணற்புதன்காண்சொற்பதமுங்கடந்துநின்ற
எம்மான்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௧0

அறுத்தான்காணயன்சிரத்தையமரர்வேண்ட
வாழ்கடல்விடமுண்டங்கணிநீர்க்கங்கை
செறுத்தான்காண்டேவர்க்குந்தேவன்றான்காண்
டிசையனைத்துந்தொழுதேத்தக்கலைமான்கையில
பொறுத்தான்காண்புகலிடத்தைநலியவந்து
பொருகயிலையெடுத்தவன்றன்முடிதோளலஞ்
சிறுத்தான்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## ௬. திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

உரித்தவன்காணுரக்களிற்றையுமையாளஞ்சக
வோங்காரத்தொருவன்காணுணர்மெய்ஞ்ஞானம்
விரித்தவன்காண்விரித்தநால்வேதத்தான்காண்
வியனுலகிற்பலவுயிரைவிதியினாலே
தெரித்தவன்காண்சில்லுருவாய்த்தோன்றியெங்குந்
திரண்டவன்காண்டிரிபுரத்தைவேவவில்லால
எரித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௧

நேசன்காணேசர்க்குநேசந்தன்பா
லில்லாதநெஞ்சத்துநீசர்தம்மைக்
கூசன்காண்கூசாதார்நெஞ்சுதஞ்சே
குடிகொண்டகுழகனகாணழகார்கொன்றை
வாசன்காண்மலைமங்கைபங்கன்றான்காண்
வானவர்கள்எப்பொழுதும்வணங்கியேத்தும்
ஈசன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௨

பொறையவன்காண்பூமியேழ்தாங்கியோங்கும்
புண்ணியன்காணண்ணியபுண்டரீகப்போதில்
மறையவன்தாண்மறையவனைப்பயந்தோன்றான்காண்
வார்சடைமாசுணமணிந்துவளரும்பிள்ளைப்
பிறையவன்காண்பிறைதிகழுமெயிற்றுப்பேழ்வாய்ப்
பேயோடங்கிடுகாட்டிலெல்லியாடும்
இறையவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௩

பாரவன்காண்விசும்பவன்காண்பவ்வந்தான்காண்
பனிவரைகளிரவினொடுபகலாய்நின்ற
சீரவன்காண்டிசையவன்காண்டிசைகளெட்டுஞ்
செறிந்தவன்காண்சிறந்தடியார்சிந்தைசெய்யும்
பேரவன்காண்பேராயிரங்களேத்தும்
பெரியவன்காணரியவன்காண்பெற்றமூர்ந்த
ஏரவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௪

பெருந்தவத்தெம்பிஞ்ஞகன்காண்பிறைசூடிகாண்
பேதையேன்வாதையுறுபிணியைத்தீர்க்கும்
மருந்தவன்காண்மந்திரங்களாயினான்காண்
வானவர்கடாம்வணங்குமாதேவன்காண்
அருந்தவத்தாளாயிழையாளுமையாள்பாக
மமர்ந்தவன்காணமரர்கடாமர்ச்சித்தேத்த
இருந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௫

ஆய்ந்தவன்காணருமறையோடங்கமாறு
மணிந்தவன்காணாடரவோடென்புமாமை
காய்ந்தவன்காண்கண்ணழலாற்காமனாகங்
கனன்றெழுந்தகாலனுடல்பொடியாய்வீழப்
பாய்ந்தவன்காண்பண்டுபலசருகாற்பந்தர்
பயின்றநூற்சிலந்திக்குப்பாராள்செல்வம்
ஈந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௬

உமையவளையொருபாகஞ்சேர்த்தினான்கா
ணுகந்தொலிநீர்க்கங்கைசடையொழுகினான்காண்
இமையவடகயிலைச்செல்வன்றான்கா
ணில்பலிக்குச்சென்றுழலுநல்கூர்ந்தான்காண்
சமையமவையாறினுக்குந்தலைவன்றான்காண்
டத்துவன்காணுத்தமன்காண்டானேயாய
இமையவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௭

தொண்டுபடுதொண்டர்துயர்தீர்ப்பான்றான்காண்
மேலர்ச்சேவடியிணையென்சோதியான்காண்
உண்டுபடுவிடங்கண்டத்தொடுக்கினான்கா
ணொலிகடலிலமுதமரர்க்குதவினான்காண்
வண்டுபடுமலர்க்கொன்றைமாலையான்காண்
வாண்மதியாய்காண்மீனுமாயினான்காண்
எண்டிசையுமெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௮

முந்தைகாண்மூவரினுமுதலானான்காண்
மூவிலைவேன்மூர்த்திகாண்முருகவேட்குத்
தந்தைகாண்டண்கடமாமுகத்தினார்க்குத்
தாதைகாண்டாழ்ந்தடியேவணங்குவார்க்குத்

சிந்தைகாண்சிந்தாதசித்தத்தார்க்குச்
சிவனவன்காண்செங்கண்மால்விடையொன்றேறும்
எந்தைகாணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௯

பொன்னிசையும்புரிசடையெம்புனிதன்றான்காண்
பூதகணநாதன்காண்புலித்தோலாடை
தன்னிசையவைத்தவெழிலாவினன்காண்
சங்கவெண்குழைக்காதிற்சதிரன்றான்காண்
மின்னிசையும்வெள்ளெயிற்றோன்வெகுண்டுவெற்பை
யெடுக்கவடியடர்ப்பமீண்டவன்றன்வாயில்
இன்னிசைகேட்டிலங்கொளிவாளீந்தோன்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

### எ. பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமரர்தொழுதேத்தும்
சீலந்தான்பெரிதும்முடையானைச்சிந்திப்பாரவர்சிந்தையுளானை
ஏலவார்குழலாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
காலகாலனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

உற்றவர்க்குதவும்பெருமானையூர்வதொன்றுடையானும்பர்கோனைப்
பற்றினார்க்கென்றும்பற்றவன்றன்னைப்பாவிப்பார்மனம்பாவிக்கொண்டானை
அற்றமில்புகழாளுமைநங்கையாதரித்துவழிபடப்பெற்ற
கற்றைவார்சடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே

திரியுமுப்புரந்தீப்பிழம்பாகச்செங்கண்மால்விடைமேற்றிகழ்வானைக்
கரியினீருரிபோர்த்துகந்தானைக்காமனைக்கனலாவிழித்தானை
வரிகொள்வெள்வளையாளுமைநங்கைமருவியேத்திவழிபடப்பெற்ற
பெரியகம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

குண்டலந்திகழ்காதுடையானைக்கூற்றுதைத்தகொடுந்தொழிலானை
வண்டலம்புமலர்க்கொன்றையினானைவாளராமதிசேர்சடையானைக்
கெண்டையந்தடங்கண்ணுமைநங்கைகெழுமியேத்திவழிபடப்பெற்ற
கண்டநஞ்சுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

வெல்லும்வெண்மழுவொன்றுடையானைவேலைநஞ்சுண்டவித்தகன்றன்னை
அல்லல்தீர்த்தருள்செயவல்லானையருமறையவையங்கம்வல்லானை
எல்லையில்புகழாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
நல்லகம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

திங்கடங்கியசடையுடையானைத்தேவதேவனைச்செழுங்கடல்வளரும்
சங்கவெண்குழைக்காதுடையானைச்சாமவேதம்பெரிதுகப்பானை
மங்கைநங்கைமலைமகள்கண்டுமருவியேத்திவழிபடப்பெற்ற
கங்கையாளனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

விண்ணவர்தொழுதேத்தநின்றானைவேதந்தான்விரித்தோதவல்லானை
நண்ணினார்க்கென்றுநல்லவன்றன்னைநாளுநாமுகக்கின்றபிரானை
எண்ணிறொல்புகழாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
கண்ணுமூன்றுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

சிந்தித்தென்றுநினைந்தெழுவார்கள்சிந்தையிற்றிகழுஞ்சிவன்றன்னைப்
பந்தித்தவினைப்பற்றறுப்பானைப்பாலொடானைஞ்சுமாட்டுகந்தானை
யந்தமில்புகழாளுமைநங்கையாதரித்துவழிபடப்பெற்ற
கந்தவார்சடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

வரங்கள்பெற்றுழல்வாளரக்கர்தம்வாலியபுரமூன்றெரித்தானை
நிரம்பியதக்கன்றன்பெருவேள்விநிரந்தரஞ்செய்தநிட்கண்டகனைப்
பரந்ததொல்புகழாளுமைநங்கைபரவியேத்திவழிபடப்பெற்ற
கரங்களெட்டுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

எள்கலின்றியிமையவர்கோனையீசனைவழிபாடுசெய்வாள்போல்
உள்ளத்துள்கியுகந்துமைநங்கைவழிபடச்சென்றுநின்றவாகண்டு
வெள்ளங்காட்டிவெருட்டிடவஞ்சிவெருவியோடித்தழுவவெளிப்பட்ட
கள்ளக்கம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

பெற்றமேறுகந்தேறவல்லானைப்பெரியவெம்பெருமானென்றெப்போதும்
கற்றவர்பரவப்படுவானைக்காணக்கண்ணடியேன்பெற்றதென்று
கொற்றவன்கம்பன்கூத்தனெம்மானைக்குளிர்பொழிற்றிருநாவலாரூரன்
நற்றமிழிவையீரைந்தும்வல்லார்நன்னெறியுலகெய்துவர்தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௨. திருமேற்றளி.

### திருநாவுக்கரசுநாயனார்.

### ௪. திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

மறையதுபாடிப்பிச்சைக்கென்றகந்திரிந்துவாழ்வார்
பிறையதுசடைமுடிமேற்பெய்வளையாடனொடும்
கறையதுகண்டங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
இறையவர்பாடலாடலிலங்குமேற்றளியனாரே. ௧

மாலனமாயன்றன்னைமகிழ்ந்தனர்விருத்தராகும்
பாலனார்பசுபதியார்பாலவெள்ளைநீறுபூசிக்
காலனைக்காலாற்செற்றார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏலநற்கடம்பன்றாதையிலங்குமேற்றளியனாரே. ௨

விண்ணிடைவிண்ணவர்கள்விரும்பிவந்திறைஞ்சிவாழ்த்தப்
பண்ணிடைச்சுவையின்மிக்ககின்னரம்பாடல்கேட்பார்
கண்ணிடைமணியினொப்பார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எண்ணிடையெழுத்துமானாரிலங்குமேற்றளியனாரே. ௩

சோமனையரவினோடுசூழ்தரக்கங்கைசூடும்
வாமனைவானவர்கள்வலங்கொடுவந்துபோற்றக்
காமனைக்காய்ந்தகண்ணார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏமநின்றாடுமெந்தையிலங்குமேற்றளியனாரே. ௪

ஊனவனுயிரினோடுமுலகங்களூழியாகித்
தானவர்தனமுமாகித்தனஞ்செயனோடெதிர்ந்த
கானவர்காளகண்டர்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏனமக்கோடுபூண்டாரிலங்குமேற்றளியனாரே. ௫

மாயனாய்மாலனாகிமலரவனாகிமண்ணாய்த்
தேயமாய்த்திசையெட்டாகித்தீர்த்தமாய்த்திரிதர்கின்ற
காயமாய்க்காயத்துள்ளார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏயமென்றோளிபாகரிலங்குமேற்றளியனாரே. ௬

மண்ணினையுண்டமாயன்றன்னையோர்பாகங்கொண்டார்
பண்ணினைப்பாடியாடும்பத்தர்கள்சித்தங்கொண்டார்
கண்ணினைமூன்றுங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எண்ணினையெண்ணவைத்தாரிலங்குமேற்றளியனாரே. ௭

செல்வியைப்பாகங்கொண்டார்சேந்தனைமகனாக்கொண்டார்
மல்லிகைக்கண்ணியோடுமாமலர்க்கொன்றைசூடிக்
கல்வியைக்கரையிலாதகாஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எல்லியைவிளங்கநின்றாரிலங்குமேற்றளியனாரே. ௮

வேறிணையின்றியென்றும்விளங்கொளிமருங்கினாளைக்
கூறியல்பாகம்வைத்தார்கோளராமதியும்வைத்தார்
ஆறினைச்சடையுள்வைத்தாரணிபொழிற்கச்சிதன்னுள்
ஏறினையேறுமெந்தையிலங்குமேற்றளியனாரே. ௯

தென்னவன்மலையெடுக்கச்சேயிழைநடுக்கங்கண்டு
மன்னவன்விரலாலூன்றமணிமுடிநெரியவாயால்
கன்னலின்கீதம்பாடக்கேட்டவர்காஞ்சிதன்னுள்
இன்னவர்க்கருளிச்செய்தாரிலங்குமேற்றளியனாரே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

### எ. பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நொந்தாவொண்சுடரேநுனையேநினைந்திருந்தேன்
வந்தாய்போயறியாய்மனமேபுகுந்துநின்ற
சிந்தாயெந்தைபிரான்றிருமேற்றளியுறையும்
எந்தாயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே. ௧

ஆட்டான்பட்டமையாலடியார்க்குத்தொண்டுபட்டுக்
கேட்டேன்கேட்பதெல்லாம்பிறவாவகைகேட்டொழிந்தேன்
சேட்டார்மாளிகைசூழ்திருமேற்றளியுறையும்
மாட்டேயுன்னையல்லான்மகிழ்ந்தேத்தமாட்டேனே.

மோறுங்தோரொருகாணிணையாதிருந்தாலும்
வேறுவன்தென்னுள்ளம்புகவல்லமெய்ப்பொருளே
சேறுர்தண்கழனித்திருமேற்றளியுறையும்
ஏறேயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே. ௩

உற்றூர்சுற்றமெனுமதுவிட்டுநுன்னடைந்தேன்
எற்றுலென்குறைவென்னிடரைத்துறந்தொழிந்தேன்
செற்றுய்மும்மதிலுந்திருமேற்றளியுறையும்
பற்றேநுன்னையல்லாற்பணிந்தேத்தமாட்டேனே. ௪

எம்மானெம்மனையென்றவரிட்டிறந்தொழிந்தார்
மெய்ம்மாலாயினதீர்த்தருள்செய்யுமெய்ப்பொருளே
கைம்மாவீருரியாய்கனமேற்றளியுறையும்
பெம்மானுன்னையல்லாற்பெரிதேத்தமாட்டேனே. ௫

நானேனுன்னடியேநினைந்தேனினைதலுமே
ஊனேரிவ்வுடலம்புகுந்தாயென்னொண்சுடரே
தேனேயின்னமுதேதிருமேற்றளியுறையும்
கோனேயுன்னையல்லாற்குளிர்ந்தேத்தமாட்டேனே. ௬

கையார்வெஞ்சிலைநாணதன்மேற்சரங்கோத்தே
எய்தாய்மும்மதிலும்மெரியுண்ணவெம்பெருமான்
செய்யார்பைங்கமலத்திருமேற்றளியுறையும்
ஐயாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. ௭

விரையார்கொன்றையினாய்விமலாவினியுன்னையல்லால்
உரையேனாவதனாலுடலில்லுயிருள்ளளவும்
திரையார்தண்கழனித்திருமேற்றளியுறையும்
அரையாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே ௮

நிலையாய்நின்னடியேநினைந்தேனினைதலுமே
தலைவாநின்னினையப்பணித்தாய்சலமொழிந்தேன்
சிலையார்மாமதில்சூழ்திருமேற்றளியுறையும்
மலையேயுன்னையல்லான்மகிழ்ந்தேத்தமாட்டேனே. ௯

பாரூர்பல்லவனூர்மதிற்காஞ்சிமாநகர்வாயச்
சீரூரும்புறவிற்றிருமேற்றளிச்சிவனை
ஆரூரன்னடியானடித்தொண்டனாரூரன்சொன்ன
சீரூர்பாடல்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே. ௧0

திருச்சிற்றம்பலம்.

## ௩. திருவோணகாந்தன்றளி.

### சுந்தரமூர்த்திநாயனார்.

எ. பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நெய்யும்பாலுக்தயிருங்கொண்டுநித்தல்பூசனைசெய்யலுற்றூர்
கையிலொன்றுங்காணமில்லைக்கழலடிதொழுதுய்யினல்லால்
ஐவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிப்பட்டழுந்துவேற்கு
உய்யுமாறென்றளிச்செப்பீரோணகாந்தன்றளியுளீரே. ௧

திங்கடங்குசடையின்மேலோர்திரைகள்வந்துபுரளவீசும்
கங்கையாளேல்வாய்திறவாள்கணபதியேல்வயிறுதாரி
அங்கைவேலோன்குமரன்பிள்ளைதேவியார்கோற்றட்டியாளார்
உங்களுக்காட்செய்யமாட்டோமோணகாந்தன்றளியுளீரே. ௨

பெற்றபோழ்தும்பெறாதபோழ்தும்பேணியுங்கழலேத்துவார்கள்
மற்றோர்பற்றிலரென்றிரங்கிமதியுடையவர்செய்கைசெய்வீர்
அற்றபோழ்துமலர்ந்தபோழ்துமாபற்காலத்தடிகேளும்மை
ஒற்றிவைத்திங்குண்ணலாமோவோணகாந்தன்றளியுளீரே. ௩

வல்லதெல்லாஞ்சொல்லியும்மைவாழ்த்தினாலும்வாய்திறந்தொன்
றில்லையென்னீருண்டுமென்னீரெம்மையாள்வானிருப்பதென்னீர்
பல்லையுக்கபடுதலையிற்பகலெலாம்போய்ப்பலிதிரிந்திங்
கொல்லைவாழ்க்கையொழியமாட்டீரோணகாந்தன்றளியுளீரே. ௪

கூடிக்கூடித்தொண்டர்தங்கள்கொண்டபாணிகுறைபடாமே
ஆடிப்பாடியழுதுநெக்கங்கன்புடையவர்க்கின்பமோரீர்
தேடித்தேடித்திரிந்தெய்த்தாலுஞ்சித்தமென்பால்வைக்கமாட்டீர்
ஓடிப்போகீர்பற்றுந்தாரீரோணகாந்தன்றளியுளீரே. ௫

வாரிருங்குழல்வாணெடுங்கண்மலைமகண்மதுவிம்முகொன்றைத்
தாரிருந்தடமார்புநீங்காத்தையலாளுலகுய்யவைத்த
காரிரும்பொழிற்கச்சிமூதூர்க்காமகோட்டமுண்டாகநீர்போய்
ஊரிடும்பிச்சைகொள்வதென்னேயோணகாந்தன்றளியுளீரே. ௬

பொய்ம்மையாலேபோதுபோக்கிப்புறத்துமில்லையகத்துமில்லை
மெய்ம்மைசொல்லியாளமாட்டீர்மேலைநாளொன்றிடவுங்கில்லீர்
எம்மைபெற்றாலேதும்வேண்டீரேதுந்தாரீரேதுமோதீர்
உம்மையன்றேயெம்பெருமானோணகாந்தன்றளியுளீரே. ௭

வலையம்வைத்தகூற்றமீவான்வந்துநின்றவார்த்தைகேட்டுச்
சிலையமைத்தசிந்தையாலேதிருவடிதொழுதுய்யினல்லால்
கலையமைத்தகாமச்செற்றக்குரோதலோபமதவருடை
உலையமைத்திங்கொன்றமாட்டேனோணகாந்தன்றளியுளீரே. ௮

வாரமாகித்திருவடிக்குப்பணிசெய்தொண்டர்பெறுவதென்னே
ஆரம்பாம்புவாழ்வதாரூரொற்றியூரேயும்மதன்று
தாரமாகக்கங்கையாளைச்சடையில்வைத்தவடிகேளுந்தம்
ஊருங்காடுமுடையுந்தோலேயோணகாந்தன்றளியுளீரே. ௯

ஓவணமேலெருதொன்றேறுமோணகாந்தன்றளியுளார்தாம்
ஆவணஞ்செய்தாளுங்கொண்டவ்வரைதுகிலொடுபட்டுவீக்கிக்
கோவணமேற்கொண்டவேடங்கோவையாகவாரூரன்சொன்ன
பாவணத்தமிழ்பத்தும்வல்லார்பறையுந்தாஞ்செய்தபாவந்தானே. ௰

திருச்சிற்றம்பலம்.

# ௪. திருவனேகதங்காவதம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

### ௭. பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்திகழைங்கணையக்
கோனையெரித்தெரியாடியிடங்குலவானதிடங்குறையாமறையாம
மானையிடத்ததொர்கையனிடம்மதமாறுபடப்பொழியும்மலைமேல
யானையுரித்தபிரானதிடங்கலிக்கச்சியனேகதங்காவதமே.

கூறுநடைக்குழிகட்பகுவாயனபேயுகந்தாடநின்றோரியிட
வேறுபடக்குடகத்திலையம்பலவாணனின்றாடலவிரும்புமிடம
ஏறுவிடைக்கொடியெம்பெருமானிமையோர்பெருமானுமையாள்கணவ
ஆறுசடைக்குடையப்பனிடங்கலிக்கச்சியனேகதங்காவதமே ௨

கொடிகளிடைக்குயில்கூவுமிடம்மயிலாலுமிடம்மழுவாளுடைய
கடிகொள்புனற்சடைகொண்டநுதற்கறைக்கண்டனிடம்பிறைத்துண்டமுடிச்
செடிகொள்வினைப்பகைதீருமிடந்திருவாகுமிடந்திருமார்பகலத
தடிகளிடம்மழல்வண்ணனிடங்கலிக்கச்சியனேகதங்காவதமே. ௩

கொங்குநுழைத்தனவண்டறைகொன்றையுங்கங்கையுந்திங்களுஞ்சூடுசடை
மங்குலுழைமலைமங்கையைநங்கையைப்பங்கினிற்றங்கவுவந்தருள்செய்
சங்குகுழைச்செவிகொண்டருவித்திரள்பாயவியர்த்தழல்போலுடைத்தம்
அங்கைமழுத்திகழ்கையனிடங்கலிக்கச்சியனேகதங்காவதமே. ௪

பைத்தபடத்தலையாடரவம்பயில்கின்றவிடம்பயிலப்புகுவார்
சித்தமொருநெறிவைத்தவிடந்திகழ்கின்றவிடந்திருவானடிக்கே
வைத்தமனத்தவர்பத்தர்மனங்கொளவைத்தவிடம்மழுவாளுடைய
அத்தனிடம்மழல்வண்ணனிடங்கலிககச்சியனேகதங்காவதமே. ௫

தண்டமுடைத்தருமன்றமரென்றமரைச்செயும்வன்றுயர்தீர்க்குமிடம்
பிண்டமுடைப்பிறவித்தலைநின்றுநினைப்பவராகவையைநீக்குமிடம
கண்டமுடைக்கருநஞ்சைநுகர்ந்தபிரானதிடங்கடலேழுகடந்
தண்டமுடைப்பெருமானதிடங்கலிக்கச்சியனேகதங்காவதமே. ௬

கட்டுமயக்கமறுத்தவர்கைதொழுதேத்துமிடங்கதிரோனொளியால்
விட்டுமிடம்விடையூர்தியிடங்குயிற்பேடைதன்சேவலொடாடுமிடம்
மட்டுமயங்கியவிழ்ந்தமலரொருமாதவியோடுமணம்புணரும்
அட்டபுயங்கபிரானதிடங்கலிக்கச்சியனேகதங்காவதமே. ௭

புல்லியிடந்தொழுதுய்துமென்னாதவர்தம்புரமூன்றும்பொடிப்படுத்த
வில்லியிடம்விரவாதுயிருண்ணும்வெங்காலனைக்கால்கொடுவீந்தவியக்
கொல்லியிடங்குளிர்மாதவிமவ்வல்குராவகுளங்குருக்கத்திபுன்னை
அல்லியிடைப்பெடைவண்டுறங்குங்கலிக்கச்சியனேகதங்காவதமே. ௮

சங்கையவர்புணர்தற்கரியான்றளவேனகையாடவிராமிகுசீர்
மங்கையவண்மகிழச்சுடுகாட்டிடைநட்டநின்றாடியசங்கரனெம்
அங்கையனல்லனலேந்துமவன்கனல்சேரொளியன்னதொர்பேரகலத்
தங்கையவன்னுறைகின்றவிடங்கலிக்கச்சியனேகதங்காவதமே. ௯

வீடுபெறப்பலவூழிகணின்றுமினைக்குமிடம்வினைதீருமிடம்
பீடுபெறப்பெரியோரதிடங்கொண்டுமேவினர்தங்களைக்காக்குமிடம்
பாடுமிடத்தடியான்புகலூரனுரைத்தவிம்மாலைகள்பத்தும்வல்லார்
கூடுமிடஞ்சிவலோகனிடங்கழிக்கச்சியனேகதங்காவதமே. க0

திருச்சிற்றம்பலம்.

# ரு. திருநெறிக்காரைக்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### ங. பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வாரணவுமுலைமங்கைபங்கினராயங்கையினில்
போரணவுமழுவொன்றங்கேந்திவெண்பொடியணிவர்
காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி
நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. க

காரூருமணிமிடற்றார்கரிகாடருடைதலைகொண்
டூரான்பலிக்குழலவாருழைமானினுரியதளர்
தேரூருநெடுவீதிச்செழுங்கச்சிமாநகர்வாய்
நீரூருமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. உ

கூறணிந்தார்கொடியிடையைக்குளிர்சடைமேலிளமதியோ
டாரணிந்தாராடரவம்பூண்டுகந்தாரான்வெள்ளை
ஏறணிந்தார்கொடியதன்மேலென்பணிந்தார்வரைமார்பில
நீறணிந்தார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ங

பிறைநவின்றசெஞ்சடைகள்பின்றாழப்பூதங்கள்
மறைநவின்றபாடலோடாடலராய்மழுவேந்திச்
சிறைநவின்றவண்டினங்கடேங்கனிவாய்த்தேன்கதுவும்
நிறைநவின்றகலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ச

அன்றாலின்கீழிருந்தங்கறம்புரிந்தவருளாளர்
குன்றாதவெஞ்சிலையிற்கோளரவநாண்கொளுவி
ஒன்றாதார்புரமூன்றுமோங்கெரியில்வெந்தவிய
நின்றாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ரு

பன்மலர்கள்கொண்டடிக்கீழ்வானோர்கள்பணிந்திறைஞ்ச
நன்மையிலாவல்லவுணர்நகர்மூன்றுமொருநொடியில்
வின்மலையினாண்கொளுவிவெங்கணையாலெய்தழித்த
நின்மலனார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. சா

புற்றிடைவாளரவினொடுபுனைகொன்றைமதமத்தம்
எற்றொழியாவலைபுனலோடிளமதியமேந்துசடைப்
பெற்றுடையாரொருபாகம்பெண்ணுடையார்கண்ணமரும்
நெற்றியினார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. எ

ஏழ்கடல்சூழ்தென்னிலங்கைக்கோமானையெழில்வரைவாய்த்
தாழ்விரலா லூன்றியதோர் தன்மையினார் நன்மையினார்
ஆழ்கிடங்குஞ்சூழ்வயலுமதில்புல்கியழகமரும்
நீணமறுகிற்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ௮

ஊண்டானுமொலிகடனஞ்சுடைதலையிற்பலிகொள்வர்
மாண்டார்தமெலும்பணிவர்வரியரவோடெழிலாமை
பூண்டாருமோரிருவரறியாமைப்பொங்கெரியாய்
நீண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ௯

குண்டாடிச்சமண்படுவார்கூறைதனைமெய்போர்த்து
மிண்டாடித்திரிதருவாருரைப்பனகண்மெய்யல்ல
வண்டாருங்குழலாளைவரையாகத்தொருபாகம்
கண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ௧0

கண்ணாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டுறையும்
பெண்ணாருந்திருமேனிப்பெருமானதடிவாழ்த்தித்
தண்ணாரும்பொழிற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
பண்ணாருந்தமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## ௮. திருவாசகம்.

### மாணிக்கவாசகநாயனார்.

### கீர்த்தித்திருவகவல்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைமூதூராடியதிருவடி

*    *    *

ஏகம்பத்தினியல்பாயிருந்து
பாகம்பெண்ணோடாயினபரிசும்

*    *    *

ஒலிதருகைலையுயர்கிழவோனே.

### போற்றித்திருவகவல்.

நான்முகன்முதலாவானவர்தொழுதெழ

*    *    *    *

ஏகம்பத்துறையெந்தாய்போற்றி
பாகம்பெண்ணுருவானாய்போற்றி

*    *    *    *

போற்றிபோற்றிசயசயபோற்றி.

### திருப்பொற்சுண்ணம்.

காசணிமின்களுலக்கையெல்லாங்காம்பணிமின்கள்கறையுரலை
நேசமுடையவடியவர்களின்றுநிலாவுகவென்றுவாழ்த்தித்
தேசமெல்லாம்புகழ்ந்தாடுங்கச்சித்திருவேகம்பன்செம்பொற்கோயில்பாடி
பாசவினையைப்பறித்துநின்றுபாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே. ௧

அறுகெடுப்பாரயனும்மரியுமன்றிமற்றிந்திரனோடமரர்
நறுமுறுதேவர்கணங்களெல்லாநம்மிற்பின்பல்லதெடுக்கவொட்டோம்
செறிவுடைமும்மதிலெய்தவில்லிதிருவேகம்பன்செம்பொற்கோயில்பாடி
முறுவற்செவ்வாயினீர்முக்கணப்பற்காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

### திருப்பூவல்லி.

படமாகவென்னுள்ளேதன்னிணைப்போதவையளித்திங்
கிடமாகக்கொண்டிருந்தேகம்பமேயபிரான்
தடமார்மதிற்றில்லையம்பலமேதானிடமா
நடமாடுமாபாடிப்பூவல்லிகொய்யாமோ. ௧௯

### திருவுந்தியார்.

ஈரம்புகண்டிலமேகம்பர்தங்கையில்
ஓரம்பேமுப்புரமுந்தீபற
ஒன்றும்பெருமிகையுந்தீபற. ௨

திருச்சிற்றம்பலம்.

---

## ௯. திருவிசைப்பா.

---

### புருடோத்தநம்பிநாயனார்.

திருச்சிற்றம்பலம்.

எழுந்தருளாயெங்கள்வீதியூடே
யேதமின்முனிவரோடெழுந்தஞானக்
கொழுந்ததுவாகியகூத்தனேநின்
குழையணிகாதினின்மாத்திரையும்
செழுந்தடமலர்புரைகண்கண்மூன்றுஞ்
செங்கனிவாயுமெஞ்சிந்தைவௌவ
அழுந்துமென்னாருயிர்க்கென்செய்கேனோ
வரும்புனலலமருஞ்சடையினானே.

---

### சேந்தநாயனார் திருப்பல்லாண்டு.

சொல்லாண்டசுருதிப்பொருள்சோதித்ததூய்மனத்தொண்டருள்ளீர்
சில்லாண்டிற்சிதையுஞ்சிலதேவர்சிறுநெறிசேராமே
வில்லாண்டகனகத்திரண்மேருவிடங்கன்விடைப்பாகன்
பல்லாண்டென்னும்பதங்கடந்தானுக்கேபல்லாண்டுகூறுதுமே.

திருச்சிற்றம்பலம்.

## ௧௦. திருமந்திரம்.

திருமூலதேவநாயனார்.

திருச்சிற்றம்பலம்.

அரகரவென்னவரியதொன்றில்லை
அரகரவென்னவறிகிலர்மாந்தர்
அரகரவென்னவமரருமாவர்
அரகரவென்னவறும்பிறப்பன்றே.
சிவசிவவென்கிலர்தீவினையாளர்
சிவசிவவென்னிடத்தீவினைமாளும்
சிவசிவவென்றிடத்தேவருமாவர்
சிவசிவவென்னச்சிவகதிதானே.

திருச்சிற்றம்பலம்.

## ௧௧. திருப்பிரபந்தமாலை.

ஐயடிகள்காடவர்கோனாயனார்.

க்ஷேத்திரத்திருவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

என்னெஞ்சேயுன்னையிரந்துமுரைக்கின்றேன்
கன்னஞ்செய்வாயாகிற்காலத்தால்—வன்னெஞ்சேய்
மாகம்பத்தானையுரித்தானைவண்கச்சி
ஏகம்பத்தானையிறைஞ்சு.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்தடிகளாயனார்.

திருவேகம்பமுடையார்திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைப்போற்றுகின்ற
இத்தொண்டனென்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே. ௧

ஏகம்பனேயென்னையாள்பவனேயிமையோர்க்கிரங்கிப்
போகம்பன்னாளுங்கொடுக்கின்றநாயகபொங்குமைவாய்
நாகம்பொன்னாரமெனப்பொலிவுற்றுநன்னீறணியும்
ஆகம்பொன்மாமலையொப்பவனேயென்பனாதரித்தே. ௨

தரித்தேன்மனத்துன்றிகழ்தருநாமந்தடம்பொழில்வாய்
வரித்தேன்முறல்கச்சியேகம்பனேயென்றன்வல்வினையை
அரித்தேனுனைப்பணியாதவரோமைமைகண்டவரைச்
சிரித்தேனுனக்கடியாரடிபூணத்தெளிந்தனனே. ௩

தெளிதருகின்றதுசென்றன்மனநின்றிருவடிவக்
தளிதருநின்னருட்கையமினியிலையந்திச்செக்கர்
ஒளிதருமேனியெம்மேகம்பனேயென்றுகந்தவர்தாள்
தளிதருதூளியென்றன்றலைமேல்வைத்ததன்மைபெற்றே. ௪

பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகுநின்சீர்
கற்றுகந்தேனென்கருத்தினிதாக்கச்சியேகம்பத்தின்
பற்றுகந்தேறுமுகந்தவனேபடநாகக்கச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றுணையடியே. ௫

அடிநின்றசூழலகோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றசூழ்முடிகாண்பரிதாயிற்றுக்கார்முகிலின்
இடிநின்றசூழ்குரலேறுடையேகம்பயாமெங்ஙனே
வடிநின்றசூலப்படையுடையாயைவணங்குவதே. ௬

வணக்கந்தலைநின்றிருவடிக்கேசெய்யுமையல்கொண்டோர்
இணக்கன்றிமற்றோரிணக்கறிவோமல்லம்வல்லரவின்
குணக்குன்றவில்லிகுளிர்கச்சியேகம்பங்கூடினல்லாற்
கணக்கன்றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே. ௭

நலந்தரநானென்றுசொல்லுவன்கேண்மினல்லீர்களன்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகனற்றிகிரி
சலந்தரனாகமொழிக்கவைத்தாய்தக்கன்வேள்வியெல்லாம்
நிரந்தரமாகச்செய்தாயென்றுபூசித்துநின்மின்களே. ௮

மின்களென்றார்சடைகொண்டலென்றார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெளிப்பாடுதம்பொன்னடிபூண்டுகொண்ட
என்களென்றாலும்பிரிந்தறியார்கச்சியேகம்பத்தான்
தன்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே. ௯

தன்மையிற்குன்றாத்தவத்தோரிமையவர்தாம்வணங்கும்
வன்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கையிலைப்
பொன்மயிற்சாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலும்
மென்மயிற்சாயுமருங்குலுங்காதல்விளைத்தனவே. ௧௦

தனமிட்டுமைதழுவத்தழும்புற்றவர்தம்மடியார்
மனம்விட்டகலாமதிற்கச்சியேகம்பர்வான்கயிலைச்
சினம்விட்டகலாககளிறுவினாவியொர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதுநம்பூங்கொடியே. ௧௧

பூங்கொத்திருந்தழையார்பொழிற்கச்சியேகம்பர்பொற்பார்
கோங்கத்திருந்தகுடுமிக்கயிலையெம்பொன்னொருத்தி
பாங்கொத்திருந்தனையாரணங்கேபடர்கல்லருவி
யாங்கத்திருந்திழையாடிவந்தாற்கண்டடிவருத்தே. ௧௨

வருத்தந்தருமெய்யுங்கையிற்றழையும்வன்மாவினவும்
கருத்தந்தரிக்குடக்கவின்றையகழனியையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்க்கயிலைத்
இருத்தந்திருப்பதன்றிப்புனங்காக்குந்தொழிலெமக்கே. ௧௩

எம்மையு மெம்மைப்பணிகொள்ளுங்கம்பரெழிற்கயிலை
யும்மையுமானிடமிப்புனத்தேவிட்டேவந்தமைந்தர்
தம்மையுமானையுஞ்சிந்தையுநோக்கங்கவர்வவென்றோ
அம்மையுமம்மலர்க்கண்ணும்பெரியீரருளுமினே. கச

அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்கும்மிவரையருநுத்தியெய்ய
வெருளக்கலைகணைதன்னொடும்போயினவில்லிமைக்கும்
அருளைத்தருசொல்லியெங்கோவிலையுண்டிவ்வையகத்தே. கரு

வையார்மழுப்படையேகம்பரீங்கோய்மலைப்புனத்துள்
ஐயார்வருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்தவெம்பூங்கொடிகொங்கைபொருப்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே. கசா

பருமுத்துதிர்த்திடுஞ்சீர்மத்தயானைநுதல்பகுந்திட்
டொருமொத்ததிண்குரற்சீயந்திரிநெறியோங்குவையாய்ப்
பொருமுத்தலைவேற்படைக்கம்பர்பூங்கயிலைப்புனத்துள்
தருமுத்தனநகைதன்னசையால்வெற்பசார்வரிதே. கஎ

அரிதன்றிருக்கண்ணிடநிரம்பாயிரம்போதணிய
அரிதன்றிருவடிக்கர்ச்சித்தகண்ணுக்கருளுகம்பர்
அரிதன்றிருக்கங்குலியாலழிந்தகயிலையலலிங்
கரிதென்றிருப்பதெம்பால்வெற்பவெம்மையர்க்கஞ்சுதுமே. கஅ

அஞ்சரத்தான்பொடியாய்விழத்தீவிழித்தன்புசெய்வோர்
நெஞ்சரத்தாழ்வுகந்தோர்க்கச்சியேகம்பர்நீள்கயிலைக்
குஞ்சரத்தாழ்வரைவீழநுங்கொம்புய்யக்கும்பமுழும்
வெஞ்சரத்தாரனவோவல்லவோவிவ்வியன்முரசே. கசூ

சேய்தந்தகைம்மையுமைகணவன்றிருவேகம்பத்தான்
தாய்தந்தையாயுயிர்காப்போன்கயிலைத்தயங்கிருள்வாய்
வேய்தந்ததோளிநம்மூசலொடும்விரைவேங்கைதன்னைப்
பாய்தந்துபூசலுண்டாங்கொண்டதோகைபகடுவந்தே. உ௦

வந்தும்மணம்பெறிற்பொன்னனையீர்மன்னுமேகம்பர்தம்
உந்துமருவிக்கயிலைமலையுயர்தேனிழிச்சித்
தந்துமலர்கொய்துந்தண்டினைமேயுங்கிளிகடிந்துஞ்
சிந்தும்புகர்மலைக்கச்சுமிச்சாரற்றிரிதவனே. உக

திரியப்புரமெய்தவேகம்பனூர்திகழுங்கயிலைக்
கிரியக்குறவர்பருவத்திடுதாளம்வினையோம்
விரியச்சுருண்முதலாறுமடைந்தோம்விரைவிரைந்து
பிரியக்கதிர்முத்தினீர்பெற்றதென்னங்குப்பேசுமினே. உஉ

பேசுகயாவருண்மக்கணியாரென்றுபித்தரெங்கும்
பூசுகையார்திருநீற்றெழிலேகம்பர்பொற்கயிலைத்
தேசுகையார்சிலைவெற்பன்பிரியும்பரிசிலராக்
கூசுகையாதுமில்லாக்குலவேங்கைப்பெயர்தும்மையே. உங

பெயராநலத்தெழிலேகம்பனார்பிறைதோய்கயிலைப்
பெயராதிருக்கப்பெறுகிளிகாள்புனமேபிரிவின்
துயரால்வருத்திமனமுமிங்கோடித்தொழுதுசென்ற
தயராதுறையும்வெற்பற்கடியேற்கும்விடைதமினே. உ௪

நம்மைப்பிறவிக்கடல்கடப்பிப்பவர்நாம்வணங்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழிலேகம்பர்மொய்கயிலை
அம்மைக்கருங்கண்ணிதன்னொடின்பந்தருந்தண்புனமே
எம்மைக்கவலைசெயச்சொல்லியோவல்லியெய்தியதே. உ௫

இயங்குந்திரிபுரமெய்தவேகம்பரெழிற்கயிலைத்
தயங்குமலர்ப்பொழில்காடையலர்டருவித்தடங்காண்
முயங்குமணியறைகாண்மொழியீரொழியாதுநெஞ்சம்
மயங்கும்பரிசுபொன்னார்சென்றசூழல்வகுத்தெமக்கே. உ௬

வகுப்பாரிவர்போன்மணத்துக்குநாண்மணந்தன்னொடின்ப
மிகுப்பார்களாருயிரொன்றாமிருவரைவிள்ளக்கள்வாய்
நெகுப்பான்மலர்கொண்டுநின்றார்கிடக்கநிலாவுகம்பர்
தொகுப்பான்மணிசிந்தருவிக்கயிலையிச்சூழ்புனத்தே. உ௭

புனங்குழையாதென்றுமென்றினைகொய்ததும்போகலுற்ற
கனங்குழையாடற்பிரியநமக்குறுங்கையறவால்
மனங்குழையாவருங்கண்கனிபண்பலபாடுந்தொண்டர்
இனங்குழையாத்தொழுமேகம்பரிக்கயிலாயத்துள்ளே. உ௮

உள்ளம்பெரியரல்லாச்சிறுமானிடருற்றசெல்வங்
கள்ளம்பெரியசிறுமனத்தார்க்கன்றிக்கங்கையென்னும்
வெள்ளம்பெரியசடைத்திருவேகம்பர்விண்ணாரணந்
தள்ளம்பெரிகொண்டமைத்தாரடியவர்சார்வதன்றே. உ௯

அன்றும்பகையடர்க்கும்பரிமாவுமதவருவிக்
குன்றும்பதாதியுந்தேருங்குலவிக்குடைநிழற்கீழ்
நின்றும்பொலியினுங்கம்பர்நன்னீறுநுதற்கிலரேல்
என்றுமரசுமுரசும்பொலியாவிருநிலத்தே. ௩0

நிலத்திமையோரிற்றலையாப்பிறந்துமறையொடங்கம்
வலத்திமைப்போதும்பிரியாரெரிவளர்த்தாலும்வெற்பன்
குலத்துமையோர்பங்கர்கச்சியுளேகம்பங்கூடித்தொழும்
நலத்தமையாதவர்வேட்டுவர்தம்மினடுப்படையே. ௩௧

படையாலுயிர்கொன்றுதின்றுபசுக்களைப்போலச்செல்லும்
நடையாலறிவின்றிநாண்சிறிதின்றிநகுங்குலத்திற்
கடையாப்பிறக்கினுங்கச்சியுளேகம்பத்தெங்களையாள
உடையான்கழற்கன்பரேலவர்யாவர்க்குமுத்தமரே. ௩௨

உத்துங்கயானையுரியார்விரலாலரக்கன்சென்னி
பத்துங்கையாணவிருபதுஞ்சோர்தரவைத்திலைங்ய
ஒத்துங்கையாலவன்பாடக்கயிலையுள்வோர்நற்கைவாள்
எத்துங்கையானென்றுகந்தளித்தார்கச்சியேகம்பரே. ௩௩

அம்பரங்காலனனீர்நிலந்திங்களருக்கனனு
வம்பரங்கொள்வதொர்வேழத்துரியவன்றன்னுருவாம்
எம்பரன்கச்சியுளேகம்பத்தானிடையாதடைவான்
நம்பர்ன்றன்னடியாரறிவார்க்குநறுந்துணையே. ௩௪

துணைத்தாமரையடியும்பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுங்கண்டத்துநீலமுமண்டத்துமின்
பிணைத்தாலனசடையுந்திருமுக்கணும்பெண்ணொர்பக்கத்
தணைத்தாரெழிற்கம்பரெங்கள்பிரானார்க்கழகியவே. ௩௫

அழகறிவிற்பெரிதாகியவேகம்பரத்தர்கொற்றம்
பழகறிவிற்பெரியோர்தமைப்பற்றலர்பற்றுமன்பின்
குழகறிவேற்பினுளொன்றறியாரறியாமைதெய்வங்
கிழகெறியப்பட்டுலந்தாருலகிற்கிடந்தனரே. ௩௬

கிடக்குமொருபாலிரைக்கின்றபாம்பொருபான்மதியந்
தொடக்குண்டிலங்குமலங்குந்திரைக்கங்கைசூடுங்கொன்றை
வடக்குண்டுகட்டத்தலைமாலைவாளான்மலைந்தவெம்போர்
கடக்கும்விடைத்திருவேகம்பர்கற்றைச்சடைமுடியே. ௩௭

கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ்கொன்றையந்தார்
முற்றுற்றிலாமதியின்கொழுந்தேகம்பர்மொய்குழலாம்
மற்றைத்திசையின்மணிப்பொற்கொழுந்ததுதரங்கபூநீர்
தெற்றிப்பொலிகின்றசூட்டழகாகித்திகழ்தருமே. ௩௮

தருமருட்டன்மைவலப்பாற்கமலக்கணெற்றியின்மேல
திருமலர்க்கண்பிளவின்றிகழுந்தழல்செலவக்கம்பர்
கருமலர்க்கண்ணிடப்பாலதுநீலங்கனிமகத்து
வருநுதற்பொட்டணங்குக்குயர்ந்தோங்குமலர்க்குழலே. ௩௯

மலர்ந்தபடத்துச்சியைந்தினுஞ்செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலம்வலககாதினிலாடிவரும்
நலந்திருநீள்வயிரம்வெயிற்பாயுநகுமணிகள
கலந்தசெம்பொன்மகரக்குழையேகம்பர்காதிடமே. ௪௦

காதலைக்கும்வலத்தோள்பவளக்குன்றமங்குயர்ந்து
போதலைக்கும்பனிப்பொன்மலைநீற்றின்பொலியகலந்
தாதலைககுங்குழல்சேர்பணைதோணறுஞ்சாந்தணிந்து
சூதலைக்குமுலைமார்பிடமேகம்பர்சுந்தரமே. ௪௧

தரம்பொற்பழியுமுலகட்டியெய்த்துத்தாந்தளரா
உரம்பொற்புடையதிருவயிறும்வலமும்பர்மும்மைப்
புரம்பொற்பழித்தகம்பர்க்குத்தரத்திடுபூண்முலையு
நிரம்பப்பொறுத்துதளரிளவஞ்சியுநேருடைத்தே. ௪௨

உடைப்புலிபாடையின்மேலுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந்தோன்றுமரைவலமற்றையல்குல்
தொடக்குறுகாஞ்சித்தொடுத்தவரசிலைதுநுண்டுகில்
அடற்பொலிபேறுடையேகம்பமேயவடிகளுக்கே. ௪௩

அடிவலப்பாலதுசெந்தாமரையொத்ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத்திறவைத்ததிளந்தளிரின்
அடியிடப்பாலதுபூஞ்சுறவஞ்சுஞ்சிலம்பணிந்த
வடிவுடைத்தார்கச்சியேகம்பமேயவர்தருககே. ௪௪

தருக்கவற்றான்மிக்கமுப்புரமெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றோடமழுவாள்விசைந்ததுநெற்களென்றும்
பருக்கவற்றாங்கச்சியேகம்பரத்தர்தம்பாம்புகளின்
திருக்கவற்றாலிட்டருளுங்கடகத்திருக்கரமே. ௪௫

கரத்தத்தமருகத்தோசைகடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்டவனிதலநெரியத்
தரத்தத்திசைகளுக்கப்புறம்போர்ப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகம்பராடுவரெல்லியுமாநடமே. ௪௬

நடனம்பிரானுகந்துய்யக்கொண்டானென்றுநன்மறையோர்
உடன்வந்துமூவாயிரவரிறைஞ்சிநிறைந்தவன்பின்
கடனன்றிமற்றறியாத்தில்லையம்பலங்காளத்தியாம்
இடமெம்பிரான்கச்சியேகம்பமேயாற்கினியனவே. ௪௭

இனியவரின்னாரவரையொப்பார்பிறரென்னவொண்ணாத்
தனியவர்தையலுடனாமுருவரறம்பணித்த
முனியவரென்றுமுகந்தமுக்கண்ணவர்தண்டியன்புக்
கினியவர்காய்மழுவாட்படையார்கச்சியேகம்பரே. ௪௮

பரவித்தனைநினையக்கச்சியேகம்பர்பண்ணுமையல்
வரவித்தனையுள்ளதெங்ஙனறிந்தேன்முன்னவர்கணார்
புரவித்தனையடிக்ககொடிதாய்விடியாவிரவில்
அரவித்தனையுங்கொண்டார்மடவார்முன்றிலாட்டிடவே. ௪௯

இடவஞ்சுறுக்கெனப்பாயுமஞ்சென்னிநகுதலைகண்
டிடவஞ்சுவர்மடவாரிரிகின்றனரேகம்பதீர்
படவஞ்சுவாயதுநாகமிரைக்குமதனுக்குமுற்
படவஞ்சுவரெங்ஙனேபலிவந்திடும்பாங்குகளே. ௫0

பாங்குடைக்கோட்புலியின்னதள்கொண்டிர்நும்பாரிடங்கள்
தாங்குடைகொள்ளப்பலிகொள்ளவந்தீர்தடங்கமலம்
பூங்குடைகொள்ளப்புனற்கச்சியேகம்பங்கோயில்கொண்டீர்
ஈங்கிடைகொள்ளக்கலைகொள்ளவந்தீரிடைக்குமின்றே. ௫௧

இடைக்குமின்றோற்குமிணைமுலையாய்முதியார்கடஞ்சொற்
கடைக்கணன்றாங்கச்சியேகம்பரையங்கொளக்கடவும்
விடைக்குமுன்றோற்றநில்லேலின்றினியிந்தமொய்குழலார்
இடைக்குமுன்றோற்றநெஞ்சங்கிதுவோதங்கிறித்துவமே. ௫௨

கிறிபலபேசிச்சதிராநடந்துவிடங்குபடக்
குறிபலபாடிக்குளிர்கச்சியேகம்பரையங்கொள்ள
நெறிபலவார்குழலார்மெலிவுற்றநெடுந்தெருவில்
செறிபலவெள்வளைபோயினதாயர்கடேடுவரே. ௫௩

தேடுற்றிலகள்ளநோக்கந்தெரிந்திலசொற்கண்முடி
கூடுற்றிலகுழல்கொங்கையொடித்திலகூறுமிவண்
மாடுற்றிலமணியின்மடவல்குலுமற்றிவள்பால்
நாடுற்றிலவெழிலேகம்பனூர்க்குள்ளூநல்கிடத்தே. ௫௪

நல்கும்புகழ்க்கடவூர்நன்மறையவனுய்யநண்ணிக்
கொல்கின்றகூற்றைக்குமைத்தவெங்கூற்றங்குளிர்திரைகள்
மல்குந்திருமறைக்காட்டமிர்தென்றுமலைமகடான்
புல்கும்பொழிற்கச்சியேகம்பமேவியபொன்மலையே. ௫௫

மலயத்தகத்தியனர்ச்சிக்கமன்னிவடகயிலை
நிலையத்தமரர்தொழவிருந்தானெடுமேருவென்னுஞ்
சிலையத்தன்பைம்பொன்மதிற்றிருவேகம்பத்தான்றிகழ்நீர்
அலையத்தடம்பொன்னிசூழ்திருவையாற்றருமணியே. ௫௬

மணியாரருவித்தடவிமயங்கிடக்கொல்லிகல்லின்
திணியாரருவியிணர்த்தசிராமலைபைவனங்கள்
அணியாரருவிகவர்கிளியோப்புமின்சாரல்விந்தம்
பணிவாரருவினைதீர்க்குமேகம்பர்பருப்பதமே. ௫௭

பருப்பதங்கார்தவழ்மந்தரமிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றியங்கும்பரங்குன்றம்வில்லார்
நெருப்பதங்காகுதிநாறுமகேந்திரமென்றிவற்றில்
இருப்பதங்காவுகந்தான்கச்சியேகம்பத்தெம்மிறையே. ௫௮

இறைத்தார்புரமெய்தவில்லிமைநல்லிமவான்மகட்கு
மறைத்தார்கருங்குன்றம்வெண்குன்றஞ்செங்குன்றமன்னற்குன்ற
நிறைத்தார்நெடுங்குன்றநீள்கழுக்குன்றமென்றீவினைகள்
குறைத்தார்முதுகுன்றமேகம்பர்குன்றென்றுகூறுமினே. ௫௯

கூறுமின்றொண்டர்குற்றாலநெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின்வேள்விக்குடிதிருத்தோணிபுரம்பழனம்
மாறுமின்போற்சடைவைத்தவனூரிடைமருதென்
தேறுமினீரெம்பிரான்கச்சியேகம்பமுன்னினைந்தே. ௬௦

நினைவார்க்கருளும்பிரான்றிருச்சோற்றுத்துறைநியமம்
புனைவார்சடையோன்புகலூர்புறம்பயம்பூவணநீர்
பனைவார்பொழிற்றிருவெண்காடுபாச்சிலதிகையென்றும்
நினைவார்தருநெஞ்சினீர்கச்சியேகம்பநண்ணுமினே. ௬௧

நண்ணிப்பரவுந்திருவாவடுதுறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர்கடம்பந்துறைமன்னுபுன்கூர்
எண்ணற்கரியபாராய்த்துறையேர்கொளெதிர்கொள்பாடி
கண்ணிப்பிறைச்சடையோன்கச்சியேகம்பங்காண்மின்சென்றே.

சென்றேறிவிண்ணுறுமண்ணுமலைதிகழ்வல்லமென்பூ
இன்றேற்றல்பாய்திருமாற்பேறுபாசூரெழிலழுந்தூர்
வன்றேரவன்றிருவிற்பெரும்பேறுமதிலொற்றியூர்
நின்றோர்தருகச்சியேகம்பமேயார்நிலாவியவே. ௬௩

நிலாவுபுகழ்த்திருவோத்தூர்திருவாமாத்தூர்நிறைநீர்
கலாவுசடையோன்புலிவலம்வில்வலங்கொச்சைதொண்டர்
குலாவுந்திருப்பனங்காடுநன்மாகறல்கூற்றம்வந்தால்
அலாயென்றடியார்க்கருள்புரியேகம்பாலயமே. ருச

ஆலயங்கார்கருகாவைகச்சூர்திருக்காரிகரை
வேலையங்கேறுதிருவான்மியூர்திருவூறன்மிக்க
சோலையங்கார்திருப்போந்தைமுக்கோணந்தொடர்சடேச்சை
மாலையன்வாழ்திருவாலங்காடேகம்பம்வாழ்த்துமினே. ருரு

வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யுமலர்க்கழலோர்
தாழச்சடைத்திருவேகம்பர்தம்மைத்தொழாதவர்போய்
வாழப்பரற்சுரமாற்றுதளிரடிபூங்குழலெம்
ஏழைக்கிடையிறக்குங்குயபாரமியக்குறினே. ருசா

உறுகின்றவெவ்வழலக்கடமிக்கொடிக்குன்பின்வரப்
பெறுகின்றவண்மையினலைபேராருளேகம்பனார்
துறுகின்றமென்மலர்த்தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திளபோர்
குறுகின்றபூங்குவளைக்குறுந்தண்பணையென்றுசொல்ளே. ருஎ

கொள்ளுங்கடுங்கதிர்க்கள்ளித்தீச்சிலவேயுலர்ந்து
விள்ளும்வெடிபடும்பாலையென்பாவைவிடலைபின்னே
தெள்ளும்புனற்கச்சியுட்டிருவேகம்பர்சேவடியை
உள்ளும்மதுமறந்தாரெனப்போவதுரைப்பரிதே. ருஅ

பரிப்பருந்திண்மைப்படையதுகானரெனிற்சிறகு
விரிப்பருந்துக்கிரையாக்கும்வெய்யோனஞ்சல்ஞ்சடைமேல்
தரிப்பருந்திண்கங்கையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலையேயுமராயின்மறைகுவனே. ருகூ

வனவரித்திண்புலியின்னதளேகம்பமன்னருளே
யெனவருபொன்னணங்கென்னணங்கிற்கெனெழிற்சழங்கும்
தனவரிப்பந்துங்கொடுத்தெனைப்புல்லியுமிற்பிரிந்தே
இனவரிக்கல்லதர்செல்வதெங்கேயொல்குமேழைநெஞ்சே. எ0

நெஞ்சாரீதரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியன்னாள்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கவள்பெற்றெடுத்த
வெஞ்சார்வெழியத்தன்பின்செலமுன்செலவெடுவெடென்ற
அஞ்சாவடுதிறற்காளைதன்போக்கிவையந்தத்திலே. எக

இலவவெங்கானுனையல்லாற்றெழுஞ்சரணேகம்பனார்
நிலவுஞ்சுடரொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகுளிரத்தளிரடிசெல்சுரத்துன்
நலவுங்கதிர்தணிவித்தருள்செய்யுன்னுறுதுணைக்கே. எஉ

துணையொத்தகோவையும்போலெழிற்பேதையுந்தோன்றலுமுன்
னிணையொத்தகொங்கையொடேயொத்தகாதலொடேகினரே
யணையத்தரேரொத்தகாளையைக்கண்டனமற்றவரேல்
பிணையொத்தவோர்க்குடைப்பெண்ணிவடன்றெடும்பேசுமினே.

மின்னலிக்கும்வணக்கத்திடையாளையுமீளியையும்
கென்னலிப்பாக்கைவங்தெய்தினிரேலெம்மனையிற்கண்டீர்
பின்னரிப்போக்கருங்குன்றுகடந்தவரின்றுசம்பர்
மன்னரிதேர்ந்துதொழுங்கச்சிநாட்டிடைவைகுவரே. ௭௪

உவரச்சொல்வேடுடைக்காடுகந்தாடியவேகம்பனார்
அவரக்கன்போனவிமானத்தையாயிரமுண்மைசுற்றுங்
துவரச்சிகரச்சிவாலயஞ்சூலங்துலங்குவிண்மேற்
கவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்கார்மயிலே. ௭௫

கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சியின்வாய்
ஏர்மிக்கசேற்றெழினென்னடுவோரொலிபொன்மலைபோற்
போர்மிக்கசெங்நெல்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்னொலியேயொக்குநேரிழையே. ௭௬

நேர்த்தமையாமைவிறற்கொடுவேடர்நெடுஞ்சுரத்தைப்
பார்த்தமையாலிமைதீர்ந்தகண்பொன்னேபசட்டுறிவை
போர்த்தமையாலுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலுள்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே. ௭௭

சிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிலைசெம்பழுக்காய்
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலவைதீங்கனியின்
பொறைகொண்ட வாழைப்பொதும்புவைபுன்சடையேகம்பனார்
நறைகொண்டபூங்கச்சிநாடெங்குமிவ்வண்ணநன்னுதலே. ௭௮

நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவள்ளை
என்னவெலாமொப்புக்காதென்றுவீழிடுமேகம்பனார்
பொன்னுதலார்விழியார்கச்சிநாட்டுளிப்பொய்கையுளே. ௭௯

உள்வார்குளிரநெருங்கிக்கடுங்கிடங்கிட்டநன்னீர்
வள்வாளைகளொடுசெங்கயன்மேய்கின்றவெங்களையாட்
கொள்வார்பிறவிகொடாதவேகம்பர்குளிர்குவளை
கள்வார்தருகச்சிநாட்டெழிலேரிகளப்பர்ப்பே. ௮0

பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
தரப்பாசிகண்மிகுபண்பொடுசேம்படர்தண்பணைவாய்ச்
சுரப்பாரெருமைமலர்தின்னத்துன்னுசராவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்செல்வகம்பர்தம்பூங்கச்சியே. ௮௧

கச்சார்முலைமலைமங்கைகண்ணாரவொண்ணுன்கறமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிமகிழவிண்ணோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தன்மமரு .
அச்சாலையும்பரப்பாங்கணிமாடங்களோங்கினவே. ௮௨

ஓங்கினவூரகமுள்ளகமும்பருருகிடமாம்
பாங்கினினின்றதரியுறைபாடகங்தெவ்விரிய
வாங்கினவாட்கண்ணிமற்றவர்மைத்துனிவான்கவிகள்
தாங்கினகாட்டிருக்தாளதுதன்மனையாயிழையே. ௮௩

இழையாரரவணியேகம்பர்நெற்றிவிழியின்வந்த
பிழையாவருணம்பிராட்டியதின்னபிறங்கலுன்னும்
நுழையாவருதிரிசூலத்தனைக்கரும்பொன்கடுக்கைத்
தழையார்பொழிலுதுபொன்னேநமக்குத்தளர்வில்லையே. ௮௪

தளராமிகுவெள்ளங்கண்டுமையோடித்தமைத்தழுவக்
கிளையார்வளைக்கைவடுப்படுமீங்கோர்கிறிபடுத்தார்
வளமாப்பொழிற்றிருவேகம்பமற்றிதுவந்திறைஞ்சி
யுளராவதுபடைத்தோமடவாயிவ்வுலகத்துள்ளே. ௮௫

உலவியமின்வடம்வீசியுருமதிர்வுண்முழங்கி
வலவியமதம்பாய்முகிலயானைகள்வானில்வந்தால்
சுலவியவார்குழல்பின்னரென்பாரிரெனநினைந்து
நிலவியவேகம்பர்கோயிற்கொடியன்னநீர்மையனே. ௮௬

நீரென்னிலும்மழுங்கண்முகில்காணெஞ்சமஞ்சலையென்
றூரென்னிலுந்தமராயுரைப்பாரமராபதிக்கு
நேரென்னிலுந்தகுங்கச்சியுளேகம்பர்நீண்மதில்வாய்ச்
சேரென்னிலுந்தங்கும்வாட்கண்ணிதானென்பர்தேர்வரவே. ௮௭

வரங்கொண்டிமையோர்நலங்கொள்ளுமேகம்பர்கச்சியன்னாய்
பரங்கொங்கைதூவன்பனீர்முத்தமன்பர்தந்தேரின்முன்னே
தரங்கொண்டுபூக்கொண்டுகொண்மைபொன்னூக்கத்தண்காந்தள்கொத்தின்
கரங்கொண்டுபொற்சுண்ணமேந்தவும்போந்தனகார்முகிலே. ௮௮

கார்முகமாரவண்கைக்கொண்டகம்பர்கழற்றொழுது
போர்முகமாப்பகைவெல்லச்சென்றார்நினையார்புணரி
நீர்முகமாகவிருண்டுசுரந்ததுநேரிழைநாம்
ஆர்முகமாகவினைக்கடனீந்துதும்வெய்துயிர்ப்பே. ௮௯

உயிராயினவன்பர்தேர்வரக்கேட்டுமுன்வாட்டமுற்ற
பயிரார்புயல்பெற்றதென்னநம்பலவளைபான்மைகளாய்
தயிரார்பானெய்யொடுமாடியவேகம்பர்தம்மருள்போல
கயிராவளையழுந்தக்கச்சிறுத்தனகார்மயிலே. ௯௦

கார்விடைவண்ணத்தனன்றேழ்தழுவினுமின்றுதனிப்
போர்விடைப்பெற்றெதிர்மாண்டாரெனவண்டர்போதவிட்டார்
தார்விடையேகம்பர்கச்சிப்புறவிடைத்தம்பொனன்பூண்
மார்விடைவைகல்பெறுவார்தழுவமழவிடையே. ௯௧

விடைபாய்கொடுமையெண்ணாதுமேலாங்கன்னிவேற்கருங்கண்
கடைபாய்மனத்திளங்காளையர்புலகொலிகம்பர்கச்சி
மடைபாய்வயிலினமுல்லையின்மான்கன்றொடான்கன்றினம்
கடைபாய்தொறும்பதிமன்றிற்கடல்போற்கலந்தெழுமே. ௯௨

எழுமலர்த்தண்பொழிலேகம்பர்கச்சியிருங்கடல்வாய்க்
கொழுமணப்புன்னைத்துணர்மணற்குன்றிற்பாதர்கொம்பே
செழுமலர்ச்சேலல்லவாளல்லவேலல்லநீலமல்ல
முழுமலர்க்கூரம்பினேரிரண்டாலுமுகத்தனவே. ௯௩

முகம்பாகம்பண்டமும்பாகமென்றோதியமூதுரையை
யுகம்பார்த்திரேலென்னலமுயரேகம்பர்கச்சிமுன்னீர்
அகம்பாகவார்விளைவில்லையென்னின்வளச்செவ்வாய்
நகம்பாற்பொழிற்பெற்றநாமுற்றவர்கொள்கநன்மயலே. ௯௪

மயக்கத்தநல்லிருட்கொல்லுஞ்சுறவொடெறிமகரம்
இயக்கத்திடுசுழியோதங்கழிகிளரக்கழித்தார்
துயக்கத்தவர்க்கருளார்கம்பர்கச்சிக்கடலர்பொன்னான்
முயக்கத்தகல்வுபொருள்கொண்கநீவருமூர்க்கஞ்சுமே. ௯௫

மேயிரைவைகக்குருகுணராமதுவுண்டுபுன்னை
மீயிரைவண்டோதமர்புக்கடியவிரிகடல்வாய்ப்
பாயிரைநாகங்கொண்டோன்றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தூயிரைகானன்மற்றாரறிவார்நந்துறைவர்பொய்யே. ௯௬

பொய்வருநெஞ்சினர்வஞ்சனையாரையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர்கச்சிவிரையினவாய்க்
கைவரும்புள்ளொடுசங்கினமார்ப்பநஞ்சேர்ப்பர்திண்டேர்
அவ்வருதாமங்களினம்வந்தார்ப்பவலைக்கின்றதே. ௯௭

இன்றுசெய்வோமிதனிற்றிருவேகம்பர்க்கெத்தனையும்
நன்றுசெய்வோம்பணிநாளையென்றுள்ளிநெஞ்சேயுடலில்
சென்றுசெயாரைவிடுந்துணைநாளும்விடாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களினீணெறிகாட்டுவரே. ௯௮

காட்டிவைத்தார்தம்மையாங்கடிப்பூப்பெய்யக்காதல்வெள்ளம்
ஈட்டிவைத்தார்தொழுமேகம்பரேதுமிலாதவெம்மைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பதுபெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பரவித்தொழுதாமவர்பாதங்களே. ௯௯

பாதம்பரவியோர்பித்துப்பிதற்றிலும்பல்பணியும்
ஏதம்புகுதாவகையருளேகம்பரேத்தெனவே
போதம்பொருளாற்பொலியாதபுன்சொற்பனுவல்களும்
வேதம்பொலியும்பொருளாமெனக்கொள்வர்மெய்த்தொண்டரே.

திருச்சிற்றம்பலம்.

---

## கச்சித் திருவகவல்

திருச்சிற்றம்பலம்.

எத்தனையூரெத்தனைவீடெத்தனைதாய்பெற்றவர்கள்
எத்தனைபேரிட்டழைக்கவேனென்றே—நித்தம்
எனக்குக்களையாற்றயேகம்பாகம்பா
உனக்குத்திருவிளையாட்டோ.

---

திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானுடத் துதித்து
மலைகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடும்
மானுடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்

விளிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின்
முள்ளுங் கல்லு முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்சென வுரைத்தும்
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்
துள்ளும் வராலெனச் சொல்லித் துதித்தும்
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென வியம்பியும்
நெடுமுடை நாறி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்
மலமுஞ் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும்
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி
உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்
நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவு மிசையவு முதவியிங் கியற்றும்
அங்கையைப் பார்த்துக் காந்தளென் றுரைத்தும்
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்
வெப்பு மூத்தையு மேவிய வாயைத்
துப்பு முருக்கின் றூய்மல ரென்றும்
அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்
நீருஞ் சளியு நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்
தண்ணீர் பீளை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்
உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்
கையு மெண்ணெயுங் கலவா தொழியில்
வெய்ய வதரும் பேனும் விளையத்
தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த
சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்
தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும்
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொலைபெறு வாயில்
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம்
நச்சிக் காமுக நாயா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்
திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்

தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடைவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ் சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ் சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்
இத்தை நீங்க ளினிதென வேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்ட ரண்டமு மனைத்துள புவனமும்
கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏகநாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகம்பமாலை.

திருச்சிற்றம்பலம்.

அறந்தானியற்றுமவனிலுங்கோடியதிகமில்லம்
துறந்தானவனிற்சதகோடியுள்ளத்துறவுடையோன்
மறந்தானறக்கற்றறிவோடிருந்திருவாதனையற்
றிறந்தான்பெருமையையென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. ௧

கட்டியணைத்திடும்பெண்டிருமக்களுங்காலத்தச்சன்
வெட்டிமுறிக்குமரம்போற்சரீரத்தைவீழ்த்திவிட்டால்
கொட்டிமுழக்கியழுவார்மயானங்குறுகியப்பால்
எட்டியடிவைப்பரோவிறைவாகச்சியேகம்பனே. ௨

கைப்பிடிநாயகன்றூங்கையிலேயவன்கையையெடுத்
தப்புறந்தன்னிலசையாமன்முன்வைத்தயலவளவில்
ஒப்புடன்சென்றுதுயினீத்துப்பின்வந்துறங்குவளை
எப்படிநானம்புவேனிறைவாகச்சியேகம்பனே. ௩

நன்னாரிற்பூட்டியசூத்திரப்பாவைநன்னார்தப்பினால்
தன்னாலுமாடிச்சலித்திடுமோவந்தத்தன்மையைப்போல்
உன்னாலியானுந்திரிவதல்லானமற்றுனைப்பிரிந்தால்
என்னாலிங்காவதுண்டோவிறைவாகச்சியேகம்பனே. ௪

நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
அல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளும்
இல்லாளுஞ்சுற்றமுமைந்தரும்வாழ்வுமெழிலுடம்பும்
எல்லாம்வெளிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே. ௫

பொல்லாதவனெறிநில்லாதவனைம்புலன்கடமை
வெல்லாதவன்கல்விகல்லாதவன்மெய்யடியவர்பால
செல்லாதவனுண்மைசொல்லாதவனின்றிருவடிக்கன்
பில்லாதவன்மண்ணிலேன்பிறந்தேன்கச்சியேகம்பனே. ௬

பிறக்கும்பொழுதுகொடுவந்ததில்லைப்பிறந்துமண்மேல்
இறக்கும்பொழுதுகொடுபோவதில்லையிடைநடுவில்
குறிக்குமிச்செல்வஞ்சிவன்றந்ததென்றுகொடுக்கறியா
திறக்குங்குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. ௭

அன்னவிசாரமதுவேவிசாரமதுவொழிந்தால்
சொன்னவிசாரந்தொலையாவிசாரநற்றோகையரைப்
பன்னவிசாரம்பலகால்விசாரமிப்பாவிநெஞ்சுக்
கென்னவிசாரம்வைத்தாயிறைவாகச்சியேகம்பனே. ௮

கல்லாப்பிழையுங்கருதாப்பிழையுங்கசிந்துருகி
நில்லாப்பிழையுநினையாப்பிழையுநின்னஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந்துதியாப்பிழையுந்தொழாப்பிழையும்
எல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே. ௯

மாயநட்போரையுமாயாமலமெனுமாதரையும்
வீயவிட்டோட்டிவெளியேபுறப்பட்டுமெய்யருளாம்
தாயுடன்சென்றுபின்றாதையைக்கூடிப்பின்றாயைமறந்
தேயுமதேநிட்டையென்றானெழிற்கச்சியேகம்பனே. ௧௦

வரிகோலவேல்விழியாரனுராகமயக்கிற்சென்று
சரிகோதுவேனெழுத்தஞ்சுஞ்சொலேன்றமியேனுடல
நரிக்கோகழுகுபருந்தினுக்கோவெய்யநாய்தனுக்கோ
எரிக்கோவிரையெதுக்கோவிறைவாகச்சியேகம்பனே. ௧௧

காதென்றுமூக்கென்றுகண்ணென்றுகாட்டியென்கண்ணெதிரே
மாதென்றுசொலிவருமாயைதன்னைமறலிவிட்ட
தூதென்றெண்ணுமற்சுகமென்றுநாடித்துர்ப்புத்தியை
ஏதென்றெடுத்துரைப்பேனிறைவாகச்சியேகம்பனே. ௧௨

ஊருஞ்சதமல்லவுற்றார்சதமல்லவுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்லபெண்டீர்சதமல்லபிள்ளைகளும்
சீருஞ்சதமல்லசெல்வஞ்சதமல்லதேசத்திலே
யாருஞ்சதமல்லநின்றாள்சதங்கச்சியேகம்பனே. ௧௩

சீறும்வினையதுபெண்ணுருவாகித்திரண்டுருண்டு
கூறுமுலையுமிறைச்சியுமாகிக்கொடுமையினால்
பீறுமலமுமுதிரமுஞ்சாயும்பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலேனிறைவாகச்சியேகம்பனே. ௧௪

பொருளுடையோரைச்செயலினும்வீரரைப்போர்க்களத்தும்
தெருளுடையோரைமுகத்தினுந்தேர்ந்துதெளிவதுபோல்
அருளுடையோரைத்தவத்திற்குணத்திலருளிலன்பில்
இருளறுசொல்லினுங்காணத்தகுங்கச்சியேகம்பனே. ௧௫

பருத்திப்பொதியினைப்போலேவயிறுபருக்கத்தங்கள்
துருத்திக்கறுசுவைபோடுகின்றார்துறந்தோர்தமக்கு
வருத்தியமுதிடமாட்டாரவரையிம்மாநிலத்தில்
இருத்திக்கொண்டேனிருந்தாயிறைவாகச்சியேகம்பனே. ௧௬

பொல்லாவிருளகற்றுங்கதிர்கூகையின்புட்கண்ணினுக்
கல்லாயிருந்திடுமாறொக்குமேயறிவோருளத்தில்
வல்லாரறிவாரறியார்தமக்குமயக்கங்கண்டாய்
எல்லாம்விழிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே. ௧௭

வாதுக்குச்சண்டைக்குப்போவார்வருவார்வழக்குரைப்பார்
தீதுக்குதவியுஞ்செய்திடுவார்தினந்தேடியொன்று
மாதுக்களித்துமயங்கிடுவார்விதிமாளுமட்டும்
ஏதுக்கிவர்பிறந்தாரிறைவாகச்சியேகம்பனே. ௧௮

ஓயாமற்பொய்சொல்வர்நல்லோரைநிந்திப்பருற்றுப்பெற்ற
தாயாரைவைவர்சதியாயிரஞ்செய்வர்சாத்திரங்கள்
ஆயார்பிறர்க்குபகாரஞ்செய்யார்தமையண்டினர்க்கொன்
றீயாரிருந்தென்னபோயென்னகாண்கச்சியேகம்பனே. ௧௯

அப்பென்றும்வெண்மையாதாயினுமாங்கந்நிலத்தியல்பாய்த்
தப்பின்றியேகுணவேற்றுமைதான்பலசார்தலினால்
செப்பிலபக்குவபக்குவமாயுள்ளசீவனிலும்
இப்படியேநிற்பனெந்தைபிரான்கச்சியேகம்பனே. ௨௦

நாயாய்ப்பிறந்திடினல்வேட்டையாடிநயம்புரியும்
தாயார்வயிற்றினரராய்ப்பிறந்துபின்சம்பன்னராய்க்
காயாமரமும்வறளாங்குளமுங்கல்லாவுமென்ன
ஈயாமனிதரையேன்படைத்தாய்கச்சியேகம்பனே. ௨௧

ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாமலென்னன்பையெல்லாம்
போற்றித்திருவுளம்பற்றுமையாபுரமூன்றெரித்துக்
கூற்றைப்பணிகொளுந்தாளுடையாய்குன்றவில்லுடையாய்
ஏற்றுக்கொடியுடையாயிறைவாகச்சியேகம்பனே. ௨௨

பெண்ணாகிவந்தொருமாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணாலவெருட்டிமுலையான்மயக்கிக்கடிதட்த்துப்
புண்ணாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
எண்ணாதுனைமறந்தேனிறைவாகச்சியேகம்பனே. ௨௩

நாவாரவேண்டும்விதஞ்சொல்லுவாருனைநான்பிரிந்தால்
சாவேனென்றேயிருந்தொக்கவுண்பார்கள்கைதான்வறண்டால்
போய்வாருமென்றுநடுத்தலைக்கேகுட்டும்பூவையருக்
கீவார்தலைவிதியோவிறைவாகச்சியேகம்பனே. ௨௪

கல்லார்சிவகதைநல்லோர்தமக்குக்கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க்கன்னங்கொடார்குருசொன்னபடி
நில்லாரறத்தைநிலையார்நின்னுமநினைவிற்சற்றும்
இல்லாரிருந்தென்னிறந்தென்புகல்கச்சியேகம்பனே. ௨௫

வானமுகத்தின்சுவையறியாதவர்வண்கனியின்
தானமுதத்தின்சுவையெண்ணல்போலத்தனித்தனியே
தேனமுகத்தின்றெளிவாயஞானஞ்சிறிதுமில்லார்ச்
கினமுதச்சுவைஎன்றல்லவோகச்சியேகம்பனே. உகூ

ஊற்றைச்சரீரத்தையாபாசக்கொட்டிலையூன்பொதிந்த
பீற்றற்றுருத்தியைச்சோறிடுந்தோற்பையைப்பேசரிய
காற்றிற்பொதிந்தநிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
ஏற்றுத்திரிந்துவிட்டேனிறைவாகச்சியேகம்பனே. உஎ

சொல்லால்வருங்குற்றஞ்சிந்தனையால்வருந்தோடஞ்செய்த
பொல்லாததீவினைப்பார்வையிற்பாவங்கள்புண்ணியநூல
அல்லாதகேள்வியைக்கேட்டிடுந்தீங்குகளாயவுமற்
றெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே. உஅ

முட்டற்றமஞ்சளையெண்ணெயிற்கூட்டிமுகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப்பித்தளையோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில்வெளிமயக்கேசெயும்பாவையர்மேல்
இட்டதைநீதவிர்ப்பாயிறைவாகச்சியேகம்பனே. உகூ

பிறந்துமண்மீதிற்பிணியேகுடிகொண்டுபேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின்மேலேமயலாகிப்புலையாதருக்குள்
பறந்துழன்றேதடுமாறிப்பொன்றேடியப்பாவையர்க்கீந்
திறந்திடவோபணித்தாயிறைவாகச்சியேகம்பனே. ௩0

பூதங்களற்றுப்பொறியற்றுச்சாரைம்புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப்பேராசைதானற்றுப்பின்முன்னற்றுக்
காதங்கரணங்களுமற்றவானந்தக்காட்சியிலே
ஏதங்களைந்திருப்பேனிறைவாகச்சியேகம்பனே. ௩க

நல்லாயெனக்குமனுவொன்றுதந்தருண்ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்றுபோடும்பொழுதியல்பூசைசெபம்
சொல்லார்நற்கோயினியமம்பலவகைத்தோத்திரமும்
எல்லாமுடிந்தபின்கொல்லுகண்டாய்கச்சியேகம்பனே. ௩உ

சடக்கட்டுக்கிரைதேடிப்பலவுயிர்தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்துமிகமெலிந்து
படக்கடித்தின்றுழல்வார்கடமைக்கரம்பற்றிநமன்
இடக்கடிக்கும்பொழுதேதுசெய்வார்கச்சியேகம்பனே. ௩௩

நாறுமுடலைநறிப்பொதிசோற்றினைநான்றினமும்
சோறுங்கறியுநிரப்பியபாண்டத்தைத்தோகையர்தம்
கூறுமலமுமிரத்தமுஞ்சோருங்குழியில்விழா
தேறும்படியருள்வாயிறைவாகச்சியேகம்பனே. ௩௪

சொக்கிட்டரமனைப்புக்குட்டிருடியதுட்டர்வந்து
திக்குற்றமன்னரைக்கேட்பதுபோற்சிவலிங்கைசெய்து
மிக்குக்குருலிங்கசங்கமநிந்தித்துவீடிச்சிக்கும்
எக்குப்பெருத்தவர்க்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே.

விருந்தாகவந்தவர்தங்களுக்கன்னமிகக்கொடுக்கப்
பொருந்தார்வளம்பெறவாழ்வார்நின்னாமத்தைப்போற்றிநித்தம்
அருந்தாமுலைப்பங்கரென்றுதபாதகரம்புவியுள்
இருந்தாவதேதுகண்டாயிறைவாகச்சியேகம்பனே. ௩௬

எல்லாமறிந்துபடித்தேயிருந்தெமக்குள்ளபடி
வல்லானறிந்துளனென்றுணராதுமதிமயங்கிச்
சொல்லான்மலைந்துறுசூழ்விதியின்படிதுக்கித்துப்பின்
எல்லாஞ்சிவன்செயலேயென்பர்காண்கச்சியேகம்பனே. ௩௭

பொன்னைநினைந்துவெகுவாகத்தேடுவர்பூவையன்னாள்
தன்னைநினைந்துவெகுவாயுருகுவர்தாரணியில்
உன்னைநினைந்திங்குனைப்பூசியாதவுலுத்தரெல்லாம்
என்னையிருந்துகண்டாயிறைவாகச்சியேகம்பனே. ௩௮

கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைக்காமுகரைக
கொடும்பவமேசெயுநிர்மூடர்தம்மைக்குவலயத்துள்
நெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா
இடும்பரையேன்வகுத்தாயிறைவாகச்சியேகம்பனே. ௩௯

கொன்றேனனேகமுயிரையெல்லாம்பின்புகொன்றுகொன்று
தின்றேனதன்றியுந்தீங்குசெய்தேனதுதீர்கவென்றே
நின்றேனின்சன்னிதிக்கேயதனாற்குற்றநீபொறுப்பாய்
என்றேயுனைநம்பினேனிறைவாகச்சியேகம்பனே. ௪0

திருச்சிற்றம்பலம்.

## திருவேகம்பத்திருவிருத்தம்.

அன்னையெத்தனையெத்தனையன்னையோ
வப்பனெத்தனையெத்தனையப்பனோ
பின்னையெத்தனையெத்தனைபெண்டிரோ
பிள்ளையெத்தனையெத்தனைபிள்ளையோ
முன்னையெத்தனையெத்தனைசன்மமோ
மூடனாயடியேனுமறிந்திலேன்
இன்னமெத்தனையெத்தனைசன்மமோ
வென்செய்வேன்கச்சியேகம்பநாதனே.

திருச்சிற்றம்பலம்.

## ௧௨. திருத்தொண்டர்புராணம்.

### சேக்கிழார் நாயனார்.

விடையின்மேலவர்மலைமகள்வேண்டவிரும்புபூசனைமேவிவீற்றிருந்தே
இடையறாவறமாக்கும்வித்தாகவிகபரத்திருநாழிநெல்லளித்துக்
கடையராகியுமுயர்ந்தவராகியுங்காஞ்சிவாழ்பவர்தாஞ்செய்தீவினையைத்
தடைபடாதுமெய்ந்நெறியடைவதற்காந்தவங்களாகவுமுவந்தருள்செய்தார்.

திருச்சிற்றம்பலம்.

உ

குகமயம்.

முருகக்கடவுடுணை.

# ஸ்ரீமத்-அருணகிரிநாதசுவாமிகள்

செய்தருளிய

# திருப்புகழ்.

## குறிப்பு.

க. தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன—தனதான.

முத்தைத்தரு பத்தித் திருநகை
யத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர வெனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
வொற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயன் மெச்சத் தகுபொருள்
பட்சத்தொடு ரட்சித் தருள்வது மொருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்

திக்குப்பரி யட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக வெனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே.

## குமரகோட்டம்.

௨. தத்தத்தத் தத்தத்தத்—தனதான.

கருப்பற்றிப் பருத்தொக்கத் தரைக்குற்றிட் டுருப்பெற்றுக்
கருத்திற்கட் பொருட்பட்டுப் பயில்காலங்
கணக்கிட்டுப் பிணக்கிட்டுக் கதித்திட்டுக் கொதித்திட்டுக்
கயிற்றிட்டுப் பிடித்திட்டுச் சமனாவி

பெருக்கப்புத் தியிற்பட்டுப் புடைத்துக்கக் கிளைப்பிற்பொய்ப்
பிணத்தைச்சுட் டகத்திற்புக் கனைவோரும்
பிறத்தற்சுற் றமுற்றுற்றிட் டழைத்துத்தொக் கறக்கத்துப்
பிறப்புப்பற் றறச்செச்சைக் கழலாராய்

பொருப்புக்கர்ப் புரக்கச்சுத் தனப்பொற்புத் தினைப்பச்சைப்
புனக்கொச்சைக் குறத்தத்தைக் கினியோனே
புரத்தைச்சுட் டெரித்துப்பற் றலர்க்குப்பொற் பதத்துய்ப்பைப்
புணர்த்தப்பித் தனைக்கற்பித் தருள்வோனே

செருக்கக்குக் கரைக்குத்திச் செருப்புக்குப் பிடித்தெற்றிச்
சினத்திட்டுச் சிதைத்திட்டுப் பொரும்வீரா
திருத்தத்திற் புகழ்சுத்தத் தமிழ்ச்செப்புத் த்ரயச்சித்ரத்
திருக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

---

௩. தனத்தத்தத் தனத்தத்தத்—தனதான.

இதத்துப்பற் றிதழ்த்துப்பற் றிருட்பொக்கக் கருத்திட்டத்
தியக்கத்திற் றியக்குற்றுச் சுழலாதே
வெறுப்புச்சுக் கிலக்கத்தத் தடித்தொக்குக் கடத்தைப்பெற்
றெடுத்துப்பற் றடுத்தற்பத் துழலாதே

சுதத்தத்தச் சதத்தத்தப் பதத்தர்க்குற் றவற்றைச்சொற்
றுவக்கிற்பட் டவத்தைப்பட் டயராதே
துணைச்செப்பத் தலர்க்கொத்துற் பலச்செச்சைத் தொடைப்பத்திக்
கடப்பப்பொற் கழற்செப்பித் தொழுவேனோ

கொதித்துக்குத் திரக்கொக்கைச் சதித்துப்பற் றிகைக்குட்பொற்
குலத்தைக்குத் திரத்தைக்குத் தியவேலா
குறத்தத்தைக் கறத்தத்திக் குழுத்தத்தத் தமொக்கிக்குக்
குலத்துக்குக் குடக்கொற்றக் கொடியோனே

கதச்சுத்தச் சுதச்சித்ரக் களிற்றுக்கொற் றவற்குக்கற்
பகச்சொர்க்கப் புரப்பொற்பைப் புரிவோனே
கடுக்கைக்கட் செவிக்கற்றைச் சடைப்பக்கக் கொடிக்கற்புக்
கடற்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

௪. தனத்தத்தத் தனத்தத்தத்—தனதான.

எனக்குச்சற் றுனக்குச்சற் றெனக்கத்தத் தவர்க்கிச்சைப்
பொருட்பொற்றட் டிடிக்கைக்குக் குடின்மாய
மெனக்கட்டைக் கிடைப்பட்டிட் டனற்சுட்டிட் டடக்கைக்குப்
பிறக்கைக்குத் தலத்திற்புக் கிடியாமுன்

திணைக்குட்சித் திரக்கொச்சைக் குறத்தத்தைத் தனத்தைப்பொற்
பெறச்செச்சைப் புயத்தொப்பித் தணிவோனே
செருக்கிச்சற் றுருக்கிச்சொற் பிரட்டத்துட் டரைத்தப்பித்
திரட்டப்பிக் கழற்செப்பத் திரூராய்

பனைக்கைக்கொக் கனைத்தட்டுப் படகுத்திப் படச்சற்பப்
பணத்துட்கக் கடற்றுட்கப் பொரும்வேலா
பரப்பற்றுச் சுருக்கற்றுப் பதைப்பற்றுத் திகைப்பற்றுப்
பலிப்பப்பத் தருக்கொப்பித் தருள்வாழ்வே

கனிக்குத்திக் கனைத்துச்சுற் றிடப்பச்சைக் கனப்பட்சிக்
கிடைப்புக்குக் களிப்புக்குத் திரிவோனே
கலிக்கொப்பிற் சலிப்பற்றுக் கதிக்கொத்திட் டெழிற்சத்திக்
கடற்கச்சிப் பதிச்சொக்கப் பெருமானே.

௫. தனத்தத்தத் தனத்தத்தத்—தனதான.

இறைச்சிப்பற் றிரத்தத்திட் டிசைக்கொக்கப் பரப்பப்பட்
டெலுப்புக்கட் டளைச்சுற்றிச் சுவர்கோலி
யெடுத்துச்செப் பெனக்கட்டிப் புதுக்குப்புத் தகத்திற்புக்
கெனக்குச்சற் றுனக்குச்சற் றெனுமாசைச்

சிறைக்கொத்திப் பிறப்பிற்பட் டுழகச்சொப பனத்துற்றுத்
திகைக்கப்பட் டவத்தைப்பட் டுழலாதுன்
றிருப்பத்மத் திறத்தைப்பற் றுகைக்குச்சித் திரத்தைச்சொற்
றிதக்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ

பிறைச்செக்கர்ப் புரைக்கொத்துச் சடைப்பச்சைக் கொடிக்கிச்சைப்
பிறக்குற்றத் திருப்பக்கச் சிவநாதர்
பெருக்கப்புத் தடக்கைக்கற் பகத்தொப்பைக் கணத்துக்குப்
பிரச்சித்தக் கொடிக்குக்கட கொடியோனே

பறைக்கொட்டிக் களைச்சுற்றக் குறட்செக்கட் கணத்திற்குப்
பலிக்குப்பச் சுடர்க்குத்திப் பகிர்வேலா
பணப்பத்திக் கணத்துத்திப் படுக்கைக்கச் சபத்திச்சைப்
படுக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

௬. தனத்தத்தத் தனத்தத்தத்—தனதான.

கடத்தைப்பற் றெனப்பற்றிக் கருத்துற்றுக் களித்திட்டுக்
கயற்கட்பொற் பிணைச்சித்ரத் தனமாதர்
கலைக்குட்பட் டறக்கத்திச் சலித்துக்கட் டளைச்சொற்பொய்த்
திரைக்குட்பட் டறச்செத்திட் டுயிர்போனால்

எடுத்துக்கொட் டிடக்கட்டைப் படத்தெட்டத் தணற்றட்டக்
கொளுத்திச்சுற் றவர்பற்றற் றவர்போமு
னிணக்கிப்பத் திமைச்செச்சைப் பதத்தைப்பற் றுகைக்குச்சொற்
றமிழ்க்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ

அடைத்திட்டுப் புடைத்துப்பொற் பதச்சொர்க்கத் தனைச்சுற்றிட்
டலைப்புப்பற் றெனச்சொற்றிட் டறுகுரை
யடித்துச்செற் றிடித்துப்பொட் டெழப்பொர்ப்புப் படக்குத்திட்
டலைத்துச்சுற் றலைத்தெற்றுக் கடன்மாயப்

புடைத்திட்டுப் படிக்குட்செற் றடப்புக்குக் கதத்துக்கக்
கயிற்கொக்கைப் படக்குத்திப் பொருவோனே
புனத்திற்போற் குறத்திக்குப் புணர்க்கொத்தப் பசப்பெத்திப்
புணர்க்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

## எ. தனத்தத் தனத்தத்—தனதான.

கறுக்கப்பற் றுவர்ப்பிட்டுச் சிரித்துச்சற் றுறுக்கிக்கட்
பிறக்கிட்டுப் படக்கற்பித் திளைஞோர்தங்
கழுத்தைச்சிக் கெனக்கட்டித் தனச்செப்புப் படக்குத்திட்
டுருக்கிக்கற் பழிக்கப்பொற் பெழுகாதல்
புறப்பட்டுக் களிக்கக்கற் புரத்தைப்பிட் டரக்கிப்பொற்
பணிக்கட்டிற் புறத்துற்றுப் புணர்மாதர்
பொருத்தத்தைத் தவிர்த்துச்சற் றிரட்சித்துப் புரப்பப்பொற்
பதத்தைப்பெற் றிருக்கைக்குப் பெறுவேனோ
திறற்கொக்கைப் படக்குத்திச் செருக்கிக்கொக் கரித்துச்சக்
கரிக்குப்புத் திரற்குற்றுத் தளைபூணச்
சினத்துப்பொற் பொருப்பைப்பொட் டெழுத்தித்திக் கரித்துப்புத்
திரத்தத்திற் சிரித்துற்றுப் பலபேய்கள்
பறிக்கப்பச் சிறைச்சிக்கட் கறிக்குப்பச் சிரச்சிக்குப்
பரப்பொய்க்கட் டறப்புக்குப் பொருதோனே
பணிச்செச்சைத் தொடைச்சித்ரப் புயத்துக்ரப் படைச்சத்திப்
படைக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

---

## அ. தத்தத் தத்தத்—தனதான.

அற்றைக் கற்றைக் கொப்பித் தொப்பித் தத்தத் தத்தத் தருவோர்தா
டர்ச்சித் திச்சித் தக்கத் தக்கத் தொக்குத் திக்குக் குடில்பேணி
செற்றைப் புற்சொற் கற்றுக் கற்றுச் செத்துச் செதது்ப் பிறவாதே
செப்பச் செப்பப் பச்சைப் பச்சைச் செச்சைச் செச்சைக் கழலூராய்
துற்றுப் பிற்புக் குற்றக் கொக்கைத் துட்கத் திட்கப் பொரும்வேலா
சுத்தப் பத்திச் சித்ரச் சொர்க்கச் சொர்க்கத் தத்தைக் கினியோனே
கற்றைப் பொற்றைப் பற்றக் குத்திக் கத்தக் கத்தக் களைவோனே
கற்புச் சத்திப் பொற்புச் சத்திக் கச்சிச் சொக்கப் பெருமாளே.

## கூ. தத்தத் தத்தத்—தனதான.

சுத்தச் சித்தத் தொற்பத் தர்க்குச் சுத்தப் பட்டிட் டமுறுதே
தொக்கப் பொக்கச் சிற்கட் சிக்குட் சொற்குற் றத்துத் துறைகாடி
பித்தத் தைப்பற் றித்தைத் தற்றுற் றொத்துக் கித்திப் பிணிமாதர்
பெட்டிற் கட்டுத் தட்டுப் பட்டுப் பிற்பட் டிட்டுத் தளர்வேனோ
அத்தத் தத்திக் கத்தற் கெய்த்தத் தத்திக் கத்துப் பலமீவா
யர்ச்சித் துப்பொற் செக்கொச் சைத்தத் தைக்குச் செச்சைத் தொடைசூழ்வாய்
கத்தத் தித்தத் தத்திற் கொக்கைக் கைத்தச் சத்திப் படையேவுங்
கற்புச் சத்திப் பொற்புச் சத்திக் கச்சிச் சொக்கப் பெருமாளே.

---

௧0. தத்தத் தத்தத் தத்தத் தத்தத் தத்தத் தனனத்—தனதானு.

தத்தித் தத்திச் சட்டப் பூட்டுச் சத்தப் படுமைக் கடலாலே
சர்ப்பத் தத்திற் பட்டுக் கெட்டுத் தட்டுப் படுமப் பிறையாலே
சித்தத் துக்குப் பித்தும் முச்ச்ச் சித்ரக் கொடியுற் றழியாதே
செப்பக் கொற்றச் சிற்பப் பத்திச் செச்சைத் தொடையைத் தரவேணும்
கொத்துத் திக்குப் பத்துட் புக்குக் குத்திக் கிரியைப் பொரும்வேலா
கொச்சைப் பொச்சைப் பொற்பிற் பச்சைக் கொச்சைக் குறவிக் கினியோனே
சுத்தப் பத்தத் தர்க்குச் சித்தத் துக்கத் தையொழித் திடும்வீரா
சொக்கத் துக்கொப் புற்றக் கச்சிச் சொக்கப் பதியிற் பெருமானே.

---

௧௧. தத்தத்தத் தத்தத்—தனதானு.

பொக்குப்பைக் கத்தத் தொக்குப்பைக் குத்துப்
பொய்த்தெத்துத் தத்துக குடில்பேணிப்
பொச்சைப்பிச் சற்பக் கொச்சைச்சொற் கற்றுப்
பொற்சித்ரக் கச்சுக் கிரியார்தோய்

துக்கத்துக் கத்திற் சிக்குப்பட் டிட்டுத்
துக்கித்துக் கெய்த்துச் சுழலாதே
சுத்தச்சித் தத்துப பத்திப்பத் தர்க்கொத்
துச்சற்றுச் சிக்கப் பெறுவேனே

திக்குத்திக் கற்றுப் பைத்தத்தத் திக்குச்
செற்பத்தரக் கொக்கைப் பொரும்வேலா
செப்பச்சொர்க் கத்துச் செப்பொற்றத் தைகருச்
செச்சைக்கொத் தொப்பித் தணிவேனே

கக்கக்கைத் தக்கக் கக்கட்கக் கக்கிக்
கடகத்தத் தர்க்குப் பெரியோனே
கற்றைப்பொற் றெத்தப் பெற்றப்பொற் சிற்பக்
கச்சிக்குட் சொக்கப் பெருமானே.

௧௨. தத்தத்தத் தத்தத்—தனதானு.

அயிலப்புக் கயலப்புத் தலைமெச்சுற் பலகச்சுக்
கணுரத்தைக் கனவெற்புத் தனமேக
மளகக்கொத் தெளவொப்பிப் புளுகிச்சொற் பலகற்பித்
திளக்கிக்கற் புளநெக்கித் தமோதித்

துயில்விட்டுச் செயல்விட்டுத் துயர்வுற்றுக் கயற்வுற்றுத்
தொடியர்க்கிப் படியெய்த்துச் சுழலாதே
சுருதிப்பொற் பொள்செக்கர்க் குரவிட்டுத் தமர்பற்றித்
தொழுசெச்சைக் கழல்பற்றிப் பணிவேனே

புயலத்தைக் குயிறத்தைக் கிளைபுக்குத் துளைபச்சைப்
புனமுத்தைப் புணர்சித்ரப் புயவீரா
புரவிக்கொட் பிரதற்றற்றத் திருடிக்கிப் படிமட்கப்
புகல்பொற்குக் குடவெற்றிக் கொடியோனே

கயிலச்சுத் தரதத்துச் சயிலத்துத் தாகிற்கக்
காணிச்சித் தருள்கச்சிப் பதியோனே
கடலிற்கொக் கடல்கெட்டுக் காமுட்கத் தர்முட்கப்
பொருசத்திக் கரசொக்கப் பெருமாளே.

---

கக. தனந்தத்தத் தனந்தத்தத்—தனதான.

தனஞ்சற்றுக் குலுங்கப்பொற்
கலன்கட்பட் டிலங்கப்பொற்
சதங்கைக்கற் சிலம்பொத்திக் கையில்வீணை

தழும்பக்கைக் குழந்தைச்சொற்
பரிந்தற்புக் கிதங்கப்பொற்
சரஞ்சுற்றிட் டிணங்கக்கட் சரவேலால்

தினம்பித்திட் டிணங்கிச்சொற்
கரங்கட்டிப் புணர்ந்திட்டுத்
தினந்தெட்டிக் கடன்பற்றிக் கொளுமாதர்

சிலம்பத்திற் றிரிந்துற்றிட்
டவம்புக்கக் குணஞ்செற்றுச்
சிவம்பெற்றுத் தவம்பற்றக் கழறுராய்

தனந்தத்தத் தனந்தத்தத்
தடுண்டுட்டுட் டிடிண்டிட்டிட்
டடண்டட்டட் டிமிண்டுட்டுட் டியருளந்

தகுந்தொத்தித் திமிந்தித்தித்
தவண்டைக்குட் கயர்ந்துக்கத்
தகண்டத்தர்க் குடன்பட்டுற் றசுராரைச்

சினந்தத்திக் கொளுந்தக்கைச்
சரந்தொட்டுச் சதம்பொர்ப்பைச்
சிரந்தத்தப் பிளந்துட்கக் கிரிதூளாச்

செகந்துக்குச் சுபம்பெற்றுத்
துலங்கப்பொர்க் களம்புக்குச்
செயம்பற்றிக் கொளுஞ்சொக்கப் பெருமாளே.

---

கச. தத்தத் தனதத்—தனதான.

சத்தப் படுமைக் கடலாலே தட்டுப் படுமைப் பிறையாலே
சித்ரக் கொடியுற் றழியாதே செச்சைத் தொடையைத் தரவேணும்
குத்திக் கிரியைப் பொரும்வேலா கொச்சைக் குறவிக் கினியோனே
துக்கத் தையொழித் திடும்வீரா சொக்கப் பதியிற் பெருமாளே.

---

கரு. தத்தத் தத்தத்—தனதான.

முட்டுப் பட்டுக் கதிதோறும் முற்றச் சுற்றிப் பலநாளும்
தட்டுப் பட்டுச் சுழல்வேனைச் சற்றுப் பற்றக் கருதாதோ
வட்டப் புட்பத் தலமீதே வைக்கத் தக்கத் திருபாதா
கட்டத் தற்றத் தருள்வோனே கச்சிச்சொக்கப் பெருமாளே.

---

கசு. தந்த தாத்தன தன்ன தனத்தன தத்தத் தத்தத்—தனதான.

வம்ப ளூச்சில கன்ன மிடுஞ்சம யத்துக் கத்துத் திரையாளர்
வன்க லாத்திர டன்னை யகன்றும னத்திற் பற்றற் றருணாலே
தம்ப ராக்கற நின்னை யுணர்ந்துரு கிப்பொற் பத்மக் கழல்சேர்வார்
தங்கு ழாத்தினி லென்னையு மன்பொடு வைக்கச் சற்றுக் கருதாதோ
வெம்ப ராக்ரம மின்ன யில்கொண்டொரு வெற்புப் பொட்டுப் படமாளூர்
வென்ற பார்த்திப பன்னிரு திண்புய வெட்சிச் சித்ரத் திருமார்பா
கம்ப ராய்ப்பணி மன்னு புயம்பெற கைக்குக் கற்புத் தவறாதே
கம்பை யாற்றினி லன்னை தவம்புரி கச்சிச் சொக்கப் பெருமாளே.

---

கஎ. தனனதந் தத்தத் தத்தன தத்தந்—தனதான.

அதிமதங் கக்கப் பக்கமு கக்குஞ்
சரதனந் தைக்கச் சிக்கென நெக்கங்
கனைதருஞ் செச்சைப் பொற்புய னத்தன் குறவாண

ரடவியந் தத்தைக் கெய்த்துரு கிச்சென்
றடிபணிந் திட்டப் பட்டும யற்கொண்
டயர்பவன் சத்திக் கைத்தல னித்தன் குமரேசன்

துதிசெயுஞ் சுத்தப் பத்தியர் துக்கங்
களைபவன் பச்சைப் பட்சிந டத்துந்
துணைவனென் றர்ச்சித் திச்சைத ணித்துன் புகழ்பாடி

சுருதியின் கொத்துப் பத்தியு முற்றுந்
துரியமுந் தப்பித் தத்வம னைத்துந்
தொலையுமந் தத்துக் கப்புற நிற்கும் படிபாராய்

கதிபொருந் தக்கற் பித்துந டத்துங்
கனறலம் புக்குச் சக்ரமெ டுக்குங்
கடவுளும் பத்மத் தச்சனு முட்கும் படிமோதி

கதிரவன் பற்குற் றிக்குயி லைத்தின்
சிறகரிந் தெட்டுத் திக்கர்வ குக்குங்
கடகமுந் தட்டுப் பட்டொழி யக்கொன் றமிராமி

பதிவிர்தம் பற்றப் பெற்றம கப்பெண்
பரிவொழிந் தக்கிக் குட்படு தக்கன்
பரிபவம் பட்டுக் கெட்டொழி யத்தன் செவிபோயப்

பனவிபங் கப்பட் டப்படி வெட்கும்
படிமுனிந் தற்றைக் கொற்றம்வி ளைக்கும்
பரமர்வந் திக்கக் கச்சியு னிற்கும் பெருமாளே.

கஅ. தனனதந் தத்தத் தத்தன தத்தந்—தனதான.

கனகதம் பத்தைச் செச்சையை மெச்சுங்
கடகசங் கத்துப் பொற்புய வெற்பன்
கடலுள்வஞ் சித்துப் புக்கதொர் கொக்கும் பொடியாகக்

கறுவுசெஞ் சத்திப் பத்மக ரத்தன்
குமரனென் றர்ச்சித் தப்படி செப்புங்
கவிபொழிந் தத்தைக் கற்றற வுற்றும் புவியோர்போய்

குனகியுங் கைக்குக் கற்பக மொப்பென்
றனகனென் றிச்சைப் பட்டத ளிக்குங்
குமுணனென் றொப்பிட் டித்தனை பட்டிங் கிரவான
குருடுகொண் டத்தச் சத்தம னைத்துந்
திருடியுஞ் சொற்குத் தக்கதொ டுத்துங்
குலவியுங் கத்தப் பட்டக லக்கங் தெளியாதோ
சனகனன் புற்றுப் பெற்றம டப்பெண்
டனிபெருங் கற்புச் சக்ரந டத்துந்
தகையிலங் கைச்சுற் றத்தைமு ழுத்துஞ் சுடவேவெஞ்
சமரசண் டக்கொற் றத்தவ ரக்கன்
கதிர்விடும் பத்துக் கொத்துமு டிக்குந்
தனியொரம் பைத்தொட் டுச்சுரர் விக்னங் களைவோனும்
தினகரன் சொர்க்கத் துக்கிறை சுக்ரன்
சசிதரன் றிக்குக் கத்தர கத்யன்
திசைமுகன் செப்பப் பட்டவ சிட்டன் றிரள்வேதஞ்
செகதலஞ் சுத்தப் பத்தியர் சித்தஞ்
செயலொழிந் தற்றுப் பெற்றவர் மற்றுஞ்
சிவனும்வந் திக்கக் கச்சியு ணிற்கும் பெருமாளே.

௧௬ தனனதந் தத்தத் தத்தன தத்தந்—தனதான.

செடியுடம் பத்தித் தெற்றியி ரத்தஞ்
செறிநரம் பிட்டுக் கட்டிய சட்டஞ்
சிறைதிரண் டொக்கத் தொக்கவி னைப்பந் தவிகாரந்
திமிரதுங் கத்தத் துத்திரை யெற்றுஞ்
சனனபங் கத்துத் துக்கக டற்கண்
டிருகுறும் பைப்பட் டுச்சுழ றெப்பங் கரணாதி
குடிபுகும் பொக்கப் புகலிலி றப்பின்
குடிலம்வெந் தொக்குக் கொட்டின்ம லத்தின்
குகைசுமந் தெட்டுத் திக்கிலு முற்றுந் தடுமாறுங்
குவலயக் கற்றுக் கத்தியி ளைக்குஞ்
சமயசங் கத்தைத் தப்பியி ருக்குங்
குணமடைந் துட்பட் டொக்க விருக்கும் படிபாராய்
படிதருங் கற்புக் கற்பக முக்கண்
கொடிபசுஞ் சித்ரக் குத்தர ழுத்தம்
பணிவிதம் பத்துச் சத்தி யுகக்குங் குமரேசா
பரவசங் கெட்டெட் டக்கர நித்தம்
பரவுமன் பர்க்குச் சித்திய ளிக்கும்
பரமர்வந் திக்கத் தக்கப தத்தன் குருநாதா
தொடியிடும் பத்மக் கைக்குமி டைக்குஞ்
சுருள்படும் பத்திப் பட்டகு ழற்குந்
துகிர்கடைந் தொப்பித் திட்டவி தழ்க்குங் குறமானின்
சுடர்படுங் கச்சுக் கட்டுமு லைக்குந்
துவளுநெஞ் சத்தச் சுத்தவி ருக்குஞ்
சுரரும்வந் திக்கக் கச்சியு ணிற்கும் பெருமாளே.

௨0. தனனதந் தத்தத் தத்தன தத்தந்—தனதான.

கனைக்ரவுஞ் சத்திற் சத்தியை விட்டன்
றசுரர்தண் டத்தைச் செற்றவி தழ்ப்பங்
கயனைமுன் குட்டிக் கைத்தளை யிட்டும் பரையாளுங்
கடவுளன் புற்றுக் கற்றவர் சுற்றும்
பெரியதும் பிக்கைக் கற்பக முற்றங்
கரதலம் பற்றப் பெற்றவொ ருத்தன் சகதாதை
புனைவிளந் தத்தைக் கிச்சையு ரைக்கும்
புரவலன் பததர்க் குத்துணை நிற்கும்
புதியவன் செச்சைப் புட்பம ணக்கும் பலபாரப்
புயனெனுஞ் சொற்கற் றுப்பிற கற்கும்
பசையொழிந் தத்தத் திக்கென நிற்கும்
பொருடொறும் பொத்தப் பட்டதொ ரத்தம் பெறுவேனோ
அனல்விடுஞ் செக்கட் டிக்கய மெட்டும்
பொரவரிந் திட்டெட் டிற்பகு திக்கொம்
பணிதருஞ் சித்ரத் தொற்றையு றத்தன் றிடமாக
வடியொடும் பற்றிப் பொற்கயி லைக்குன்
றதுபிடுங் கப்புக் கப்பொழு தக்குன்
றணிபுயம் பத்துப் பத்துநெ ரிப்புண் டவனீடுந்
தனதொரங் குட்டத் தெட்பல டுக்குஞ்
சரியலன் கொற்றத நுக்ரவ ரக்கன்
றசமுகன் கைக்குக் கட்கம ளிக்கும் பரியோனுந்
தலைவியும் பக்கத் தொக்கவி ருக்குஞ்
சயிலமுந் தெற்குச் சற்குரு வெற்புந்
தணியலும் பெற்றுக் கச்சியு நிற்கும் பெருமாளே.

---

௨௧. தனனதந் தத்தத் தத்தன தத்தன—தனதான.

தெரியலஞ் செச்சைக் கொத்துமு டிக்கும்
பரிதிகந் தத்தைச் சுற்ற நடத்துஞ்
சிறைவிடுஞ் சொர்க்கத் துச்சுர ரைக்கங் கையில்வாழுஞ்
சிறுவனென் றிச்சைப் பட்டுப ஜிக்கும்
படிபெரும் பத்திச் சித்ரக வித்வஞ்
சிறிதுமின் றிச்சித் தப்பரி சுத்தம் பிறவாதே
பரிகரஞ் சுற்றத் தக்கப்ர புத்வம்
பதறியங் கட்டப் பட்டனர் தத்வம்
பலவையுங் கற்றுத் தர்க்கம தத்வம் பழியாதே
பரபதம் பற்றப் பெற்றவெ வர்க்கும்
பரவசம் பற்றிப் பற்றற நிற்கும்
பரவ்ரதம் பற்றப் பெற்றிலன் மற்றென் றுயர்போமோ
சரியுடன் றுத்திப் பத்திமு டிச்செம்
பணதரங் கைக்குக் கட்டிய கெட்டன்
றனிசிவன் பக்கத் தற்புதை பற்பக் கிரிசூலக்

தரிகரும் பொக்கத் தக்கமொ ழிச்சுந்
தரியரும் பிக்கப் பித்தத னத்தந்
தரிசுரும் பிக்குப் பத்ரையெ வர்க்குந் தெரியாத
பெரியபண் டத்தைச்*சத்திய பித்தன்
பிரிதியுண் கற்புப் பச்சையெ றிக்கும்
ப்ரபையடண் டிற்கைப் பத்மம டப்பெண் கொடிவாழ்வே
பிரமரண் டத்தைத் தொட்டதொர் வெற்பும்
பிளவிடுஞ் சத்திக் கைத்தல நித்தம்
பெருமிதம் பெற்றுக் கச்சியு ணிற்கும் பெருமாளே.

உஉ. தனனதந் தத்தத் தத்தன தத்தந்—தனதானா.

புனமடந் தைக்குத் தக்கபு யத்தன்
குமரனென் றெத்திப் பத்தர்து திக்கும்
பொருளைநெஞ் சத்துக் கற்பனை முற்றும் பிறிதேதும்
புகலுமெண் பத்தெட் டெட்டிய றத்வஞ்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொதுவையென் றுருக்கத் தக்கதொ ரத்தந் தனைநாளும்
சினமுடன் றர்க்கித் துச்சிலு கிக்கொண்
டறுவருங் கைக்குத் திட்டொரு வர்க்குந்
தெரிவருஞ் சத்யத் தைத்தெரி சித்துன் செயல்பாடித்
திசைதொறுங் கற்பிக் கைக்கினி யற்பந்
திருவுளம் பற்றிச் செச்சைம ணக்குஞ்
சிறுசதங் கைப்பொற் பத்மமெ னக்கென் றருள்வாயே
கனபெருந் தொப்பைக் கெட்பொரி யப்பங்
கனிகிழங் கிக்குச் சர்க்கரை முக்கண்
கடலைகண் டப்பிப் பிட்டொடு முக்குந் திருவாயன்
*கவளதுங் கக்கைக் கற்பக முக்கண்
டிகழூநங் கொற்றத் தொற்றைம ருப்பன்
கரிமுகன் சித்ரப் பொற்புகர் வெற்பன் றனையீனும்
பனவியொன் றெட்டுச் சக்ரத லப்பெண்
கவுரிசெம் பொற்பட் டுத்தரி யப்பெண்
பழயவண் டத்தைப் பெற்றம டப்பெண் பணிவாரைப்
பவதரங் கத்தைத் தப்பவி றுத்தும்
பவதிகம் பர்க்குப் புக்கவள் பக்கம்
பயில்வரம் பெற்றுக் கச்சியு ணிற்கும் பெருமாளே.

உங. தனனதந் தத்தத் தத்தன தந்தந்—தனதானா.

கனிதருங் கொக்குக் கட்செவி வெற்பும்
பழநியுந் தெற்குச் சற்குரு வெற்புங்
கதிரையுஞ் சொற்குட் பட்டதி ருச்செந் திலும்வேலுங்
கனவிலுஞ் செப்பத் தப்புமெ னைச்சங்
கடவுடம் புக்குத் தக்கவ னைத்துங்
களவுகொண் டிட்டுக் கற்பனை யிற்கண் சுழல்வேனை

புனிதனம் மைபகுக கைத்தல ரத்னம்
பழயகங் கைக்குற் றப்புது முத்தம்
புவியிலன் றைக்கற் றெப்பவர் வைப்பென் றுருகாவெப்

பொழுதும்வந் திகைகைக் கற்றவெ னைப்பினை
பிழையுடன் பட்டுப் பத்தருள் வைக்கும்
பொறையையென் செப்பிச் செப்புவ தொப்பொன் றுளதோதான்

அனனியம் பெற்றற் றற்றொருரு பற்றுந்
தெளிதருஞ் சித்தர்க் குத்தெளி சிற்கொந்
தமலைதென் கச்சிப் பிச்சம லர்க்கொந் தளபாரை

யறவிநுண் பச்சைப் பொற்கொடி கற்கண்
டமுதினுந் தித்திக் கபபடு சொற்கொம்
பகில வண்டத்துற் பத்திசெய் முத்தின் பொலமேரு

தனிவடம் பொற்புப் பெற்றமு லைக்குன்
றிணைசுமந் தெய்ககப் பட்டநு சுப்பின்
தருணிசங குற்றுத் தத்துதி ரைக்கம் பையினூடே

தவமுயன் றப்பொற் றப்படி கைக்கொண்
டறமிரண் டெட்டெட் டெட்டும்வ ளர்க்குந்
தலைவிபங் கர்க்குச் சத்யமு ரைக்கும் பெருமாளே.

௨௪. தனனாதந் தத்தத் தத்தன தத்தந்—தனதான.

செறிதருஞ் செப்பத் துற்பல வெற்பும்
பிறிதுமங் கத்தைக குற்றவி ருப்புஞ்
சிகரிதுண டிக்சக கற்றத ணிச்செஞ் சுடர்வேலுந்

இரள்புயங் கொத்துப் பட்டவ னைத்துந்
தெளியநெஞ் சத்துப் புற்றும யக்கந்
திகழ்ப்ரபஞ் சத்தைப் புற்புத மொக்கும் படிநாடும்

அறிவறிந் தத்தற் கற்றது செப்புங்
கடவுளன் பத்தர்க கச்சம றுத்தன்
பருள்பவன் பொற்புக் கச்சியு ணிற்கும் பெருமாளென்

றவிழ்மன் பூற்றுக் கற்றும னத்தின்
செயலொழிந் தெட்டப் பட்டத னைச்சென்
றடைதரும் பக்வத் தைத்தமி யெற்கென் றருள்வாயே

குறியவன் செப்பப் பட்டவெ வர்க்கும்
பெரியவன் கற்பிக் கப்படு சுக்ரன்
குலைகுலைந் துட்கச் சத்யமி ழற்றுஞ் சிறுபாலன்

குதலையின் சொற்குத் தர்க்கமு ரைக்குங்
கனகனங் கத்திற் குத்திநி ணஞ்செங்
குடர்பிடுங் கித்திக் குற்றமு கச்சிங் கமுகாரி

பொறிவிடுந் துத்திக் கட்செவி யிற்கண்
டுயில்கொளுஞ் சக்ரக் கைக்கிரி சுத்தம்
புயலெனும் பொற்புப் பெற்றரி றத்தன் சகதாதை,

புனிதசங் கத்துக் கைத்தல கிர்த்தன்
பழையசந் தத்தைப் பெற்றம டப்பெண்
புகலுகொண் டற்குச் சித்திய ளிக்கும்	பெருமாளே.

உரு. தனனதந் தத்தத் தத்தன தத்தந்—தனதான.

கறையிலங் குக்ரச் சத்தித ரிக்குஞ்
சரவணன் சித்தத் துக்குளொ ளிக்குங்
கரவடன் கொற்றக் குக்குட வத்தன்	தனிவீரக்

கழலிடும் பத்மக் கட்செவி வெற்பன்
பழநிமன் கச்சிக் கொற்றவன் மற்றுங்
கடகவஞ் சிக்குக் கர்த்தனெ னச்செந்	தமிழ்பாடிக்

குறையிலன் புற்றுக் குற்றம றுக்கும்
பொறைகணந் தப்பப் புத்தியை விட்டென்
குணமடங் கக்கெட் டுக்குண மற்றொன்	றிலதான

குணமடைந் தெப்பற் றுக்களு மற்றுங்
குறியொடுஞ் சுத்தப் பத்தரி ருக்குங்
குருபதஞ் சித்திக் கைக்கருள் சற்றுங்	கிடையாதோ

பிறைகரந் தைக்கொத் துப்பணி மத்தந்
தலையெலும் பப்புக் கொக்கிற கக்கம்
பிரமனன் றெட்டற் கற்றதி ருக்கொன்	றையும்வேணிப்

பிறவுநின் றொக்கத் தொக்கு மணக்குஞ்
சரணியம் பத்மக் கைக்கொடி முக்கண்
பெறுகரும் பத்தக் கத்தரு ணற்பங்	கயவாவி

திறைகொளுஞ் சித்ரக் குத்துமு லைக்கொம்
பறியுமந் தத்தைக் கைக்கக மொய்க்குந்
த்ரிபுரைசெம் பட்டுக் கட்டிது சுப்பின்	றிருவான

தெரிவையந் தூர்க்கிச் சத்தியெ வர்க்குந்
தெரிவருஞ் சுத்தப் பச்சைசி றப்பெண்
சிறுவதொண் டர்க்குச் சித்திய ளிக்கும்	பெருமாளே.

உசு. தனனதந் தத்தத் தத்தன தத்தந்—தனதான.

அரியயன் புட்பிக் கக்குழு மிக்கொண்
டமரர்வந் திக்கத் தட்டிரு வச்சென்
றவுணரங் கத்தைக் குத்திமு றித்தன்	கொருகோடி

வலகைநின் றொத்தித் தித்திய றுத்தும்
பலவியங் கொட்டச் சக்கடி கற்றந்
தறியுடன் பற்றிக் குச்சரி மெச்சும்	படிபாடி

பரிமுகங் கக்கச் செக்கணி வி ழித்தும்
பரிவுகொண் டெட்டித் திக்கையு டைத்தும்
படுகளம் புக்குத் தொக்குந டிக்கும்	படிமோதிப்

படைபொருஞ் சத்திப் பத்மனி னைத்துஞ்
சரவணன் கச்சிப் பொற்பனெ னப்பின்
பரவியுஞ் சித்தத் துக்குல ரத்தொண்	டடைவேனோ

பெரியதன் செச்சைக் கச்சணி வெற்புஞ்
சிறியவஞ் சிக்கொத் தெய்த்தது சுப்பும்
ப்ரிதியொழிந் தொக்கக் கைக்கிளை துத்தங் குரலாதி
பிரிவில்கண் டிக்கப் பட்டவு ருட்டுங்
கமுகமுஞ் சிற்பச் சித்ரமு ருக்கும்
ப்ரதியண் டத்தைப் பெற்றருள் சிற்றுந் தியுநீலக்
கரியகொண் டற்கொப் பித்தக துப்புந்
திலதமுஞ் செப்பொற் பட்டமு முத்தின்
கனவடங் கட்டப் பட்டக ழுத்துந் திருவான
கருணையுஞ் சுத்தப் பச்சைவ ளைப்புங்
கருதுமன் பர்க்குச் சித்திய ளிக்குங்
கவுரியம் பைக்குப் புத்ரவெ வர்க்கும் பெருமாளே.

---

௨௭. தனனதந் தத்தத் தத்தன தத்தன—தனதான.

தசைதுறுந் தொக்குக் கட்டளை சட்டஞ்
சரியவெண் கொக்குக் கொக்க நரைத்தந்
தலையுடம் பெய்த்தெற் புத்தளை நெக்கிந் த்ரியமாறித்
தடிகொடுந் திக்குத் தப்புந டக்குந்
தளர்வுறுஞ் சுத்தப் பித்தவி ருத்தன்
தகைபெறும் பற்கொத் துக்கள னைத்துங் கழலாநின்.
றசலருஞ் செச்செச் செச்செயெ னச்சந்
ததிகளுஞ் சிச்சிச் சிச்சியெ னத்தங்
கரிவையுந் துத்துத் துத்துவெ னக்கண் டியாமற்
றவருநிந் திக்கத் தக்கபி றப்பிங்
கலமலஞ் செச்சைச் சித்ரம ணித்தண்
டையரவிந் தத்திற் புக்கடை தற்கென் றருள்வாயே
குசைமுடிந் தொக்கப் பக்கரை யிட்டெண்
டிசையினுந் தத்தப் புத்தியை நத்துங்
குரகதங் கட்டிக் கிட்டிந டத்துங் கதிர்வேயிக்
குரதலம் புக்கொற் றைக்கனை யிட்டெண்
டிரிபுரஞ் சுட்டுக் கொட்டைப ரப்புங்
குரிசில்வந் திக்கக் கச்சியு னிற்குங் கதிர்வேலா
திசைமுகன் றட்டுப் பட்டெழ வற்குஞ்
சிகரியுங் குத்துப் பட்டுவி ழத்தெண்
டிரையலங் கத்துப் புக்குல விச்சென் றெதிரேறிச்
சிரமதுங் கப்பொற் கட்டிகை யிட்டன்
றவுணர்நெஞ் சிற்குத் திக்கறை கட்டுஞ்
சிதறிநின் றெட்டிப் பொட்டெழ வெட்டும் பெருமாளே.

௨௮. தனனதந் தத்தத் தத்தன தத்தன—தனதான.

புரைபடுஞ் செற்றக் குற்றம னத்தன்
றவமிலன் சுத்தச் சத்தியவ சத்தியன்
புகலிலன் சுற்றச் செத்தையு னிற்குந் துரிசானன்

பொறையிலன் கொத்துத் தத்லவி கற்பஞ்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொருளுடன் பற்றுச் சற்றுமில் வெற்றன் கொடியேனின்

கரையறுஞ் சித்ரச் சொற்புகழ் கற்குங்
கலையிலன் கட்டைப் புத்தியன் மட்டன்
கதியிலன் செச்சைப் பொற்புய வெற்புங் கதிர்வேலுங்

கதிரையுஞ் சக்ரப் பொற்றையு மற்றும்
பதிகளும் பொற்புக் கச்சியு முற்றுங்
கனவிலுஞ் சித்தத் திற்கரு திக்கொண் டடைவேனோ

குரைதருஞ் சுற்றுச் சத்தச முத்ரங்
கதறிவெந் துட்கக் கட்புர துட்டன்
குலமடங் கக்கெட் டொட்டொழி யச்சென் றுருநேமிக்

குவடொதுங் கச்சொர்க் கத்தரி டுக்கங்
கெடநடுங் கத்திக் கிற்கிரி வர்க்கங்
குலிசதுங் கக்கைக் கொற்வ னத்தங் குடியேறத்

தரைவிசும் பைச்சிட் டித்தவி ருக்கன்
சதுர்முகன் சிட்சைப் பட்டொழி யச்சந்
ததமும்வந் திக்கப் பெற்றவர் தத்தம் பகையோடத்

தகையதண் டைப்பொற் சித்ரவி சித்ரந்
தருசதங் கைக்கொத் தொத்துமு ழக்குஞ்
சரணகஞ் சத்திற் பொற்கழல் கட்டும் பெருமாளே.

---

உசுஅ. தனதத்தத் தானத் தானன—தந்ததானா.

மகுடக்கொப் பாடக் காதினி லுதலிற் பொட் டேரக் கோதிய
மயிரிற்சுற் றோலைப் பூவொடு வண்டுபாட
வகைமுத்துச் சோரச் சேர்நகை யிதழிச்சொற் சாதிப் பாரியன்
மதனச்சொற் பாடக் கோகில ரம்பைமாதர்

படிகச்கொற் கூறிப் போர்மயன் முகவிச்சைப் பேசிச் சீரிடை
பவளப்பட் டாடைத் தோளிரு கொங்கைமேலாப்
பணமெத்தப் பேசித் தூதிடு மிதயச்சுத் தீனச் சோலிகள்
பலரெச்சிற் காசைக் காரிகள் சங்கமாமோ

தகுடத்தத் தானத் தானன திகுடத்தித் தீதித் தோதிமி
தடுடுட்டுட் டாடப் பேரிகை சங்குவீணை
தடமிட்டுப் பாவக் கார்கிரி பொடிபட்டுப் போகச் சூரர்க
டலையிற்றிட் டாடப் போர்புரி கின்றவேலா

திகிரிப்பொற் பாணிப் பால்வனை மறைகற்புத் தேளப் பூமனை
சினமுற்றுச் சேடிற் சாடிய கந்தவேளே
தினையுற்றுக் காவற் காரியை மணமுற்றுத் தேவப் பூவொடு
திகழ்கச்சித் தேவக் கோன்மகிழ் தம்பிரானே.

---

### ௯௦. தத்த தத்தனன தத்த தத்தனன—தந்ததான.

சித்தி ரத்திலு மிகுத்த பொற்பவள
மொத்த மெத்த வழகுற்ற குத்துமுலை
சிற்ப சிற்பமயி ரொத்த சிற்றிடைய வஞ்சிமாதர்

சித்த மத்தனையு முற்ற ளப்பகடன்
மொய்த்த சிற்றுமண லுக்கு மெட்டியது
சிக்கு மைகுழல்கள் கஸ்து ரிப்பரிம ளங்கள்வீச

பத்தி ரத்திலு மிகுத்த கட்கயல்கள்
வித்து ருத்தநுவ லோத்த நெற்றிவனை
பங்க ளைப்பளிரெ னச்சி ரித்துமயல் விஞ்சைபேசி

பஙசை ரத்நமயி லைப்பொ லத்தெருவி
லத்தி யொத்தமத மொத்து நிற்பர்வலை
பட்டு ழைத்துகுறி யுற்ற வத்தியென மங்குவேனோ

தத்த னத்தனத னத்த னத்தனன
திந்தி மித்திமிதி மித்தி மித்திமித
தகுகு டுக்குடுடு டுக்கு டுக்குடென சங்குபேரி

சத்த முற்றுகட லிக்கு லக்கிரிக
ணைக்கு விட்டுமுகி லுக்கு சர்ப்பமுடி
சகுகு முக்கிவிட கட்க துட்டசுர ரங்கமாள

வெற்றி யுற்றகதிர் பத்தி ரத்தையரு
ளிச்சு ரர்க்கதிப திப்ப தத்தையுறு
வித்த ளித்துமதி பெற்ற தத்தைமண முண்டவேலா

வெட்கி டப்பிரம னைப்பி டித்துமுடி
யைக்கு லைத்துநட லைச்செ ருக்கையழி
வித்த றத்தர்புகழ் கச்சி யுற்றுமகிழ் தம்பிரானே.

---

### ௯௧. தத்தத் தத்தத் தனனத்—தனதான.

கொக்குக் கொக்கத் தலையிற் பற்றுச் சிக்கத் தளகக்
கொத்துற் றுக்குப் பிணியுற் றலனுகிக்
குக்கிக் கக்கிக் கடையிற் பற்றத் துற்றுங் கழலக்
கொத்தைச் சொற்கற் றுலகிற் பலபாஷை

திக்கித் திக்கிக் குளறிச் செப்பித் தப்பிக் கெடுபொய்ச்
செற்றைச் சட்டைக் குடிலைச் சுமைபேணும்
சிக்கற் றுட்குக் கருணைச் சுத்தச் சித்தித் தமிழைத்
திட்டத் துக்குப் புகலப் பெறுவேனே

அக்கிட் டிக்கிட் டமருக் கொட்டிக் கிட்டிட் டெதிரிட்
டத்ரத் தெற்றிக் கடுகப் பொருசூர
னச்சுக் கெட்டுப் படைவிட் டச்சப் பட்டுக் கடலுட்
புக்குப் பட்டுத் துருமத் தடைவாகத்

தக்குத் திக்குத் தறுகட் டொக்குத் தொக்குற் றதுகட்
கைக்கொட் டிட்டிட் டேடல்சிற் கணமாடிச்
சத்திக் குத்தித் தடியிற் சத்திக் கைக்கைச் சமர்செய்ச்
சத்திக் கச்சிக் குமரப் பெருமாளே.

---

### ௬௨. தனன தானன தத்தன தனதன தானா தத்தத்—தனதானா.

கரும மானபி றப்பற வொருகதி காணா தெய்த்துத் தடுமாறுங்
கலக காரண துற்குண சமயிக ளொடு வர்க்கக் கலைநூலின்
வரும நேகவி கற்பவி பரிதம னோபா வத்துக் கரிதாய
மவுன பூரித சத்திய வடிவினை மாயா மற்குப் புகல்வாயே
தரும வீம வருச்சுன நகுலச காதே வர்க்குப் புகலாகிச்
சமர பூமியில் விக்ரம வளைகொடு நாளோர் பத்தெட் டினிலாளுங்
குரும கீதல முட்பட வுளமது கோடா மற்க்ஷத் த்ரியர்மாளக்
குலவு தேர்கட வச்சுதன் மருககு மாரா கச்சிப் பெருமாளே.

---

### ௬௩. தத்தத் தனதன—தனதானா.

கச்சிட் டணிமுலை தைச்சிட் டுருவிய
மச்சக் கொடிமதன் மலராலுங்
க்ச்சைக் கலைமதி நச்சுக் கடலிடை
வச்சப் படவெழு மதனாலும்

பிச்சுற் றிவளுள மெச்சுத் தளர்வது
சொச்சத் தரமல வினிதான
பிச்சிப் புதுமலர் வைச்சுச் சொருகிய
செச்சைத் தொடையது தரவேணும்

பச்சைத் திருவுமை யிச்சித் தருளிய
கச்சிப் பதிதனி லுறைவோனே
பற்றிப் பணிபவர் குற்றப் பகைகெட
வுற்றுப் பொரவல கதிர்வேலா

இச்சித் தழகிய கொச்சைக் குறமகள்
மெச்சித் தழுவிய திருமார்பா
வெட்டிக் குலகிரி முட்டப் பொடிபட
வெட்டித் துணிசெய்த பெருமாளே.

---

### ௬௪. தத்தா தத்தா தத்தா தத்தா தத்தா தத்தத்—தனதானா.

கொத்தா பற்கா லற்றே சப்பாழ் குப்பா யத்திற் செயன்மாறிக்
கொக்கா கிக்கூ னிக்கோ ஞுட்டே கொட்டா விக்குப் புறவாசி
இத்தா நிற்றார் செத்தார் கெட்டேன் அஆ உஊ எனவேகேள்
செற்றே சுட்டே விட்டே றிப்போ மப்பே துத்துக் கமறாதோ
நித்தா வித்தா ரத்தோ கைக்கே நிற்பாய் கச்சிக் குமரேசா
நிட்டூ ரச்சூர் கெட்டோ டப்போர் கெட்டோ தத்திற் பொருதோனே
முத்தா ரத்தோ ளிற்கோ டற்பூ முட்டா திட்டத் தணிவோனே
முற்றா வித்தா வத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே.

---

கூ௬. தானத் தத்தத் தத்தன தத்தத்—தனதானு.

கோவைச் சுத்தத் துப்பத ரத்துக் கொடியார்தங்
கோலக் கச்சுக் கட்டிய முத்தத் தனமேவிப்
பாவத் துக்குத் தக்கவை பற்றித் திரியாதே
பாடப் பத்திச் சித்த மெனக்குத் தரவேணும்
மாவைக் குத்திக் கைத்தற வெற்றிப் பொரும்வேலா
மாணிக் கச்சொர்க் கத்தொரு தத்தைக் கினியோனே
சேவற் பொற்கைக் கொற்றவ கச்சிப் பதியோனே
தேவச் சொர்க்கச் சக்கர வர்த்திப் பெருமாளே.

---

கூ௬. தத்தனன தந்த—தனதானு.

நச்சரவ மென்று நச்சரவ மென்று
நச்சுமிழ்க ளங்க மதியாலும்
நத்தொடுமு ழங்க னத்தொடுமு ழங்கு
நத்திரைவ ழங்கு கடலாலும்
இச்சையுணர் வின்றி யிச்சையென வந்த
விச்சிறுமி நொந்து மெலியாதே
வெத்தனையு நெஞ்சி லெத்தன முயங்கி
வித்தனையி லஞ்ச லெனவேணும்
பச்சைமயில் கொண்டு பச்சைமற மங்கை
பச்சைமலை யெங்கு முறைவோனே
பத்தியுட னின்று பத்திசெயு மன்பர்
பத்திர மணிந்த கழலோனே
கச்சிவர் குரும்பை கச்சவர் விரும்பு
கச்சியில மர்ந்த கதிர்வேலா
கற்பகவ னங்கொள் கற்பகவி சும்பர்
கைத்தளைக ளைந்த பெருமாளே.

---

கூஎ. தனன தத்தன—தனதானு.

படிறொ ழுக்கமு மடம னத்துள
படிப ரித்துட னெடிபேசும்
பகடி கட்குள மகிழ மெய்ப்பொருள்
பல்கொ டுத்தற வுயிர்வாடா
மிடியெ னப்பெரு வடவை சுட்டிட
விதன முற்றிட மிகவாழும்
விரகு கெட்டரு நரகு விட்டிரு
வினைய றப்பத மருள்வாயே

கொடியி டைக்குற வடிவி யைப்புணர்
குமர கச்சியி லமர்வோனே
குரவு செச்சைவெண் முளரி பக்கலர்
குவளை முற்றணி திருமார்பா
பொடிப டப்பட நெடிய விற்கொடு
புரமெ ரித்தவர் குருநாதா
பொருதி ரைக்கட னிருத ரைப்பட
பொருது முக்கிய பெருமானே.

---

௯௮. தத்தத்—தனதானா.

அற்றைக் கிரைதேடி வத்தத் திலுமாசை
பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனோ
வெற்றிக் கதிர்வேலா வெற்பைத் துளைசீலா
கற்றுற் றுணர்போதா கச்சிப் பெருமானே.

---

௯௯. தனதன தனந்தன—தனதானா.

கமலரு சோகாம்பர முடிநடு வேய்பூங்கணை
கலகமர் வாய்தோய்ந்தம ளியின்மீதே
களையற மீதூர்ந்தெழ மதனவி டாய்போம்படி
கனவிய வாரேந்திள விளநீர்தோய்ந்
தெமதுயிர் நீலாஞ்சன மதர்விழி யால்வாங்கிய
விவளுடன் மால்கூர்ந்திடு மநுபோக
மினிவிட வேதாந்தப ரமசுக வீடாம்பொரு
ளுதவிய பாதாம்புய மருள்வாயே
அமகர வாசாம்பர வதுகர வேகாம்பர
வதுலன நீலாம்பர மறியாத
வநகர நாளாங்கிதர் தமையுமை யாள்சேர்ந்தரு
ளறமுறு சீகாஞ்சியி லுறைவோனே
விமலகி ராதாங்கனை தனகிரி தோய்காங்கெய
வெடிபடு தேவேந்திர னகர்வாழ
விரிகட றீமூண்டிட நிசிசரர் வேர்மாண்டிட
வினையற வேல்வாங்கிய பெருமானே.

---

௱. தனதன தத்தத் தாந்த தானன—தனதானா.

கலகலெ னப்பொற் சேர்ந்த நூபுர
பரிபுர மொத்தித் தாந்த னுமென
கரமல ரச்சிற் றுந்தொ மாடிய பொறியார்பைங்

கடிதட முற்றுக் காந்த ளாமென
விடைபிடி பட்டுச் சேர்ந்த வாலிலே
கனதன பொற்பிட் டோங்கு மார்பொடு வடமாடச்

சலசல சச்சச் சேய்கைக் பூண்வளை
பரிமள பச்சைச் சேர்ந்து லாவிய
சலசமு கத்துச் சார்ந்த வாள்விழி சுழலாடத்

தரளந கைப்பித் தாம்ப லாரிதழ்
குலமுகி லொத்திட் டாய்ந்த வோதியர்
சரசமு ரைத்துச் சேர்ந்த துர்லைய குறவாமோ

திலதமு கப்பொற் காந்தி மாதுமை
யெனையருள் வைத்திட் டாணட நாயகி
சிவனுரு வத்திற் சேர்ந்த பார்வதி சிவகாமி

திரிபுவ னத்தைக் காண்ட நாயகி
குமரிசு கத்தைப் பூண்ட காரணி
சிவைசுடர் சத்திச் சாம்ப வியுமை யருள்பாலா

அலகையி ரதத்தத் தோங்கி மூழ்கிட
நரிகழு குப்பிச் சிர்ந்து வாயிட
வசுரகு லத்தைக் காய்ந்த வேல்கர முடையோனே

வமரர்ம கட்குப் போந்த மாலகொளும்
விபுதகு றத்திக் காண்ட வாதின
மழகு சிறக்கக் காஞ்சி மேவிய பெருமாளே.

---

சக. தனனதாத் தத்த தந்த—தனதான.

அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்ட வஞ்ச
ரசடர்பேய்க் கத்தர் நன்றி யறியாத
வவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்பு கழ்ந்து
வவரைவாழ்த் தித்தி ரிந்து பொருடேடி

சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்தி ரிந்து
தெரிவைமாற் குச்சொ ரிந்து வவமேயான்
திரியுமார்க் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளியமோட் சத்தை யென்று வருள்வாயே

இறைவர்மாற் றற்ற செம்பொன் வடிவம் வேற்றுப் பிரிந்து
விடபமேற் கச்சி வந்த வுமையாட
னிருளைநீக் கத்த வஞ்செய் தருளநோக் கிக்கு ழைந்த
விறைவர்கேட் கத்த குஞ்சொ லுடையோனே

குறவர்கூட் டத்தில் வந்து கிழவனுய்ப் புக்கு நின்று
குருவியோட் டித்தி ரிந்த — தவமானைக்
குணமதாக் கிச்சிறந்த வடிவுகாட் டிப்பு ணர்ந்த
குமரகோட் டத்த மர்ந்த — பெருமாளே.

## கச்சபாலயம்.

௪௨. தான தத்தனத் தான தானனத்—தனதான.

சீசி முப்புரக் காடு நீறெழச் சாடி நித்திரைக் கோசம் வேரறச்
சீவன் முத்தியிற் கூட வேகளித் — தநுபூதி
சேர வற்புதக் கோல மாமெனச் சூரி யப்புவிக் கேறி யாடுகச்
சீலம் வைத்தருட் டேறி யேயிருக் — கறியாமற்
பாசம் விட்டுவிட் டோடி போனதப் போது மிப்படிக் காகிலேனினிப்
பாழ்வ ழிக்கடைக் காம லேபிடித் — தடியேனைப்
பார டைக்கலக் கோல மாமெனத் தாப ரித்துநித் தார மீதெனப்
பாத பத்மநற் போதை யேதரித் — தருள்வாயே
தேசி றுட்டநிட் டூர கோதுடைச் சூரை வெட்டியெட்டாசையேழ்புவித்
தேவர் முத்தர்கட் கேத மேதவிர்த் — தருள்வோனே
சீர்ப டைத்தழற் சூல மான்மழுப் பாணி வித்துருப் பாத னோர்புறச்
சீர்தி கழ்ப்புகழ்ப் பாவை யீனபொற் — குருநாதா
காசி முத்தமிழ்க் கூட லேழ்மலைக் கோவபத்தியிற் கான நான்மறைக்
காடு பொற்கிரிக் காழி யாரூர்பொற் — புலிவேளூர்
காள வத்தியப் பால்சி ராமலைத் தேச முற்றுமுப் பூசை மேவிநற்
காம கச்சிகச் சாலை மேவுபொற் — பெருமாளே.

௪௩. தத்தத்தத் தானன தானன—தனதான.

மக்கட்குக் கூறரி தானது
கற்றெட்டத் தான்முடி யாதது
மற்றொப்புக் கியாதுமொவ் வாதது — மனதாலே
மட்டிட்டுத் தேடவொ ணாதது
தத்வத்திற் கோவைப டாதது
மத்தப்பொற் போதுப கீரதி — மதிசூடும்
முக்கட்பொற் பாளரு சாவிய
வர்த்தக்குப் போதக மானது
முத்திக்குக் காரண மானது — பெறலாகா
முட்டர்க்கெட் டாதது நான்மறை
யெட்டிற்றெட் டாதென வேவரு
முற்பட்டப் பாலையி லாவது — புரிவாயே

செக்கட்சக் ராயுத மாதுலன்
மெச்சப்புற் போதுப டாவிய
திக்குப்பொற் பூதர மேமுதல் வெகுருபஞ்

சிட்டித்துப் பூதப சாசுகள்
கைக்கொட்டிட் டாடம கோததி
செற்றுக்ரச் சூரனை மார்பக முதுசோரி

கக்கக்கைத் தாமரை வேல்விடு
செச்சைக்கர்ப் பூரபு யாசல
கச்சுற்றப் பாரப யோதர முலையாண்முற்

கற்புத்தப் பாதுல கேழையு
மொக்கப்பெற் றுள்வினை யாடிய
கச்சிக்கச் சாலையுண் மேவிய பெருமானே.

---

காமகோட்டம்.

---

சுசு. தனதன தத்தத் தனந்த தந்தன—தந்ததானு.

சலமலம் விட்டத் தடம்பெ ருங்குடில்
சகலவி னைக்கொத் திருந்தி டும்படி
சதிரவு றுப்புச் சமைந்து வந்தொரு தந்தைதாயுந்

தரவரு பொய்க்குட் கிடந்த கந்தலி
லுறையுமு யிர்ப்பைச் சமன்று ரந்தொரு
தனியிலி ழுக்கப் படுந்த ரங்கமும் வந்திடாமுன்

பலவுரு வத்தைப் பொருந்தி யன்றுயர்
படியுநெ ளிக்கப் படர்ந்த வன்கண
படமயில் புக்குத் துரந்து கொண்டிகல் வென்றிவேலா

பரிமள மிக்கச் சிவந்த நின்கழல்
பழுதற கற்சொற் றெரிந்து வன்பொடு
பகர்வதி னிச்சற் றுகந்து தந்திட வந்திடாயோ

சிலையுமெ னப்பொற் சிலம்பை முன்கொடு
சிவமய மற்றுத் திடங்கு லைந்தவர்
திரிபுர மத்தைச் சுடுந்தி னந்தரி தின்கையாளி

திருமகள் கச்சுப் பொருந்தி டுந்தன
தெரிவையி ரக்கத் துடன்பி றந்தவ
டிசைகளி லொக்கப் படர்ந்தி டம்பொரு தின்றனுூனக்

கலைகள ணைக்கொத் தடர்ந்து வம்பலர்
நதிகொள கத்திற் பயந்து கம்பர் மெய்
கருகவி டத்திற் கலந்தி ருந்தவள் கஞ்சபாதங்
கருணைமி குத்துக் கசிந்து ளங்கொடு
கருதும வர்க்குப் பதங்க டந்தருள்
கவுரிதி ருக்கோட் டமர்ந்த விந்திரர் தம்பிரானே.

---

சரு. தனதன தத்தத் தனந்த தந்தன—தந்ததான.

தலைவலை யத்துத் தரம்பெ றும்பல
புலவர்ம திக்கச் சிகண்டி குன்றெறி
தருமயில் செச்சைப் புயங்க யங்குற வஞ்சியோடு
தமனிய முத்துச் சதங்கை கிண்கிணி
தழுவிய செக்கச் சிவந்த பங்கய
சரணமும் வைத்துப் பெரும்ப்ர பந்தம்வி ளம்புகாளப்
புலவனெ னத்தத் துவந்த ரந்தெரி
தலைவனெ னத்தக் கறஞ்செ யுங்குண
புருஷனெ னப்பொற் பதந்த ருஞ்சன னம்பெறுதோ
பொறையனெ னப்பொய்ப் ப்ரபஞ்ச மஞ்சிய
துறவனெ னத்திக் கியம்பு கின்றது
புதுமைய லச்சிற் பரம்பொ ருந்துகை தந்திடாதோ
குலசயி லத்துப் பிறந்த பெண்கொடி
யுலகடை யப்பெற் றவுந்தி யந்தணி
குறவற முப்பத் திரண்ட றம்புரி கின்றபேதை
குணதரி சக்ரப் ப்ரசண்ட சங்கரி
கணபண ரத்நப் புயங்க கங்கணி
குவடுகு னித்துப் புரஞ்சு டுஞ்சின வஞ்சிநீலி
கலபவி சித்ரச் சிகண்டி சுந்தரி
கடியவி டத்தைப் பொதிந்த கந்தரி
கருணைவி ழிக்கற் பகந்தி கம்பரி யெங்களாயி
கருதிய பத்தர்க் கிரங்கு மம்பிகை
சுருதிது திக்கப் படுந்த்ரி யம்பகி
கவுரிதி ருக்கோட் டமர்ந்த விந்திரர் தம்பிரானே.

---

# படலவகராதி.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவாவடுதுறைச்சிவஞானயோகிகள்

அருளிச்செய்த

# காஞ்சிப்புராணம்.

## முதற்காண்டம்.

### காப்பு.

கலிநிலைத்துறை.

இருகவுட்டுளைவாக்குகார்க்கடங்கலுழ்குலிகக்
குருநிறத்திழிதேற்றமுன்குலாய்த்தவழ்ந்தேறிப்
பரிதிமார்பினிற்சமனெடுகாளிந்திபயிலுந்,
திருநிகர்த்தசீரைங்கரக்களிற்றினைச்சேர்வாம்.

### ஸ்தலவிநாயகர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விகடசக்கரவாரணந்தொடர்வரும்வித்தகமுகில்விற-
விகடசக்கரவிந்தமன்னவன்றனக்கருளுமெய்த்தலைவிரு-
விகடசக்கரவாகமென்முலையுமைகான்முளையென்னைச்சே-
விகடசக்கரரெந்திரமெனச்சுழல்வெம்பவக்கடனெஞ்சே.

## கடவுள்வாழ்த்து.

### சபாநாயகர்.

வேறு.

சங்கேந்துமலர்க்குடங்கைப்புத்தேளுமறைக்கோவுந்தழல்கால்குல
மங்கேந்துபூமானுந்தத்தமதுதொழிற்றலைநின்றாற்றச்செய்தோர்
பங்கேந்தும்பெருமாட்டிவிழிகளிப்பவிருமுனிவர்பணிந்துபோற்றக்
கொங்கேந்துமணிமன்றுட்குனித்தருளும்பெருவாழ்வைக்குறித்துவாழ்வாம்.

### திருவேகம்பநாதர்.

தணந்தபெருந்துயர்க்கடன்மீக்கூர்தலினுன்மலைபயந்ததரளமூரற்
கணங்குழையாள்புரிபூசைமுடிவளவுந்தரியாமலிடையேதம்மை
வணங்கினைத்தனைவிடுத்துவலித்திறுகத்தழீஇக்கொள்வடிவுபார்க்கத்தன்
மணந்தருளிக்குறிபூண்டவொருமாவிற்பெருமானைவணக்கஞ்செய்வாம்.

காமாட்சியம்மை.

ஊன்பிலிற்றுமழுவாளிகலவிதனிலொண்ணுதென்ருேர்ந்துநஞ்சந்
தான்பிலிற்றும்பாப்பணியைநீப்பவுங்கார்வண்டினங்கடைந்தூசத்
தேன்பிலிற்றுநறுங்கடுக்கைத்தெரியலைப்பாம்பெனமருண்டுத்தெரியனுறுங்
கான்பிலிற்றத்தெருண்டணையுங்காமக்கோட்டத்தமையைக்கருத்துள்வைப்பாம். ௩

கருக்காழக்கோட்டிமிரவினையனைத்துமொருங்குகெய்திக்கலகஞ்செய்யுந்
தருக்காழக்கோட்டியெலாமறவெறிந்தாமினியென்றுந்தகைசாலன்பு
சுருக்காமக்கோட்டினைச்சேயரைகரங்கொண்டார்க்குமுலைச்சுவடுநல்குந்
திருக்காமக்கோட்டியம்மைசேவடிப்போதெப்போதுஞ்சிந்திப்பாமால்.

விகடசக்கரவிநாயகக்கடவுள்.

விழிமலர்ப்பூசனையுஞற்றித்திருநெடுமால்பெறுமாழிமீளவாங்கி
வழியொழுகாச்சலந்தரன்மெய்க்குருதிபடிமுடைநாற்றமாறமாற்றும்
பொழிமதநீர்விரையேற்றிவிகடநடப்பூசைகொண்டுபுதிதாநல்கிப்
பழிதபுதன்றாதையினும்புகழ்படைத்தமதமாவைப்பணிதல்செய்வாம்.

குமாரக்கடவுள்.

முருகோட்டந்தரப்பாயுமும்மதமுழூற்றெடுப்பமுரிவிற்கோட்டு
மொருகோட்டுமெழுகளிற்றையிருகோட்டுமுதுகளிறுவுலவக்காட்டிப்
பருகோட்டுநறைவேட்டுப்பைங்கோட்டுத்தினைப்புனத்துப்பரண்மேற்கொண்டு
குருகோட்டும்பெடைமணந்தகுமரகோட்டத்தடிகள்குலத்தாள்போற்றி.

வயிரவக்கடவுள்.

வேறு.

எளியரைவலியர்வாட்டின்வலியரையிருநீர்வைப்பி
னளியறத்தெய்வம்வாட்டுமெனுமுரைக்கமையவன்றே
தெளியுமாவலியைச்செற்ருேற்செகுத்துரிக்கவயம்போர்த்த
வளியுளர்கச்சிகாவல்வயிரவர்க்கன்புசெய்வாம். எ

திருநந்திதேவர்.

அங்கணன்கயிலைகாக்குமகம்படித்தொழின்மைபூண்டு
நங்குருமரபிற்கெல்லாமுதற்குருநாதனுகிப்
பங்கயத்துளவகாறும்வேத்திரப்படைபொறுத்த
செங்கையெம்பெருமானந்திசீரடிக்கமலம்போற்றி. அ

அகத்தியமுனிவர்.

காசியினின்றும்போந்துகம்பர்தாமருளப்பெற்று
மாசிலாக்கச்சிமூதூர்மன்னிவீற்றிருந்தபூமே
லாசிலாத்தமிழ்பரப்பியருந்தமிழ்க்குரவுபூண்ட
தேசினன்மலையவெற்பின்குறுமுனிதிருத்தாள்போற்றி. கூ

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

வேறு.

பரசமயகோளரியைப்பாலறுவாயனைப்பூம்பழனஞ்சூழ்ந்த
சிரபுரத்துத்திருஞானசம்பந்தப்பெருமானைத்தேயமெல்லாங்
குரவையிடத்தமிழ்வேதம்விரித்தருளுங்கவுணியர்தங்குல்தீபத்தை
விரவியெமையாளுடையவென்றிமழவிளங்களிற்றைவிரும்பிவாழ்வாம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

இடையறாப்பேரன்புமழைவாருமிணைவிழியுமுழவாரத்தின்
படையறாத்திருக்கரமுஞ்சிவபெருமான்றிருவடிக்கேபதித்தநெஞ்சு,
நடையறாப்பெருந்துறவும்வாகீசப்பெருந்தகைதன்ஞானப்பாடற்
றொடையறாச்செவ்வாயுஞ்சிவவேடப்பொலிவழகுந்துதித்துவாழ்வாம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

ஒருமணத்தைச்சிதைவுசெய்துவலவழக்கிட்டாட்கொண்டவுவனைக்கொண்டே
யிருமணத்தைக்கொண்டருளிப்பணிகொண்டவல்லாளனெல்லாமுய்யப்
பெருமணச்சீர்த்திருத்தொண்டத்தொகைவிரித்தபேரருளின்பெருமாளென்றுந்
திருமணக்கோலப்பெருமாண்மறை பெருமாளெழுதகுலதெய்வமாமால். கஉ

## மாணிக்கவாசகசுவாமிகள்.

பெருந்துறையிற்சிவபெருமானருளுதலும்பெருக்கருணைப்பெற்றிநோக்கிக்
கரைந்துகரைந்திருகண்ணீர்மழைவாரத்துரியநிலைகடந்துபோந்து
திருத்தபெருஞ்சிவபோகக்கொழுந்தேறல்வாய்மடுத்துத்தேக்கிச்செம்மாந்
திருந்தருளும்பெருங்கீர்த்திவாதவூரடிகளடியிணைகள்போற்றி. கங

## அறுபத்துமூவர்.

கலிவிருத்தம்.

தத்துமூதெயின்மூன்றுந்தழலெழ - முத்துமூரன்முகிழ்த்தநிராமய
சித்துமூர்த்திதன்றாளிணைசேரறு - பத்துமூவர்பதமலர்போற்றுவாம். கச

## சேக்கிழார்நாயனார்.

தூக்குசீர்த்திருத்தொண்டத்தொகைவிரி - வாக்கினாற்சொல்லவல்லபிரானெங்கள்
பாக்கியப்பயனாப்பதிகுன்றைவாழ் - சேக்கிழானடிசென்னியிருத்துவாம்.

## திருக்கூட்டத்தார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பேயன்னபுறச்சமயப்பிணக்குநூல்வழியனைத்தும்பிழையேயென்றி
வாயுண்மைதெளிந்துசைவசித்தாந்தவழிதேறியநீதவாழ்விற்
போயுண்மியஞ்செழுத்துந்திருநீறுங்கண்டிகையும்பொருளாக்கொண்ட
நாயன்மார்திருக்கூட்டம்பணிந்திறைஞ்சும்பெரும்பேறுநான்பெற்றேனால்.

## பஞ்சாக்கரதேசிகர்.

கயிலாயபரம்பரையிற்சிவஞானபோதநெறிகாட்டும்வெண்ணெய்
பயில்வாய்மைமெய்கண்டான்சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபானுவாகிக்
குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ்குருநமச்சிவாயதேவன்
சயிலாதிமரபுடையோன்றிருமரபுநீடூழிதழைகமாதோ. கஎ

## பின்வேலப்பதேசிகர்.

எவ்வெவர்கோட்படுபொருளுமஞ்செழுத்தினடக்கியவற்றியல்புகாட்டி
மெய்வகையஞ்சவத்தையினுநிற்குமுறையோதுமுறைவிளங்கத்தேற்றி
பவ்வெழுத்தினுள்ளீடறிவித்துச்சிவபோகத்தழுத்திநாயேன்
செய்வினையுங்கைக்கொண்டவேலப்பதேசிகன்றாள்சென்னிசேர்ப்பாம்.

## மற்றையசிவநேசர்கள்.

மறைநான்கும்பயின்றொழுகியிட்டிகளும்பலவியற்றிமல்லன்ஞாலத்
திறவாதபுகழ்படைத்துமீசனிடத்தன்பிலரையெண்ணாதுள்ளம்
புறமோதிக்கொலைபயின்றுமதுமாந்துங்கொடும்பாவப்புலையரேனு
மறவாணன்றிருவடிக்கீழன்பினரேலவரெம்மையடிமைகொள்வார். கக

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

## நூல்செய்தற்குக்காரணம்.

கலிநிலைத்துறை.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலுவன்
றிருவிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
திருவருட்குரியான்றவர்கூறியசிறப்பா
லுரிமையுந்தெழுமாசையாலுரைத்திடலுற்றேன். ௧

## அவையடக்கம்.

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேலவையருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும். ௧

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தலைவகையிலக்கணவழுவுக்குக்காட்டாப்
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர். ௨

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யுட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொள்வரென்பதுபற்றி
விழுத்தநாணிலேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன். ௩

நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
னெறிதருங்கலுழ்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால். ௪

அவையடக்கமுற்றிற்று.

## நூற்சிறப்புப்பாயிரம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருட்பணிக்குரியமகேச்சுரர்முதலாநல்வருந்தருகவென்றறைய
மருட்புகைதவிர்க்குங்காஞ்சிமான்மியத்தைவழங்குதென்மொழியினுரைத்தான்
கருப்பகையிரிக்குஞானமுமேன்மைக்கலைகளுங்கரிசறப்பயின்ற
மருப்பொழிலுடுத்ததிருவாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே.

நூற்சிறப்புப்பாயிரமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௬௨.

# திருநாட்டுப்படலம்.

### நாடுவாழ்த்துத்துறை.

கலிவிருத்தம்.

பணங்கொள்பாம்பணிகம்பனார்பணிவளர்பயந்த
வணங்கினோடொன்றுமமர்ந்தினிதரசுவீற்றிருக்கு
முணங்கரும்புகழ்க்காஞ்சியையகந்தழீஇயும்பர்
வணங்கமேவரும்பாலிநாட்டணிநலம்வகுப்பாம். ௧

### மழைவாழ்த்துத்துறை.

கடல்கடைந்திடச்செல்லுறாஉம்வெள்ளைமால்கடுப்பப்
படலைவெண்முகில்பரவைநீருழக்கிவாய்மடுத்து
விடமெழுந்தெனமீண்டவம்மாயனைவிழைய
வுடல்கறுத்துவிண்ணெறிப்படர்ந்தொய்யெனமீண்டு. ௨

அற்றைஞான்றுமால்கயிலையைச்சரணடைந்தாங்குப்
பொற்றநந்தியஞ்சாரல்சூழ்பொருப்பினைக்குறுகிக்
கற்றைவார்சடைச்சுந்தரன்கடவுளான்மதுரை
முற்றுநான்முகிலெனவரை முழுவதும்பொதிந்து. ௩

முரிந்தவெண்டிரைக்கருங்கடன்முகட்டினைக்குழித்து
விரிந்தவெள்ளநீர்மடுப்புழிக்கரந்துடன்மேவிக்
கரிந்திடத்தனைச்செய்ததீவுட்டையின்களவைத்
தெரிந்துவில்லுமிழ்தடித்தெனத்திசைதொறுஞ்சிதறி. ௪

கான்றவக்கனன்மீட்டடையாவகைகருதி
வான்றனிற்குனிசிலையெனத்தடையினைவயக்கி
யென்றநீயினியெதிர்த்தனையாயிடினின்னே
யூன்றனோடுயிர்குடிப்பலென்றுருமொலியெழுப்பி. ௫

அடுத்தடுத்தலைமோதுதெண்டிரைப்புனலளக்க
ருடுத்தபாரிலுன்கிளையெலாமுதலறவொருங்கே
படுத்துநின்வலிபாற்றுவன்யானெனப்பகைமை
தொடுத்தவெஞ்சினங்கொண்டுழன்மேலமர்தொடங்கி. ௬

விச்சைமந்திரவலியினால்விங்குநீர்மழையை
வச்சிரக்கணையாக்கிமெய்வளமெனக்கருதும்
பொச்சமின்மறைவேள்வியும்புனிதனேந்தழலு
மெச்சமாகமற்றெவையுமீண்டறக்கெனவியம்பி. ௭

### மழைவளம்.

காட்டகங்களுங்கழைநரல்கதிர்மணிச்சிமயக்
கோட்டகங்களுங்குளிர்புனற்கழனிசூழ்குலவு
நாட்டகங்களும்பரன்முரம்படுத்தெரிகடஞ்செய்
மோட்டகங்களுமுழுவதுங்குளிர்கொளச்சொரிந்து. ௮

இற்றொழிந்தனவொழியுமற்றெஞ்சியவெரிபோய்க்
கற்றவேதியர்வேள்வியஞ்சாலையுட்கரப்ப
வுற்றவாகண்டுதன்சினக்கனலையுமொழுவி
வெற்றிமாமுரசெனமறைப்பேரொலிவிளக்கி. ௯

தனதுநீர்த்தியுந்திறற்பிரதாபமுந்தரைமே
லனல்செய்கோபமுமுல்லையுமெனவெங்குழமைத்துப்
புனிதமாமுலைவுதன்னையும்பொதிந்துகொண்டென்னப்
பனிவிசும்பினிற்சிவந்துவெண்ணிறம்படைத்தன்றே. ௧௦

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உடுவணிகுடுமிக்கோடுபிளவுபட்டுடையப்பெய்யுங்
கொடுமழைக்காற்றுதங்கட்குளிர்பெயன்மாறவெண்ணி
நெடுமலையெடுத்துக்காட்டுங்கெட்டிதழ்க்காந்தட்கொள்ளி
விடுசுடர்க்கனலியர்தப்புனலைரடும்விந்ததன்றே. ௧௧

போதமேலாகப்பண்டேபுல்லியமலநோய்தீர்ந்தும்
வாதனைதாக்குமாபோன்மழைப்பெயன்மாறித்தீர்ந்துங்
காதல்செய்துறையும்புள்ளுமாக்களுங்கவன்றுநெஞ்ச
னோதகமரங்களெல்லாநுண்டுளிதுவற்றுமாதோ. ௧௨

கனைபெயலெழிலிக்கூட்டங்கலிவிசும்புகடுபோழ்ந்த
நனைமுடிநந்திக்குன்றுநுளிபடப்பெரூழியுந்தெண்ணீர்
புனைமறைவசிட்டமேலோன்செருத்தலான்பொழிந்ததீம்பால்
வனைபுகழ்வெள்ளமென்னத்திசைதொறும்வழிந்தமன்னே. ௧௩

பாலியாற்றுவளம்.

கண்ணகன்குடுமிக்குன்றிற்கல்லெனக்கறங்கியார்த்து
விண்ணிவரேணியென்னவியன்முடிதொடுத்துவீழுந்
தண்ணறுவருவியெல்லாந்தலைத்தலைவிரிந்துதோன்றும்
புண்ணியப்பாலியாற்றிற்சேர்ந்துடன்போயமாதோ. ௧௪

பாரிடங்குழித்துவீழும்பல்வயினருவியெல்லா
மோரிருமபாலியாற்றினொருங்குசென்றணையுந்தோற்றஞ்
சீரியபுவனந்தோறுஞ்சித்தியவினைகளெலலா
மோரிடத்தொருவன்பாலுடங்குசென்றுறுதல்போலும். ௧௫

விலகிவீழருவித்தாரைவேறுவேறாகவோடிக
குலநதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
மலகில்பல்வழியுமூதாரணிமையினொன்றுமாறும்
பலபலமதமுமீற்றினொருவழிப்படலும்போலும். ௧௬

மலைநகைத்தனையகாட்சிவயின்வயினருவித்தாரை
சிலையினின்றிழிந்துமண்மேற்றிரண்டுசென்றணையுந்தோற்ற
முல்லைவயோடிகலிச்சேடனுயர்வரைக்குடுமியெல்லாம்
பலதலைவிரித்துப்பொத்திக்கிடந்தவப்பான்மைபோலும். ௧௭

குரைபுனற்றெண்டைநாட்டைக்குறும்பெறிந்தடிப்படுத்துப்
புரைதபநடாத்துகென்னப்புதுமுகிலரசனூந்தி
வரைமிசையிருந்துவேந்தாமணிமுடிசூட்டியுய்ப்பத்
திரைபடுபாலிவல்லேசிலையினின்றிழிந்துபோந்து. ௧௮

அரசுகள்சூழ்ந்துசெல்லவருங்கணிமலர்வாய்விள்ளச்
சரிகுழற்குறமின்னார்கள்பற்பலதானைவெள்ளம்
விரவிடப்பரியகாலாண்மேதகுமாக்களத்தி
யிரபடைதழுவிப்போதவிகல்கொடுவையமூர்ந்து. ௧௯

அணிவகுத்தெழுந்துகுன்றாரும்பெறற்குறிச்சிபுக்கு,
மணிவகையாரம்பூண்டுமதுக்குடவிருந்துமாந்தித்
தணிவறவெளிக்கொண்டோகித்தலைத்தலைவேட்டம்போகித்
துணிபடமாக்களெல்லாந்தொலைத்துடனீர்த்துச்சென்று. ௨0

கலிவிருத்தம்.

மண்டமர்மேல்கொடுவெந்தனழின்னே
தண்டகநாட்டுறைதாபதர்நோயோர்
பெண்டிருநம்மரணேகுதிர்பெட்டென்
றெண்டிசையார்ப்பவிசைப்பறைசாற்றி

இருற்றிகிரிப்படைதாங்கியிபக்கோ
டுருத்திறல்வெஞ்சிலைகாந்தளரும்பு
நறுப்பயில்கோலெனவேந்திநல்வீர
மறுப்பகைமாய்த்துறவெட்சிமலைந்து. ௨௨

முல்லையின்வேந்துமுடித்தகரந்தை
யொல்லையலைத்துயராநிரைபற்றி
மெல்லிதழ்கின்றுசிவந்தெழுவேய்த்தோ
ணல்லவர்கற்பையழித்துண்டநது. ௨௩

வஞ்சிமலைந்தழலைப்பாலையைவாட்டி
யஞ்சியிடாதுதன்னுணையிருத்தி
யெஞ்சலுறுமருதத்திறையோடும்
வெஞ்சமரேற்றுழிஞைத்துணர்வேய்ந்து. ௨௪

தடுத்தெதிர்நின்றதடங்கரையெல்லாம்
படுத்துமதன்பயிலபாசறைவீட்டி
மடுக்குளமேரியின்வாட்டமனைத்துங்
கெடுத்தனமென்றுதழிஇக்கிளர்வுற்று. ௨௫

வீறியடாவகைவெஞ்சிறைகோலித்
தூறிமெள்ளர்தொலைந்தழிவெய்தச்
சீறியடர்ந்தெழுத்துமுள்வேலி
கீறிவளைந்திடங்கினைநீங்கி ௨௬

நொச்சியைமுற்றியங்கொச்சியினுள்ளார்
பச்சிளநொச்சிபறித்தணியாமே
நச்சியதும்பைநறுந்துணர்சூடி
யச்செழுமாமதின்முற்றுமகழ்ந்து. ௨எ

கொச்சகக்கலிப்பா.

இடித்துவெளிசெய்துநகரெங்கணுநுழைந்தாங்
கடுத்தமடவார்வயிறலைத்தனரிரங்கக்
கொடுத்திடுவளங்கள்பலகொள்ளைகொடுமண்ணி
னெடுத்துவருவெள்வரகுகொள்ளுடனிறைத்து.

வெற்றிபுனைமாலிகைமிலைச்சியிருபாலுஞ்
சுற்றிவருபுட்குலநிரைத்தொழுகிதன்னுற்
கொற்றமிகுமார்கலியைகோக்கியறைகூவி
யெற்றுகழிகெய்தல்வழியெய்துறுதலோடும். ௨அ

பௌவமதுணர்ந்துபவளந்தாளமாதி
வௌவுதிரையேந்தியெதிர்கொண்டடிவணங்கச்
செவ்விதினுவந்துபயுமீந்துதினமாறிக்
கௌவியமெய்யுன்பொடுகலந்துளதையன்றே. கூ0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்னடிப்படுத்துமேலைத்தண்டகாரடுமுற்று
முன்னுறக்கவர்ந்துகொண்டவளத்தினுமிரட்டி
பின்னுறவளித்துவானிற்புலவரும்பெட்குமாற்று
லங்கிலையுயிர்களோம்பியரசுசெய்துறையும்பாலி. கூக

காரணப்பொருளின்றன்மைகாரியத்துளதாமென்ன
வாரணப்பனுவல்கூறுமரும்பொருடெளியத்தேற்றும்
பேரிசைப்புவிமேல்யார்க்கும்பெட்டனபெட்டவாறே
சீரிதிற்கொடுக்குந்தேனுத்தரவருஞ்செழுநீர்ப்பாலி. கூஉ

வறுமையுற்றழியுந்தொண்டைவளமலிநாட்டோர்தங்க
ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல்காரற்றே
தெறுகதிர்கனற்றும்வேனிற்பருவத்துஞ்சீர்மைகுன்று
துறுமணலகடுகீண்டுமொண்புனலுதவும்பாலி. கூங

சொற்றவித்தீர்த்தமேன்மைசுவைபடும்பாலோடொக்கு
மற்றையதீர்த்தமெல்லாம்வார்தருபுனலோடொக்கும்
பெற்றிமையுணர்ந்துதொல்லோர்பெயரிடப்பட்டசீர்த்தி
பற்றியதெனலாம்பாலிப்பெருமையார்பகருநீரார். கூச

காட்டுவளம்.

கலிநிலைத்துறை.

விளம்புமித்தகைமணிகொழிவிரிதிரைத்தரங்க
வளம்புனற்றடம்பாலியான்வண்மைபெற்றோங்கி
யுளம்பயின்றுநாற்பொருள்களுமுளுற்றுநர்க்கிடமாய்த்
துளும்புமேன்மையிற்பொலிந்ததுதொண்டைநன்னடு. கூரு

செக்கர்வார்சடைச்சிவபிரான்றிருவருள்செய்யுத்
தக்கவாய்மையினுயிர்க்கெலாந்தன்னிடத்திருந்து
மைக்கணெம்பெருமாட்டியெண்ணான்கறம்வளர்க்கும்
தொக்கமாப்புகழ்படைத்ததுதொண்டைநன்னடு. கூசா

பவம்விளைத்திடாப்பெரும்பதியெனத்திசைபோய
சிவம்விளைத்திடுநகரங்களேழனுஞ்சிறந்து
தவம்விளைத்திடுகாஞ்சியைத்தன்னிடத்திருத்தி
நவம்விளைத்திடும்பெருமைபூண்டதுதொண்டைநாடு. கூஎ

தரைவிளங்கியதண்டகாட்டினிற்றகைசால்
வரையுங்கானமும்புறம்புணைப்பழனமுமணிநீர்த்
திரையும்வேலையுமென்னுகானிலத்தினுட்சிறந்த
புரையிலைந்திணைவளஞ்சிறிதறிந்தவாபுகல்வாம். கூஅ

குறிஞ்சி.

முருகவேட்கிடுதுமமோம்புறமுனியகில்சந்
துருவவாசமுற்பெய்துபுன்பயிர்விளைத்துவப்பார்,
பெருவளந்துறந்தார்தொறுழிபெறுதிபேணும்
பொருவில்வாழ்க்கையர்தஞ்செயல்போன்மென்பொருப்பர். கூகூ

ஏறுதன்னுடல்வருத்தியபகைமையெண்ணாது
தாறுபன்மணிமாமுதல்பொறையெலாந்தொலைத்த
வேறுநன்றியேகடைப்பிடித்திதைவியன்பொருப்பர்க்
கூறுநல்வளம்விளைத்திடுமுயர்ந்தவர்செயல்போல். ௬௦

வேட்டைமேற்புகுவார்க்குநல்வினையுந்தமடவார்
கூட்டமூழ்வாய்க்குழச்சாரலிற்றினைக்குரற்கொய்துஞ்
சேட்டிளங்கிளிக்குலங்களைத்தெரிவைமாரோப்பும்
பாட்டிசைத்திறமொழியிருந்தனுதினம்பயிலும். ௬௧

நங்குலத்தருவாழ்க்கையைக்கெடுத்துநம்மிருக்கை
தங்களுக்கெனக்கொண்டவிவ்வேனல்கடம்மை
யிங்கண்வாட்டுதுமென்பதோர்சூழ்ச்சியெண்ணியபோ
லங்கணெஞ்சியவேங்கைகள்போர்துசெய்தலரும். ௬௨

என்னையூர்ந்தருள்சுடர்வடியிலையவேற்பெருமான்
றன்னைநன்மருகெனப்படைத்தவன்றனதூர்தி
யன்னதாமெனுங்கேண்மையானளிமுகிற்குலத்தைக்
கன்னிமாமயில்காண்டொறுங்களிசிறந்தகவும். ௬௩

நெருங்குபைந்தழைவருக்கைமேனெடுவெளியலைப்ப
வருங்கண்மாமயில்வீற்றிருந்தசைதருங்காட்சி
கருங்கண்வீரச்செம்மறன்மருகனைக்காண
மருங்குவந்துதன்னூர்தியையிருவுதன்மானும். ௬௪

சந்தமார்முழந்தாங்கிவம்பலர்ந்ததண்குவட்டான்
மைந்தர்கண்ணையுமனத்தையுங்கவர்ந்திடும்வனப்பின்
முந்துமோங்கலுங்கொடிச்சியர்குழாக்களுமுகிறோய்
கந்தமார்குழன்முகத்தலரிலவங்கங்காட்டும்.

கொங்கையேந்தியவாரணங்களுமவணகொம்புடைய
துங்கவேங்கையின்குலமெலாமவணபரல்சுரந்து
பொங்குநீடுசேவினங்களுமவணவான்புனலை
யங்கண்வேட்டுணுமொற்றைத்தாளொகினமுமவண. ௬௬

ஆணலாமொருகன்னியையுமணப்பவாளனையுங்
கோணைவேங்கைகள்யாட்டினேறுறவுகொண்டோங்கும்
பேணுசேவினஞ்சிங்கமேலேறிடும்பிழையா
தேணினற்பொலியெகினங்களிடபத்தைவிழுங்கும். ௬௭

வில்லலர்ந்தபல்லுடுக்களும்விண்ணெறிப்படருஞ்
செல்லும்வெண்கதிர்க்கடவுளும்பானுவுந்திறல்சான்
மல்லல்வானவக்குழுவுமெய்ப்பாறவந்திருக்கு
மில்லமெங்கணும்வான்றொடவிழைத்திடுங்குன்றம். ௬௮

போதுமூன்றினும்போதுசெய்காவிசூழ்பொருப்பு
மேதகுந்தமிழ்த்தெல்லையாம்வேங்கடவரையுங்
காதல்பூப்பவத்தாணிகொண்டாறுமுகக்கடவுள்
கோதுதீர்த்தரசாட்சிசெய்குறிஞ்சியக்குறிஞ்சி. ௬௯

அன்பெலாமொருபிழம்பெனத்திரண்டகண்ணப்ப
னெம்பிராற்கொருவிழியிடந்தப்புகாளத்திப்
பொன்பிறங்கியமுகலிசூழ்கயிலையம்பொருப்புந்
தன்புலத்திடையுடையதுதடவரைக்குறிஞ்சி. ௫0

நாவன்மன்னவர்க்கிரந்துசோறளித்திடுமெம்மான்
றேவியோடமர்திருக்கச்சூர்திருவிடைச்சுரமும்
பாவகாரியரெய்தொணுக்கழுகுசூழ்பறம்பு
மேவரத்திகழ்குறிஞ்சியின்பெருமையார்விரிப்பார். ௫௧

பாலை.

சூராவளித்திடுபாவையைக்கோங்குபொன்கொடுத்துப்
பராரைப்பாடலம்பூந்தழற்பாங்கரின்மணப்ப
மராமரத்துளர்வண்டுபண்பாடவன்முருங்கை
விராவிவெண்பொரியிறைத்திடும்வியப்பினதொருபால். ௫௨

எயிற்றிமாரெழிலுலத்தினுக்கிரியல்போயுடைந்தாங்
கயற்பொதும்பர்புக்கலர்குராப்பாவைகண்டவர்தங்
துயிற்றுசேயெனக்கவன்றுபோய்த்தாதுணம்புறாக்கள்
வெயிற்றலைக்கணின்றுயாகுவநிலைமைவிண்டவர்போலும்

தாதுணம்புறவினமெலாந்துணையுடன்கெழுமிப்
போர்தலூடியுமுணர்த்தியுந்தலைத்தலைப்புணர்ந்து
காதலன்றலர்மொழியையுங்கடந்துசேணிடைச்செ
லேதிலாடவர்தமைச்செலவழுங்குவித்திடுமால் ௫௪

வெங்கதிர்ப்பிரானனம்பகம்போதிலிவ்வேனில்
மங்கைகொங்கைதோய்ந்துளித்திடுமபாலையாமைந்த
னங்கணிலவரசர்பாலிரந்துவந்துறாம்பு
தங்குசூழலிற்சிற்றராசாள்வருமுளதால். ௫௫

முல்லை.

கவிலுமிந்நிலப்புறம்பயில்புறவகன்மடந்தை
குவிவருந்தழல்வெம்மைகூர்கொடும்பசிதணியச்
செவிலியாய்முகிறீம்பயமூட்டிடவளர்ந்தாங்
கவிழுநீள்வரகாதியாமைப்பயந்தளிக்கும். ௫௬

கொல்லையெங்கணுங்கொழுமலர்தகைபுனமுருக்கின்
முல்லைமென்கொடிபடர்ந்தலர்நிரைநிரைமுகிழ்ப்ப
வல்லலின்றகந்தரப்பிரானரகதிமார்பிற்
றொல்லைவெண்டலைமாலைதுயல்வரன்மானும். ௫௭

நீலம்பூத்தலர்பூவையைக்கோட்டுநீள்கரத்தாற்
கோலம்பூத்தபொற்கொன்றைகட்டிஇக்கிடந்தசைவ
னாலம்பூத்தருண்மிடற்றினேனைன்றுமோகினியாந்
சீலம்பூத்தமாலிளமுலைதிளைப்பதுதெளிக்கும். ௫௮

பெண்ணலங்கனியிடைக்குலப்பிடிநடைமடவார்
விண்ணலங்கனிமாதரையெழிலினால்வென்று
பண்ணலங்கனிமிடற்றவர்பணைத்தமுக்கரிந்து
மண்ணிலெங்கணுந்தூக்கிவைத்தெனக்குமிழ்மலரும். ௫௯

மௌவலங்குழலார்விழிக்குடைந்துவான்குதிக்கு
நவ்விமீண்டகலாவகைமகளிரானனத்துக்
கொவ்வுறுதவளாணையிற்றிரியுமொழுண்மதிகண்
டவ்வுழித்தனதிருக்கையிற்சிறைப்படுத்தலைக்கும். சுo

கற்றைவார்குழலாய்ச்சியர்கயல்விழிமுகத்தின்
வெற்றியொப்புறப்பெருங்குருந்தூச்சிமேற்றுவி
யொற்றைமானுடைக்கலைமதியதனிழலுறங்கு
மற்றைமானையும்பற்றுவான்கதிர்க்கையால்வருடும். சுக

நலம்பயின்றிளவேனிலின்விழுமாங்குயில்க
ளலம்புகார்வரும்போதுவாயடைப்பதுமுன்னாட்
புலம்புகொண்டவர்காரொடுந்தலைவர்தேர்புகுத
வலம்புனைந்துரைவளமொழிக்கிடைதலாமன்றே. சுஉ

தொண்டைமான்கடக்களிற்றினைமுல்லையாற்றொடக்கி
யண்டர்தம்பிரான்வெளிப்படக்காட்சிதந்தருள்சீர்
கொண்டவான்பதிமுதல்பலதன்னிடைக்குலவக்
கண்டமுல்லையின்பெருமையார்கட்டுரைத்திடுவார். சுங

மருதம்.

பொலஞ்சிறைச்சுரும்புளர்கருகுறுஞ்சுனைப்புறவ
நிலத்தினைப்புடையுடுத்ததுநெட்டிளவாளை
யிலஞ்சிநின்றுமீப்பாய்ந்துவெண்மதிகிழித்தேகு
தலங்கொள்வானியாற்றுலவுந்தடம்பணைமருதம். சுச

ஒருவனாகியசிவபிரானுலகுயிரளிப்பக்
கருணைகூர்ந்துதன்னுவந்தருமேதகுமுங்காட்டுந்
திருநிகர்ப்பவோர்பாலியேவயலைவளஞ்செழிப்பப்
பெருகுதண்புனல்பற்பலகால்களாய்ப்பிரியும். சுரு

பராரைமூலமேமுபணைகிளைவளாரிலைப்பலவும்
விராவியொன்றிலொன்றனம்மாய்க்கவடுவிட்டென்னத்
தராதலம்புகும்பாலியிற்பிரிந்துதன்கரைக்க
ணராவுகால்களுமவைதருகால்களுமனந்தம்.

நான்முகப்பிரான்வேள்வியைத்தபவருநதியை
மானமறுத்திடைக்குலையுணக்கிடந்தமைமான,
மீன்முகப்பெருங்காற்புனற்றடப்புவிழ்ந்துழக்கும்
பான்முலைக்கருமேதியாற்பருமடையுடையும். சுஎ

பழங்கண்வேனிலைப்புயல்கொடுபாற்றுதன்னிறைக்குத்
தழங்குமோதையின்மீறுதம்வீழ்த்தெடுப்பதுகனைய
வழங்குதண்ணுமையோதையுமள்ளரார்ப்பொலியு,
முழங்குதீம்புனற்கம்மையுமுடுகிவிண்புகுமால். சுஅ

பொறிகளைந்தையும்புறஞ்செலாதடக்கியோர்நெறிக்கே
குறிகொளும்படிசெலுத்துபேராளர்தங்கோள்போற்,
பிறிவுறும்பலமடைகளிற்பிழைத்திடாதொதுக்கிச்
செறிதரும்புனன்முழுவதுமகன்பணைசெறிப்பார். சுகூ

பழியினீங்கிஎன்கீட்டியபசும்பொருள்சிறிதுங்
கழிபடாதுநல்வழிப்பயன்படுவதுகடுப்பக்,
கொழிதிரைச்சுவைப்பாலியின்குளிர்புனன்முழுதும்
வழிவுறாதுகால்வழிச்சென்றுவளவயனிறைக்கும். எ0

தண்ணகன்புவிமுழுதுமாங்கடுங்கொலைவுண
ணண்ணன்மார்பகம்பிளப்பவர்போலவிர்மணியின்
வண்ணவன்கடாநிரைநிரையாத்துவன்படையாற்
பண்ணைதோறுநின்றுழுநர்கம்பலைகளேயியங்கும். எக

மருவுசாறுறும்வெருவிமுன்குதித்தெழுவாளை
யிருமருப்பிடையுதைந்துழுமெருமையைத்தடுக்கும்,
பருவராற்குலமொய்யெனப்பாய்ந்தெழுந்தலைக்கு
முருவவாற்புறத்திதைந்துவல்விரைந்தெழவுந்தும். எஉ

பூண்டவன்கொடுந்தானவனைக்கைபோழ்ந்திடலுங்
காண்டகும்புவிதன்னிறங்காட்டியதென்னக்
கீண்டசாறுறுங்கேழ்கிளர்தமனியங்கிடந்து
மாண்டபேரொளிவயங்கிநீள்கனைமிருண்மேயும். எ௩

வேறுசெய்துபின்பொருந்துறும்வினைவலவமைச்சிற்
கூறுசெய்ததன்சேறெலாங்குழப்பியொன்றுக்கிச்
சாறுசெய்துவிச்சவற்றுழுதுழிடர்தவிர்த்து
நாறுசெய்தெனவென்முளையித்துவர்நாளால். எச

அருள்விளங்கலுமுடல்பொருளாதியபுந்துந்
தருமுழவன்புடையெய்துறக்கொடுத்திடுந்தகைபோற்,
பெருகுயாத்தநீர்க்கலங்கல்போய்த்தெளிந்தபின்முழுது
மருவுகால்வழிவடிந்துறக்கவிழ்ப்பர்கண்மள்ளர். எரு

கலிவிருத்தம்.

இளமகப்பசிதனக்கேந்துகொங்கைப்பா
லளவறிந்தூட்டுதாய்மானவாறறி
களமர்கணமுளைபடுனல்செவ்விகண்டுநீள்
வளவயல்பாய்த்திதம்மகவினோம்புவார். எசு

ஓரிடத்துயிர்த்ததன்பறழையோம்புவான்
பாரிடைப்பலவயினுய்க்கும்பூனைபோற்,
காருடற்களமர்கைந்நாறுவாரிப்போய்ச்
சீருடைப்பணைதொறுநடுதல்செய்வரால். எஎ

மரகதத்தளிர்த்தெனவளர்பைங்கூழ்செறி-
தரநிறைகழனியுட்சங்குமூர்வன,
பரவைநீர்மேய்ந்தெழும்படலைக்கொண்டலுஞ்
சரமதிநுழைந்துசெல்காட்சிசாலுமால். எஅ

களமர்கள்களைகளைபருவங்கட்டிலு
மிளமயில்வயல்வளைக்காணவெய்தியாங்
குளமகிழ்கூர்தருமுத்திமாரெலாம்
வளமலியணைதொறும்வந்துமுற்றுவார்.

அம்புயமுற்பலமாம்பலாதியாம்
பைம்புதற்களையறப்பறித்ததம்முருக்,
கொன்புனற்றேன்றலுங்கொய்தபுன்களை
பின்பினுமுளைப்பதென்பெயர்த்தென்பார்சிலர். ௮0

பங்கயமாம்பலுற்பலத்திற்றேனுண்டு
தங்கியவண்டினந்தமதுவாண்முகஞ்
செங்கனிவாய்விழிசேர்ந்துமூசுற
வங்கவைகட்டெட்டிரிந்தகற்றுவார்சிலர். ௮௧

பாயிதழ்த்தாமரைபறித்தல்கொப்புமை
யாயுநவ்ரனமுகஞ்சேர்ந்திறையத்தேவ்
வாய்மடுத்திணையிலதென்றுமாற்றல்போன்,
மீயுயர்கரைப்புறம்வீசுவார்சிலர். ௮௨

இணைவிழிக்கிணையிலையென்பதன்மையி
னணுகிக்காண்ணான்வரைத்துககாட்டல்போற்,
பிணையுநாசியின்னதிர்பிடித்துமோந்துதேன்
றணிவிலுற்பலமுடிசார்த்துவார்சிலர். ௮௩

சைவலங்களைகுவாம்குனியத்தாழ்குழ
லெய்தியெம்மினத்தினையொரேன்மின்னென்பபோற்,
கைமிசைவிழுந்துசிக்குண்ணககானிமிர்த்
தையபூங்குழன்முடித்தணகின்றூர்சிலர். ௮௪

நறுமலர்ப்பங்கயங்களையநாரியர்
கறுவொடுமுள்ளரைக்காம்புபற்றலுங்
தெறுகரங்கிழியப்புண்செய்யுபேதமக்
கிறுதிசெய்வார்க்கெவரிடரிழைத்திடார். ௮௫

அலமருவிழியினமாமெனுமுக
மலர்மிசைப்பாய்தருகயலுமாண்டதன்
குலமெனப்புறவடிகூடுங்கூர்மமு
மிலவிதழ்கடைசியரெளிதிற்கைக்கொள்வார். ௮௬

பறிதரக்களைந்தெறிபாவைமாரையம்
மறிபுனற்குவளைகால்வளைத்துப்பாம்பெனப்
பொறிவெருவுறச்செயும்புடைப்பின்மொய்ம்பிலாச்
சிறியருந்தம்மினுந்தீங்கிழைப்பரே. ௮௭

களிபடுசுரும்புளர்கமலக்கஞ்சமு
நளிபடுகுவளையுநனைகொளாமபலுந்,
தளிரியற்கடைசியர்முழுதுஞ்சாடவோ
ரளிமருவலர்க்கெவரன்புசெய்குவார். ௮௮

புரைதபுபசும்பயிர்ப்பொலிவுங்கண்டெலா
நிரைநிரையிடக்தபுன்னிறத்தபூக்களும்,
வரைதவிழ்முகில்களும்வானவிற்களுக்
தரையிடைப்பயன்பெறச்சார்ந்ததொக்குமால். ௮௯

இருண்முகிலுறழ்பயிரிடையெலாந்தடிந்
தருகெழவயங்கியாங்குலவுழங்கலார்
திருமலர்ப்பதமெல்லப்பெயர்த்துத்தேங்குழற்
கருஞ்சிமிருர்த்தெழக்கரையிலேறுவார். ௪௦

தெறுங்களைகட்டநீர்ச்செறுவிற்பண்டுபோ
னறுங்களம்போருகச்சேக்கைநாடிவந்
துறுங்களியோதிமமுயங்கிவாடுவ
வறுங்களநாடியுண்மறுகுமாந்தர்போல். ௪௧

கொள்ளைபோய்நனிவறங்கூர்ந்தகாலையும்
வள்ளியோர்விருந்தினர்வாடக்காண்பரோ,
கள்ளருமலர்வளமிழந்துங்கார்வயல்
வெள்ளனமகிழமீன்விருந்துநல்குமால். ௪௨

மண்ணகமகளிர்கைவண்மைகணடயாம்
விண்ணகமகளிர்கைமேன்மைகாண்டுமென்
றெண்ணிமேற்சேறலும்மிறன்வுவான்பயிர்
கண்ணிறைகவின்செழித்தோங்குங்காட்சித்தே. ௪௩

யொச்சாக லிப்பா.

நன்றெடுத்தோர்குணமுகவுகிலையமுறைப்படிவிதநிற்
றோன்றுமுளைமுனவிளாததுப்பின்பசந்தமொடர்பினுல்
லான்றசெழுங்கதிர்களுமுன்றுவெள்ளையாயெழுந்து
மான்றுமீரகதமேனிவாய்த்துமடலவிழித்தெழுமால். ௪௪

வரமகளிரங்கைவளமறிபாககுமேறபோந்து
திரையெறிநீர்க்கடலவரைப்பிற்றெரிவையர்கைககிணையொவ்வா
மரபுணர்ந்துமீண்டென்னவாஞேககிககதிர்தழெழுந்த
பரவுபுனற்றடஞ்சாலிபார்நோககியிறைஞ்சுமால் ௪௫

பேதைமையிலாடவர்முன்வளைவின்றிப்பெதுமபைமையின்
மேதகச்சூற்றெனவணங்கிமங்கைமையின்மிகாறு
மாதரைப்போற்பைங்கூழின்மன்னமினதிர்கதிர்தழெழுந்த
வேதமிலாக்கதிர்முதிர்ந்துவரவரக்கீழிறைஞ்சுமால். ௪௬

உருத்திட்பமுறுககாலைத்தலைநிற்இயுற்றதற்பின்
றருக்கற்றுநனிவணங்கிப்பழுத்தகதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்துவேண்டுமாற்பெருமபணிவுமிகச்சிறிய
சுருக்கத்துவேண்டுமுயர்வெனுமொழியின்சுவைதேற்றும். ௪௭

தூமதிவாக்கியகிரணந்துளித்தென்னக்கதிர்ச்சாலி
காமர்மணித்தரளங்கள்கான்றுசெறுத்திடராக்கிப்
பூமலரக்கால்யாத்தபுனன்முழுதும்புறங்கவிழ்த்து
மாமைநீர்புலர்த்தவருமள்ளருளமகிழ்விக்கும். ௪௮

வணங்குகுலைக்கதிர்ச்சாலிசிலையாகவளர்புதழ
புணங்குக்கதிர்கணையாகவொளிர்முளரிக்கரம்பற்றி
யிணங்குபசுங்குரல்கவரவரும்புட்களிரிந்தோட
லுணங்குபுரிந்தெதிர்கண்டோரதிசயிப்பச்செயும்பளைகள். ௪௯

குறையவித்தினைகொண்டுகுடியெலா
நிறையச்சாலிநிரப்புவயூம்பணை,
யிறையளித்தவிருநாழிகொற்கொண்டே
யறமெழலாநிறைவிக்குமம்மலைபோல். கக0

கொடுப்பகொண்டுபெருக்கிக்கொடுத்தலா
லடுத்தவாணிகர்போலுழகன்பணை;
யுடுத்தசோலைகளும்பர்கடவுணீர்
மடுப்பதென்னவளர்ந்தெழுந்தோங்குமால். ககக

கலிநிலைத்துறை.

கொண்டலுக்குமாலிநிகர்ப்பக்குளிர்பாளை
விண்டுமுகைக்கும்பைந்தழைகெங்கும்விளையாட்டு
வண்டலர்கொங்கைக்கிண்டியிளநீர்முழுவர்கா
தண்டமிசைக்கொண்டெய்தியளிக்கும்வளர்தெங்கு. ககஉ

செற்றெயில்வென்றார்தேர்மிசைமேற்போக்கெனமென்பூந்
துற்றபொதும்பர்த்துறையிளினத்தாற்செருவேற்றுப்
பற்றியவாவிநீங்குபுபைந்தேளடைகீறி
யுற்றெழுவாளைபொருதுயிர்விண்டோர்கதிகாட்டும். ககங

போதுகண்மேயநெடுங்கயமேவுபுனிற்றுக்கார்
மேதியையாயிடைவாளைவெகுண்டுவிசும்பேறி
பாதிவெரிந்புறமுட்குழியக்குதிபாய்ந்தாடி
மீதுயர்திண்கரையேறவுகைக்கும்வியப்பிற்றால். ககச

சுவையொளியூறோசைநாற்றமெனைந்தின்றொடர்பற்றிக்
கவர்படுநெஞ்சிற்றிரைதிரைதோறுங்கடைநீர்நாய்
துவளவெழும்பாமுறைமுறைகீழ்நீர்ச்சுழல்காட்சி
யெவருழிறும்பூதுறவுளவேரித்தடமெங்கும். ககரு

கரைத்துறுதண்பூங்காஞ்சிகள்சாகைக்கரமோச்சி
விரைததகரும்பைத்தைவருதோற்றம்விரிதார்வண்
டிரைத்தெழுதிண்டோட்கேள்வரொடுமிளையார்மே
னிரைத்தமர்செய்வான்வேள்சிலைபற்றுநிகழ்விற்றால். ககசா

மேதகுசெவ்வணிதாங்கினர்செல்லுமினன்னாரும்
தீதறவெள்ளணிபூண்டுசெல்சேடியராளோரும்
போதலுமீடலுமாய்ப்பொலிவீதிகளெங்கெங்கும்
காதல்செய்சேரிமடந்தையருள்ளங்கவல்விக்கும். ககஎ

தசும்புறழ்கொங்கையொடும்பெருமான்மகிழ்தண்பாசூர்
விசும்பையுரிஞ்சுமதிற்றிருவல்லம்விரைச்செந்தே
னசும்புதடம்பொழிலேனையவைப்புமனந்தஞ்சூழ்
பசும்பணைமாமருதத்தெழில்யார்பகர்கிற்பாரே. ககஅ

நெய்தல்.

கொச்சகக்கலிப்பா.

அம்மருதவைப்பினையடுத்தகழிகெய்தன்
மம்மர்விடுவாலமுழவுக்குதவுமாற்று
னம்மினமெனப்பொய்ம்மொழிகாடியுரைகுத்தை
சும்மையினைக்கரோருழுந்துறவுகொள்ளும். ககக

கண்டன்மடலேறவலர்தாற்றுகமழ்புன்னை
யுண்டுநறைகாலுமளியொத்துடனிசைக்கும்
வண்டுளரரும்புவிரிமெய்தன்மணமிசையுங்
குண்டுகழிமேய்பறவைநோக்கிமகிழ்கூரும். ௧௨௦

கண்டுமொழியாரவயவத்தெழில்கவர்ந்து
தெண்டிரையளக்கரினொளித்ததுதெளிந்து
கொண்டதுறையோர்கடல்குளிப்பர்துணிசங்கம்
வண்டரளம்வாரிமடவாரெதிர்குவிப்பார். ௧௨௧

எம்முடையுறுப்பெழிலைவவ்வினிர்களென்னாக்
கொம்மைமுலைவம்பணிபரத்தியர்வெகுண்டு
விம்முவளைசேல்பவளம்வெண்டரளமற்று
மம்மபிறர்கொள்ளவிலையாற்றிமகிழ்கூர்வார். ௧௨௨

கண்ணெழில்கவர்ந்தகடன்மீன்களையுணக்கு
முண்ணமிழ்தமன்னமடவார்பறவையோப்பும்
பண்ணிசைமடிப்பவிழைபய்வழுழருக்கன்
விண்ணெழுபகற்பொழுதின்மெல்லெனவொலிக்கும். ௧௨௩

தணந்தவர்களாருயிர்வருத்தவிறல்சாற்றி
மணந்தழுவுதும்பைமலர்சூடியடன்மார
னணங்கமர்செய்காலமெனவோர்ந்துமுரசாழி
யிணங்குறவிராப்பொழுதின்மிக்கொலியெழுப்பும். ௧௨௪

வீழ்ந்தவர்தணத்தலின்விழிப்புனலுகுத்துத்
தாழ்ந்தழுதிரங்குமடமாதர்தமைநோக்கி
யாழ்ந்தகழியாதுமுடனின்றழுவதென்னச்
சூழ்ந்துபுளரற்றுமலர்த்தேத்துளிதுளிக்கும். ௧௨௫

நலம்பயில்பொருட்குமலிவங்கமிசைநண்ணும்
புலம்பர்வருகின்றவழிநோக்கினர்புலம்பி
யிலம்படுமடந்தையர்களின்னுயிர்தளிர்ப்ப
வலம்புகுளிர்பூந்திவலைவீசுமலைவாரி. ௧௨௬

புன்புறாதத்தரும்வியந்துபுகழ்செய்ய
வென்னைபொருபென்னெனவியற்றுநகரொற்றி
நன்பதிமுதற்பலவுடுத்தநளிநெய்த
றன்பெருமையாவரளவிட்டறிதரத்தோர். ௧௨௭

திணைமயக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தொண்டைநன்னாட்டுநானிலத்தைந்திணைவளமுந்தெரித்துக்காட்ட
மருத்தொண்டைவாய்ச்சியர்சூழ்குன்றைநகர்க்குலக்கவியேவல்லானல்லாற்
கருத்தொண்டரேம்போல்வாரெவ்வாறுதெரிந்துரைப்பார்கலந்தார்க்கின்ப
மருத்தொண்டீர்ணிபிலவையொன்றேயொன்றியைந்தனவுமாங்காங்குண்டால்.

வரைப்பிண்டிமலர்தூவிவனிப்பலர்செதிர்சொரிந்தமலருண்மூழ்கி
நிரைக்கும்பூங்கணைதூவிமதனொழ்மான்விழிநெருப்புனிற்றல்காட்டும்
வரைக்குன்றுதுகிற்கொடிபோய்க்குடிக்கைமிசைமரகததோரணம்போற்றுனி
னிரைக்கின்னவாரணமுமெதிர்கடப்பப்பொருநர்நெடுங்கவிறுகாட்டும்.

விண்முட்டிங்குமிவரைத்திகிரிபடிமழவணமுத்தம்வேலைச்சூழன்
மண்முட்டநறும்புன்னையுகுமரும்புக்ததிமயக்கியவற்றுட்சேர்ந்த
தண்முட்டைவிதுவெள்ளிப்பகுத்தறியவல்லாதுதளர்வுகொண்டு
கண்முட்டவளம்புடைத்தவயலன்னந்துயர்கூருங்காட்சித்தோர்பால்.

குறுஞ்சுனையிற்களிவண்டுசுழன்றாடுங்கான்குயில்கள்குரைநீர்ப்புன்னை
தொறும்பொதுளுங்கருங்கொடிதன்குடம்பையிற்போய்க்கருவுயிர்த்துச்சலவைமீண்டு
நறும்பிரசமலர்க்காஞ்சிச்சினையேறியொளியிருந்துநாடிக்கால
முறுந்துணையுமினிதுறையுமுலவாதவளங்காட்டியோங்குமோர்பால். 141

கறிக்கொடியுந்துளாக்கொடியுநெடுவல்லிப்பசுங்கொடியுங்கமழ்தேன்மௌவல்
வெறிக்கொடியுநாற்றிசையுந்தாய்ப்படரவளர்ந்தவிரைக்குராமேற்
கிறிக்கொடியபெருங்காற்றுற்பவுகாலுமசைபால்வைக்கிளர்ச்சிவாளை
மறிக்கொடியுங்கூத்தியர்செய்யிருவிகழைக்கூத்தினியங்குமோர்பால்.

இனையநானிலமுடுத்தவளாகமெலாம்பெருங்குடிகளியல்பினோங்கித்
தினையளவுமுறைபிறழாத்தொண்டைநாட்டணிமுழுதுந்தெரித்துக்கூறக்
கனைதிரைநீர்க்கடலாடைநிலவரைப்பின்யாருளரோகற்பநாட்டுந்
தனைநிகர்பாதலதலத்துமுன்னதேயெனிற்பிறிதுசாற்றுமாறென். 143

ஏங்நாட்டுப்பெருவளமுமெய்வெவர்கோட்பாடுகளுமியம்பவல்ல
பொன்னாட்டுப்பொன்செருக்கும்பன்னக்குப்பணிச்செருக்கும்போக்குமித்த
நன்னாட்டைப்புலவரெலாந்தொண்டைநாடெனவுரைப்பர்ஞாலமங்கை
தன்னாட்போதனையமுகக்கனிவாயாங்காரணத்தின்சார்பாற்போலும். 144

சலதியுடைச்சேயிழைக்குத்தமிழ்நாடேமதிமுகமாத்தமிழ்நாட்டுள்ளு
மலர்புகழ்த்தண்டகநாடேகனிவாயாவதனுள்ளுஞ்சாகிபேதங்
குலவுமாருயிர்களெல்லாந்தத்தமதுமரபொழுக்கங்குன்றாநகைசேரா
மலகமெனத்தேற்றுதலினெவ்வெலாங்காஞ்சிநகர்வண்மைசொல்வாம். 145

திருநாட்டுப்படலம்முற்றிறறு.

ஆகத்திருவிருத்தம் - ௧௪௨

## திருநகரப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கச்சிமாநகரோர்தட்டுங்கடவுளருலகோர்தட்டும்
வைச்சுமுன்னயனார்தூக்கமற்றதுமீதுசெல்ல
நிச்சயமுறுகித்தாழ்ந்துநிலமிசைவிழுமிவ்வூரை
யிச்சகத்தார்களோடுமெண்ணுதன்மடமைப்பாற்றே.

கவினெலாந்திரட்டிக்காஞ்சிக்கடிநகராக்கிக்கஞ்சத்
தவிசினோன்றன்பானாட்பத்தொழில்செயச்சார்ந்தகாலைப்
புவியிடைக்கழிந்தசேடம்பொற்பவேறெடுத்துவிண்ணா
டுவிர்தரச்செய்தான்போலுமன்றிவேறுரைப்பதென்னே. ௨

ஆதிநாண்முக்கணெம்மானயன்றனைப்படைத்துவேத
மோதுவித்தருளினோக்கியுலகெலாம்படையென்றேவும்
போதிதுபார்த்திவ்வாறுபடையெனப்புகன்றவைத்தா
னீதெனவறைகாஞ்சியென்றுரையளவைத்தாமே.

இந்நகர்நோக்குந்தோறுமிமையவர்தமதுநாடு
நன்னரென்றிருந்ததம்மைத்தாங்களேநாணிநைவர்
முன்னொருசமயந்தன்னைப்பொருளெனப்பற்றிநின்றோர்
பின்னர்வான்சைவமெய்தப்பெறினவர்பேசுமாபோல். ௪

நீடுமிந்நகரமன்னிநெடுந்தவமுயல்வோர்வான
நாடர்தம்பதமுங்கஞ்சனாரணன்வலாரிவைப்பும்
பாடிரிகான்றசோறுக்காண்புதிப்பதியின்வன்மை
கோடியிலொருகூறெவ்வாவவையெனக்குறித்தேயன்றே. ௫

புறநகர் - சோலை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுரும்புகாலுழக்கமுகையுடைந்தலர்ந்துதுளித்ததீஞ்சுவைமதுப்பிலிற்று
மரும்பெறற்சோலைமீமிசைக்கருவிமுகிற்குழாமுட்டுவபாட்டளிக்குலை
விரும்புதேனுளியாக்கற்பகநாட்டைவெல்லுவான்வருவதோர்ந்தஞ்சித்
தரும்புகழ்வலாரியூர்தியைச்செலுத்தித்தடுத்திடைமடக்குதன்மானும்.

நறவமூற்றெடுப்பச்சிறகர்வண்டிமிருநளிபொழிலிடும்பைகூர்ந்தழுகு
குறைப்படப்போதிந்தகுயினங்களைவல்லேகுதித்தெழூஉத்துதைத்துதைத்தகற்றி
நிறைபுனற்றடத்துப்பிறழ்தருங்கிழமைமேட்டிளவாளைமீன்றனக்குத்,
துறைதொறுங்கைம்மாறெனக்கனிசெழுந்தேன்சொரிவனநெடுமரப்பொதும்பர்.

வண்டலாட்டயரும்வாண்மருணெடுங்கண்மங்கையர்நெறிசுரிகூந்தற்
கொண்டலைக்காணுந்தொறுந்தொறுமவர்தங்கோமளச்சாயலுக்குடைந்து
தொண்டுபூண்டிடாநின்முடுவதேய்ப்பதோகைமாமயிலடங்குயிற்றும்,
தண்டளிர்துவன்றிப்புதுநறுந்துளிகுந்தைமலர்ச்சாகையம்பொதும்பர்.

வாம்பெருந்திரையதடம்புடையுடுத்தவளமபொழிற்சாகைகடோறும்,
தீம்புனல்குடையுமாதரார்முன்னுட்டெறித்தபட்டாடைபொன்னணிகள்
பூம்புனலுகத்திற்றோன்றலுமிளையோர்புனலரமகளிரென்றஞ்சிக்
கூம்பியகரத்தரந்நலார்நகைப்பக்குலைமிசைநோக்கிவெள்குவரால்.

கொங்கவிழ்பொதும்பாக்கொழுமுகையுடைந்துகுளிர்மதுச்சொரிதலினைந்த
பூங்கயச்சேக்கைமீமிசைமயங்கிளம்பைப்பயமேனிவந்தெழுவ
பொங்குவெம்பாவக்கருமுருட்டிமண்றைபுணரியுட்சிலையுடனமிழ்ந்து
மெங்கள்வாகீசரஞ்செழுத்தருளாலெழுந்துமேல்வயங்குதன்மானும். ௧௦

யானைக்கூடம்.

கலிவிருத்தம்.

முறைமுறைபனைக்கைநீர்முகந்துவாய்மடுஉ
நிறைதடங்குறைதடமாக்குநீண்டவெள்
பிறைமருப்பொருத்தன்மாமதப்பெருக்கினுற்
குறைதடநிறைதடமாக்குங்கொள்கைத்தே. ௧௧

தாமுறையிடந்தரியலர்கட்கீந்தவர்
தாமுறையிடங்களிற்றங்கிளைக்குலங்,
தாமுறப்பரிவருத்தனைசெய்வேழங்க
டாமுறைமுறைதிரிதண்டமெண்ணில.

மழைப்புனறங்கண்மேலூற்றுமாமுகி
லுழைச்செலவெகுண்டிடிதிரிதைப்பதொப்பநின்
புழைக்கையினிறையநீர்முகந்துபோர்மதத்
தழைச்செவிக்கரிகள்விண்டலத்துவீசுவ. கங

கறையடிச்சுவடுறுங்கனகவட்டில்க
ணிறையவாக்கியமதநீரைச்செல்வர்போற்
சிறையளிக்குலமெழலாற்றெவிட்டவுண்டுவாழ்ந்
தறைபெருவளத்தனவாம்பல்வீதியே. கச

கொடையினிற்கீழ்ப்படுங்கொண்டல்யானையுந்
தடைபடச்சிறையிலிட்டாங்குச்சார்கடு
நடையிருமுறச்செவிநான்றவாய்க்களி
றுடையவும்பிணித்தனவளவில்கூடமே. கரு

துரைப்பந்தி.

கரியுமிழ்விலாழியுங்காய்சினக்கடும்
பரியுமிழ்விலாழியும்பாய்ந்துசேறுசெய்
தெருவெலாமந்நலார்சிறடிச்சுவ
டுருகெழுதாமரைதோற்றமொக்குமே. கசா

சுலவுகொய்யுளையடிச்சுவடுதோறுமேற்
கலனையினுக்கமசெம்மணிகதிர்ப்பன
பலசுடர்த்தகழிகள்பரப்பிவைத்தெனக்
குலவுநல்வளத்தனகுந்தவீதியே. கஎ

மல்லலைரமயிலைகளைவானரங்களைப்
புல்லியமுழ்பலகளைப்பொருசரங்களை
வல்லவாபுறகநாடைகண்டவான்கதிப்
பல்லியற்புரவியின்பந்தியாயிரம். கஅ

மதக்கரிதனைமுயலவயங்கொள்காதையைப்
புதுகதவீங்கிருவொளிப்பொலிவைப்புபற்றியிர்த்
தத்திர்ப்பதென்றுளைந்தொளக்கரியவாங்குர
கவுதத்தொகைபற்றுபொற்றேர்கணக்கில. கக

எரிமணிச்சோதியுண்மூழ்கியிர்ததுச்செல்
பரிகளைக்காண்கிலர்பார்த்துச்சூரனுரு
திருவுடையிந்திரஞாலத்தேர்கொலென்
றுருகெழச்செல்லுதேருலப்பில்வீதியே. உ0

வீரரிருக்கை.

நால்வகைநிலையினுற்பயிலுகாமவில்
வேல்வளைபலகைவாள்கற்கும்விஞ்சையர்
கோலவான்விஞ்சையர்குமாங்கணைக்குப
சால்பினேவியத்தகுதலைமைப்பாலரே. உக

கிம்புரிபுரசைகள்கிடுகுகூவிர
மம்பொனிற்கலனைகுப்பாயமாதிய
வெம்படையேனவும்வேறுவேறுசெய்
பம்பியவினைஞர்வாழிடம்பல்லாயிரம்.

நடைநகமுதலியவுலவுநாழிகைப்
புடைநகர்வளமிதுபுகன்றுந்திங்களே
ருடைநகமழைங்கரோதியார்பயி
லிடைநகர்வளமினியியம்பலுற்றதே. ௨௩

## இடைநகர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குடமுலைக்கெதிரென்றேறுதுங்குரும்பையைவெகுண்டுமின்னார்
பொடியிடியுலக்கைமீப்போய்ப்புடைத்தனமீளமுன்ன
முடிமிசையதிரத்தாக்கிச்சிந்துமுப்புடைக்காய்த்தெங்கீங்
கிடரிடர்க்கெதிர்செய்வோரின்வியத்தகவெங்குமோங்கும். ௨௪

கோல்வளைகறங்கக்கொங்கையசைதரக்குலையக்கூந்தன்
மேலணிகலகலென்னவியர்வெழவுயிர்ப்புநீள,
வால்வரிப்புனம்பந்தாடுமாதரார்செயல்காண்டோறுங்
கால்வரிகழலினார்க்குக்காமமீக்கூருமாதோ. ௨௫

தமதுருநிறத்தைவவ்வுந்தருக்கறிந்தொறுப்பார்போலத்
தமனியந்தகர்த்தசுண்ணமொருவர்மேலொருவர்வீசத்
தமனியச்சுண்ணமெங்கும்பரந்தனதவழ்தலாலே
தமனியவுலகந்தன்னையுசிப்பனதடந்தேர்வீதி. ௨௬

எரிமணிசோதிகால்விருள்வரவறியாமாடத்
தரிவையர்கூந்தலூட்டுமகிற்புகைநாகத்தெய்திப்
பெரிதிருள்விளைப்பநோகரும்பெற்றியோர்கட்டுமாறு
மரீஇயினவுலகமென்னேயெனமனமருள்வரம்மா. ௨௭

## அகழி.

மாற்றவள்பூசையாற்றிவரம்பெறுமுறைமைகேளா
வேற்றமார்கங்கையாளுங்கம்பர்பால்வரத்திற்றெய்திச்
சாற்றருங்கச்சிமூதூர்வலங்கொளுந்தகைமைத்தாய
வாற்றல்சாலகழியாழமளக்கவல்லார். ௨௮

நெடுபடுபொதும்பர்சூழநிரைநிரைக்கரத்தாற்செம்பொற்
றடமதில்பொதியப்புல்லுந்தண்கிடங்கிறைவரேவக்
கட்கலைவளையநோக்கிக்கம்பரையிறுகப்புல்லுஞ்
சுடர்மணிக்கங்கைமானுந்துளித்தநீர்தழும்புமானும். ௨௯

திரையெறிதரளம்பாங்கர்த்திரண்டுவாலொளிகள்வீசிக்
குரைபுனல்குளிக்கும்வேழக்குழாத்தைவெண்கயமாச்செய்யக்
கரைமிசைக்காண்போரென்னேயிம்மையேகடவுட்டன்மை
புரைதபத்தருமித்தீர்த்தமென்விறும்பூதுகொள்வார். ௩0

கடம்படுகளிநல்யானைகுண்டகழ்கலக்கிக்கொட்பத்
தடங்கரையேறத்தார்த்துத்தாட்டொடர்பிணித்துப்பாக
ரிடம்படவிருபாலீர்ப்பவிருங்கடலமுதமுண்ணத்
தொடங்குநாட்சிலம்புநட்டுச்சுராசுரர்கடைதன்மான. ௩௧

நவமணிகொழித்துப்பொங்குநளிதிரையகழிகாப்பக்
கவளமாக்கடத்தயானைக்கணஞ்சுலாயுழக்குங்காட்சி,
யுவர்படாப்பௌவமீதென்றுவந்துவந்தெழிலிதெண்ணீர்
சுவறவாய்மடுப்பக்கொட்குந்தோற்றமேயனையதம்மா. ௩௨

உடல்படைத்தியக்கவோர்மிகத்தலுண்டெனக்கொளத்
திடம்வலித்தசான்றதாயுவனர்தாட்செயப்படுந்
தொடர்புடைப்பொறிக்குலஞ்சுழன்றெழும்விழும்பகை
மிடல்கெடத்தெழிக்குமோடுமீளுமின்னநீரவே. ௪௩

இம்மதிற்பொறிக்குலமெதிர்த்துளோர்தமைச்செகுத்
திம்மெனுமுன்வென்றிகொள்ளுமீதுணர்ந்துதெவ்விர்கா
ளம்மவீண்டுறேன்மினென்றுகையெடுத்தசைப்பபோ
லம்மதிற்றலைத்துகிற்கொடிநுடங்குமாலரோ. ௪௪

கலிவிருத்தம்.

வளமகன்றிருநகர்க்கிழத்திமாமைசா
லிளமுலைகிளைப்பக்காமொழினிசேர்த்துபு
தளர்வறநாட்டியதம்பமேயெனக்
கிளர்மதிலிடந்தொறுஞ்செறியுங்கேதனம் ௪௫

நேமிமால்வரைமிசைக்கிளைத்துநீண்டவே
யாமெனக்கொடிமிடையமபொன்மாமதின
மீமிசைக்கோபுரமேலுஞ்சேறலால
யாமினிப்புகல்வதற்குவமையில்லையே. ௪௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மகதநாடென்னக்காஞ்சிவைப்பினுங்கடைஞரெய்தி
யிகலறவளர்க்குமெண்ணெண்கறத்தினுககிடர்செய்யாமைத்
தகையுணங்குமையாள்வைத்ததடைநிகர்மதிற்சீர்முற்றும்
புகரறவியம்பப்புக்காற்புலவர்க்குமுலப்புறுதே. ௪௭

மிடைபுறத்தூர்களெலலாம்விண்ணவர்நகராவங்கட்
புடைநகரயனூராகப்பூமகள்கொழுநன்றன்னூ
ரிடைநகராகமற்றையீசனூருலகமேயா
நடைபிறழாதகீர்த்திபடைத்தவண்ணகரஞ்சொல்வாம். ௪௮

அகநகர் - பார்த்தையர்வீதி.

அளிமதனூலினூற்றுலாடவர்தம்மோடாடிக்
களிமனைக்குள்ளாற்றுங்கள்விளைத்திடுங்கலவியெல்லாந்
தெளிதரமாடந்தோறுஞ்சித்திரந்தன்னிற்காட்டி
யிளையரைமயக்கிககாமமேற்றுவோர்சேரிமல்கும். ௪௯

வரியளிமுரலாவாடாமாலையவிடையாநோக்க,
தரைமிசைத்தோயாத்தாளசித்திரந்தயங்குகாட்சி
வரைவிலாமகளிரின்னோர்மாணலம்வேட்டுவானிற்
சுரர்களுமெய்திச்செவ்விபார்த்துறைதோற்றமொக்கும். ௫௰

பூத்தபினிராறுநாளுங்கிழத்தியர்ப்புணர்ந்துதம்மை
நீத்தனரெனுஞ்சீற்றத்தானின்றவீரொன்பானூ
மேத்துமாடவரைத்தங்களிளமுலைத்துருக்கமேற்றிப
பாத்திருநிதியமெல்லாம்பறித்தனர்கொளளைகொள்வார். ௫௧

கோலத்தினிசையின்யாணர்க்கூத்தினினவிநயத்திற்
சீலத்திற்கலவிச்செய்கைத்திறத்தினிற்பிறவாற்றானு
ஞாலத்துமைந்தர்தம்மைமருட்டிநற்பொருள்கள்வவ்விக்
காலுற்றசாற்றுவேழக்கோதுபோற்கழியநீப்பார்.

அலகினல்லறஞ்சூழ்காஞ்சியமர்பெருஞ்செல்வராயுங்
குலமுறைச்சார்பால்வெக்கோய்க்கோட்பட்டாரிழிஞரேனுஞ்
சிலகொடுப்பனவுங்கொண்டுசேர்ந்துபொய்வஞ்சமெல்லா
நிலைபெறவுடைத்துவைத்தநெஞ்சினராகிவாழ்வார். ௫௩

அலைவிழிக்கணிகைநல்லாராடவர்தமக்குநல்கு
மிலைநிகரெனுமின்பத்திற்கின்பமுஞ்சமமாக்கொண்டு
விலையெனநிதியுங்கோடல்வியப்பிற்றேயேற்றமாக
மலைநிகர்தனங்களீந்தோர்மலைநிகர்தனமுங்கொள்வார். ௫௪

தவமறைக்கிழவன்மாயன்றானுமென்றிவருமிவ்வூர்க்
கவர்மனப்பரத்தைமாதர்கண்வலைப்பட்டேயின்று
மிவறியவல்லரோன்மாலோப்பிரித்தவொன்றிப்பேர்பெற்றுச்
சிவசிவயாவரேயேரிவர்திறத்தகப்படாதார். ௫௫

விற்றிடுமல்குறன்னைமீளவுந்தாதேயாக்கி
மற்றையநாளும்விற்கும்வரைவிலார்வீதியிச்சீர்
கற்றிலாவணிகமாக்களாவரைங்கவினைநோக்கிப்
பற்றுவெண்டரளக்கோவைபத்தியாப்பிரிக்குமன்றே. ௫௬

இருடைவாணிபத்திற்கூட்டதமயெருமிறும்பூதெய்த
வருவமாமின்பந்மன்னையிம்மியினளவுமேரு
வுருவமாம்பொருளுக்கேற்பநிறுத்துவிற்றொழுகவல்ல
விருமனப்பெண்மார்தம்முட்டுருகிவாழிருக்கையிதால். ௫௭

## ஆவணவீதி.

இன்னவிங்குளவோவென்னக்கடாதலுமியம்பியோர்சட்
கன்னவிங்குளவில்லென்றிறுத்தலுமறியாதியாரு
மென்னவுந்தருதிரென்னவிலைகொடுத்தேற்பவீய
மன்னியெப்பொருளுமென்றுநிறையாமாவணமனந்தம். ௫௮

செய்வினையனைத்துந்தன்பாற்சேர்த்துவைத்துயிர்க்குப்பின்னா
ரவ்விறையாணையாற்றுலளித்திடுமாயையேபோற்
கொய்வளம்வருவமுற்றுங்கொண்டுபின்னுயர்மாறப்
பெளவநீருலகுக்கெல்லாமுதவுவபைம்பொன்மாடம். ௫௯

அணங்கனார்பரப்பிவிற்குமணிகளாக்கோங்கந்தாரிற்
சுணங்கினைக்கணியென்றஞ்சிச்சுரும்பினமுருமைநோக்கிப்
பணங்கிளர்பாந்தளல்குற்பாவைமீரென்னைபொற்பூ
மணங்கமழ்கின்றதென்பாராடவர்மருட்சியெய்தி. ௬0

வீழ்பொருளெடுக்கலாற்றுவுறுசனமிடைந்தவீதித்
தாழ்குழன்மடவார்மைந்தர்தங்களுண்முட்டுங்காலைக்
காழ்மணிமுலையுந்தோளுங்கலந்துறவுலகைபொங்கி
வாழ்நருஞ்சிலரேபல்லோர்வாடினைந்தழுங்குவார்கள். ௬௧

## கலிநிலைத்துறை.

நெருங்குபல்சனமுழக்கருக்கூலநீல்விடத்தைக்
கரந்தகம்பர்மேற்றெழித்துறுங்கடல்பெருந்தெருவாய்
சுரந்துவக்துகாற்புறத்திலுஞ்சனமிகத்தொகுவ
பரந்தவீரையுட்புகுந்திடும்பற்பலநதியே. ௬௨

மற்றையவீதி.

அறத்தினைகர்புவனேசக்கரமெனவுன்ற
திறத்தபொன்மதிலேழுடைச்சின்மயக்கோயிற்
புறத்துவான்மிசைப்புலவர்கண்ணுறுபட்டிடாமை
மறைத்தெனக்குயினுரிஞ்சுபூம்பந்தர்சான்மறுகு. ௬௩

மகரப்பொற்குழைப்பிரான்றளிசூழ்மதில்குறடு,
நகரச்சீரெயில்சுற்றுமாளிகைநிரையாருந்,
திகழச்சூழ்தெருவாரிடைவெளியுமாய்ச்சிவன்றேர்ச்
சகடத்தேருடைச்சகடமற்றென்றெனத்தயங்கும். ௬௪

சரிக்குங்குஞ்சரமதப்பெருங்கலுழியுந்தளவைச்
சிரிக்குமூரலார்களைந்ததார்நறவமுஞ்சேறாய்
விரிக்கும்வீதியிலடிவழுக்காவகைவெயிலைப்
புரிக்குஞ்செம்மணிபதித்துமேனடப்பராம்புரியோர். ௬௫

ஞெள்ளற்பாங்கரினறியநீர்வண்டலாட்டயரு
முள்ளற்சேறுகள்புலர்த்துவானிடையிடையகழ்ந்து
பள்ளத்தாற்சிறுகால்பலவகுத்தெனப்பிறங்கும்,
வள்ளற்காவலர்செலுத்துதேர்ச்சகடுபோம்வழியே. ௬௬

செய்யதிண்புயத்தெழிலினைக்கவர்ந்தமைதெரிந்து
வெய்யமாந்தர்கள்வெதும்புறப்பன்முறைதாக்க,
வையவோவெனவலறுவபோலணிமுழவ
மையவேலையுஞ்சமழ்ப்புறவயின்றொறுங்கறங்கும். ௬௭

விலாழிநீருமொண்சந்தனவிரைச்செழுஞ்சேறுங்,
குலாயவீதிகால்வழுக்குமென்றஞ்சுபுகோண
னிலாமுடித்தவர்திருவிழாத்தொழவந்துநெருங்கும்
வலாரியாதியோரடிபடியுருவகைநடப்பார். ௬௮

புரசைத்திண்களிறுலாத்தரும்பொலஞ்சுடர்மறுகிற்
பரசப்போதருமன்னவர்பணிமுடிநெருக்கி,
னரசப்பன்மணிதெறித்துவீழ்ந்திமைப்பனவிவியா
முரசப்பேரொலியதிர்ப்பினிலுக்கமூதுடுப்போல். ௬௯

அங்கண்வீதியினணிநலங்காணுமாதரத்தி
னெங்கணுதனுந்திருவிழாவென்பதோர்பெயரான்
மங்கையாளொடுமகாரொடும்வானவர்பழிச்சத்
திங்கடோறெழுந்தருளுமேவுதன்வளஞ்சிறிதோ. ௭௦

மாளிகை.

பாலியேமுதல்பலநதித்திவலைபாய்ந்தழகின்
பாலவாயமாளிகையடித்தலத்தினைப்பாராப்
பாலவெண்சுதைமாடமேற்சிகரமும்பனிவிண்
பாலியாற்றுநீர்த்திவலைகள்போர்ப்புவான்படரும். ௭௧

பன்னிறப்பரிகருங்கரிதொழிலமைபஃறே
ரின்னகீழ்நிலைவாயிலினியங்குதனோக்கி,
மன்னுமேனிலைவாயில்வெண்கரிபசுமான்றே
ரன்னவேனவுந்தன்னிடத்தியங்கவானணவும். ௭௨

உங்கண்மாதரார்முகத்தெழினோக்கியோர்வடிவங்
கங்கணன்குளான்படைத்ததிலவயவங்காண்பா
னங்கணன்முன்னுறவகுப்புழியஞ்சனக்குலையப்
பங்கமுற்றதென்றெழித்ததைமதியெனப்பகர்வார். ௮௩

இவ்வரைப்பினிலிரவியுமதியுமம்வழியே
செவ்வனேகுறுதொதுங்குவவிவர்முகச்சீர்க்கும்
பவ்வநேரகலல்குற்கும்வடிவொடுபிணைத்தே
ரோவ்வுறுமைகண்டிட்கொளுமுட்கினலன்றே. ௮௪

தங்கள்வாண்முகமதியெனச்சார்தரும்பணிக்குத்
துங்கமாடமேன்மின்னனார்வேற்றுமைதோற்றத்
திங்கண்மாட்டுறிகுறியொன்றுசெய்துவைத்தனரா
லங்கண்மாநிலங்களங்கமென்றிடப்படுமதுவே. ௮௫

மறைந்திடாமறுப்பயின்மதிமுகத்தெழில்பெறாது
குறைந்துபார்க்குமங்கரிவைமார்கோணுதல்கடுப்ப
நிறைந்துபார்க்குமீண்டவர்முகநிகர்ப்பமற்றிவ்வா
றறைந்ததிங்கடோறலமருமக்கரைப்பசுப்போல். ௮௬

கதிர்செய்மாடமேற்புலவிதீர்கலவியின்முடிவின்
வெதிர்செய்தோளியர்கொண்கர்தம்மருமமேல்வதனம்
பதியவைத்தனர்துயிலுவரற்றம்பார்த்திருந்து
புதுமுகத்தெழிலுடுபதிவெளவுறுப்பொருட்டே. ௮௭

தேங்குமூடலின்மாதரார்பறித்தெறிசெங்கே
ழோங்குபன்மணியவரடிவருந்தினநதுளோய
வாங்குநாடொறும்பைதுறுத்தவிர்வனகொடிதாந்
தாங்கள்செய்வினைதங்களுக்கேபகையாமே. ௮௮

விருந்துநாடொறுமிடையறுதெதிருமேதகவா
லருந்திறற்சிறுபுதல்வர்சூழ்ந்தணுகிடுந்திறத்தான்
முருந்துமூரலார்க்காயிடைகடுமுகர்பான்மூண்ட
மருந்திலூடலுஞ்சிறுவரையன்றிமேவாதால். ௮௯

மேனிலத்துவந்துலாயிடுங்கடவுண்மெல்லியலார்
தாழ்நிலத்துறுங்கூவல்கணோக்கிநந்தமைப்போற்
கீழ்நிலத்தவர்தாமுமிங்கெய்தினர்கெழீஇப்போ
மூழ்நிலைத்தபல்பிலங்கொலாமுவையெனவியப்பார். ௯௦

கலிவிருத்தம்.

காலமன்றிக்கனிவுறுமாதனைக்
கோலவான்புகையேற்றுதல்போன்மினார்
சாலவெம்முலைச்சாந்தம்புலர்த்திடு
நீலதூமநிமிர்ந்தெழுமெங்கணும். ௯௧

கொன்னும்வார்குழற்கூட்டுங்குறூஉப்புகை
யந்நலாரைப்பொதிவதவர்தமைத்
தன்னிமீங்கியமின்னெனத்தண்முகி
லுன்னிவந்துவளைந்திடலொக்குமே. ௯௨

### அந்தணரிருக்கை.

பூசுரப்பெயரினிருமொழிப்பொருட்குமுரிமைபூண்டுறுநிலைக்கேற்பக்
காசினிவரைப்பினுடெடாறுழ்வழாதுகமழ்சுவையடிசிலானதிதி
பூசையும்வேள்வியவியினுற்கடவுட்பூசையுமொருங்குசெய்கடப்பா
டாசறவாற்றும்பார்ப்பனவாகையறிஞர்வாழிடம்பலவ்வண. ௧௦௩

### அரசரிருக்கை.

தகைபெறுவலியாற்றெம்முனைமுருக்கிக்காவற்சாகாடுகைத்தெங்குந்
திகிரியொன்றுருட்டிமுறையுளிசெங்கோல்செலுத்துநர்கள்வர்மற்றுயிர்கள்
பகைவர்தாந்தம்மாலிவ்வயினெய்தும்பயந்தடுத்துலகெலாம்புரக்கு
மிகுபுகழ்படைத்தவரசியல்வாழ்க்கைவீரர்வாழிடம்பலவ்வண. ௧௦௪

### வணிகரிருக்கை.

மேதகுவிரிஞ்சனரும்பெறற்குறங்கைவிழைதகையாமெனப்படைத்தோ
ரேதிலர்பொருளுந்தம்மபோற்பேணிவாணிபமீட்டுநர்வடாது
மாதிரத்தலைவன்புறங்கொடுத்திரியும்வளத்தினர்மறைநெறியொழுக்க
மாதரித்துயர்ந்தவிழுக்குடிவணிகரமர்ந்துவாழிடம்பலவவண. ௧௦௫

### வேளாளரிருக்கை.

முருகுயிர்த்தலர்ந்தமலரவன்றனதுமுகமுதலுறுப்பெலாந்தாங்கிச்
சரணமென்றுரைக்குமுறுப்பினிற்றோன்றிச்சாற்றுமம்முகமுதலுறுப்பின்
வருமொருமூவர்தங்களையுழவின்வண்மையானிலைபெறத்தாங்கு
மூரியவேளாண்மைபூண்டபேர்தமகவேயுடையவரிடம்பலவவண. ௧௦௬

### அனுலோமர்முதலியோரிருக்கை.

நால்வகைவருணத்துயர்குடிப்பிறந்தநலவரிருக்கையைச்சூழ்வ,
சால்புறுபவரிலுயர்ந்தவரிழிந்தோர்தங்களுட்புரீஇமணந்தளித்த
பால்படுமேனைச்சாதிபேதத்தோர்பலர்களுந்தத்தமநெறியின்
சிலராய்த்துவன்றிமரபுளியொழுகுந்திருமலிபலவகைக்குடியே. ௧௦௭

### கழகம்.

வளரிலைத்தருப்பைநுனியெனக்கூர்த்தமதியினர்தொன்றுதொட்டுடைய
பளிக்றுகேள்விப்பயிற்சியர்மேற்கோணமுதற்பகாமூன்றினுந்தெருட்டி,
யிளையருக்குணர்த்துமிலக்கணநெறியோரிருபுலமையர்தம்முட்
களவிகலிகந்துகுழாய்குழாமாகிக்கலைதெரிகழகமும்பலவால். ௧௦௮

### சைவமடம்.

காமனைமுனிந்துநெடுஞ்சடைதரித்துகவின்றகல்லாடைமேற்புனைந்தி
யாமெலாம்வழுத்துந்துறவியென்றிருந்துமொருத்திதனிளமுலைச்சுவடு
தோமுறக்கொண்டானெனச்சிறையிடல்போற்சுடர்மனக்குகையுளேகம்பத்
தோமொழிப்பொருளையடக்கியானந்தமுறுநர்வாழிடம்பலவுளவால்.

### திருக்கோயில்.

இருண்மலந்துமிக்குஞ்சிவாகமமுறையினீரிருபாதமுமுணட்டித்
தருள்பெறுமாதிசைவர்களாதியவாந்தரசைவருளோர்
மருவிவாழ்மாடமாளிகைப்பத்திமருங்குடுத்துயர்வனப்பினதாற்
றெருடருமுனுகிசைவர்வீற்றிருக்குந்திவ்வியகாஞ்சிப்புரிசையேயம்ம. ௧௧௦

## திருமதில்.

### கலிவிருத்தம்.

விண்ணுறிவுறுநிமிர்விறடக்குவா
னண்ணலானையினிமிலூர்தியாண்டுநீறு
யெண்ணிலவுருவுகொண்டிருத்தநீரதே,
பண்ணமைமதின்மிசையிடபப்பந்தியே. ககக

## திருக்கோபுரம்.

ஒன்பதுதோள்களுமுலறுவிலைகுவா
னொன்பதுநாடமுங்கூழ்ற்செய்தென
வொன்பதுமணிகளினியன்றவொண்மைசா
லொன்பதுநிலைதழீஇயோங்குங்கோபுரம்.

கார்முகிலுடுக்கையாக்கதிரின்வாளவன்
மார்பணிமணியதாவட்டயாமதி
சீர்நுதற்பூதியாச்செலவக்கோபுரம்
பார்புகழ்புருடனிலோங்கும்பான்மைத்தே. ககஉ

நச்சியேகம்பரைத்தொழுதுநாடொறுங்
கச்சியில்வாழ்பவரிறுதிக்காலையி
லச்சிவலோகத்தையணுகவைத்ததோர்
பொச்சமிலேணியும்போலுங்கோபுரம். ககங

பரிதியினிழல்செயக்கதிர்க்கும்பன்மணித்
திருவியல்கோபுரச்செல்வவாய்தலின்
முரசுகாலந்தொறுமுழங்குஞ்செவ்வியென்
றருகுறுவமரரையழைத்தன்மானவே.

## விடைக்கொடி.

மடுத்தவைம்பாசமூவரணமைந்தனும்
றடுத்தருள்கோயிலிற்றம்பிரானொடி
ரெடுத்தபூங்கொடிமிசையிடபம்வான்றிசை
யடுத்ததோரிடபத்தோடளவளாவுமே. ககரு

## விமானம்.

தங்குலத்திறைவிசெய்பூசைச்சால்பினை,
யங்கணன்மகிழ்வொடுங்காணுமாசையி
னெங்குளவரைகளுமீண்டினவெனப்
பொங்கெழிற்சிகரங்கள்பொலிந்துதோன்றுமால். ககஎ

## மண்டபம்.

கன்மநோய்குடைபவர்கடப்பச்செய்திடும்
பன்மலர்துவன்றியதீர்த்தப்பாங்கரிற்
பொன்மலர்மண்டபம்பொலிந்துதோன்றுவ
தென்மணிப்பேழையைத்திறந்ததொடிபோல். ககஅ

### வேள்விச்சாலை.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சேந்தபொற்குண்டத்தோங்குஞ்சிகைத்தழன்மிசையேகம்ப
வேந்தையாவாகித்தேத்தும்புகைபொதிவேள்விச்சாலை
யேய்ந்தசீர்த்தகரவித்தைமுறைப்படியிதயகஞ்சப்
பூந்தழற்சிகைமேலீசற்போற்றுமாயவனையொக்கும். கககூ

### மாமூலத்தோருவர்.

கோழரைகாம்பாச்சாகைவட்டமேற்குடையாப்பொற்பின்
வாழியவொருமாமீதுவளநிழல்கவிப்பவாங்க
ணாழ்முறையுயிர்கட்கெல்லாமைந்தொழிலோம்பியெம்மா
ணும்புனலுலகமேத்தவீாசுவீற்றிருக்குமன்னே. கஉ0

பற்பலதேயமெல்லாம்பாங்குடைத்தொண்டைநாடு
பற்பலசங்கநாப்பட்படர்வலம்புரியாமங்கட்
பற்பலநகரமெல்லாம்வட்டமாப்படைத்தகாஞ்சி
பற்பலவலம்புரிக்குட்சலஞ்சலப்பணிலமாமால். கஉக

அத்திருக்காஞ்சிவைப்பினலகிலாத்தலங்கடம்முட்
பத்திசேர்மாடக்கம்பம்பாஞ்சசன்னியமாமங்க
வுத்தமச்சுரிமுகத்துள்விலைவரம்புணராச்சாதி
முத்தமேயொருமாமூலத்திருந்தருணமுக்கண்மூர்த்தி. கஉஉ

பன்மணிவெயில்களகான்றுபடரிருள்சீப்பவட்டப்
பொன்மதில்சூழ்ந்தநாப்பட்சதாசிவப்புத்தேள்வைகுந்
தன்மையாற்கச்சிமூதூர்தரைமிசையுயிர்கள்செய்த
கன்மமோர்ந்தளிப்பான்வந்தகதிர்செய்மண்டிலமேயாமால். கஉங

விலக்கிலாவறநூல்சொன்னமுனிவரும்விதிவிலக்கா
மிலக்கியமிதன்பாற்கண்டேயிலக்கணம்விதித்தார்போலு
மலக்கணீத்தறமெண்ணான்குமம்பையேவளர்க்குநீராற்
கலக்கமிலறங்கட்கெல்லாமாகரங்காஞ்சியன்றே. கஉச

உவரிசூழுலகவைப்பினுரையமைகேள்விசான்ற
கவிகளென்றுரைப்போர்தம்முட்காஞ்சியைப்புகழாரில்லை
யவரெலாம்புகழ்ந்துமின்னுமுலப்புறுவதன்சீர்மூற்றுஞ்
சிவநிறைகல்விசாலாச்சிறியனோகிளக்கவல்லேன். கஉரு

இத்திருக்காஞ்சிவைப்பிற்பலதளியிடத்துமோவி
யத்தகுகம்பவாணரவரவர்க்கருளிச்செய்த
வுத்தமக்காதையெல்லாஞ்சூதனன்றுரைத்தவாறே
முத்தமிழறிஞர்தேறமொழிபெயர்த்துரைப்பேனுய்ந்தேன். கஉசா

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உகஅ.

# பதிகப்படலம்.

## முதற்காண்டவுட்டோகுதி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவபரஞ்சுடரைக்காண்டகுமேதுச்செய்தவர்வினவியவாறுந் (1)
தவலருஞ்சிறப்பினந்தியெம்பெருமான்சனற்குமாரனுக்குவெஞ்சாப
நவையறுத்தருளிச்செவியறிவுறுத்தநலமெலாஞ்சூதமாமுனிவ
னவர்தமக்கியம்பப்பிஞ்ஞகனுமையாட்கருளியவுண்மைசெப்பியதும். (3)

கன்னியாழ்க்கிழவன்வரம்பெறுகாரைக்காட்டினிற்பூசனையுஞற்றி
மின்னவிர்மணிப்பூட்சிவியெனுமரசன்வான்விடுபேறெய்தியவாறும். (4)
பொன்னுடைப்புத்தேள்புண்ணியகோடிப்புனிதனையருச்சனையாற்றி
யின்னலேவறுகைக்குமன்னனைலோபிலகையுண்டுமீட்டுதவியவாறும். (5)

அக்குமாரயோன்வலம்புரிக்கவிழ்த்துறையடியிணைவணங்குபுதனது
கைத்தலத்திழந்ததெம்மருள்சிலைப்பாங்கதிர்வினைதனைப்பெறுமாறு (6)
மெய்த்தபேரன்பின்மலைமிசைக்கடவுள்வேள்வியிசெய்துயர்சிவாக்கான
துத்தமனருளான்மாயனேடுலகையாண்டுமீட்டுதவியவாறும். (7)

கருகிருள்விடத்தையிறையவன்பருகக்காட்டியவறக்கடைதணப்ப (8)
விருமறைவிதியாற்கடவுளர்மணிகண்டேசனைபோற்றியவாறு,
மருளுறுசெருக்கிற்பொய்யுரைகிளந்தவல்வினைசுழிதரவியாதன்
பொருவருஞ்சாரந்தாசயப்பெருவரைப்பிற்பூசனையியற்றியவாறும். (9)

வீட்டினைவிழைந்தேழ்முனிவரும்பூசைவேறுவேறியற்றியவாறுங் (10)
கோட்டமில்கொள்கைப்பராசரமுனிவன்றிருமுதுகுன்றிடைத்தொழுதோன் (11)
னாட்டியவரக்கன்குலந்தொலைவுறயாச்செறத்தம்விளக்கொளிமாயோ
னூட்டமூன்றுடையநாதனைப்பரவிநிதம்புதேர்பெற்றவாறும். (12)

ஈண்டியபுகழ்முதநீச்சரம்பரசிமின்றவன்றையினைவிடுவித்
தாண்டகைக்கழுமலஞ்சுபலசெயிற்றுப்பணிகளையகலத்தெறுமாறு (13)
நீண்டவனுணராதிருவடிபோற்றிவெளியருப்பணிகளுமெழும்புன்
பூண்டுகொண்டருளப்பெற்றதோதகவாற்புள்ளினையினவியவாறும். (14)

இருதிநாளிருவர்காயமேற்றுங்கிவியாழமுமியமதும்வழுக்க
மறுவறுகாயாரோகணவரைப்பினெம்பிரான்பன்னியவாறு (15)
மறுதணிவேணிமுந்தணிக்கூத்தரடியிணையருச்சனைசெய்து
தெறுபுலனவிதசித்தரொண்ணரியசித்திபெற்றயர்ந்திடுமாறும். (16)

மாதவன்பரசிப்பிருகுவன்சாபவல்பயந்தப்பெறுமாறு. (17)
மேதகுமொருசார்முனிவரர்மதங்கன்வெள்கரிபோற்றியவாறு (18)
மேதமில்வெள்ளிமொழிப்படித்ததீசியிட்டசித்தீசனைத்தொழுது
கோதறுவயிரயாக்கைபெற்றோங்கிக்குபன்றனைப்புறங்கண்டவாறும்.

அந்தணன்கச்சபாலயத்திறைஞ்சிப்படைத்திடுமாற்றல்பெற்றதுவும்
பைந்துழாய்க்கூமமாயிடைப்பரசிப்பாதகந்தவிர்ந்துய்ந்தவாறு (19)
மைந்துறுமாண்டுக்கன்னிமாமுனிவன்வழுத்திவாளரம்பையரைவர்
சந்தன்றிளைக்குமிளமுலைபோகந்தரைமிசைநுகர்ந்துவாழ்ந்ததுவும்.

அங்கியங்கடவுளேத்திவிண்புலத்தாரவிப்பொறைமதுகைபெற்றதுவும்
பங்கமின்றிறைஞ்சிச்சவுனகமுனிவன்வீட்டினைத்தலைப்படும்பரிசு
மங்கருவெப்புவிழியவற்செகுத்தசுரகரம்வானவர்வழுத்திப் (21)
புங்கவர்பெருமான்சுக்கிலம்பருகுவெப்புநோய்போக்கியவாறும்.

அகனுறப்பரசிமார்க்கண்டிமுதலோர்சிறப்பினைக்கடந்ததும்மயன்மா
லிகலுறுசெருக்கின்வருவினைதணப்பிலிங்கமங்கருச்சித்தவாறுஞ்
சகமெலாழிறுத்தமுக்கணெம்பெருமான்றன்குவிராட்டகாசத்தின்
முகிணிறப்புத்தேள்பூசனையுஞற்றித்துகிர்நிறம்பெற்றிமுறையும்.

மாண்டகுகாமக்கண்ணியைவணங்கிமலர்மகள்சாபமாற்றியதும்,
பாண்டவர்முதலோர்தொழுதுநல்வரங்கள்பரித்ததும்வணங்கியீசான
வாண்டகையாசைக்கிறைமையெய்தியதுமச்சுதன்மச்சமாய்ப்போற்றி
வேண்டலர்ச்செகுத்துவேதநூல்கொணர்ந்துவேதியர்தமக்களித்ததுவும்.

மீயுயர்குறளோனவுணனைச்சிறையிறபுகுத்துமீண்டிறைஞ்சியவாறு,
மாயவன்பரவிக்கடல்விடந்தாக்கும்வெப்புநோய்மாறநின்றதுவு
நாயகியுருவிற்கவுசிகைதோன்றிநாதனைப்பூசித்தவாறுந்,
தூய்மாகாளப்பாப்பாசிறைஞ்சித்தொல்லைவீடுறப்பெறுமாறும். உ௩

அண்ணலாராணைமறுத்தவெந்தீமையறுத்திடக்குமரகோட்டத்தி
னண்ணிவீற்றிருந்தசெய்யிலைநெடுவேலனையவன்பூசித்தவாறு,
மண்ணெலாமபரவுமார்க்கண்டமுனிபால்வஞ்சகங்கருதியமாயோன்
கண்ணுதற்பிரானையத்தலத்திறைஞ்சியவ்வினைகழுவியவாறும். உ௪

சாத்தனார்போற்றியுரிமைபெற்றதுவுமங்கனைத்தையல்போற்றியதுந்,
தீத்தொழிலரக்கர்சசெகுத்துவந்திராமன்பணிந்ததுந்தேவர்கோன்வலவ
னேத்தியவாறுநாரணன்பரவிப்பாப்புருவிரித்ததுமயானக்
கூத்தனார்முழுதும்பழவிடையொடுங்கிப்பண்டனைக்கொலைசெய்தவாறும்.

ஓவியவுலகைத்தோற்றுவானெங்கோனொப்பறையமாமூலத்தின்முனைத்துத்
தாவறுசிறப்பினிலளிதைப்பிராட்டிதனைப்பயந்தாங்கவள்விழியின் [ந்தற்
மூவரைப்படைத்துச்செய்தொழிலவருக்குதுச்செவியறிவுறுத்துமொய்கூ
றேவியுங்கடவுண்மூவரும்பரவச்சிறப்பொடுவீற்றிருந்ததுவும். உசு

திருவிளையாட்டான்மந்தரத்துமையாள்சிவபிரான்விழியிணைபுதைப்பக்
கருகிருட்பிழம்பினுலகெலாமூழ்கிக்கடப்பருங்கவலையுற்றதுவும்,
வருவினைதணப்பப்பூசனைபுரிவானமழவிடைச்செய்கையும்மகன்று
பெருநகர்க்காஞ்சிக்கிறையவன்விடுப்பப்பிராட்டியங்கெய்தியவாறும்.

மெய்த்தநல்லறங்கள்வளர்த்திடுமாறும்விண்டுவீச்சரமுகத்தீச,
மத்தளமாதவீச்சரம்வணங்கிப்போந்துமாந்தருவடிமுனைத்த
சத்தநிவின்பத்தனிமுதற்பொருளைத்தவத்திருஞ்கண்டுகொண்டிறைஞ்சிப
புத்தமிழ்தனையாள்விதியுளிவழாமைப்பூசனையுஞற்றியவாறும். உஅ

கருணைமீப்பொங்குந்திருவிளையாட்டாலுமைத்துறங்கம்பைநீர்ப்பெருக்கைக்
குருமணிக்குழையாள்கண்டுளம்பதைத்துக்குழகனைத்தழுவியவாறுந்,
திருமுலைச்சுவடும்வால்வளைத்தழும்புஞ்சிவபிரான்பொலிவுறப்பூண்டு
மருமலர்க்குழலாள்காணமுன்னின்றுவரம்பலவருளியவாறும். உகூ

இமவரைப்பிராட்டிகவுரமாநிறம்பெற்றெம்பிரான்வதுவைவேட்டதுவு
முமையவள்காளவுரியினிலுயிர்த்தவொளியிழையவுணரைமாட்டி
விமலநாயகன்றனருள்பெறுமாறுமேதகுவிம்பிதத்திறமு
மமைவரவொழுகுமொழுக்கமுமெய்ந்நோனருட்சிவபுண்ணியப்பேறும்.

இரண்டாங்காண்டவுட்டொகுதி.

மற்றுமோராற்றாற்கிளந்திடுந்திறத்தின்மால்வரைக்கயிலையினுமையாள்
கற்றையஞ்சடையார்விழியிணைபுதைத்துக்காஞ்சியிற்பூசனையாற்றும்
பெற்றியுமந்தார்வேதியுங்கரிகால்வளவனுங்கோள்வுபெருமையும்வினைநோய்
செற்றிடுந்தீர்த்தமுதலியமூன்றின்சிறப்புமீண்டியம்பிடப்படுமால். ௯

பதிகப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௨௯

# புராணவரலாற்றுப்படலம்.

## நைமிசாரணியச்சிறப்பு.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மிடல்கெழுதவத்தோர்வேள்விசெய்வினைக்குவேண்டியவேண்டியாங்குதவ
கடவுளானபயிலுங்காட்சியாலவியூண்கைக்கொளத்துதைந்தவானவராற்
றொடர்வுறுமோமப்புகைதழீஇச்சுரும்பருளர்தராப்பன்மலர்ப்பொழில
லடர்தருங்காமர்கற்பகவனமேயாயதுநைமிசாரணியம்.

தாதவிழ்கடுக்கைநறுந்தொடைமிலைச்சுந்தம்பிரானடியலதுணரா
மாதவரியற்றுமகவினைசிதைப்பவருகருந்தயித்தியர்வர்தங்
காதுவெஞ்சாபவலிக்குடைந்தோடுங்காட்சியேகடுக்குமம்மகத்தி
மீதுயர்ந்தண்டச்சுவர்த்தலமுரிஞ்சவிசும்பெழூஉநறும்புகைப்படலை.

கருந்திரையளக்கரகடுடைத்தெழுந்துகனையிருள்பருகுவெங்கதிரோ
னிருந்தவர்வேள்விக்களத்தவிப்பாகமேற்பவந்தணுகுவோன்மான
மருந்தெனக்கிளைத்துவாணுறநிவந்தவளம்பொழிற்கிளைகளைக்காத்தா
திருந்தறவொதுககிக்குனிந்துபுக்குலாவிச்சேணிடைப்போய்நிமிர்ந்துறுமால்.

சிறகர்வண்டிமிரும்வட்டவாய்க்கமலச்செழுமபொகுட்டுரசவீற்றிருக்கு
மறைமுதல்கிழவன்முனிவரர்வேண்டவளைதுதனல்விடுத்தநன்னேமி
பிறவுறுதின்றுமாயிடையுறைவதெனக்கவின்காட்டிடுந்தேத்தி
பறைநரச்செறிந்துநறவமுற்றெறிக்குமருப்பெறன்மதுவிரலவலயம்.

விரும்பியவிடபந்தாங்குதோற்றத்தால்விளங்கெரியுருவினிற்பூத்த
வருமபணிகொண்டகாட்சியாற்பெரியவரையவணிருந்தவராக
விரும்புவியுய்யக்கோடலால்யாருமேதகும்பெற்றியாலுலவாப்
பெரும்பெயர்க்கயிலைக்கடவுளேபோலும்பிறங்கொளிநைமிசக்கானம்.

இசைமுகனுந்தியுறவளைநேமிசேர்ந்திடுங்கொள்கையாலென்று
மசைவில்வானவர்க்குப்புரையவியமிழ்தமளித்தலாற்பூமணம்பெறலால்
வசைதபுகாட்சிக்கருநிறக்கருவிமழைமுகின்மேனிவந்தழகா
யிசைதலாற்சார்ங்கமேந்தியோனிகர்க்குமிணையிலாநைமிசக்காடு.

குலவுநால்வாய்கண்மருவலாலுகலங்கொண்டமுந்நூல்வயங்குதலாற்
சலமறவேதமொழிதலால்வனத்துத்தாமரையிருக்கைமேவுதலாற்
பலபொதிச்சுடிகைப்பையராச்சுழந்தபரவைசூழ்புடவியேமுதலா
மலர்தலையுலகமுழுதுமீன்றளித்தலானைமிசப்புறவம்.

மகம்.

எச்சமொன்றேயிருமையினுமேலாமிமையோர்க்குவப்பாவ
தெச்சமொன்றேமகத்திறையாமெம்மான்விழையப்படுவதுவு
மெச்சமொன்றேநனிசாலச்சிறந்தபொருளுமிருங்கரும
வெச்சமிகர்வேறில்லையெனப்பரத்துவாசன்மியம்பினனால். ௧௭

மகவு.

மகவேமேலாங்கதியாக்குமகவானுலகந்தனைவெல்லு
மகவின்மகவான்முடிவின்மையெய்துமகவின்மக்வளித்த
மகவான்மேலைப்பதமுறுந்தென்புலத்தார்கடனைமாற்றுவது
மகவானன்றியில்லையெனவகுத்தான்றெரித்துக்கண்ணுவனே. ௧௮

துறவு.

துறவேயறங்களெவற்றினுக்கும்பெரிதாம்விடையூர்தோன்றலுக்குந்
துறவேயுவகைவரச்செய்யுந்துறவேயயன்மாலுலகளிக்குந்
துறவேயீசனிடத்திருத்துமெவருமேலாச்சொல்லுவதுந்
துறவேயாமென்றெழுந்துநின்றுசொற்றான்சைவத்துருவாசன். ௧௯

சூதபௌராணிகர்வரவு.

வேறு.

இன்னவாறுபன்முனிவருமியம்பினர்பிணங்குழியிவரிட்டு
நன்னர்வான்றவங்கொணர்ந்தெனவாயிடைநணுகினன்விடையூரு
மென்னையாளுடையிறையடிதைவருமிடையறுத்தியானத்தான்
பன்னுமெய்த்தவப்பராசரன்பயந்தருள்பண்ணவன்மாணாக்கன். ௨0

விளங்குநீற்றொளிகதிர்செயவிங்கிருளக்கமாலிகைவீசும்
வளங்கனிந்தபொன்மேனியான்புண்ணியம்வடிவெடுத்தெனவந்தான்
றுளங்குறுதுயர்புராணமுற்றளந்தறிதொலலையோனமரர்க்காக்
களங்கறுத்தவனுண்மைதேர்ந்துயிர்க்கெலாங்கருணைகூர்ந்தருள்சூதன்.

முனிவர்வினா.

புக்கசூதனைமுனிவரர்யாவரும்பொங்கியபெருங்காதன்
மிக்கவோகையினெதிர்கொடுபூசனைவிதியுளிவழாதாற்றித்
தக்கவாதனத்திருத்தினர்வினவுவார்தறுகணைம்புலவாழ்க்கை
யொக்கநீப்பயாமுன்னரேயருந்தவமுஞற்றினமதனாலே. ௨௨

வென்றிவெள்விடைப்பிரானடிகாணபதேவீடுபேற்றினுக்கேது
வென்றுதேறினங்காண்பதற்குபாயமற்றிதுவெனத்தெளிகில்லே
மொன்றலாதனவேறுவேறுரைத்தனமுயங்கினம்பிணக்குற்றே
மன்றகண்டிலேந்துணிவுமெய்யுணர்வினன்மலக்குறும்புறச்செற்றோய்.

எங்கள்பாக்கியப்பயனெனநீயிவணெய்திடப்பெற்றேம்யாம்
கொங்குயிர்த்ததார்த்துளவனேவியாதனக்குலமுனியருளாலே
பங்கணூலவறுபுராணமுமுணர்ந்தனையறமுதல்பொருணான்கிற்
பொங்குசீர்த்தியோய்நீயறியாததுபுவனமூன்றினுமில்லை. ௨௪

ஆதலாற்பலநெறியினுந்துணிந்தவாறான்றிருவடிகாண்டற்
கேதுவெங்களுக்கருளுதியென்றுநீயேகலையுயர்வானிற்
பாதவம்பொரப்பெரியவர்காட்சியும்பயன்படாதொழியாதாற்
சூதமாதவவென்றலுமிகக்களிதுளும்பியோதுவன்சூதன். ௨௫

குரவுமாதவியுமிளைமந்தாரங்குருந்துபாடலம்பாலைமுந்திரிகை
மருதுபோதிபிடாவுமையூமைவஞ்சிகாஞ்சிகுங்குமநமையியாடுவா
ண்ணரைதளாவுதிசெருந்திசேவெகினமகில்பலாச்சந்திலலுமாவில்லம்
வரைதமாலமாதளேகணியுதிங்கம்வகுளமின்னனநெருங்கினவோங்கும். (6)

அன்றினர்புரமழவெழநகைத்தவண்ணல்சேவடிக்கன்புறுவியல்பிற்
றுன்றுமெய்த்தவயோகியர்க்கெல்லாந்தூயநற்றவச்சாலையுமாகித்
தென்றலூர்தரப்பூமணங்கஞலத்தெளிபுனற்சுனையளவிலகவின்று
பொன்றிடாக்கடவுளர்முதலோர்க்குப்போகபூமியுமாயதப்பொருப்பு. (7)

அங்கண்வாழ்தருமயன்மனைக்கிழத்தியங்கோப்பணின்றருந்தவஞ்செயல்போற்
கொங்குலாந்துவர்ப்பங்கயத்திரைதேர்குறிப்பினேதிமுசைவற்விருக்கும்,
பொங்குவெண்டிரைத்தீர்த்தத்தின்மாடேபுரங்கடந்தவர்வரமவட்குதவித்
தங்குகாட்சியினறுமலர்பொதுளித்ததைகடுக்கைபொன்சொரிவனவுடைத்தால். (8)

மீதுசந்திரசூரியர்கிரணம்விரவலாமையினெருபொழுதலர்ந்தோர்
போதுகூம்புமச்செய்கையாங்கின்றிப்புரிமுறக்குடைசெனமோரியல்பிற்
கோதில்பன்மணிக்கதிரொளிவருடக்குளிர்ந்தலர்ந்திரண்டவத்தையுங்கடந்து
மாதர்வெண்பிறைக்கண்ணியரடிசேர்மாந்தரொத்துளவளஞ்சுனைமலர்கள்.(

வென்றவைம்புலவாழ்க்கையர்வடிவின்விளங்குபூதியும்விரைகமழ்கடாத்த
குன்றுபோலுயர்களிற்றுநீள்கோட்டுக்குலவுமுத்தமும்வேயுகுமணியுந்
துன்றிவானிலாக்கற்றைகால்வெண்மைதூயபொன்மையைவிழுங்கியதேயோ,
வன்றியவ்வரைப்பொன்மையேவெண்மைதனைவிழுங்கியதோவதுவறியேம்.

இனையசீர்பெறுசதசிருங்கத்தினெண்ணிலாப்பெருவளத்தனவாகி
நனைமலர்ப்பொழில்சணபகஞ்சரளநரந்தந்தெங்குகோங்கரம்பைகளுடுத்து
வனசநீள்சுனைமல்கியபிரமவனமொன்றுள்ளதுமற்றதனைப்பட்
டனைநிகர்ப்பதுநான்மறைக்கிழவன்றனமாயதுபிரமமாநகரம். கக

சனற்குமாரமுனிவர்யோகஞ்செய்திருத்தல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொற்பமரினையநகர்க்கொருபாங்கர்ப்பொங்கொளிமடங்கலேறென்று
பற்பலமடங்கல்சூழவீற்றிருக்கும்பரிசெனத்தவர்நீற்றொளியி
னற்புதக்கோலத்தறிஞர்சூழ்ந்தேத்தவருட்சனற்குமாரமாமுனிவ [னாள்.
னெற்பணிப்பெருமான்சரணுளத்திருத்தியோகுசெய்திருக்குநாளொரு

வைகறையெழுந்துகங்கைநீராடிவானவர்முனிவர்தென்புலத்தார்
செய்கடனுவப்பத்தெண்புனலிறைத்துநியாசமுந்தியானமுமாற்றிப்
பொய்களைவிரசையங்கியின்விதியாற்பூத்தநீறங்கையினெடுத்து
நைகரந்தீர்ந்தவன்பொடுபியாசநடைபெறுதியானமுன்னுகை.
அடைவுறப்பஞ்சப்பிரமமந்திரததாலிங்கியென்றற்றொடக்கத்தான்
முடிவில்சாபாலிஙணுக்களேழாற்றான்மீவிரண்டதர்வமந்திரத்தால்
வடிவுறுமிடக்கைவைத்துமுன்முக்கான்மந்திரித்தறவிறைக்குழைத்துக்
கழுகெழுசென்னிமுதலிடிகாறும்பிரமமோரைந்தையுங்கழறி. கஉ

நிறையவுத்தூளஞ்செய்துபின்றிரியம்பகங்களாணிகழ்த்துமஞ்செழுத்தா
லுறவிறைசமித்துப்பின்னருந்திரியாயுடந்திரியம்பகமனுவான்
முறையினஞ்செழுத்தாற்புண்டரமூன்றுமுச்சுடர்முக்குணமும்மை
மறைகண்மூவுலகுமூன்றுமுத்தீவடிவெனச்சிந்தையிற்கண்டு. கங

அதுசனற்குமாரன்யோகினில்வைத்தகருத்தினுலறிந்திலனுகிக் [டு
கதுமெனவிருக்கையெழாமைகண்டெம்மான்கருணைகூர்ந்துமையவளோ
விதுவெனிச்சிலத்தெழ்மையேயுளத்தின்விழைதரவிருத்திமற்றெம்பாற்
பொதுவறவொருக்குமனத்தினனென்னப்புரிவொடுங்கோயில்புக்கனனல்.

சனற்குமாரமுனிவர்சாபமேற்றல்.

நந்தியெம்பெருமானேக்கினன்வெகுண்டுநலமிலாவொட்டகமேபோ
லந்திலெம்பிரானையிகழ்ந்திருந்தனலவ்வுருவாகெனச்சபிப்பச்
சிந்தைகூர்முனியுமொட்டகமாகிச்செழுநிலத்துழிதருகாலே
முந்தைஞான்றியற்றுநல்வினைப்பயனுன்முன்னினன்கச்சிமாநகரம். ௨௭

பிரமன்கச்சபேசரைப்போற்றல்.

ஆயிடைக்கச்சபேசனுமிறைவனமர்ந்தருள்கோயிலின்மாடே
காயுமைம்பொறியினுலகெலாம்படைக்குங்கருத்தினன்மலரணைப்புத்தே
ணியமாதவத்தினினிதுவீற்றிருக்குஞ்சூழலினணுகலோடுந்
தீயபாவத்தினெட்டகவடிவாஞ்சிறுவனைக்கண்டனன்றாதை. ௨அ

ஈரவடிநெடுங்காற்றிரையெழுதோல்வாய்ப்பழியுடனெளிந்துநீள்கழுத்தி
யாவருமிழிக்குமொட்டகயாக்கையிளவலைநோக்கிநின்றந்தோ [ன்
சேவுயர்கொடியானடித்தொழும்பாற்றுந்திருவருட்குரியனுமிவனுக்
காவஹவென்செய்கோவென்மகற்கிதுவந்தடுத்தவெவ்வாறெனவெண்ணி.

யோகினைக்கூடிமுன்னிகழ்வனைத்துமுணர்ந்தனனவ்வினைதவிர்ப்பா
னுகமமுறையாற்கச்சபேசன்பாலடைந்துபூசனைசெய்தேத்தெடுப்பான்
மாகர்போற்றிசைக்குமிளம்பிறைமோலிவள்ளலேயுலகளித்தழிக்கு
மேகனேயாமையுருவொழித்தரியையாண்டநின்னிணையடிபோற்றி. ௩௦

காசிகேதாரம்புட்கரங்குருக்கேத்திரங்கடினைமிசங்களினு
மோசைகொள்காஞ்சியதிகமென்றுரைப்பதுரைப்பிரமாணமொன்றன்று
லீசனேநீயுமுமையுமேயல்லாலிந்நகர்படைத்தவரில்லை
தேசுறயானேகண்ணுறக்கண்டுதெளிந்ததாமெந்தவூழியினும். ௩௧

புரியுநின்னருளாலுயர்ந்தவரனேகர்புரவுபூண்டெட்டுருவெடுத்தோய்
வரிவிழியுமையாண்மணந்தபேரின்பவடிவமேயிடும்பைநோயறுக்குங்
கருணைவாரிதியேயிரங்கிடாயெமக்குக்களைகணீயன்றிவேறிலையென்
றிருகணீர்சொரியநெக்குநெக்குருகியேத்தினுைத்தழுதபேற. ௩௨

கச்சபேசர்காட்சி.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இசைமாமுகன்வாழ்த்தொலியுஞ்செவியிற்சென்றேறலுமாருனுந்துதலான்
மிசைவானவர்பூதகணம்புடையின்மிடையப்பெருமானெதிர்நின்றருளி
வசைதீர்தரவேட்டவரந்தருகேமைந்தாவுரைசெய்கெனவாய்மலர
விசைபாடினனேனைகதுளும்பிடநின்றிதுகூறுதலுற்றனன்வேதியனே.

நின்றொண்டுவெழாதவனென்புதல்வனீடுந்தவமுற்றுசனற்குமரன்
முன்றிண்சதகோட்டிடைநின்னிருதாண்முன்னிச்சிவயோகுமுயன்றுதவத்
தொன்றும்பொழுதாயிடைநீவருதலுணர்ந்தானலனிட்டக்கருத்தறலா
லன்மன்கனைநிசபித்தனனுமொட்டகவாக்கையனயினனே. ௩௩

கண்ணிணைக்கடங்காத்திருவுருவழகைக்கண்டொறும்பண்டுதான்கொண்ட
பெண்ணுருவெடுப்பக்கருதிநீண்முகுந்தன்பிரிவிலாதொருபுடையமர்ந்த
பண்ணிசைமொழியாள்வனப்புமெம்பெருமான்பார்வையுநோக்கிமற்றெமக்கிங்
கெண்ணியவெண்ணமுற்றுறாதினியென்றெழுந்தவக்கருத்தினைமீட்ப. ௭

ஆடலைத்தொடங்குந்தொறுந்திருமேனியழகினைக்கண்களான்மடுத்து
வாடருமயல்பூண்டவச்சிராயச்சத்தியின்வழிப்பதம்பெயர்தரநிலையை
நாடகத்தலைவர்க்கெதிரடியேங்களடிப்பதற்கஞ்சுதுமென்னுஞ்
சேடுமைவனப்பினுருப்பசிமுதலோரவிநயச்செய்கையான்மறைப்ப. ௮

மல்லலங்கமலத்திருவடிநோவமறுவலுமறுவலுமோடிக்
கலலொளிபரப்புமணிமுடியழுத்துங்கடவுளர்தொகையினைவிலக்கு
நலமெய்ப்பணியைநான்பெறநல்கியவரவர்க்கருள்செய்துபோக்கி
யெல்லைதீர்கருணைமலையினுலக்கத்திருந்தனனென்னையாளுடையான். ௯

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருந்தருள்காலைவெண்டோழிமம்பொதியடுக்கலீன்ற
முருந்திளமுறுவற்செவ்வாய்முகிழ்முலைக்கடவுட்கற்பிற்
றிருந்திழையுலகமீன்றசெல்விமுத்தேவுங்காணப்
பெருந்தகையடிகள்போற்றியீதுவொன்றுபேசலுற்றாள். ௧௦

உமாதேவியார்வினா.

கடப்பமெம்வீடுபேறுன்றிருவடிக்காட்சிதன்னாற்
கிடைப்பதாமறையீறாய்ந்துகிளர்த்துவந்தியானநிட்டை
நடைப்படிமுதிர்ந்துவாய்ந்தநல்லவர்க்கன்றியுன்ற
னடித்துணைகாண்டலேனோர்க்கரிதரிதாகுமம்மா. ௧௧

ஏனையோர்விலங்குபுட்களினங்குனைக்கண்டுமுத்தி
மேனிலைத்துறுவதெவ்வாறென்றனள்வினவலோடு
மூனுடையுயிர்கள்யாவுமுய்யுமாகருணைகூர்ந்து
மானமர்கரத்துப்புத்தேள்வாய்மலர்ந்தருளுமன்னே. ௧௨

சிவபெருமான்விடை.

அரிபரந்தகன்றவுண்கணலர்முலையணங்குகேள்யாம்
பரவெளிப்பரப்பின்வைகும்பண்பினேமுலகமெங்கும்
விரவியேநிறைந்துநிற்பேம்விளங்குமெந்நாலாம்பாதந்
தரைமுதலுலகாமூன்றுபாதம்வான்றலத்துமேவும். ௧௩

ஆவகைவயங்குநம்மையாவருமறியமாட்டா
ரோவருமபெருமைசான்றவுத்தமத்தலங்கடம்மி
னேவருங்காணவாழ்வேமென்றலுமுவகைபொங்கி
யாவையத்தலங்களென்றாட்கெம்பிரானருளிச்செய்யும். ௧௪

திருச்சேதுவாலவாயுச்சிராப்பள்ளிதிருவழுவூர்திருவையாறு,
தருச்சூழிடைமருதூர்யாமென்றுநடம்புரியச்சியாத்தில்லை,
கருச்சாடுமுதுகுன்றமருணகிரிதிருவிரிஞ்சைகவினோத்தூர்,
மருச்சூழுங்குழலுமையேயின்னுமியாமகிழ்ந்துறையும்வளஞ்சூழ்காஞ்சி
ஆலவனங்காளத்திதிருச்சயிலஞ்சித்தவடமுடியார்சைவக்
கோலநிறைவிருபாக்கந்திரியம்பகந்திருக்கோகன்னமின்பஞ்
சாலவுதவுஞ்சயினிமாகாளங்காசிகேதாரமென்றுஞ்
ஞாலவுருப்பிரயாகைமயமலைமந்தரஞ்சீர்க்கயிலையாதி. ௧௫

திசைமுகனுலகுஞ்சிக்கப்படுதலினாற்காஞ்சியெனத்திசையோய்மல்கு
மிசையுடையதிதுபிரமலோகமென்றுமிதனாற்பேரெய்துமாற்று
ணசைவிலாதிங்குறைவோரெல்லார்க்கும்வீடுதவுமவ்வூர்நாப்பண்
வசையின்றித்திப்பியமாய்ப்புண்டரிகம்போலெமக்குவயங்குங்கோயில்.

அங்கதனிற்சோதிலிங்கவடிவுகியாமென்றுமமர்வேமிவ்வூ[ரு
றிங்கிரண்டாம்றைவிளம்புஞ்சந்தோசாம்றையெம்மையோளிவானென்
துங்கநகர்தனைப்பிரமபுரமென்னுமிறுதிம்றைசுவர்க்கமென்னும்
பங்கமறுதயித்திரியஞ்சோதிசூழ்சுவர்க்கமென்பகராநிற்கும். ௨௮

அப்பிரமபுரங்காஞ்சிநகரல்லால்வேறில்லையாகுமென்றே
செப்புமபரிடமெலாஞ்சிவர்கமங்களொடுமுழக்குஞ்செல்வமிந்த
வைப்பினைச்சேயிடையாயினுமாயிடையாயினுமிருந்துவணங்கிற்கண்ணி
லெப்பெரும்பாவமுநீங்கிவீடெய்துமுனகருணையியம்பினேமால். ௨௯

என்றிறைவனுலகுயயவிறைவுமலைப்பெருமாட்டிக்கியம்பும்வாய்மை
யன்றுவினவியசனற்குமாரனுக்குத்திருநந்தியறைந்தானன்னோன்
வென்றபொறிவாதராயணற்குரைப்பவவனெனக்குவிளம்பலசெய்தான்
குன்றனையபெருந்தவத்தீர்சிவனைக்காண்பதற்கேதுவிதுவேகொண்மின். ௩௰

பரவருமந்தணமாகுமிக்காதைமெய்யன்பிற்படிப்போர்கேட்போர்
கரிசுறுநோய்நீங்கிநெடுநாட்புவியினமக்களொடுங்களித்துவாழ்ந்து
வீரசுணாயமறுமையினும்பெரும்போகமினிதுண்டுமொழுமுத்தி
விரவுவரென்றுளங்கொள்ளச்சூதமுனிமுனிவர்க்குவிளம்பினனால். ௩௧

தலவிசேடப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௪௪.

## திருநெறிக்காரைக்காட்டுப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மெய்த்தவர்யாவருமங்கதுகேட்டுவிழித்துணைநீர்வாரக்
கைத்தலமுச்சிமுகிழ்த்துமயிர்ப்புளகங்கண்மலிந்தயர்வாரீ
முத்திபெற்றுயர்காரணமின்றுதொகுத்துமொழிந்தனைநீ
யதலமேன்மையனைத்தும்விரித்தருளென்றலுமச்சூதன். ௧

சூத்திரமெண்ணறுதீர்த்தநிறைந்துளகாமுறுபலதானம்
பொச்சமிலபோகமும்வீடுமளிப்பனபோக்கருமேன்மையவா
மச்சமறுத்துவியாதனெனக்கருள்செய்தமுறைப்படியே
யிச்சையினோதுவலந்தணிர்கேண்மினெனச்சொலலுற்றனனால். ௨

இந்நகரிற்புகல்சத்தியமாவிரதப்பெயரிற்குணபாற்
றன்னிகர்மெய்த்தலமொன்றுளதங்கமர்சத்தியவிரதீச
ரென்னையுடைப்பெருமாட்டியுமோரிருமைந்தருமுடன்மேவ
மன்னியிருத்தலினத்தலமேன்மையையாவர்வகுக்கவலார். ௩

சத்தியசத்தியர்சத்தியசோதகர்சத்தியசங்கற்பர்
சத்தியகாமரிருத்தலினப்பதிசத்தியவிரதமதாஞ்
சத்தியநன்னெறியார்க்கும்விரைந்தருள்செய்துறுதானமதிற்
சத்தியமாவிரதக்கடமொன்றுளதக்கடநீராட. ௪

புதனமர்காளிஞிர்க்கடனுதிபொருந்தமுடித்தங்க
ஞிதமுறுசத்தியமாவிரதீசரையேத்திவணங்குவர்தாங்
கீதவினைதீர்ந்தருளுண்மையுணர்ந்துகலப்பர்கண்முத்தியினை,
மதமுறுகாமமயக்கமனைத்துமறுத்துயர்முனிவர்காள். ௬

மனைவியர்மக்கணிலங்கலைசெல்வமுமற்றெலைவேண்டிடினு
மனையவைமுற்றுமளித்துயர்வீடுமளிக்கிடுமத்தீர்த்த
மினையதட்டும்பதியிந்திரதீர்த்தமுமிந்திரபுராமமெனப்
புனைபெயரும்பெறுமப்பெயரெய்தியகாரணமும்பகல்வேன். ௭

இந்திரனுதிர்க்கை.

முதுமலராளிதன்மேதகுகற்பமவராகமதிறுமாறு
முதுமனுவந்தரநாட்சிவியென்றொருவாசவன்முன்னுளனால்,
விதுவினையொப்புனரமபையராகியமென்குமுதங்களிடைப்,
பொதுவறுதானவமாக்கடலுக்குவடாமெரிகனல்போல்வான். ௮

கடவுளர்சேனைப்பங்கயபானுகற்சிறையரிவயிரப்
படையவனோர்நாட்கடவுளவைககட்பாசிறைமெதிர்பொருகோட்
படவரவல்குற்சசிபுடைமேவப்பன்மணியரியணைமேல்
வடிவமடங்கன்மேலோர்மடங்கல்போன்மொவைகினனுல். ௯

இருபுடைவெண்கவரித்தொகைதுளாமிசைக்குடையெழில்செய்ய
விருதுகண்மாகதர்சூதர்முழக்கவியன்மணிமாநிதியைத்
தருவொடுதேனுவிழிக்கடைநோக்கினைநோக்குபுகலைசிறப்ப
வருகுறுகின்னரர்யாழ்மிசைதந்தசெவியாரவிருந்தயர. ௰

மணங்கமழ்தோளணிகற்பகமாலைதுளித்தமதுப்புனல்பாய்ந்
துணங்கருமின்பவிழிப்புனலொப்பவுறைத்துவிழிச்செல்லா
மணங்குபுரிந்திடல்கண்டுபுலர்த்துநர்போலவிர்சாந்தாற்றி
நுணங்கிடைமங்கையரோவறவெங்கணுநொய்திலசைத்தனுக. ௧௧

அரம்பையுருப்பசிமேனகைமுதலியவரிமதர்விழிமடவார்
நிரம்பியகாமகலங்கனியவிநயநெறிமுறைகரமசையப்
பரம்புமிடற்றிசைவிம்மிடவிழியிணைபுடைபெயர்பயில்விறனும்
வரம்பெறுமற்புதமின்னவிர்கொடியெனமகிழ்நடமெதிர்புரிய. ௧௨

மருத்துவர்வானவர்கின்னரர்சித்தர்வசுக்கண்முருத்துக்க
ளுருத்திரர்சாத்தியர்கந்தருவத்தருடுக்கணவக்கோள்க
டிருக்கிளர்மெய்த்தவர்யோகிகள்கையிணைசென்னிமிசைக்குவியா
நெருக்கினுளெய்தியிறைஞ்சிமருங்குறநிரல்படநிற்புவரோ.

கணங்கொடயித்தியர்யாவரும்வந்துகடைத்தலைவாய்தலின்மாட்
டுணங்குபுசெவ்விகிடைத்திலர்நிற்பவொழிந்தவர்தங்குறைதீர்த்
தணங்கருமின்பவெள்ளத்திலழுந்தியளப்பருசெல்வத்தா
னிணங்கலர்கோன்ரியின்னணமேவுழியெண்ணினவிவையெல்லாம். ௧௩

இந்திரனரசியலைவெறுத்தல்.

இருவினையொப்புவாய்ந்தப்ருவம்வந்தெய்தலாலே
மருவருந்துறக்கவைப்பினரசியல்வாழ்க்கைதன்னை
யருவருத்துவர்த்துக்காவற்சிறையிடையகப்பட்டோரின்
வெருவரும்பதைக்குமஞ்சும்வேறிவைகருத்துட்கொள்வான். ௧௪

அழியுமிவ்விடயவாழ்விற்களித்திருக்கின்றதாகெட்டேன்,
பழிபவக்கடலிற்காலப்பாந்தள்வாய்க்கிடக்குநானேன்
வழிமுறையறியாமாயவல்லிருட்படுகேர்ச்சேற்று
ளிழியுமூர்ப்பன்றியேபோலுழந்தவென்னறிவுநன்றால். ௧௫

அருவினையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குங்காலங்
கருவுறுமவையுங்காலவயத்தவாங்காலந்தான்மற்
றொருபொருள்வயத்ததன்றாலுங்கியோன்கற்பத்தீரேழ்
பொருவிலிந்திரர்களும்மாய்வர்பொன்றுவர்மனுக்கடாமும். ௧௬

ஓதுழிக்கற்பம்வேதற்கொருதினமந்நாண்முப்ப
தாதலோர்மதியாந்திங்களீராறிரண்டாயினாண்டா
மேதமில்வருடநூறேயிருவகைப்பரார்த்தமாகப்
போதரும்போதிலன்னான்பொன்றுவன்மன்றமாதோ. ௧௭

அம்மலர்க்கிழவன்காலமரிக்கொருதினமன்னானு
மம்முறைதிங்கள்கூடியாண்டுநூறெய்திற்பொன்று
மம்மவோசீசீயிந்தவனித்தியவாழ்வுவேண்டே
னம்மையில்வீடுபேற்றிற்குபாயமேயறிதல்வேண்டும். ௧௮

எண்ணருந்தவந்தானங்கள்பட்டினியெச்சந்தானே
புண்ணியநன்னீராடப்போதலோமுத்திக்கேது
நண்ணுமிவ்வனைத்துந்தேறநமக்கெலாங்குருவாம்பொற்பே
ரண்ணலைவினவுதுமென்னத்துணிந்தனனமரர்கோமான். ௧௯

அவையகத்துள்ளார்க்கெல்லாம்விடையளித்தெழுந்துபோந்து
நவையறவிரைவினந்தப்புரத்தினைநணுகியங்கட்
புவிபுகழ்குரவற்கூவிப்போற்றிநின்றிதனைவிள்வான்
சிவியெனத்திசைபோங்கீர்த்தித்தேவர்கட்கிறைவன்மன்னோ. ௨௦

இந்திரன்தேவகுருவிடம்முறைகூறல்.

இவ்வரசியற்கைதன்னிலினியெனக்காசையில்லை
யவ்விதிமுகுந்தனேனோர்வாழ்க்கையுமவாவுகில்லேன்
மெய்வகையுணர்ந்துமுத்திமேவுதற்குபாயமொன்று
செவ்வனேர்ந்துரைத்தியென்னத்தேசிகன்றேர்ந்துசொல்வான். ௨௧

இந்திரனுக்குதேவகுருவுபதேசித்தல்.

நன்றுநீவினவுமுத்திக்குற்றவம்வேள்விதானங்
கன்றுபட்டினிவேறென்றாற்காண்பரிதாகுமைந்தா
துன்றியமாயவாழ்க்கைத்தொடக்கறுத்துய்யக்கொள்வா
னொன்றுமெம்பெருமானுள்ளானவன்றிறமியம்பக்கேட்டி.

கலிவிருத்தம்.

குறைவிலாமுந்நலக்குணத்தனைதவி
னிறைமலமனாதியினீங்கிநிற்றலி
னறைகுவர்சிவனெனவறிவின்மேலவ
ரிறையவன்பெருமையையாவர்கூறுவார். ௨௨

மேலெனப்படுவனவெவைக்குமேலவன்,
மாலெனப்படுவனவெவையுமாற்றுவா
[illegible]லெனப்படுவனவெவையாவுமன்றவன்
வேலெனப்படும்விழிபுரகமேவினான். ௨௩

பங்கயன்றன்னைமுன்படைத்துமான்முதல்
புங்கவர்தம்மைப்பின்னுதவும்பொற்பின
னங்கவனிலனெனிலகிலலோகமும்
பொங்கியவல்லிருள்பொதிந்ததீரவே. உ௬

புகலிரவிலதுளதெனும்பகுப்பிலா
வகலருமிருள்பொதியனாதிகாலையி
லுகலரும்பரசிவனொருவனேயுளன்
மிகுமுணர்வவனிடைவெளிப்பட்டோங்குமால். உ௭

எங்குளயாவையுமிவன்வயத்தவா
மெங்கணுமிவனொருவயத்தினெய்திடா
னெங்கணும்விழிமுகமெங்குங்கால்கர
மெங்கணுந்திருவுருவிவனுகமென்பவே. உ௮

அரியயனமரர்களசுரர்யோகிக
ளிருமாறுவேதவேதாந்தும்யாருமிப்
பெரியவனடியிணைகாணும்பெட்பினு
நெறிகிலர்மாறுகொண்டின்னுந்தேடுவார். உ௯

அவனவளதுவெனுமவைதொறுன்றுயிச்
சிவனலான்முத்தியிற்சேர்த்துவாரிலை
துவளருமிம்முறைசுருதிகூறுமா
லிவனடிவழிபடின்முத்தியெய்துவாய். ௩௰

பன்னுவதெவன்பலபரிந்துநெஞ்சினு
மன்னியர்தமையொழித்தரனையேத்துதி
யின்னதேவீட்டினுக்கேதுவாமெனும்
பொன்னுரைமனகொடுபுகலுவான்சிவி. ௩௧

குரவனேயயனரிகுரவனேசிவன்,
குரவனேதந்தைதாய்குரவனேயெலாய்,
குரவனேயென்றுநூலகூறுமுண்மையைக்
குரவனேயென்னிடையின்றுகாட்டினய். ௩௨

உன்பெருங்கருணையாலுறுதிபெற்றுளே
னின்பொடுமெய்விடத்தெவ்விதிப்படி
பொன்பொதிசடையனைப்போற்றுமாறிது
வன்பொடுமடியனேற்கருளுகென்றலும். ௩௩

கடலுடைவரைப்பினிற்காஞ்சிமாநக
ரிடனுடைக்குணக்கினிலெய்தினரெலாம்
விடலருஞ்சத்தியவிரததானத்தின்
முடிவில்சத்தியவிரதீசன்முன்பரோ.

மேற்றிசைச்சத்தியவிரததீர்த்தமொன்
ஞற்றவுமேன்மைபெற்றுடையதாவிடைப்
போற்றுறும்புசுபதிவிரதம்பூண்டிசைவ
னாற்றெழக்கூறுடைத்ததுகமாடியே, ௩௪

விதியுளிமுடித்துநித்தியநைமித்திகம்
புதியநீறுடலெலாம்பொதிந்துபுண்டர
மதிநுதல்விளங்கிடக்கமாமணி
நிதியெனப்பூண்டுகலெலாமுழக்கநீடியே. ௩௫

தெள்ளொளிப்பளிங்கெனச்சிறந்தசெவ்விசால்
வெள்ளொளிச்சத்தியவிரதநாதனை
யுள்ளகக்கமலத்தின்வழிபட்டுண்மையா
னள்ளலர்க்கடந்துவழுத்தினன்றுவர்ப்ப. ௩௬

என்றலுமிந்திரனிறைஞ்சியென்கொலோ
வென்றிகொள்சத்தியவிரதங்கேள்வியாற்
றென்றுளதொடர்புபோற்சுழலுமென்மனஞ்
சென்றுபற்றியதெனக்குரவன்செப்புவான். ௩௭

உள்ளதுகூறினேயுமையாயிடை
யள்ளிலைக்குலிசநீயணைந்துபுந்திநாள்
வெள்ளநீர்ச்சத்தியவிரதமூழ்கியின்
டெள்ளரும்வினைகளைகர்கதிறைமையெய்தினை. ௩௮

ஒருபொழுதாடினரும்பர்கோனிட
மிருபொழுதயனிடமென்னுமுப்பொழு
தரியிடநாற்பொழுதாயின்முத்தியே
மருவுவர்யாரதன்வண்மைகூறுவார். ௩௯

புந்திநாளைமுழுகுநர்புகுவர்முத்தியி
னந்தநாண்மூழ்கலிஞ்ஞாரசநீயுமிப்
பந்தமில்வீடுறப்பாலையாயினை
மந்தணமிதுமெனக்கேட்டவாசவன் ௪௦

இப்பெருந்தீர்த்தநீராடிறைஞான்றனு
மிப்புதவாரநாளதிகமாயதென்
செப்புதியென்றலுந்தேசிகப்பிரா
னொப்பறுகருணையினுரைத்தன்மேயினோ ௪௧

சத்தியவிரதர்புதனுக்குவரமருளுதல்.

கொச்சகக்கலிப்பா.

மதிக்கடவுடாரைதனைமணந்தீன்றமகவான
புதக்கடவுள்கிரகநிலைபெறுவதற்குப்புரிதாதை
கதித்துரைத்தமொழியாறேகருதருஞ்சத்தியவிரதப்
பதிக்கணணைந்துயர்தீர்த்தம்படிந்தாடித்தவஞ்செய்தான். ௪௨

மேதகுசத்தியவிரதப்பெருமானும்வெள்விடைமேன்
மாதுமையாளுடனேறிவயக்கரிமாமுகனிளையோன்
காதல்புரியருணந்திகணநாதர்புடைசூழ
வாதரமோடெழுந்தருளித்திருக்காட்சியளித்தருள. ௪௩

கண்டுபரவசனாகிக்கைதொழுதுபெருங்காதன்
மண்டியெழமயிர்சிலிர்ப்பமனத்தடங்காப்பேருவகை
கொண்டுநிலமுறவீழ்ந்துகுழைந்துருகிவிழிதுளிப்பத்
தொண்டனேனுய்ந்தேனென்றெழுந்தாடித்துதிசெய்வான். ௪௪

நெடியோனுமலரவனுநேடரியதிருவடிக
ளடியேனுக்கெளிவந்தவருட்கருணைத்திறம்போற்றி
யொடியாதவெண்குணங்களுடையானேயெனையுடையாய்
கடியார்சத்தியவிரதநாயகநின்கழல்போற்றி. ௪௰

என்றேத்தியெந்தையெனையான்கிரகவிலைபெறவுங்
குன்றாதநின்றிருவடிக்கீழ்மெய்யன்புகூர்ந்திடவு
மின்றாதியென்வாசத்தீர்த்தம்படிந்துபொரு
வென்றோர்முன்னையினிரட்டிப்பயனெய்திவீடுறவும். ௪௧

வேண்டுமெனவிரந்தேறவளித்தருளிவெள்விடைமே
லாண்டகையங்ககலாறனாலலாறுமுதலத்தீர்த்தம்
பூண்டபுதவாரத்துச்சிறப்பெய்துமபுந்தியுறக்
காண்டியெனுங்குரவனுரைகாருர்திமெய்சமிமடுத்தான். ௪௨

இந்திரன்சத்தியவிரதமடைந்துபூசித்தல.

அப்பொழுதேயரசுரிமையம்மறையோன்புடைவைத்துச்
செப்பருஞ்சத்தியவிரதத்திருநகரிலைவிரைந்தெய்தி
முப்பொழுதுநீராடிமுழுநீறுமெய்ப்பூசி
மெய்ப்படுகண்டிகைபூண்டுபுண்டரமுந்தலவிளங்க. ௪௩

உருத்திரமுங்கணிகதுள்ளப்புண்டரிகத்துமைபாகன்
றிருப்பதங்கள்சிந்தித்துக்கோயிலினுட்சென்றுறைய்து
யருத்தியொடும்பூசனைசெய்தாராமைமிக்கொள்ளப்
பெருந்தெழுந்தபேரன்பிற்பெருமானைத்துதிக்கின்றான். ௪௪

இந்திரன்துதித்தல்.

அறுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மறைமுடிவிளனுந்தேறுமலர்ச்சிலம்படியாய்போற்றி
யறைபுனலுலகமெல்லாம்படைத்தளித்தழிப்பாய்போற்றி
சிறைநிறைவாசத்தெண்ணீர்ச்சத்தியவிரதத்தீர்த்தத்
துறைகெழுவரைப்பின்மேயசுந்தரவிடங்காபோற்றி. ௪௫

அண்ணலேவிடயதுன்பமுற்றிலேனலமேலமல
மெண்ணரும்யோனிதோறுந்திரிந்தலைந்தெய்த்தேனலங்
கண்ணினுண்மணியேவேறுகண்டிலேன்களைகணலம்
புண்ணியமுதலேயின்பப்பூரணாவோலமோலம். ௪௬

புழுப்பொதிந்தசும்புபாயுமபுன்புலையுடலையோம்பிக்
கழித்தனன்காலமெல்லாங்கடையனேன்பொறிகள்யாண்டு
மிழுத்திழுத்தலைப்பநொந்தேனினித்தினைப்பொழுதுமாற்றேன்
சழக்கறுத்தருள்வாயுன்றன்சரணமேசரணமையா. ௪௭

இந்திரனுக்குச்சத்தியவிரதர்காட்சிகொடுத்தருளுதல்.

அடைக்கலமடியேனென்றென்றழுதிரந்தயருங்காலை
விடைத்தனிப்பெருமானன்னோன்பத்தியின்விளைவுநோக்கி
நடைப்பிடியுமையாளோடுநண்ணிநீவேண்டிற்றென்னை
யெடுத்துரைதருதுமென்றானிந்திரன்றொழுதுவேண்டும். ௪௮

வினைவழிப்பிறந்துவீந்துமெலிந்தகாளெல்லையில்லை,
யனையுவற்றடிகேளுன்றனடிதொழப்பெற்றிலேனு
வினைவருந்தலத்தானின்றுநின்னருட்குரியனானே
னினிவரும்பிறவிமாற்றியென்றனையுய்யக்கோடி. ௫௪

இத்தலந்தீர்த்தமென்றன்பெயரினாலிலகவேண்டு
மத்தனேயென்னலோடுமவ்வகையருளிமீளா
முத்திசேர்கணநாதர்க்குண்முதல்வனாந்தன்மைநல்கிப்
பைத்தபாம்பாரம்பூண்டபண்ணவனிலிங்கத்தானான். ௫௫

அற்றைநாண்முதலச்சூழலிந்திரபுரமாமுங்கட்
கற்றைவார்சடையீரோர்காற்கண்ணுறப்பெற்றோர்தாமும்
வெற்றிவேற்காலன்றன்பால்விரவிடார்கருவிலெய்தா
ரிற்றதன்பெருமைமுற்றும்யாவரேயியம்பவல்லார். ௫௬

சத்தியவிரதங்காரைத்தருவனஞ்செறிதலாலே
சித்திசேர்ந்தவர்க்குநல்குந்திருநெறிக்காரைக்காடென்
றித்திருப்பெயரினோங்குமென்பரான்மாசுதீர்ந்த
வுத்தமக்கேள்விசான்றவுணர்வுடையும்பர்மேலோர். ௫௭

திருநெறிக்காரைக் காட்டுப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௦௧

# புண்ணியகோடீசப்படலம்.

கலிநிலைத்துறை.

செச்சைச்சடையந்தணிர்தேமலரோடைசூழ்ந்த
மெய்ச்சத்தியமாவிரதத்தலமேன்மைசான்றுங்
கச்சிப்பதியிற்கவர்புண்ணியகோடிமேன்மை
நச்சிப்புகல்கின்றனநன்குமதித்துக்கேண்மின். க

மின்பாய்பொழிற்சத்தியமாவிரதத்தலத்தின்
றென்பாலதுபுண்ணியகோடிநந்தேவன்வைப்பு
வன்பாலர்களெய்தரும்புண்ணியதீர்த்தமாடே
யென்போலிகட்குஞ்சிவப்பேறெளிதெய்துமங்கண். உ

சிவபெருமானிடத்துவிஷ்ணுவரம்பெறுதல்.

மலர்மேயவன்மேகநல்வாகனகற்பமொன்றிற்
றலமேழ்புகழ்நாரணன்றாமரையாளியாதி
யுலகேழையுமீன்றிடுமாசையினும்பர்கோனைப்
பலநாண்முகிலினுருக்கொண்டுபரித்தல்செய்தான். ௩

நம்மானிரங்கிக்கடைக்கண்ணருணல்கிமாலோய்
வம்மோசுரராண்டினிலாயிரவாண்டுமெற்றிங்
கிம்மேகவுருக்கொடுதாங்கினையெம்மைவேண்டு
மம்மாவரநல்குதுமோதுதியென்னவன்னோன். ௪

எந்தாயொருநின்றிருமேனியிடப்புறத்து
வந்தேனடியேனுயர்நின்னருள்வண்மைதன்னா
னந்தாதவிவ்வாழ்க்கையுமெய்தினன்ஞாலமுற்றும்
பைந்தாண்மலரோனையுமின்றுபடைத்தல்வேட்டேன். ௫

அவ்வாற்றலளித்தருளென்னுமரிக்குமாத
னிவ்வாற்றல்கச்சிப்பதியெய்தியிலிங்கத்தாபித்
தொவ்வாதவர்களினங்களிறுயர்பூசையாற்றிற்
செவ்வேபெறுகிற்பையெனத்திருவாய்மலர்ந்தான். ௬

விஷ்ணுகாஞ்சியிற்சிவபூசைசெய்தல்.

அங்கப்பொழுதேவிடைகொண்டருட்காஞ்சியெய்திப்
பொங்கிப்பொலிதீர்த்தநறும்புனலாடிச்சூழ்ந்
தெங்கிற்பொலியிந்திரநன்னகர்த்தென்றிசைக்கட்
டுங்கச்சிவலிங்கமிருத்திமெய்யன்புதோன்ற. ௭

தெண்ணீர்த்தடமொன்றுவகுத்துத்திருந்தமூழ்கி
வெண்ணீற்றணியக்கமணிக்கோவைமெய்விளங்கக்
கண்ணீர்க்கமலம்பலகொய்துகருத்துவாய்ப்ப
வண்ணீர்ச்சிவபூசனைநித்தலுஞ்செய்துவாழ்ந்தான். ௮

கஜேந்திரன் தொண்டுசெய்தல்.

வேறு.

அன்னானேவன்மெய்ப்பணியாற்றுமன்புந்தத்
தன்னேரில்லாவோர்மதவேழந்தானெய்தி
யென்னாயகனேயென்பணிகொள்வாயென்றேத்திப்
பொன்வாவியொன்றுமுன்னரெழுந்துபுனலாடி. ௯

நாளலர்தாமரைபாதிரிவில்வநறும்புன்னை
தாளுயர்சண்பகமல்லிகைதண்கழுநீர்மௌவல்
கோளறுகோங்குமுதல்பலகொய்துகொடுத்தென்றும்
வேளையளித்தவனுண்மகிழ்வித்திடுமந்நாளில். ௧௦

கஜேந்திரனைமுதலைப்பற்றல்.

ஓர்பகனீர்நிறைபூந்தடமொன்றுறுபூக்கொய்வான்
சீர்தகுதிண்கரிசேறலுமங்கொருவன்மீனை
நீரிடைநின்றுவெகுண்டடிபற்றிநிமிர்ந்தீர்ப்பக்
காரொலிகாட்டியகன்கரையீர்த்ததுகாய்வேழம். ௧௧

இவ்வகைதண்புனலிற்கரைமீதிவையோவாமே
தெவ்வுடனீர்ப்புழியாண்டுகளெண்ணிலசென்றேகக்
கைவரையாற்றரிதாயலறிக்கருமாமேகத்
தவ்வடிவோனையழைத்ததுமூலமெனக்கூவி. ௧௨

விஷ்ணுகஜேந்திரனைக்காத்தல்.

அண்டரெலாம்யாமூலமலேமென்றகல்போழ்திற்
புண்டரிகக்கட்புண்ணியனான்புள்ளரசின்மேல்
கொண்டெதிரெய்திக்கரியரசெய்துங்கொடுவெங்கோய்
கண்டுளநெக்கானஞ்சலையஞ்சேல்களிறென்னா. ௧௩

ஆழியெறிந்தானதனுயிருண்டான்கரியோடும்
வாழியகாஞ்சிமாநகரெய்திச்சிவபூசை
வேழமளிக்குமேதகுபள்ளித்தாமத்தா
லூழ்முறையாற்றித்தவநனிசெய்தங்குறைநாளே. ௧௪

எண்ணருவானோரின்னமுநாடற்கரியானைக்
கண்ணிணையாரக்கண்டுகாதல்கைமிக்கங்
குண்ணிகழன்பானெக்குருகிக்கணுறைசிந்தப்
புண்ணியவேதப்பழமொழியோதிப்புகழ்கிற்பான். ௧௫

விஷ்ணு துதித்தல்.

கொச்சகக்கலிப்பா.

நீராய்நிலனாய்நெருப்பாய்வளிவானு
யோராரிருசுடராயுவியாயாவைக்கும்
வேராகிவித்தாய்விளைவாகியெல்லாமாம்
பேராளாவெங்கள்பிரானேயடிபோற்றி. ௧௬

அண்டபகிரண்டமனைத்துமகத்தடக்கிக்
கொண்டுநிறைந்தோங்கியபேரின்பக்குரைகடலே
தொண்டரெலாமுண்ணத்தெவிட்டாச்சுவையமிர்தே
தண்டலைசூழ்கச்சித்தலைவாவடிபோற்றி. ௧௭

(ஏ)
மாறுவறக்கடவுணமான்வடியேனு
மேறுகித்தாங்கவருள்சுரந்தவெம்மானே
சீறுதுமைகளிப்பத்தேவியாக்கொண்டேனைநின்
கூறுடைவைத்தகுணக்குன்றேயடிபோற்றி. ௧௮

திக்காடையாகியணியோடுதீவினையே
னக்கோடுகண்ணேடுரியென்புணிந்தானே
யிக்காய்மழுமுதலாம்வான்படையோடென்றனையுந்
தக்கோர்புகழ்கணையாக்கொண்டாய்சரண்போற்றி. ௧௯

மெய்யடியார்சாத்தும்விரைமலர்போலன்பிலாப்
பொய்யடியேனான்விழியுங்கொண்டருளும்பொன்னடியாய்
செய்யானேநந்திகணத்தவர்போற்சேயேனு
மெய்தியருட்கூத்தினியமுழக்கும்பேறளித்தோய். ௨0

ஆலமுளக்கரெழுமந்நாளடைக்கலமென
றோலமிடுமெங்கட்குயிரளித்தசீராளா
காலமேகாலங்கடந்தபெருங்கருணைக்
கோலமேயானந்தக்குன்றேயடிபோற்றி. ௨௧

விஷ்ணுவுக்குசிவபெருமான்காட்சிகொடுத்தருளுதல்.

கலிவிருத்தம்.

என்னப்பலபன்னியிரந்தயரும்
பொன்னுக்கிறைமேலருள்பொங்கியெழ
மின்னற்சடையோன்விடைமீதுவரை
யன்னத்தொடுகாட்சியளித்தனனால். ௨௨

கண்டானிருகண்களிகூரமகிழ்
கொண்டான்வறியோன்கொழிதெள்ளமுத
முண்டானெனவோடினனாடினனால்
வண்டாமரைமாதுமணாளனரோ. ௨௩

அதுகண்டுமைபாலருணேக்குதவி
விதுவொன்றுபொலஞ்சடைவிண்ணவனோர்
முதிருங்குறுமூரன்முகத்தலர
மதுசூதனகேட்டிவரந்தருகேம். ௨௪

நார்வானவர்தம்மினுகாரணநீ
பெருவான்வலிபெற்றனையெம்மருளாற்
பொருபோரினுளெம்மினும்வென்றிபுனை
வரமெம்மிடைமுன்பெறுமாதவனே. ௨௫

எனவங்கருள்செய்தலுமிந்திரைகோன்
மனமொன்றவணங்கிவணங்கியெழுந்
தனதம்புயபாதயுகத்தடியேற்
கனகம்பெறுபத்தியளித்தருளாய். ௨௬

வரதாமரையோனொடுமற்றுலகும்
வரதாதரல்வேட்டமனத்தினையாய்
வரதாவரமீதுவழங்குதிநீ
வரதாவெனவோதிவழுத்தினனால் ௨௭

நின்னாசைநிரம்பவரங்களெலா
மின்னேகொளநல்கினைமேவினைமா
மனனாபலகாலவரதாவெனநீ
சொன்னாயெமையன்புதுளும்பவவே. ௨௮

வாசத்துளவோயினிநீவரத
ராசப்பெயராற்பொலிவாயெமதாள்
பூசித்தனைபுண்டரிகங்களினாற்
பேசிற்பதுமாக்கனெனப்பெறுவாய். ௨௯

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றருள்புரிந்தவள்ளலிணையடிவணங்கிமாயோன்
வென்றிவெள்விடையாயின்னும்விண்ணப்பமொன்றுகேட்டி
நின்றிருப்பாதபூசைநித்தலுமடியேனாற்ற
நன்றுமிவ்வத்தியேவற்பணிநயந்தொழுகிற்றன்றே. ௩0

என்னிடையன்புசாலப்பூண்டதாலிதன்பேர்தன்னா
லுன்னெதிரடியேன்வாழுமுயர்வரைக்குடுமியோங்கன்
மன்னுசீருலகினத்திகிரியெனவழங்கல்வேண்டுங்
கன்னலஞ்சிலைவேளாகங்கனல்விழிக்குதவவல்லோய். ௩௧

புண்ணியதீர்த்தப்பொய்கைப்புனல்படிந்திங்குளார்செய்
புண்ணியமொன்றுகோடிமடங்குறப்புரிந்துமற்றிப்
புண்ணியகோடிவைப்பினுயிர்க்கெலாங்கருணைபூத்துப்
புண்ணியகோடிநாதலிங்கத்திற்பொலிகநாளும். ௩௨

அடியனேன்றண்டாதென்றுநின்னெதிரமர்ந்துபோற்றக்
கடிகெழுகற்பத்தண்டார்க்கடவுளர்முனிவர்யார்க்கு
முடிவறுவரங்கணல்கிமுழுதருள்சுரந்துவாழி
கொடியவெஞ்சீற்றத்துப்பிற்கூற்றுயிர்ப்பருகுந்தாளோய். ௩௩

அண்ணலேயென்றுவேண்டவவற்றவையருளியெங்கோன்
புண்ணியகோடிநாதலிங்கத்துட்புக்கானந்நாட்
கண்ணுதற்பரனைமாயன்காருருக்கொண்டுதாங்கும்
வண்மையாற்கற்பமேகவாகனப்பெயர்பூண்டனன்றே. ௩௪

புண்ணியகோடீசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௬௫.

# வலம்புரிவிநாயகப்படலம்.

கலிவிருத்தம்.

நலம்புரிபுண்ணியகோடிநாதர்தம்
புலம்புரிபெருமையைப்புகன்றுளேமினி
நிலம்புரிதவத்தினீரத்திநீள்வரை
வலம்புரிவிநாயகன்மாட்சிசெப்புவாம். க

முன்னொநாளயனரிமுனிவர்வானவர்
கின்னரரோரிடைக்கெழுமித்தங்களுட்
பன்னுதலுற்றனர்படிறர்செய்வினை
யங்நிலையூறின்றியமுகின்முற்றுமால். உ

அங்கவர்தமக்கிடையூற்றையாக்கவு
நங்களுக்கூறுதீர்த்தினிதுநல்கவு
மிங்கொருகடவுளைப்பெறுதற்கெம்பிரான்
பங்கயத்திருவடிபழிச்சிவேண்டுவாம். ௩

விக்கினமகலவிண்ணவர்வேண்டல்.

என்றுளந்துணிந்தனரெய்திமந்தரக்
குன்றமீதெம்பிரான்கோயிலுள்ளுறுச்
சென்றனர்தொழுதனர்செவ்விநோக்கிமுன்
னின்றனர்மறைகளாற்றுதிநிகழ்த்தினர். ௪

அறுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சற்றிதுதிருவுளஞ்செய்துகேட்டருளுதிதலைவனேவெங்
குற்றமேதுறுமனத்தானவக்கொடியவர்தொடங்குசெய்கை
முற்றுறாதூறுபட்டழியவுமெம்மனோர்முயன்றசெய்கை
யிற்றுறாதூறுதீர்ந்தாகவுங்கருணைசெய்யெனவிரந்தார். ௫

விநாயகர்திருவவதாரம்.

அம்மொழிசெவிமடுத்தருள்புரிந்தகிலமுமுய்யுமாற்று
லிம்முறைபுரிதுமென்றவர்க்கெலாம்விடையளித்தெழுந்துபோந்து
தொம்மைவெள்விடையினுன்சித்திரச்சாலையைக்குறுகியங்கட்
செம்மைசால்சித்திரம்யாவையுநோக்கினன்றேவியோடும். ௬

வானகத்தச்சனுலகிலமுஞ்சித்திரித்தெழுதிவாய்ந்த
வூனமில்சாலையுளெழுதுமாமனுக்களோடுபமனுக்க
ளானவெல்லாமுமைக்கெம்பிரான்காட்டுபோதவற்றுளாதித்
தானமாரிருவகைப்பிரணவமனுக்களைத்தையல்கண்டாள். ௭

உவகையாற்பற்பல்காணேக்கியிங்கிவையெவையுரைத்தியென்னச்
சிவபிரான்றேவியைத்தழீஇயினன்கூறுவான்செல்விகேட்டி
தவலிலிப்பிரணவமதுகாண்மூவரைத்தந்ததாகு
நவிலின்மற்றதுநினதாகுமுச்சத்தியைநல்குமூலம். ௮

மும்மறைமுதலெலாமீன்றிடுமிருமுதுகுரவரான
விம்மனுக்கரியொடும்பிடியெனத்தோன்றலிவிளிவைகளாகி
யம்மநாம்புணர்துமென்றவ்வுருக்கொண்டனராகொலைச்
சும்மைநீருலகெலாமுய்யவந்துதித்தனன்றோன்றலன்றே. ௯

கயமுகப்பிள்ளையையிருவருங்காதலானெடுத்தணைத்து
வயமுறமடித்தலத்திருத்திமெய்க்கலன்பலவணிந்துவாழ்த்த
வியலபுடைப்புதல்வனுமுழங்கையானெழுந்தெதிர்கடித்தல்செய்தா
னயனமாக்களிகொளநோக்கினளுலகலாமீன்றநங்கை. ௧0

அங்கையானெத்திநின்றுடல்கண்டகங்களிதளும்பியையன்
பங்கயப்பதங்தொழுதிறைவநீபயந்தசேயிவனையின்னே
யெங்குளகணங்களும்பல்கணநாதருமெவருமேத்தத்
துங்கமாமிறைமையீந்தருளெனவேண்டவுஞ்சூலபாணி. ௧௧

கடவுளர்முனிவரரயனரிபலகணநாதரெல்லா
முடன்வரத்திருவுளஞ்செய்தழைத்தோதுவான்மடித்தலத்தில
மிடலுடைச்சிறுவனையிருத்திமற்றிங்கிவன்வெற்பின்வந்த
மடமயிற்கினியவன்யாம்பெறுமூத்தமாமைந்தனோர்மின். ௧௨

இவனையிவ்வுலகெலாந்தொழுதெழுமிறைமையினிருத்துகின்றோங்
குவிமுடிசூட்டுவான்வேண்டுபகரணங்கொணர்மினென்றே
யவரவைகொணர்ந்தபின்மைந்தனைமடங்கலாதனத்தினேற்றிச்
சிவபிரான்றிருவபிடேகநீராட்டினன்மகுடஞ்சேர்த்தான். ௧௩

அரசினுக்குரியநலலணிகளானலங்கரித்தும்பபுகூரப
பிரமனைமாயனைத்தேவரைமுனிவரைப்படைபினோக்கி
யுரனுடையுமகெலாநாயகனிவனிடையூறுறனுக்குங்
கரவிலாநாயகனுகநாம்வைத்தனங்கண்டுகொண்மின. ௧௪

தீயவத்தானவர்க்கூறிமைப்பானிவனென்றுமசப்புந்
தூயவன்வாய்மொழிதலைமிசைக்கொண்டனர்துதித்திறைஞ்சி
மாயவன்முதலியோர்கணேசனைவணங்கினர்கையுறைக
ளேயுமாறுதவினர்விடைகொடுத்ததமதிருக்கைசேர்ந்தார். ௧௫

விநாயகர்திருவிளையாடல்.

கலிவிருத்தம்.

பொருவருந்தடநெடும்புழைக்கையேந்தலு
மிருமுதுகுரவர்தாளிறைஞ்சிமேவுபா
லொருவருங்கணங்களோடுலவிமெய்யகனுறுந்
திருவிளையாடலிற்சிந்தைவைத்தனன். ௧௬

ஒளித்துநின்றுடன்பயிலுமைச்சிறூர்மிசைத்
தெளித்தெழுபுழைக்கைநீர்த்திவலைதூஉயிது
துளித்ததுமுகிலெனச்சொலவியுள்ளகங்
களிப்பவான்கருமையைக்காட்டிவஞ்சித்தும். ௧௭

புழைக்கையின்மோந்துயிர்ப்பெறிந்துபூமியைக்
குழித்துமுன்னணிந்தனபழமைகூர்ந்தவென்
றொழித்தகல்பாதலந்துரகம்யாவையு
மிழுத்தெடுத்தணியெனப்புயத்திலேற்றியும். ௧௮

ஒன்பதுகோள்களுமுடுக்கணங்களுந்
துன்பறப்பிணித்தசைதூருவகுத்திரம்
வன்பனைக்கரத்தினும்பறித்துமார்பிடை
யன்பமர்கவமணியாரமாக்கியும். ௧௯

என்னைநீர்கண்டெடாதிருப்பதென்னெனப்
பன்னகமெவற்றையுங்கனன்றுபற்றிவான்
மன்னிடவீசியங்குடைந்தவானதி
தன்னுடைத்தந்தைபோற்சடிலத்தேந்தியும். ௨0

கலிநிலைத்துறை.

இவ்வகைப்பலசிறுகுறும்பெங்கணுமியற்றிக்
கௌவைநீர்விளையாட்டினிற்காதலனொருநாட்
பௌவம்யாவையுமுழக்கினன்பாற்கடல்புகுந்தான்
கொவ்வைவாயுமைபயந்தருள்குஞ்சரக்குரிசில். ௨௧

புகுந்துவெள்ளநீர்முழுவதும்புழைக்கையின்மடுத்தான்
மிகுந்தபன்மணிநீருறையுயிர்கள்வெமபணிக்கோன்
முகுந்தனுந்தியன்றிருந்தநான்முகப்பிரான்முகுந்தன்
சகுந்தமன்னவன்றிருவுமப்புழைக்கையுட்சார்ந்தார். ௨௨

வறுங்கடற்பரப்பகட்டினில்லெஞ்சுகூர்பங்க
ளூறுங்கரும்பெருஞ்சேற்றிடையெயாழிப்பனமுன்னு
ணறுந்துழாயணியாமையைநலிவுறப்பற்றிக்
குறும்படக்கியபிரான்வருதிறங்குறித்தனபோல. ௨௩

மாயமீன்விழிபறித்தவன்முன்வருமிளவன்
மேயவாறுகண்டனவெனத்துடிப்பனசிலமீன்
பாயபூம்புனலரசனம்பனுக்கிடுந்திறைபோற்
சேயபன்மணிவயின்றொறுமிமைப்பனசிலவே. ௨௪

ஐயன்வார்செவிக்காற்றினிலலைகண்மிகசெறிந்து
வெய்யபேரொலிகாட்டுவெறிவியன்கடல்கண்
மையகம்றதங்கிளைவறங்கூர்ந்தமைகாணூஉக
கையெறிந்தழுதிரங்கிவீழ்ந்தரற்றுவகடுக்கும். ௨௫

இன்னவாறுபாற்கடலவறந்தழிவுறவிருங்கை
தன்னிலேற்றநீர்மீளவுந்தரைமிசைவிடுத்தா
னன்னநீருடன்வீழ்ந்தனரயனரிமுதலோர்
துன்னுநீபடுதுரும்பெனத்திசைதொறுஞ்சிதறி. ௨௬

பின்னரோரிடைத்திரண்டுடன்குழீஇயினர்பெரிது
மின்னலுற்றமைதத்தமுடபேசினரெளியோ
முன்னைநலவினைப்பயத்தினுலின்றுமூதுலகந்
தன்னிலவந்தவாமறுபிறப்பெனமதித்தனரால். ௨௭

விஷ்ணுபாஞ்சசன்னியமிழத்தல்.

மருட்சிதீர்ந்தபின்மாயவனிடக்கையின்வழுவு
முருட்சிகூர்ந்தவெண்சங்கினைக்காண்கிலனுயங்கி
வெருட்சிகொண்டனன்றேடினன்வியன்றிசைப்புறத்துத்
தெருட்சிகொண்டதுவொலிப்பதுகேட்டனன்செவியில். ௨௮

ஓசையாலதுபாஞ்சசன்னியமெனவுணர்ந்தவ்
வாசையிற்சிலர்தமைச்செலவிடுத்தனனவர்போய்
மாசிலேங்கரப்பிரான்கணம்வாயிடைக்கொண்ட
வேசறுஞ்சுரிமுகத்தினைக்கண்டுமீண்டுரைத்தார். ௨௯

விஷ்ணுதிருக்கயிலையடைதல்.

சொன்னவாசகங்கேட்டுளந்துளங்கிமற்றினிநா
னென்னைசெய்வலென்றுசாவினன்கணங்களோடெழுந்து
பன்னகப்பகையரசுமேல்கொண்டனன்படர்ந்தான்
கன்னிபாகன்வீற்றிருந்தருள்வெள்ளியங்கயிலை. ௩௦

அங்குநந்திதன்னருளினாற்றடைகடந்தணுகி
யெங்கணாயகன்றிருமுன்புவீழ்ந்துதாழ்ந்தெழுந்து
பங்கயக்கரங்குவித்துநின்றிமவரைபயந்த
நங்கையோடுறைசெவ்விகண்டின்னதுநவில்வான். ௩௧

அண்ணலேயுனதாணையினடியனேன்கடலுட்
கண்வளர்ந்தனனாயிடையாடல்செய்கணேசப்
பண்ணவன்கடற்புனலாடுமென்னையும்பனைக்கை
யுண்மடுத்தனன்விடுத்திலன்மீளவுமுலகில். ௩௨

மறுகுசூழ்மணிமன்றுளாய்நின்னருள்வலியான்
மறுபிறப்பெனவுய்ந்துநின்பாலவரப்பெற்றேன்
மறுகுமப்பொழுதென்னையியல்வழியினசங்கை
மறுவிலங்காப்பிரானகணநாதன்றான்வௌவியதால். ௩௩

ஐயனேயதுவடியனேன்கரத்தெய்தவருளிச்
செய்யவேண்டுமென்றிரந்திரந்திறைஞ்சலுஞ்சிறுமான்
கையனெம்பிரான்கவுரிபாலகன்கடைசெலுத்தி
வையமுண்டவகேளெனவாய்மலர்ந்தருள்வான். ௩௪

விஷ்ணுகாஞ்சியையடைந்துபூசித்தல்.

வலம்புரிந்தபேராணையையோயாமிதுவலலேம்
வலம்புரிச்சங்குபெறுககாஞ்சியிலவைகி
வலம்புரிக்கணபதியைநின்னதுதிமாலவரைபோல
வலம்புரிந்துதாபித்தருச்சனைபுரிமரபால. ௩௫

அன்னவன்றிருவருளினாற்பெறுகெனுமருளைச்
சென்னிமேல்கொண்டுவிடைகொண்டுமீண்டுகாஞ்சியினிற்
கொன்னுமேற்றிசைவாயிலார்குகையுடையதிக்
கன்னகந்தனில்வலம்புரிக்கணேசனையிருத்தி. ௩௬

தருக்குநீங்கியாவாகனம்பாத்தியாசமன
மருக்கியம்புனலாட்டுடைபூணுநூல்கந்த
வருக்கந்தூபதீபம்பலபண்ணியவருக்கங்
குருக்கொள்சுண்ணமார்பாகடைகுளிர்புனலபிறவும். ௩௭

ஓங்குதந்திகாயத்திரிமனுவினாலுதவி
வீங்குகாதலாலவலஞ்செய்துபுவியிடைவீழ்ந்தா
னாங்குநின்றுகைகொட்டினனாடினனழுதான்
றீங்குதீர்மறைமொழிகளாற்றுதிபலசெய்தான். ௩௮

விஷ்ணுவிநாயகரைத்துதித்தல்.

கொச்சகக்கலிப்பா.

ஐயாமறைமுடிவுந்தோராதவானந்த
மெய்யாபிரணவத்தினுட்பொருளேவேழமுகக்
கையாய்வெளியாய்கரியானேபொன்மையாய்
செய்யாய்பசியாய்பெருங்கருணைத்தெய்வமே. ௩௯

நல்லோர்க்கும்வானோர்க்குநண்ணுமிடையூற்றுக்
கில்லாமைநல்கவவதரித்தவெம்மானே
வல்லார்முலையுமையாளீன்றமழகளிறே
பொல்லார்க்குந்தானவர்க்குமூறிழைக்கும்புத்தேளே. ௪௦

சூரனுயிருண்டசுரருலகங்காத்தளித்த
வீரனுக்குமுன்பிறந்தவித்தகாமுப்புரமுஞ்
சேரவுருத்ததிருவாளனீன்றெடுத்த
வாரணமேயெந்தாய்வலம்புரிக்குஞ்சரமே. ௪௧

பண்ணியமும்வெண்கோடும்பாசாங்குசப்படையு
நண்ணியசெங்கைத்தலத்துநாதாவொருகோட்டுத்
தண்ணியவெண்பிறைத்தாழ்சடையாய்மெய்யடியா
ரெண்ணியவெண்ணியாங்கீந்தருளும்வள்ளலே. ௪௨

வழிபடுவோர்க்கெய்ப்பிடத்தின்வைப்பேயுமையாள்
விழிகளிப்பமுன்னீர்விளையாடுங்காலை
பொழிமதக்கையூடுபுகுந்துவரப்பெற்றே
னிழிவகன்றுமெய்த்தூய்மையெய்தினேன்யானே. ௪௩

அங்கப்பொழுதினடியேன்கரத்தகன்ற
துங்கப்பணிலமுனைச்சூழுங்கணநாதன்
செங்கைத்தலத்துளதாற்செல்வாவெனக்கதனை
யிங்கிப்பொழுதேயளித்தருளாயென்றிரப்ப. ௪௪

விஷ்ணுபாஞ்சசன்னியம்பெறுதல்.

வேண்டுந்திருநெடுமாற்கெங்கோன்வெளிநின்று
காண்டகையபூதகணங்கரத்துகக்கொண்டிருந்த
மாண்டபுகழ்ச்சங்கமளித்தருளிமாயோனே
யீண்டுநினக்கின்னும்வேண்டுவதென்னென்றருள. ௪௫

முன்னையபுண்ணியகோடீசர்திருமுன்பென்
றன்னோடிவ்வத்திதடங்கிரியில்வீற்றிருந்திங்
கெந்நாளுமெல்லார்க்குமெவ்வரமுமீந்தருளாய்
மன்னுவென்றேத்தமகிழ்ந்தங்கண்வைகினனால். ௪௬

ஒன்னலரைவாட்டுமுலவைப்படைத்தேவும்
பன்னகப்பூம்பாயற்றிகிரிப்படைக்கோவு
மன்னநடைக்குன்றமமால்வரையினருயிர்கட்
கென்னவரமுமளித்தென்றுமேவுவார். ௪௭

மற்றிதனைக்கற்றோருங்கேட்டோருமாசிலர்க்குச்
சொற்றவருமூறுதவிர்ந்தென்றுந்தொல்லுலகிற்
பெற்றமகவாதிப்பெருஞ்செல்வத்தோடுமைந்து
பற்றறுத்துமேலைப்பரபோகமேவுவரால். ௪௮

வலம்புரிவிநாயகப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௭௮௩.

---

# 7. சிவாத்தானப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

அலம்புநீர்வாவிசூழத்திமாமலைமிசை
வலம்புரிவிநாயகன்வரவிதுபோதினு
னலம்புரிபூசைசெய்நவில்சிவாத்தானமாம்
புலம்புரிபெருமையைப்புகலுதுங்கேண்மினோ. ௧

ஆதிநாட்சிவனிடத்துதித்தவனருளினாற்
பேதியாதுலகெலாம்படைத்திடப்பெற்றுள
சீதநாண்மலர்மிசைத்திசைமுகன்றன்னையான்
மூதுலகோடுமுண்டாக்கினன்முறைமையால். ௨

நாரணனைப்படைக்கநான்முகன்வேண்டல்.

அதுமனத்தெண்ணினனறக்கறுத்திளநிலா
விதுமுடிப்பிரான்றிருநயிலையின்மேயினன்
பொதுவறத்தொழுதனன்போற்றினின்றுரைசெய்வான்
மதுமலர்ப்பொகுட்டணிமாளிகைப்பண்ணவன். ௩

பெருமநின்னிடப்புறத்தரிதனைப்பெற்றனை
யருளொடும்வலப்புறத்தென்னையீன்றளித்தனை
யுருவவைகுந்தமுஞ்சத்தியவுலகமு
மிருவரும்பெற்றுளேமெந்தைநின்னருளினால். ௪

படைப்பதுங்காப்பதும்பணியெமக்காக்கினை
தொடைப்பொலங்கொன்றையந்துணர்துறுஞ்சடைமுடி
விடைக்கொடிப்பகவனேவிருப்பொடுவெறுப்பினை
யுடைத்தநின்னருட்கிருவேங்களுமொத்துளேம். ௫

பத்திசெய்துன்னருள்பெற்றுவெம்பாம்பணை
யுத்தமனென்னையிவ்வுலகொடுமீன்றன
னத்திறத்தியானுமம்மாயனோடிலமுஞ்
சித்தனேபடைக்குமாதிருவுளஞ்செய்குவாய். ௬

பிரமன்காஞ்சியையடைந்துபூசித்தல்.

என்றசொற்செவிமடுத்தெம்பிரானுரைசெய்வா
னென்றுகேண்மைந்தனேயுனக்கிதுவேண்டுமேற்
சென்றுகாஞ்சியினெமைப்பூசைசெய்திருத்தியான்
மன்றவங்கெய்திநீவேட்டவாவழங்குதும். ௭

ஐயுறேலென்றலுமம்புயன்றாழ்ந்தெழுந்
தொய்யெனக்கச்சியிற்போந்துமைகோன்வளர்
கொய்பொழிற்புண்ணியகோடியின்குணதிசை
யெய்துதன்பெயரினிலிங்கமொன்றிருத்தினன். ௮

போக்கரும்பிரமதீர்த்தப்பெயர்ப்பொய்கையொன்
றாக்கினனங்குநீராடிநல்வினைமுடித்
தூக்கமாரன்பினன்மலரெடுத்துடையவன்
பூக்கமழ்சேவடிப்பூசனைசெய்தபின். ௯

பிரமன்சோமயாகந்தொடங்கல்.

தீயவிர்குடங்கையான்றிருவுளங்களிவரக்
காயமுற்சோமயாகஞ்செயக்கருதினு
ஞயவக்கருத்துணர்ந்தண்டருமுனிவரு
மேயினராயிடைவிண்ணவர்கோனொடும். க0

மங்கருந்திறன்மொழிக்கிழத்திவாணுட்டவர்
தங்களினீங்கிநீர்தன்னகத்துற்றனள்
பங்கயன்வேள்வியைப்பற்றுமக்காலையிற்
றுங்கமார்தருக்களிற்றெருக்கனளென்பவே. கக

எழில்வளர்நாமகளொன்றுமிவ்வுலகிடை
முழவினில்வீணையின்முழங்குதீங்குரல்படுங்
குழலினிலிசையெனக்குலவுகின்றுளெனப்
பழமறைமுழுவதும்பன்னுமிவ்வகையரோ. கஉ

ஆதலிற்காண்கிலாளயனுஞ்சாவித்திரி
வேதகாயத்திரியென்னுமின்னருட
னேதமிரீக்கையுற்றிருமகச்சாலையுட்
போதலுங்கலைமகள்கேட்டுளம்புழுங்கினள். கங

நாவின்கிழத்திநதியுருவாதல்.

திருமகச்சாலையைப்பாழ்படச்செய்வலென்
றிருவிசும்பூழிநாளிடித்தெனக்கொதித்தெழுந்
தொருநதிவடிவுகொண்டுருகெழத்தோன்றினள்
கருநிலையுயிரெலாமீன்றருள்காரணி. கச

கலிநிலைத்துறை.

மலர்மிசைவருதிசைமுகனுயர்மகவினைபுரியிடமே
யலவவனுறையுலகமுமுடனழிவுசெய்திடவெழலபோற்
பலகுமிழிகளலைதிரைநுரைபயில்வுறவகல்ககனத்
தலமிசைமிமிர்விசையொடுவருதகையதுகுலநதியே. கரு

வரியளியினமுளர்நறைமதுமலரவன்மகவினையைப்
புரிவுறவிடமுதவியதொருபுவியிதுவெனவெகுளா
விரிபணமணிவிடவரவிறைவெருவரவுடனெளிய
வரிலறுகடனிலமுழுவதுமகழ்வதுகுலநதியே. கசா

விரவியமறைவிதியுளிமகவினைபுரியுபகரணத்
திரவியமுழுதுதவினவிவையெனவெமுசினமதனுற்
பரவியபுனனிறைகழனிகள்பலகயநிரைபொழிலி
னுரவியல்வளமுழுதழிவுசெய்துறுவதுகுலநதியே. கஎ

ஓடிவருமகமதுதனிலவியுணவருமிருசுடரை
யிடைவழியினிலெதிருறுதலுமெழுவெகுளியினொடுகைப்
பிடியெனவுடன்விரைவொடுகொடுபெயர்வதுபொரவிருகேழ்க்
கடிகெழுமரைமலர்பலகொடுகடுகிடுவதுநதியே. கஅ

அயனிடையுறும்வெகுளியினணைபொழுதிணைவிழியவைசேர்ந்
தியல்வதுபொரவெரிமருள்குவளைகளிடையிடையொளிர
வெயரெனவுரைசிதறிடமுலைமிசையணிதுகில்குழறித்
துயல்வரல்பொரவரைமேனிதிரைதொகவருவதுநதியே. ககூ

அவியுணவிறைஞர்பலரையுமலைசெயவெழுசெயல்போற்
கவிழ்தலையனகுவடுகளொடுமெதிர்களினெடுகடுகிப்
புவிமுதலறவருபிரளயவிலையுணர்புரையவருஞ்
செவியொடுவிழிவெருவுரவருதிமலதுகுலநதியே. ௨0

அள்ளவிநிரைகளமுழுவதுமழிவுசெய்தபின்தனி
யுள்ளுறநடவெனவிரிகுபினமொடுகரகறவழிபாற்
கள்ளிகள்பலபலகொடுவிடுகலைதுதிநிகரயில்வாய்
முள்ளுடைமுதல்பலபலகொடுமுடுகுவதுயர்நதியே. ௨௧

மேற்படுகலைமகணதியெனாமேவுற்றுருவுறுசாலயிற்
கேற்புறவவயமனைவருளுமேபுவிமிழியுருமாறித்
தோற்றியவெனவறன்மிசைவருதூத்திரள்மணிமலர்கள்
போற்றுறுபலகொடியுடனெறிபடுக்கலைவதுநதியே. ௨௨

வருநெறியெதிருறுபுரிசைசண்மாளிகைநிரையகழூற்
றுருமிடியெனவதிர்தருமாவியோடோருநதிவடிவாய்ப்
பருவரலசெய்யவிம்முறைவருபாரதிசெய்யலதனை
முருகலராளியெனவிசைபயிலுநாதமுனிகண்டான். ௨௩

நாரதமுனிவர்நதியைவைதுகூறல்.

வேறு.

கண்டுசெய்யசடைகட்டவிழவோடிமுனிவன்
புண்டரீகனைவணங்கியெதிர்நின்றுபுகல்வா
னண்டர்நாயகநின்வேலையையழிக்கமுனிவு
கொண்டுவாணிநதியாயகுறுகின்றனளரோ. ௨௪

கடிதுநீதடையியற்றுதியெனக்கழறலும்
படியினுன்முகனுளத்தினுமைபங்கிருசே
வடியிருத்தினனெதிர்த்தனரனைத்துரிறைவர்
நெடியமாயனைவிளித்திதுநிகழ்த்தலுறுவார். ௨௫

வேள்விநீவரதராசவுயர்வேள்வியிறைநாம்
வாழியம்மகமழிப்பநதிவாணிவரலாற்
காழுறக்கடிதுகாத்திடுதியென்றுகருதார்
பாழிமும்மதிலழித்தவர்பணித்தருளலும். ௨௬

நாரணன்நதியைத்தடுத்தல்.

உந்துவேள்விவினைகாப்பமனமுகமெதிர்சென்
றைந்தியோசனையிருகரைவிரித்ததன்மிசை
மைந்துநீலமலைபோலவழிமறுத்துமலரோன்
றந்தைகண்வளர்தல்கண்டனளகலைத்தலைவியே. ௨௭

கண்டுசேயிடையகன்றுநெறிகண்டுவடபான்
மண்டியேகவதுநோக்கியரிபாதிவழியின்
மிண்டிநாப்பண்விழிதுஞ்சமலர்வாணிவிலகிக்
கொண்டவேகமொடுதென்றிசையுறக்குறுகினள். ௨௮

பின்னுமங்கவன்விடாதுபிணைகச்சிநகராந்
தன்னிடைக்குலையெனகிடைகொளத்தவளமான்
முன்னர்நோக்கிமுடிசாய்த்துநனிநாணமுதிர
வன்னமென்றிசையினீளிடையகன்றுவிலகி. ௨௯

வேள்விசெய்களமதன்குணதிசைக்கண்விரவி
யாழியிற்செலநடந்தனளயன்றன்மனைவி
தாழ்வுதீர்ந்தயனுகந்தனன்மகிழ்ந்துதலைவன்
சூழ்கணங்களொடுமாயனெதிர்தோன்றியருள்வான். ௩0

நதியுமரியுநற்பெயர்பெறுதல்.

வேறு.

சொன்னவண்ணஞ்செய்தநீசொன்னவண்ணஞ்செய்தவ
னென்னவென்றுமோங்குதியித்திருப்பெருநதி
மன்னுவல்வினையெலாம்வாட்டுவேகவதியென
விந்நிலத்தினிற்சிறந்தின்பவாழ்வளிக்கவே. ௩௧

இரவிருட்கணிந்நதியிப்பதிக்கணெய்திடும்
வரவுகாணநீயொருவாள்விளக்கொளியென
விரவினாய்விளக்கொளிவிணடுவென்னமேவுகென்
றருளியெந்தையிம்மறைவேள்விகாத்தளித்தபின். ௩௨

நன்னராற்றநீரெனநண்ணினுடருக்களின்
மன்னிநிற்பநோக்கிவன்றுருவிற்செய்தண்டினே
டின்னவாணிதன்னையேற்றேயந்ததீக்கையுற்றனன்
முன்னுசிர்கலையினுற்சோமமேற்றபின்னரோ. ௩௩

இன்னவட்பகுத்திநீயிருகதுவிகனெனப்படு
மன்னவர்க்கெனகிளந்தம்புயத்தலைக்கதை
நன்மயித்திராவருணன்காந்தளிப்பவம
மின்னைவாங்கிமீட்டவர்வேதன்மாட்டிருத்தினர். ௩௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மீண்டுதிசைமுகன்றனாபான்மேவியவாணிமகிழ்ந்தாங்
கீண்டியதன்னுருக்கொண்டேயெச்சத்துணைவியுமாகிக்
காண்டகுபாங்கரிருப்பக்காதலன்வேள்விமுடித்தா
ணுண்டைவிதிமுறைத்தெண்ணீராடினன்வல்வினைவென்றான். ௩௫

கண்ணுதற்பெருமான்காட்சிகொடுத்தல்.

அங்கணிலிங்கத்தின்முன்னரணைந்துமனைவியர்மூவர்
துங்கவசிட்டன்முதலோர்சுராசுரர்சூழ்ந்துதுதிப்பத்
தங்குமவைக்கணிருந்துசமடியவையுளாத்திருதிப்
பொங்கியவன்பிற்றியானம்புரிந்துவழிபடும்போது. ௩௬

வானவியங்கள்கலிப்பமலர்மழையண்டர்சொரிய
வூனமில்சாமரையேந்தியுருத்திரமாதரிரட்டப்
பான்மையினற்கந்தருவர்பாடவிருந்தெடுத்தோத
ஞானசனந்தர்முதலோர்நண்ணியிருபுடையேத்த. ௩௭

எண்டிசையாளர்முடிகளிணையடிதாங்கிநடப்ப
வண்டுளர்கோதையுமையைமடித்தலமீதுறக்கொண்டு
பண்டைமழவிடையேறிப்பண்ணவர்தம்பெருமானும்
விண்டலமேர்கொளவெய்திவிழைதகுகாட்சியளித்தான். ௩௮

கண்டுவிரிஞ்சனெழுந்துகரையறுகாதல்கைமிக்குக்
கொண்டபுளகங்கண்மலகக்குவித்தகைசென்னியிலேற
விண்டமொழிகள்குழறவின்பவெள்ளத்திடையாடி
மண்டனில்வீழ்ந்துவணங்கிமறைமொழிகொண்டுதுதிப்பான். ௫௯

பிரமன்துதித்தல்.

வேறு.

அடியவரிழைத்தகுற்றமனந்தமும்பொறுப்பாய்போற்றி
கொடியவர்தம்மைச்செய்யுங்குற்றங்கண்டொறுப்பாய்போற்றி
யொடிவறுவணக்கமுற்றுங்கைக்கொளுமுடையாய்போற்றி
முடிவிலாமொழிகட்கெல்லாம்வாச்சியமுதலேபோற்றி. ௬0

சீதநீருலகம்போற்றுந்தேவர்கட்குந்தேவேபோற்றி
கோதறவுண்மைகாட்டுங்குரவர்கருங்குருவேபோற்றி
பூதநாயகனேபோற்றிபுரீசர்ககுமீசாபோற்றி
பாதியிலுமையைவைத்தபசுபதிபோற்றிபோற்றி. ௬௧

ஒருமுறைபத்துநூறுயிராமுறையுணதாள்போற்றி
மருவருமபொருளேபோற்றிமறுவலுமபோற்றிபோற்றி
யிருணிறமிடற்றாய்போற்றியென்றுநாத்தழும்பவேத்தித்
திருமலர்க்கடவுளபோற்றச்சிவபிரானருளிச்செய்யும். ௬௨

சிவபெருமான்வரங்கொடுத்தருளல்.

உவந்தனமறையோயுன்றன்பத்தியிலுறுநினோக்கஞ்
சிவந்தருவெம்பானமுன்வேடடவாறுருமாலோடும்
பவந்தருமுலகமெலலாமபடைத்தியாமலலன்றுநல்கத்
தவந்திகழ்வேதன்மறறுமிதுவொன்றுதாழ்ந்துவேண்டும். ௬௩

என்றனுத்தானமாகயானுறையிருகணநின்னை
யுன்றனுத்தானமாககோடலாலுறப்பமரேறே
நன்றுமித்தானமென்றுநவிலஙவாத்தானப்பேரா
னின்றிடவிங்குநாளுநீயினிதுறைதலவேண்டும். ௬௪

நின்னருட்குரியேனுகிநின்பணிதலைநின்றுழலு
வுன்னடியிணைகளிற்பபத்தியுலாபபுருதடிமையென்று
நன்னெறிமயாழுகச்செய்யாயநவிலசிவாத்தானதலதெய்தி
யெனனரேமெனினுநின்னையேதநிமீளுருயயகோடி ௬௫

உவாமுதற்சிறந்தநாளினுடைதிரைப்பிரமதீர்த்தத்
தவாவுடனாடிச்செய்யுங்கடன்முடித்தடிகேளுன்னைத்
தவாதசிர்ச்சிவாத்தானத்துவழிபடுந்தகையோர்செல்வக்
குவாலொடுமினிதுவாழ்ந்துமுத்தியிற்கூடச்செய்யாய். ௬௬

என்றிரந்தேத்தவெல்லாமருள்புரிந்திலிங்கத்தெங்கோ
னொன்றினனயனுமாலையுலகொடும்பூழுங்கீமீளத
தொன்றுயோனமுறையானல்கிததுகளறுசிவாத்தானத்தின்
மன்றவனருளான்முன்னர்வைகினனுவகைகூர்ந்து. ௬௭

எழுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மூந்துறமனத்தைத்தோற்றினனதன்பான்முழங்குகாயத்திரியதனிற்
சந்தைகளவற்றிற்சாமமச்சாமந்தன்னிடைமயசுர்களங்கவற்றின்
மைந்துடைநெடுமாலவனிடைப்பைங்கூழ்பயிர்களின்யதியமம்மதியி
னுந்துறும்பசுக்கள்பசுக்களின்மகவாவுனிடையுலகெலாந்தந்தான்.

இம்முறையொருவரொருவரைப்படைத்துச்செருக்குமற்றிவாகளைப்பரமென்
றும்மைவல்வினையான்மருளுநர்மருள்கவுண்மைநூலுணர்ந்தருள்கூடுஞ்
செம்மையோரெலலாம்விடமிடற்றடகிகத்தேயவரைப்புரந்துயாகுணங்கண்
மும்மையுங்கடந்தமுதல்வனேயவர்க்குமூலகாரணனெனத்தெளிவார்.

சிவாத்தானபபடலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௬௩௨

---

# ௯ மணிகண்டேச்சரப்படலம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருததம்.

ஸ்ரீமிறுகாலுழக்கமுனையுடைந்மலர்ந்துநெட்டிதழ்வாய்தொறுநறவ
முமிழ்மலாததடஞ்சூழ்திருச்சிவாத்தானநூனமையைதமதரிந்தவாறுரைததா
மமிழ்தமுங்கைப்பகுழாங்குழாமாகியற்றூர்தாயகழகங்கடோறுந்
தமிழ்தெரிகாஞ்சிவரைபயினின்மணிகண்டேச்சரத்தலததியலபுரைப்பாம்.

தேவருமசுரருந்திசைமுகனைவேண்டல்.

பாட்டளியுளருங்கற்பகநறுந்தார்ப்பனிமுடிக்கடவுளர்தாமும்
வாட்டிறல்படைத்தவசுரருமுன்னாளவல்வினையிறப்பிறுககஞ்சி
வேட்டனர்சாவாமருந்தினைப்பெறுவான்வெறுங்குச்சொப்புளிததலர்ந்த
தோட்டணிக்கமலககிழவனைவெய்திததுணையடிபழிசசிநின்றுரைப்பார்.

முக்குணப்பகுப்பினமூவருமாகாணமுமுததொழிலியற்றியோயெய்குந்
தொககநின்விழிப்பினிமைப்பினிமலாகருதமீதாமறமுமைமாடுகக்குமாமா
லொக்கநாமிறப்புககஞ்சிவந்தடைந்தேமுலப்புறுதிருந்துபோர்புரியத்
தக்கதோருபாயநதெரிதமெதமாகுரையாயதலைவனேயென்பதுகேட்டு.

மடநடைக்கலைமாமினமுலைக்கிளைககுமார்பினுமவரொடுமெழுந்து
நடலைதிர்காட்சிவைகுந்தவரைப்பினண்ணுறுபுவிழியுறக்கண்டான்
படவராவணையின்முனிவரர்பழிசசமலர்மகளபதாம்புயம்வருட
வடர்சிறைக்கலுழனமுதலியோர்சூழவறிதுயிலமாந்தநாயகனை. ௪

திசைமுகன்முதலோர்திருமாலுககுறைத்தல்.

கண்டுநாத்தழும்பததனிததனிதுதித்துககண்டுயிலலுப்பிமுன்வணங்கி
முண்டகன்முதலாஞ்சுராசுரர்குழுமிமொழிவராலிறப்பினுக்கஞ்சி
யொண்டளிர்ச்சரணஞ்சரணமென்றடைந்தேமுலப்பினைக்கடக்குமாறெமக்குத்
தண்டுழாயலங்கற்கருணையங்கடலேசாற்றெனநாரணனெழுந்து. ௫

நெடிதுபோதெண்ணிச்செய்வகைதுணிந்துநீயிர்மற்றஞ்சலிரினிநா
முடிவுறுதிருப்பக்கடல்கடைந்தெடுத்துமுனிவறப்பருகுவாமமிழ்தங்
கடிபடுமமிழ்தம்பருகிடினிறப்பைக்கடக்கலாமென்றலுங்களிகூர்ந்
தடியிணைவணங்கிககடையுமாறெவ்வாறளக்கரையெனவினவினரால். ௬

இந்திரைகொழுநனுளத்திடையெண்ணியெறிபுனலருவியஞ்சாரன்
மந்தரப்பறம்புமத்தெனநாட்டிவாசுகிகயிறெனப்பூட்டிச்
சுந்தரத்திருப்பாற்கடலினைக்கடைந்துசுவையமிழ்தெடுத்துமென்றுரைப் [ப
வந்தநாளவர்தாம்பெற்றபேருவகையாரெடுத்தியம்பவல்லவரே. ௭

### திருப்பாற்கடல்கடைதல்.

கரைபொருதிரங்கும்வெண்டிரைத்திருப்பாற்கடலிடையாவருமெய்தி
நிரைமணிக்குவட்டுமந்தரகிரியின்மெலியுடல்வாசுகிசுற்றி
வரைபடுதிரடோளசுரருஞ்சுரரும்வலிப்புழியவர்தமைநோக்கி
விரைநறுந்துளிக்கும்பசுந்துழாயலங்கல்விண்ணவனென்றுபேசவனல்.

இருதிறத்தவருள்வான்சுவையமிழ்தமெறுழினாற்கடைந்தெடுத்தவரே
பருகிடத்தகுமாலேனையோரெய்தற்பாலதன்றென்பதுகேட்டுப்
பொருதிறலசுரர்மகிழ்ந்தெழுந்தார்த்துப்பொறியராவிருபுடைபற்றித்
தருவலிமிகையாலீர்த்தனரசலந்தன்பெயர்நாட்டியதன்றே. ௯

இயக்கலாற்றாமையிளைத்ததானவரையெதிருறுங்கடவுளர்நோக்கி
வியந்தகவெழுந்துநீரினிவிடுமின்விடுமினென்றெய்திவாசுகியை
வயத்துடன்பற்றியீர்த்தனரவரும்வலியிழந்தெய்த்தனர்நின்றார்
செயத்தகுந்திறமேதினியெனயாருஞ்சிந்தையிற்கவலைகூர்பொழுது. ௧0

வலனுயிர்செகுத்தவானவனுயிர்த்தவாலியாங்குரக்கினத்தலைவன்
பலகடலிடத்துஞ்சென்றுபாண்டரங்கன்பதாம்புயமருச்சனைபுரிவான்
புலனுயர்சிறப்பினுயிடையியலபாற்போதலுமாலயன்முதலோர்
நலமுறநோக்கியுவகைமீதூரநல்வரவேற்றுநின்றனரால். ௧௧

வந்தவனயனைமாயனைவணங்கிவானவர்கைகஞ்சலியளித்துச்
சிந்தனையொருகணிரிவண்முயலுஞ்செயலிதுவென்னெனவினவக்
கந்தமாமலரோனுள்ளவாறுரைத்துக்கருதருந்தெய்வமாங்குன்றைத்
தந்ததாமெமக்குநீதுணைசெய்யத்தகுமெனவிறுத்தனனவனும். ௧௨

பெருவலிபடைத்தசுராசுரர்குழூஉப்பெறலருந்திறந்தினிவெளியே
ஒருவனேவலனேயாமெலாமொருங்குற்றுததியைக்கடைதுமேற்றெய்வந்
தருவதுகாண்டுமெனநகைதயம்பித்தானவர்கடவுளரெல்லாம்
வருமெனவிளித்துவாலிமாசுணத்தின்வாய்ப்புறம்பற்றிநின்றீர்த்தான். ௧௩

பருங்கொலைப்படுத்தையசுரருஞ்சுரருமபற்றினர்தனித்தனியீர்த்து
மொருங்குநின்றீர்த்துமாற்றலாதுடைந்துதன்புடையொதுங்குதல்காணூஉக்
கருங்கழலவாலிவிடுமினீமென்றுகைகட்செவிவாலமும்பணமு
மிருங்கையிற்பற்றிமுறுகுறவாங்கியீர்த்தனன்கடைந்தனன்புணரி. ௧௪

ஒருகரமுடகமொருகரநீட்டியுவவுநீர்மதுகையிற்கடைபோ
தருவரைக்குடுமிமந்தரங்கடலுளாழ்தலுங்கச்சபவடிவாய்த்
திருமறுமார்பன்றாங்கவச்சயிலந்தெண்கடன்மீச்செலமிதப்பக்
கருமுகிலவண்ணன்கரமிசைநீட்டிக்கனங்கொளவிருத்தினன்வரையே.

#### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருத்தியபின்னரியேறுமிடம்வலமாகவரையைத்
திரித்துக்கடுகச்சுழற்றித்தெண்டிரைவேலையலறிச்
சுரித்துவிரித்துப்பரந்துதுள்ளிக்கொதித்தெழுந்தாட
வருத்திக்கலக்கிமறுகவலித்துக்கடைந்திடுகாலை. ௧௬

### ஆலாலந்தோன்றியது.

ஆற்றரிதாகியிளைப்புற்றரவிறைவாயினுரைகள்
காற்றியுயிர்ப்புவிடலுங்கடுஞ்சுடுநீர்க்கடலெங்குந்
தோற்றுநுரைகள்பரம்பித்தொக்ககலப்பிடைநின்றுங்
கூற்றுறழாலாலமென்னுங்கொடுவிடந்தோன்றியதன்றே. ௧௭

அளக்கர்முழுதும்வறப்பவண்டகடாகமழற்றத்
துளக்கிலுயிர்த்தொகைமுற்றுஞ்சுட்டெழும்வல்விடத்தீயின்
கிளக்கருவெம்மைகதுவிகக்கேழுடல்வாடிவதும்பி
விளக்கமுறும்புகழ்வாலிவெரீஇயினனோட்டமெடுத்தான். கஅ

வருகனல்வல்விடந்தாக்கிமாயவன்வெண்ணிறமேனி
கருகினனன்றுதொடங்கிக்கரியனெனப்பெயர்பெற்றான்
றிருமலரோனுடற்பொன்மைதீர்ந்துபுகைநிறமுற்றான்
வெருவுதிசைக்கிறையோரும்வேற்றுருவெய்தியழுதார். கசூ

## தேவர்கள்திருக்கயிலையையடைதல்.

யாரும்பதைபதைத்தோட்டமெடுத்தினிச்செய்வதென்னென்று
சார்புபிறிதொன்றுங்காணார்தாளொடுதாள்களிடற
நாரணனேமுதலானோர்நணணினர்கள்இன்பமளிக்குஞ்
சீர்கெழுவெள்ளிக்கயிலைத்திருமலைநோக்கிநடந்தார். உ0

வெங்கதிர்தாக்கவுடைந்தோர்பொன்னிழலசேர்ந்தெனச்சென்று
மங்கலவெற்பினையெய்திவஞ்சவிடத்துயர்நீங்கி
யங்கணவரையைவணங்கியருளொடுமேறியிளங்கா
றங்கியபோகபுரமுன்சற்றிளைப்பாறியிருந்தார். உக

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

படைத்தபெருந்துயரநீங்கிநாலறிசையுங்கவலைவிடுத்துப்பாரப்போரங்கண்
விடைக்கொடியோனதிருக்கயிலைவிரிசுடர்வெண்கதிர்நீட்டுமவிளக்கந்தன்பா
லடைக்கலமென்றுறுந்தமைதொடர்ந்துவருங்கொடுவிடமங்கயலுறுமைய
புடைத்துரத்தித்தள்ளுவாவீட்டுத்தடங்கைகளெனப்பொலிவகண்டார். உஉ

கடலகடுகிழிதெழுந்தவிடவேகமாற்றாதுகழியநொந்தா
ரிடர்பெரியரளித்தக்காரந்தோவெவாறிரங்கினபோலிலகும்வெள்ளித்
தடவரைமேற்றாங்கருவிபனிததிவலைநீர்தங்கண்முகத்துவீசப்
படருநெடுந்தடங்கொடிகளசாந்தாறறிதந்தாழ்விலமசையயும்பான்மைகண்டார். உந

அச்சமுறவருவிடத்தையாமடுத்துப்பருகுவலென்றாற்றல்சாலப்
பச்சைவரையுயர்கயிலைப்பரமபுவாயங்காந்தபரிசேபோலச்
செச்சைமணிகிடந்திமைக்குமுழைகடொறுமவெண்ணீறுதிகழப்பூத்த
பொச்சமிலாமுனிவர்குழாநிரைநிரையாவீற்றிருக்குமபொலிவுகண்டார்.

அழுந்தாழிப்புனலகத்துவடவையுமக்கடுவெம்மைக்காற்றாதங்க
ணெழுந்தோடிமுன்னுகத்திருக்கயிலைப்பருப்பதத்திலெய்திமுன்னர்
விழுந்தாறுதன்னிலவரங்கிடப்பதெனவயங்குமாளிமேவுசெக்கர்ச்
செழுந்தாமமணிபடுத்தநெறிநோக்கியந்நெறிமேற்சேறலுற்றார். உரு

இந்திரனார்பட்டதுயர்க்குளமிரங்கியவருருமெழிலிசேர
வந்தணுகியெந்தைபிரானதிர்நின்றுமுறையிட்டான்மானமுன்னர்
முந்துகுடமுழமுதலாம்பேரியங்களபலமுழங்குமுழக்கங்கேட்டுச்
சிந்தைநனிகளிகூரச்சார்ங்கனயன்முதலியோர்திளைத்துச்சென்றார். உசு

யாமெய்திமுறையிடும்போதருடருமோமுனிந்திடுமோவெம்மானென்று [று
நாமெய்திச்செலவோர்களாங்காங்குப்பூதகணநாதர்கூடித்
தோமெய்திப்பிழைத்தோருஞ்சரணடையினருள்சுரக்குமெங்கோனென்
றாமெய்தித்தம்மியல்பிற்புகழெடுத்தோதுவகேட்டுத்தளர்வுதீர்ந்தார்.

தம்மினத்தோர்வரவுதனைமுன்னெய்தியறிவிப்பச்சார்வோரென்ன
வம்மலைவாழெண்ணிலாவரிபிரமர்சேவைசெய்யுமமையம்பார்த்துக்
கொம்மைமழவிடைப்பெருமான்கோயிலினுட்சென்றணையக்குறித்தநோக்கி
விம்மியெழும்பெருமகிழ்ச்சிதலைசிறப்பமாலயனும்விரைந்துசெல்வார்.

எம்பிரானுருககொண்டங்குறைவோரையவனெனச்சென்றெய்தியோர்பா
லம்பிகையிலாமையினாலவனல்லரெனத்தெளிந்தேயப்பாலேகிச்
செம்பதுமைவளர்மார்பனயன்முதலாம்யாவர்களுஞ்சேரவீண்டி
நம்பனமர்ந்தினிதுறையுந்திருக்கோயிற்கடைத்தலையைநண்ணினரால்.

கணங்கள்மிடைமுதற்றடையிற்றடையுண்டுநின்றனர்கள்கருடதேவ
ருணங்குதயித்தியரிரண்டிற்கடவுளர்கண்மூன்றிலொருநான்குதன்னி
லணங்கறுசாத்தியர்முதலோர்மருத்துவசன்முனிவரெலாமைந்திலாறி
னிணங்கமழ்வேற்றிசைக்கிறைவரெண்மர்களுந்தடையுண்டுநின்றாரன்றே.

சிவபெருமானைத்தரிசித்தல்.

தாமரையோன்றிருமாலுமைந்தடையினீங்கியப்பாலாந்துதனித்தடையின்வைகுந்
தேமருதார்நந்திபிரானடிபணிந்தாரவனையாண்டுசெலுத்தச்சென்று
காமருசீரம்பையர்களாடலொடுபாடலொடுகடியார்செல்வப்
பூமருபேரவைநாப்பணமர்ந்தருளாம்பெருவாழ்வின்பொலிவைக்கண்டார்.

கண்டுபெருங்களிகூர்ந்துகணநாதர்பிரம்படியிற்கலங்கியேங்கி
மண்டியபேரச்சமுடனன்புமிருபுடையீர்ப்பவணங்கித்தாழ்ந்தே
யண்டனெதிர்நிலைநின்றஞ்சலிசென்னியிலேறவிழிநீர்வாரக்
கொண்டமயிர்ப்புளகமுறப்பலமுறையும்பணிந்தெழுந்துதுதிக்கப்பட்டார்.

கொச்சககலிப்பா.

தூரத்தேயிவர்நிற்பவணித்தாகத்தொழுதணைந்து
வாரத்தானந்திபிரான்மலரோனுந்திருமாலுஞ்
சேரத்தாம்வந்ததிறம்விண்ணப்பஞ்செயக்கொன்றை
வீரத்தாருடையானுமீண்டவரைத்தருகென்றான். ௧௩

நந்திபிரான்றிருப்பிரம்பையசைத்தருளநாண்மலர்மே
லந்தணனுநெடியோனுமஞ்சலிசேர்கரத்தோடும்
வந்தணுகிமருங்குறலுமணிநிலாநகைமுகிழ்ப்பப்
பைந்தொடியாளொருகூறுடைப்பரம்பொருண்மற்றிதுகூறும். ௧௪

மாயனீயிருந்தையுருவாய்த்தனையென்மலர்மேவுந்
தூயநீபுகையுருவந்தோற்றினையென்னென்றருளு
மாயபொழுதாண்டாண்டுகணநாதரலைப்பமலிந்
தேயமுறைமுறையிட்டார்புறநின்றவிமையவர்கள். ௧௫

ஆங்கவர்கண்மிகமுழங்குமாவோசைதிருச்செவியேற்
றீங்கிதெவனென்றருளவம்புயத்தோனெதிர்வணங்கிப்
பாங்குடையசுராசுரரும்பாதங்கடொழப்போந்தார்
பூங்கழற்காலவெம்பூதகணந்தடுப்பப்புறநின்றார். ௧௬

விளித்தருளிக்கருணைசெயவேண்டுமெனத்திருநோக்க
மளித்தெந்தைநந்திதனைப்பணித்தருளவவனெய்தித்
தெளித்தெழுபலகணத்தோரைத்தடுத்துள்ளாற்செல்கவெனத்
துளித்தமதுப்பிரம்பசைத்துச்சுராசுரரைப்புகுவித்தான். ௧௭

உய்ந்தனமுய்ந்தனமென்றேயும்பர்களுந்தானவரு
மூந்திமணிவாய்தலிடைமுடிநெருங்கநுழைந்தேகி
யெந்தைபிரான்வீற்றிருக்குமோலக்கமெதிர்நோக்கிப்
புந்திநிறைகளிகூரத்தொழுதெழுந்துபோற்றினர். கஅ

நான்முகன்முறையிடு.

அங்கவரையெதிர்நோக்கிநகைத்தருள்கூர்ந்தருள்வாரி
பங்கயத்தோயுருமாறிமுகஞ்சாம்பிமெய்பனிப்ப
விங்கிவர்கட்குற்றதெவனென்றருளமறைப்புத்தேள்
செங்கையிணைமுகிழ்த்திறைஞ்சிவிண்ணப்பஞ்செய்கின்றான். கசு

ஐயனேயடியேங்களறியாமைத்தொடக்குண்ட
கையரேமாதலினுன்கண்ணருள்பெற்றெய்தாது
வெய்யஅறுஞ்சுவையமிழ்தம்பெறற்பொருட்டுவெவ்வினையேம்
பையரவான்மந்தரத்தாற்பாற்கடலைக்கடைந்தேமால. சo

துன்றியதீஞ்சுவையமிழ்தந்தோன்றாதுவிடந்தோன்றி
யின்றுசராசரமனைத்துமெரிசெய்துநீறாக்கிற
றன்றினரெரித்தாயுன்னருளன்றிமுயல்வதெலா
மொன்றொழியவொன்றாமென்றுரைக்குமொழிமெய்யாமே. சக

இற்றொழிந்தோரொழியவேறெஞ்சியயாஞ்சிலர்வந்திங்
குற்றனம்வண்ணமுமாறியுயங்கினோநீயலதோர்
பற்றிலேமிவ்வளவிலுலகமெலாம்பாழாகுஞ்
சற்றுமினித்தாழாதுதன்னளிசெய்திரங்காயால். சஉ

இதுபொழுதுகாத்திலையேலெமக்கிறுதியின்றேயாம்
விதுமுடித்தபெருங்கருணைவெள்ளமேயென்றிரந்தான்
மதுமலர்த்தார்விண்ணவருமனங்கலங்கிமுறையிட்டா
ரதுவுணர்ந்தெம்பெருமானுமஞ்சலிரென்றருளி. சங

சிவபெருமான்விடமுண்டருளுதல்.

கலிநிலைத்துறை.

இருந்தவாறுளத்தெண்ணினன்மலர்க்கரநீட்டக்
கருந்தழற்கடுகமலமீச்சிறையளிகடுப்பப்
பெருந்திருக்கரத்தெய்தியேர்செய்துபேராளன்
றிருந்துபார்வையிற்சிற்றுருவாயடங்கியதால். சச

அண்டர்மாலயனுலகெலாமதிர்வுறப்பரந்து
மண்டுவெஞ்சினக்கடுவலிபோய்மலர்க்கரத்தி
னெண்டளிர்ப்பதத்தடியவர்சிந்தைபோலொடுங்கக்
கண்டவெம்பிரான்பெருமையார்கட்டுரைத்திடுவார். சரு

தன்னடித்தொழும்பாற்றுமோர்தமிழ்முனிகரத்தி
லுன்னுமுன்கடற்புனலெலாமுழுந்தளவாமே
லன்னதென்கடற்றோன்றியபெருவிடமம்மான்
பொன்னலர்க்கரத்தடங்கியதென்பதோர்புகழோ. சசா

சேயிதழ்த்தடம்பங்கயக்கரத்திடைச்சிவனுங்
காயுநஞ்சினைக்காண்டோறும்பதைக்கும்வானவரைப்
பாயுபால்விடைப்பண்ணவன்பரிந்தெதிர்நோக்கித்
தூயவெண்ணிலாக்குறுநகைமுகிழ்த்தனன்சொல்வான். சஎ

செறியுஞ்சினையுண்குமோசேவிடைச்செல்ல
வெறிகுமோபுகன்மின்களென்றருள்செயவிமையோர்
வறிதுமூங்கையர்போறலுமொருபுடைமணந்த
நெறிகருங்குழன்மலர்முகநோக்கினனிகழ்த்தும். ௪௮

அரிவைகேட்டியிக்கொடுவிடமகிலமுமொருங்கே
யெரிமடுத்ததுன்பார்வையாலின்னமுதாமாற்
புரிவதொன்றிலைபருகினாற்புகறிநீயென்ன
வரிவிழிக்கடைதோய்மணிக்கணங்குழைமடமான். ௪௯

உலகெலாந்தருமன்னையவ்வுலகின்மேல்வைத்த
வலகிலாப்பெருங்கருணையாற்கொழுநன்மாட்டமைந்த
தலைமையன்பினான்மலர்முகமொருபுடைசாய்த்துக்
குலவுசெங்கையின்விடத்தினைநோக்கினள்குறித்து. ௫௦

மாழையுண்கணிநோக்கலுந்திருவுளமகிழ்ந்து
பாழிமால்விடைக்கொடிமிசையுயர்த்தருள்பகவ
னேழைவானவர்க்கிரங்கியேயினிதுகளனோடி
யாழிவல்விடம்பருகினானகிலமுமுய்ய. ௫௧

பருகுவெங்கடுமிடற்றிடையேகுழிப்பாரா
மருமலர்ப்பிரான்முகுந்தனேவஞ்சநஞ்செம்மான்
றிருமிடற்றினுக்கழகுசெய்தமார்சேயிழையா
ரருமிடற்றுநூல்காத்ததுகாணெனவறைந்தான். ௫௨

மிடற்றுச்செக்கர்வான்மிசைவிடக்கருமுகிலுறநோய்
கெடத்தளிர்த்தபைங்கூழெனச்சுராசுரர்கெழுமிக்
கடற்பெரும்புனலுடைத்தெனக்காதன்மீக்கூர
வடற்கணிச்சியோய்சயசயபோற்றியென்றார்த்தார். ௫௩

நாரணாதியர்கிளர்ச்சியைநோக்கியன்கருளிக்
கோரவல்விடமிடற்றிடையமைத்தனன்குழக
னாரவாயிடைவயிற்றிடையன்றிமற்றிடைக்க
ணாரமைத்திடவல்லவரமிழ்தமேயானும். ௫௪

சகமெலாம்பொடிப்படுத்தெழுந்தழல்விடமிடற்றிற்
றிகழவைத்தனன்முப்புரமெரியெழச்சிரித்தோ
னகலருந்திறத்தெண்குணநிறைந்தபேராண்மைப்
பகவன்மேன்மைமற்றெம்மனோரளவிடற்பாற்றே. ௫௫

கந்தரத்திடையடக்கியகறைவிடங்காணூஉச்
சுந்தரத்திருமாலயன்சுராசுரர்முனிவ
ரிந்திராதியர்கவலைதீர்ந்தெண்ணருங்களிப்பாற்
சிந்தையன்பொடுமஞ்சலிசென்னிமேற்கொண்டு. ௫௬

நீலகண்டனேபோற்றியெண்குணங்களானிறைந்த
மூலகாரணாபோற்றிமுன்சிறுவனுக்கிரங்குங்
காலகாலனேபோற்றியின்றெம்முயிர்காத்த
வேலவார்குழல்பங்கனேபோற்றியென்றிசைத்தார். ௫௭

என்றபோதருள்சுரந்துமக்காற்றலின்றளித்தேந்
தொன்றுபோற்கடல்கடைந்துவான்சுவையமிழ்துண்பீர்
பொன்றிலீரெனத்திருவருள்புரிந்தனன்புனித
ஞென்றுபின்னரும்வேண்டுவேர்மான்முதலும்பர். ருஅ

பொதுமைநீத்துநின்றிருவடிக்கன்புபூண்டொழுகக்
கதுவுநின்னருணொடொறுமெம்வயிற்கலப்ப
விதுமுடிச்சடைவள்ளலேயருளெனவேண்ட
வதுவழங்கினன்விடைகொடுத்தருளினன்மலன். ருசு

விண்டுவாதியோர்சிவபூசையால்பிறவாநலம்பேறல்.

மீண்டுமாலயன்முதலியவிண்ணவர்குழுமி
யீண்டுநம்பொருட்டிருள்விடம்பருகினனிறைவன்
பூண்டவிப்பெரும்பிழையறும்படிசிவபூசை
யாண்டுசெய்துமென்றெண்ணினர்தெளிந்தனரிதனே. சூ0

தலமுந்தீர்த்தமுமூர்த்தியுஞ்சிறந்தமெய்த்தானங்
குலவுகாஞ்சிமாநகரமாமங்கர்குறுகி
நலமுறச்சிவபூசனையுஞற்றிடினசியா
வலகில்பாவமுநசிக்குமென்றப்பதியெய்தி. சூக

அன்றுதம்முயிரளித்ததுமணிகண்டமென்னு
நன்றியான்மணிகண்டநாதப்பெயரிலிங்கம்
வென்றபுண்ணியகோடிநாதர்க்குமேல்பாங்க
ரொன்றுமன்பிஞலிருத்தினர்பூசனையுஞற்றி. சூஉ

மணிகண்டேசர்தம்மருளினுல்வல்பிழைதவிர்ந்து
பணியினற்கடல்கடைந்தமிழ்தெடுத்தனர்பருகித்
தணிவில்வெஞ்சினத்தானவர்தமைத்துரந்தகற்றிப்
பிணியுநீங்கினரிறப்புருப்பெருநலம்பெற்ருர். சூங

அத்தலத்திடைத்தன்பிழையகலவாசுகியும்
பத்தியிற்பணுமணீசனைப்பண்புறவிருத்திச்
சுத்தநீர்நிறையனந்ததீர்த்தத்தடந்தொட்டு
நித்தமக்கரைக்கண்ணிருந்தருச்சனைநிரப்பி. சூச

பணுமணீசனைத்தன்பணமணிகளாற்பரவி
நணுவகத்தமர்நம்பனேநலிவுசெய்விடத்தை
யுணுவெனக்கொளுமுத்தமாவெனத்துதித்துமையாண்
மணுளன்மேனியிலிழையெனப்பயிலவரம்பெற்ருன். சூரு

கொங்கலர்ந்தபூந்துணர்தொறுநறுநருக்கொழிக்கும்
பொங்கர்சூழ்கலிக்கச்சியுட்பழமறைப்பொருளா
யங்கண்வாழ்மணிகண்டனையருச்சனையாற்றித்
துங்கமுத்தியிற்சேர்ந்தவர்தொகுப்பினெண்ணிலரால். சூசூ

அறுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடுங்காலமிதுவென்னவிடமெழலுநனிவெருவியயன்மாலேனோர்
கொடுங்காலனறனைக்குமைத்தகுரைகழற்கீழ்ச்சரண்புகுதக்கொதித்துவாழ்நாள்
பிடுங்காமலருள்புரிந்தபரம்பொருளேயன்றியுமோர்பிரானுண்டென்ன
நடுங்காதார்தமைக்காணப்பெற்றிடினுமென்னுள்ளநடுங்குமாதோ. சூஎ

மணிகண்டேச்சரப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - சுசுக.

கலிநிலைத்துறை.

வளைத்தபாப்பணியணிமணிகண்டநாயகனு
முளைத்தவெண்பிறைக்கண்ணியோன்வரவிதுமொழிந்தாம்
வளைத்தருளினாலிளைத்துறும்வியாதனைக்காத்த
விளைத்துச்சார்ந்தவர்சார்பினான்வரவினியிசைப்பாம். க

வியாதன்பொய்யுரைகிளத்தல்.

பாராசரப்பெயர்முனிவரன்பழுதறுவரத்தாற்
றராதலத்திடைத்தோன்றுநான்மறைதனிப்பதினெண்
புராணமேனவும்பகுத்துயர்புரவுபூண்டோங்கிப்
பிரானெனத்தகுவியாதனும்பெரியவன்மேனாள். உ

கொடியபாதகக்கலியுகம்வருநிலைகுறித்துப்
படியில்யாங்கினிச்செல்வமென்றஞ்சிமெய்பனித்துக்
கடிநறும்புனற்கங்கைசூழ்காசியினெய்தி
முடிவினமாதவஞ்செய்துவீற்றிருந்தனன்முறையால். ௩

ஆங்கண்மெய்த்தவராயாவருமவனடிவணங்கி
யிங்கெமக்குநீமறைமுடிபுண்மையீதென்னச்
செங்கைநெல்லியிற்றெளிவரத்தெருட்டுகென்றிரந்தார்
வெங்கொடும்பகைவினைகளறும்பெருந்துயர்வியாதன். ௪

மிருதிநூல்புராணத்தொகைவேதநூலங்க ஆறங்கம், நால்வேதம்
மிருதிகைப்படுநியாயமாயுண்மறையெழிற்கந்-
தருவவேதம்வில்வேதமோடருத்தநூலிவற்றின்
பொருளினுண்மைமற்றிதுவிதுவெனத்தெளிபுகன்றான். ரு

பெருவலித்தவமுனிவரர்கேட்டுமாம்பிறழா
தொருவழிப்படத்துணிந்தொருவார்த்தையினெமக்குச்
சுருதிநூன்முடிபிதுவெனத்தொகுத்துரையென்றார்
மருளின்மூழ்கியசிந்தையின்வியாதமாமுனிவன். ௬

உறுவர்யாரையுநோக்கிமுன்னுரைக்குமாறகத்
தறுகணுண்மையிற்கூறுதலுற்றனன்றவந்தீ
ரறிவுநூலெலாம்பன்முறையாயினுந்தெளியப்
பெறுவதொன்றதுநாரணனேபரப்பிரமம். எ

வண்ணமாமறைநூற்குமேனூலிலைமதியோ
ரெண்ணுகேசவன்றனக்குமேற்றெய்வமுமில்லை
கண்ணுமெவ்வகைநூல்கட்குந்துணிபிதுகாண்மி
னுண்மையுண்மையீதெனக்கரமெடுத்துநின்றுரைத்தான். அ

கேட்டமாதவர்வெரீஇயினர்கிளர்மறைப்பொருட்குக்
கோட்டமாமிதுவெம்மனோர்கோட்டக்கதன்று
ஞட்டியீங்கிவன்புகன்றதென்னென்றுளநடுங்கி
நீட்டுசெஞ்சடைமுனிவரன்றன்னைநேர்நோக்கி. ௯

வாதராயணநீயிவண்மொழிதருமாற்றம்
வேதநூற்பொருளுண்மையேயாமெனில்விசுவ
நாதனார்திருமுன்பெமக்குரையெனநவின்று
ரோதுகேனெனமூர்க்கனுமெழுந்துசென்றுற்று. ௧௦

விச்சுவேசன்முன்னின்றிருகரமிசைநிமிர்த்தாங்
கச்சமின்றிமுன்புகன்றதேபுகன்றனனந்தோ
விச்ஸ்ச நூல்பலகற்பினுஞ்சிவனருள்விரவாக்
கொச்சையோர்தமைவிடுவதோகொடுமலச்செருக்கு. கக

அறிவுபோலடர்ந்தெழுமறியாமையின்வலியாற்
பொறியிலானிதுகிளப்பவும்வெகுண்டிலன்புனிதன்
மறுவில்கூற்றெலாந்தன்பெயரெனுமறைவழக்கால்
வெறிமலர்க்குழலுமையொடுமெகிழ்ந்துவீற்றிருந்தான். கஉ

நந்தியெம்பிரான்வெகுண்டுநாண்மலர்க்கரமெடுத்த
வந்தவண்ணமேயசைவறநிற்குமாசபிப்ப
மந்தனுயினனிமிர்த்தகைமடக்கவல்லாமை
நிந்தையாற்சிலைத்தூணமொத்தசைவறநின்றுன். கங

தெற்றற்செஞ்சடையெம்பிரான்றிருமுன்புநாட்டும்
வெற்றித்தம்பமொத்திலகிவல்லிடும்பைகூர்வியாதன்
பற்றிச்சிந்தையினெடியமாலிணையடிபரவ
வற்றைப்போதுமுன்றோன்றிநின்றச்சுதனறைவான். கச

வியாதனுக்குவிண்டுபுத்திபுகட்டல்.

என்னகாரியஞ்செய்தனையென்னையுங்கெடுத்தாய்
பன்மறைப்பரப்பியாவையும்பாற்படுத்தவற்றுட்
சொன்னமெய்ப்பொருளுண்மையைத்துணிந்தநீயந்தோ
கொன்னுமிம்மயக்கெவ்விடைப்பெற்றனைகூறுய். கரு

ஏனையாரையுமறத்துறந்தியாவருமென்றும்
பான்மையிற்றியானஞ்செயப்படுமொருமுதலவன்
மேன்மைகூர்சிவனெருவனேயெனவிரித்தன்றே
நான்மறைத்தலையாமதர்வச்சிகைநவிலும். கசா

யாமெலாமவனிணையடித்தியானஞ்செய்பசுக்க
ளாமெனத்தெளியவனருள்சேர்தலிற்பசுவும்
பூமிசைத்தியானப்பொருளாமெனப்புனைந்து
தோமறச்சிலநூல்புகலுண்மையுந்துணியாய். கஎ

அறிஞர்கொண்டகோட்பாடிதுவறிந்திலையம்மா
பிறிவிலாணவச்செருக்கினின்மயங்கியபேதாய்
வெறியநீயினியுய்வதுவேட்டனையாயிற்
குறிபிறழ்ந்திடாதென்னுரைமெய்யுறக்கோடி. கஅ

மந்திரத்தழன்மகத்தினுக்கிறையவன்மகவான்
சந்தமாமறைக்கிறையவன்றமரைக்கிழவ
னிந்திராதியாமுலகினுக்கிறையவன்யானே
மைந்தனேயெனக்கிறையவன்மணிமிடற்றிறையோன். கக

அகிலநாயகனவற்குமேலிறையவனில்லை
யகிலலோகமுமவன்றிருவாணையினடக்கு
மகிலலோகமும்படைத்தளித்தழிப்பவனவனே
யகிலநூல்களுமுரைத்திடுந்துணிவிதுவாமால். உ0

வானமேத்தயான்வைகுந்தவாழ்வுபெற்றதுவு
ஞானநான்முகன்சத்தியவுலகாண்ணியது
மேனேவிண்ணவர்தத்தமவாழ்க்கையெய்தியது
மானுயர்த்தவனருட்குறியருச்சனைப்பவனல். உக

அன்னவன்றிருவடிகளேசரணமென்றடைமோ
வின்னதாயநின்மயக்கினைவிடுமெதியின்றேற்
பின்னல்வேணிநீகெட்டனைபிறரையுங்கெடுக்க
வுன்னுகின்றனையென்வெகுண்டுரைத்தனன்றிருமால். உஉ

வியாதன்முனிவர்மேல்முனிதல்.

வாயுறுத்தியகடுமொழிகேட்டனன்மற்றைத்
தூயவானவத்தொகையெலாந்துரும்பெனக்கழித்தான்
பாயுமால்விடைப்பகவனேபரமெனத்தெளிந்தா
னேயுமாறருள்கிடைத்துயரிருந்தவத்தலைவன். உங

மெய்த்தவத்தவர்தமையெதிர்நோக்கிமேதகைபி
ரித்தகைத்தமாலுமகருமென்போலவெய்தியதோ
சுத்தமாமறைமுழுவதுந்துகளறத்தெரிந்த
சித்தர்காளினைவினவியதென்கொலோசெப்பீர். உச

விச்சுவன்சிறைப்புள்ளரசுயர்த்தவன்விளம்பும்
விச்சுவாதிகனெறுழ்வலிச்சினவிடையூர்தி
யெச்சமேசுரும்புளர்துழாயலங்கலானென்ப
வெச்சநாயகன்பொலந்துணரிதழிமாலிகையான். உரு

மாயையாங்கொடுமுரன்றனைச்செகுத்துயர்வயவன்
மாயையாள்பவன்முப்புரங்களற்றியவள்ளல்
சாயன்மாமயில்வளிதையேநாரணனறியார்
சாயவென்றசீர்ப்புருடனுங்கண்ணுதற்றலைவன். உசு

என்னமாமறைமிருதிநூல்புராணமற்றெவையும்
பன்னுகின்றதிலையுறப்பாலதொன்றுளதோ
புன்மருட்சியின்மயங்கினேன்புலங்கொளத்தெருட்டா
தென்னையிவ்வணங்கண்டனிரிதுநுமக்கழகோ. உஎ

சிவனையாவரேயருச்சனைசெயாதவர்சிவன்மற்
றெவரையாயினுமருச்சனையியற்றியதுண்டோ
கவர்மனத்தினையொழித்தினியாமெலாங்கவலா
தவன்மலர்த்துணைச்சரணமேயடைதுமென்றியம்பி. உஅ

வியாதன்வேண்டுகோள்.

பவளமுண்டகக்கிழத்திதோய்பணைப்புயக்குரிசி
றவளமேனியைநீனிறமாக்கிவெண்சலதி
துவளவந்தெழுங்கொடுவிடமிடற்றினிற்றாங்கக்
கவளமாக்குநின்பெருமையார்கணித்திடவல்லார். உகு

சிரித்தெரித்தனைமுப்புரந்திறற்சமன்வாழ்நா
ளிரித்தழித்தனையுதையினுலிலங்கையார்க்கிறையை
நெரித்துவீழ்த்தினையெருவிரனுதியினினீருப்
பொரித்துவிட்டனைகாமனைப்பொறிநுதல்விழியால். ஙo

பிரமனார்சிரமுகிரினிற்பேதுறக்கொய்தாய்
சுரர்கள்யாரையுஞ்சிறுவிதிவேள்வியிற்றொலைத்தாய்
நரமடங்கன்மீன்வாமனன்கூர்மநற்கேழ
லுரமெலாமறத்தடிந்தனையொவ்வொருகூற்றால். ௩௧

அந்தகன்றனைமாயனைச்சூலமீதமைத்த
வெந்தைநின்பெருந்தகைமையானென்னறிந்திசைப்பேன்
சிந்தைமையலிற்றொழுத்தையேன்செய்பிழைபொறுத்தே
யுந்துபேரருட்கருணையாலுய்வகையருளாய். ௩௨

என்றுகண்கணீர்சொரியநாத்தழும்பநின்றேத்தி
யொன்றுகாதலானெக்குநெக்குருகியான்பிரிந்த
கன்றுபோற்பதைத்தலந்திரந்தயருமக்காலை
கொன்றைவார்சடைக்குழகனுங்கருணைகூர்ந்தருளி. ௩௩

சிவபிரான்திருவாய்மலர்ந்தருளல்.

வெள்ளியங்கிரியெழுந்தெனவிளங்கொளிவிடைமேல
வள்ளைவார்குழையுமையொடுமகிழ்ந்தினிதேறிப்
பிள்ளைவாரணக்கடவுளும்பிறங்கெரிவடிவே
லள்ளிலைப்படையேந்தலுமிருபுடையணுக. ௩௪

பிறங்குசக்கரபாணியும்பிரமனுமிருபா
லறங்குலாந்திருவடியிணைதாங்கினர்நடப்ப
மறங்குலாம்படைக்கடவுளர்வான்மிசைமிடைந்து
கறங்குவண்டுறுக்கற்பகமலர்மழைபொழிய. ௩௫

எட்டுமாதிரத்தலைவரும்போற்றெடுத்திறைஞ்ச
வட்டவெண்குடைநந்திதன்றிருக்கரம்வயங்க
கட்டுசாமரையுருத்திரகன்னியரிரட்ட
வொட்டிமாகதர்சூதர்கள்வாழ்த்தொலியெடுப்ப. ௩௬

நீண்டசெஞ்சடைப்புதுமதியிளநிலாவிரிப்ப
வீண்டுபூதவெங்கணங்களோடெதிரெழுந்தருளி
மூண்டபேரருளூற்றெழக்குறுநகைமுகிழ்த்து
மாண்டசீர்முனித்தலைவனைநோக்கிவாய்மலரும். ௩௭

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எவனைநீமதித்துநம்முன்சூளுறவிசைத்தாயிந்நா
ளவனிதோகாண்டிமற்றெம்மடியிணைதாங்கிநின்றான்
சவலைநீபேதைநீராற்சாற்றினையெம்மைத்தேறா
துவலையாமதத்திற்பட்டோரிடும்பைநோயுழப்பர்கண்டாய். ௩௮

வடிவுடையெமதிடப்பால்வந்தவன்மாயனேனைக்
கடிமலர்ப்பொகுட்டுமேயகடவுளெம்வலப்பால்வந்தோ
னிடிபுரிதகையோயின்னவிருவருமெம்பாலன்பா
மடியவர்க்கடிமைபூண்டேயணுக்கராயமர்வர்கண்டாய். ௩௯

கற்பங்கடோறுந்தோன்றுங்கணக்கிலாப்பிரமர்மாயர்
முற்பொன்றுதலைகள்கோத்துநாற்றியமுளிபுன்மாலை
பொற்பொன்றுநமதுசென்னிபுயமரைசரணமெங்குஞ்
சிற்பங்கள்விளங்கப்பூண்டதிறமிதுநோக்கிக்காணாய். ௪0

மாண்டவிண்ணவர்களெற்புமாலையும்பலவும்பூண்டே
மீண்டிவைபூண்டதெற்றுக்கென்றியேனின்போல்வார்க்குப்
பூண்டமாலொழிப்பானன்னோர்பொன்றுறுமனித்தவாழ்வுங்
காண்டகுமெமதுநித்தத்தன்மையுங்காட்டக்கண்டாய். ௪௧

சொன்மறைமுடிபுதேறுந்தூயருட்டலைவனீயே
பன்முறையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குமெம்மை
நன்மைசூர்வழிபாடாற்றிமுத்தியினண்ணுகென்னைப்
புன்மருளகலநல்கிமறைந்தனன்பூதநாதன். ௪௨

நாயகன்கிளந்தவெல்லாங்கேட்டுளநடுங்கியஞ்சித்
தீயனேனந்தோகெட்டேனென்னிதுசெய்தேனிந்நா
ளேயுமிம்மடமைக்கேதியாதெனாவியாதனெண்ணி
யாயதோர்மூர்த்தமெம்பானடியிணைசிந்தைசெய்து. ௪௩

வியாதன்சிவபூசைசெய்துவரம்பெறல்.

விருதுடைநகாசிவைப்பின்விச்சுவநாதன்யார்க்கு
மருள்வதுமெய்யேயாகுமாயினுமீங்குவாழ்வார்
தெருமரத்தேவர்கூடிப்புறுகள்செய்பவென்ப
விருவினையுடையேனிங்குவைகுதற்கிடையூறுந்தால் ௪௪

இடையறுகாசிமூதூர்தன்னினுமிருமைசான்ற
விடையருக்காஞ்சிமூதூரெம்பிரானுக்கினியதாகு
மிடையொசிமுலையாள்பாகன்கருணையாலெவர்க்குமவ்வூ
ரிடையிடையூறொன்றின்றிமுத்திவீடெளிதினெய்தும். ௪௫

காசியினிறப்பமுத்திகாஞ்சியைநினைப்பமுத்தி
யாசறவுதவுமென்னுமருப்பொருடுணிந்துசிந்தை
மாசுதீர்முனிவர்கோமானவ்விரைந்துபன்னூசகரோடுந்
தேசினூற்றிசைபோய்காஞ்சித்திருநகரடைந்தானன்றே. ௪௬

திகழ்சிவகங்கையாடித்தேமலரொருமாமூலப்
பகவனைவழிபாடாற்றிமிஞ்சணிர்நதியின்பாங்கர்
நிகழ்மணிகண்டநாதநெடுந்தகைதிருமுவைப்பிற்
றகவினுலிளைத்துச்சார்ந்தார்சார்பினுன்றனைத்தாபித்து. ௪௭

விதியுளிப்பூசையாற்றிவிழைதகத்துதிக்குங்காலை
மதிபொதிசடிலமோலிவரதனுமகிழ்ச்சிபொங்கி
யெதிரெழுந்தருளிவேண்டும்வரமெமனியமடுகென்ன
முதிர்பெருங்காதனீடிமுனிவரன்வேண்டுகிற்பான். ௪௮

ஐயனேயிளைத்துச்சார்ந்தேற்கரும்பெறற்சார்பாமிந்தத்
தெய்வலிங்கத்துநாளுஞ்செழித்துவீற்றிருந்துஞால
முய்வகையவரவர்க்குவேட்டனவுதவாய்நின்றாண்
மெய்வகைப்பத்திநாயேற்கருளிவைவேண்டுமென்றான். ௪௯

அவ்வரமுழுதுமங்நாள்வியாதனுக்கருளியெங்கோன்
பௌவநீருலகம்போற்றப்பைத்தபாம்பல்குற்செங்கேழ்க்
கொவ்வைவாய்க்களபக்கொங்கைக்குலவரைப்பிடியினோடுஞ்
செவ்விதின்வியாதசார்ந்தாச்சிரயமாவிலிங்கத்துற்றான். ௫௰

முழுதுணர்கேள்விசான்றவியாதனேமுறைமைமாறிப்
பழுதுபூண்டிவ்வாறெள்ளப்பட்டனனென்னிலன்றே
வழுவறுநூலொன்றுனுமுள்ளவாறுணரமாட்டா
விழுதையோர்தெளிவர்கொல்லோவிருவருக்கரியானுண்மை. ௫௧

சார்ந்தாசயப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - எ௫௦.

## ௰ சத்ததானப்படலம்.

கலிநிலைத்துறை.

சாத்திரம்வல்லவியாதனையாண்டருள்சார்ந்தாரைக்
காத்தபிரான்றிறமிங்கிதுகட்டுரைசெய்தேமா
லேத்தருமஞ்சுணதிப்புடையேழ்முனிவோரெந்தாய்
சோத்தெனவேத்தியவேழிடமேயவளஞ்சொல்வாம். க

அத்திரிகுச்சன்வசிட்டனருட்பிருகுப்பாசங்
கைத்துயர்கௌதமர்காசிபரோடங்கிராவென்றேழ்
மெய்த்தவரும்பனிசூழிமயக்கிரிமேன்முன்னு
ளுத்தமமானவருந்தவமாற்றலுறுங்காலை. உ

ஆயிதழம்புயவாழ்க்கைநெடுந்தகையாங்கெய்தி
நீயிர்விழைந்தமைகூறுமினென்றலுநேர்போற்றிப்
பாயிருள்சீத்துவிளங்கொளிகான்றெழுபானுப்போன்
மீயுயர்தோற்றமுறுந்தவவேந்தர்விளம்புற்றார். ௩

முதுக்குறைவாளர்பெறத்தகுமுத்தியருட்செல்வ
மதிக்குறைவுற்றுழல்வோர்களுமற்றெளிதிற்கூடப்
புதுக்குமுபாயமெமக்கருளென்னமலர்ப்போதன்
விதுக்குறைசூடிமலர்ப்பதமேத்திவிரிக்கின்றான். ௪

பற்றிகலற்றுக்குற்றமில்சிந்தைப்பனவீர்காள்
கற்றுயர்காட்சிக்கொற்றமிலோருங்கருநோய்தீர்
பெற்றியினுற்றுப்பெறலருமுத்திப்பேறெய்து
மற்றமிலேதுக்கேண்மினுமக்கின்றறைகிற்பேன். ௫

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தருமமென்றியம்புமொன்றேதழல்விடம்பருகுமெங்கோன்
றிருவுளங்கருணைபூப்பச்செய்யுமவ்வருளால்யார்க்கு
மருவருமுத்திப்பேறுவாய்க்குமத்தருமந்தானு
மருள்சிவதருமமாவித்தருமமென்றிருகூறுமால். ௬

பளகறுமிட்டியாதிபசுதருமங்கள்காலத்
தளவையிற்கழியுமென்றும்வச்சிரவரிசிமானத்
தளர்வுறாநிலைபேறெய்துமுயர்சிவதருமமன்பா
லுளமுறச்சிவனையெண்ணன்முதல்பலவுளவாமன்றே. ௭

சிவலிங்கப்பதிட்டைசெய்தலெவற்றுளுஞ்சிறந்ததாகுஞ்
சிவபத்தர்பதிட்டைதானுமன்னதேயிவைதாஞ்செல்வச்
சிவனமர்தலங்கடம்மிற்செய்பயன்கோடிமேலாஞ்
சிவநிறைகாஞ்சிவைப்பிற்செய்திடினனந்தகோடி. ௮

காஞ்சியையினைப்பிற்காசிக்கடிககர்வசித்தபேறுங்
காஞ்சியேயெவற்றினுள்ளுஞ்சிறந்ததுகாண்மினென்னுங்
காஞ்சிசூழல்குல்வாணிகணவனுர்மொழியுட்கொண்டு
காஞ்சியையடைந்தார்மாசுகடிந்துயசெழுவர்தாமும். கூ

அருட்சிவகங்கைநன்னீராடியேகம்பவாணர்
திருப்பதந்தொழுதுமஞ்சட்செழுநதிக்கரையினெய்தி
யருத்திகூர்வியாதநாதனணிமையிற்றத்தம்பேரா
ணிருத்தினரிலிங்கம்பூசையியற்றினரார்வத்தோடும். கO

பச்சிலைபழம்போதேனும்பறித்திட்டுப்பத்திசெய்வோர்க்
கெச்சமிலிருமைப்பேறுமளித்தருளிறைவாபோற்றி
முச்சகமுதலேபோற்றிமுலைச்சுவட்டணியாய்போற்றி
நச்சினுர்க்கினியாய்போற்றியெனத்துதிநவிலுங்காலை. கக

ஆயிடைவெளிநின்றெம்மானததிரிபிருகுவாதித்
தூயரைநோக்கிவைவச்சுதமனுவந்தரத்தி
னீயிரெம்மாணையாற்முனிகழுமேழ்முனிவராமின்
மாயிருமுத்தியீற்றின்வழங்குதுமென்றியின்னும். கஉ

ஏழிலிங்கத்துமெம்மைத்தரிசித்தோர்க்கிருமைப்பேறும்
வாழ்வளித்தருள்கேமென்றுவரங்கொடுத்தகன்முனையன்
பாழ்வினையறுக்குஞ்சத்ததானத்திற்பணியப்பெற்றோ
ரூழ்வலித்தொடகைகுநீங்கியும்பர்கோனடியிற்சேர்வார். கங

சத்ததானப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - எகூங.

# 11· பராசரேசப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

தருமம்பிறழாதசத்ததானத்தின்
பெருமையுரைசெய்தாஞ்சத்திபெறுமைந்தன்
றருதந்தையர்க்கொன்றவரககர்தமதாவி
பருகவழிபட்டபராசரஞ்சொல்வாம். க

விசுவாமித்திரன்சூழ்ச்சி.

மத்தப்புலன்வென்றவசிட்டன்பரவுந்தார்
பத்தையிருமக்கள்பதுமத்தவனைப்பார்
சத்திமுதலானோர்தகவாலிவர்வாழ்நாட்
சுத்தநெறிதேர்விச்சுவாமித்திரனென்போன். உ

அசித்துப்புரஞ்செற்றோனருளாலுயர்ந்தோங்கும்
வசிட்டனுடனென்றுமாறுகொண்டுள்ளான்
வசிக்குந்தவவாழ்க்கைவசிட்டன்குலமெல்லா
நசிக்கும்படியொன்றுநாடியிதுசெய்தான். ங

மன்னர்வழித்தோன்றிவசிட்டன்சாபத்தாற்
றுன்னுமரக்கன்னுஞ்சுதாசனெனும்பெயரோன்
றன்னைவிளித்தேவத்தறுகண்ணவனெய்தி
யிந்நூற்றுவர்தம்மையெடுத்துவாய்ப்பெய்தான். ச

வடமீனவளோடும்வசிட்டனதுகேட்டுப்
படர்கூர்ந்தழுதேங்கியாற்றிப்பறம்பேறிப்
புடவிமிசைவீழப்பூமாதுளநெக்கா
ளுடல்விண்டொழியாமேதாங்கியுய்வித்தாள். ரு

வன்பற்பதமேறிவீழ்ந்துமாயாமே
யன்பிற்புவிதாங்கவயர்ச்சிதெளிந்தேங்கி
யின்பமகவெல்லாமிழந்தசோகத்தாற்
றுன்பக்கரைகாணார்புலம்பிச்சோர்காலை. சா

பராசரசம்பவம்.

கொன்னும்வசிட்டன்றன்குலமைந்தரின்மூத்தோன்
மன்னுந்தவச்சத்தியென்பான்மனையாட்டி
யன்னசெயல்கேளாவரற்றிக்கருப்பத்தாற்
றுன்னும்வயிறெற்றிப்புரளுந்துயர்கண்டான். எ

ஆவாவென்செய்தாயந்தோகெட்டேனென்
ளுவாச்சந்தானத்தானந்தனையெற்றி
மூவாக்குலமுற்றுமுடிக்கமுயல்கின்றாய்
பாவாயெனநைந்துகூறப்பணைத்தோளி. அ

மாமன்மொழிக்கஞ்சிவாளாவமர்போது
தூமென்மலர்க்கூந்தலெற்றுந்துயர்க்காற்றாப்
பூமென்கருப்பத்துட்பொலியுங்குழவிநைந்
தாமென்கனிவாய்விண்டழுபேரொலிகேட்டு. கூ

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இவ்வோதையெவரோதையெனவசிட்டன்றன்னுள்ளத்தெண்ணுநிற்கு
மவ்வேல்லைப்படாகச்சேக்கைமிசைக்கண்படுக்குமறவோன்றேன்றிச்
செவ்வாய்மைமுனிவரநின்சந்தானந்தழைத்தோங்கத்தேயம்வாழ
வொவ்வாதார்குலஞ்சிதையநின்மகனுக்கொருமைந்தனுதிக்கின்றானல்.

அணங்கொருபாலமர்ந்தபிரான்றிருவடிக்குமெய்யன்பனகிலநூலு [ன்
முணர்ந்துதெளிந்தெனையொப்பான்பாணியாதின்னேவந்துறுமாகாணெ
றிணங்கமொழிந்தேகியபின்வசிட்டனுந்தன்மனக்கவலையின்றிவாழ்ந்து
வணங்குமிடையருந்ததியோடானந்தந்தலைசிறப்பவைகும்போது.

சத்திமனைக்கிழத்தியதிர்சந்திபாலுலகுய்யத்தருமம்வாழ
வுத்தமச்சீர்ப்பராசரன்வந்தவதரிப்பவிராக்கதர்தம்மூர்கடோறு
மொய்த்தெழுந்தகுருதிமழைபொழிந்தனவான்முனிததலைவன்மகவைநோக்கி
மெய்த்தமனங்களிகூர்ந்துசாதமுதற்சடங்கனைத்தும்விதியிற்செய்தான்.

இளம்பிறைபோல்வளர்மைந்தனொருஞான்றுமடித்தலமீதிருந்துநோக்கி
வளம்பயிலுமங்கலமின்றிருந்தனையால்யாண்டையன்மற்றெந்தையென்ன
வுளம்பரியப்பயந்தாளைவினவுதலுமவள்கேட்டங்குள்ளமாழ்கி
விளம்புவாள்பிள்ளாயுன்றந்தைதனைவெகுண்டரக்கன்மிசைந்தானென்று.

அழுதிரங்கிக்கண்ணீரானிளமைந்தன்றனையாட்டவருகுசூழ்ந்த
வழுவகன்றமுனிமடவார்முனிவரருமருந்ததியும்வசிட்டன்றானுந்
தொழுதியெனக்கிடந்தரற்றியழக்கண்டுகூவிதிருவருளாலின்னே
முழுதுலகும்வாய்மடுப்பலெனவெகுண்டான்முனிவரிளவேறுபோல்வான்.

வசிட்டமுனிவருபதேசம்.

அம்மொழிகேட்டுயர்வசிட்டனுலகெல்லாமென்செய்யுமப்பாவந்த
வெம்மைநிலையரக்கர்குலம்வேரறுப்பச்சிவபூசைவிழையாயென்ன
விம்முறையேல்விடையூர்தியென்பூசைகொண்டருளியின்னேகல்குஞ்
செம்மைநூற்றுணிபானசிறந்ததலம்யாததனைச்செப்புகென்றான். கரு

கலிவிருத்தம்.

என்றலுமன்றுநீவினையதிற்கலந்
துன்றியபெரும்பதிதூயவானவர்
முன்றிலுமரங்கமுமுகிலுரிஞ்சநீண்
மன்றமுமுழவருக்காஞ்சிமாநகர். கசு

மறுவறுவானவர்மனிதர்மற்றுளோ
ருறுபெருந்தவரெனையுள்ளிட்டோர்களும்
பெறலரும்பேறுபெற்றெய்தும்பெட்பின
திருவழிநினைப்பினுமுதவிமீவது கஎ

பன்னருங்கொடியவெம்பாதகர்க்குமப்
பொன்னகர்வரைப்பினோர்தினத்துட்போர்விடை
மன்னவன்றிருவருளவாய்கருமேயெனி
னன்னையொப்போர்கவினியோதல்வேண்டுமோ. கஅ

ஆயிடைச்செல்கெனும்வசிட்டனாம்புயத்
தூயமென்மலர்ப்பதந்தொழுதெழுந்துதன்
றாயினைவிடைகொடுதடங்கொள்காஞ்சியிற்
காய்பொறிப்பராசரனகமகிழ்வெய்தினான். க௯

பராசரர்சிவபூஜை.

கம்பைநீராடியேகம்பநாயகர்
தம்பனிமலர்ப்பதந்தாழ்ந்துமஞ்சனீர்
வம்பவிழ்கரைமிசைமணிகண்டேச்சர
நம்பர்தம்வடகுடதூரங்கர்நணணினான். உ०

தன்பெயரிலிங்கமொன்றிருத்தித்தாவிலா
வன்பினின்மலரெடுத்தருச்சித்தேத்துழிப்
பொன்புரிவேணியோன்கருணைபூத்தெதிர்
வன்பழவிடைமிசைவந்துதோன்றியே. உக

வேட்டனகூறுகென்றருளவேதநூற்
பாட்டினுற்பலமுறைபழிச்சித்தாழ்ந்துமுன்
வாட்கதிரைம்படைமார்பிற்கிண்கிணித்
தாட்டுணைமழமுனிசாற்றன்மேயினான். உஉ

ஏறூர்விடைப்பரிமிசையெந்தையெந்தையோர்
குறுவலியரக்கனற்கோட்பட்டானவ
னுறுகுலமுழுவதுமறவியூர்புகுந்
தெருவரமெனக்கருள்செய்யவேண்டுமால். உங

ஈண்டுநீயினிதமர்ந்தெவர்க்குமின்னருண்
மாண்டகுசிறப்பினின்வழங்கவேண்டுமோ
லாண்டகையென்றிரந்தன்புமேதக
வேண்டலுமெம்பிரான்விளம்பன்மேயினான். உச

பராசரர்வரம்பெறல்.

மைந்தனின்பூசையிற்றம்பிமாரொடு
நுந்தைமற்றெமையடைந்துற்றுமேன்மைசா
லந்தணனுமுனைக்காலுமாசையின்
முந்துறநின்றவர்காண்டிமொய்ம்பினேய் ௨௫

அரக்கரைக்கொலைசெயும்வேள்வியாற்றியந்
நெருப்பினிலவர்தமைநீறுசெய்திவ்
வரைப்பினிலென்றுநாமகிழ்ந்துவாழ்துமென்
றுரைத்தனன்மறைந்தனன்வேதத்துச்சியில். ௨௬

பராபரன்றிருவருள்பெற்றுப்பாய்புகழ்ப்
பராசரநெடுந்தகைபணைத்தவேள்வியிற்
பராய்மனத்தரக்கரைநீற்றிப்பாற்றினன்
பராயசீருறுவர்தம்பகர்ச்சியாற்கதும். ௨௭

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விரிபுனல்படிந்தோர்பருகினோர்தீண்டப்பெற்றுளோர்தமக்கும்வீடளிக்கு
முரிதிரைமுகட்டுவராலினமுகளுமுழங்கொலிமஞ்சணீராற்றங்
கரைமிசைத்தகைசான்முனிவரர்வழுத்துங்கண்ணுதல்வளாகங்களின்னு
முரைசெயப்புக்காலுலப்புறுகாண்மினுயர்நிலைப்பெருந்தவமுனிவீர். ௨௮

பராசரேசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - எகூக

# 12 ஆதிபீதிசப்படலம்.

கலிவிருத்தம்.

பாரைமாநிழற்பணைவன்மேவிவாழ்
பராசரேசம்பகர்ந்தனமாதவ
பராயபைம்பொழிலாதிபீதிச்சரம
பராகமாவினைப்பற்றறவோதுவாம் க

அன்னவூர்திமகத்தையழிப்பலெ
றுன்னிவாணிநதியுருக்கொண்டநாட்
கன்னிபால்வளர்கண்ணுதலேவலின்
முன்னரேகிமுகுந்தன்றடுத்தனன். ௨

அங்கங்கெய்நித்தடுத்துமடங்கிடாப்
பொங்குவேகப்புதுநதிநள்ளிராத்
துங்ககாஞ்சியிற்றுண்ணெனத்தோன்றலுஞ்
சங்கபாணிதளர்ந்தழிவுற்றரோ. ௩

பெருவிளக்கொளியாகிப்பிறங்கிமற்
கருணைமால்கரிகாத்தவன்சூழலி
னருகுமேற்றிசையாதிபீதீசமென்
றொருசிவக்குறியுங்கணிருத்தியே. ௪

பூசையாற்றிப்புரிவரம்பெற்றெழுந்
தோசைநீத்தந்தடுத்துயர்வேள்விகாத்
தாசையாடையவனெதிர்வைகினன்
வீசுசோதிவிளக்கொளியண்ணலே. ௫

செங்கண்மாலொருமாதிபிதீச்சரம்
பொங்குகாதலிற்போற்றப்பெறுநர்தா
மிங்கண்வேண்டும்வரங்களுமெய்திமற்
றங்கண்முத்திப்பதமுமடைவரால். கூ

ஆதிபிதீசப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - எகஎ.

---

## 13 முத்திசப்படலம்.

---

கலிவிருத்தம்.

கற்றைச்செஞ்சடைக்காமருங்கொள்கையி
ரற்றநீத்தருளாதிபிதீச்சரஞ்
சொற்றனமபுள்ளரசுதொழுதசிர்க்
கொற்றமுற்றமுத்தீச்சரங்கூறுவாம். க

காசிபன்மனைவியர்கலாய்த்தல்.

மன்னுகாசிபன்றன்மனையாட்டியர்
பன்னுகத்துருப்பாவைசுபருணை
யென்னுமாதரிருவருந்தம்முரு
நன்னலத்தைநயந்துகொண்டாடினர். உ

தத்தமேனித்தகைநலஞ்சாற்றுபு
மெய்த்தபூசல்விளைத்தனர்தோற்றவ
ருய்த்தவெஞ்சிறைமேவுகென்றொட்டினு
ரத்தவத்தனையன்மிவினையினர். ௩

பைத்தபாப்பகலல்குற்பணிமொழிக
கத்துருப்பெயர்க்காரிகைவேறலாற்
சுத்தநீர்மைச்சுபருணைப்பேரிய
மைத்தகண்ணியைவெஞ்சிறைமாட்டினள். ச

வீடுசெய்யெனவாங்கவள்வேண்டலுங்
கூடுமூன்றும்விசும்பிற்குளிர்மதிப்
பாடுதோன்றுமமிழ்தமப்பண்ணவர்
நீடுகாவலினுள்ளதுநேரிழாய். ரு

அதுகொணர்ந்திங்களித்துநின்வெஞ்சிறை
விதுமுகத்திவிடுவித்துக்கொள்ளெனக்
கதிர்செய்பூண்முலைக்கத்துருகூறலு
மதியழிந்துவருந்திச்சுபருணை. சா

கருடசம்பவம்.

ஆசின்மெய்த்தவமாற்றியரும்பெறற்
காசிபன்னருள்பெற்றுக்கலுழனை
மாசிலாதமகவெனவீன்றனள்
பேசினுளம்மகற்கிதுபெற்றியே. எ

கேட்டெழுந்துகிளர்ந்துவிடைகொடு
கோட்டமில்புட்குலத்தரசன்னைதன்
வாட்டநீப்பவலிந்துகடுகிவிண்
ணூட்டினின்னமிழ்துற்றுழிநண்ணினன். அ

அங்கண்வைகியகாவலராயினர்
தங்கள்வீரந்தபப்பொருதேற்றெதிர்
செங்கண்வெண்கயவேந்தனையோப்பினன்
பொங்குவேகப்பொலஞ்சிறைக்காற்றினால். கூ

அமிழ்தம்வெளவியகல்வுழிமாலெதிர்ந்
தமிழ்சினத்தினுருத்துவெம்போர்செயத்
தமியனுயவுவணனுந்தாக்கின
னிமிழிசைப்போரிருவர்க்குமூண்டதே. க0

ஏழுடுக்கியமுந்நாளிருவருந்
தாழ்வொன்றின்றிச்சமர்பெரிதாற்றுழி
யாழிமாயனகமகிழ்கூர்ந்துயர்
பாழிவன்சிறைப்பார்ப்பினைநோக்கியே. கக

வன்புள்வேந்தநின்வீரமகிழ்ந்தன
னென்புடைவரங்கொள்ளெனவீங்கிவ
னுன்பெருந்திறற்குண்மகிழ்ந்தேன்மற்றென்
றன்புடைவரங்கொள்ளெனச்சாற்றினன். கஉ

மாயன்வரம்பெறல்.

மாயனம்மொழிகேட்டுமகிழ்ச்சியிற்
றாயையோதியசொற்றவறுயெனி
னீயெனக்குநெடுந்தகையூர்தியா
யேயுமிவ்வரம்யான்கொளநல்கென்றான். கங

ஆர்த்திகூர்தரவம்மொழிகேட்டொரு
மூர்த்தமெண்ணியுயிர்த்துமொழிந்தமெய்
வார்த்தையிற்பிறழ்வஞ்சியற்றுமெனச்
சீர்த்தியாளன்விடைபெற்றுச்சென்றனன். கச

கருடன்சிவபூசைசெய்துவரம்பெறல்.

மறுவில்கத்துருமாட்டுச்சுதைக்குடங்
குறியெதிர்ப்பைகொளக்கொடுத்தன்னையைச்
சிறையினீக்கினன்சிறாவங்கள்பாற்
கறுவுசெய்துகொலைசெயுங்காதலான். கரு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கச்சிவைப்பினையெய்தியாதீபிதக்கடிநகர்வடகீழ்பா
னச்சுமன்னைதன்சிறைக்குவீடருளுமுத்தீசனைநயந்தேத்தி
யிச்சையாற்றினிற்பெருவரம்பெற்றனனெறுழ்வலிப்பணிக்கூட்ட
மச்சமுற்றிடச்சிறகெழுவளியினிலலைத்தெழுபுள்வேந்தன். கசு

சித்தமாசொரீஇவிளங்குமேகாலியார்திருக்குறிப்புத்தொண்ட
ரத்தலத்தினில்வீடுபேறெய்தினர்மற்றுமாயிடைப்போற்றி
முத்திசேர்ந்தவரெண்ணிலார்மதிமுடிமுழுமுதலடிப்போதின்
வைத்தசிந்தையின்முக்குறும்பெறிந்துயர்மாதவத்தலைவீர்காள். கஎ

முத்தீசப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - அகசஎ.

---

# 14. பணாதரீச்சரப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கவையடிக்கயவாய்க்கருமேதிகளுழக்கியகடிவாவிச்
சுவைநறும்புனல்வாளைமீன்குதிக்குமுத்தீச்சரத்தியல்சொற்றுங்
குவைமலர்ச்செழும்பொதும்பரிற்பாட்டளிகொழிகளுமடுத்தும்ப
ரவைவியத்தகப்பண்பயில்பணாதரீச்சரமினியறைகிற்பாம். ௧

பழுக்கச்சுட்டபொற்பிழம்பெடுத்தப்பியபரிசுறழ்திருமேனிக்
கழுக்கடைப்படையேந்துமுத்தீசனெண்கழலடிதொழும்பேற்று
விழுக்கித்தங்கிளைமுருக்குறுங்கலுழனதெறும்வலித்திறநோக்கி
வழுக்கில்வெம்பணிக்குலங்களும்பிரானடிவழிபடநினைவுற்று. ௨

தழங்குதீங்கிணைமுழக்கருந்தடநெடுங்கச்சிமாநகர்சார்ந்து
முழங்குவெண்டிரைசுழித்துவானிமிர்ந்துநான்முகன்மகந்தபச்சீறி
வழங்குநன்னதிவடக்கணுற்றிழிதவளநகர்த்தென்பாங்கர்ப்
பழங்கணோயறப்பணாதரீச்சரன்றனைப்பத்தியிற்றாபித்து. ௩

விதிமுறைச்சிவபூசனையாற்றிமாலவிடைக்கொடிப்பெருமானின்
புதியபூங்கழலருச்சனைப்பேற்றினுற்புள்ளிறைமிடலெய்தி
யதிர்வுறுத்தெமையலைத்திடவெரீஇயினமடைக்கலம்புகுந்தேமியாங்
கதியெமக்குவேறில்லையென்றிரத்தலுங்கண்ணுதலருள்கூர்ந்து. ௪

பன்னகங்களைப்பணியெனத்தாங்கினன்பன்னகாபரணன்ற
னின்னருட்பெறுமதுகையான்மற்றவையெந்தைபாலரியோடுந்
துன்னுவெம்பகைக்கலுழனைக்கலுழனேசுகங்கொலென்றஞ்சாமே
பன்னிமேன்மையின்வினையினவிம்மொழிபாரெலாமெடுத்தோதும். ௫

சிறியராயினோர்சார்பினைவிழைகயன்மின்றிறல்கெழுபெரியோரா
மறிஞராயினோர்சார்பினைவிழைமினேவலரிதழ்விரிகொன்றை
வெறிநறுந்தொடையெம்பிரான்சார்பினைவிழைதலாலுரகங்கண்
மறுவிலாற்றல்சால்கலுழனைவினையினவாழ்ந்தனையோவென்ன. ௬

பவளச்செந்தளிர்நீட்டியபூம்பைம்பொழிற்பணாதரீச்சரவைப்பிற் [குங்
குவளைக்கண்ணியோடுயிர்க்கெலாமின்னருள்கொழித்துவீற்றிருந்தோங்
கவளக்கைவரையுரித்தவனிககதைகற்றவர்கேட்டோர்க்குந்
தவளப்பூதிகொண்மேனியீர்வெம்பணித்தழல்விடமணுகாதால். ௭

பணாதரீச்சரப்படலமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௮௨௧

---

# 15. காயாரோகணப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வயிறுளைந்தலறிச்சங்கினமுயிர்த்தமணிநிலாவெறித்திருள்சீத்துப்
பயில்விரைமுளரியிலஞ்சிசூழ்கிடந்தபணாதரீச்சரமிதுபகர்ந்தாங்
குயில்வரவறியாப்பல்லியந்துவைக்குந்துமணித்தெற்றிசூழ்காஞ்சிக்
குயிரெனச்சிறந்தவுத்தமத்திருக்காரோணத்திலுண்மையையுரைப்பாம்.

பிரமாதியோர்காலநிர்ணயம்.

படுங்கலைமுகுர்த்தங்காட்டைகளென்றுபகலிராப்பக்கமேதிங்க
ளொடும்புணரிருதுவாண்டுகெத்தொடக்கத்தோதியவவயவப்பகுப்பா
னிடும்பைதீர்காலங்கழிவுறுங்காலத்தெல்லையில்யாவருமிறுவர்
நெடும்புலக்குறும்புகடந்துளீருலகினிலைப்பதோர்பொருளுமற்றின்றால்.

ஈண்டுமோரிருபானுயிரந்தலையிட்டியன்றநாற்பத்துமூன்றிலக்க
யாண்டெனப்படுவநான்குகத்தளவையிம்முறையாயிரமிறந்தாற்
காண்டகுமயனுக்கொருபகலதுவேகற்பமாமிரவுமத்துணைத்தவ்
வாண்டகைக்கந்நாண்முப்பதோர்திங்களஃதொருபன்னிரண்டாண்டே.

பகர்ந்தவாண்டொருநூறிருவகைப்பரார்த்தம்பற்றறில்வெள்ளிவண்டோடு
தகாந்திடவுடைத்துமுடங்குகான்றிமிறதழங்கிசைப்பேட்டொடுநறுந்தே
னுகாந்துபண்பயிற்றும்பொகுட்டலர்கமலநோனமலரணங்கினுககரங்கு
நிகாந்தநாவகத்துப்பழமறைகொழிக்குநெடுந்தகைக்கிறுதிவந்துறுமால்.

அங்கதுமுகுந்தன்றனக்கொருபகலாமம்முறையாண்டுநூறெய்திற்
செங்கதிர்ப்பரிதிமழுங்கவிட்டெறிக்குஞ்சேயொளிவிலைவரம்பிகந்த
பைங்கதிர்க்கடவுட்கவுத்துவமிமைப்பப்பசுந்துழாய்துயல்வருமார்பிற்
கொங்கலர்கதுப்பிற்றிருவிளையாடுங்குரிசிலுமெய்துவனெடுக்கம்.

காயாரோகணப்பெயருண்மை.

இருவருமொருங்கேயிறவருங்காலையெந்தையேயொடுக்கியாங்கவர்த
முருவமீதேற்றிக்கோடலாற்காயாரோகணப்பெயரதற்குறுமால்
வருமுறையிவ்வாறெண்ணிலாவிரிஞ்சர்மாயவர்காயமேற்றாங்கிக்
கருணையாலங்கணடம்புரிந்தருளுங்காலமாய்க்காலமுங்கடந்தோன்.

திருமகள்வழிபாடு.

ஆதலாற்சிறந்ததிருநகரதனையடைந்துளோரிருமையுமெய்தி
மேதகுதுரியங்கடந்தபேரின்பவீட்டினைத்தலைப்படவல்லர்
சீதளகமலப்பொகுட்டணைக்கிழத்திசெஞ்சடைப்பிரானைவில்லத்தாற்
கோதறவழிபட்டச்சுதன்றனக்குக்கொழுநனைப்பெற்றனளங்கண்.

வியாழப்புத்தேள்வழிபாடு.

பிறங்கொளிவிசும்பிற்குரவனும்வியாழப்பெருந்தகையாயிடையெய்திக்
கறங்கிசைவிளரிப்பாட்டளியிமிர்ந்துகளிமதுவுண்டுதேக்கெறிந்தங்
குறங்குபொன்னிதழிநறுந்தொடைவேணியொருவனையருச்சனையாற்றி
யறங்கரைசிறப்பிற்சேந்தநாத்தழும்பவாரணமொழிகளாற்றுதிப்பான்.

பிராமணனீயேகடவுளர்தம்முட்பிஞ்ஞகாவேனையோர்தம்முட்
பிராமணன்யானேபிராமணன்றனக்குப்பிராமணன்கதியுனையிகழ்வோன்
பிராமணனல்லன்றன்குலதெய்வம்விண்டுபின்னெனைநினைத்தொழுமப்
பிராமணற்கிரண்டும்பயப்படாநிரையம்புகுவனென்றுயர்மறைபேசும்.

அடியனேனுன்றாளடைக்கலநீயேயன்னையுமத்தனுங்குருவுந்
துடியிடைப்பதுமைகேள்வனுமயனுந்தொடர்வருஞ்சோதியேசெல்வக்
கொடிமிசையிடபமுயர்த்தருள்கருணைக்குன்றமேயருட்பெருங்கடலே
படிபுகழ்மறைநூல்வடித்ததெள்ளமிழ்தேபகவனேயிணையடிபோற்றி.

வியாழபகவான்வரம்பெறல்.

என்றெடுத்தேத்துமாண்டளப்பானுக்கெம்பிரானெதிரெழுந்தருளி
நன்றுநீவேட்டகூறுகென்றருளவீழ்ந்துவீழ்ந்திறைஞ்சினனவில்வான்
குன்றவிற்குழைத்துப்புரிசைமூன்றிறுப்பக்குறுநகைமுகிழ்த்தருள்குழகா
நின்திருவடிக்கீழிடையறுப்பத்திநெறியெனக்கருள்செயவேண்டும்.

வளங்கெழுவேகவதிநதித்தென்பால்வயங்குமித்தீர்த்தநீர்படிந்து
விளங்குமென்வாரத்துன்னடிச்சேவைவிழைதகப்பெற்றுளோர்தந்த
முளங்கொளுமுறுதிப்பயனளித்தருளிமுத்தியுமுதவியீண்டென்று
மிளங்கதிர்முலையோடினிதமர்ந்தருளாயிவ்வரம்வேண்டுமென்றிரந்தான்.

இயமன்வழிபாடு.

அங்கவைவழங்கிக்கடவுளர்க்காசானும்பெருந்தகைமையுநல்கிச்
சங்கவெண்குழையானிலிங்கத்தினமறைந்தான்றருமனங்கெய்தியேத்தெடுப்பப்
புங்கவன்றூன்றித்தென்றிசைக்கிறையாம்புரவளித்தமைவணங்குநர்க்கு
மங்கருந்தண்டமியற்றிலன்றனக்குமாளுமிப்பதமெனவிடுத்தான்.

தென்புலத்தவர்க்குச்செய்கடனங்குச்செலுத்திடின்வீடுபெற்றுய்வார்
மின்பழுத்தன்னநெறித்தவார்படலம்வீழ்தனவெரிந்புறங்கிடப்பப்
பொன்பழுத்தனையவைந்தழனுப்பட்டுபுரிதவக்கொள்கையீரனேக
ரன்புசெய்தங்கட்பேறுபெற்றுயர்ந்தாரத்தலமேன்மையார்மொழிவார்.

காயாரோகணப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - அகக

---

# 16· சித்தீசப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

மருக்காவிவண்டூதமதுவூற்றும்வாவித்
திருக்காயாரோகணத்தின்சீர்மையிதுசொற்றும்
கருக்காயுமற்றதற்குவடகீழ்சார்கண்டோர்
தருக்காதசித்தீசந்தன்னியல்புசொல்வாம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கம்பைமாநதியின்கரைப்பெருங்காதல்கூர்தவமாற்றுமால்வரைக்
கொம்புமஞ்சளின்காப்பணிந்துமெய்குளிரவாடுநீர்மணங்கமழ்ந்தெழூஉப்
பம்புமஞ்சணீர்நதியெனப்புடைபரந்துசேறலும்பாய்புனற்சடை
யெம்பிரானருள்பொங்குமோகையினிலிங்கமாயவணெழுந்துதோன்றினன்.

கூடுகொள்கையாற்குலவுமஞ்சணீர்க்கூத்தனென்றுபேர்கொண்டநாயக
னடிதாளிணைசித்தர்பற்பலரணைந்துபோற்றிவான்சித்தியெய்தலாற்
பாடுசான்றசித்தீசனும்பெயர்பார்விளங்குமவ்வண்ணல்சந்நிதி
மாடுகூவலொன்றுன்னினோர்க்கெலாம்வழங்குசித்திசால்சித்ததீர்த்தமே.

ஒற்றையாழியங்கொடிஞ்சிவையமீதொளிபரப்பிவீங்கிருடுமித்தெழுங்
கற்றைவெங்கதிர்க்கடவுளுளினுங்கருமுடத்திறற்காரிநாளினு
மெற்றுதெண்டிரைச்சித்ததீர்த்தநீரெய்தியாடியவ்வேந்தருடொழுங்
கொற்றவாழ்வினர்க்கெழுபிறப்புநோய்கோடியோசனைக்கப்புறத்ததே.

சித்தீசப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - அகக.

---

# 17. அரிசாபபயந்தீர்த்ததானப்படலம்.

---

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புரிமுறுக்குடைந்தவிழவாறடிப்புண்முரன்றுவாய்மடுக்குமின்னறை
விரிமலர்த்தடம்புடையுடுத்தசித்தீசமேன்மையின்விளைவியம்பினு
முரியமற்றதனுத்தரத்துறுமுவணவூர்தியாச்சிரமவைப்பினிற்
றிரிவிலாவரிசாபவெம்பயந்தீர்த்தவானவன்சீர்த்திகூறுவாம். க

### சுராசுரர்கலகம் - மாதவன்செய்கை.

செப்புமுன்னைநாளதிதிமைந்தருந்திதியின்மக்களுமிடையறாதுபே
ரப்புமாரிபெய்தெண்ணிலாண்டுகளழக்கறுத்துவெஞ்சமரியற்றுழி
மைப்புறுத்தகண்ணரம்பைமார்முலையுழுதமார்பினர்வலியிழத்தலுந்
துப்பெறிந்தபூங்கமலவாள்விழித்தோன்றலெய்திவெம்படைவிதாததனன்.

எஞ்சுதானவரஞ்சியோட்டெடுத்திருமையோகுசெய்பிருகுமாமுனி
தஞ்சமாமனைக்கிழத்திபூமகடாயெனப்படுங்கியாதிதன்புடை
வஞ்சமின்றிவந்தடைக்கலம்புகவருந்துறேன்மினென்றபயநல்கியப்
பஞ்சின்மெல்லடிப்பாவையாச்சிரமத்தினுள்ளுறப்பாதுகாததனள். ங

சீற்றமிக்கெழச்சேந்தகண்ணினன்றிகிரியோச்சியங்கெய்துமாதவன்
போற்றிவாய்தலின்வைகுமாமியைப்பொருகவெனச்சிரந்துணித்தவீழ்த்தலு
மேற்றெழுந்தகூக்குரலொலித்திரளிருசெவித்துளையேறுமாமுனி
மாற்றருந்திறல்யோகுநீங்கிமுன்மனைவிபட்டதுமற்றுநோக்கினன். ச

### மாதவன்பிருகுசாபம்பெறல்.

கண்டுமாழ்கினன்றுயரின்மூழ்கினன்கண்கள்சேந்தனனிதழ்துடித்தனன்
மண்டுவெங்கனற்பொறிதெறிப்பவம்மாதவன்றனைவெகுண்டுநோக்கினு
ளெண்டளிர்க்கரத்தரிவைதன்னைமற்றுனக்குமாமியைத்தறுகணாளனாய்
மிண்டினாற்கொலைசெய்துவிட்டினாய்வெய்யபாவிநீயுய்யுமாறெவன். ரு

எடுத்தியம்பியசைவமேயெவற்றுள்ளுமுத்தமமென்னில்யாங்களுங்
கடுத்ததும்பியகண்டனாரடிக்கமலமன்றிவேறறிகிலேமெனிற்
றொடுத்துரைக்குமிச்சத்தியத்தினாற்றுயருழந்துநீரகவலவினை
மடுத்தவெம்பிறப்பொருபதெய்துகவழுவுபாதகக்குழிசியாயினாய். சு

நின்றனக்கடித்தொண்டுபூண்டவர்நெறியலாப்புறத்தாற்றுநூல்வழித்
துன்றுதிக்கையுற்றென்றுமுப்புரஞ்சுட்டவெம்பிரான்றிருவடிப்பிழைத்
தொன்றுமுன்றுதண்டேந்தியினராயுலப்பிலாதவெந்நிரையமேவுக
மன்றவங்கவர்க்கண்டுளோர்களுமறலியூரினைகுறுகிமாய்கவே. எ

எவ்வமேமிகுந்தமோகுணம்பயின்றிழிந்தயோனியின்மீனமாதியாம
வெவ்வினைப்பவந்தோறுமின்னலேவிரவுவாயெனவெய்யசாபமிட்
டவ்வியத்தொகையிரியநூறுமப்பிருகுவெள்ளியாலாவிபெற்றெழு
நவ்விவாள்விழிமனைவிதன்னொடுநாரிபாகனைவழுத்திவைகினன். அ

### மாதவன்சிவபூசைசெய்தல்.

நிறைமொழித்தவப்பிருகுவோதியசாபமெய்திநெஞ்சழுங்கியேங்குபு
நறைமலர்த்துழாய்ப்படலைமார்பினனொடினனிதன்றீர்வியாதெனப்
பிறைமுடிச்சடைப்பிரானுளன்மனுப்பிரமமைந்துளயாமுளேமினிக்
குறையெமக்கெவனென்றுதேறினன்கொழிதிரைப்புனற்கச்சியெய்தினன்.

தூயநீர்ச்சிவகங்கைவாவியுட்டோய்ந்தெழுந்தொருமாவினீழல்வாழ்
நாயனாரடிவழுத்தியேகியஞ்ஞாங்கர்வைகுமாச்சிரமமொன்றமைத்
தாயிடைச்சிவலிங்கமொன்றுகண்டன்புகூர்தரவருச்சித்தேத்தியங்
கேயுமாறருள்பெற்றுமாதவமியூற்றலுற்றனன்வயப்புள்ளூர்தியே. ௧௦

பூதிமேனியனெற்றியிட்டுமுப்புண்டரத்தினனக்கமாலையன்
சீதவேணியோன்றிருவுருத்திரஞ்செப்புநாவினனாடகுநீர்கனி
வாதவுண்டியன்பிரமமைவனைகமனுக்கணித்துளக்கமலங்கள்ளூற
மாதுபாகனையிருத்தியைந்திறன்மத்திநின்றருந்தவமுஞற்றினன். ௧௧

மாதவன்சிவப்பிரசாதம்பெறல்.

இன்னவாறுபல்லாண்டுமாதவமிவனியற்றுழிமுக்கணாயகன்
பொன்னிமாசலப்பூவைதன்னொடும்புடைமிடைதபல்கணங்கள்போற்றுறப்
பன்னுமவ்விலிங்கத்தினின்றெழூஉப்பாயவிடைப்பரிமேலணைந்துநீ
நன்னர்வேட்டனகூறுகென்றலுநறுந்துழாய்மலர்ப்படலைமோலியான்.

எட்டுறுப்பினுமைந்துறுப்பினுமிருநிலத்திடைவீழ்ந்துவீழ்ந்தெழூந்
தட்டமூர்த்தியாய்போற்றியென்னையாளண்ணலேயடிபோற்றியெனவினைக்
கட்டறுத்தவாபோற்றிமாறிலாக்கருணைவெள்ளமேபோற்றிபோற்றியென்
றுட்டதும்பியகாதலாற்செழுந்துருநீர்விழிசொரியவின்னுவான்.

ஐயனேயுனைச்சரணமெய்தினேனடியனேனினிமற்றோர்பற்றிலேன்
பொய்யிலகேள்விசால்பிருகுமாமுனிபுகன்றசாபநோய்க்கஞ்சினொந்தனே
னுய்யுமாறருள்செய்யவேண்டுமென்றுரைத்தலந்துநின்றிரப்பவெம்பிரான்
மையுலாம்விழிப்பதுமைகொங்கைதோய்மார்பகேளெனவாய்மலர்ந்தனன்.

கலிநிலைத்துறை.

நடுவிகந்திடாநம்மடித்தொழும்பாளரைட்டப்
படுவதொனறெதுவஃதவ்வப்பயன்றனைப்பயந்தே
விடுவதல்லதுபழுதுறாதின்றுநீமெவிய
வடுமிச்சாபமுமனுபவித்தல்லதுவிடாதால். ௧௫

தாங்குகொள்கையினுயர்ந்தநம்மடியவர்தமக்கோர்
தீங்கிழைத்திடுங்கொடியரைச்செகுப்பதேகரும
மாங்கும்வல்லிருட்குழிவிழுந்தழுங்குவரந்தோ
யாங்கணுய்வரெம்மடியவர்தமக்கிடரிழைத்தோர். ௧௬

பெருகுமன்பினுலெம்மைநீவழிபடும்பேற்று
விருமைசான்முனிசபித்திடுமையிருபிறப்புந்
திரிபுறுதுலகினுக்குபகாரமாந்தெளிநீ
யருளுமைந்தினிலைந்தினிற்றண்டமும்புரிகேம். ௧௭

என்றுவாய்மலர்ந்தருளலுநெடியவனிறைஞ்சி
நன்றுமுய்ந்தனனடியனேன்ஞாலத்தினியே
சென்றுதண்டமுமருளுமற்றியான்பெறச்செய்யின்
மன்றவிப்பெரும்பேற்றினும்பேறுமற்றுளதோ. ௧௮

இன்னுமோர்வரம்வேண்டுவலெளியனேற்குன்பான்
மன்னுமேதகுமுழுவலன்பருண்மதிவள்ளால்
பன்னுமிவ்வரிசாபவெம்பயந்தவிரிலிங்கந்
தன்னிலென்றுநீயமர்ந்தருளென்றலுந்தலைவன். ௧௯

வேட்டயாவையும்வழங்கினனுவகைமீதூர்ந்து
பாட்டளிக்குலம்விருந்தயர்பசுந்துழாய்மார்பன்
றேட்டலர்க்கரங்குவித்தெதிர்நிற்பமுச்சுடரா
நாட்டமூன்றுடைநாயகனிலிங்கத்தின்மறைந்தான். உ0

ஞானேசமுதலியகோயில்.

அனையசூழலின்குணதுமுக்காலமுமறிவான்
முனிவாசிற்சிலரெய்திமுனிலிங்கமொன்றிருத்தி
யினியபூசனையியற்றிடவவர்க்கதுவீந்தார்
கனியுமன்பருக்கருளுமுக்காலஞானேசம். உக

விதந்தமற்றிதன்வடக்கதுவெம்புலனடங்க
மதங்கமாமுனியருச்சனைபுரிமதங்கேச
மதன்குடக்கபிராமீசமச்சுதன்குறளாய்ச்
சிதைந்துமாவலிதபத்தெறவழுத்தியவரைப்பு. உஉ

அத்தளிக்குடபாலதன்றிமையவர்கடைபோ
தத்திமேலெழும்வெண்கரியருச்சனையாற்றி
யத்திகட்கரசாகிவிண்ணரசினைத்தாங்க
வத்தனாருள்பெறுமயிராவதீச்சரமால். உஙு

துவற்றுதேத்துளிதுறுமலர்ப்பொதும்பர்சூழ்கிடந்த
விவற்றுளொன்றனிலெங்கைதாள்வழிபடப்பெற்றோர்
கவற்றும்வல்வினைப்பிறவிவித்தாயகாமாதி
யவற்றினீங்குபுமழுவலானடியிணைசேர்வார். உச

அரிசாபபயந்தீர்த்ததானப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அகூரு.

## (௧௪. இட்டசித்தீச்சரப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திகழரிசாபந்தீர்த்ததிருநகர்முதல்வானுடர்
புகழயிராவதீசப்பொன்மதில்வரைப்பிற்குட
நிகழ்தருதளிகள்சொற்றாநிறையயிராவதீசத்
திகழ்தருந்தென்சாரிட்டசித்தீசத்துண்மைசொல்வாம். க

தொழுதகுபெருமைசான்றசுக்கிரனங்கணெய்திக்
கெழுதகுபூசையாற்றிக்கிடைத்தனன்சித்தியெல்லா
முழுதருள்பெற்றவன்றேன்மொழிவழித்ததீசியெய்தி
வழிபடுமுறையினேத்திவச்சிரயாக்கைபெற்றான். உ

உதீசிமாநாகங்கோட்டிமுப்புரமொறுத்தவபிரா
வதீசனுக்கணியதென்பால்வைகியவுணர்வுக்கெட்டா
வதீதனைவழுத்தியநாள்வச்சிரயாக்கைபெற்ற .
ததீசியின்செயல்விரித்துச்சாற்றுவன்முனிவீர்கேண்மின். ௩

ததீசிமுனிவர்செய்கை.

பிருகுவின்மரபிற்றோன்றும்பிறங்குசீர்த்ததீசிமேலோ
னருவிமாமதமால்யானைக்குபனெனுமரசன்றன்னோ
டொருவருங்கேண்மையெய்தியளவளாயுறையுங்காலை
யிருவருமொருநாட்கூடிக்குபொழுதினையசொல்வார். ச

விப்பிரர்கொல்லோவன்றிவேந்தரோபெரியரென்று
மப்பொழுதந்தணாளராசரிற்சிறந்தோரென்னச்
செப்பினன்றதீசிமன்னன்மன்னரேசிறந்தோரென்றா
னிப்பரிசிருவருக்குமெழுந்ததுவயிரப்பூசல். ௫

அழலெனமுனிவன்சீறியடித்தனனடித்தலோடு
மழலைவண்டிமிருந்தாரான்வச்சிரஞ்சுழற்றிவீசிப்
பழமறைமுனிவனுக்கையிருதுணிபடுப்பவன்னோன்
கிழமைகூர்வெள்ளிதன்னைநினைந்துகீழ்நிலத்துவீழ்ந்தான். ௬

சுக்கிரனுபதேசம்.

சுக்கிரனுணர்ந்துபோந்துதுணியுடல்பொருத்திக்கூட்டி
யக்கணத்தெழுப்பித்தேற்றியறைகுவான்முனிவகேண்மோ
நக்கலர்கமலவாவிக்காஞ்சியினணுகியன்பான்
முக்கணற்றொழுதியாண்டுங்கொலையுறாமுதன்மைகோடி. ௭

இழைமணிமாடக்காஞ்சியிட்டசித்தீசவைப்பின்
மழைதவழ்மிடற்றுப்புத்தேண்மலரடிவழுத்திப்பெற்றேன்
விழைதகுமிருதசஞ்சீவனியிதுவதன்றென்பாங்கர்த்
தழைபுகழிட்டசித்திதரும்புனற்றடமொன்றுண்டால். ௮

அத்தடம்படிந்தோர்தம்பாலாருள்சுரக்குமீசன்
பதியாலதனைக்கண்டோர்தீண்டினோர்பருகலுற்றோர்
புத்தியோடாடப்பெற்றோரறம்பொருளின்பம்வீடாஞ்
சித்திகள்பெறுவாரென்றாலதன்புகழ்செப்பற்பாற்றோ. ௯

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மல்லனீரரிவாரமூழ்கிடின்மகவிலான்மகவீன்றிடு
மில்லமில்லவன்மனைவியெய்துவனாயுளில்லவனீடுறுங்
கல்வியில்லவன்கல்வியெய்துவன்கண்ணிலான்விழிபெறுகுவன்
செல்வமில்லவன்செல்வமேவுவனரசிலானரசுசெய்யுமால். ௧௦

அலகைபூதமாதிபற்றியலைக்கநின்றவரிரவிநாட்
குலவுமத்தடமாடினங்கவைகோடியோசனைபின்னிடுங்
கலிகெழுந்துயர்குட்டவெம்பிணிமுயலகன்பெருநோயெலாம்
விலகிநீங்குமங்கீர்படிந்திடுமெக்கணத்திதுமெய்மையே. ௧௧

காதளாவியகுழைகிழித்துவிடங்கனிந்துகுமிழ்ம்மிசை
மோதுமையரிவாட்டடங்கண்முகிழ்த்தகொங்கைநுணங்கிடை
மாதராயினுமைந்தராயினும்வந்துபூம்புனலாடினோர்
யாதியாதுவிரும்பினாலுமவ்விட்டசித்தியளிக்குமால். ௧௨

முந்துகந்தனில்வாணிதன்னொடுமுளரிமெல்லணைநான்முகன்
வந்துமேதகுமிட்டசித்திமலர்த்தடந்தனிலாடிநன்
றுந்துசத்தியலோகவாழ்க்கைபடைத்திடுந்தொழிலோடுற
விந்துசேகரனருள்கிடைத்தனனெறழ்வலித்தவமுனிவனே. ௧௩

ஏயுநற்றிரேதாயுகத்தினென்றூழ்படிந்துமறைத்தனு
வாயிரங்கதிராண்டுதன்றினத்தத்தடம்படிந்தோர்க்கரன்
மேயசித்திகள்விரைவினல்கவும்விருச்சிகத்தினக்காலுறின்
வாயுமப்பயன்மிகவிரைந்துவழங்கவும்வரமெய்தினன். ௧௪

துவாபரத்தரிபூவின்மாதொடுதோன்றியத்தடமாடினுன்
றவாதுபல்லுயிர்காக்கும்வாழ்வொடுமொல்புதந்தனேப்பெற்றன
ஹுவாமதிக்கலேயானனும்பிகைகலியுகத்திலிங்கீர்படிந்
தவாகிறைந்தருள்கம்பநாயகர்பாதிமேனியடைந்தனள். கரு

இவர்களுல்வருநான்குகங்களுக்கிறைவராயினர்மற்றுமிச்
சிவமுறும்புனலாடிமுன்றினகரனிழந்தபலெய்தினுன்
றவளமாமதிமுயலகப்பிணிசாடினன்பகனென்பவன்
றுவளுமாறுயர்வீரபத்திரன்ஞெட்டவாள்விழிபெற்றனன். கசா

வடதிசைக்கிறைவரைமடக்கொடிவடிவுநோக்கிமிழந்தகண்
ணுடனரற்கொருநட்புமெய்தினஞேதுதுச்சருமேளனு
முடல்கணேக்கருவிழியுருப்பசியுகளமொங்கைமணந்தனன்
மிடல்கொள்கண்ணனளித்தசாம்பனுங்குட்டவெம்பிணிநீங்கினுன்.

நிடதமன்னியநளனயோத்தியிராமனீள்புகழ்ப்பாண்டவர்
மடனிலிங்கிவர்முததிறத்தருமருவலாரையழிததுவென்
றிடனிழந்திடுமிறைமையெய்தினரிரியுமைம்புலவாழ்ககையோய்
தடவுமென்மலரிட்டசித்திதருந்தடம்படிபேற்றினுல. க௮

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தோற்றமார்வடாதுவெங்நோய்துமித்திடுந்தருமதீர்த்தம்
போற்றருங்குணுதுவிண்ணோர்புகழ்தருமருததீர்ததங்
கூற்றுறுந்தெனுதுமாருக்குரைபுனறகாமதீர்த்தஞ்
சாற்றியகுடாதுமுத்திததீர்த்தமததடத்துளோங்கும். கசூ

நாற்பயனுதவுந்தீர்த்தநான்குடையினேயதீர்த்த
மேற்புறத்திங்கடோறுஞ்சிறந்ததேயெனினுஞ்சால
மேற்படுமிடபங்கும்பம்விருச்சிகங்கடகந்தன்னிற்
பாற்படுமெவற்றின்மேலாங்கார்த்திகைப்பானுவாரம். உ0

பானுநாள்விடியற்போதினத்தடம்படிந்தோர்யாவ
ரேனுமங்கவர்களெய்தும்பேறெவரியம்பற்பாலார்
தானநீராடலோமங்கணித்தலத்தடவுக்கஞ்சத்
தேனலரிட்டசித்திதீர்த்தத்தொன்றனந்தமாமால். உக

ஆதலினங்கண்மூழ்கியருங்கொலேயுறுதமேன்மை
தீதறப்பெறுகென்றேதிமிருதசஞ்சீவனிப்பேர்
மேதகுமனுவுநல்கிச்சுக்கிரன்விடுப்பப்போநது
கோதிலாமுனிவனைககூர்ந்துகாஞ்சியினேச்சேர்ந்தான். உஉ

ததீசிமுனிவர்வச்சிரயாக்கைபெறுதல்.

சேர்ந்தவனிட்டசித்திதீர்த்தநீர்ப்படிந்துகண்ணீர்
வார்ந்திடவிட்டசித்திவாதனேயருச்சிததன்பு
கூர்ந்தனன்சின்னுட்பின்னாக்குழப்பிறைமோலிதோன்றி
யீந்தனன்வயிரயாக்கையினிவருங்கொலேயெய்தாமே. உ௩

அவ்வகைவரங்களெல்லாமண்ணல்பாற்பெற்றுமீண்டு
மெய்வகைத்ததீசியெய்திவேத்தவைவேந்தன்சென்னி
யெவ்வமிலிடத்தாளோச்சியுளததனனிவனுக்கென்று
தெவ்வெனச்சமரினேற்றமாயனேச்செயிர்த்துவென்முன். உ௪

இடனுடைப்புரிசைசுற்றுமிட்டசித்தீசவைப்பிற்
குடதிசைமுகமாவைகுங்குழகனைவழிபட்டின்று
நடலைதீர்ந்திட்டசித்திநண்ணினரெண்ணிலாதார்
புடவியிலதன்றனீர்மையாவரேபுகலுநீரார். ௨௫

இட்டசித்தீச்சரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௮௮௮.

# 17. கச்சபேசப்படலம்.

கலிநிலைத்துறை.

ஓடரிக்கண்ணியாராடலும்பாடலுமோவுறாச்
சேடமையிட்டசித்தீசமேன்மையிதுசெப்பினம்
மாடமைத்தோளியோர்பாகர்வாழுன்னதன்றென்புடைத்
தோடவிழ்சோலைசூழ்கச்சபேசத்தியல்சொல்லுவாம். க

பெருமானுலகினைப்படைத்தல்.

ஐவகைப்பூதமாலயன்முதலாயபலசராசர
மெய்வகையுள்ளவுமீறுமெய்திமயமாமயிலொடு
மவ்விரவாட்டயர்ந்துங்கவைவீளவுமாகருவான்
றெவ்வடுகுறுநகைச்சிற்பரன்றிருவுளஞ்செய்தனன். ௨

உலகெலாமழிவுறுங்காலையுந்தன்னுடைக்காவலிற்
குலவுசீர்க்காஞ்சியிற்சோதிலிங்கத்துருக்கொண்டெழூஉந்
திலகுதன்சத்தியான்முன்புபோலயாவையுநல்கினு
னலகிலாநாமரூபங்கருமாக்கினனண்ணலே. ௩

பிரமன்வழிபட்டது.

போற்றுசீரவ்விலிங்கத்தினைப்போற்றினோர்யாவரு
மாற்றரும்வீடுபேறெய்துவர்நான்முகன்வாணியோ
டாற்றலானுயிடைமாதவமாற்றியவ்வங்கண
னாற்றமாரருளினாற்படைத்தொழிற்றலைமைபெற்றோங்கினன். ௪

மாயன்வழிபட்டது.

முன்னொருபிரமகற்பத்திடைநாரணன்மூரிநீர்
மன்னுமந்தரமலையாமையாய்த்தாங்கிவார்கடல்கடைந்
தின்னமுதஞ்சுரர்க்கீந்தபின்வெஞ்செருக்கெய்தியாங்
கன்னமுந்நீர்முழுதுழக்கினனுலகெலாமஞ்சவே. ௫

அச்சநீத்தாருயிருய்வகையருள்சுரந்தாங்குறீஇக்
கச்சபத்தின்னுயிர்செற்றதனோட்டினைக்கதுமெனா
நச்சியவெண்டலைமாலிகைநடுவுறக்கொண்டனன்
பச்சிளங்கிள்ளைபால்வீற்றிருந்தருளியபண்ணவன். ௬

இப்பெரும்பிழைதவிர்ந்துய்யுமாநாரணனெம்பிரான்
வைப்பெனுங்காஞ்சியிற்சோதிலிங்கத்தினைவழிபடூஉ
மெய்ப்படுமன்பினுவிரந்திரந்தேத்தலும்விடைமிசைத்
துப்புறழ்செஞ்சடைத்தோன்றலங்கவனெதிர்தோன்றினன். ௭

காண்டலுங்கண்கணீர்வார்தரக்கரையறுகாதலிற்
பூண்டபேரன்பினல்வீழ்ந்துவீழ்ந்திறைஞ்சினன்போற்றின
னண்டகாயாருயிர்த்தலைவனேயங்கணவடியனேன்
வேண்டுவயாவையுந்தந்தருளென்றெதிர்வேண்டினன். அ

மாயன்சிவப்பிரசாதம்பெற்றது.

மழுவலானிணையடிப்பொதுவறுபத்தியுமால்பதத்
தழிவிலாவிறைமையுமவ்விலிங்கந்தனக்கன்றுதொட்
டொழிவருங்கச்சபேசத்திருநாமமுமும்பரார்
தொழுதெழவாங்கரனுமையொடுமினிதமர்தோற்றமும். கூ

அத்தலந்திகழவிமுத்தமர்ந்தலத்தினுமதிகமா
வைத்திடுந்தலைமையும்வரமெனக்கொண்டனன்வள்ளலுஞ்
சித்தநீடுவகையினங்கவைமுழுவதுந்தேத்துழாய்ப்
பத்தனுக்கருள்புரிந்தாயிடைமறைந்தனன்பரையொடும். க0

அன்றுதொட்டென்றுமக்காஞ்சியினீங்கலாதமர்ந்திடுங்
கொன்றைவார்சடையனைக்கச்சபேசன்றனைக்கும்பிடச்
சென்றவர்கண்டவர்கருதினர்யாவருந்தீதுதீர்ந்
தொன்றியொன்றுநிலைமாறிலாமுத்திபெற்றுய்வரே. கக

துர்க்கைமுதலியோர்வழிபட்டது.

துர்க்கையுஞ்சாத்தனுமிரவியும்வயிரவத்தோன்றலு
நற்கரிமுகனுடனைவருங்கச்சபநாயகன்
பொற்கமலப்பதம்பூசனையாற்றியங்குடனமர்ந்
தொற்கமில்கணங்களோடப்புரிக்காவல்பூண்டுறுவரால். கஉ

சத்தியமொழிவிநாயகன்சிறப்பு.

அந்தணீர்கச்சபேசக்குடவைப்பினிலாயிதழ்க்
கந்தமாமலர்மிசைச்செல்வி தன்கணவனுர்போற்றிசெய்
துய்ந்தசத்தியமொழிவிநாயகனுளனவற்போற்றின
ரெந்தவூறுந்தவிர்ந்திம்மையேவேட்டவையெய்துவார். கங

கச்சபேசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கூ0க

## உ0 · சகோதரதீர்த்தப்படலம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வெள்ளிக்குப்பாயம்போர்த்தெனப்பொதிந்தவெண்டிருநீற்றொளிக்கதிர்க
ளள்ளிக்கொள்வனையமேனியீர்கச்சபாலயமறைந்தனமலநோய்
தள்ளிப்பேறுதவுமத்தலக்குடபாற்சகோதரதீர்த்தநீர்க்கரையிற்
புள்ளித்தோலாடைபுனைந்தநம்பெருமான்பொலிவுறுமிருக்கைசண்மொழிவாம்.

மாண்டகன்னீசவரலாறு.

மன்னுமெய்க்கிளவிக்கரிமுகன்றென்பான்மாண்டகன்னீசனைவழுத்திக்
கன்னியோர்பாகனருளினன்மாண்டகன்னிமாமுனிவரனென்பான்
மின்னிடைக்கடவுண்மடந்தையரைவர்வீங்கிளவனமுலைதிளைத்துப்
பொன்னுலகிடத்திநுகர்பெரும்போகம்புவிமிசையிருந்தவாறுகர்ந்தான்.

மதமலமறுக்குஞ்சகோதரத்தடநீர்வரைப்பிடைவளாகமொன்றியற்றி
யதனிடையினிதுவிற்றிருந்தரம்பையங்கலாரிளமுலைப்போகஞ்
சதமகன்சமழ்ப்பநுகர்ந்தனனெடுநாட்கடைமுறைமுத்தியிற்சார்ந்தான்
சிதரரித்தடங்கணையரம்பையர்தந்தீர்த்தமென்றுரைப்பதத்தடமே. ௩

வரிவிழிசேப்பக்குடமுலைமதர்ப்பவால்வளைகறங்கவண்டிமிருந்
தெரிமலர்க்கூழைத்தையலார்குடையுந்தெண்புனற்றடமதன்குலைமே
லெரியலர்குடங்கைமாண்டகன்னிசனிதமரிருக்கையின்குடசா
ரரிலறுத்தருள்வன்னீசமொன்றுண்டாலதுவருங்காரணங்கேண்மின். ௪

வன்னீசவரலாறு.

மூதழற்கடவுடன்னுடன்பிறந்தமுன்னவர்மும்மையருள்ளார்
பேதுறுமதுகைமூவரும்விண்ணோர்பெறுமவிசுமக்கலாற்றாது
மேதகுமாவியிறந்தனரதனைவிரிதழற்பணணவனோக்கி
யாதினிப்புரிவலெனக்குமிவ்விடும்பையெய்துமேயென்றுளமழுங்கி. ௫

மகோததியனையவையரம்பையர்தம்வாவியினுள்ளுறக்கரந்து
சகோதரர்தம்மையிழந்தவென்றனக்குச்சகோதரநீதடம்புனலே
யுகாதெனைப்புரத்தியென்றுரைத்தங்கணுறைந்தனனன்றுதொட்டெளிகண்
முகேரெனப்பாயுமலர்த்தடமதற்குமொழிபெயர்சகோதரதீர்த்தம். ௬

எரிதழற்புத்தேளன்னணமுறையவிமையவரெங்கணுந்துருவிப்
பெரிதிளைப்பெய்தியான்டுவெந்துறலும்பெருந்தடத்துறையுமீனவர்க்குத்
தெரிதரவியம்பிற்றாகவெங்கனலோன்செயிர்த்தடைக்கலம்புகுந்தேனைப்
பரிவுறக்காட்டிக்கொடுத்தநீர்தூண்டிற்படுகொலையுறுகெனச்சபித்து. ௭

மின்னெனவெளிக்கொண்டிரந்துநின்றழைக்கும்விண்ணவர்தங்களைநோக்கி
முன்னுறப்போமின்வருவலென்றியம்பிமுளரிநீர்த்தடமதன்கரையின்
மன்னுவன்னீசவள்ளலையிருத்திமரபுளியருச்சனையாற்றி
யன்னவனருளாற்பெற்றனனிமையோரவியெலாஞ்சுமந்திடுமாற்றல். ௮

தமையன்மார்மூவர்சுமக்கலாற்றாதுதளர்வுறுமவியெலாந்தானே
கமையுறப்பொறுக்குமதுகைபெற்றிமையோர்குழாத்தினுட்கலந்தனன்கனலோ
னிமையவில்வாங்கிப்புரிசைமூன்றிறுத்தவெந்தைவன்னீசனையண்மி
யமைவருமன்பால்வழிபடப்பெற்றோரருந்திறலெய்திவீடடைவார். ௯

சவுனகீசவரலாறு.

விளம்புவன்னீசந்தனக்குமேல்பாங்கர்விழைதகுஞ்சவுனகீச்சரத்திற்
களங்கனிவிளர்ப்பவிடங்கிடந்திமைக்குங்கறைமிடற்றடிகளையிருத்தி
வளம்பயில்காதற்சவுனகமுனிவன்மரபுளியருச்சனையாற்றி
யுளம்பயின்மலநோய்தவிர்ந்துபேரின்பவீடுபேறுற்றதவ்வரைப்பு. ௧௦

சகோதரதீர்த்தப்படலமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - [illegible].

---

# ௨௧. சுரகரீசப்படலம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தாண்டவமாடுதல்வல்லபெம்மான்றங்குஞ்சகோதரதீர்த்தப்பாங்கர்
மாண்டகன்னீசம்வன்னிசம்வின்னுமண்ணும்புகழுஞ்சவுனகீச
மீண்டுவிளங்கவெடுத்துரைத்தாமெம்மையுநல்கிடுஞ்சவுனகீசத்
தாண்டகைவைப்பின்வடக்கண்மேவுமண்ணற்சுரகரம்பன்னுகிற்பாம்.

மந்தரமலைச்சிறப்பு.

கலிவிருத்தம்

சுந்தரத்திருமான்முதற்சூழ்சுட
ரந்தரத்தவர்க்காமுநீந்தது
சுந்தரத்துமுனிககணம்யோகுசெய்
மந்தரப்பெயர்மாலவரையுண்டரோ. ௨

சுற்றும்யாளிமுழைமதாறுநதுஞ்சுவ
வெற்றிமத்தெனவேலைகடைந்தநா
ளற்றநீக்குமமுதமிடையிடைப்
பற்றிநின்றிடும்பான்மைநிகர்க்குமால். ௩

வஞ்சிக்கப்படுதானவர்வாரியின்
விஞ்சத்திஞ்சுதைவேறுகடைந்தெய்தத்
தஞ்சத்தற்பெயர்ப்பானகழ்தன்மையி
னஞ்சப்புற்றங்ககழ்வகுடாவடி. ௪

துன்னுதானவர்சூழுஞ்செயலறிந்
தன்னகுன்றம்பெயர்ப்பரிதாகமா
மன்னுமார்பினன்பள்ளிகொண்மாட்சியின்
மின்னுநீன்முகின்மீமிசைத்துஞ்சுமால். ௫

நிரி பு.

செல்லியங்குழல்வண்டிமிர்தேக்கடி
வல்லியங்குழவாட்கண்படுப்புவ
வல்லியங்குழலார்வெறியாடிய
பல்லியங்குழலாற்பனித்தஞ்சுமால்.

இ-ள். செல் இயங்கு உழல் வண்டு இமிர் தேக்கு அடி - மேகங்கள் தவழா நின்ற (உன்னதத்தையும்) சுழன்று திரியாநின்ற வண்டுகள் (தேனுண்டு) இசைபாடும் (பூங்கொத்தையுமுடைய) தேக்கமரத்தின்கீழ்,—வல்லியம் குழவாள் கண் படுப்புவ - புலிகள் தமது குட்டியை ஒள்ளிய கண் துயிலச்செய்யும்,—அல்லி அம் குழலார் வெறியாடிய - அகவிதழால் (ஆகியமாலையையணிந்த) அழகிய கூந்தலையுடைய குறமகளிர் வெறியாட்டயருமிடத்தினிகழும், — பல் இயம் குழல் ஆல் பனித்து அஞ்சும் - பலவாச்சியங்களின் ஒலியாலும் வேய்ங்குழலொலியாலும் நடுக்குற்று அஞ்சும் என்க.

குழவென்னும் பண்பு ஆகுபெயராய்க் குட்டிமேல் நின்றது. வெறியாடல் குறிஞ்சி நிலத்திற் குரிய கருப்பொருள்களுள் ஒன்று. இயம் குழல் கருவி ஆகுபெயராய் ஒலிமேல் நின்றன. ஆல் இரண்டனுள் முன்னது ஏதுப்பொருளில் வந்த மூன்றுருபு. பின்னது அசைநிலை.

இரண்டடிப்பாடகமடக்கு.

காமரம்புகனற்றமரம்பார்
காமரம்புகனற்றமரம்பா
ரேமமல்கியிருந்துணர்கான்றரு
வேமமல்கியிருந்துணர்கான்றரும்.

இ - ள். காமர் அம்பு கனற்று அமர் அம்பரா - மன்மதபாணம் உடற்றுகின்ற போரினுக்கு (உடைந்த) அரமடந்தையர்கள்,—புகல் காமரம் நல் தமரம் - பாடும் காமரமென்னும் (ஓரிசையாகிய) நல்ல ஒலியை,—பார் ஏமம் அல்கி இருந்து உணர் கான் தரு - அச்சியரான குறவர் மறைவிடத்தில் தங்கியிருந்து (கேட்டு இசைவிகற்பங்களை) ஆராயும் காட்டின்கண்ணுள்ள மரங்களில்,— ஏமம் மல்கிய இருமை துணர் கான் தரும் - பொன்னொளிபோல் நிறைந்து மலர்ந்த பெரிய பூங்கொத்துக்கள் வாசம் வீசும் என்க.

அம்மலையினுள்ள குறவரும் பணைவிசும்பங்களுணர்ந்தோர் எனபார் உணரென்றார். மகளிர் பாடலால் மலருமரம குருக்கத்தியாதலால் இருந்துணர் கான்றரும் என்றார். மல்கியவென்னும் பெயரெச்சத்தினீறுகெட்டது. காமர் நகரவீறு உயர்வின்கண்வந்த பால்வழுவமைதி.

எ

வண்டலம்படர்மாவரையாரமை
வண்டலம்படர்மாவரையாரமை
பிண்டியையவனாறியவில்லமுன்
பிண்டியையவனாறியவில்லமும்.

இ - ள். வண்மை தலம் படா மா வரையார - வளவிய இடங்களிற் செல்லும் கரியமலையின்கண்ணுள்ளகுறவரது,—அமை பிண்டி ஐயவனம் நாறிய இல்லம் முன் - செய்தமைத்த தினைமாவும் மலைநெல்லும் பொருந்திய குடில்களின் முன்னர்,— பிண்டி ஐவனம் நாறிய வில்லம் உம் - அசோகும அழகிய சுனைநீரும் மணம் வீசா நின்ற வில்லமரமும்,—வண்டு அலம்பு அடா மா அரை ஆர் அமை - வண்டுகளிசை பாடாநின்ற நெருங்கிய மாமரமும் தூரையுடைய ஆத்தியும் மூங்கிலும் உள்ளன.

நிலைமொழி யுயிரீறுதலின வருமொழியிலை இரவுயிரூர்ந்த மெய்யை வகர உடம்படு மெய்யாக்கி இல்லமெனக்கொண்டு தேற்றுமரமெனினும் அமையும். விரிந்துந் தொக்குநின்ற உம்மைகள் எண்ணுப்பொருளில்வந்தன. அன்றிக் கடைநிலைத்தீவக அணியெனினு மமையும். உள்ளன எனனும் பயனிலை தொக்கது. இத்தொடர் பொருள்குறித்துவந்த அடிமறிமாறறு.

அ

வானரம்பையராவிற்பயந்துவாய்
வானரம்பையராவிற்பயந்தரத்
தானிரப்பவியக்கணதுண்டிசை
தானிரப்பவியக்கணந்துஞ்சுமே.

இ - ள். வானரம் பை அராவின பயந்து வான் தாய் - குரங்கினங்கள் படத்தையுடைய பாம்பிற்குப்பயந்து விண்ணுலகிற்றாவி,—அரம்பையர் ஆவின் பயம் தர - அவ்வனம் வசிக்கும் தெய்வமகளிர் காமதேனுவின் ஒளிபொருந்திய பாலை யூட்ட,—தாம் நிரப்பு அவிய கணத்து உண்டு - அக்குரங்கினங்கள் தாம் (பசியென்னும்) வறுமைகெடக் கணப்போதிலுண்டு,—தால் இசை நிரப்ப வியம் அம் கண் துஞ்சும் - அம்மகளிர் தாலாலிசையைப்பாட (தாலாட்டுப்பாடல் செய்ய என்றபடி) (அக்குரங்கினங்கள்) பரந்த அழகிய கண்டுயில் கூடும் என்க.

தாகிரப்பலிய என்பது எதுகை நோக்கி ஈகரம் னகரமாகவந்தது. யமகம் திருகல்களில் இவ்வாறு பெரும்பாலும் வருதலை யுணர்க. ஏ ஈற்றசை. அராவின் உருபுமயக்கம். க

முரசபந்தம்.

ஒவ்வோரடி ஒவ்வொருவரியாக நான்கடியும் எழுதி மேலிரண்டுவரியும் தம்முட் கோமூத்திரியாகவும், கீழிரண்டுவரியும் தம்முட் கோமூத்திரியாகவும், சிறுவார போக்கப்பட்டு மேல்வரி யிரண்டாம் வரியினும் மூன்றாம் வரியினும் நான்காம் வரியினும் கீழுற்று மீண்டு மேல் நோக்கவும், கீழ்வரி அவ்வாறே மேலுற்று மீண்டு கீழ்நோக்கவும் பெருவார் போக்கப்பட்டு இந்தவார் நான்கும் நான்குவரியாக வருவது.

அடிமடக்கு.

வஞ்சிவிருத்தம்.

தானமாந்தருமஞ்சரி - வானமாந்தருமஞ்சரி
தானமாந்தருமஞ்சரி - வானமாந்தருமஞ்சரி.

இ - ள். தானம் ஆம் தருமம் சரி - சோடசதானமும் உண்டாகிய முப்பத்திரண்டறங்களும் (உலகத்தில்) சஞ்சரிக்க,—வானம் ஆம் தரும் அம் சரி - மேகங்கள் நீரைப்பொழியாநின்ற அழகிய அம்மலையின் பக்கதில்,—தானம் மாந்தரு மஞ்சரி - யானையின் மதசலங்களும் மாமரங்களின் பூங்கொத்துக்களும்,—வானம் மாந்தர் உம் அஞ்சு அரி - விண்ணுலகத்தி லுள்ளோரும் மண்ணுலகத்தி லுள்ளோரும் அஞ்சாநின்ற சிங்கங்களு முள்ளன என்க.

சரி என்னு முதனிலைத்தனிவினை எச்சப்பொருளில் வந்தது. ஈறு கெட்டதெனினு மமையும். தானம் மாந்தரு மஞ்சரி அரி இவை விகுதி பெறுதுவந்தசாதி யொருமைகள். வானம் இடவாகுபெயர். தொக்கும் விரிந்தும் வந்த உம்மைகள் எண்ணுப்பொருளில் வந்தன. க௦

தகரவிகற்பத்தான்வந்தமடக்கு.

கலிவிருத்தம்.

தத்தைதித்தித்ததோதிதைதாதுதேத்
தொத்துதித்துத்திதித்ததத்தித்துதூத்
துத்தித்தேதத்ததீதுதைதீத்தத்தத்
தொத்ததாதுததைத்துத்துதித்ததே.

இ - ள். தத்தை தித்தித்தது ஓது இதை - கிளிகள் தித்தித்தவசனங்களைப் புகலாநின்ற புதியதினைப்புனம்,—தாது தேம் தொத்து உதித்து திதித்தது - (வேங்கைமரங்களில்) மகரந்தத்தையுந் தேனையு முடைய பூங்கொத்துக ளரும்பக்குறமகளிர் காவலுடையதாய்,—அத்தித்து - யானையின் கொம்புகளும்,—தூ துத்தித்து - பாம்பினது புனிதமான தலையின்கணுள்ள ரத்னங்களும், — ஏதத்த தீது உதை தீதத்து அத்து ஒத்த தாது - துன்பப்பகுதியவான தீங்குகளை யோட்டாநின்ற நெருப்பிற் சுடப்படுதலால் (மாற்றுயர்ந்து) சிவந்த நிறம்பொருந்திய பொற்கட்டிகளும்,—ததைத்து துதித்தது - நெருங்கப்பெறுதலால் (யாவரும்) புகழுந்தன்மையை யுடையது என்க.

திதித்தது வினைமுற்றுப்பெயர். திதித்த தென்னும் வினைமுற்று எச்சமாய்த் துதித்ததென்னும் குறிப்பு வினைமுற்றின் தொழிற்பண்பைக்கொண்டு முடிந்தது. யானைக்கொம்பு முதலியவை குறிஞ்சிக்கருப்பொருளாதலானும் அந்நிலத்துள்ள புனத்தின் சிறப்புக்கூறுதலானும் அத்தித்து துத்தித்து என்னும் ஏழாம் வேற்றுமையிடப்பொருளின்கண்வந்த குறிப்பு வினைமுற்றுகள் கொம்பையும் மணியையும் உணர்த்தின. துத்தி இருமடியாகுபெயர். துத்தி - படப்பொறி. அது படத்தை

புணர்த்தித்தானியாகுபெயராய் அது தலைவை புணர்த்திச் சினையாகு பெயரா யிற்று. உதித்து செயவெனெச்சத்திரிபு. தத்து படுவிகுதி குன்றிவந்த செயப் பாட்டுவினைத்தொழிற்பெயர். ததைத்து மெல்லொற்று வல்லொற்றாய் வந்த பிற வினையெச்சம்.

௧௧

கோமூத்திரி.

இரண்டிரண்டுவரியாக ஒருசெய்யுள் எழுதப்பட்டு மேலுங்கீழும் ஒன்றிடை யிட்டு வாசித்தாலும் அச்செய்யுளே வருவது.

வானளாவினவார்கனியாவிரை
கானறாவிளவார்கடியாவரை
தேனலம்பினதீங்கடமாருமான்
தானவம்பனறாங்கெடவாருமால்.

இ - ள். வான் அளாவின வார் கனி ஆவிரை - ஆகாயத்தை யளாவிய நீண்ட கனிகளை யுடைய ஆவிரையும்,—கான அறா விள ஆர் கடியா வரை - வாசம் நீங்காத விளாமரமும் ஆத்திமரமும் நீங்காத அம்மலையின் கண்ணுள்ள,—தேன் அலம்பின தீம்கடம் ஆரும் மான் தானம் அம்பு - வண்டுகளாரவாரிக்க இனிய மதநிறைந்த யானைகளின் மதநீரானது,—அனல் தாம் கெட வாரும் (புனங்களிற்பற்றிய) நெருப்பு அவியச்செல்லும் என்க.

தாம் சாரியை.

௧௨

கூடசதுக்கம்.

நாற்றடி யெழுத்துகள் ஏனை மூன்றடியுள்ளும் கரந்து நிற்கவருவது.

கந்தமல்கியகாவிற்குலாய்க்கமழ்ந்
தந்திமானுமவிர்தளிர்க்கொக்குதிர்
செந்துவர்க்கனிதித்திக்குமாசினி
மந்திமாந்திமகிழ்ந்துகுதிக்குமால்.

இ - ள். கந்தம் மல்கிய காவில் குலாய் - வாசம் நிறைந்த சோலையின்கண் குலவி,—கமழ்ந்து அந்தி மானும் அவிர் தளிர் கொக்கு உதிர் செம்மை துவர் கனி - வாசம் வீசி வண்ணத்தாற் செவ்வானத்தை நிகர்க்கும் விளங்குந் தளிரையுடைய மாமரத்தினின்று முதிர்ந்த சிவந்த கனியையும்,—தித்திக்கும் ஆசினி - தித்தியா நின்ற ஈரப்பலாவின் கனியையும்,—மந்தி மாந்தி மகிழ்ந்து குதிக்கும் - பெண் குரங்குகள் புசித்துக் களிகூர்ந்து குதித்து விளையாடும் என்க.

அந்தி மானுந்தளிர பண்புபற்றி வந்த வுவமை அணி.

௧௩

மாத்திரைச்சுருக்கம்.

ஒருபொருள் பயக்கும் ஒருசொல் ஒருமாத்திரையைக்குறைப்ப வேறுபொருள் பயக்குஞ் சொல்லாய் வருவது.

விடியற்காலத்தோர்மாத்திரைவீந்தது
மடியுநஞ்சொன்றுமாய்ந்ததுமொன்றுமாய்
கடிகொளந்தியிற்கானவர்தங்களொன்
றொடியுநீளறையார்ப்பொடுலம்புமால்.

இ - ள். விடியற் காலத்து - விடியலாகிய காலம் (விடியல் - காலை),—ஓர்மாத் திரை வீந்ததும் - ஒரு மாத்திரையைச் சுருக்க அது கலையென்றாயிற்று (கலை - கலைமான் ஒலியும்),—மடியும் நஞ்சு - மடியச்செய்யுந் தன்மையையுடைய நஞ்சு (நஞ்சு - காரி),—ஒன்று மாய்ந்ததும் - ஒரு மாத்திரையைச் சுருக்கக் கரி என்

றுயிற்று (கரி - யானையொலியும்),—ஒன்று மாய் கடிகொள் அந்தியில் - ஒரு மாத்திரை குறைந்த அச்சத்தைத் தராநின்ற மாலையில் (அந்தி - மாலை) (ஒரு மாத்திரை குறைந்த மாலை யென்றமையால் மலையென்றாயிற்று) அம்மலையில் வசிக்கும்,—கானவர் தங்கள் ஒன்று ஒடியும் நீள் அறை - குறவர்களது ஒரு மாத்திரை குறைந்த நீண்ட பாறை (பாறை யென்றமையால் பறையென்றாயிற்று),—பறை - பறையினது,—ஆர்ப்பொடு உலம்பும் - சத்தத்தோடு கூடி யொலிக்கும் என்க.

கலைமான் ஒலியும் யானையொலியும் குறவர் பறையொலியோடு கூடி யொலிக்கும் என்பது கருத்து. விடியல்காலம் பிறிதினியைபு நீக்கத்தல்வந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அத்துச்சாரியை தவிர்வழிவந்தமையின் விரித்தல் சாரியை. காலை காரி என்பவற்றின் பயனிலையாகிய வீந்தது மாய்ந்தது என்னும் வினைமுற்றுப் பெயர்கள் அவற்றோடு சார்த்திய மாத்திரையின் பயனிலையாயும் வந்தன. மடியும் பிறவினை விகுதி தொக்குநின்ற பெயரெச்சம். கச

மாத்திரைவருத்தனை.

ஒருபொருள் பயக்கும் ஒருசொல் ஒருமாத்திரைபெற்று வேறுசொல்லாய்ப் பொருள் பயந்து நிற்பது.

அளபொன்றேறியவண்டதிரார்ப்பினு
லளபொன்றேறியமண்ணதிர்ந்துக்கன
வளபொன்றேறியபாட்டலரீர்ஞ்சுனை
யளபொன்றேறழகூடலைந்தாடுமால்.

இ - ள். அளபு ஒன்று ஏறிய வண்டு - ஒரு மாத்திரை கூடிய வண்டு (வண்டு - அளி) (அளபொன்றேறிய அளியென்றமையால்) ஆளி - ஆளி யென்னும் ஓர் மிருகம்,—அதிர் ஆர்ப்பினுல் - ஒலிக்கு முழக்கத்தால்,—அளபு ஒன்று ஏறிய மண் - ஒரு மாத்திரை கூடிய மண் (மண் - தரை) (அளபொன்றேறிய தரையென்றமையால்) தாரை - நட்சத்திரங்கள்,—அதிர்ந்து உக்கன - கம்பித்துதிர்ந்தன,—அளபு ஒன்று ஏறிய பாட்டு - ஒரு மாத்திரை கூடிய பாட்டு (பாட்டு - கவி) (அளபொன்றேறிய கவியென்றமையால்) காவி - நீலோற்பலங்கள்,—அலர் ஈரம் சுனை - அலராநின்ற குளிர்ந்த சுனையிலுள்ள நீரானது,—அளபு ஒன்று ஏறு அழகு ஊடு - ஒரு மாத்திரை கூடிய,—அழகு - ஊடு (அழகு - வனப்பு) (அளபொன்றேறிய வனப்பு என்றமையால்) வானப்பு,—வான அப்பு ஊடு - ஆகாசகங்கையினிடத்தில்,— அலைந்து ஆடும் - கலந்தசையும் என்க.

ஆளி முழக்கத்தால் நட்சத்திரங்கள் விண்ணினின்றுதிரும் என்பதும், சுனைநீர் ஆகாசகங்கையோடு கலக்கும் என்பதும் கருத்து. ஈரம் ஈரெனநின்றது செய்யுண்மருஉ. சுனை இடஆகுபெயர். கரு

எழுத்துவருத்தனை.

ஒருபொருள் பயப்பதோர் சொல்கூறி யதனில் ஒவ்வோரெழுத்து நீக்க வெவ்வேறு பொருள் பயப்பது.

காந்தள்போல்வனகாமுகர்வீழ்வன
போந்துசேர்ப்பர்கள்பூக்குறிவைப்பன
சாந்தநாறியசாரலினரிமா
ரேந்துசீரெழிற்கைதகைகேதகை.

இ - ள். சாந்தம் நாறிய சாரலின் நாரிமார் ஏந்து சீர் எழில் கை - சந்தனமரம் வாசம் வீசாநின்ற அம்மலைப் பக்கங்களில் வசிக்குங் குறமகளிரது சிறப்புவாய்ந்த அழகியகைகள்,—காந்தள் போல்வன - காந்தண்மலரை யொப்பனவாம்,—காரி

மார்தகை - அம்மடவார் அழகு,— காமுகர் வீழ்வன - காமிகளால் மயங்கி வீழப்படுவனவாம்,—போந்து சேர்ப்பர்கள் பூகுறிவைப்பன கேதகை - (இராவுக்குறிக்கண்) வந்து (தலைவிவரப்பெறாமையாற்றும் வந்தமை யறிதற்கு) தலைவர்களாலடையாளக் குறியாக வைக்கப்படுவன தாழை மலர்கள் என்க.

கைதகை கேதகை எனபனவற்றைக் கைதகை கேதகை எனப்பிரித்துக் காரதள் போல்வன காமுகர்வீழ்வன போந்து சேர்ப்பர்கள் பூக்குறிவைப்பன என்பவற்றோடு முறை நிரனிறையாகக்கொள்க. காரிமார் என்னுஞ்சொல் தகையென்பதனையும் பொருணிலையாகக்கொண்டு சிறலின் அது முதனிலைப்பொருட்டவக அணி. ஒருசொன்னின்றே தனித்தனி புகவுவென்னும் பொருள்கோளெனினும் அமையும் காரிமார் ஒருமையிற பன்மைசுசுடால் வழுவமைதி. சேதனை பொருளாகுபெயா. இரவுக்குறிக்கட்போந்த தலைவர் தலைவி வரப்பெறாமையின் குறிவைத்துச் சென்றமை தலைவிக்கிரங்கலாகாம் ஆதலின் இரக்கவுரிப் பொருட்குரிய நெய்தற்றலைவராகச் சொல்பரென்றா. கசு

உபயநாசாந்தம்.

இரண்டுபாம்பு தம்முள் இருவராக உபதேசமுறையான் வரைந்தவற்றுளிரண்டு கவியெழுக பட்டுச் சதிகளினின்று எழுத்து மற்றையிடங்களினும் உறுப்பாகய் நிற்க வருவது.

ஆம்பனீண்மருப்பாரமுமாசறு
காம்புமாணவுகுயகதிர்முத்தமும்
பூம்பசுமபொழி நீடுமபுரையிரு
ளோம்பிப்பப்பொளிமேவுமுப்பாதரோ.

இ - ள். ஆம்பல் நீள மருப்பு ஆரம் உம் - யானையினது நீண்ட கொம்பிற் பிறந்த முத்தமும்,—மாசு அறு காம்பு மாணவுபும் கதிர முத்தம் உம் - குற்றமற்ற மூங்கில்கள் மாட்சிமைபடச் சொரிந்த கிரணங்களையுடைய முத்தமும்,—பூ பசுமை பொழில் நீடும் புரை இருள் ஓம்பி - பூக்களையுடைய பசியசோலையினகண் நீடிய பெரிய இருளை யோட்டி,—முட்டாது பரபு ஒளிமேவும் - குறைபாடில்லாமல் பரவிய ஒளியை வீசும் என்க.

முத்தங்களிலொளி சந்திரகிரணம் போலக் குறைபாடின்றி யிருளையோட்டுமென வியப்புத்தோன்றக் கூறினமையின் குணஅதிசய அணி. கஎ

செம்பொனன்னசுனைசேர்முகைநீலமா
வம்புநீடுமருங்களியாரவின்
கொம்புபூமலிபொன்னவிர்குன்றத்தூர்
பம்புசேணதிப்பாமருட்டாருமே.

இ - ள். செம்பொன் நன்மை சுனை சேர் முகை நீலம் மா வம்பு நீடு மருங்கு அளி - சிவந்தபொன்னாலாகிய நல்ல சுனையிற்பொருந்திய முகைத்தநீலோற்பலங்களின் பெருமை பொருந்திய வாசம் நீடிய பக்கங்களில் (சஞ்சரிக்கும்) வண்டுகள்,—ஆரவின் கொம்புப்பூ மலி பொன் அவிர் குன்றத்து ஊர் பம்பு சேண் நதி - மிகவு மலர்ந்த கோட்டுப்பூக்கள் நிறைந்த பொற்கட்டிகள் விளங்காநின்ற அம்மலையின் கண்தவழா நின்ற நெருங்கிய ஆகாயகங்கையில்,—பா மருட்டு ஆரும் - பாய்ந்து அவ்வாகாய கங்கையைச் சுனைநீரென்றே மயங்குதலைப் பொருந்தும் என்க.

பா முதனிலைத்தனிவினை வினையெச்சப்பொருளில் வந்தது. மருட்டு முதனிலைத் தொழிற்பெயா. ஆகாச கங்கை நீலரச் சுனை நீரென்று மயங்கினமையின் மயக்க அணி. கஅ

கழிதனம்.

ஒரு செய்யுள் எவ்வெட் டெழுத்தாக நான்குவரி யெழுதப்பட்டு மேனின்று கீழிழிந்தும் கீழ்நின்று மேலேறியும் புறநின்று வந்துண் முடிய அவ்வரி நான்குமே யாகி யச்செய்யுளே வருவது.

வஞ்சித்துறை.

மதிபகவேயான்ற - தினைமணிமாவாவன்
பமர்துறுசேவாயா - கனிதுவன்றுமாவே.

இ - ள். மதி பக வேய் ஆன்ற தினை மணி - சந்திரனுடல் பிளவுபட (உயர்ந்த) மூங்கில்களமைந்த தினைப்புனத்திற்சென்று,—மா ஆ அன்பு அமர் துறுசே ஆயா - பெரிய பசுக்களுடன் அன்பு பொருந்திய நெருங்கிய இடங்கள் (அப்புனத்திலுள்ள தினைக்கதிர்களை மேய்ந்து) (உடல்) வாடா,—மா கனி துவன்றும் - (அம்மலையி லுள்ள) மாமரங்கள் (எப்போதும்) கனிகளால் நெருங்கி நிற்கும் என்க. கக

சருப்பதோபத்திரம்.

நிரையாக அறுபத்து நான்கறை கீறி எவ்வெட்டெழுத்தால் ஒவ்வோரடியாகத் தொடுத்த நான்கடியுமேனின்று கீழிழியவுங், கீழ்நின்று மேலேறவும் எழுதப்பட்டு மேனின்று கீழிழியவும் கீழ்நின்று மேலேறவும் முதலொடுங்கி யிறுதியாகவும், இறுதிதொடங்கி முதலாகவும் மாலைமாற்றாக நான்குமுகத்திலும் வாசித்தாலும் அச் செய்யுளே வருவது.

கலிவிருத்தம்.

வீயாவாமாமாவாயாவீ - யாவாயாராராயாவாயா
வாயாடேமாமாடேயாவா - மாராமாதோதோமாராமா.

இ - ள். ஆமா வீயாவாம் - (அம்மலையிலிருக்கும்) காட்டுப்பசுக்கள் (எந்நாளும்) இறவாவாம்,—வாயா வீ ஆ ஆராயா வாயார் ஆயா - கிடைத்தற்கரிய பூக்களைப் பசுக்களாராய்ந்து வாய் நிரம்பக் (குதட்டிப்புசித்து) (உடல்) வாடாவாம்,—வாய் ஆடு மா மாடு ஏயா - பொருந்திய வரையாடுகள் (தமக்குக்குறைவின்மையின்) பெரிய (அம்மலை) ப்பக்கங்களி லுள்ள வேறிடத்திற் செல்லாவாம்,—ஆம் ஆ ஆம் - அருவி நீரும் ஆத்திமரமும் எங்குமுளவாம்,—மாது மா தோம் ஆரா அழகிய மாமரங்கள் (குறைவின்றி நிற்றலின்) குற்றத்தைப்பொருந்தா என்க.

ஏகாரம் தேற்றப்பொருளிலும், ஓகாரம் அசைநிலைப்பொருளிலும் வந்தன. அம்மலை தெய்வத் தன்மையுளதாதலின் அங்கிருக்குஞ் சாட்டுப்பசுக்கள் வீயா என்றார். தெய்வமணமும் வாடாமையு முளதாதலின் கிடைத்தற்கரியமலர் என்றார். பருவகாலமன்றி எந்நாளும் பூத்துக்காய்த்துப் பழுத்துநிற்றலின் அவையின்மை யென்னுங் குற்றங்கள் கண்டோர்சொல்லப் பொருந்தா என்பார் மா தோம் ஆரா என்றார். ஆர் என்னும் வினைப்பகுதி வினையெச்சப் பொருளில்வந்தது. உO

மாலைமாற்று.

ஒருசெய்யுளை ஈற்றடியைமுதலாகக்கொண்டு வாசிப்பினும் அச்செய்யுளே வருவது.

தேடாவாழைமாவீடாதே - தேனாராமாவாழாயாதே
தேயாழாவாமாராறுதே - தேடாவீமாழைவாடாதே.

இ - ள். தேதள் தா வாழை மா வீடாது - வானத்திலுள்ள விருச்சிகராசியைத் தோயாநின்ற (உன்னதத்தையுடைய) வாழைமரங்களும் மாமரங்களும் (எந்நாளும்) கெடாமல் நிற்கும்,—தேன் ஆர் ஆமா வாழ் ஆயாது - (சோலையிலுள்ளமலர் கள் ஒழுக்கும்) தேனைப்புசித்துச் (சஞ்சரிக்கும்) காட்டுப்பசுக்கள் தம் வாழ்விற்கெ டாது நிலைபெறும்,—தேயாழ் ஆ ஆம் - தெய்வத்தன்மையுடைய மிதுனராசியைத்

நின்றாகின்ற உயர்ச்சியை யுடைய) ஆச்சாமரங்கள் பல்கிநிற்கும்,—ஆர் அளுசு - ஆத்திமரங்கள் நீங்காது நிலைபெறும்,—தோடா வீ மாழை வாடாது - எளிதிற் கிடைக்கும் மலர்களையுடைய புளியமரங்களும் உலராது நிற்கும் என்க.

ஏகாரம் நான்கும் அசைநிலையிடைச்சொற்கள். அம்மலை தெய்வத்தன்மையும் கயிலைமுதலியவற்றோடொன்றாகச்சேர்த் தெண்ணப்படு மான்மியத்தையு முடைதாதலின், அங்கிருக்கும் மரங்களும் மிருகங்களும் கெடா என்பார் வாழை மா மாழை வீடா தென்றும் ஆமாவாழாயா தென்றும் கூறினர். ௨௧

## [1]காதைகரப்பு.

ஒருசெய்யுள் முடிய எழுதப்பட்டதனீற்று மொழியின் முதலெழுத்துத் தொடங்கி ஒவ்வோரெழுத்து இடையிட்டு வாசிக்கப் பிறிதொருசெய்யுள் போதுவது.

கொச்சகக்கலிப்பா.

இனநீடியயானைவிலாருலாவ
வனமோடிடமாதவியாருநாவி
புனமோடிகையாதவிலாருண்மன்னி
யனல்வாயவியாருவகன்றிமாதோ.

இ - ள். வில்லார் உலாவ நீடியயானை இனம வனம் ஓடிட - வில்லையுடைய குறவர்கள் உலாவுதலைக்கண்டு அச்சமுற்ற யானையின் கூட்டங்கள் காட்டில் விரைந்தோடும் அரவத்தைக்கேட்ட,—மாதவி ஆரும் நாவி - குருக்கத்திமரங்களின் (மறைந்து) தங்கியகத்தூரிமிருகம்,—புனம் ஓடி கையாத இல் ஆர் உள் மன்னி - தினைப்புனத்தின்கட்டியகதோடிக் குறைவின்மையின் வருந்துதலில்லாத குறவர் குடிசையுட்சேர்ந்து,—அனல்வாய் கன்றி அவி ஆருவ - (அக்குடிசையிலுள்ள) நெருப்பிற்பட்வேவோடி (அக்குறவர்கட்கு) உணவாகப் பொருந்தும்.

வாய் என்னும் முதனிலை வினையெச்சப்பொருளில் வந்தது. ௨௨

காதைகரப்பிற்கரந்தது.

வஞ்சித்துறை.

கருவிவானனி - மருவியாடின - விருவிமாடின - வருவியாடின.

இ - ள். கருவி வான் நனி ஆடின அருவி - கூட்டமாகிய மேகங்கள் மிகவும் பொழியாநின்ற நீராலாய (அம்மலையி னின்றுவீழும்) அருவியினீர்ப்பெருக்கில்,— மாடு இருவி இனம் மருவி ஆடின - பக்கத்திலுள்ள இணைத்தாட் கூட்டங்கள் பொருந்தி மூழ்காநிற்கும் என்க.

இனம் அருவி நிலைமொழியினது மகரம் கெடுதல் விகாரம். ௨௩

## திரிபங்கி.

ஒருசெய்யுளாய் உறுப்பமைந்து ஒருபொருள் பயப்பதனை மூன்றாகப்பிரித்து எழுத வெவ்வேறு செய்யுளாய்த் தனித்தனியே பொருள் பயந்து தொடையும் இரியையும் தனித்தனியே காண வருவது.

காப்பியக்கலித்துறை.

சந்தனமார்தடஞ்சாரலெலாந்தனிவானளவுங்
கொந்துலர்வீநெடுங்காவினெலாங்குனிமாந்தருவி
னந்தியதேன்படுஞ்சூழலெலாநனிமாந்தர்விழை
கந்தநிலாங்கடந்தாழ்கரிபோங்கனிவீழ்ந்தழியும்.

இ - ள். சந்தனம் ஆர் தடம் சாரல் எலாம் நனி மாந்தர் விழை கந்தம் நிலாம் - சந்தனமரங்கள் நிறைந்த விசாலித்த மலைப்பக்கங்க ளெல்லாம் மிகவு மனிதர் விரும்

பும் மலர்வாசனை விளங்கும்,—தனி வான் அளவும் கொந்து அலர் வீ செடுமை காவின் எல்லாம் கடம் தாழ் கரிபோம் - ஒப்பற்ற ஆகாயத்தை யளாவிய பூங்கொத்தின்கண் அலர்ந்த பூக்களை யுடைய நெடிய சோலைகளி லெல்லாம் மதமொழுகாநின்ற யானைகள் சஞ்சரிக்கும்,—சூழல் எல்லாம் குனி மாந்தரு, இன் கந்திய தேன் படும் கனி வீழ்ந்து அழியும் - அம்மலையி னிடமெல்லாம் (கனிப்பொறையால்) தலைவளைந்த மாமரங்களினது மிகுந்த தேன் பொருந்திய கனிகள் சிந்தி அழியும் என்க.

இத்தொடர் கொண்டு கூட்டுப்பொருள்கோள்.

மேற்கவியுட்பிரித்தசெய்யுள்கள்.

வஞ்சித்துறை.

சந்தனமார்
கொந்தலர்வீ
நந்தியதேன்
கந்தநிலாம்.

தடஞ்சாரலெலாம்
நெடுங்காவினெலாம்
படுஞ்சூழலெலாம்
கடந்தாழ்கரிபோம்

தனிவானளவும்
குனிமாந்தருவின்
நனிமாந்தர்விழை
கனிவீழ்ந்தழியும். ௨௪

பிறிதுபடுபாட்டு.

ஒருசெய்யுள் அடியையும் தொடையையும் வேறுபடுப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறொரு செய்யுளாய வருவது.

கலிவிருத்தம்.

ஆன்றூர்ந்தகாவினளியாடுபூந்தேன்
மான்றீன்றவேரன்மணியீர்ங்கவுண்மாச்
சான்றோங்குகாட்டிற்றயங்குமணிமுத்தோ
டேன்றூர்ந்துநாட்டினடக்கவெழுமார்த்து.

இ - ள். ஆன்று ஆர்ந்த காவின் அளி ஆடு பூ தேன் - பெருமை அமைந்து நிறைந்த சோலையிலுள்ள வண்டுகள் திளைத்தாடாநின்ற பூவினின்றொழுகுந் தேன்பெருக்கானது வேரல் மான்று ஈன்ற மணி - மூங்கில்கள் ஒன்றோடொன்று தாக்குதலால் சிந்திய முத்துக்களை,—ஈரம் கவுள் மா சான்று ஓங்கு காட்டில் தயங்குமணி முத்தோடு - மதத்தாற் குளிர்ந்த கபோலத்தையுடைய யானைகளால் நிறைந்தோங்கிய முல்லைநிலத்தில் விளங்கு முத்துகளோடு,—ஏன்று ஊர்ந்து நாட்டின் நடக்க ஆர்த்து எழும் - வாரிச்சென்று கோஷித்து மருதநிலத்திற் செல்ல எழாநிற்கும்.

மான்று மால் என்னும் பண்படியாகப் பிறந்த வினையெச்சம். வேறுபடுப்ப ஒழுகிசைச் செப்பலோசைத்தாய் ஈராசிடையிட்டு இருகுறளிருவிகற்பத்தானடந்து காசென்னும்வாய்பாட்டானிற்ற நேரிசைவெண்பாவாய்வந்த செய்யுள்.

ஆன்றூர்ந்தகாவினளியாடுபூந்தேன்மான்
றீன்றவேரன்மணியீர்ங்கவுண்மாச் - சான்றோங்கு
காட்டிற்றயங்குமணிமுத்தோடேன்றூர்ந்து
நாட்டினடக்கவெழுமார்த்து.

இ - ள். மேற் கலிவிருத்தப் பொருளேயாம் என்க. ௨௫

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இனையவளம்பலபெற்றுநீடியிம்பருமும்பருமேத்தவாய்ந்து
நனைமலர்க்காவுமருங்குடுத்துநளிர்மழைப்போர்வைதன்மெய்யிற்போர்த்துக்
கனைகதிர்ப்பன்மணிச்சென்னிமேல்வான்கங்கைதலைச்சுற்றுமானவோங்கிப்
புனைபுகழ்மல்கவரசுவைகும்பொற்பமர்மந்தரவெற்பின்மாதோ. ௨௬

### குமாரசம்பவம்.

ஆருயிர்யாவையுமுய்யுமாற்றாலற்புதமேனியெடுத்துநின்று
பேரருளாங்கொழிலாட்டுகந்தபிஞ்ஞகன்கந்தனைநல்கவேண்டிச்
சீரிமயத்துமடப்பிடியைத்திருமணஞ்செய்தபினெய்தியங்க
ணேரியலந்தப்புரத்தின்மன்னியின்பக்கலவிகடாத்தலுற்றான். உஎ

வண்டிமிர்கூந்தலிமயவல்லிவனமுலைதாக்கமகிழ்ந்துபுல்லிக்
கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றுப்பன்னாட்கலவிப்பெருநலந்துய்க்குங்காலை
யண்டருணர்ந்துவெருவியஞ்சியம்பிகைதன்பாற்கருப்பவீறு
கொண்டிடுமுனனஞ்சிதைவுசெய்யுங்கொள்கையினங்கியையேவினார்கள்.

ஏவலுமங்கிமற்றங்கணேகியெம்பெருமான்கோயில்வாயின்முன்னர்த்
தேவியுகைக்குமடங்கல்வைகுஞ்செய்கையைநோக்கிநடுங்கிமீண்டு
மேவியவிண்ணோர்குழாத்தைநண்ணிவிளைவுமவர்க்குவிளக்கதோதி
நீவிர்களேயவணெய்தியூறுநிகழ்த்திடுமினெனக்கரைந்தான். உகூ

அரியயனாதியமரரெல்லாமம்மொழிகேட்டுளமுழுங்கிநொந்து
பெரிதுயர்மந்தரப்பாங்கமொய்திப்பேணிநிலமிசைவீழ்ந்திறைஞ்சி
யுரியமுறையிற்பழிச்சிநின்றேயோவிமொற்றமுணர்ந்துநம்மான்
றெரிவையொடாடும்புணர்ச்சிகாப்பட்டசென்றனன்வெற்றரையோமெங்கள்.

கண்டனர்காமனைச்செற்றகோவைக்கழிபெருங்காதல்கரையிகப்ப
புண்டரிகக்கண்முகுந்தன்வாசப்பூந்தவிசாளியுருத்திரர்க
ளண்டர்மருத்துவர்சாத்தியர்களனைவருமெல்லையிலன்புபொங்கிக்
கொண்டமயிர்ப்புளகங்கனமலகக்குவித்தகரத்தொடுபோற்றலுற்றார். ஙக

வெள்விடைபூங்கொடிமீதுவைத்துவென்றிமழுப்படையேந்திவஞ்சக்
கள்ளர்கருத்தினகப்படாதகண்ணுதற்சாமிநின்றாளிணையி
லள்ளலளககரமிந்தந்தன்னாற்பூசனையாற்றியமிர்தரானே
மெள்ளருமாமலரிட்டிறைஞ்சிச்சுமனமொனும்பெயரெய்தினோமால். ஙஉ

ஆழியுடைப்புவிமீதொர்சிற்றாளாள்பவர்தம்மையடுத்தவருந்
தாழ்வருமின்பமகிழ்ச்சியெய்தித்தகைபெறவாழுகின்றார்களென்னிற்
பாழியுயரகிலாண்டகோடிப்பரப்புமுழுதுமரசுசெய்யு
மாழைவிழியுமைபாகநின்னைவந்தடுதேங்களுக்கென்குறையே. ஙங

துறந்தவருள்ளக்கமலமேவுஞ்சோதித்திருவுருபோற்றிபோற்றி
மறந்திகழ்வோரையெறிந்துவீசுமறந்திகழ்வாட்படையாளிபோற்றி
யுறந்தமலர்ப்பதம்போற்றியாங்களுன்றனடைக்கலங்கணடுகொள்ளென்
றறந்தலைநின்றவமரர்போற்றவங்கணனோக்கியருள்சுரந்து. ஙச

வேண்டுவகூறுமினுங்கட்கின்னேமேவரநல்குதுமென்றருள
வீண்டியமாயனையுள்ளிட்டோர்தம்மேவலினான்முகனேத்தியெந்தாய்
மாண்டமலைமகள்பாற்கருப்பம்வாய்ப்பதுவேண்டிலர்மான்முதலோர்
காண்டகவந்தனர்மேலியற்றுங்கடனறியேங்களெனக்கரைந்தான். ஙரு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தனக்கெனச்சிறிதும்வேண்டாத்தன்மையனுயிர்கட்கென்றே
நினைப்பருநடனம்பூண்டநின்மலனற்றேலிந்தப்
பனித்தமுத்துருக்கியன்னவெண்புனல்பருகுமின்க
ளெனப்புகன்றருளவல்லேயெரியிறையங்கையேற்றான். ஙசு

எண்ணரும்வருடங்காறுமாயிரவிரவிப்பொற்பி
னண்ணல்பானின்றுவீழுமதனையவ்வனலோனுண்ண
விண்ணவரெவர்க்குமங்காண்மேவருங்கருப்பநீடத்
துண்ணெனத்தளங்கிவெப்புநோயினிற்றொடக்குண்டார்கள். கள

மீளவுமிரந்துவேண்டும்விண்ணவர்குழாத்தைநோக்கி
வாளெனப்பிறழ்ந்துநீணமெதர்த்தரிபரந்துகூற்றை
யாளெனக்கொண்டுமைதோய்ந்தகல்விழிச்சேனைவில்வேட்
காளையைமுனிந்தவீரன்கருணையால்விளம்பலுற்றான். கஅ

கராத்துயிர்பருகிவேழங்காத்தவன்முதலாநீவிர்
பராய்த்தொழூங்காஞ்சிவைப்பிற்பயில்சுரகரீசமென்னச்
சுராக்கனுமவுணனுவிதொலையநாமமைத்ததான
மிராக்கதிரெறிக்குமிந்துமுடிநமக்கினியசூழல். கசு

சுரகரீசத்தின்பாங்கர்ச்சுரகரதீர்த்தமுண்டால்
விரவிநீர்படிந்தோர்பாவவெப்புநோய்முழுதுநீங்கு
மிரவிநாட்கழியநன்றுநீரவணெய்திநம்மைப்
பரவிநீராடிவிந்தவெப்புநோய்பாறுங்காண்மின். உo

ஆயிடைநீங்கிப்பின்னர்மேருவையணுகியங்கண்
மேயவிக்கருப்பந்தன்னைவிடுமினென்றகன்றுநீங்க
மாயனேமுதலாம்விண்ணோர்மகிழ்ந்தெழுமுள்ளத்தோடுந்
தூயசீர்க்காஞ்சியெய்திச்சுரகரந்தன்னைக்கண்டார். உக

காண்டலுமுவகைபொங்கிச்செயத்தகுகடன்கண்முற்றித்
தீண்டினோர்பிறவிமாய்க்குஞ்சுரகரதீர்த்தமாடி
மாண்டருசுரகரீசவள்ளலையருச்சித்தேத்தி
வேண்டினர்வேண்டலோடும்வெப்புநோயொழியப்பெற்றார். உஉ

பெற்றபினங்கணீங்கிப்பெறலருமேருக்குன்றி
னுற்றமாத்திரையின்னோர்வயாவுநோயொழிவுபெற்றார்
மற்றவரகட்டினீங்கிவளங்கெழுசுடர்பொற்சோதி
பற்றிளம்பரிதிநூறாயிரமெனப்பரந்துதோன்றி. உங

வடவரைமுழுதுஞ்செம்பொன்வண்ணமாச்செய்துதெண்ணீர்த்
தடநெடுங்கங்கையாற்றுச்சரவணப்பொய்கைமேவிக்
கடவுளர்முனிவரெல்லாமுய்யுமாகருணைகாட்டிச்
சுடர்வடிநெடுவேலண்ணலறுமுகன்றோன்றினால். உச

சுரந்தவிர்த்தமரர்க்காத்தசுரகரதீர்த்தமாடி
வரந்தருஞ்சுரகரீசவள்ளலைவணங்கிப்போற்றி
நிரந்தரமன்புசெய்யப்பெற்றவர்நெடுநீர்ஞாலத்
தரந்தைநோய்தவிர்ந்துமுத்திப்பேற்றினையடைவர்மாதோ. உரு

சுரகரீசப்படலமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - கஅகசு.

---

# தான்றோன்றீச்சரப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கிளைத்தெழுங்குழவித்திங்கட்கீற்றிளங்கொழுந்துமோலி
வளைத்தழும்பாளன்வைகுஞ்சுரகரவனாகஞ்சொற்றாக்
திளைத்தவர்கருவிலெய்தாச்சுரகரதீர்த்தத்தென்பா
லிளைத்தவர்க்கிரங்குந்தான்றோன்றீச்சரத்தியல்புசொல்வாம். ௧

முழுமலத்தொடக்குநீங்கியாருயிர்முத்திசேர்வான்
மழுவலான்றானேதோன்றும்வாய்மையாற்றான்றோன்றீசக்
கெழுதகுபெயரினோங்குங்கிளக்குமவ்விலிங்கந்தன்னைத்
தொழுதொறுசிறுவன்றீம்பால்பெற்றவாசொல்லக்கேண்மின். ௨

உபமனியர்பாற்கடலுண்டவரலாறு.

சலிப்பறுதவவசிட்டன்றங்கையைமணந்துஞானப்
புலிப்பதமுனிவனீன்றபுகழுபமனியனென்னு
மொலிச்சிறுசதங்கைத்தாளோன்மாதுலனுறையுண்மேவிக்
கலிப்பகைச்சுரபித்தீம்பாலுண்டுளங்களித்துவாழ்நாள். ௩

தாதையுந்தாயுமேகித்தநயனைக்கொண்டுதங்கண்
மேதகுமிருக்கைபுக்குமேவுழிச்சிறுவன்றீம்பாற்
காதரமெய்தியன்னையடிபணிந்திரப்பவந்நாள்
கோதறுநென்மாநீரிற்குழைத்திதுகோடியென்றாள். ௪

ஏற்றனன்பருகித்தீம்பாலன்றிதுபுனலென்றோச்சி
மாற்றினன்மாதுலன்றன்மனைவயிற்பருகுந்தீம்பா
லாற்றவுநினைந்துதேம்பியழுதழுதிரங்கநோக்கிக்
கோற்றொடிநற்றாய்நெஞ்சமுளைந்திதுகூறலுற்றாள். ௫

தவம்புரிநிலையின்வைகுஞ்சார்பினேமதாஅன்றுமுன்னாட்
சிவன்றனைவழிபடாமையிலம்படுந்திறத்தினேங்க
ளவன்றெறுமான்பால்யாண்டுப்பெறுகுவமப்பாமுக்கட்
பவன்றனைவழிபாடாற்றிப்பான்மிகப்பெறுதிகண்டாய். ௬

கச்சிமாநகரத்தெய்திக்கண்ணுதல்பூசையாற்றி
னிச்சையினேற்றமாகப்பெறுவையென்றியம்புமன்னை
மெச்சிடவிடைகொண்டேகிவிழைதருகாஞ்சியெய்தி
முச்சகம்புகழுந்தான்றோன்றீச்சரமுதலைக்கண்டான். ௭

கண்டுளங்குழைந்துநெக்குக்கரையிலாக்காதல்பொங்கித்
தொண்டனேனுய்ந்தேனென்றுதொழுதெழுந்தாடிப்பாடி
யிண்டைவார்சடிலத்தண்ணலிணையடியருச்சித்தங்க
ணண்டரும்வியக்குமாற்றாலருந்தவம்புரியுமெல்லை. ௮

தகைபெறுஞ்சயம்புலிங்கத்தலத்துறைகணிச்சிப்புத்தே
ளுகைக்குமுகிலூர்தியண்ணலுருவுகொண்டெய்திப்பத்தி
மிகையினையளந்துதானுந்தன்மையைவிளங்கக்காட்டி
நகைமுகமருளித்தீம்பாற்கடலினையழைத்துநல்கி. ௯

முற்றுணர்தெளிவுமூவாவிளமையுஞ்சாக்காடெய்தாப்
பெற்றியுமுதவிபின்னும்வேண்டுவபேசுகென்றான்
கற்பகஞ்சுரபிசிந்தாமணிவளைகமலமெல்லாம்
பற்றுடையடியாரேவற்பணிசெயப்பணிக்கும்வள்ளல். ௰

என்னலுமுனிவன்போற்றியெளியனேற்குனதுநோன்றாண்
மன்னுபேரன்புவேண்டுமேற்றுமிவ்விலிங்கமூர்த்தி
தன்னிலெக்காலுநீங்காத்தண்ணருள்கொழித்துவாழ்ந்து
துன்னினோரெவர்க்கும்பாவந்துமித்துவீடுதவவேண்டும். கக

என்றுநின்றிரந்துபோற்றுமிளவலுக்கருளிச்செய்து
மன்றலங்குழலியோடுமிலிங்கத்தின்மறைந்தானைய
னன்றுதொட்டறிஞர்க்கெல்லாமருட்பெருங்குரவனாகி
வென்றிவெள்விடையான்சைவம்விளக்கிவீற்றிருந்தானன்னோன்.

கண்ணன்சிவதீக்கைபெறல்.

பிருகுமாமுனிவன்சாபப்பிணிப்பினாற்பிறந்துவீயு
மருமலர்த்துளவோன்கண்ணனாயநாண்மனிதயாக்கை
யருவருப்பெனவாங்கெய்தியத்தகுமுனிவன்றன்பாற்
றிருவளர்தீக்கையுற்றுத்தேகசுத்தியினைப்பெற்றான். கங

பாண்டவர்தூதனென்னப்பயிலியபெயரானங்க
ணாண்டகையடிகள்போற்றிவைகினனன்றுதொட்டு
நீண்டுலகளந்தமாலைநிறைதிருநீற்றுகோலம்
பூண்டுயர்சைவனென்னப்புகன்றிடுமுலகமெல்லாம். கச

தானதோனறீச்சரப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஎ௦.

# ௨௩. அமரீசப்படலம்.

கலிநிலைத்துறை.

தெத்தேயெனவரிவண்டினமுரலமதுச்சிந்துந்
தொத்தேர்மலர்ப்பொழில்சூழ்றுசுவாயம்புவஞ்சொற்றூ
முத்தார்துறையதன்கீழ்த்திசைமுப்பததுமுக்கோடிப்
புத்தேளிரும்வழிபாடுசெயமரீச்சரம்புகல்வாம். க

சுராசுரயுத்தவரலாறு.

வரிவண்டினமுரலாமணமாலைக்கடவுளரு
முரிநுண்ணிடைத்திதிமைந்தருமுன்னாளொருகாலத்
தெரிமண்டியெனச்சீறியெதிர்த்துப்பொரலுற்றார்
நரிபேய்கொடிசேனங்கழுகுழலுங்களனாங்கர். ௨

முற்றிப்பலவுகமங்கவர்தண்டாதமர்முயலக்
கற்றைச்சடையிறையோன்மலைமகளோடுயர்ககனத்
துற்றுச்சமராடற்றிறநோக்கியுறைந்தனனால்
வெற்றித்திறந்தோலாவகைமேன்மேலமர்மூண்ட. ௩

உண்ணவமுதனையாளளையுடையான்முகநோக்கி
யெண்ணலுணர்வரியாயிருதிறத்தோரிவர்தம்முண்
மண்ணவிறலொருகூற்றினர்வடிகைபுனைகெனலும்
விண்ணடரைவன்றானவர்வென்றார்திறல்கொண்டார். ௪

அதுகண்டுமையக்தோபெருமானேயருள்புரியாய்
மதுவொன்றியவெற்றித்தொடைவானோர்புனைகெனலும்
விதுவொன்றியசடையோனருள்விண்ணோர்புடைவைப்ப
முதுவன்பகையறவென்றனர்முடிவானவரம்மா. ரு

வெற்றிப்பறைசாற்றிப்பெருவிறல்விண்ணவர்மீண்டு
கொற்றத்துயர்கடவுள்ளவைக்களமேவாக்குறுகிச்
செற்றுச்செருவென்றோங்கியதிறலோடுறைகுற்றார்
மற்றப்பொழுதுயர்வாசவுன்மதமுற்றுரைசெய்வான். ௬

அச்சோவெனதாண்மைத்திறமார்கூறுவரென்று
னச்சீரவன்றனைவெங்கனலவனைச்சமனிருதி
யச்சூரனையவனைப்புனலரசன்வளியவனை
யச்சிலனையளகைக்கிறையீசானனங்கவனை. ௭

ஈசானனைமலரோனவன்றனைநாரணனிகலிப்
பேசாவிறல்பேசிப்பிணக்குறுபூசலைநோக்கித்
தூசார்வனமுலையம்பிகைதுணைவற்றொழுதின்னோர்
மாசார்செருக்கொழியும்படிவல்லாலருளென்றாள். ௮

பெருமான்தேவர்களகந்தையையொழித்தல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நிணம்புல்குசூலம்வலமாகவேந்திநெடுமால்விரிஞ்சன்முதலோர்
பிணம்புல்குகாட்டிடைநடமாடுந்தாளுறைவேணிவைத்தபெருமான்
கணம்புல்குதேவர்முரணைத்தவிர்ப்பவவர்முன்புகாமரளிவீழ்
மணம்புல்குதொங்கலணிவேதாளியக்கவடிவொன்றுகொண்டணுகினான்.

அணுகித்துரும்பையெதிர்நட்டுமுன்னரிறுமாந்துவைகுமவனைப்
பணிலத்தனதியிமையோர்கண்டோர்ந்துயிர்வணிப்பாயிற்றுரித்தவென்
றுணிபுற்றுவைகுமொருநீயாவனென்னயலென்றுசொல்லுமொழிகேட்
டுணர்விற்சிறந்ததவர்கண்டுகொள்ளுமுவனின்னபேசலுறுவான். ௧௦

எவனேனுமாகவருநானுமாதுவலியின்றளக்கலுறவேன்
றுவளாதுநம்முனடுமிந்ததுரும்புதுணிசெய்யவல்லனெவனோ
வவனேதயித்தியரைவென்றமீளியறிகென்றுரைப்பமகவா
னிவராவெழுந்துகுலிசத்தைவீசிவறிதேயிளைத்தனனரோ. ௧௧

மற்றைத்திசைகளுறைவோரும்வன்மைமுழுதுஞ்செலுத்திவலியி
லொற்றைத்துரும்பையசைவிக்குமாற்றலிலராயுடைந்துவிடலுஞ்
செற்றத்தெழுந்தவயனார்தமதுபடையைச்செலுத்தவரிய
மற்றப்படாதபடைவீசியார்ப்பவவைகூர்மழுங்கியனவே. ௧௨

துரும்பொன்றுதன்னில்வலிமுற்றிழந்தசுராச்சமெய்திவியவா
விரும்பண்புகூரவெவனியியம்புகெனலும்மியக்கவடிவாய்
வரும்பாண்டரங்கனுருவங்கரப்பமறுகித்திகைக்குமவர்முன்
கரும்பொன்றுதோளிமலையான்மடந்தையெதிர்காட்சிதந்தருளினாள்.

உமையம்மைதேவர்களுக்குபுத்திபுகட்டல்.

எதிர்காணநின்றகருணைப்பிராட்டியிருதாள்பழிச்சியிமையோர்
முதிர்காதல்கொண்டுவழிபட்டுவண்கைமுடிமீதுகூப்பியுலகம்
பதினாலுமீன்றமுதல்வீயியக்கர்பதியூரயணைந்தவவன்யார்
மதியேமெமக்குமொழிகென்றிரப்பமலைவல்லியின்னபுகலும். ௧௪

எவன்வாணிகேள்வன்முதலோர்பதங்களிலைபேறுசெய்யுமிறைவ
னெவனெப்பொருட்குமாதாரமாகியெவருந்தொழப்படுபவ
னெவன்முற்றுமாக்கிநிலைசெய்துபோக்கியறிஞர்க்கினிக்குமமுத
னவ்வனென்றுகாண்மினிமையீரியக்கவடிவாகிவந்தவழகன். ௧௫

எவனுக்குமுற்றும்வடிவங்களாகுமெவனுண்மையாருமறியா
ரெவனெங்கும்யாவுமறிவுற்றுநிற்பனெவனுனடக்குமுலக
மெவனைத்துதிக்குமறையிறுமுற்றுமெவனங்கவைக்குமரியா
னவனென்றுகாண்மினிமையீரியக்கவடிவாகிவந்தவழகன். கசு

எவனுமமெண்ணினெவன்றருள்பழிச்சினெவனைக்கருத்தினிறுவி
னெவனன்பர்சேவைபுரியிற்பவங்களிரிவுற்றுமுத்திமருவு
மெவனுண்மையின்பவறிவாகிநிற்பனெவனிந்துவேணிமுடியா
னவனென்றுகாண்மினிமையீரியக்கவடிவாகியந்தவழகன். கஎ

ஒற்றைத்துரும்பினுமதாற்றன்முற்றுமொழிவித்தகன்றவவனைப்
பற்றுற்றுநீவிரறிகின்றிலீர்கள்பழையோனவன்றன்வலமே
யற்றத்தினீக்குமவன்பாலுதித்தவகிலந்தனக்குவலமா
மற்றுத்தமக்குமுதலாயமண்ணின்வலியேகடாதிவலிபோல். கஅ

இனிநீவிருய்திபெறுமாறுரைப்பலிமையாதமுக்கணிறையோன்
பணிவீசுகம்பைநளிநீர்துளிக்குமொருமாநிழற்படியிலென்
றனையாண்டுகொண்டுமகிழ்காமர்கச்சிதனிலெய்திவெள்ளைவிடையோன்
றுனிதீர்சரண்கள்சரணென்றடைந்துதொழுமின்களும்பருலகீர். ககூ

தேவர்கள்சிவபூசைசெய்தல்.

கலிநிலைத்துறை.

என்றுகூறினண்மறைந்தனளுலகமீன்றெடுத்தா
ளன்றுமாலயன்றுடக்கமாமமரர்களெல்லா
நன்றுநம்மறிவிருந்தவாறென்றுளநாணிச்
சென்றுசேர்ந்தனர்கச்சியந்திருநகர்த்தேத்து. உ0

திரிதசிச்சரப்பெயரினுற்சிவக்குறியிருத்திக்
கரியகண்டனையருச்சனைகரிசறவாற்றிப்
பெரிதுமாமிடல்பெற்றனர்வரங்களும்பெற்று
ரரிவைபாகனுக்கினியதாம்த்திருக்கோயில். உக

அமரீசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கூகக.

## உ4 திருமேற்றளிப்படலம்.

கலிநிலைத்துறை.

துளிமதுத்தொடைக்கடவுளர்தொழுமமரீசங்
களிவரப்புகன்றனமுருத்திரகணமுதலோ
ரளியினுற்றொழுதேத்துமீரைம்பதிற்றென்பான்
றளிகளீண்டெடுத்தியம்புதும்வழுத்தபுகெறியீர். க

சேகுதீரமரீசத்தின்சேயிடைத்தென்பான்
மாகவைப்பினையுரிஞ்சியமணிமதிற்காயா
ரோகணக்குடபாங்கர்நூற்றுப்பதினெட்டு
நாகர்போற்றிடலங்கெழுதலங்கணன்குளவால். உ

அண்டகாத்தமருத்திரர்தூற்றுவருட்சி
கண்டன்வீரன்குரோதனேமுதல்கருதெண்மர்
மண்டலத்திறையோரிருநால்வரும்வழுத்திப்
பண்டுபூசனைபுரிந்திடப்பட்டவத்தளிகள். ரு

விஷ்ணுசிவசாரூபம்பெறவிழைதல்.

இருமையுந்தருமேன்மையத்தளிகளையென்றும்
பொருவின்மெய்த்தவர்பற்பலரருச்சனைபுரிவார்
கருதரும்புகழவற்றிடைக்கண்டவர்கருநோ
யொருவிவீடுறுமேற்றளியென்பதொன்றுளதால். சு

நவிலுமத்தலத்தெய்திமுன்னுகணைப்புத்தேள்
கவிரிதழ்ச்சிறுநுணுகிடைக்கவுரிதன்களபக்
குவிமுலைத்தடச்சுவடுதோய்குரிசில்சாரூபம்
புவிமிசைப்பெறவிழைந்துமெய்த்தவம்புரிந்தனனால். ௭

ஐம்புலன்களையடக்கிநின்றறுபகைதுறந்து
நம்புநீற்றணியக்கமாலிகையுடனயந்து
கம்பியாதுருத்திரங்கணித்திதயநற்கமலத்
தெம்பிரானருள்வடிவினையிடையறுதிருத்தி. அ

ஆற்றருந்தவமியற்றுழியழல்விழித்தறுகட்
கூற்றைவென்றருள்பரம்பொருள்கருணைகூர்ந்தடலா
னேற்றின்மீதெழுந்தருளியெம்மடியரிற்சிறந்தோய்
நோற்றுநொந்தனைவேட்டனதுவறியென்றருள. ௯

உந்திபூத்தவனளப்பருமுவகையுட்டிளைத்துச்
சந்தமாமலரடிமிசைவீழ்ந்துதாழ்ந்தெழுந்தா
னெந்தைநீதாமுழுவதும்பெற்றுளேனிந்நா
ளந்திலென்றனக்களித்தருளையநின்னுருவம். ௧0

திருஞானசம்பந்தர்சிவசாரூபங்கொடுத்தல்.

என்றவாய்மொழிதிருச்செவியேறலுமெங்கோ
னென்றுகூறுதலுற்றனனுவணமீதுயர்த்தோய்
நன்றுதேர்வைவச்சுதமனுவந்தரநனுகு
மன்றுநாலிரண்டிற்றுடையிருபதாங்கலியில். ௧௧

காழிமாநகர்க்கவுணியர்குலத்தொருகாளை
யேழிசைத்தமிழ்ஞானசம்பந்தனெம்மடியான்
யாழநீபெறவெம்முருவிங்குவந்தளிப்பா
னுழியோயதுகாறுமிவ்வரைப்பினிலமர்ந்து. ௧௨

ஈட்டருந்தவமியற்றுகென்றருளிநீங்குதலுங்
கோட்டமின்றிமாலம்முறைவதிந்துபூங்கொன்றைத்
தோட்டலங்கலாற்றொழப்புகுமுத்தமிழ்விரகர்
பாட்டலங்கலாற்பரஞ்சுடர்திருவுருப்பெற்றான். ௧௩

திருமேற்றளிப்படலமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௬௦௦௨.

---

# 25 அனேகதங்காவதப்படலம்.

கலிவிருத்தம்.

அச்சதருத்திராதியர்போற்றுபு
மெச்சியபஃறளிமேன்மைவிளம்பினு
மெச்சமின்மேற்றளியின்வடசாரமர்
கச்சியனேகதங்காவதங்கூறுவாம். க

கறையடிச்சிறுவிழிக்கடுநடைச்சொரிமதப்
பிறையெயிற்றெறுழ்வலிப்பிளிறொலிக்கரிமுகத்
திறைபுகழ்க்கச்சியிலெய்தியெம்பிரான்றனை
நிறையுமெய்க்காதலானருச்சனைநிரப்புவான். உ

சயமிகுமனேகபேச்சுரனெனத்தன்குறிப்
பெயரினிலிங்கமொன்றிருத்தினன்பெட்பொடு
மயர்வரும்பூசனைமரபுளிப்புரிதரு
மியலபுகண்டெம்பிரானெதிரொழுந்தருளினன். ங

வேட்டதென்மைந்தனேவிளம்பெனத்தாதைதன்
றாட்டுணைமலர்மிசைத்தாழ்ந்தெழுந்திபமுக
னாட்டினில்யான்செயும்பணியெவனல்கெனப்
பாட்டளிதுதைமலர்க்கொன்றையான்பகர்தரும். ச

கலிநிலைத்துறை.

சுருதிநான்முறைநிறுவவுந்தூயவர்தொடங்குங்
கருமமூறுதீர்த்தளிப்பவுந்தயித்தியர்கயமைத
திருவிலார்க்கிடையூற்றினைச்செய்யவுமிவணீ
வருதல்வேட்டெமைமுன்னரேவழுத்தினர்வானோர். ரு

ஆதலாற்புறச்சமயநூலரட்டருக்கென்றுந்
தீதுசாலிடையூற்றினைவிளைமதிசிவனூர்
வேதநன்னெறியொழுகுநர்க்கூறுகள்விரவா
தேதநீத்தருள்புரிதியெம்மானையின்வலியால். சு

உலகெலாமுனைவழுத்துகவழிபடாதொழியிற்
கலிகொள்வேதியரும்பராயினுமவர்கரும
நிலமிசைப்பயனெய்துறாதழிகநின்னிணைத்தாண்
மலர்வழுத்தினோர்பெரும்பயனெய்துகமாதோ. எ

மங்கலங்களுமமங்கலமாமுனைவழுத்தார்
தங்களுக்கிவைவரமுனக்கருளினந்தக்கோ
யிங்குநீயின்னுமொன்றுகேளிரணியபுரமா
மங்கண்வாழ்பவர்கேசியேமுதல்பலரசுரர். அ

அவனியாவையுமலைத்துவெங்கொலைபுரிந்தமர்வா
ரவர்களாருயிர்தாளினற்செகுத்தவர்கருவு
ளவர்கள்சத்தியாம்வல்லபையணங்குவீற்றிருக்கு
முவளைநாடொறுங்கெழீஇக்கலந்தன்புகொண்டமர்வாய். கூ

வல்லபைத்திருவோடுனைவழிபடப்பெற்றோர்க்
கொல்லைவேட்டனயாவையுமுறுகெனவருளி
யெல்லையில்பெருங்கருணையாலுச்சிமோந்தெடுத்துப்
புல்லியெம்பிரான்விடுத்தனன்மீண்டனன்புதல்வன். ௧௦

மீண்டநாயகனிரணியபுரத்தினைமேவி
யீண்டுதானவக்குழுக்களைத்தாளினாலெற்றிக்
காண்டகுந்திறன்முருங்கவென்றழித்தவர்கருவின்
மாண்டசத்தியைவாங்கினன்மணந்துவீற்றிருந்தான். ௧௧

விநாயகப்பிரானருச்சனைபுரியவீற்றிருக்கு
மனேகபேசனையனேகதங்காவதத்திறைஞ்சி
னினாதவெந்துயர்ப்பிறவிதீர்ந்தென்னையாளுடையான்
றனாதுவெள்ளியங்கயிலையிற்சார்ந்துவைகுவரால். ௧௨

அனேகதங்காவதப்படலம்முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் - ௧௦௧௪.

# 21 கயிலாயப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

அல்லிப்பூஞ்சேக்கைமிசையன்னச்சேவல்பெடைக்குருகைப்
புல்லிக்கண்படுபொய்கையனேகதங்காவதம்புகன்று
மெல்லைச்செய்மணிககோயிலதன்மேலபாங்கரிறைஞ்சினவர்க்
கொல்லைப்பேரருள்கூறுங்கயிலாயத்தையுரைசெய்வாம். ௧

திரிபுராதியரொழுக்கம்.

நிலமீதுமந்தரத்துநெறிதாழ்கூந்தலரம்பையர்வாழ்
புலமீதும்வெவ்வேறுபொன்னின்வெள்ளிதனிலிரும்பில்
வலமேவுமாதவத்தானமயனார்வகுத்தமுப்புரிசை
யுலமேவுபுயத்தவுணர்க்குள்வாயினவாம்முன்னாளில். ௨

அங்கவற்றினுறுமவுணர்சுருதிமிருதியாய்ந்துணர்ந்தோர்
துங்கநிலையாகமங்கண்முழுதுந்தேர்ந்துதுகளில்லோர்
கங்கையணிசடைப்பெருமானவழிதொண்டாற்றுங்கடப்பாட்டோர்
தங்குதிருவெண்ணீறுசண்ணித்தொளிகால்வடிவினார். ௩

சிவலிங்கத்தருச்சனையேசெய்யுநியதிக்கடன்பூண்டார்
சிவதருமந்தலைநின்றார்திகழப்பூணுஞ்சாதனத்தார்
சிவனடியார்தமைக்காணினுவகைதுளும்புஞ்சிந்தையினார்
சிவநெறியிற்பிறழாதசெயலிற்றமக்குநிகரில்லார். ௪

எவ்விடத்துஞ்சிவகதையேயியம்புவோருங்கேட்போரு
மெவ்விடத்துஞ்சிவபணியேயியற்றுவோருமெச்சுநரு
மெவ்விடத்துஞ்சிவனடியாரெதிர்கொள்விருந்துபுரந்தருந
லெவ்விடத்துஞ்சிவநாமமுழக்கமன்றியிலையங்கண். ௫

விஷ்ணுவின்வஞ்சகசூழ்ச்சி.

இத்தகையதயித்தியராளிரியல்போகியுடைந்தழியுஞ்
சித்தமுடைக்கடவுளர்போய்த்திருமால்சரணஞ்சரணடைந்தார்
பைத்தபணிச்சேக்கைமிசைமலர்க்கண்படுக்கும்பசுந்துளபத்
தொத்துவிரியுநறுந்தாரானவரோடிதனைத்தொடங்கினான். ௬

வேதமனுவெடுத்தோதிக்கொடியவேள்விபுரிகாலைப்
பூதமிகத்தோன்றினவாலவைதாமும்மைப்புரஞ்சிதையக்
காதுதென்னுந்திருநெடுமோலேவலாற்றிற்கடிதணைந்து
நீதிநிலைத்தயித்தியர்முன்னிற்கலாற்றாதழிந்தனவே. ௭

அதுகாணூஉநனிநடுங்குமமரர்தம்மைமுகநோக்கி
மதுவாருநறுந்துளபமாயனிதனைவகுத்துரைப்பா
னிதுகேண்மினமரர்காளச்சோவவுணரெல்லாரும்
பொதுமேவிநடாநவிற்றும்புத்தேள்சரணஞ்சரணடைந்தார். ௮

தீத்தொழிலின்றலைநின்றகொடியரேனுஞ்சிவபத்தி
வாய்த்தவர்கள்சாவாதம்துகையுடையர்யாமவரைப்
பூத்தநுதிக்கணையொன்றாற்பொருக்கென்றழிக்கும்வலியில்லே
மார்த்தபுகழ்ச்சிவபெருமான்றானேயதற்குவல்லவனும் ௯

வேறு.

அனையவனடிபேணியடைந்தவரவர்கண்டீ
ரினியவர்சிவபத்திசிதைவுசெய்திடுகேம்யா
னினைதருமிதுவல்லாற்பிறிதிலைநெறியென்னுப்
புனைபுகழ்நெடுமாயன்புகன்றிதுபுரிகிற்பான். ௧0

மறைநெறிபழுதென்றுமறுமையொன்றிலையென்று
முறைதருபொருளெல்லாங்கணத்தழிவுறுமென்று
மறைதருமொருநூலையாக்குபுவடிவத்திற்
பொறைபுரிதன்கூற்றோர்புருடனைவருவித்தான். ௧௧

அங்கவன்முகநோக்கியடலரிபுகல்கிற்பா
னிங்கிதுபுத்தாகேளினையதொர்நூல்கொண்டே
பொங்கியசிவநேசம்பூண்டுயர்புரவவுணர்
தங்களைமயல்பூட்டிச்சிவநெறிதபுவிப்பாய். ௧௨

நாரதன்றுணையாகநடமதியிருவீர்க்குஞ்
சீரியமறைவாய்மைசிந்தையினிலைபெறுகென்
றேர்பெறவிடைநல்கயாழிசைமுனிவோனுந்
தேரனும்விரைந்தெய்தித்திரிபுரமணுகுறலும். ௧௩

மீயுயர்புரமூன்றின்மேவுநரவர்செய்யு
மாயையின்மருளுற்றுமற்றவர்மாணுக்க
ராயினரவர்கூறுஞ்சாத்திரமதுநம்பித்
தீயதொர்வழியொழுகிச்சிவநெறிதனைவிண்டார் ௧௪

தாழ்நெறிதலைநின்றுசாதனந்திருநீறு
வாழ்வுறுஞ்சிவதருமமறைநெறிகைவிட்டா
ரூழ்வலியெவர்வெல்வாருங்குவர்மனவியரும்
யாழ்முனிமொழிகேட்டுக்கற்பினையிழந்தார்கள். ௧௫

விஷ்ணுகைலையையடைந்துவிண்ணப்பித்தல்.

விழியுறக்கண்டதுவேமெய்யெனுந்துணிபினரா
யிழிதொழில்பலபுரியுமிவர்செயன்முழுதோர்ந்து
பழுதறுபுகழ்மாயோன்பண்ணவர்புடைசூழக்
கழிபெருமகிழ்வோடுங்கைலையையணுகினனுல். ௧௬

அங்கணெந்திறையோனையடியிணைதொழுதேத்திப்
பங்கயக்கரங்கூப்பிப்பரிவொடுமுரைசெய்வான்
சங்கணிகுழையாய்முப்புரமுறுதானவர்தா
மெங்களுக்கிடர்செய்யநொந்தனமிதுகாறும். கஎ

மாயையினெறிகாட்டும்புத்தனின்மருளுற்றுத்
தூயநன்னெறிவிட்டார்துகள்படுமவர்தம்மை
மாய்வுசெய்தெமையாள்வாயாமனைவனிதைமுத
லாயினர்தமைமுன்னுன்மருள்புரியடிகேளோ. கஅ

பெருமான்றிரிபுரசம்மாரஞ்செய்தருளுதல்.

வருசிவிருத்தம்:

என்றுமாயனியம்புசொற் - சென்றுவார்செவிசேர்தலு
மன்றுளாடியவான்பொரு - ளொன்றுகூறுதலுற்றிடும். கக

கருவிமூதெயில்காதுபோர்க் - கருவியொன்றிலங்காண்வரக்
கருவிகூடிற்கணத்தவர் - கருவெலாமிறல்காண்டியால். உ0

என்னும்வாய்மொழியெம்பிரான் - முன்னர்நந்திமுகத்திறைற்
சொன்னகாலைத்துழாயனு - மன்னதேவரோடாய்ந்தனன். உக

வேறு.

உருகெழுநிலமொருவையமு - மிருசுடரிருபுடையாழியுஞ்
சுருதிகடுகளுறுவாசியு - மருமலரணையவன்வலவனும். உஉ

தடநெடுவடவரைசாபமும் - படவரவிறைபகர்நாரியு
மடல்விரிதுளவினன்வாளியுங் - கடவுளர்பிறர்பிறகருவியும். உஙு

ஆயினரதுபொழுதண்ணலு - மேய்வுறுமிரதமதேறினன்
மாயிருநெடியவில்வாங்கினன் - காய்கனலுமிழ்கணைபூட்டினன்.

எறும்வலிமுழுவதுமெண்ணினன் - கறுவுறுகுறுநகைகாட்டினன்
முறுவலினுயர்புரமும்மையு - நெறுநெறுநெறுவெனநீறின. உ௫

பரவுறுமிமையவர்பார்த்தனர் - குரவையினொடுமகிழ்கூர்த்தனர்
பொருபுளகமுமுடலபோர்த்தன - ரரகரகரவெனவார்த்தனர். உசு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அனையவானவர்க்கரும்பெறல்வரம்பலவருள்செய்துகயிலாயத்
தெனையுடைப்பிரானினிதெழுந்தருளினனிமையவரெல்லாரு
நனைமலர்த்துழாய்நாரணனையனொடுநலம்பெறக்குழீஇயங்நாள்
வினையிகந்துலகுய்யுமாறிஃதொன்றுயிதிக்கலுற்றனர்மன்னே. உஎ

இற்றைநான்முதல்சைவலிங்கார்ச்சனையில்லவர்வினைமாசு
செற்றநீற்றணிகண்டிகையிகந்தவர்சிவன்பெயர்வழுத்தாதார்
கற்றுமஞ்செழுத்துருத்திரங்கணித்திடாரெமக்கயலவராக
வற்றவாறவர்கடையரேயெனவகுத்தவரவரிடம்புக்கார். உஅ

நாரதனும்புத்தனும்நலம்பெறப்பூசித்தல்.

மன்னுநாரதமுனிவனும்புத்தனுமனங்கவன்றழிந்தேங்கி
யென்னகாரியமியற்றினமிமையவரியம்பியமொழிகேட்டுப்
பன்னருஞ்சிவபத்தரிலுயர்ந்தவர்பழமறைகரைகண்டோ
ரன்னதானவர்தமைவழிதேமயல்பூட்டினமந்தோவே. உகூ

பழியில்வாய்மையர்பலர்தமைத்தீவழிப்படுத்தவிப்பெரும்பாவக்
கழிவுவேதநூல்யாங்கணுங்கண்டிலேங்கற்பகோடியின்மேலு
மொழிவுறுதெமக்கிருணரகினிச்செயல்யாதெனவுளநெக்கார்
சுழிபுனற்பணைக்காஞ்சியினெய்தினர்தொடுபழிவினைமாற. ௩௦

கருத்தவிர்த்தருண்மழுவலான்புரந்தருள்காஞ்சியிற்புகலோடு
மிருப்புக்குன்றுறழ்திண்பெருந்தீவினையெம்பிரானருளாலே
பருத்திக்குன்றெனநொய்மையதாயதுபார்த்தனரிருவோரு
மருத்திகூர்ந்தனரவ்விடம்பருத்திக்குன்றெனப்பெயரிட்டார். ௩௧

அவ்வரைப்பினிலிருந்துகொண்டிருவருமதன்வடகீழ்பாங்க
ரெவ்வமில்லதோர்விசித்திரக்கோயிலங்கியற்றினரதனுள்ளாற்
சைவர்சூழ்கயிலாயநாதன்றனைத்தாபனஞ்செய்தேத்திச்
செவ்வன்மாதவம்பன்னெடுநாளுறச்செய்தனரதுகாலை. ௩௨

கயிலாயநாதன்காட்சிதந்தருளல்.

பளிக்குமால்வரைநிமிர்ந்தனவிடைமிசைப்பல்கணம்புடைசூழ
வொளிக்குறாந்திரண்டெழுந்தெனவெழுந்தருளொருவனைக்கண்ணுற்றா
தெளிகருமின்னிசைத்திவவியாழ்முனிவனுந்தேரனும்விழிநீருட்
குளிக்குமேனியர்பலமுறைபணிந்தனர்கூறுதலுற்றரால். ௩௩

ஐயனேயுனக்கடியரையடியரேமரில்படுபுறநூலான்
மையல்பூட்டினேமிப்பிழைபொறுத்தருள்வள்ளலேயெனவேண்டத்
தொய்யில்பூத்துவிம்மாந்தெழுந்தணிமெழுதுணைத்தபூண்முலைக்கோபச்
செய்யவாயுமைக்கொருபுறமளித்தருள்சிவபிரானிதுபேசும். ௩௪

வேறு.

கொடியநீரிழைத்தபாவங்கோடியாண்டவதியாற்றுங்
கடனெறியெவற்றினுங்கழிவுறுகண்டீர்நந்த
மடியரைப்படிற்றுநூலாற்பொருளினலாசைகாட்டிப்
படிமிசைமயக்குவோர்கள்படுகுழிநரகில்வீழ்வார். ௩௫

பாதகமெவற்றினுக்குந்தீர்திறமபகருநூல்கண்
மேதகுமடியார்தம்மைமயக்கியவினையினேர்க்கு
நோதகுநரகேயன்றிநுவன்றிடாவேறுதண்ட
மோதுழியதுவுங்காஞ்சியுற்றவர்க்கொழிவுகூடும். ௩௬

கச்சியிலுறுதலானுங்கடுவினைமெலிதாய்விட்ட
திச்சையினிலிங்கமிங்கணிருத்துபுவழிபாடாற்று
மச்செயல்வலியாற்சாலக்கழிந்ததேயானுங்கேண்மின்
முச்சகம்புகழுநல்யாழ்முனிவனேபுத்தரேறே. ௩௭

பிறர்க்குபகாரமாதற்பெற்றியானொருகாற்பாவத்
திறத்தினைப்புரிவரேனுஞ்சிவநெறிச்சிதைவுதன்னை
மறப்பினுமெண்ணலோம்பலெண்ணினோர்வழங்கல்செல்லா
நெறிப்படுநரகின்வீழ்ந்துநீந்தருமிடும்பைகூர்வார். ௩௮

இன்றுநீர்வழுத்துமன்புக்கிரங்கினேநுமதுபாவந்
துன்றுபல்பிறவிதோறுஞ்சுழன்றலாற்கழியாதாகு
நன்றதுகழியுமாறுநவிலுதுமினையவைப்பின்
மன்றமழ்றெமைப்பூசித்துவலம்புரிந்துறைதிரென்றும். ௩௯

வலஞ்செயப்புகும்போதும்வெளிக்கொளும்போதும்வாயிற்
புலந்தனைச்சுருங்கையாகப்புரிதுமங்கவையேகன்மப்
பலங்களைநுகருந்தோற்றமிறப்பெனும்பகுதியாகி
யிலங்கவீண்டினிதுவாழ்மினிறுதியிற்றருதுமுத்தி. ௪0

சித்திகளெவையுநல்கும்விசித்திரச்சிற்பம்வாய்ந்து
சித்தர்களருச்சித்தேத்தத்திகழ்கயிலாயமேன்மை
சித்தமாசகன்றோர்க்கலாறித்தெரிவுறாகாண்மினென்று
சித்தசனெரியநோக்குஞ்சேவகன்கரந்துபோந்தான். ௪௧

இருவருமவ்வாறங்கணிறைவனைவலஞ்செய்தேத்திக்
கருவறநெடுநாள்வைகித்திருவருட்கல்விபெற்றார்
திருவளர்காஞ்சிமூதூர்த்திண்பெருங்கயிலைபோலும்
மொருதலமதுவேயன்றியுலகமூன்றிடத்துமில்லை. ௪௨

கயிலாயப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧0௫௯

# ௨7. வீராகவீசப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புத்தருக்கிறையுநல்யாழ்ப்புலங்கெழுமுனியும்போற்ற
வத்தனாரினிதுவைகுங்கயிலையினடைவுசொற்றா
மித்தகுவரைப்பின்கீழ்ப்பானாலருக்கொப்புளித்துத்
தொத்தலர்பொழிலுடுத்தவீராகவஞ்சொல்லலுற்றாம். ௧

இராமனழுதேங்கிமுறையிடல்.

ஒன்னலர்குருதிமாந்தியொளிறுவேலிராமனென்பான்
றன்மனைகிழத்திதன்னைத்தண்டகவனத்துமுன்னாட்
கொன்னுடைத்தறுகட்சிற்றகொடுந்தொழிலரக்கன்வௌவித்
துன்னருமிலங்கைபுக்கானமேல்வருதுயரநோக்கான். ௨

பெய்கழல்கறங்குநோன்றாட்பெருவிறலிராமனந்நா
ளெய்சிலைத்தம்பியோடுமிடருழந்தழுங்கியேங்கிக்
கொய்தழைவனங்களெங்குங்கொட்புறஇக்கமலவாவிச்
செய்புடையுடுத்தகாஞ்சித்திருவளர்நகரஞ்சேர்ந்தான். ௩

இடும்பைநோயறுக்குந்தெண்ணீரொழிற்சிவகங்கையாடி
நெடும்பணையொருமாமூலநின்மலக்கொழுந்தையேத்திக்
கொடும்படைச்சனகனீன்றகோதையைப்பெறுவான்கூற்றை
யடும்புகழ்ச்செய்யதாளையிரந்துநின்றழுதுவேண்டி. ௪

தாழ்ந்தெழுந்தேகித்தென்பாலகத்தியேச்சரத்தின்முன்னர்
வாழ்ந்திருந்தகைமைசான்றவண்டமிழ்முனியைக்கண்டான்
சூழ்ந்தவெந்துயரதோடுமோடினன்றுணைத்தாண்மீது
வீழ்ந்தனன்புலம்பலோடும்வெருவரேலென்னத்தேற்றி. ௫

இத்துணையிடும்பைக்கேதுவெவனெனவினவுஞ்செல்வ
முத்தமிழ்முனிவன்கேட்பப்புகுந்தவாமொழியலுற்றான்
மைத்தவார்கரியகூந்தற்களசலைமணந்தகோட்
சத்துவகுணத்தான்மிக்கதசரதனீன்றசெம்மல். ௬

கலிநிலைத்துறை.

எம்பிரானிதுகேட்டருளேழிரண்டாண்டு
வெம்புகாட்டகத்துறைதிநீயினில்தாங்கி
நம்பியாகியபரதனேவாழ்கெனநுவன்று
கம்பியாதெனையெந்தையிக்கானிடைவிடுத்தான். எ

ஏயவாணையைச்சிரமிசைக்கொண்டெழுமெனையே
தூயசீரிலக்குமணனுஞ்சீதையுந்தொடர்ந்தா
ராயமூவருந்தண்டகவனத்தமர்ந்திடுநாண்
மாயமானெனத்தோன்றினனங்கண்மாரீசன். அ

தோன்றிமற்றெனைச்சேயிடைக்கொண்டுபோய்ச்சுலவி
மான்றவம்பினிற்பொன்றுவான்சீதையைவலியா
ஞன்றவெம்பியைவிளித்துவீழ்ந்தனனதுகேளா
வேன்றசீதையைவிடுதெனைத்தொடர்ந்தனனிளவல். கூ

அனையகாலையிலிராவணன்வட்கவர்ந்தகன்றான்
புனைமலர்க்குழற்பூங்கொடிதனைத்தலிற்புலம்பி
யினையுமென்னுயிர்பொன்றுமுனிரங்குதியெந்தா
யுனையடைந்தனன்சரணமென்றழுதழுதுரைத்தான்.. க0

அகத்தியர்தத்வோபதேசம்செய்தல்.

உரைத்தவாய்மொழிகேட்டெதிரகத்தியனுரைப்பான்
விரைத்ததார்ப்புயவேந்தகேள்வீங்குநீருலகி
னிரைத்தவைம்பெரும்பூதத்தினிலைபெறுமுடலந்
தெரிக்கிலயாவையுமுடன்பிறந்தவையெனத்தெளிதி. கக

மற்றுயிர்க்குவேறாணலிபெண்ணெனவழக்கஞ்
சற்றுமில்லைநீர்ச்சலதியுட்படுபலதுரும்பின்
பெற்றிபோலுமிப்பூதத்தின்கூட்டமும்பிரிவுங்
கற்றுளோரிவையிருமைக்குமாயைகாரணமாம். கஉ

செய்வினைப்பயனுள்ளதுவருமெனத்தெளிதி
யெவ்வமுற்றுழந்திரங்கலைமகிழ்ந்திடுவெனலும்
பௌவமுற்றுமோருழுந்தளவாக்கிமுன்பருகுஞ்
சைவமாமுனிமொழிக்கெதிரரசனுஞ்சாற்றும். க௩

அத்தநின்னுரைமுழுவதுமுண்மையேயானு
மித்தலைக்கிதுவிணங்குமோமனையவண்மாற்றான்
கைத்தலத்தகப்பட்டுழித்தத்துவங்காண்போன்
பித்தனென்றுலகுரைத்திடுமாதலிற்பெரியோய். க௪

பறந்தலைப்புகுந்தொன்னலர்ச்செகுத்துயிர்பருகிச்
சிறந்தசீதையைமீட்டபினையநீதெரிக்கு
முறந்ததத்துவஞானத்துக்குரியவனாவே
னறைந்தவாறலதென்னுளமடங்கிடாதென்றான். க௫

மலையமாதவன்கேட்டுநின்மனத்துறும்விழைவு
கலைமதிக்கழுஞ்சிறுவனோடொக்குமக்கதிர்ப்பூண்
முலைமடந்தையைராவணன்கவர்ந்துபோமுறைமை
யிலைகொள்வேலினாயெவருனக்கியம்பினரென்றான். க௬

சடாயுவென்றுயர்கழுகிறைசானகிபொருட்டு
விடாதுபோருழக்திறப்பவன்விளம்பிடத்தெளிந்தேன்
கடாதுகொண்டவட்பெறுந்திறமருளெனக்கரையும்
வடாதுவெற்புறழ்புயத்தனைமாமுனிநோக்கி. கஎ

நின்கருத்திதுவேலுயர்நெடுவரைகுழைத்து
வன்கண்மாற்றலர்புரம்பொடிபடுத்தவன்மலர்த்தாள்
புன்கணீங்குமாறடைக்கலம்புகுமதியவனே
யுன்கருத்தினைமுடித்திடவல்லனென்றுணராய். கஅ

உலகம்யாவையுமொருநொடிப்பொழுதினிலழிப்போ
னிலையும்வில்லினன்கொடுங்கொலைப்பகழியனிகரா
வலகிலாற்றலனுருத்திரனொருவனேயன்றி
யிலையெனப்புகன்றேலிடுமியம்பருஞ்சுருதி கக

தென்றிசைக்கிறையிராவணன்றிருவடிவிரலி
னொன்றனுலிறக்கண்டனனொருசிறுதுரும்பா
லன்றுவிண்ணவர்தருக்கொடுபிடறச்செய்தான்
வென்றிபூணடுயர்கூருகிர்நகைவிழிப்படையான். உ0

அனையனாகியதனிமுதல்பாற்சரணடைந்தோ
ரனையவேட்பினுமெண்மையினெய்துவரதனாற்
கனைகொள்பூந்தடமுடுத்தவிககாஞ்சிமாநகரிற்
புனைமலர்க்குழல்பாகனையருச்சனைபுரிவாய். உக

வீரம்வேண்டினையாதலின்விதியுளிவழாது
வீரராகவப்பெயரிலைவிமலனையிருத்தி
வீரனேதொழுதேத்துதியெனமுனிவிளம்ப
வீரர்வீரனுமம்முறைபூசனைவிளைப்பான். உஉ

## ஸ்ரீராமன்சிவபூசைசெய்துவரம்பெறல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வெண்ணீறுங்கண்டிகையுமுடல்விரவப்பாசுபதவிரதம்பூண்டு
தண்ணீடுமலர்க்கடுக்கைவீரராகவமுதலைத்தாபித்தன்பா
லென்னூறுமிருநூறுமாயதிருப்பெயரியம்பியருச்சித்தேத்தி
யுண்ணீடுபெருங்காதல்வளர்ந்தோங்கத்தொழுதுநயந்துருகுங்காலை.

எவ்வமறப்புரிபூசைக்கெம்பெருமான்றிருவுள்ளமிரங்கிப்போற்று
மவ்விலிங்கத்திடைநின்றுமெழுந்தருளிவிடைமேல்கொண்டமரர்சூழ
நவ்விவிழியுமையோடுங்காட்சிகொடுத்தருளுதலுநலியாவென்றித்
தெவ்வடுதிண்புயத்தோன்றல்பலமுறையுந்தொழுதேத்திச்செப்பலுற்றான்.

அண்ணலேயடியேனுக்கெளிவந்தபெருங்கருணையமுதேயன்பர்
புண்ணியமேயிராவணனுமரக்கர்கோன்பொலந்தொடித்தோட்சீதையென்னும்
பெண்ணரசைக்கவர்ந்தெடுத்துப்போயினன்முறைபிறழுமவனையின்னே
நண்ணலரும்பறந்தலையிற்கிளையோடுமுடிக்கவரநல்குகென்றான்.

எனப்புகலச்சிவபெருமான்றிருவருள்கூர்ந்தெமக்குநீயின்றுதொட்டு
மனக்கினியனுயுலகில்வீரராகவனெனும்பேர்மருவிவாழ்வா
யுனக்கிகலியெதிர்ந்தோர்களெனைத்தணையரேனுமவருடையக்காண்டி
பனித்தநறுந்தொடையோயென்றருள்செய்துபாசுபதப்படையுநல்கி.

முன்னரைக்காம்பணிமுளரிப்பொகுட்டணையோன்றனிப்படையுமூரன்றமாக்கள்
கொன்னையிடுகறைத்துளவோன்படையுமவர்தமைக்கொண்டுகொடுப்பித்தேனைக்
கள்ளவிழ்தார்க்கடவுளர்தம்படைபிறவுநல்குவித்துக்கருணைகூர்ந்து
நள்ளலரைப்பொடிபடுக்கும்பெருவரமுமளித்தருளிநவிலுகிற்பான்.

கவற்றிநெடும்பகைதுரக்குமிவையுனக்குக்கருணையினாலளித்தேங்கண்டா
யிவற்றினொடுமிளவலொடுங்கிட்கிந்தையிடத்தமர்சுக்கிரீபன்சேனை
யவற்றொடும்போய்ப்பரவைகடந்திராவணனைக்கிளையோடுமறுத்துவீரஞ்
சுவற்றியபின்சீதையொடுமீண்டரசுபுரிந்துக்ஷிதுரந்துவாழ்வாய்.

என்றருளவெதிரிறைஞ்சியிராகவன்மற்றிதுவொன்றுவினாதலுற்றா
னன்றினர்புரமெரித்தோய்குறுமுனிவனாருயிர்கட்காண்மைபெண்மை
யொன்றுமிலையாக்கையெலாமுடன்பிறந்தவாகுமெனவுரைததல்செய்தான்
மன்றவெனக்கவைமுழுதுந்தேறவிரித்தருளென்றுவணங்கிவேண்ட.

வேதாந்தநிலையனைத்துமவன்றெளியவிரித்துரைத்துவரங்கணல்கிக்
காதார்ந்தகுழையுமையாளுடனாகவிலிங்கத்துட்கரந்தானெங்கோ
னாதாந்தப்பரஞ்சுடராமிவ்விலிங்கந்தனைத்தொழுதுநயந்தோரெல்லாங்
கோதார்ந்தபகைவென்றுபெருஞ்செல்வமெய்தியருள்கூடுவாரால.

கற்கீசவரலாறு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தகைபெறுமிக்கடிவரைப்பின்றென்பான்மண்ணித்தடங்கரையிற்கற்கீசத்தலமாமங்க
ணுகமுடிவிற்கயவர்தமையழிப்பமாயோனுயர்பிருகுசாபத்தாற்கற்கியாகி [றான்
யிகழருஞ்சீர்க்காஞ்சியில்வந்திலிங்கந்தாபித்தினிதேத்தியெண்ணிலரும்வரங்கள்பெற்
புகழுறுமவ்விலிங்கத்தைத்தொழுதுமண்ணிப்புனலாடுமவர்பெறுவார்போகம்வீடு.

வீராகவீசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௦௮௭.

## 28 பலபத்திராமீசப்படலம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பகலோனைப்பல்லுகுத்துமதியைத்தேய்த்துப்படைவேளைப்பொடி
படுத்தபழையோனென்றுந், திகழ்வீராகவீச்சரத்தினோடுதிருத்தகுகற்
கீச்சரமும்புகன்றாமிப்பாற், புகழுறுகற்கீச்சரத்தின்மேல்பாற்கண்டோர்
பொருவலித்திண் பகட்டூர்தி யுடையக்காணா, நிகழ்பலபத்திராமீச்சர
மென்றோதுநீடுதிருத்தானவளம்பாடலுற்றாம். ௧

கலிவிருத்தம்.

மண்ணின்மிக்குவயங்குதுவரைவாழ்
கண்ணன்முன்வருகாளையலப்படை
யண்ணலாம்பலபத்திரவாண்டகை
பண்ணுவெஞ்சமர்ப்பாரதமூண்டநாள். ௨

கார்த்தடக்கைக்கடும்புசெய்கைதவப்
போர்த்தொழிற்குப்பொறாதமனத்தனாய்த்
தீர்த்தயாத்திரைசெய்யத்தொடங்கினா
னோர்த்தவாணிநதிக்கரையெய்தினான். ௩

அங்கண்முப்புரமட்டபிரான்றளி
யெங்குமுள்ளனநோக்கியிறைஞ்சியத்
தங்கவைப்பினிற்ருெக்கமுனிவரர்
தங்கள்சேவடிதாழ்ந்துவினவுவான். ௪

ஈசன்வைகுமிடங்களெவையெவை
யாசின்ருேங்குமவற்றுண்மேலதாந்
தேசின்மிக்கதிருநகர்யாவது
பேசுகென்னமுனிவர பேசுவார். ௫

பருவரைத்தோட்பாதன்வருடமே
கருமபூமியெனப்படுங்காணது
மருவுமெவ்வுலகத்தினுமாண்டதாந்
திருமலர்ப்பனந்தேந்தொடைமார்பனே. ௬

கருமபூமிவரைப்பிற்கடவுளர்
மருவிடங்கள்சிறந்தனமாட்சியோ
யருள்விளைக்குமவற்றினுமேலவாந்
தருமசக்கரபாணிதலங்களே. ௭

அவற்றின்மிக்கனமானிடராகிய
சிவத்தலங்கள்கடவுளர்செய்தன
வவற்றின்மேலனவாகுஞ்சயம்புவாஞ்
சிவத்தலங்களவற்றிற்சிறந்தன. ௮

சயம்புவைகுந்தலங்களுண்மிக்கவாம்
வியந்தெடுத்துவிளம்பப்படுமவை
நயந்தவங்கவற்றுள்ளுநற்காசிமிக்
குயர்ந்ததன்னதிற்காஞ்சியுயர்ந்ததே. ௯

ஓதுகாஞ்சிக்குயர்ந்ததுமொப்பதும்
பூதலத்திடையில்லைபுகலுமம்
மாதலத்தினுகத்தின்வருத்தமும்
பாதகப்பயனும்படராவரோ. ௧௦

பிறந்துளோர்கள்வதியப்பெறுநகரந்
திறந்துளோருள்த்தெண்ணுநர்யாவரு
மறந்தனிழக்குமேகம்பாருளினுற்
சிறந்தமுத்தியுறுவதுதேற்றமே. ௧௧

வேறு.

என்றறிவுறுத்தியவியல்பின்மாதவர்
மன்றலம்பூங்கழல்வணங்கியாதவ
னன்றவரேவலிற்காஞ்சியண்மியக்
கொன்றியவளனெலாமுவந்துநோக்கினுன். ௧௨

தெறுமழுப்படைச்சிவதீர்த்தம்யாவையு
முறைமையிலுடினன்முரசுகண்படா
விறையவன்கோயில்களெவையும்போற்றிவண்
டறைபொழிலேகம்பமருச்சித்தேத்தினுன். ௧௩

அங்கர்வயினமர்ந்தருளுஞ்சிருப
மன்னியனிணையடிவணங்கித்தொன்டுபூண்
டின்னருந்திருச்சிவதீக்கையுற்றனன்
றன்னுடைப்பெயரினோிலிங்கந்தாபித்தான். கச

உண்ணிறைகாதலினருச்சித்தோகையாற்
பண்ணிசைமொழிகளிற்பழிச்சுமேல்வையிற்
கண்ணுதற்சிவபிரான்கருணைகூர்ந்தெதிர்
விண்ணவர்தொழவிடைமீதுதோன்றியே. கரு

வேண்டுவகூறுகென்றருளமெய்யெலாம்
பூண்டபேருவகையிற்புளகம்போர்த்தனன்
றூண்டவநவிற்றுநின்சரணிலேழையேற்
காண்டகையிடையறாவன்புநல்குதி கசு

இச்சிவலிங்கத்தினிமயமாதொடு
நிச்சலுமினிதமர்ந்தருளிநின்னடி
நச்சினோர்க்கிருமையுநலகுவாயென
வச்செயன்முழுவதுமருளிநீங்கினான். கஎ

காருடைப்பளிக்குருக்கலப்பைவான்படைத்
தாருடைப்போந்தினன்றாபித்தேத்திய
சீருடையிலிங்கத்தைத்தெரிசித்தோரெலா
மேருடைக்கைலேயினினிதுவாழ்வரால். கஅ

பலபத்திராமீசப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ககல௫

# ௨௯. வன்மீகநாதப்படலம்.

கலிநிலைத்துறை.

தேன்றாழ்பொலம்பூங்கடுக்கைச்செழுந்தார்விரைக்கின்றதோள்
வான்றாழ்மிடறணணல்வைகுற்றபலபத்திரஞ்சொற்றன
மீன்றாழ்தடஞ்சூழநன்பச்சிமதிக்கின்விண்ணாட்டவர்
கோன்றாழநிலைபெற்றவன்மீகநாதத்தினியல்கூறுவாம். க

விஷ்ணுசிரமிழந்தவரலாறு.

புத்தேளிர்முன்னாளொருங்கேகுழீஇக்கொண்டுபுகழ்வான்
முத்திவளர்த்தோமகம்வேட்கலுற்றார்கண்மொழிகின்றன
ரித்தாலவருங்கீர்த்தியெலலாநமக்கும்பொதுத்தானெனக்
கொத்தாமலர்கூந்தல்பங்கன்றுணைத்தாள்குறிக்கொண்டரோ. உ

குருக்கேத்திரத்தேமகஞ்செய்யுமேல்வைக்கொழுங்கொன்றைவெள்
ளெருக்கோடணைகுஞ்சடைச்செம்மலார்தம்மினருள்கூர்தலா
லுருக்கூர்பளிக்குப்பறம்பிற்பெருங்கீர்த்தியுண்டாதலுந்
தருக்கான்முகுந்தன்கவர்ந்தானடந்தான்றடுப்பக்கொடான். ௩

ஓடுந்திறங்கணடுவிண்ணோர்தொடர்ந்தெய்தலுற்றாரவன்
பீடொன்றுவிலலம்புகைக்கொண்டுவெம்பூசல்பெரிதாற்றுபு
நீடும்பர்தம்மைப்புறங்கண்டுபின்னீளிடைச்சென்றுநின்
றீடின்றியெல்லீருமொருவேற்குடைந்தீர்களெனநக்கனன். ௪

நக்கான்முகத்தாலவன்றேசுமுற்றாகறுஞ்சாமையா
யக்காலைநீங்குற்றவாற்றுளுடலவிற்கழுத்தான்றுபு
மைக்காளமன்னுமெனடும்போதுவாளாதுநின்றான்குண
திக்காளியன்னான்றனிலைகண்டுபுகழ்வெளவுதிறம்மெண்ணினன். ௫

கச்சிப்பதிக்கண்விரைந்தெய்தியங்கட்கடுக்கைப்பிரா
னிச்சித்தகயிலாயநிருதித்திசைக்கணிலிங்கநிறீஇ
நச்சித்தொழுங்காலையெங்கோனணைந்தன்னைநவில்கென்றலும்
பச்சைத்துழாயண்ணல்கவர்கீர்த்திவிண்ணோர்பெறப்பாலியாய். ௬

என்றாநவின்றேத்துசசிகேள்வனுக்கெம்பிரானேதுவான்
வன்மீகநாப்பட்சிறுச்செல்லுருக்கொண்டுவார்வில்லுடை
யந்நாணறத்தின்றுபின்கீர்த்திகொள்கென்னவருள்செய்தலும்
பொன்னாடர்கோமானும்விடைகொண்டுமீண்டான்பொருக்கென்றரோ.

அவ்வாறுபுற்றிற்கிளைத்தெய்தியந்நாணறத்தின்றுழிப்
பைவாய்ப்பணிப்பாயலான்சென்னியறுபட்டுவீழ்ந்தவ்விட
மிவ்வாய்மையாற்சின்னமாகேசவந்தானமென்றாயதாற்
செவ்வேகுறைச்சென்னியாறங்கணேடுந்திருத்தக்கதே. ௮

விஷ்ணுசிரம்பெற்றவரலாறு.

வேறு.

ஆயகாலையிலவன்புடைநின்றுமப்புகழைப்
பாயவிண்ணவர்கவர்ந்துகொண்டோகையிற்படர்ந்தார்
மாயிரும்புவிமிசைவளரிருபிறப்பாளர்க்
கேயுமெச்சனுமாயவனின்மையினுயங்கி. ௯

மீட்டுமெய்தினன்காஞ்சியைவிதியுளிவழிபட்
டேட்டுமன்பினுக்கெம்பிரானெதிரெழுந்தருளப்
பாட்டிசைப்பழமறைகளாம்பரசினனவில்வான்
றோட்டலர்க்குழற்சசிமுலைதிளைத்ததோட்குருசில். ௧௦

கலிவிருத்தம்.

அறுபதமுரன்றிசைமுழக்குமாயிதழ்
நறுமலர்க்கடுக்கைசூழ்சடிலநாயக
வெறுழ்வலிச்சிலையினாலெச்சனாகிய
சிறுமலர்த்துளவினான்சென்னியற்றதால். ௧௧

உறப்புறுமெங்களுக்குதவுமுண்டியு
மறத்தொழில்பயிலியமானர்கான்றவான்
றுறக்கமுமில்லையாய்விட்டதுட்கென
விறத்தலினெச்சனிவ்வுலகினெம்பிரான். ௧௨

ஆதலினெச்சனுக்களித்திசென்னியென்
றோதினன்வேண்டலுமுரைததன்மேயினான்
மாதர்வெண்குழச்சிறுமதிக்கொழுந்தினைப்
போதொடுமிலைச்சியசடிலப்புங்கவன். ௧௩

எம்புடைவரம்பெறுமிருமருத்துவ
வும்பரினவன்றலையொன்றிக்கூடுக
நம்புமிவ்விருவருநந்தமாணையாற்
பம்பியவேள்வியிற்பாகமெய்துக. ௧௪

என்றருண்மழுவலான்சரணமேத்திமற்
றென்றிதுவேண்டுவானுடையநாதனே
மன்றநின்னருளினூற்புற்றின்வாயெழூஉத்
தின்றுகாணறச்செயுந்திறல்பெற்றேனரோ. கரு

ஆதலின்வெவ்வினைத்தொடக்கறுக்குமிம்
மேதகுவரைப்புவன்மீகநாதமென
றோதவுங்கண்டவர்பிறவியோவவு
மீதிநீவரமெனவிடையினேந்தலும். கசு

தந்தனம்வரமெனச்சாற்றிநீங்கினு
னிந்திரன்மீண்டனனிருமருத்துவத்
தந்திரத்தலைவராலெச்சன்றன்சிர
முந்துபோற்பொருத்தலுமுளரிக்கண்ணினன். கள

தெய்வத்தின்வலியினூற்சென்னிபெற்றெழூஉக்
கொவ்வைச்செவ்வாயுமைகூறன்றுடொழு
தவ்வத்தனுணையாலவியின்பாகமங்
குய்வித்தோர்க்கமைத்துத்தன்னுலகம்புக்கனன். கஅ

இகழருமுகுந்தனேயிந்தவாறிழி
தகவுறவிடும்பையிற்றங்குநீர்மையா
லுகலருஞ்செல்வத்தையுடம்பையல்லது
புகழினைவிரும்பலும்போதத்துன்பமே. கக

வன்மீகநாதப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ககஉச.

## ௩௦ வயிரவீசப்படலம்.

கலிவிருத்தம்.

வயிரவாளினன்வணங்கிவெந்துயர்
வயிரமாற்றும்வன்மீகமோதினும்
வயிரமாடமற்றதற்குத்தென்றிசை
வயிரவீச்சரமரபியம்புவாம். க

பிரமன்மமதைகொண்டது.

வடவரைத்தலைமுஞ்சமானெனும்
தடநெடுங்கிரிதன்னிடைச்சிலர்
படிமவுண்டியர்பாங்கினேற்றுழி
யடலனப்பிரானருளினெய்தினன். உ

வதனமைந்தொடும்வந்துதோன்றினன்
பதமலர்த்துணைபணிந்திறைஞ்சினர்
துதிமுழக்கினூற்சூழ்ந்துகைதொழூஉக்
கதமறுத்தவரிதுகடாயினர். ௩

இலகுமிச்சகம்யார்முதற்றுமன்
னுலகெவன்புடையுயிர்த்தொடுங்கிடும்
பலபசுக்களின்பாசநீத்தரு
டலைவன்யாரிதுசாற்றுகென்றனர். ௪

ஐம்முகத்தயனனையகாலையின்
மம்மர்நெஞ்சினன்மயங்கிக்கூறுவா
னிம்மறைப்பொருள்யாருமுய்வகை
நும்மனக்கொளநுவலக்கேண்மினோ. ரு

உலகினுக்கியாவனொருவனேயிறை
யுலகமென்கணேயுதித்தொடுங்கிடு
முலகெலாமெனைவழிபட்டும்பர்மே
லுலகினைத்தலைப்படுங்களுண்மையே. சு

வேதங்களுரைத்தல்.

கலிநிலைத்துறை.

என்றான்விரிஞ்சனதுகாலையில்வேதமெல்லா
முன்றோன்றியங்கண்மொழிகுற்றனமுண்டகத்தின்
வென்றோய்புராணம்பலசாத்திரம்வேதமற்றுங்
குன்றான்றவில்லான்றனையேமுதலென்றுகூறும். ௭

அவனேமறுவற்றபராம்பிரமம்புராண
னவனேமுழுதுந்தருகாரணமாங்கெவர்க்கு
மவனேயிறைவன்றொழுவார்க்கருள்வீடளிப்போ
னவனேயெனவோதிவெவ்வேறுமுரைப்பவங்கண். அ

எச்சன்றனக்குமிமையோர்க்குமெய்வேதியர்க்கு
மச்சங்கரனேயரசன்விசுவாதிகன்சீர்
நச்சும்முனையின்றருட்பார்வையினோக்கிநல்கு
மெய்ச்சித்துருவெஃநறியென்றதிருக்குவேதம். கூ

தன்கூற்றில்வருங்கணநாதர்தடுக்கலாற்றாக்
கொன்கூர்சரபாதியரால்வயங்கூறும்விண்ணோர்
வன்காழ்வலிசெற்றவஃயாரவனேமதிக்கு
நன்காரணமென்றுநவின்றதடுத்தவேதம். ௧0

தோலாவவைநாப்பணடைந்துதுரும்புநட்டு
மாலாதிவிண்ணோர்வலிமுற்றவுமாற்றவல்லோ
னாலாலமுண்டோனவனேயகிலங்களுக்கு
மேலாயவேதுவெனவிண்டதுசாமவேதம். ௧௧

வளிதாழ்விசும்பைப்பசுந்தோலிற்சுருட்டவல்லோ
ருளரேற்புடைவீங்கியெழுந்துதிரண்டுருண்ட
விளவெம்முலைபங்கனையனறியுமின்பமுத்தி
யளவிற்பெறலாமெனவிண்டதர்வவேதம். ௧௨

முனிவோரெதிரந்தணன்வேதமொழிந்தகேட்டுத்
தனிநாயகன்மாயையின்மூழ்கிவெகுண்டுசொற்றுஞ்
சினநீடுதமோகுணசீலனுருத்திரன்றான்
மனமோடுரைசெல்லருநிட்களம்வான்பிரமம். ௧௩

பிரணவமுரைத்தல்.

சால்பானுயரோமென்மொழிப்பொருள்சம்புவென்ற
மேலாதெனவம்மனுவேவடிவெய்திவந்து
மாலானுரைசெய்தனைநீகமலப்பொகுட்டின்
மேலாயிதுகேண்மதியென்றுமுன்னின்றுசொல்லும். ௧௪

வேதத்தலையிற்புகலுற்றுயர்வேதவீற்றும்
போதச்சுரமாய்நிறுவப்படுபொற்பினேன்யான்
மாதர்ப்பகுதிக்குளடங்கிவயங்கினேற்கு
மாதிப்பரம்யாரவுனுகுமகேசனம்மா. கரு

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றிதுவிளம்பும்பிரணவந்தனையுமிகழ்ந்துதன்பெருமையேவியப்ப
மன்றலந்துளவோனுயிடைத்தோன்றிமன்றயான்கருத்தனென்றுரைத்தான்
குன்றருங்கொடுநோயாணவக்குறும்பாற்கோட்படுமிருவருமிவ்வா
றொன்றியசெருக்கான்மீமிசையிகலியோவறப்பிணங்குமவ்வேலை.

வயிரவசம்பவம் - பிரமன்சிரமிழத்தல்.

அலர்ந்தசெங்கமலநிகரிணைவிழியுமதுமுகிழ்த்தனையதோர்விழியு
மலர்ந்தபொன்னிறத்தகேசமுமுகரோமங்களும்வடிவமுங்காட்டி
நலந்திகழிரவிமண்டிலத்துறையுநாயகனனையதுகண்டான்
சலந்தவிர்த்தருள்வானுருகெழத்தோன்றித்தமனியககிரியெனநின்றான்.

காண்டலுநெடியோனடுங்கிநீத்தகன்றான்கமலநாண்மலர்மிசைக்கடவு
ளீண்டையென்புதல்வாவருகெனவிளிப்பவெகுண்டருளெம்பிரானுருவி
னுண்டுவந்துதித்தவயிரவப்புத்தேளயன்மிசைச்செல்வுழியயனு
மாண்டகுபிரமப்படையெதிர்விடுத்தான்வந்ததத்தடும்பரும்படையே.

வருபடைவேகக்காற்றினின்முரியவிரைந்துசெல்வயிரவப்புத்தே
டிருமலர்க்குரிசில்பழித்திடுமஞ்சாஞ்சிரத்தினையுகிரினுற்கொய்தான்
பெருவிறலுயிர்போய்விழுந்தபின்மீளப்பிஞ்ஞகனருளினுலுய்ந்து
மருள்வலிநீங்கியெழுந்தனன்மறையோன்வள்ளலைவணங்கிநின்றேத்தும்.

நான்முகன்முறையிட்டுவரம்பெறல்.

விளைநறையுகுக்குங்கமலமென்பொகுட்டுமேவருமெனையெடுத்தாண்ட
களைகணேயாவித்துணைவனேசருமக்கலிங்கனேபிரமனேயிருகால்
வளைதருபிஞகபாணியேயுனக்குநெய்யவிமடுத்துநல்லோம
முளைவறப்புரிகேமுலப்பறும்வாழ்நாளுதவிமற்றெந்தமைக்காக்க.

கரைபொருதிரங்கிவெண்டிரைசுருட்டுங்கருங்கடலபுடையுடுத்தகன்ற
தரையொடுவிசும்பினள்ளிடைப்போந்ததழனிறச்சுடரெறிகாந்திக்
குரைபுனன்மோலிக்குழகனேதறுகட்கொடுஞ்சினக்கடுந்தொழிற்பகட்டு
விரைசெலற்கூற்றினடுதிறற்பாசமிடலறத்துணித்தெமைக்காகக.

உலகெலாம்விரியுமாதிகாலத்திலொருவனேயாகிநின்றுள்ளாய்
பலதிறப்புவனநாயகர்தம்மைப்பாற்படப்பயந்தளித்தருள்வோய்
மலர்தலையுலகமீளவந்தொடுங்கமன்னிவீற்றிருந்தருண்முதலே
யலகிலாவருளாமெனய்யவிமிசைந்தீண்டாயுளையளித்தெமைக்காக்க.

சிறுவிதிமகவாய்முன்வரும்பிராட்டியம்பிகைசீரிலக்குமிகோ
மறுவறுமகிலகாரணிமலையான்மகளெனப்பெயரியதலைவி
நறுமலர்க்கடுக்கைத்தொடையலெம்பெருமானலங்கெழுசத்தியேவினைமா
சறுமுறையிருதாள்வழிபடுகின்றேமாயுளையளித்தெமைக்காக்க.

அகிலமீன்றெடுத்தவிருமுதுகுரவீரடியிணைபோற்றியென்றேத்து
நகுமலர்ப்பதுமத்தவிசினேன்றுதிக்குநயந்துளங்கருணைகூர்ந்தருளி
முகிழ்முலையொருபான்மணந்துவீற்றிருந்துமுரண்கெடக்கூற்றுயிர்குடித்த
பகையடுகணிச்சியாதியம்பகவன்பிரமனைப்பார்த்திதுபகரும்.

வேறு.

இன்றுதொட்டுநீயான்முன்னுகியெம்மானையிற்பிழைமாமே
நன்றுவாழ்தியால்வேட்டதுநவில்கெனகாயினேனுய்ந்தேனிங்
கொன்றுநின்னடிக்கன்புதந்தடியனேனுஞற்றியபிழையெல்லா
மன்றநீபொறுத்தருளெனத்திசைமுகன்வேண்டலும்வரமீந்து. ௨௫

வயிரவவிஜயம்.

கூர்த்தசூலமுங்கபாலமுங்கொண்டுகைதொழுதொருபுடைநிற்குஞ்
சூர்த்தநோக்குடைவயிரவத்தோன்றலைநோக்கினனிதுசொல்வான்
கார்த்தமேனியோய்வயிரவகாலனீகலவிகரணன்சீர்சால்
வார்த்தைசூழ்பெலவிகரணன்பெலப்பிரமதனனுமாகின்றாய். ௨௬

சறுவபூதைகதமனனீயெம்முடைத்தனையர்கடமின்மூத்த
சிறுவனேயெனத்திருவருள்செய்துநீதிறற்கணம்புடைசூழ
வெறிமலர்த்துழாய்ப்பண்ணவன்முதலியவிண்ணவருலகெல்லாங்
குறுகிவார்கறைப்பிச்சையேற்றவர்மனக்கொடுஞ்செருக்கறமாற்றி. ௨௭

விதியைப்பற்றுமிம்முனிவரர்செருக்கையுமவிட்டுகென்றருள்கூறும்
பதியைத்தாழ்ந்தனன்விடைகொண்டுவயிரவப்பண்ணவன்படர்குற்றான்
மதியக்கீற்றணியெம்பிரான்மறைந்தனன்வார்கழற்றொழுதேத்தி
யதிர்விற்றீர்ந்திடுமலரவன்முதலியோரவரவரிடம்புக்கார். ௨௮

உட்கத்தோன்றியவயிரவன்முன்னுறநெடியவனுலகுற்றான்
றட்கச்சென்றெதிர்வாயிலோர்த்துரந்தனன்விடுவச்சேனனைத்தாக்கிக்
கொட்கச்சூலத்தினுதியினிற்கோததனன்குறுகினன்வட்கார
வட்கப்போர்புரிமாயவனிருக்கையுண்மதுகையினிகரிலலான். ௨௯

பிச்சைதேரியவருஞ்செயல்கேட்டனன்பெட்பொடும்விரைந்தெய்திப்
பச்சைமேனியோன்மனைவியரிருவரும்பாங்குறவெதிர்கொண்டு
செச்சைநாண்மலர்த்திருவடிவணங்கினன்செம்புனற்பலியாரு
மெச்சநெற்றியினரம்பினைப்பிடுங்குபுவிட்டனன்கபாலத்துள். ௩௦

தாரையாகிநூறாயிரமாண்டளவொழுகியுந்தகுநெய்த்தோ
ரீரவெண்டலைக்கபாலத்தைநிறைத்திலதிரத்தமுற்றறலோடும்
வீரமாதவனிலமிசைமூர்ச்சித்துவீழ்ந்தனனதுகாலை
வாரமுற்றருள்வயிரவன்றிருக்கையாலவருடினன்மயறீர்த்தான். ௩௧

அயர்வுயிர்த்தனனெழுந்தனனஞ்சலியளித்தனன்குனிசார்ங்கன்
வயிரவப்பிரான்றிருவடிப்பத்தியுமற்றவன்றன்மாட்டுப்
பயிலுமின்னருட்கருணையும்வேண்டினான்பரிந்தவற்கவைநல்கிப்
பெயர்புமீண்டனன்பிச்சைதேர்ந்தருளியபிறாண்டுமெய்தினன்மாதோ.

உலகமெங்கணுந்திரிந்துநெய்த்தோர்ப்பலியேற்பவனெனவொன்னார்
வலமிசைந்தவேற்கடவுளர்தருக்கறவாங்கினன்முனிச்செல்வர்
குலமடப்பிடியன்னலாரையுங்குறுநகையினின்மயல்பூட்டி
நிலவரைப்பினிற்காஞ்சியையணுகினனெடுந்தகைநெறியானே. ௩௩

வயிரவர்சிவபூசைசெய்துகச்சியைக்காத்தல்.

கறைக்கபாலத்தையொருவயினிறுவினன்சேனைகாவலன்றன்னை
யிறைத்தசெம்புனற்சூலத்தினுதியினின்றிழிச்சுபுமால்வேண்ட
நிறைத்தபேரருட்கருணையாலுதவினனிகழ்ந்ததன்பெயரானே
மறைக்குநாயகன்வயிரவீச்சரன்றனைநிறீஇயினன்வழிபட்டான். ௩௪

ஐயனேமறைமுடிமிசைநடித்தருளமலனேயெனையாண்ட
மெய்யனேயெனப்பழிச்சிநெக்குருகினன்விளங்கியிவ்விலிங்கத்தே
தையலோடினிதமர்ந்தருள்யானுநின்சந்நிதியெதிர்வைகி
யுய்யுமாறருளடியனேன்செயத்தகுமுறுபணியருளென்றான். ௧௫

வேண்டிநின்றிரந்துரைக்கலுங்கருணையான்மேவியிங்குறைகின்றே
மீண்டுநீயெதிர்வைகியித்திருநகர்புரந்தினிதமர்வாயாற்
காண்டகுங்கபாலத்தினைத்தோரைநின்கணங்களுக்கருளென்னாப்
பூண்டபேரருள்வழங்கினனெம்பிரான்வயிரவப்புததேளும். ௧௬

குருதியாம்புனல்கணங்களுக்களித்தனன்குடிப்புழிச்சிலவேனும்
பருகுதற்குப்போதாமைகண்டவனிமேற்பறந்தலைப்பெருவேந்தர்
செருவிலேற்றுயிர்மடிந்தவர்விண்மிசைத்திகழவங்கவர்செந்நீ
ரிரணமண்டிலவயிரவன்கணங்களுக்கினிதமைத்தருள்செய்தான். ௧௭

கயிரவத்தெழிலகவர்ந்தவாயாய்ச்சியர்பாடியிற்கவர்ந்துண்ட
தயிரவற்கயர்வொழித்தருள்வயிரவத்தம்பிரான்றொழுதேத்தும்
வயிரவப்பெயரீசனைவணங்குநரவமிருததுயினீங்கிச்
செயிரவத்தைகண்முழுவதுங்கடந்துபோய்ச்சிவனடிநிழல்சேர்வார்.

வயிரவீசப்படலம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௧௧௬௨.

---

# 31 விடுவச்சேனீசப்படலம்.

கலிநிலைத்துறை.

போதணிபொங்கருடுத்ததண்கச்சிப்புரத்திடை
மாதர்வண்கோயில்வயிரவீசத்தைவகுத்தன
மாதியுமந்தமுமில்லானமர்ந்தருளங்கதன்
மேதகுதென்பால்விடுவச்சேனீச்சரம்வீள்ளுவாம். ௧

விஷ்ணுசக்கரமிழந்தயர்தல்.

வெந்தொழிற்றக்கன்வேள்விவிளிந்தநாண்மாயவன்
சந்திரசேகரன்றாளிணையேத்திவிடைகொண்டே
யந்தண்விராசைகடந்துவைகுந்தமடைந்தபின்
சுந்தரப்பொற்றவிசேறியிருந்திதுசூழ்ந்தனன். ௨

மலைவறுகாட்சிவிடுவச்சேனன்முதன்மந்திரித்
தலைவர்தமக்குநிகழ்ந்ததுசாற்றிசுகவன்றனை
குலவுபராக்கிரவுணரைப்போரிற்கொலைசெய்திவ்
வுலகமுழுவதுமோம்புதலென்றொழிலாகுமால். ௩

ஏயுமலங்கரத்தின்றித்தொடங்குமுழவன்போ
லாயுதங்கையின்றியெவ்வாறகிலம்புரப்பலயான்
காய்கதிர்மண்டிலந்தோற்றுங்கடவுண்மாசக்கர
மாய்வரும்யாக்கைத்ததீசியினல்வாய்மடிந்ததே. ௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மதனுடைத்திண்சலந்தரனையுயிர்செகுப்பச்சிவபெருமான்வகுத்தசோதிச்
சுதரிசனப்படையன்னோன்றரப்பெற்றோனஃதின்றுதக்கன்வேள்வி
சிதைவுசெய்யுந்திறல்வீரபத்திரன்மேல்விடுத்தலுமச்செல்வன்பூண்ட
கதமுறுவெண்டலையொன்றுகவ்வியதாலினிச்செய்யக்கடவதென்னே.

நஞ்சுபடுதுளையெயிறுதனையிழந்தநாகத்தினுயிர்ப்புமொன்னா
ரஞ்சுதகதத்தலைச்செல்லுங்கோடிழந்தகடாக்களிற்றினடலுமேற்றார்
நெஞ்சுருவப்பாயுமிருமருப்பிழந்தவிடையேற்றினெறிப்புங்கூர்வாய்
வஞ்சநெடும்படையிழந்தமதவீரன்வீறுமெவன்செய்யுமாதோ.

ஆழிகரத்துளதாயிற்சிவனருளால்வியனுலகமளிப்பேனன்றிப்
பாழிவரைத்தடம்புயத்திரெண்மெய்வேமெனனக்கவன்றுபரியுங்காலை
வாழிநெடும்பொலஞ்சிறையபுள்ளூர்திதனக்கிரண்டாம்வடிவமான
காழிகந்தபெருங்கீர்த்தியுலம்பொருதோட்பனைகழற்காலவிடுவச்சேனன்.

விஷ்ணுவின்சக்கரம்விடுவச்சேனன்பெற்றது.

அன்றென்னைவயிரவனார்சூலத்தின்விடுவித்தேயருளுநீலக்
குன்றன்னான்றனக்காழிகொணர்ந்தளித்துக்கடனீத்துக்கொள்வெனிக்கா
ளென்றெண்ணியெழுந்திறைஞ்சிவயவீரபத்திரன்பால்யான்போயினன்னா
னன்றுள்ளமகிழ்வித்துக்கொடுவருவலாழியெனநவின்றுபோற்ற.

அங்கவனைக்கொண்டாடிவிடைகொடுத்தான்றிருமார்பனவனும்போந்து
புங்கவர்சூழ்வயவீரனிருக்கைமுதல்கோபுரமுன்புக்ககாலை
மங்கருஞ்சீர்பானுகம்பன்முதலாயவாயில்காவலர்கணோக்கிப்
பங்கமுறவெகுணெட்டூழ்ந்தாரச்சுறுததநாரதுங்கினார்பழுங்கணி..

பிறைசெய்தகரங்கொண்டுபிடர்பிடித்துந்தள்ளிடக்கஞற்றுந்தலோடுங்
கறைசெய்தவேற்றானைக்காவலனுங்கிருந்தெண்ணிக்கவலைசூர்ந்தான்
முறைசெய்தமுனிவோர்களம்நெறியிற்செலநோக்கிமுன்போய்நின்று
மிறைசெய்தசெயலனைத்துந்தன்வரவுமாங்கவர்க்குவிளங்கக்கூறி.

இனிச்செய்யுந்திறநீவிர்கூறுமெனத்தாபதருமெண்ணிநோக்கிப்
பனித்துண்டமிலைந்தானைக்காஞ்சியினிற்பூசித்துப்பரவிபோற்றின்
மனத்தோன்றுமெண்ணமெலாம்பெறுவாயெனவியம்பவுதனுமகிழ்ச்சிகூர்ந்து
கனித்தொண்டைவாயுமையாளொருபாகனுறுகாஞ்சிநகரஞ்சேர்ந்தான்.

அங்கடைந்துதன்பெயராற்சிவலிங்கமிருத்திமகிழ்ந்தருச்சித்தேத்திப்
பொங்குபெருங்காதலினாலினியதவம்பூண்டிருந்தானுகவங்கனா
வெங்கடுநேர்வியாக்கிரனுமசகரனும்பஞ்சமேட்டிரனுமென்னு
மிங்கிவர்முத்தானவரும்வரப்பேற்றாலெவ்வுலகுமவருந்தச்செய்வார்.

அன்னோரைத்தெறுபாக்குவிண்ணுடைவிரிஞ்சனொடுமளவளாவிப்
பொன்னுடையுடையான்கைப்படையின்றிவறங்கூரும்புதுமைநோக்கி
யென்னுதனிடத்தனுகிமகிழ்ந்திறைஞ்சியியம்புதலுமிமயமீன்ற
மின்னுளுமிடத்தானும்வயவீரபத்திரனைவிடுத்தான்மன்னோ.

அவனணுகித்தயித்தியர்கண்மூவரையுமெதிர்ந்துபொருதழித்துவிட்டித்
தவநிறையுந்திருக்காஞ்சிவளநகர்க்குநெறியானேசார்தலோடுஞ்
சிவமுதலைத்தொழுதுறையுமுகுந்தனார்தஞ்சேனைத்தலைவனுங்கே
கவலையெலாம்விண்டகலவயவீரன்றனையெளிதிற்காணப்பெற்றான்.

முயல்வுற்றுமரிதாயதிருக்காட்சிமுயலாமேயெய்தப்பெற்று
னியல்புற்றபெருந்தவத்தீர்சிவபூசைப்பயனேவுரேயளக்கற்பாலார்
பெயர்வுற்றுக்சென்றுமிந்தீர்த்தமெதிர்வந்தாடப்பெற்றேனன்னுன்
பயில்வுற்றமகிழ்வோடும்வீழ்ந்திறைஞ்சிமறைமொழியாற்பரசலுற்றான்.

நண்பாரீர்தீவளிவானுலகெங்கும்விராய்நின்றநலமேபோற்றி
முன்பாலும்தென்பாலும்பின்பாலும்வடபாலுமேலுமூவா
நின்பாரச்சிலைபோற்றியன்பாளர்க்கன்பானநித்தபோற்றி
வன்பாளர்தமைச்சீறும்வெம்புலிப்போத்தன்னேனேயென்றுவாழ்த்தா.

திருவுள்ளங்களிசிறப்பவேட்டதெவன்புகலென்னுச்செம்மல்கேட்பக்
கருவண்ணன்றமனுமேனன்கைகூப்பிநின்றியம்புங்கவுரிபாக
னருளுண்மைதெளியாததககன்றன்வேள்வியைநீயழித்தஞான்று
தெருளின்றியமரேற்றுநெடுமாலுன்மிசைவிடுததநிகிரிதன்னே.

அற்றவர்கட்கினியாயுன்றிருமேனிமிசைப்பூண்டவயன்கபாலம்
பற்றிவிழுங்கியதிங்ஙாளடியேனுக்களித்தியெனப்பகரக்கேளாச்
சொற்றதுநங்கரத்திலலைகபாலத்தின்வாயுளதேற்றுகளொன்றில்லாய்
மற்றதுவேதரக்கோடியெத்திறததுமெனப்புகன்றான்வாகைவேலான்.

உரைத்தமொழியுளங்கொள்ளாவினிச்செய்வதென்னேயென்றோர்ந்தான்யாருஞ்
சிரிக்கலுறக்காலிரண்டுங்கரமிரண்டுங்குஞ்சிதமாச்செய்துகொண்டு
வரித்தகழல்வீரனெதிர்வாய்நாசிவிழியினையைமாறிமாறிச்
சுரித்தசைத்துநடஞ்செய்தானெவ்வமொடுபயங்காட்டியெயிறுதோன்ற.

இவ்வண்ணமுடல்கூனிவளைந்துநெளிந்தொருவிகடமியற்றநோக்கிச்
செவ்வண்ணவயவீரன்வறிதுநகைதோற்றுதலுந்திரண்டோரெல்லா
மைவண்ணக்கடல்கிளர்ந்தாலெனநகைத்தாரக்காலைமலர்மேல்வைகு
மவ்வண்ணனகுபைங்கண்வெண்டலையுமதுநோக்கிச்சிரித்தலோடும்.

போராழியதன்வாயிற்கழிந்துபுவிமிசைவீழப்பொருகதென்றங்கை
யோரானைமுகக்கடவுளதுகவர்ந்தங்கறியான்போன்றிருப்பநோக்கிப்
பேராண்மைப்படைத்தலைவனினிச்செயலேதென்றமுங்கிப்பேதுற்றந்தச்
சீராளன்றிருமுன்புங்கைகண்டவிகடநடஞ்செய்துவேண்ட.

ஏக்கறவானவனியற்றும்விகடநடமெடும்போதெம்பெருமானேக்கி
மாக்கருணைசுரந்தருளியாழியவன்றனக்களித்தானேவரததான்மிக்கீர்
போக்கறுமிக்காரணத்தாலன்றுமுதல்காஞ்சியினப்புழைகைத்தேவை
யூக்கமுறுந்திறல்விகடசக்கரவிநாயகனென்றுலகங்கூறும.

## விடுவச்சேனன்பெற்றசக்கரம்விஷ்ணுவுக்கீதல்.

### கலிவிருத்தம்.

விகடசக்கரவிநாயகனளித்தவத்திகிரி
யகமலர்ச்சியாற்பெற்றனன்மீண்டனனகிலம்
புகழுமால்புரத்தெய்தினன்பொலம்புனையாடைத்
தகவினனடியிறைஞ்சியச்சக்கரமீந்தான். உக

கண்டனன்பணிப்பாயலான்கவலைகண்முழுதும்
விண்டனன்றழீஇக்கொண்டனன்மீமிசைவியப்புக்
கொண்டனன்றனதமைச்சியல்பூண்டவக்குரிசிற்
கண்டர்போற்றுசேனைபதித்தலைமையன்றளித்தான். உச

விடுவச்சேனன்விகடநடங்காட்டிவரம்பெறல்.

உருத்திரச்செயல்வீரபத்திரன்புடையுற்றுத்
திருத்தகும்படைபெற்றவாசெப்புகென்றிசைக்குங்
கருத்தனுக்கவணிகழ்ந்தனயாவையுங்கரைந்தா
னருத்திகூர்படைக்கிறையவனச்சுதன்கேளா. உரு

முறுவல்பூத்தனன்மொழியுமவ்விகடநாடகத்தை
யுறுவரேறனுயெம்மெதிர்காட்டுகென்றுரைப்பத்
தெறுபெரும்படைக்கிறைவனுந்திருந்தவைக்களத்து
நறுமலர்த்துழாயவனெதிர்நடித்தனனதனை. உசா

நோக்கியற்புதமெய்தினன்மாயவனுவல்வா
னூக்குமாற்றலோயுள்ளமும்விழிகளுமுவகை
மீக்கொளப்புரிவியத்தகுமிப்பெருவிகடம்
பார்க்கில்யாவரேகழிபெருமகிழ்ச்சியிற்படாதார். உஎ

எமக்குநன்மகிழ்வளிகுமிக்கூத்தினேயிதன்மே
னமக்குமுன்னுறநலங்கழீஇநடிக்குநமமடியார்
தமக்குவேட்டனவழங்குவேந்தழன்மணிக்கதிர்க
ளிமைக்குங்காஞ்சியின்வரதராசப்பெயரெம்முன். உஅ

எவர்களித்தனிக்கூத்தினையியற்றுமார்வத்தா
ரவர்களேயெமக்கினியவர்சாலவெனமருளிப்
புவனமேத்துமத்திகிரியைவிதியுளிப்பூசித
துவகைமீக்கொளக்கரமிசைக்கொண்டனனுரைப்பான். உசா

முன்னைநாளுயர்கச்சியின்வயிரவமுதல்வன்
றன்னைவேணடிநன்றிரந்துசூலத்தலைக்கிடந்த
நின்னையான்விடுவிததனனதற்குநேராக
வின்னதாயகைமமாறுநீயளித்தனையிந்நாள். ௩௦

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செய்ந்நன்றியறிவோருமதன்பயனைப்பெறுவோருந்திரைநீர்வைப்பி
னின்னன்றியாருளரோகாஞ்சியினீதொழுதேத்துமிலிங்கம்போற்றி
யுன்னன்பின்செயலிதனைகேட்டோர்களெம்முலகமுறுகவென்னுத்
தன்னன்பின்கிழவோனைத்தழீஇக்கொண்டுமகிழ்ந்திருந்தான்சார்ங்கபாணி.

விடுவச்சேனீசப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ககசா.

---

# 32· தக்கீசப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்

கலிவிருத்தம்.

விரவினோர்தணக்கலாற்றுவிடுவச்சேனீச்சரத்தின்
வரவினைத்தெரிந்தவாறுவகுத்தெடுத்துரைத்தேமிப்பா
லிரவெரியாடுமெம்மானினிதமர்நெடுங்கீழ்ப்பாங்கர்க்
கரவிலார்க்கருளுந்தக்கீச்சரத்தியல்கட்டுரைப்பாம். க

**தக்கனார்மைந்தர்தவங்கொண்டமைதல்.**

பொறிவரிச்சுரும்புமூசப்புரிமுறுக்குடைந்துவிள்ளுஞ்
செறியிதழ்ப்புழற்காற்கஞ்சத்திருமலர்ப்பொகுட்டுவாழ்க்கை
யறிவனதேவலாற்றலடல்வலித்தக்கனெனும்போன்
மறிவருவரத்தாற்பல்லோர்மைந்தரைப்படைத்தான்மன்னோ. உ

அங்கவர்தக்கனேவலாற்றினாற்படைப்பானெண்ணித்
தங்களுண்முயலுங்காலைத்தந்திரிக்கருவிச்சால்பி
னங்கையோர்பாகற்பேணுநாரதனவர்பாற்றோன்றி
யிங்குநீருழக்குஞ்செய்கையென்னெனக்கடாவவன்னோர். ங

படையினென்றெம்மைத்தாதைபணித்தனன்படைக்குமாற்ற
லடைவெமக்கருளிச்செய்யாயையவென்றிறுத்தார்கேளா
நடைநெறிபிறழாவாய்மைநாரதன்மகதிநலயா
மூடையவனனையார்தேறச்செவியறிவுறுக்கலுற்றான் ச

ஐந்தொழினடாத்துமுக்கணையனேயுலகமெல்லா
மைந்துறப்படைக்கின்றானன்மற்றுநீருழந்திராயிற்
பந்தமேபயக்கும்பந்தப்படைப்பினாற்பயப்பதென்னே
வெந்தளைப்படடோர்வேறுங்களமும்விழைவரேயோ. ரு

பிணிப்புறுங்களநீக்குமபெற்றியேயெவரும்பெட்பர்
கணிப்பருந்தவத்தான்மிக்கீர்தெளிமினோகருணைவெள்ள
மணிக்களத்திறைவன்பாதமவழிபடலொன்றேயன்றிப்
பணித்திடுமெவையுந்தீயபந்தமேபயக்குங்கண்டீர். சா

ஆருயிர்க்குறுதிப்பேறுமருமபயனவற்றினுள்ளும்
சீரியமுத்தியொன்றேசிறந்ததாமேனைப்பேறு
பேரிடர்ப்பாலவாகுமாதலாற்பேசகேணமி
னாரியோர்பாகன்மேயகச்சிமாநகரநண்ணி எ

சிவலிங்கநிறுவிப்போற்றிதிகழ்சிவஞானப்பேற்றாற்
கவலும்பொய்ப்பிறவிமாசுகழுவிவீடுறுமினென்னா
நுவலுஞ்சீர்முனிவர்கோமானனைகழலிறைஞ்சியேத்தித
தவலின்றத்தக்கனீன்றாத்தொழிறலைநின்றுயந்தார். அ

வினைவலித்தக்கன்கேளாவெய்துயிர்த்தழுங்கிவேறு
தனையரைப்படைத்தானன்னோர்தமக்குமம்முனிவனெய்தி
யினையவாறியம்பமீட்பக்காஞ்சியினிலிங்கந்தாபித்
தனையவாறருச்சித்தேத்தியவர்களுமுத்தரானார். சு

**தக்கன்மகஞ்செய்யத்தொடங்கியது.**

தக்கனாரிடருண்மூழ்கித்தழலெழநோக்கியென்றன்
மக்களைச்சிவன்பாலன்புமருவுறுத்துலகவாழ்க்கை
யொக்கநீகெடுத்தாய்மகக்கண்மனையுனக்கின்மையாக
முக்கணற்குரியாயென்றுமுனிவனைச்சபித்துப்பின்னர். க0

கன்னியர்தமையேபெற்றான்முனிவனுங்கனன்றுநோக்கி
நின்னுடைப்புதல்வரெல்லாநெறிச்செலவிடுத்தேனற்று
லென்னைமற்சபித்தாய்பேதைத்தக்கநீயின்னேநெற்றித்
தன்னிடைவிழித்தவெம்மான்றண்டிக்கப்படுகவென்றான். கக

இவணிலையிதுவாமேனையிமையவர்தமைத்ததீசித்
தவமுனிசபித்தான்பார்ப்பான்றவறிலிதமியனென்னை
யவமுறப்பொருதெல்லீருமகாரணத்தெதிர்த்தீர்நீயிர்
சிவபிரான்வெகுளித்தீக்கோட்படுகெனச்செயிர்த்துமேனாள். கஉ

இருதிறத்தவர்க்குஞ்சாபம்பழுத்தவாறியம்புகின்றாங்
கருவியாழ்முனிவன்சிறிக்கழறியபின்னர்த்தக்கன்
றெருமருமயலின்மூழ்கிச்செருக்கினாற்புரமூன்றட்ட
வொருவனையன்றிவேள்வியுறுப்புவான்றொடங்கினானால். கங

மருத்துவர்முனிவர்சித்தர்வசுக்களாதித்தர்மற்றை
யுருத்திரரயன்மாலேனோர்யாவருமுடங்குசேரத்
திருத்தகவிளித்துவேள்விசெய்புழித்ததீசிமேலோ
னுருத்தனனவையைநோக்கித்தக்கனுக்குரைக்கலுற்றான். கச

அளித்தருள்பயக்குமவேள்விக்கரசனாஞ்சிவனையீண்டு
விளித்திலையெவனைமாலையாவிறுத்தலுந்தக்கன்சொல்லு
மிளிப்பறுமாசங்கரனையாசத்தாற்செருமுகவென்னத்
தெளித்திடுஞ்சுருதியெச்சன்மாயவனன்னவனுஞ்செப்பும். கரு

ஆதலினெச்சமூர்த்தியச்சுதனவனேயன்றிய
யோதருந்தேவராகுணத்தினுருத்திரனீண்டுப்போதற்
கேதுவொன்றில்லைகாண்டியென்றலுமுனிவனக்கு
னோதகுமவையினுள்ளாரியாரையுநோக்கிச்சொல்வான். கசு

எச்சத்தாலெச்சமென்னுமறைப்பொருளிதுவோகூறீ
ரெச்சத்தின்வேறுபோனேகருமங்களெச்சம்போல
வெச்சத்திற்குயர்ந்தோன்வேள்வியேற்றிடுமெனனுங்கருத்தா
லெச்சச்சொல்லதனான்முகக்கடவுளையியம்புமங்கண். கஎ

ஆதலினெச்சந்தன்னாலணையவொருபாகன்றன்னை
மாதவன்முதலாம்விண்ணோர்வணங்கினர்வழிபட்டுய்யப்
போதுவரென்பதன்றேயம்மறைப்பொருளாமன்றி
யேதமிலெச்சந்தன்னாற்றனைத்தொழுமென்பதாமோ. கஅ

சகந்தனிலெவருந்தம்மினுயர்ந்தவர்தமைப்பூசிப்ப
ருகந்தவர்க்கன்றிதம்மோடொத்தவரிழிந்தோர்தம்மை
யகந்தெறப்பூசைசெய்வாராருளார்விதியுமற்றே
மகந்தனக்கரசன்முக்கண்வள்ளலேயென்னுமவேதம். ககூ

மலர்தலையுலகமெல்லாம்வழிபடுகடவுளென்று
மலைகடலுயிர்த்தநஞ்சமமுதுசெய்தருளுமேருச்
சிலையுடைமுதல்வனேயன்றியாரிதுதெளியாரென்னாப்
பலர்புகழ்ததீசிமேலோன்பகர்ந்தனன்பகரக்கேட்டு. உ0

### ததீசிமுனிவர்சாபங்கொடுத்தேகல்.

அவைக்களத்துறையும்பார்ப்பார்தருபொருட்காசைகூர்ந்து
கவர்த்தபுல்லறிவின்மாண்றுகடுந்தொழிற்றக்கன்கூற்றே
நிவப்புறப்புகறலோடுநெடுந்தகைமறுவில்காட்சித்
தவத்திறற்றதீசிசிறிவிப்பிரர்தம்மைநோக்கி. உக

படுபொருள்வெஃகுநீராற்பார்ப்பனக்கடையர்காணீர்
நடுவிகந்துரைத்தவாற்றானடலைகூரொழுக்கம்பூண்டு
கெடுநெறிபற்றிச்சைவநிந்தையிற்கிளர்ச்சிகொண்டு
கொடுமுகக்கலியிற்றோன்றிக்கலாய்த்தனிரிடும்பைகூர்ந்து. ௨௨

வைதிகப்புறத்தராகிச்சைவநூல்வழியைக்கைவிட்
டுய்தியில்புறநூல்பற்றியுலப்பருமறையினிந்தை
யைதெனப்புகன்றுவேற்றுமொழியினையாதரித்துப்
பொய்திகழ்நரகினுய்க்கும்புண்டரம்பொலியக்கொண்டு. ௨௩

எண்டிகழ்மறையீறெல்லாமியம்பும்வெண்ணீற்றுமும்மைப்
புண்டரமக்கமாலைசிவலிங்கபூசைதம்மின்
விண்டிடாவயிரங்கொண்டுதிகிரியான்வெந்தபுண்ணைத்
தண்டுசங்காழிகஞ்சக்குறிகளைத்தனுவிற்றாங்கி. ௨௪

அந்தணர்தமக்குத்தேவாமரனடிதழாதுதோளின்
வந்தவர்தமக்குத்தேவாமாயனைத்தழுவிப்பேணி
நிந்தனைக்குரியராகிநிலமிசைத்திரிகவாளா
நொந்துநீர்தழுவுமாலுநுங்களுக்கருள்செய்யானல். ௨௫

என்னவெங்கொடியசாபமியம்பினன்சிதம்புத்தக்கன்
றன்னைமுன்செயிர்த்துநோக்கிச்சாற்றுவானச்சமின்றிப்
பொன்னவிர்சடிலத்தேவையிகழ்ந்தனைபொறியிலாதாய்
நின்னுடைக்குலத்துக்கின்னேமுடிபெனநினைவிற்கோடி. ௨௬

வழிபடற்குரியார்தம்மைவழிபடன்மறுத்தும்மறை
வழிபடற்குரியரல்லார்தமைவழிபடுவோராகி
வழிஇனார்தமக்குத்தெய்வம்வகுத்திடுங்கொடியதண்டம்
வழியினலின்னேயெய்துமென்பதுவழக்காமன்னோ. ௨௭

என்றனன்றதீசிச்செம்மலெழுந்துதன்னிருக்கைபுக்கா
னன்றதுநோக்கிப்பூமேலாண்டகையச்சமெய்தித்
துன்றியகுழுவினீங்கிச்சுடர்மழுப்படையினன்பாங்கர்ச்
சென்றனன்சென்றபின்னர்ச்சிறுவிதியெழுந்துநின்று. ௨௮

**தக்கயாகசம்மாரம்.**

எச்சனுந்துளவினானையடைக்கலமென்றுபோற்றி
யச்சுதனருளால்மேவள்விதொடங்கலுமனையதெல்லா
முச்சகம்புகழுநல்யாழ்முனிவரன்மொழியக்கேளாப்
பச்சிளங்கொடியினன்னாள்பரம்பொருட்கிதனைக்கூறும். ௨௯

இறைவனேயெனக்குமுன்னர்த்தாதையென்றிருந்ததக்கப்
பொறியிலிநமக்குத்தீங்கோாடொறும்புரியுந்தீயோன்
மறைநெறிவேள்விச்செந்தீவளர்க்குமாலதனையின்னே
குறைபடச்சிதைத்திநின்பாற்கொளத்தகும்வரமீதென்றாள். ௩௰

இருள்குடியிருந்தகூந்தலிறைவிதன்மாற்றங்கேளாத்
தெருள்குடியிருந்தசிந்தைதைவரச்சிவந்தநோன்றா
ளருள்குடியிருந்தபெம்மானழிதகைத்தக்கனெஞ்சின்
வெருள்குடியிருத்துமொய்ம்பின்வீரபத்திரனைத்தந்தான். ௩௧

எண்ணருமுலகமீன்றசிற்றகட்டெம்பிராட்டி
வண்ணவார்புருவமீப்போய்கெரிப்பவாய்துடிப்பப்பொங்கிக்
கண்ணறுசினமீக்கொண்டுபெத்திரகாளியென்னும்
பெண்ணணங்கரசையின்றுள்பிறங்கெரிசிதறுங்கண்ணள். ௩௨

பத்திரகாளிவீரபத்திரனிருவர்தாமு
மத்தனையுமையைப்போற்றிப்பணியெமக்கருளிரென்ன
முத்தலைச்சூலத்தண்ணன்மொய்ம்பனையருளினோக்கி
யித்திருமடந்தையோடுமிறைப்பொழுதின்கட்போந்து. ௩௩

பழித்தொழிற்றக்கன்வேள்விபாழ்படுத்துமையாள்சீற்ற
மொழித்தியென்றருளிச்செய்தானொள்ளிழையுமையுமவ்வா
றழித்துநீர்வருதிரென்றுவிடைகொடுத்தருளப்பெற்றுத்
தெழித்தனரெழுந்தார்சென்றாரிருவருஞ்சீற்றம்பொங்க. ௩௪

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சண்டவாயுமந்தமாகவடவையங்கிதண்ணெனச்
சண்டபானுமதியமொப்பமொய்தயங்குதென்றிசைச்
சண்டன்வீறுசாந்தமெய்தவெஞ்சினந்தலைக்கொளீஇச்
சண்டிகைத்தலைவியோடுதலைவனங்கணெய்தினன். ௩௫

தன்னைநேருரோமசப்பெயர்க்கணந்தவப்படைத்
தன்னவெங்கணங்கடம்மைவேள்வியாற்றுசாலையின்
வெங்கெருப்புவைப்பவேவியுட்புகுந்துமேவலாப்
புன்னெறிச்செலீற்றக்கனுவிபொன்றுமாதுணித்தனன். ௩௬

உழையுருக்கொடோடும்வேள்வியுயிர்செகுத்தருக்கர்தம்
விழிகண்மற்றைமுப்பநிற்றிரண்டுபெல்லுங்வீழ்த்தினன்
வழுவுமிந்துவைச்சினந்துதேய்த்துவன்னிநாவினோ
டெழுகரந்துணித்துமற்றுமேற்றதண்டமாற்றுவான். ௩௭

குலவுவாணிதன்னிடத்துவீங்குகொங்கைமூக்கரிந்
துலகமீன்றவன்னையும்பர்பெண்டிருக்குமுதுபுரிந்
திலகுமேனைவிணவர்க்குமுனிவருக்குமெண்டிசைத்
தலைவருக்கும்வீரனன்றுதக்கதண்டமாற்றினான். ௩௮

தடங்கொள்சாலைமுற்றும்வெந்தழற்களித்துயூபமும்
பிடுங்கிவேள்வியாற்றினோர்பெருங்கழுத்தைநாணினன்
மடங்கயாத்துவேள்வியங்கமற்றவுமெடுத்தெடுத்
திடங்கொள்கங்கையூடழுத்தியிட்டவன்கணங்களே. ௩௯

இன்னவண்ணம்வேள்விமுற்றுமிற்றவாறுகாண்டலும்
பொன்னுடைத்துழாயினன்பொருதுளம்புழுங்கினன்
முன்னர்வெள்கிமானமுந்தமொய்பறப்பையேறெனப்
பன்னுமூர்த்திமேலிவர்ந்துபடையெடுத்தெதிர்ந்தனன். ௪0

ஆயகாலையண்ணலானையாற்றினன்முகப்பிரான்
மேயவையமுன்னருய்ப்பவேறிவீரவள்ளலு
மாயனோடெதிர்த்துவெம்படைக்கலம்வழங்கினா
னேயவங்கண்மூண்டபூசல்யாவர்சொல்லவல்லரே. ௪௧

வெற்றிதோல்வியின்றிநின்றுவெஞ்செருப்புரிவுழிச்
செற்றமிக்குமாயன்வெய்யதிகிரியைச்செலுத்தினான்
மற்றுவீரபத்திரன்றன்மார்பின்முண்டமாலையு
ளொற்றைவெண்கபாலமப்படைக்கலத்தையுண்டதால். ௪௨

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உணங்கரும்வலத்தவாழியுணங்கியதோர்ந்துமாற்றார்க்
கணங்குசூழ்கணங்களண்டம்வெடிபடமுழங்கியார்த்துத்
துணங்கையாட்டயருமோதைதுஞ்சினாரொழியநின்ற
கணங்கெழுசுரர்கள்கேளாக்கலங்கியோட்டெடுக்குமெல்லை. ௪௩

காண்டகுவீரச்செம்மல்கணங்களான்வளைத்துத்தாளின்
மாண்டகுநிகளயாப்புவலித்தலும்புரவிமான்றேர்
தூண்டியவெகினப்பாகன்றுணையடிதொழுதிரந்து
வேண்டினனடிகேள்சீற்றம்விடுத்தருளினியென்றேத்தி. ௪௪

பெருமான்யாகசாலைக்கெழுந்தருளுங்காட்சி.

மாதர்வெண்கமலத்தோன்றல்விண்ணப்பஞ்செவிமடுத்து
மேதகைக்கணங்களோடும்வெகுளியைவிடுத்துநம்மான்
பாததாமரைக்கீழ்ச்சிந்தைபதித்தவன்பதித்தலோடும்
பூதர்களுந்தானுமாயிடைப்போந்தானண்ணல். ௪௫

குடமுழாபதலைதக்கைகொக்கரைபணவங்கோதை
படகமாகுளிதடாரிதகுணிச்சம்பம்பைமொந்தை
துடிபணைதிமிலைகண்டைதொண்டகம்பேரிகல்ல
வடமுதலியங்களெல்லாம்வயின்றொறுமியம்பிமல்க. ௪௬

வளைவயிர்பணிலஞ்சின்னம்வங்கியந்தாரைகாளங்
கிளைபடுநரம்புவீணைதீங்குழன்மிடற்றுக்கீத
முளவெனைப்பிறவுங்காலுந்துவைப்பொலியுறந்துவிம்மி
யளவினுலகமெல்லாமிசைமயமாகித்தேங்க. ௪௭

வாலொளிக்கவிகைபிச்சஞ்சாமரைமணிப்பூண்டொங்க
லாலவட்டங்கண்மற்றும்விடைக்கொடியருகுசெல்லக்
காலனைச்செகுத்தவாறுமுப்புரங்காய்ந்தவாறும்
போல்வனவுலகந்தேறப்பூதர்கள்விருதுபாட. ௪௮

ஏற்றுருக்கொண்டுதன்போலிணையடிதாங்கப்பெற்று
மாற்றலனாகித்தன்னேர்தருக்கியமாயோன்செய்ய
காற்றலைப்பிணிப்புக்காணுங்களிப்பினான்மேல்கொண்டுய்க்கு
மாற்றல்சாலறவெள்ளேறுபரந்துசென்றாடிச்செல்ல. ௪௯

வெள்ளநீர்க்கிடையோன்வைத்தவிழியவனெவ்வங்காண
வெள்கியாங்கடியிற்சாத்தும்விரைமலர்க்குவையுண்மூழ்க
வெள்ளெலும்பணிகடங்களினத்தவர்மெலிவுநோக்கி
யுள்ளுடைந்தழுவதேய்ப்பவொன்றொடொன்றலம்பியாட. ௫௦

புன்னெறித்தலைநின்றெங்கோன்றனையிகழ்ந்திடும்பைபூண்ட
வின்னரையெனக்கூனாகவளித்திடுமிறைவனென்று
மன்னுபேருவகைபொங்கிமலர்ந்தெனகளினச்செங்கை
தன்னிடைவயங்குசெங்கேழிணரெரித்தழல்கூத்தாட. ௫௧

உய்திறனுணராமற்றையும்பர்போற்பழிப்புறுமே
செய்திறன்முன்னர்த்தேறிக்கொடிஞ்சித்தேர்செலுத்தியுய்ந்த
மைதபுதன்னோன்சீலமறிந்துளமகிழ்ச்சிபூத்தாங்
கைதெனவயன்கபாலமற்புதமுறுவல்காட்ட; ௫௨

மாறடுமதுகைத்தன்னைவள்ளலுக்கியம்பிக்கொல்வித்
தூறுகாணமரரிந்நாளுலந்தவாநோக்கியோகை
யேறுதன்முடியசைத்துத்தகுந்தகுமென்பதேபோ
லாறணிசடிலமோலிக்கெநக்கிரகசைவுற்றுட. ௫௩

மறைமுதலேவலாற்றின்வயமகனியற்றுந்தண்டக்
குறையினைநிரப்பவெண்ணிக்கொடுவிடமிறைப்பதேபோற்
கறையணற்றுத்திப்பாந்தட்கலன்கள்வாய்பூட்டுவிட்டு
முறைமுறைக்கவைநாநீட்டிமூசெனவுயிர்த்துநோக்க. ௫௪

கணங்கெழுபாற்றுப்பந்தர்ப்பறந்தலைக்களத்துளாங்க
ருணங்குறுமிமையோராவியுள்ளதோவிலதோவென்னப்
பிணங்களைத்தொட்டுப்பார்ப்பான்பிணைக்கரநீட்டியாங்கு
வணங்குடன்மதியம்வெண்கேழ்வளங்கதிர்பரப்பாநிற்ப. ௫௫

இகழ்ந்தவர்தமக்கேபின்னுமின்னருள்புரியவேண்டிப்
புகுந்திறநோக்கியுள்ளம்பொருதுவேர்த்தூடிப்பொங்கி
யகந்தளர்ந்தெழுந்துவீழ்ந்துபுரண்டுகையெறிந்தாலன்ன
நெகுஞ்சடைக்கங்கைமாதுநிரந்தரந்ததும்பியாட. ௫௬

தாதையென்றிருந்துதீங்கேதாங்கினுங்காக்கநல்கப்
போதரேன்யானென்றாடும்பூவையைத்தழீஇக்கொண்டேகு
மாதரங்கடுப்பவன்னவணங்கினையிடப்பாற்கையாற்
காதலித்திறுகப்புல்லியணைத்திடுங்காட்சிதோன்ற. ௫௭

குருதியென்பிரத்தமூளைகுடருடற்குறைகடுன்றும்
பொருகளந்திருக்கண்சாத்தாப்பொருட்டவண்மறைப்பார்போலத்
தருமலர்மாரிதூவியுருத்திரகணங்கள்சாரக்
கருணைகூர்ந்தருளித்தோன்றுங்கடவுளையெவருங்கண்டார். ௫௮

கொடுங்கனுக்கண்டுவேர்த்துக்குழறிவாய்வெரூஉங்காலன்னை
யடுங்கனுவொழித்துவல்லேயணைத்திடப்பெறுஞ்சிறார்போ
ன்டுங்குறுமிமையோரெல்லாநாதனைக்காண்டலோடு
நெடுங்களிதுளும்பியோகைநீடினர்வணங்கிநின்றார். ௫௯

இன்னரைநோக்கியெங்கோன்முறுவலிததெமக்குவேள்வி
தன்னிடைப்பாகமென்னேதந்திலீரஃதுநிற்க
மன்னுபோரடுபேராண்மைவலியினீர்பலருமென்னே
பன்னுமோர்வீரற்காற்றுதுடைந்தனிர்பகர்மினென்றான். ௬0

பிரமாதிதேவர்வேண்டுகோள்.

அடியிணைதொழுதுமாயோன்முதலியவமரர்சொல்வா
ரடிபடுமெங்களாண்மைதுரும்பொன்றிலன்றேகண்டா
யடியராமெம்மைப்பல்காற்குரங்குபோலாட்டுவிப்ப
தடிகளுக்கழகோவெந்தாயாற்றிலேமுய்யக்கொள்ளாய். ௬௧

அத்தனேபல்காலிவ்வாறுணர்த்தியுமாடைமாசின்
மைத்துறுபேதைநீராற்பின்பினுமயங்குகின்றேங்
கைத்தளையாடியோச்சிக்காதியுமாள்வரல்லா
லெத்தனைபிழைசெய்தாலுமிகப்பரோவடிமைபெற்றோர். ௬௨

கறுத்தநின்மிடறுநோக்கேங்கையணிகபாலநோக்கேம்
வெறுத்தவெள்ளென்புநோக்கேம்விழியடிகிடத்தனோக்கேங்
குறுத்தமோட்டாமையோடும்பன்றிபின்கோடுநோக்கே
மிறுத்திடும்விதியினூறேமதியெனவெல்ம்பாற்கணடேம். ௬௩

பொங்கருட்பரமானந்தபூரணமுதலேயிங்கு
நங்களையாளத்தோன்றியைந்தொழினடாத்தலோரே
மங்கையைமணந்தாயென்றுமக்களையுயிர்த்தாயென்று
மெங்களிலொருவனாகவெண்ணியேயிகழ்ந்துகெட்டேம். ௬௪

கடவுள்யாஞ்செருக்காவண்ணங்கண்டனமுய்யுமாற்றால்
விடமுதலடையாளங்கணின்றிருமேனிவைத்தா
யடலுறுமவையுந்தேறாச்செருக்கறிந்திந்நாளெங்க
ளுடலினுமடையாளங்களுறுத்தினைபோலுமுய்ந்தேம். ௬௫

இன்றெமையொறுப்பவீரன்போந்ததுன்னேவலாக
வன்றெமையொறுப்பப்போந்தவிடமுமுன்னருளேயென்று
மின்றயாந்தெளிந்தேமிந்நாளிடித்தெமைவரைநிறுத்த
லென்றுநின்கடனேயன்றோவீறிலாக்கருணைவாழ்வே. ௬௬

அன்றுனைமதியாதாழிகடைந்ததூஉமன்றியெம்மேற்
சென்றடர்வதனுக்கஞ்சிச்செல்வநீயமுதுசெய்யக்
கொன்றிடுநஞ்சங்காட்டிக்குற்றமேற்குற்றஞ்செய்தே
மின்றுனையிகழ்ந்ததொன்றேடொழிதலினுய்ந்தேமெந்தாய். ௬௭

அளவறுகாலந்தீவாயள்ளலிற்குளித்துந்தீரா
வளருமிச்சிவத்துரோகம்வயப்புகழ்வீரன்றன்னா
லெளிதினிற்றவிர்த்தாயன்றேயிப்பெருங்கருணைக்கெந்தாய்
தெளிவிலாச்சிறுமையேங்கள்செய்குறியெதிர்ப்பையென்னே. ௬௮

இனையனபலவும்பன்னியிரந்திரந்தலந்துகண்டங்
கனையவாய்குழறக்கண்ணீர்வார்ந்திடக்கரங்களுச்சி
புனையநின்றமையோரெல்லாம்போற்றுழிமுடடாட்கஞ்ச
மனையவனெம்பிரானைவணங்கிவிண்ணப்பஞ்செய்வான். ௬௯

வேள்வியிற்பாகநல்காமருண்மனவிண்ணோரெல்லாந்
தாழ்நெறித்தக்கனோடுங்குறைவறுதண்டம்பெற்றார்
வாழியவினிநீயெச்சம்வரமுறவருளிச்செய்து
பாழ்படச்சிதைந்தவிண்ணோர்பண்டுபோலுய்யச்செய்யாய். ௭௦

பிரமாதிதேவர்வரம்பெற்றுபூசித்தல்.

கடுந்தளைப்பிணிப்புண்டார்க்குங்கட்டறுத்தருளாயென்ன
வடுங்கரியுரித்தபெம்மானம்முறைகடைக்கண்சாத்த
விடும்பைதீர்ந்துய்ந்தாரன்னோர்யானையுநோக்கிப்பின்னுங்
கொடும்பிழைமுழுதுநீங்கும்வழியினைக்கூறலுற்றான். ௭௧

எமக்குநீர்பெரிதுங்குற்றமிழைத்தனிரவைதீர்ந்துய்ய
நமக்குமிக்கினியகாஞ்சிநகர்வயினண்ணீரங்க
ணிமைத்தொளிர்கயிலாயப்பானுரதனியம்புங்கூற்றி
னமர்த்தவேற்றக்கனீன்றவரியுச்சுவப்பேர்மைந்தர். எஉ

பொதுவறநம்பிரம்மைப்போற்றுமாயிடைக்கட்சென்று
கதுமெனவிலிங்கந்தாபித்தருச்சிமின்கரிசுநீங்க
விதியுளித்தக்கன்றானுமிம்முறைவிழைகபூசை
யிதுபுரிகாறுநுங்கட்கிடும்பையேபுரிவர்மாற்றார். எக

கலிநிலைத்துறை.

அனையர்தாரகன்சூரபன்மாமுதலாகு
மினையதானவரென்றறிமின்களென்றருளிக்
கனைபொலங்கழல்வீரனுங்கணங்களுஞ்சூழத்
தனைநிகர்த்தவன்கயிலையைச்சார்ந்தனனிப்பால். எச

புள்ளினத்தரசுயர்த்தவனுதிப்புத்தேளிர்
வள்ளலாணையின்கிளவிபொச்சாத்தலின்மதுகை
நள்ளுசூரபன்மாமுதறயித்தியர்கலிய
விள்ளருந்துயர்ப்பெருங்கடலாழ்ந்தனர்மெலிந்து. எடு

மெலிந்தபின்மறைக்கிழவனையுசாவுபுவிடையோன்
வலிந்தவாய்மொழிநினைந்துபோய்க்கச்சியைமருவி
யிலிங்கமாயிடைநிறீஇத்தொழுதிடும்பைதீர்ந்துய்ந்தார்
பொலிந்தவிண்ணவர்தம்மொடுதக்கனும்போகி. எசா

மக்கள்பூசனைவிளைத்தவச்சூழலைமருவி
நெக்கவன்பினுற்றொருசிவலிங்கநிறுவித்
தக்கவாய்மையிற்றொழுதனன்வெவ்வினைதணந்தான்
மிக்கசீர்க்கணநாதனும்வீறுபெற்றிருந்தான். எஎ

தக்கீசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஉஎ௦.

# 33· முப்புராரிகோட்டப்படலம்.

கலிநிலைத்துறை.

சிறுவதீர்த்தநீயஞ்சலென்றியமனைச்சீறி
மறுவதீர்த்தவன்மேயதக்கீச்சரம்வகுத்தாஞ்
சறுவதீர்த்தமேல்பாங்கரிற்றாழ்ந்தவர்க்கவமா
யுறுவதீர்த்தருண்முப்புராரீச்சரமுரைப்பாம். க

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முப்புரங்களின்மூவர்புத்தன்மொழித்திறத்துமயங்கிடா
தப்பணிந்தவர்தாள்பணிந்தருளாற்றினின்றனராதலாற்
பொய்ப்புரந்தபுகாலைநீற்றமைநாவின்மன்னவர்போலெரி
தப்பிவாழ்ந்தனரீசனுணையினிற்பவர்க்கிடர்சாருமோ. உ

சுதன்மனென்றுசுசீலனென்றுசுபுத்தியென்றுசொலப்படு
மதன்மனீத்தவம்மூவருக்குமருள்சுரந்துமைபாகனு
ரிதம்விளங்கவாங்கள்வேட்டவிளம்புமின்னெனவங்கவர்
பதம்வணங்குபுநின்றிருப்பணிவாயில்காப்பருளென்றனர். ௩

கச்சிமாநகரெய்திநங்குறிகண்டுபூசனைசெய்மினோ
விச்சையாற்றினுமக்குநந்தளிவாயில்காவலுமீதுமென்
றச்சனாருள்செய்துநீங்கலுமங்கணேந்துவரம்பல
நிச்சலுந்தருமுப்புராரியிலிங்கமொன்றுகிறீஇயினர். ௪

பூசையாற்றியுளத்திலெண்ணியபேறுபூண்டனர்முப்புரா
ரீசமேன்மையளக்கவல்லுநரேவரப்பெயர்வண்மையான்
மாசில்காஞ்சிவயங்குகோட்டமெனப்படும்மெனவாய்திறந்
தோசையாலுயர்சூதனோதமுனிக்கணத்தர்வினவுவார். ௫

முப்புரத்துறைவோருளிங்கிவர்மூவருந்திருநாயகன்
செப்புமாயமயக்கினுக்குளகப்படாதுசெழுந்தழற்
கைப்பரம்பொருள்பத்திவாய்மைகடைப்பிடித்துநிலேத்தவா
றெப்படித்திதுவற்புதச்செயலெங்களுக்குரையென்றலும். ௬

தத்துவெண்டிரைவேலைநஞ்சமிடற்றடக்கியதம்பிரான்
பத்திமார்க்கமிரண்டுகூற்றதுபற்றறுத்துயரந்தணீர்
புத்திநல்குவதொன்றிரண்டறுபூரணப்பொருளோடுலா
முத்திநல்குவதொன்றிரண்டனுண்முன்னியம்பியபத்திதான். ௭

சார்புபற்றியுதிக்குமற்றையதொன்றுசத்திபதிந்தமெய்ச்
சார்பினெய்துமிரண்டுமுத்திதழைக்குமாயினும்வெவ்வினைச்
சார்பினோர்பெறுசார்புபற்றியபத்திதானிடைவிள்ளுமச்
சார்பிலாதெழுமுண்மையன்புதணப்புறுதெவர்கட்குமே. ௮

செய்தசெய்வனவாயதீவினையாவுமிச்சிவபத்தர்பா
லெய்திடாகமலத்திலைக்கமலத்தினென்றறிமின்களோ
வைதுகாமம்விழைந்தபத்தியுநல்லறததுறையாமபெறி
னைதராதிதுபத்திபேதமுணர்ந்துளோர்நவில்கிற்பதே. ௯

திரிபுரத்தவர்சார்புபற்றியபத்தியோர்நனிதீமையே
புரிமனத்தினராதலால்வருபுத்தநாரதரான்மயன்
மருவியிற்றனரின்னமூவரும்வள்ளல்சத்திபதிந்தெழும்
பெரியபத்தியராதலாலவர்பேசுமையல்கடந்தனர். ௧௦

கலிவிருத்தம்.

பேறுமெய்தினரென்றுபேதுரு
வாறுமேதகுசூதன்மாதவர்
கூறுகூற்றினுக்கிறைகொடுத்தனன்
வேறுமாக்கதைமேல்விளம்புவான். ௧௧

முப்புராரிகோட்டப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௧௨௮௧.

# 34. இரணீசப்படலம்.

கலிவிருத்தம்.

அரணியின்கனலையர்கூற்றடு
சரணிமுப்புராரிசஞ்சாற்றினா
முரணியங்கதன்குணக்கண்முன்றொழு
மிரணியீச்சரத்தியல்புரைத்துமால். ௧

இரணியப்பெயரசுரரேறனான்
குரவனாய்நலங்கொளுத்துவெள்ளியைச்
சரணமேத்துவான்றனியிடத்தினில்
வரவழைத்தனன்வணங்கிவிண்டனன். ௨

அரும்பெறற்றிருவராசுநான்பெறத்
தரும்படித்தொருவிரதஞ்சாற்றென
விரும்புமந்திரகிழவனையிங்குதோ
ளிரும்பினன்னவற்கிறைவழங்குவான். ௩

வேட்டவாறிதுவாயின்மேவரக்
கேட்டியிவ்வுரைகேடிலாற்றலோய்
நாட்டமூன்றுடைநாதன்சேவடிக்
கீட்டுமன்பினூற்றவமிழைத்திநீ. ௪

பதுமவாழ்க்கையானபடைக்குமாற்றலு
மதுவைமாட்டினானளிப்பும்வான்மிசை
யதுலனாகியோராசையாட்சியும்
பொதுநடிப்பவன்பூசைப்பேறரோ. ௫

செல்வமானமையோர்சிர்த்திவாழ்வருள்
கல்விகட்டெழின்மகளிர்காழிலாச்
சொல்வலித்திறஞ்சூழ்ச்சியேனவு
மல்வெரூஉங்களனருச்சனைப்பயன். ௬

மெய்த்தவின்னவரிருக்கைவேண்டினு
நத்துமாலயனகரம்வேண்டினு
முத்திவேண்டினுமூவருஞ்சிவ
பத்தியொன்றனாலெய்தற்பாலவே. ௭

ஒன்னலார்பிணியுரகமன்னனைகோ
ளென்னவுமவர்க்கிடரிழைத்திடா
வன்னவாகலானரனடித்தொழின்
முன்னினார்க்கெவனரிதுமொய்ம்பினோய். ௮

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவன்றன்றிருவுருவைக்காணாதகண்ணேகுருடாஞ்சீர்சால்
சிவன்றன்றிருவுருவையெண்ணாதசிந்தையேபித்தாமென்றுஞ்
சிவன்றன்றிருப்புகழைக்கேளாச்செவியேசெவிடாமன்பிற்
சிவன்றன்றிருப்புகழையோதாதவாயேதிணிந்தமூங்கை. ௯

நில்லாதிளமையும்யாக்கையுமின்னினியேநீங்குமன்றிப்
பொல்லாதநோயுமடர்ந்துபெரும்பையுள்புகுத்துநீரா
லெல்லாநரைத்துடலமேகாமுனன்னெறிக்கேசெல்வோமென்னா
வல்லானுகைத்தானேயர்ச்சிப்பாரிவ்விடும்பைவாழ்க்கைவெல்வார். ௧௦

பத்தன்மொழிப்பகுதிசேவையினைக்கூறும்பரிசாலீசன்
பத்தனவற்கினியசேவகனேயாதலினிப்பான்மைபூண்ட
பத்தர்படிமமொழுக்கங்குலனென்றும்பார்க்கவேண்டா
பத்தரெனப்படுவோர்கண்டிகையுநீறும்பரித்தமெய்யோர். கக

அங்கவரைக்காணப்பெறுகிற்பிற்கங்கைநீராடற்பேறு
மங்கவர்பாற்பேசப்பெறினகிலதீர்த்தமுந்தோய்ந்தோராவ
ரங்கவர்க்குச்செய்பூசையண்டருக்குமூவருக்குமாகுங்கண்டா
யங்கவர்க்கேதானமளிப்பரவர்தம்பாலேற்பர்நல்லோர். கஉ

மாயனயன்விண்ணுடர்வாழ்வுந்துரும்பாமதிக்குமிந்தத்
தூயசிவனடியார்மேம்பாடியானேயோசொல்லவல்லேன்
பாயபெருங்கீர்த்தித்தோன்றல்பலசொல்லியென்னையிந்நா
ளாயபிறவெல்லாங்கழித்துச்சிவனடியேயர்ச்சித்துய்வாய். கங

என்னுங்குரவனிணைத்தாடொழுதோகையெய்தியெந்தாய்
பன்னும்பரம்பொருளையெத்தானத்தெவ்வாற்றாற்பண்புகூரப்
பொன்னங்கழலிணைகள்பூசித்திடுவதெனும்பொன்னேன்கேட்ப
மன்னும்பிருகுதரவந்தமைந்தன்வகுப்பான்மன்னே. கச

கலிநிலைத்துறை.

எங்கணுநிறைந்துநிற்குமெம்பிராற்கினியவாய
பங்கமில்வரைப்புமண்மேற்பலவுளவவற்றுட்காசி
யங்கதிற்காஞ்சிமேலாங்காஞ்சியினதிகமில்லை
செங்கதிர்மதியஞ்செந்தீமண்டிலமடியருள்ளம். கரு

மந்தரங்கயிலைதம்மின்மேம்படவயங்கித்தோன்று
மந்தமாநகரினெங்கோன்வலவிரைந்தருள்சுரக்கும்
மந்திரவெழுத்தஞ்சோதிப்பச்சிலைமலரேதேனுஞ்
சிந்தைகூரன்பிற்சாத்தித்தொழுவதேசிவனுக்கின்பம். கசா

கண்டிகைநீறுமெய்யிற்கவின்றிடவிவ்வாறங்க
ணண்டனைத்தொழுதுமெய்ப்பேறடைகெனுங்குரவன்பாத
புண்டரீகங்கள்போற்றியெழுந்தனன்பொறிவண்டூதுந்
தண்டலைக்காஞ்சிநோக்கிநடந்தனன்றறுகணாளன். கஎ

தன்னுடன்பிறந்தகேண்மைத்தானவனிரணியாக்க
னென்னவன்றனையனந்தகாசுரன்பிரகலாதன்
முன்னுறுபுதல்வரன்னோர்வழிவருமூரியர்தேசின்
மின்னுமாவலியேவாணன்விரோசனன்முதலியோரும். கஅ

பற்றுகாயாதிவாதிமனைவியர்பலருமேனைச்
சுற்றமுமொருங்குகாஞ்சித்தொன்னகரெய்தித்தாந்தாம்
பெற்றிடும்பெயரான்முக்கட்பிரான்குறிநிறுவிப்போற்றக்
கொற்றமார்முப்புராரிகோட்டத்தின்குணபாலெய்தி. கசூ

தன்பெயரிலிங்கமொன்றுதாபித்துக்குரவன்கூறு
மன்புடைமுறைமையாறேயருச்சனையாற்றியுண்டி
யின்பமும்வெறுத்துப்பன்னாண்மெய்த்தவமியற்றுமேல்வைப்
பொன்பொதிசடிலப்புத்தேளெதிரெழுந்தருளப்போற்றி. உ0

மக்களின்விலங்கின்மற்றையோனியின்மண்ணில்விண்ணி
லுக்கதீப்படைகடம்மினுணங்கலினீரமென்னத்
தக்கதிற்புறம்பினுள்ளிற்பகலினிலிரவிற்சாவாப்
பொக்கமில்வரமுமும்மைப்புவனமும்புரக்கும்பேறும். ௨௧

எம்பிரானருளக்கொண்டானிரணியகசிபுமாசை
யம்பகன்முதலியோருமவரவர்க்கினியபெற்றார்
வம்பலர்மலரிட்டன்னோர்வழுத்தியதலங்களோடு
மும்பர்சூழிரணியீச்முத்தமச்சிறப்பினோங்கும். ௨௨

இரணீசப்படலமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௧௩௦௩.

---

## 35· நாரசிங்கீசப்படலம்.

கலிவிருத்தம்.

தரணிமேற்புகழ்தாங்கியகாஞ்சியி
னிரணியீச்சரமேன்மையியம்பினு
மரணிலஃததவதன்குடபாங்கரின்
முரணினரசிங்கீசமொழிகுவாம். ௧

தக்கன்வேள்வியஞ்சாலையவியுணப்
புக்கதேவர்புரளச்சவட்டிய
முக்கணன்னருள்பெற்றபின்மூவுல
கொக்கவாடகன்றுட்படுத்தோங்கலால். ௨

வண்ணவண்டிமிராமலர்க்கற்பகக்
கண்ணிவிண்ணவர்யாருங்கவன்றுபோய்த்
தண்ணறுந்துளவோனடிதாழ்ந்தெழூஉக்
கண்ணிலாக்கனகன்செயல்கூறலும். ௩

ஐம்படைத்திறலாண்டகைகாஞ்சிபுக்
கெம்பிரான்றனிலையடியேத்துபு
வெம்புதெவ்வினைவெலலுமுபாயமவ்
வும்பர்கோனருள்செய்யவுணர்ந்தரோ. ௪

உந்துதன்னெருகூற்றையுவன்பெறு
மைந்தன்மாடுறவைத்துத்தருககுழி
யெந்துநீயினியுய்திறனீங்கெனச்
சுந்தரப்பொலந்தூணங்கிழித்தெழீஇ. ௫

கொட்குமானிடக்கோளரியாகியவ்
வட்கிலானைக்கவான்மிசைவைத்திரு
ணட்குமக்கியின்வாய்தலினள்ளிருந்
துட்குகூருகிர்கொண்டுரங்கீறியே. ௬

வன்கணனுயிர்வவ்வியிரத்தநீ
ரென்கணுகெனவாய்மடுத்திம்மெனத்
தன்கணெய்துந்தருக்கின்மயங்கினன்
புன்கண்மும்மைப்பொழிற்கும்விளைத்தனன். எ

பிரகலாதன்பிறங்கெழிற்செய்யவள்
சுரருமேத்தித்துதிசெயுநன்னைய
வுரையுங்கேட்கலனுன்மத்தமேவிடிற்
கரையுமென்மொழிகாதினிலேறுமோ. அ

உய்தியில்லவன்சோரியொன்றித்துணை
வெய்யவாயசெருக்குவிளைக்குமேற்
பையுள்சூழப்பதகன்கொடுமையை
யையயாவரளவிடற்பாலரே. சு

சரபவிஜயம்.

அனையகாலையயன்முதல்விண்ணவ
ரினையுநெஞ்சினரஞ்சினரெம்பிரான்
றனையடைந்துசரணமென்றேத்தினர்
வினையிகந்துயர்மந்தரவெற்பின்மேல். ௧0

வாய்புலர்ந்துநடுக்குறவந்தவ
ரேயவார்த்தைதிருச்செவியேற்றன்ன்
பாயபல்கணமேத்தப்பனிவரை
யாயினேடினிதாடல்செயாண்டகை. ௧௧

அஞ்சலீரென்றளித்தனன்சிம்புளாய்
வஞ்சமானிடவாளரியாயுளைத்
துஞ்சுவித்துரிகொண்டொளிதோற்றினன்
றஞ்சமுண்டவர்தஞ்சரணயினன். ௧௨

கலிநிலைத்துறை.

நரமடங்கலினரணனுந்திருக்காஞ்சியை
விரவிநாரசிங்கீச்சரவேந்தைநிறீஇயினன்
பரவியேத்தினன்வெவ்வினைநீத்தருள்பற்றின
னுரவுநீருடையத்தலமுத்தமமாகுமால். ௧௩

வராகீச்சரவரலாறு.

வாரகீச்சரமன்னதன்றெற்கதுமன்னுபொற்
போரான்றன்னெடுதோன்றியபொன்விழிப்பேரினன்
பார்தான்வௌவினன்பாதலத்தேகலும்பைந்துழாய்த்
தாரான்சூகரமாயவன்றன்னைச்சவட்டியே. ௧௪

முன்போற்பாரைக்கொணர்ந்துநிறீஇமதமூண்டுழிக்
கொன்பாயேற்றவன்வேடுருக்கொண்டியிருண்டொரு
வன்பார்கோடுபிடுங்கியணிந்தபின்மற்றவ
னன்பாலீசனையர்ச்சனைசெய்தருள்பெற்றதே. ௧௫

நாரசிங்கேசப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௧௩௧அ.

---

கலிவிருத்தம்.

தாரார்கொன்றையனாரசிங்கேச்சரந்தன்னொடு
வாராகீச்சரமேன்மைதெரிந்துவழங்கினா
மோரார்கின்றவிதன்குணபாங்கரெறும்வலிப்
போரானேற்றவரந்தகவீச்சரம்போற்றுவாம். ௧

இரணியாக்கனளித்திடுமந்தகனென்பவன்
மரபினெந்தையையாயிடையேத்திவரம்பெறாஉ
முரனையட்டபிரான்முதல்விண்ணவர்யாரையு
முரணில்வென்றுபுறக்கொடைகண்டுலகாண்டனன். ௨

தேவர்கள்பெண்வடிவங்கொண்டுறைதல்.

அன்னதானவனுக்கழிவெய்தியச்சத்தினாற்
பொன்னவாமருமத்தவனாதிப்புத்தேளிர்தா
மின்னிடைக்குநடுக்கம்விளைத்திறுமாந்தணி
மன்னுபூண்முலையார்வடிவத்தையெடுத்தரோ. ௩

கொள்ளிவட்டமெனச்சகமெங்கணுங்கொட்புறீஇ
வெள்ளியங்கயிலைக்கிரிமேவினர்முத்தலை
யள்ளிலைப்படையங்கணனாரருள்பெற்றவண்
வள்ளிமாமிகணங்களினோடும்வதிந்தனர். ௪

இன்னவாறுபல்காலமகல்வுழியெம்பிரான்
மன்னுதாருவனத்துறைமாதவர்தங்களைத்
துன்னிமையல்கொளீஇயவருண்மைசோதித்திடு
மன்னசெய்கைநினைந்தவணெய்தினனவ்விடை. ௫

அந்தகாசுரன்விண்ணவர்வெள்ளியடுக்கலின்
வந்துபெண்மையராகிமறைந்துறைசெய்திகேட்
டுந்துசீற்றமிகுத்தவணெய்தியுடற்றுழி
முந்துமம்பிகைதன்னருள்பெற்றுமுகுந்தனார். ௬

எண்ணில்பெண்டிர்தமைப்படைத்தேயினரத்தடங்
கண்ணினார்க்கிடைகண்டகனோடினனாகமற்
றண்ணலாருறுவோரமர்தாருவனத்திடை
நண்ணியங்கணடாத்தியசெய்கைநவிற்றுவாம். ௭

பிட்சாடனர்திருவிளையாடல்.

கொச்சகக்கலிப்பா.

கழல்கறங்கப்பலிக்கலனுங்கரத்தேந்திப்பலபரிஇ
மழக்கிரின்வரும்பெருமான்றுடிமுழக்கஞ்செவிமடுத்துக்
குழலிசைகேட்டருகணையுமசுணமெனக்குளிர்தூங்கிப்
பழிதபுதாபதமடவார்பலிகொண்டுமருங்கணைந்தார். ௮

நிலவலர்ந்தநகைமுகிழ்க்குமணிவாய்க்குநெடுஞ்சூலத்
தலைகிடந்ததிண்டோட்குந்தடமார்பினழகினுக்கு
மலைமடந்தைகரஞ்சேப்பவருடுமிருகுறங்கினுக்குங்
கலைநுடங்கவருமடவார்கண்மலரிட்டிறைஞ்சினார். ௯

கண்மலரையெம்மானார்திருமேனிகவரவவர்
பண்மலரும்வாய்மலரும்பனிமலருமுகமலரும்
தண்மலரும்விழிமலருந்தாண்மலருங்கைமலரும்
விண்மலருமின்னனையவிளங்கிழையாரெதிர்கவர்ந்தார். ௪0

எம்பிரான்றிருமேனியுளமுழுதுமிடங்கொள்ள
நம்பியகாண்முதனன்குந்துச்சிலர்போற்புறநடப்பக்
கொம்பனையார்களனைடுகளித்தோரினிருமருங்கும்
பம்பினராடினர்பாடினரென்செய்வார். கக

தண்ணறுஞ்சந்தனந்தியதூதரளவடநீறாகக்
கண்ணெகிழ்பூந்தொடைமூசுங்களிவண்டினெடுங்கருக
வெண்ணரியகாமத்தீயிடைக்குளித்தார்புரம்பொடித்த
வண்ணலிளநகைபோலுமடிகளிவர்நகையென்பார். க௨

வழுவுமுடைகரத்திடுக்கிக்கொணர்ந்தபலியிடமாட்டார்
தொழுதகையார்பனநதாளினணிந்தருளத்தொடையேந்தி
யெழுமவளின்மறுகுவாரெம்பிரான்கடைக்கணிப்ப
முழுதருள்பெற்றுய்ந்தேமென்றகமலரமுகமலர்வார். கந

தக்கபலிகொளவந்தீர்தனப்பிச்சைதருகின்றேம
கைக்கொடுபோமிதோவெனமுன்னுரநெளிப்பார்கழிகாம
மிக்கயாங்களுநீரும்வெற்றரையேமாயினமா
லிக்கிடந்ததுகினுமதோவெமதோசொற்றிடுமென்பார். கச

எம்மல்குற்கும்மல்குலிணையொக்கும்போலுமது
செம்மலீருடன்சேர்த்தித்தெரிதுமெனவருகணைவார்
வெம்முலைவாரணமெங்களிடைக்கிறுவிளையாமே
நும்முகிர்த்தோட்டியினடக்கிறைனுண்டுநுமக்கென்பார். கரு

மன்றநீரிரந்தபலியாமளித்தேமற்றியாங்க
ளொன்றிரந்ததளியாக்காலிகழன்றேயுமகென்பா
ரின்றெனினும்விடுவோமோவீர்ங்கணைவேள்பறந்தலைக்கட்
சென்றுபெரும்போர்விளைத்தும்வளைமினெனத்தெழித்தெழுவார்.

யாங்கொணர்ந்தபலியோடுமெம்முடையவளையாழி
பூங்கடிஞையுறக்கொண்டீர்புனிதரேயவையளித்தா
லாங்கிரந்தமாலாக்குவளையாழியீட்டளித்த
வீங்குநீர்க்கலிக்கச்சிவிநாயகரொப்பீரென்பார். கள

பாம்பலதிங்கிஃதல்குலபகடல்லவிவைகொங்கை
கோம்பியலதிதூநாசிகோளரியன்றிதுமருங்கு
லேம்பலிக்குமிவைதம்மைக்கோளிழைப்பவெனவெருவிப்
போம்பரிசுநினையாதீர்புல்லுமினென்றடிதொழுவார். கஅ

இவ்வாறுதம்பிரான்றிருமேனியெழினோக்கிச்
செவ்வாய்மைக்கற்பிழந்தார்திறங்கண்டுவெகுண்டெழுந்த
வவ்வாழ்க்கைமுனிவரிடுசாபங்களடிகள்பாற்
றுவ்வாமையுறநோக்கிக்கொடுவேள்விதொடங்குதலும். கக

எழுந்தமுயலகன்புலிபாம்புழைபூதமெரிமழுவுந்
தொழுந்தகையார்கைக்கொண்டுதொடங்குதிருநடங்காணூஉ
விழுந்தயர்ந்துசோர்ந்துள்ளம்வெரீஇயினர்தமக்குமதிக்
கொழுந்தணிவாரறிவளிப்பக்குறைதீரத்தொழுதெழுந்தார். ௨௦

சென்னிமிசைக்கரங்கூப்பித்தெய்வசிகாமணிபோற்றி
யின்னருளாலெமைப்புரக்கவெழுந்தருளுஞ்செயல்போற்றி
பொன்னிதழித்தொடையாயெம்பிழையனைத்தும்பொறுத்தருளிப்
பன்னரியமுத்திநிலைப்பரபோகமருளென்றார். ௨௧

அவ்வண்ணந்தொழுதிரந்தவருண்முனிவர்க்கருள்கூர்ந்து
செவ்வண்ணத்திருமேனிச்சிவபிரானிதுகூறு
மிவ்வண்ணம்வேண்டுதிரேலெழிற்காஞ்சிநகர்வயிற்போய்
மெய்வண்ணநாற்குலத்துந்தோன்றியவண்மேவுதிரால். ௨௨

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பற்றறத்துறந்தோர்பற்றுட்பட்டவரேனுஞ்ஞானம்
பெற்றவர்மடவரேனும்பெரும்பன்றிகழுதைஞாளி
புற்றராப்புல்லுப்பூடுபுழுமரமேனுங்காஞ்சி
நற்றலத்திறுதிகூடினம்மடிகலப்பதுண்மை. ௨௩

பிருகுவாதிமுனிவர்காஞ்சியிற்பிறத்தல்.

ஆதலினங்கணிலலாற்றொழுகிவீட்டடைமினென்னக்
காதலின்வணங்கிப்போற்றிக்கடும்பொடும்பிருகுவாதி
யேதமினற்பத்தெண்ணாயிரவருங்காஞ்சிநண்ணிக்
கோதறுமரபினன்றநாலவகைக்குலத்துந்தோன்றி. ௨௪

மெல்லிதழ்நறுமென்போதால்விதியுளிவெவ்வேறன்பி
னல்லுறழ்மிடற்றுப்புத்தேளருட்குறியருச்சித்தேத்தி
நல்லனவரங்கள்பெற்றுநாயகனருளாலங்க
ணில்லறநெறியின்மன்னிவாழ்ந்தனரினையநீரால். ௨௫

எல்லைதீர்காஞ்சியுள்ளார்யாவருமுனிவரங்கட்
கல்லெலாமிலிங்கஞ்சீதப்புனலெலாங்கங்கைசொல்லுஞ்
சொல்லெலாமனுக்கள்கைகாற்றொழிலெலாம்விடையோனேவல்
செல்லலாந்தகைத்தனறம்மதென்றிசைக்கிழவற்கவ்வூர். ௨௬

அந்தகாசுரன்முத்தியடைதல்.

அருந்தவக்கிழவர்தங்கள்செயலதுவாகவிப்பாற்
பெருந்தகைகயிலைநண்ணிப்பிராட்டியோடமர்ந்தானங்கட்
டிருந்திழைமகளிர்கோலங்கொண்டுறைதிருமாலாதி
யிருந்திறற்சுரரும்போற்றிமருங்குறவிருக்குமேல்வை. ௨௭

தனைப்புறங்கண்டமின்னார்தமைப்பற்றிவருதுமென்னு
மனத்தருக்குய்ப்பமீட்டுமந்தகன்வருதல்காணூஉப்
புனத்துழாய்ப்புத்தேண்முன்னாப்போற்றிவிண்ணப்பஞ்செய்ய
வினைத்தொடக்கறுக்குமெங்கோன்வயிரவன்றனைவிடுத்தான். ௨௮

வயிரவன்படையோன்முன்னும்வானவர்க்கிடுக்கண்செய்வான்
வயிரவன்றுடியன்சேனைவலத்தவனகிப்போந்த
வயிரவன்மனத்தான்றன்னைப்பொருதவண்சூலத்தேந்தி
வயிரவன்களிப்புமிக்குவாகையினடனஞ்செய்தான். ௨௯

அந்தகற்கருளாலுண்மையறிவுவந்துதிப்பவன்றேன்
கொந்துமுத்தலைச்சூலத்திற்கோப்புண்டுகிடந்தவாறே
கந்தமென்மலர்த்தாள்போற்றித்துதித்தலுங்காரிப்புத்தேண்
மைந்தயாமகிழ்ந்தாம்வேட்டவரமினிப்புகறியென்ன. ௩௦

தானவன்முத்தியொன்றேதந்தருளென்றனற்றேற்
கோனருள்பெற்றுக்காஞ்சிகுறுகுவாமென்றுநண்ணி
யானுடையூர்தியண்ணலருளினாற்றனதுகாப்பா
மாநகரெய்திச்சூலவைத்தலைக்கிடந்தான்றன்னை. ௩௧

தெறும்புரமெரித்தார்கம்பந்திகழ்சிவகங்கைத்தீர்த்த
நறும்புனன்மூழ்குவித்துத்திருவருணல்கிப்பாசக்
குறும்பறுத்தளித்தான்றண்டக்குரிசிலந்தகனுந்தன்பே
ருறும்பழவிலிங்கத்துள்ளாற்கரந்தனனெருமைபெற்றான். ௩௨

அந்தகேசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஉ௫௦.

## 37. வாணீசப்படலம்.

கலிவிருத்தம்.

அறம்பயில்காஞ்சியினந்தகீச்சரத்
திறஞ்சிறிதறிந்தவாசெப்பினுமினிப்
பிறங்குசீரத்தளிக்குணதுபேதுறுப்
பறம்புவில்லுழவர்வாணீசம்பன்னுவாம். க

வாணன்வரம்பெற்றகங்கரித்தல்.

எறுழுடைவாணனென்றியம்புதானவன்
றெறுவினைக்காஞ்சியினருட்சிவக்குறி
நிறுவினனருச்சனைநிரப்பியாதவ
முறுவரினுஞற்றினனுலப்பில்காலமே. உ

அன்பினுக்கெளிவருமழகனுங்கவன்,
முன்புறத்திருநடமுயலக்கண்டன
னென்புநெக்குருகநின்றேத்தினனந்தி
தன்பெருங்கணத்தொடுமுழவுதாக்கினன். ௩

குடமுழவிருகரங்குலுங்கத்தாக்குதோ
றடர்பெருங்கருணைகூர்ந்தடிகளாயிரந்
தடநெடுங்கரம்பெறநல்கித்தானவ
விடலைநீவேட்டதுவிளம்புகென்றலும். ௪

ஆயிரமுளரிநீண்டலர்ந்தநீனிற
மாயிருங்குன்றுறழ்வாணன்றாழ்ந்தெழூஉத்
தீயழற்புரிசையுந்திறலுமாக்கமும்
பாயமூவுலகமும்பரிக்குங்கொற்றமும். ௫

ஓவருநிலைமையுமுன்னடித்துணை
மேவருபத்தியும்வேண்டினேனொரு
மாவடிமுளைத்தெழுவள்ளலேயெனக்
காவணியுடுத்தொளிர்கம்பவாணனும். ௬

அனையவைமுழுவதுமளித்துநீங்கினன்
புனைபுகழசுரர்கோன்புவனம்யாவையுந்
தனதடிப்படுத்தினன்றருக்கிவாழுநாண்
முனைவனைத்தொழுதெழக்கயிலைமுன்னினான். எ

நம்மையாளுடையவனடனவேலையிற்
செம்மலாயிரமணிக்கடகச்செங்கையாற்
றும்மெனக்குடமுழாவெழுப்பசூர்த்தகட்
கொம்மைவெள்விடையினன்கருணைகூர்ந்தரோ. அ

எவ்வரம்விழைந்தனையெனிலுநல்குது
மவ்வரம்புகலெனவசுரன்கூறுவான்
செவ்வனின்றிருவடிச்சேவைநித்தலுஞ்
செய்வதுவிழைந்துளேன்கருணைசெய்துநீ. கூ

பீட்டுயர்முருகவேளவரைப்பிராட்டியோர்
கோட்டிளங்களிற்றொடுகோட்கணங்களி
னீட்டமொடெய்திடுயன்னிருக்கைவாய்தலின்
மாட்டிருந்தெனக்கருளெனவணங்கினன். க0

எண்ணியவெண்ணியாங்களிக்குமெந்தையவ்
வண்ணமேயாயிடைமருவிவைகினன்
கண்ணுறுமசுரனுங்காலந்தோறுமக்
கண்ணலையடிதொழுதன்பின்வைகுநாள். கக

வாசவனெடியவன்மற்றையாரையும்
பூசலிற்புறங்கொடுத்திரியப்போக்கினன்
காசணிமிடறுடைக்கடவுண்முன்னுறீஇ
யேசறுசெருக்கினலிதுவிளம்புவான். கஉ

என்னொடுபோரெதிர்ந்திரியல்போயினு
ரென்னருமினிமற்றென்புயக்கண்டூதியை
யென்னுடைப்பிரானிடைத்தீர்ப்பவெய்தினே
னென்னைநின்றிருவுளமியம்புவாயென. கங

பெருமானிறுதிகூறிபோக்கல்.

வெருவலனெதிர்நின்றுவிளம்பக்கேட்டலுந்
திருவடிவிரலுகிர்விழிசிறிப்பினன்
மருவலர்க்கடந்தருண்மதுகையெம்பிரான்
குருநிலாநகைமுகிழ்த்திதனைக்கூறுமால். கச

முதுதவப்பிருகுவின்சாபமொய்ம்பினு
லெதுகுலத்துதித்தெனக்கினியனாகிய
புதுமலர்த்துளவனின்புயக்கண்டூதியைக்
கதுமெனப்போக்குவான்வருவன்காணென. கரு

தற்றொழுவான்றனைத்தான்செருப்பது
நற்றிறமன்றெனநாடியிவ்வணஞ்
சொற்றனன்றிருவுளஞ்சுளித்தியாவையு
மற்றமிலவன்வளதுகொண்டாட்டுவான். கசு

இருள்குடியிருந்தபுன்மனத்தினீங்கிவன்
முரணினையடக்கவேபோலுமுந்தைநாட்
செருவகத்தெம்மினுந்திறல்கொள்வாயென
வரமரிக்கெம்பிரான்வழங்குஞ்சூழ்ச்சியே. கஎ

நம்பனீதுரைத்தலுநக்குக்கையெறிந்
தெம்பிரான்முப்பதாமுறையினென்னொடேற்
றும்பரார்கணத்தொடுமோடியுய்ந்துளா
னம்பசமுளரியானமருக்காற்றலான். கஅ

அவனையோராண்டிகைமீளியாகவைத்
தெவனிதுகிளந்தனையெந்தைநீயெனக்
கவர்மனக்கொடுந்தொழிற்றறுகட்காய்சினத்
தவலுடையூழிஞனிகழ்ந்துசாற்றலும். ககூ

அவனமர்க்கிடைந்தவன்றனைக்கொண்டேயவன்
கவர்மதமடக்கியநினைந்தகண்ணுதற்
சிவபிரான்குறுநகைமுகிழ்த்துச்செப்புவா
றவலருமாற்றலோய்சாற்றக்கேண்மதி. உ௦

நின்னமர்க்குடைந்தபின்னினையடக்குவான்
றுன்னுசீருபமனியனுக்குத்தொண்டுபூண்
டென்னருட்குரியனுயெறழ்படைத்தன
னன்னவன்முன்னவனுகவெண்ணலை. உக

என்னநாளவன்வருமென்றியேலொரு
நின்மகட்கோர்பழிநிகழநின்னகர்
நன்னெடுங்கொடியுளொன்ஞெடியுநாள்வரு
மென்னலுமசுரர்கோனிருகையெய்தினன். உஉ

உஷைகாமத்தால்வருந்தல்.

அங்கொருநாளவன்பயந்தவாயிழை
கங்குலிற்கனவினிற்கண்ணன்சேய்பெறும்
பொங்கெழிலனுருத்தன்புல்லப்புல்லினள்
வெங்களிப்பெய்தினள்விழிப்பக்கண்டிலாள். உங

கையெறிந்தழுதுகண்கலுழ்ந்துசோர்ந்தனண்
மெய்யணிசிதைந்துமெய்வெறுவிதாதலகண்
டைதெனத்தன்மலரனங்கன்சூட்டினன்
றையறன்மருகியாச்சார்வதோர்ந்தென. உச

களங்கனிக்கூந்தலிற்கவற்றித்தற்றெறத்
துளங்குறுபழம்பகைத்தொடர்பின்வேள்கரி
விளங்கிழைமுந்துதன்வீறுகாட்டலா
லிளங்கொடிமுதலரிந்தென்னச்சாம்பினள். உரு

பழிவருமென்றசொற்பழுதுருவகை
யுழைவிழிக்கிறந்துபாடொழிப்பவல்விரைந்
தெழுபவன்போலிருள்கிழித்துவெய்யவன்
சுழிபுனற்கருங்கடன்முகட்டுத்தோன்றினன். உசு

### உஷையநிருத்தன்சிறையடைதல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அத்திறங்கேட்டதோழியாய்த்துருப்படத்திற்றீட்டி
யித்தனிக்குமரனேயோவென்றுளமகிழ்ச்சிநோக்கித்
தத்துநீர்த்துவரைநண்ணித்தவிசொடுந்துயில்கின்றானைச்
சித்திரமெனக்கொண்டெய்தித்திருந்திழைமுன்னருய்த்தாள். ௨௭

கண்டனளசுரனீன்றகனங்குழையமிழ்தமள்ளி
யுண்டனளென்னவேராகைதுளும்பினளவனைப்புல்லிக்
கொண்டனள்காளைமேனிவனப்பெலாங்குறித்துநோக்கி
விண்டனள்கவலையன்றான்விழித்தனன்விளைந்தகாமம். ௨௮

இளமுலைவருடிமோந்துமுத்தமுண்டிதழ்த்தேன்மாந்தி
விளரிவண்டிமிருந்தாரான்மேகலைநெகிழ்த்துநீவித்
தளைவிடுத்தகலயாணரல்குலந்தடத்துண்மூழ்கி
விளைபெருங்கலவிப்போகவெள்ளத்தினழுந்தினானால். ௨௯

துணைவிழிசேப்பச்செவ்வாய்துடிப்பவேர்வரும்பப்பூக
மணிமிடறொலிப்பவார்ப்பவால்வளைதடந்தோள்வெற்பிற்
பணைமுலைக்களிநல்யானைபாய்ந்துபாய்ந்துழக்கமெல்கு
மணைமிசைக்கலவிப்பூசன்மடந்தையுமாடினாளே. ௩0

புணர்ச்சியின்மருங்குநிற்றல்புரையெனவிலகுமேலோர்
குணத்தையுற்றுடையுநாணும்புறஞ்செலத்தூர்த்தர்மான
வணர்க்குழல்கட்டுவிட்டுமருங்கெலாங்கொட்டநோக்கி
யிணைச்சிலம்பார்ப்பத்தண்டாவின்னலநுகர்ந்துவாழ்நாள். ௩௧

தளிரியனிறம்வேறாகித்தையலாள்கருப்பமெய்த
வளமனைகாப்போர்நோக்கிவாணனுக்குணர்த்தவன்றா
னிளவலையரிதிற்பற்றியிருஞ்சிறைப்படுத்தான்காணூஉ
வளமருமயிலிற்றேம்பிப்பெண்கொடியரற்றிவீழ்ந்தாள். ௩௨

### கண்ணன்போருக்கெழுதல்.

வீழ்ந்தயர்பொலங்கொடிக்குத்துணையெனவிசும்புநக்க
வீழ்ந்துயர்கொடியுமந்நாள்வெய்யகாலுதைப்பவிற்று
வீழ்ந்ததுவாணன்கொண்டவிழுத்தவப்பேறுமொக்க
வீழ்ந்ததுநிகழ்ந்தசெய்கைவிளைமாமுனிவனோர்ந்தான். ௩௩

சிலைத்தொழின்மாண்டதன்சேய்சிறுவனைக்காணாதெங்கு
மிலைப்புளார்கிளைத்துவாடுந்துவாரகைக்கிறைபாலெய்திப்
புலப்படப்புகலக்கேட்டுப்பொருபடையெழுகவென்றா
வுலப்புயத்துளவத்தாரானொலிமுரசறைவித்தானால். ௩௪

வியவரினுணர்ந்தார்சாற்றும்விசிமுரசோதைகேட்டுச்
செயிரறத்தொகுவவங்கட்சேனையேயல்லமாறாச்
சயமுடையிமையோர்தங்கள்சிதறுநல்வினைகடாமு
முயர்முரசோதைகேட்டவ்வும்பர்பாற்றொகுவமாதோ. ௩௫

கடுந்தொழிலசுரர்தம்பாற்றெறப்படுங்காலதூதர்
கெடுந்தொழிலனையார்ப்பற்றக்கிளர்ந்துவேற்றுருவுகொண்டு
கொடுந்தொழின்முற்றக்கற்றாலனையகூர்ங்கோட்டுநால்வா
யடுந்தொழிற்றறுகண்வேழமளப்பிலபண்ணினார்கள். ௩௬

குவைமணிமோலிவிண்ணோர்மனமெலாங்குழமிகம்மைக்
கவலுறவருத்திஞரைவெலற்கிதுகாலமென்று
வவயவங்கொண்டுவெவ்வேறணங்தெனவிரைசெல்காட்சி
யிவறுசீர்க்கவினப்பாய்மாவெண்ணிலபண்ணிஞரால். கஎ

வரைமகள்கிரீசனேங்கற்குறிஞ்சிமன்மதக்கைவெற்பென்
றுரைபெறுகிழமையோரையொருங்குதன்வாய்தல்வைத்த
புரையினுன்றன்மேற்சீறிவரையெலாம்புறப்பட்டாங்கு
விரைசெலற்கொடிஞ்சித்திண்டேர்பண்ணினர்கோடிமேலும்.

தடமதிலெரியாற்கோலப்பெற்றவன்றன்னையேவ
விடவரம்பெறவும்வல்லுமெனத்துணிந்தனையாஞவி
கொடுசெலக்குறித்துப்பல்வேறுருவுகொண்டனைந்தகாட்சி
வடவைநேர்சீற்றத்துப்பின்மள்ளருமொய்த்தார்பல்லோர். கசு

பண்ணுநாற்படையின்வீக்கம்பார்த்துமண்ணடுங்காவண்ணம்
வண்ணவெண்கவிகைபிச்சங்கொடிகண்மேன்மறைப்பத்தீம்பால்
வெண்ணிறப்புணரிநள்ளுமேயதன்றேற்றங்காட்டிக்
கண்ணனுந்தானைநாப்பட்கடகளிறுகைத்துச்சென்றான். சுo

கொழுநனுடமர்க்குச்செல்லக்குலமனையகத்துவாளாக்
கெழுவுறுதகையஞலக்கிழத்தியுந்திருவைகுந்தப்
பழமனையியற்கைவல்லேபார்த்தனண்மீளவிண்மே
லெழுவதுகடுக்குஞ்சேனைச்செலவிடையெழுந்ததூளி. சக

கண்ணன்சேனையும்வாணன்சேனையும்கைகலத்தல்.

இன்னணமளக்கரேழுமெழுந்தெனபரந்தசேனை
துன்னலரணுகல்செல்லாச்சோணிதபுரத்தைமுற்ற
வன்னதுதெரிந்தவாணனழலெழவிழித்துநக்குத்
தன்னிகரடுபோர்ச்சேனைத்தலைவரையேவிஞனல். சஉ

எழுந்தனபடைகளுன்குமியம்பினவியங்களெங்கும்
வழிந்தனவிலாழிமண்ணும்வானமுஞ்செறியத்துன்னி
யொழுங்கினதூளிசேய்த்திற்கண்டவருகுமண்மாரி
பொழிந்திடும்போலும்வாணன்புரத்தெனமருட்கைகொள்ள. சங

தன்னுயிர்க்கணவன்மேற்செல்லுஞனையுள்ளழுங்கக்கண்கள்
பொன்னுருப்புவனிமாதுபுழுதியாற்புதைப்பச்சீறி
யன்னவண்மருமகோவடிபெயர்த்ததிர்த்துச்சென்று
மின்னிலைப்படையசேனைவியனகர்வெளிக்கொண்டன்றே. சச

விதிர்படைமின்னுக்காட்டவிலாழிநீர்தாரைகாட்ட
வதிரொலியுருமுக்காட்டவந்தநாட்படலைமேக
மெதிரெதிருடன்றாலென்னவிருபெருங்கருவிச்சேனை
கதிர்முலைச்சயமான்மெச்சக்கைகலந்தமரின்மூண்ட. சரு

கொச்சகக்கலிப்பா.

செங்களத்துடல்கிடப்பவருதிண்டிறலரை
யங்குகின்றெதிர்கொளப்புகுநரொப்பவழல்சால்
வெங்களத்துறுசெருத்திறமைநோக்கவியல்வா
னெங்குமொய்த்தனர்களீர்த்தொடையன்மோலியிமையோர். சசா

கல்லியற்பொருகளத்திருவரங்கமதனின்
மெல்லியற்சயமடக்கொடிநடிப்பமிடையும்
பல்லியத்தொகைமுழக்கெனவெழூப்புபடகஞ்
சல்லிதக்கைமுதலெண்ணிலதழங்குவனவால். சஎ

பொருதொழிற்றிறனில்வல்லபகவன்புரமடு
மொருவனேயெனவுணர்ந்தனரெனச்சிவன்முடிச்
செருகுதும்பையைமிலைச்சினர்தெழித்துமிடலா
னிருதிறத்தருமுடஃறுசமர்யாவர்மொழிவார். சஅ

கரிகளூருநரொடுங்கரிகளூருநர்களும்
புரவியூருநரொடும்புரவியூருநர்களு
மிரதமூருநர்களோடிரதமூருநர்களு
மரபின்மன்னரொடுமன்னருமெதிர்ந்துபொருவார். சகூ

தண்டமென்பெயர்வழிக்குதவுதானவயவே
தண்டமோச்சியெறிதண்டமவையொன்னலர்கள்கைத்
தண்டமோடுபுயதண்டமுநிலத்திடவுருளத்
தண்டமாற்றுவசமர்க்கணிவளமென்பதுளதோ. ருo

ஏறுதேர்வயவரேறவெதிர்விடுததிகிரி
மாறுதேரிடைநுழைந்திடுவவானவூவரைக
கூறுகொண்டமுழைநின்றெழுகுலப்பறவைகள்
வேறுகுனறமுழையிற்குடிபுகலவிழையவே. ருக

வேறு.

ஆடுபரிசாரிகைதொடங்குதொறடங்கார்
சேடிடை முடித்தலைகள்வீழ்ந்துதமர்தேரி
னேடுருடடுப்பவொருநீயிருமெயமைப்போ
லீடழியவேகலிவெனத்தடைசெய்தென்ன. ருஉ

வண்டுமுரல்வாவியுறைகஞ்சமனையாளை
கொண்டுதனிருக்கைசெலசுடர்கமொழுநனைப்பத்
திணடிறலடநகலர்சிரந்திருகியேந்தி
யண்டவெளியிற்சுழலவசுற்றிவிடுமாழி. ருங

மீச்செல்வயவெங்கரிகளொனறன்மிசையொன்றங்
கோச்சுகதைமாற்றுகதையொள்ளிழைமடச்செவ்
வாய்ச்சியர்கோலாட்டநிகர்வண்மையினைநோக்கி
யேச்சறுவிசும்பினிமையாதவர்வியப்பார். ருச

விழித்தவெகுளிக்கணிடனுடுதொறுமேவா
ரழிக்திமையெனக்கருதியார்ப்பரெனவெள்கி
யொழித்துவலனேகுகினழல்சீற்றநனிகாட்டித்
தெழித்துவிறல்சாற்றியமரேற்பர்திதிபெற்றூர். ருரு

வேறு.

வெங்கட்கரிகடிதுந்திடவிண்ணத்தெழுமவுண
ரங்கைப்பிடியெஃகத்துடனணைகின்றனமைகாணு
நங்கட்கிடர்புரிவானிவணனுகுற்றனரென்னு
வுங்கட்செறிவிண்ணோரிரிவுற்ருருளமஞ்சி. ருசு

தெவ்வட்டழல்படைவெய்யவர்விண்ணிற்செலவுந்துங்
கௌவைக்கரிபிளிறிக்கடமொழுகப்புவிவீழ்வ
வெவ்வுப்படவலனைத்தெறுமிறையேவலினெழிலி
வெவ்விற்படைமாயற்கொருதுணையாய்வரல்வீழும். ௫௭

ஒருவன்றிறலவுணன்கதமுடனூக்கியபரிமா
பெருவிண்மிசையெய்திச்சுழல்காற்பட்டழல்பெற்றி
வருவெங்கதிர்மான்றேர்விசையிற்றப்பியவாசி
தெருமந்தினங்காணுதவனுழிதந்தெனத்திகழும். ௫௮

வேறு.

துன்னுகுருதித்தசைவழுக்கிவிழுசூரர்
வெந்நிடைமதக்களிறுகுத்துவெண்மருப்பு
முன்னுறவுரீஇநிமிர்வமைந்தர்முலைபெற்ற
தென்னெனவரம்பையர்மருட்கையினிசைப்பார். ௫௯

அட்டழல்கழன்மறவராகமிசையெஃகம்
பட்டபுழைநின்றிழிவபாய்குருதிவெள்ள
மொட்டலரையானுயிர்குடிப்பலெனவொல்லை
யுட்டிகழ்மறக்கனல்வெளிப்படுவதொக்கும்

கடுங்களிறுகைக்கதைசுழற்றியெறிகாற்றேர்க்
கொடிஞ்சியினிரைத்தகுருமாமணிகளுக்க
வடும்படைவலத்தினர்தெழித்தெழுமதிர்ப்பி
னெடுங்ககனமீனிரைநிலத்துகுவமானும். ௬௧

நீள்கொடிமிசைத்துகிலனைத்தினுநெடுங்கோல்
வாளிகள்பொதிந்தவைசிதர்ந்துவியலவானின்
மீளிகளதிர்ப்பினுயர்விண்மிசையதாருத்
தாளதிரவுக்கதழைபோன்றனபறப்ப. ௬௨

கைப்படையிழந்தவரெதிர்ந்தவர்கடாவு
மெய்ப்படுபெரும்படைபறித்தெதிர்விடுப்பா
ரெப்பொருளுமற்றுழியுமேதிலர்கணல்கு
மப்பொருள்கொளேங்களெனுமானமுடையார்போல. ௬௩

வீடினர்வயப்பொருநர்வீடினவிபங்கண்
மூடினநிலங்குருதிமூடினபிணங்கள்
கூடினகருங்கொடிகள்கூடினபருந்து
மாடினமகிழ்ந்தலகையாடினகவந்தம். ௬௪

எங்கணுநிணங்குடரிறைச்சிகொழுமூளை
யெங்கணுமுரிந்தசிலைவாள்பலகையெஃக
மெங்கணுமிறுத்தகிடுகச்சுருள்கொடிஞ்சி
யெங்கணுமுடித்தலைநிமிர்ந்தனவிடங்கள். ௬௫

பிணங்களொடயர்ந்துவிழுபெற்றியரும்வீழ்தோட்
கணங்களொடுதண்டமும்விசித்ததடிவள்வார்
குணங்களொடுபுல்லியகொழுங்குடருமங்கேழ்
நிணங்களொடுபெண்டணியுநீத்தறியலாகா. ௬௬

மண்ணிடமெலிந்ததுபிணக்குவையின்வாளோ
னண்ணிடமெழிந்ததுடல்விட்டுறுநர்போழ்ந்து
விண்ணிடமெலிந்தவர்துன்னிமிடைவோரை
யெண்ணிடமெலிந்தனர்விசும்பினிமையாதார். ௬௭

மிடைந்துசமரின்னணம்விளைத்துழியிசைத்தேன்
குடைந்ததொடைவல்லவுணவீரர்வலிகுன்றி
யுடைந்தனர்நடுங்கினரொடுங்கினர்சிதர்ந்தா
ரிடைந்தனர்பெயர்ந்தனரிரிந்தனர்களெங்கும். ௬௮

கொச்சகக்கலிப்பா.

கள்ளவிழுமலர்வாவித்துவரைக்கோன்கடற்சேனை
மள்ளர்படைக்கல்லெறியான்வல்லாண்மைக்குடமுடைய
வுள்ளிருந்தணுண்டுகளிற்றனித்தனியேயிரிந்தோடி
நள்ளலான்பெருஞ்சேனைநகர்நோக்கிநடந்தனவால். ௬௯

கண்ணன்கணபதிமுதலியோரைவழிபடல்.

போர்தாங்குமறவீரர்பின்முடுக்கிப்போதரலுந்
தார்தாங்கிமுதல்வாய்தற்கடைமன்னுதவளமதிக்
கூர்தாங்குமொருகோட்டுக்குஞ்சரப்புத்தேள்காணூஉச்
சூர்தாங்கிவருபடையைத்தொலைத்துழக்கிச்சவட்டினன். ௭௦

கண்ணனுமற்றினியென்னேசெயலென்றுகடுகச்சென்
றுண்ணமைந்தபாலடிசில்கனிவருக்கமுறுசுவைய
பண்ணியங்களெனைப்பலவுமமுதுசெயப்படைத்திறைஞ்ச
வண்ணல்வயப்பகட்டேந்தலதந்தொழிலின்மகிழ்ந்திருந்தான். ௭௧

இதுகண்டுமற்றிரண்டாங்கடைவைகுமிளந்தோன்ற
லெதுமைந்தன்வருமென்றுசிலைவாங்கியேற்றெழலு
மதுவொன்றுமலர்த்துளவோன்பூசனையான்மகிழ்விப்ப
வதுகண்டுமகிழ்ந்திருந்தானறுமுகப்பண்ணவனும். ௭௨

இருவர்களும்விடையளிப்பவெழின்மூன்றாங்கடைநண்ணி
மருமலர்த்தார்க்கருங்கூந்தன்மலைமகளைக்கண்டிறைஞ்சித்
திருவருள்பெற்றினிதேகத்திகழ்நாலாங்கடைமேவு
முருகெழுவெஞ்சினவெள்ளேறுயர்த்தபிரான்கண்டனனால். ௭௩

முந்தைநாண்மைநாகமுதுநாகத்தருந்தவஞ்செ
யிந்தநாரணற்கெம்மான்யானேவந்துடன்றுழு
மைந்துமிகுஞாட்பின்கண்வாகைநீபெறுகென்னத்
தந்தவரம்பொய்யாமைப்பாதுகாத்தற்பொருட்டு. ௭௪

பிஞகழிநடுஞ்சிலையேந்தியெதிர்நிற்பப்பெருந்திருமா
லனாதியாயனந்தமாயானந்தமாயொளியாய்
மனாதிகளுக்கெட்டாதவான்கருணைப்பரம்பொருளைத்
தனாதுவிழிகளிகூரக்கண்டெய்தித்தாழ்ந்தெழுந்தான். ௭௫

நாத்தழும்பப்புகழ்பாடிநளினமலர்க்கைகூப்பிச்
சோத்தெந்தாயெனச்சொல்லியிமையவர்க்கேயருள்சுரந்து
காத்தருளுங்கடனுடையாய்கண்ணேடாவவுணர்குலத்
தீத்தொழிலான்றனைவெல்லத்திருவருள்செயெனக்கென்றான். ௭௬

என்றிரந்துநனிவேண்டுகொடியோனையெதிர்நோக்கிக
குன்றநெடுஞ்சிலைவல்லான்குறுமூரல்காட்டியெமை
வென்றஞ்றேவாணனைநீவிறலகொள்வதெம்மோடு
மன்றபோர்க்கெழுகென்னமணிவண்ணனுளநடுங்கி. ௭௭

என்னருளிச்செய்தவாறெவ்வுயிர்க்குமெளியேற்கு
மன்னவனீநாயனேடுமாறுழைப்பதெனக்கழகோ
வுன்னடிக்கீழ்மெய்த்தொண்டுபூண்டுரிமைப்பணிசெய்வேன்
றன்னிடத்திலிவ்வாறேசாமீநின்றிருவருளே. ௭௮

எந்தையடியருச்சனையாலெதிர்ந்தாரைப்புறங்காண
மைந்துபெறும்யானின்னேடமரேற்கவல்லுவலோ
பந்தமுறுமுலகனைத்துந்தொழிற்படுத்துநின்னெதிர்நின்
றுய்ந்தவருமுளரேயோவுபநிடதத்தனிமுதலே. ௭௯

எண்ணிகந்தவண்டமுழுதொருநொடியிலெரிக்குதவுங்
கண்ணமைந்தநுதலாய்கருக்கடையேனேரிலககன்றே
வண்ணமெலாம்யாங்காணநீநகைத்தமாததிரையே
யண்ணலார்புரமூன்றுங்கூட்டோடேயழிந்தனவால். ௮௦

துரும்பொன்றிற்புத்தேளிர்தருக்கெல்லாந்தொலைவித்தாய்
கரும்பொன்றுசிலையானைநுதல்விழியாற்கனற்றினாய்
சுரும்பொன்றுமலர்ப்பாதப்பெருவிரலாற்சுடரிலங்கை
யிரும்பொன்றுமனத்தானையிடருழப்பக்கண்டனையால். ௮௧

நோனாதகூற்றுவனைநோன்றாளாலுயிருண்டாய்
தேனுடுமலரானைநகநுதியாற்சிரங்கொய்தாய்
மீனுமைபன்றிநரவெறிமடங்கலுலகளந்தான்
றானுமென்பிறவிகளுந்தனையடிக்கப்பட்டனவே. ௮௨

தக்கன்றன்வேள்வியைநீதரவந்ததனிவீரன்
புக்கன்றியழித்தநாளென்னேடும்புத்தேளிர்
நொக்கன்றுபட்டபாடெடுத்தியம்பிற்சொல்லளவின்
மிக்கன்றாலுனக்கிவையும்விளையாடற்செய்கையே. ௮௩

அற்றமுறவெகுணடுவருமடற்கங்கைவீறடக்குங்
கற்றைநெடுஞ்சடையாய்மற்றெனைமுனியக்கருதினையேற்
சற்றுநீமுகநிமிர்த்துநோக்கினதுசாலாதோ
வெற்றிமலர்த்திருக்கரத்துப்படைக்கலமும்வேண்டுமோ. ௮௪

வடிவாளிவிடையேறுமனைவியெனநினக்குறுப்பா
மடியேனையெதிர்ப்பதுநின்னருட்பெருமைகொல்லுவதோ
குடியோடுமெனையடிமைகொண்டாயின்றெனக்கிரங்காய்
கடியாழிவிடமயின்றகண்டாநின்னடிபோற்றி. ௮௫

கண்ணனுங்கடவுளும்கைகலத்தல்.

என்றென்றுபலமுறையுமிரந்திரந்துதொழுதிறைஞ்சுங்
குன்றெடுத்தகுடையானுக்கெங்கோமானிதுகூறு
மன்றநீவெருவலைநின்மனக்கவலையொழிகண்டா
யன்றுனக்குமைநாகத்தளித்தவரமறந்தனையோ. ௮௬

நின்வரவு வாணனுக்கு முன்னரே நிகழ்த்தினம் ஐயா
மன்னவனை இனி நீ வென்று அடல்வாகை புனைகிற்பாய்
மின்னிமைக்கு மணிமார்ப விசையினொடு புரிவெம்போர்
முன்னெமக்கு முருகவேள் விளையாட்டிற் சிறந்ததால். ௮௭

அம்முறையே கணப்பொழுது நின்னோடும் அமர்புரிகே
மிம்முறை கண்டுலகும்பர் மகிழ்வுறுக விது வன்றித்
தெம்மரபிற் செய்கில்லேம் அஞ்சாதியெனத் தேற்றிக்
கைம்முகத்திற் பிடித்திருந்த சார் முகத்தை வணக்கினன். ௮௮

உய்ந்தேனெம்பெருமானே யருளாயென்றுரைத்துரைத்து
மந்தாரமணங்கமழு மலரடிகடொழுதிசைந்து
பைந்தாமநறுந்துளவப் பன்னகவணும்பகை முருக்குஞ்
சிந்தா தவிறற்சார்ங்கச் சிலைவாங்கினாமனை றிந்தான். ௮௯

கலித்தலைத்துறை.

பவளவெம்பொடு நீலமெவற்பெதிர்ந்தெனப்பருஉக்கை
கவளமாலகளிறட்ட வரிருவருங்கடுகித்
துவளவார்சிலைவாங்கினர் நாணெறிகும்மை
திவளலுறறமூவுலகமுறுஞ்செவிடுறப்பொதிந்த. ௯0

மணடுமோதையின் மற்றவர் சினக்கனலடுறநீர்
கொண்டவிப்பவான்வழிதிறந்தாலெனக்குலையா
வண்டம் விண்டதுபடியும் விண்டதப்பெருநீ
ருண்டலவேட்கையினுணங்கிவாய்பிளந்தனையொப்ப. ௯க

சிலையினொலிக்கிளர்ச்சியாற்றின்புவியதிர்வுந்
தலையுமூதையினுழிமானுடமரம்பறவை
பலவுந்தத்த முணமோதுபுதெளிதரப்பயிற்றுந்
தலைவரைப்படியப்படியுலகெனுந்தகுதி. ௯உ

மூள்சினத்துடனடுத்துழி முதல்வனென்றறிந்து
மீளநோக்கியரங்கம்பிரான்சரணமுன் வீழ
நீள்பெருந்தடங்குனிவரிச்சிலையிடைநெடியோன்
வாளியொன்று தொட்டேயினனருச்சனைமாண்பின். ௯௩

சதசித்திமாருகியவிருதிறத்தவருந்
தொத்தழற்கணைதூண்டினர் மூண்டதுபெரும்போர்
பைத்தமாநிலமயிர்த்ததுபணிவிசும்பிறுத்தார்
சித்தர்சாரணரிமையவரியக்கர்கந்தருவர் ௯௪

புட்டில்வீக்கியகரத்திடைப்பொருசிலைகுழையத்
தொட்டவாளிக்ளிறுதிநாண்முகில்லனச்சொரிவா
ரட்டதிக்கையுமடைப்பர்களகணத்தவைமாற்றி
முட்டவெங்கணைமீளவுமுடுக்குவர்தொலைப்பார். ௯௫

கடவுள்வான்படையெண்ணிலவழங்குவர்கடுநோய்
படரும்வெப்பொடுகுளிர்ப்பிணிபடைத்தெதிர்விடுப்பா
ருடலுமற்றவையொன்றினொன்றழிவுறக்காண்பா
ரடைவினின்னணம்விளைத்தனரற்புதப்பூசல். ௯௬

மூவருந்தொழுமுதல்வனேமுனோந்தனனினியென்
னுவதோவெனமுனிவரரஞ்சினரகில
தேவரஞ்சினர்பூதங்களஞ்சினதேவர்
கோவுமஞ்சினன்றிருவுளக்குறிப்பினையுணரார். கூஎ

இளிவில்வெஞ்சமரின்னணநெடும்பொழுதாற்று
மளவின்மற்றினியாற்றிலேனடியனேனென்னு
முளரிநோக்கினன்வணங்கலுமுறுவல்செய்தடியார்க்
கெளியனென்பதுவிளக்கினனென்னையாளுடையான். கூஅ

அடிகளேவைச்சென்றுளனவிறகுமண்சுமந்து
மடிபொறுத்துமோரரிவைதூதாற்றியும்வெள்கா
தடியரெண்ணமேமுடிப்பதுவிரதமாக்கொண்ட
வடிகள்வாகையிக்கண்ணனுக்களித்ததோர்வியப்போ. கூகூ

தம்பிரான்பெருங்கருணையின்சால்பினைநோக்கி
யும்பரார்த்தனருவணவேற்றிறைவனுமாவா
வெம்பிரானருளென்னிடையிருந்தவாறென்னென்
றம்பிகாபதியடிதொழுதானந்தமுற்றான். க00

கண்ணனும்வாணனும்கைகலத்தல்.

துண்டவெண்பிறைக்கண்ணியோன்போர்வினைதுறப்பக்
கண்டுவெஞ்சினந்தலைக்கொளீஇக்கனைகழலவுண
னண்டம்விண்டெனவார்த்தனன்மாயனையடுத்தான்
மண்டுதீச்சிலைவளைத்தனர்விளைத்தனர்பூசல். க0க

நூழில்வன்படையிருவருநெடுமொழிநுவல்வா
பாழிவன்புயம்புடைத்தெழூஉவஞ்சினம்பகர்வா
ரூழியீற்றனல்விழியுகச்சீறுவருலகைப்
பூழியாக்குவர்சாரிகைசுற்றுவர்பொருவார். க0உ

இனையமண்டமர்ஞாட்பிடையெம்பிரானருள்சேர்
வனைமலர்த்துழாய்வானவன்மதுகைமீக்கொண்டு
முனைவரிச்சிலைவாளிதேர்முடிகளையிறுத்துத்
தனியனுக்கினன்சலம்புரியவுணருக்கிறையை. க0ங

கண்ணன்கண்ணுதல்கட்டளைவழிச்செயல்.

கருப்புத்துண்டெனநூற்றுப்பத்தடுக்கியகனகப்
பொருப்புத்தோள்களையரிவுழிமதனுடல்பொடித்த
நெருப்புக்கண்ணினனெதிரெழுந்தருளிநீள்கருணை
மருப்புக்குஞ்சரங்காத்தவன்மேற்செலவழங்கி. க0ச

கண்ணனேயிதுகேட்டியிக்கனைகழலவுண
னன்னல்வாய்மையுன்போலெமக்கன்புமிக்குடையா
னெண்ணம்வாய்ப்பநம்பூசையினமைந்ததோளிரண்டும்
வண்ணவாண்மலர்வதனமுமரிதலோம்பென்றான். க0ரு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றவாய்மொழிகேட்டலுந்தொழுதெழுந்தியாதவர்குலத்தோன்றன்
மன்றமாமறைமுழுவதுமுழுவதுமுருத்திரனெனுமாற்று
லொன்றுமன்பொடுமுன்னடியருச்சனையுஞற்றினேனெமையெல்லா
நன்றுபூசனையியற்றியோனுதலினுற்காம்விடுத்தேனால். க0சு

அடியனேன்பிழையாவையும்பொறுத்தருளையனேயெனத்தாழ்ந்து
கொடியின்மேல்விடையுயூர்த்தவனுணையிற்குடவளைக்குடங்கையான்
மடிவில்வாணனைக்கேண்மைகொண்டாங்கவன்மகளைத்தன்மகனின்ற
விடலைசேர்வுறமணம்புணர்த்துடன்கொண்டுமீண்டனன்றன்மூதூர்.

வாணன்முத்திநிலையடைதல்.

ஐயிரண்டினிலுறழ்தருமும்முறையமாகத்துடைந்தெள்ள
லெய்தினனெனப்பட்டவன்றனைக்கொண்டேயிவன்செருக்கறக்கண்டான்
செய்யச்செய்திடாதொழிய்வேமுன்றனைச்செய்யவும்வல்லோனும்
பையராவணிபண்ணவன்பெருமையையாவரேபகர்கிற்பார். ௧௦௮

கருவிமாமுகின்மேனியோனகன்றபின்கனங்குழையுமைபாக
மருவுநாயகன்வாணனைநோக்கிநின்மணிப்புயக்கண்டுதி
யொருவினைய்கொலாமெனக்குறுநகைமுகிழ்த்துரைத்தலுமுடிசாய்த்துப்
பெருமமற்றினிவீடுபேறளித்தியென்றிரந்தனன்பெருநேசன். ௧௦௯

முத்திவேண்டுமேற்காஞ்சியினெய்தினீமுன்னைமைநிறீஇப்போற்று
மத்தலத்திடைப்பெறுதியென்றருள்புரிந்தகன்றனனெங்கோமான்
பத்திமேதகுவாணனுங்காஞ்சியிற்படர்ந்துதான்றொழுதேத்து
நித்தனாருளாற்கணத்தலைமைபெற்றனன்றநிலைபெற்றான். ௧௧௦

வரிச்சிறைச்சுரும்புளார்தரக்குவிமுகைமுறுக்குடைந்தலர்வாசம்
விரித்தநெட்டிதழ்ப்பங்கயப்பொய்கைசூழ்வியத்தகுவாணீச
மருச்சனைக்குரிமரபினிற்போற்றிசெயடியவர்கருத்திமை
நரிச்சுநீங்கமெய்ப்பெருநலக்கிழமைவீடெய்துவர்நமராங்காள். ௧௧௧

வாணீசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௭௬௧.

# 38. திருவோணகாந்தன்றளிப்படலம்.

கலிவிருத்தம்.

பேணவல்லார்பிறவிதீர்த்தருள்
வாணநாதமரபுசொற்றனம்
யாணர்வண்மைபெறுமிதன்குணக்
கோணகாந்தன்றளியுரைத்துமால். ௧

மருவலார்தாழ்வாணன்றன்னுடைப்
பொருவில்சேனைத்தலைமைபூண்டவர்
தருமவாற்றினின்றொழுகுதானவ
ரிருவரோணன்காந்தனென்றுளார். ௨

வன்புபூண்டமனவகப்படா
வென்புபூண்டவிறைவர்தம்மடிக்
கன்புபூண்டவறிவின்மேலவர்
துன்புபூண்டதொடர்புநீக்குவார். ௩

ஓங்குகாஞ்சியூரைநண்ணினர்
தேங்குதெண்ணீர்த்தீர்த்தந்தொட்டனர்
பாங்கிலிங்கம்பதிட்டைசெய்தன
ராங்கணன்பிற்பூசையாற்றினர். ௪

ஆற்றுமிருவரன்புநோக்கிய
நீற்றுமேனிநிமலனம்மையோ
டேற்றின்மேலாற்காட்சியீதலும்
போற்றியின்பப்புணரிமூழ்கினர். ரு

கரையில்காதல்கைமிகத்தொழும்
புரையிலார்க்குப்பொங்குவெள்ளிமால்
வரையினாரின்னருள்வழங்கிநீ
ருரைமின்வேட்டவரமென்றோதினர். சு

கைகள்கூப்பிக்கண்கணீருகச்
செய்யபாதந்தொழுதுசெப்புவா
ரையனேமெய்யறிவுதந்தெமை
யுய்யக்கோடியுனக்கடைக்கலம். எ

இனையதீர்த்தமாடியெம்பெயர்
புனையிலிங்கம்போற்றப்பெற்றவர்
நினைவுமுற்றுநிரப்பியீண்டுநீ
யெனையநாளுமினிதுவைகுவாய். அ

என்றுபோற்றுமிருவர்க்கன்னவை
மன்றலொற்றைமாவினீழலா
னன்றுமங்கணல்கிவைகினா
னன்றுதொட்டஃதற்புதத்தலம். கூ

திருவோணகாந்தன்றளிப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கசஎ0

# 39. சலந்தரீசப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

ஓணனார்க்கரியவரோணகாந்தன்றளி
நீணகர்மேன்மையைத்தெரிந்தவாநிகழ்த்தினா
மாணமர்காட்சிசான்மற்றதன்வடதிசைப்
பேணியசலந்தரீசத்தியல்பேசுவாம். க

சலந்தரன்வரம்பெற்றுப்போருக்கெழுதல்.

சலத்திடைத்தோன்றியோன்சலந்தரப்பெயரிய
குலப்புகழ்த்தானவன்கோநகர்க்காஞ்சியி
னலச்சிவலிங்கமொன்றமைத்துநாளுந்தொழு
துலப்பருமெய்த்தவமுஞற்றினனவ்வுழி. உ

காட்சிதந்தருளியகண்ணகன்மாநிழ
லாட்சியார்த்தொழுதெழுந்தாண்மையுமுதுகையு
மாட்சிசாலிறைமையுமாற்றலர்த்தெறுதலு
மீட்சியின்றருளெனவேண்டினான்பின்னரும் ௩

நின்னலாலென்னுயிர்நீப்பவரின்மையுந்
துன்னருமுத்தியிச்சூழலிற்பெறுவதும்
பின்னல்வார்ச்சடையினாயருளெனப்பெற்றுமீண்
டன்னவாறுலகுதன்னடிப்படுத்தாளுநாள். ச

இந்திரன்முதலியவெண்டிசைக்கிறைவரைக்
கந்தமென்மலர்மிசைக்கடவுளைவென்றுபின்
பைந்துழாய்க்குரிசிலைப்பன்னகப்பகையொடும்
வெந்திறனாகபாசத்தினால்வீக்கினான். ௫

சிறையிடைமாட்டினன்சிற்சிலநாட்செல
வறைகழல்வானவர்வணங்கிநின்றவுணனைக்
குறையிரந்தனையனைக்கொண்டுமீண்டேகினார்
பிறையெயிற்றவுணனும்பெருமிதத்துறையுநாள். ௬

இறுதிநாளடுத்தலினெறுழ்விடைப்பாகனைத்
தெறுவலென்றெழுந்துயர்கயிலையைச்சேறலு
முறுதுயர்ச்சிறையிடையுறையுநாளன்னவன்
பெறுமனைக்கிழத்தியைக்காமுறும்பின்னைகோன். எ

திருமால்பிருந்தையின்சாம்பழிப்புறல்.

அற்றமீதென்றறிந்தம்மனைப்புறமுறத்
துற்றபூம்பொழிலிடைத்தூத்தவவடிவுகொண்
டுற்றிடக்கண்டனளொசியிடைப்பணைமுலை
முற்றிழைதாழ்ந்துமுன்னின்றிதுவினவுவாள். அ

நற்றவத்தடிகளீர்நதிமுடிக்கடவுளைச்
செற்றுமீள்வேனெனச்சென்றவெங்கொழுநர்பால்
வெற்றியோதோல்வியோவிளைவதொன்றறிகிலே
னெற்றிதுமொழிமினீரென்னமால்கூறுவான். ௯

அஞ்சுபூதங்களுமவற்றிடைப்பொருள்களும்
பஞ்சுதீப்பட்டதுபடவிழிதிறந்தருள்
செஞ்சடைப்பகவன்முன்சென்றெவருய்ந்துளார்
புஞ்சவெள்வளையினையறிந்திலைபோலுநீ. ௧0

அன்னபேராளனோடமரினுக்கேகலாற்
பன்னகப்படமெனப்பரந்தகலல்குலா
யுன்னுடைக்கேள்வனும்பொன்றுவானுண்மைகா
ணென்னவாய்விண்டனன்வளைகரந்தெய்தினான். ௧௧

கலிநிலைத்துறை.

அந்தவெல்லையோர்தானவன்பங்கிசோர்ந்தலையச்
சந்தமென்புயத்துகிலுடைசழங்கவேரொழுக
வுந்துநெட்டுயிர்ப்பெறியமெய்நடுக்குறவோடி
வந்துதோன்றிவாய்புலரநின்றின்னதுவகுப்பான். ௧௨

இறைவிநின்றனிக்கொழுநனீள்கயிலையினிளவண்
டறைகடுக்கையான்றனையறைகூவுமவ்வளவி
னறைமலர்க்கரக்கணிச்சியனேக்கினனமது
நிறைகடற்பெரும்படையெலாநீற்றினனதன்பின். ௧௩

பரிதிமண்டிலமாயிரமெனக்கதிர்பரப்பு
முருவவாழியொன்றாக்கினனொளிருமப்படையாற்
பொருவலித்திறற்சலந்தரன்பொன்றினனதனை
வெருவிநீளிடைக்கண்டுமீண்டித்தலைப்போந்தேன். ௧௪

என்றவாய்மொழிகேட்டலுங்கொம்பரையிழந்த
மன்றலங்கொடிபோற்கிடந்தலமருமயிலை
வென்றிவேள்படைதுளைத்திடமெலிவுறுநெடியோன்
சென்றுபற்றினன்றிருந்திழைகுறித்திதுசெப்பும். கரு

மனனுகேள்வனையிழந்துளேன்வைகன்மூன்றகன்ற
பின்னைநின்மனைக்கிழத்தியேய!குவல்பெரும
வென்னவஞ்சித்துநீங்கினண்மனையகத்தெய்தி
வன்னிபுக்குயிர்விடுத்தனள்கற்பினில்வழாதாள். கசு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஏம்பலோடுறையுமாயனித்திறமுணர்ந்தானந்தச்
சாம்பரிற்புரண்டுபேய்க்கோட்பட்டவர்தம்மின்மாழ்கித
தேம்பினனையாள்செலவத்திருவுருவுளத்திற்றீட்டி
யோம்பினனென்செய்வானங்குழிதந்தானெடுநாளிப்பால. கஎ

பெருமான்திருவருட்பிரசாதங்கொடுத்தல்.

இமையவர்பலருமாலையெங்கணுந்தேடிக்காணார்
சிமையநீள்கயிலைநண்ணித்திருவடிவணங்கிக்கூற
வமையெனத்திரண்டுநீண்டுபசந்தணியிலங்குபொற்றோ
ளுமையொருபாகத்தெங்கோனவன்றறமுணர்ந்துசொலலும். கஅ

சொற்பயில்கமலைகேள்வன்சலந்தரன்றுணைவியாய
கற்பினிற்சிறந்தகாமாவிருந்தையைகாமுற்றன்னாள்
பொற்புருவிழந்தவீமப்பொடியிடைக்கிடக்கின்றாளை
விற்பொலிவிசும்பின்வாழ்க்கைவிணணவர்கேண்மினென்ன. கசு

பாயபல்லுலகுமீன்றபனிவரைப்பிராட்டிமேனிச்
சேயொளிக்கலவைச்சாந்தினழுக்கினைத்திரட்டிநல்கி
நீயிரிங்கிதனையந்தநீற்றிடைவித்துவீரேன்
மாயவன்மயக்கந்தீர்க்குமரங்கண்மூன்றுளவாமென்றான். உ0

விண்ணவரதனையேற்றுவிடைகொடுவணங்கிப்போந்து
தண்ணகைவிருந்தைவீந்தசாம்பரின்வித்தலோடு
மண்ணலந்துளவமங்கேழமலவிநீளகத்திமூன்றுங்
கண்ணெதிர்தோன்றக்கண்டான்கரியவன்மகிழ்ச்சிகொண்டான்.

மென்றுணர்தலவந்தன்னைவிருந்தையாத்துணிந்துபுல்லிக்
குன்றருங்கழுமனீங்கிக்குலவுதன்னிருக்கைசார்ந்தான்
றுன்றுபூந்துழாய்முன்மூன்றுந்துவாதசிவழுத்தப்பெற்றோர்க்
கன்றினர்க்கடந்தமாயோனருள்சுரக்குமன்றே. உஉ

சலந்தரன்முத்தியிற்சலத்தல்.

தடவரையிகந்ததிண்டோட்சலந்தரன்கயிலைவெற்பில்
விடமிடற்றிறையால்வீந்துவியனகர்க்காஞ்சிவைப்பிற்
படரொளிப்பிழம்பாய்த்தோன்றிப்பரசுதன்னிலிங்கமூர்த்தத்
துடனுறக்கலந்தானன்னோன்பெருமையாருரைக்கவல்லார். உஙு

[illegible]தரிசப்படலமுற்றிற்று.

[illegible]கத்திருவிருத்தம் - கசகூ.

# 40. திருமாற்பேற்றுப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வணங்குநர்க்கிருமைப்பேறுமேன்மையின்வழங்கியெங்கோ
னிணங்கியசலந்தரீசவரவினையெடுத்துச்சொற்று
மணங்களுராடல்பாடன்முழக்கறாவணிநீள்வீதிக்
கணங்கெழுதிருமாற்பேற்றுக்கடிநகர்ப்பெருமைசொல்வாம் ௧

திருமால்சக்கரம்பெறவர்ச்சித்தல்.

குவலயங்காவல்பூண்டகுப்பனெனுமரசற்காகச்
சிவநெறித்ததீசியோடுஞ்செருச்செய்நாள்விடுத்தவாழி
தவமுனிவயிரயாக்கைதாக்கிவாய்மடிதலோடுங்
கவலுறுமனத்தனாகிககடுஞ்சமர்துறந்தமாயோன். ௨

இனிப்படைபெறுவதெவ்வாறென்றுவாளவுணர்க்காற்றாப்
பனிப்புடையிமையோர்தம்மையுசாவினன்படைகட்கெல்லாந்
தனிப்பெருங்குருவாயீசன்சலந்தரன்மடியக்கண்ட
சினப்பொறிசிதறுந்தீவாயத்திகிரியொன்றுளதென்றோர்ந்தான். ௩

உவகைமீதூரவிண்ணோர்க்கோதினனிதனைவேண்டிச்
சிவனடிபரசினின்னேதிருவருள்சுரக்குமென்னு
வவரொடும்போந்துகாஞ்சியணிநகர்வடமேல்பாங்கர்த்
துவரிதழுமையாள்போற்றுஞ்சுடரொளியிலிங்கங்கண்டான். ௪

சேயிழைக்கவுரிசெங்கைதைவரச்சிவந்துதோன்றிப்
பாயொளிப்பவளக்குன்றமெனப்பெயர்படைத்துநான்கா
மாயிரமுகங்களங்கணருந்தவர்வழுத்தவைகு
நாயனார்தமைக்காண்டோறுநாரணனிறும்பூதுற்றான். ௫

நிறைபெருங்காதல்கூரவாயிடைநியமம்பூண்டு
மிறைவழியிகந்துபாசுபதத்தனிவிரதமாற்றி
முறைபெறுவெண்ணீறங்கமுழுவதும்பொதிந்துபாசப்
பொறைதவிர்த்தருளுமும்மைப்புண்டரநுதலிற்றீட்டி. ௬

கண்டிகைமாலைபூண்டுகதிரொளிபரப்புமாழித்
திண்படைபெறுதல்வேண்டிச்சங்கற்பஞ்செய்துகொண்டு
விண்டலத்திமையோரங்கண்வேண்டுவவெடுத்துநல்க
மண்டுபேரன்பாற்பூசைவிதியுளிவழாதுசெய்வான். ௭

மாயிருங்கமலப்போதுகைக்கொண்டுமாட்சிசான்ற
வாயிரந்திருநாமத்தானித்தலுமருச்சித்தேத்தி
மேயினன்றிருமாலன்னோன்பத்தியின்விளைவுகாண்பான்
பாயிரமறைகடேறாப்பரம்பொருளொருநாளங்கண். ௮

வேறு.

நறைவாருமிதழ்துறுத்தசெழும்பொகுட்டுநளினமாயிரத்திலொன்று
மறைவாகத்திருவுள்ளம்வைத்தருளக்கருவிமுகில்வாட்டுமேனி
யிறையோனும்பண்டுபோற்பவன்முதலாமாயிரம்பேரெடுத்துக்கூறிக்
குறையாதபேரன்பிற்பதுமமலர்கொடுபூசைபுரியுமெல்லை.

பன்னுமொருதிருப்பெயர்க்குநறுங்கமலங்காணாமைப்பதைத்துநோக்கி
யென்னினிமேற்செயலென்றுதெரிந்துணர்ந்துதனதுவிழியிடந்துபெம்மான்
கொன்மலர்த்தாண்மிசைச்சாத்திக்களிகூர்த்தானுறுப்பினையுங்கொடுப்பதல்லான்
மென்மையுறத்தாங்கொண்டவிரதத்தைவிடுவர்களோகொள்கைமேலோர்.

சிவபெருமான்சக்கரங்கொடுத்தருள்செய்தல்.

பாறிலகுமழுப்படையோன்மாயவன்றனன்பினெருப்பாடுநோக்கி
மாறிலாப்பெருங்கருணைபூற்றெடுப்பச்செழுஞ்சோதிமலரப்பாங்கர்
நூறியோசனையளவுமெரிகொளுந்தநோக்கரும்பேருருவுதாங்கி
யீறிலாக்கதிரிரவிமண்டிலநின்றிழிந்தெதிரேகாட்சியீந்தான்.

இறைவரவுகண்டஞ்சிப்புடைமருவுமிமையவரோட்டெடுப்பநோக்கி
நிறையுவகைதலைசிறப்பத்திருநெடுமாலிருநிலத்தின்வீழ்ந்துதாழ்ந்து
முறைமையினலட்டாங்கபஞ்சாங்கமுறவணங்கிமுடிகையேற
மறைமொழியிற்றுதித்தாடியானந்தவிழிமாரிவெள்ளத்தாழ்ந்தான்.

ஆங்கவனையெதிர்நோக்கிநின்பூசைக்ககமகிழ்ந்தேமுனக்கின்றொன்று
தேங்கமலவிழியளித்தேம்பதுமாக்கனெனும்பெயரிற்றிகழ்வாயிவ்வூர்
பாங்குபெறுதிருமாற்பேறெனப்பொலிகவென்றருளிப்பானுகோடி
தாங்குகதிர்ச்சுதரிசனப்பெயராழித்தனிப்படையுமுதவியெங்கோன்.

வெல்லரியசெறுநரையுமிப்படையால்வெல்வாயாலீண்டுநின்றும்
சொல்லியபேராயிரங்கொண்டெமைப்பூசைபுரிவார்க்குத்துகடாத்தென்று
மெல்லையிலாவீடளிப்பேமிங்கிவையன்றியுந்தீண்டச்சிவந்தாராதிப்
பல்குபெயர்கொண்டெம்மைத்தொழுவோருமுத்தியினிற்படாவாருண்மை.

தணிவொன்றுமனமுடையார்புகழ்தீண்டச்சிவந்தபிரான்சாதரூபர்
மணிகண்டர்தயாநிதியார்பவளமலையார்வாட்டந்தவிர்த்தார்பாசப்
பிணிவிண்டசாகிசனர்திருமாற்குப்பேறளித்தாரெனுமபேரெட்டு
மணிகொண்டவாயிரம்பேர்க்கொப்பனவாமறிமதியென்றருளிச்செய்தான்.

நம்பிரான்வாய்மலர்ந்தமொழிகேட்டுப்புண்டரிகநயனத்தோன்றல்
செம்பதுமத்தாளிறைஞ்சிச்சென்னிமிசைகரங்கூப்பிச்செங்கின்றேத்தி
யெம்பிரானிங்கருட்கணப்பொழுதுவதிந்தவர்க்குமிறவாவாழ்க்கை
யும்பர்வீடளித்தருளாயின்னுமொருவரமடியேற்குதவாயென்று.

வள்ளலேயென்பூசைகொண்டருளுமிவ்விலிங்கம்வணங்கப்பெற்றோர்
பள்ளநீர்வரைப்பினுளசிவலிங்கமெவ்வெவையும்பணிந்தபேறு
கொள்ளவருளெனவேண்டவேண்டுவார்வேண்டியதேகொடுக்குமெங்கோ
னெள்ளருஞ்சீர்நெடியோனுக்கவையனைத்துமருள்செய்தவ்விலிங்கத்துற்றான்.

கொழிக்குமணித்தடந்திரைநீரிலஞ்சிதொறுமினவாளைகுதித்துப்பாயச்
செழிக்கும்வளம்பொழிற்காஞ்சிப்பலதளியுண்மேதகையதிருமாற்பேற்றின்
வழிச்செலவினொருபோதுவதிந்தவருமாறுதபிறவிப்பாச
மொழிப்பரெனிலெஞ்ஞான்றுமங்குறைவோர்தமக்கினியென்னுரைக்குமாறே.

திருமாற்பேற்றுப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஙகக.

# ௪௧ பரசிராமீச்சரப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுழிபாடுபெடுமுந்திமலைமகளுமயோர்கியருந்துழாயினனும்
வழிபாடுசெயவைகுமணிகண்டர்மாற்பேறுவகுத்தாம்பண்கள்
கொழிபாடற்சுரும்பினஞ்சூழ்மருப்பொதும்பர்மாற்பேற்றின்குணபால்வேந்தா
பழிபாடிக்கொலைசெய்தோன்பரசிராமீச்சரத்தின்பான்மைசொல்வாம்.

இரேணுகைகொலையுண்டெழுதல்.
சிவம்பழுத்தபிருகுமுனிமிடுஞ்சாபத்தொடர்ச்சியினுந்திருமான்முன்னாட்
டவம்பழுத்தாலனையசமதக்கினியோடிரேணுகைக்குத்தயனுகி
யவம்பழுத்தகுறும்பெறியுமிராமனெனவைகுறுநாளன்னைபாலோர்
நவம்பழுத்ததீங்குணர்ந்துதன்றாதைதனையேவகாடித்தேறி.

தாதைமொழிகடவாமைதருமமெனத்தனையீன்றவளர்த்ததாயை
யேதமுறக்கொலைசெய்துமுனியருளான்மீண்டுய்யவெழுப்பியின்றான்
மேதகையமுனிமகிழ்ந்துவெகுளிதனையறவிடுத்துச்சமாதிமேவும்
போதவனைவெகுண்டெய்திக்காத்தவீரியன்கோறல்புரிந்தான்மன்னே.

பரசுராமன்தவமுதுற்றல்.
மிடல்படைத்ததிரடிண்டோளிராமனதுநோக்கிநெடுவெகுளிமீக்கொண்
டடல்படைத்தவயவேந்தர்குலமுழுதுமிறுப்பேனென்றார்த்துப்போக்கிக்
கடல்படைத்தவிடமயின்றோனருள்வேண்டிவிரைந்தெய்திக்கலந்தார்தங்க
ளுடல்படைத்தபேறெய்துங்காஞ்சியினேரிலிங்கமமைத்தருச்சித்தேத்தி.

ஆற்றரியதவமாற்றியைம்புலனுமகத்தடக்கியமர்ந்தானுகக்
கீற்றிளவெண்பிறைக்குழவிநவழுநெடுஞ்சடிலமுடிக்கிழவோனங்காண்
மாற்றரும்பேரருட்கருணைகூர்ந்தருளியவனன்பின்வாய்மைகாண்பான்
றோற்றமுறுமறைதேறாத்திருவடிகணிலந்தோயவருகின்றானல்.

பெருமான்புலைவேடங்கொள்ளல்.
கலிவிருத்தம்.

மால்வரையீன்றவயங்கிழைமாது
நூல்வரைமார்புடைநோன்றகைமாவும்
வேல்வலனேந்தியவித்தகனுந்தன்
போல்வடிவந்தழுவிப்புடைநண்ண.　　சு

நான்மறைவள்ளுகிர்நாய்புறஞ்சூழக்
கான்மலர்சேர்த்தசெருப்பெழில்காட்ட
வூன்மலிகாழகமீதிலுறுத்த
தோன்மலிகச்சணிதோன்றிவிளங்க.　　எ

ஏரியல்கொனடசுவன்மிசையிட்ட
வாரினனுட்குடையினன்மாணைச்
சீரியல்கோக்கொலைசெய்புலையன்போ
லாரிருண்மைத்தனமேனியனாகி.　　அ

வெங்கதிருச்சியின்மேவியகாலை
யங்கலுழ்பூம்புனலாற்றிடையெய்திப்
பங்கமில்செய்வினைபான்மைதொடங்கும்
புங்கவமாதவன்றன்னெதிர்போந்தான்.　　கூ

பெருமானும்பரசுராமனும்வாதம்புரிதல்.
கொட்குமனத்தையொருக்கியகொள்கை
வட்குறவைம்பொறிவாட்டுமிராமன்
கட்கமழ்கின்றகளிப்பினனாகித்
துட்கெனநேர்வருசோதியைநோக்கா.　　க0

வாய்திறவாதுமலர்க்கையசைப்பிற்
சேயிடையேகெனச்செப்பலுமுக்க
ணையகனண்மையினண்ணினன்போபோ
நீயெனவிள்ளவுநீங்கலனாகி.

வேறு.

மாயனெனோன்முகன்மனக்குகனிதேயோ
னயவிறைசாலவணிமைக்கனுறலோடுந்
தூயமுனிசிற்றமொடுசொல்லுமறவாய்மை
போயபசுவூனுகரிழிந்தபுலையாகீ. கஉ

தருக்குறுவதென்னையிதுதண்டமதுசெய்வா
ரொருத்தரிவணில்லையெனவுன்னினைகொலென்றான்
மருத்துணர்நெடுஞ்சடைமறைத்துவருபெம்மா
னருத்தமறைநாய்கடமையேயினனவன்பால். கங

கொற்றவடிவேறகடவுள்கோளிபமுகத்தோ
னுற்றெழுவெகுட்சியரிஞேடியிருகையும்
பற்றினர்கணுய்புடைவளைப்பவிருபாலர்
வெற்றியுறுகைப்படுவிழுத்தவனைநோக்கி. கச

கலிவிருத்தம்.

அந்தோபாவமையமிரக்கும்பார்ப்பானீ
நொந்தாய்போலுமென்றுநுவன்றங்கிமவெற்புத்
தந்தாள்வெவ்வாய்நாயைவிலககத்தவனோன்பி
னந்தாவாய்மையிராமனுநம்மான்முகநோக்கி. கரு

வேறு.

எனைப்புடையுற்றாய்தீண்டுவதென்னீதறனன்றா
லுனக்கிதுபாவங்காணெனவெங்கோனுறுபாவ
நினக்குளதோசொலெனக்குளதோநீதான்யாரே
யெனக்கொருகேள்போற்றோன்றிடுகின்றாயெனவன்னோன். கசு

என்னிதுசொற்றனையான்சமதக்கினியென்பான்ற
னன்மகனுகுவனீபுலையோனெனைநாணுமே
யுன்னுறவாகவுரைத்ததுநன்றெனவொப்பில்லான்
மன்னியசீர்ச்சமதக்கினிதன்மகனீயேயோ. கஎ

கழியவெனக்குறவாயினையையமிலைக்கண்டாா
யிழிவறநின்னையளித்தவிரேணுகையென்பாளென்
பழுதறுசீர்மனையாட்கினியாளாம்பரிசாலே
விழுமியநீயுமெனக்கினியாய்காணெனவிண்டான். கஅ

இராமனெருப்பெழநோக்கிவெகுண்டனனெல்லாரும்
பராவுறுவேதியனென்னெதிர்பார்த்திதுசொற்றாய்க்கு
விராவியதண்டமுனக்கரிவிக்குமதேயன்றித்
தராதலமேற்பிறிதில்லெனலோடுந்தலைவன்றான். ககூ

யாவருமச்சுறுதாய்கொலையென்றுசெய்மாபாவி
யோவிலருட்குணமொன்றிலையென்புடைவல்லாயே
யாவரிவாய்சிரமும்மரிவாயினிநாணுய்கே
ளோவறுகேளிர்தமைத்தழுவாதவராருள்ளார். உ0

பாம்புடனேனும்பழமைவிலக்கார்தமராஞேர்
வேம்பினையொப்பக்கைப்பினும்விள்ளாருலகத்தோர்
தோம்பலபேசிச்சுற்றம்வெறுக்குங்கொடியோனைத்
தேம்பிடும்வண்ணஞ்செற்றிடல்வேண்டுமெனவெம்பி. உக

பெருமானும்பரசிராமனும்கைகலத்தல்.

சுணங்கனையெல்லாமேற்செலவேவித்துரிசோதிக்
கணங்கெழுகல்லுமோடுமெடுத்துக்கடிதோச்சி
யணங்கொருபாலானெறிவுழியம்மாமுனிவெந்தீ
யிணங்கவெகுண்டான்றண்டமெடுத்தான்புடைவீசி. உஉ

ஞாளிகடம்மையதுக்கினனள்ளலரூர்செற்ற
மீளியின்மேற்செலவிட்டனன்வேழமுகக்கோனக்
கோளுறுதண்டமுரித்திருகூறுபடுத்திட்டான்
காளியொடாடியகண்ணுதலவெய்யகதங்காட்டி. உங

வன்மொழிகூறிப்புலையர்தொழுத்தைம்கனுநீ
யென்மகனேவத்தண்டமெறிந்தாய்தெய்வத்தா
லன்னதுபக்கதுதாய்கொலையஞ்சாயருளில்லாய்
நின்னையினிக்கொல்வேனெனநேர்ந்தான்காமோச்சி. உச

நேர்ந்திடுகாலையினீண்மறைஞானிகண்முன்னகச்
சார்ந்துதுரந்துமுடுக்கலுமத்தகையானச்சய்
கூர்ந்துபதைப்புடனேடினன்வெண்சிறுகூன்றிங்கள்
வார்ந்தசடைப்பெருமானும்விரைந்துதொடர்ந்துற்றான். உரு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஒற்றையங்கரத்தாற்பற்றிக்கோடலுமுடையான்றீண்டப்
பெற்றுமெய்ப்புளகம்போர்ப்பப்பெரிதுளமகிழ்ந்தானிச்சீர்ப்
பற்றியுமிழிஞன்றீண்டப்படுபெருஞ்சங்கைகொண்டு
முற்றவெந்துயரின்மூழ்கிவெகுண்டனன்மொழிதலுற்றான். உகா

மறிகடல்வரைப்பின்யாங்கணுயினுமறையோன்றன்னைப்
பொறியிலியிழிந்தவாழ்க்கைப்புலைமகன்வெருவாமே
செறியழுக்கடைந்தகையாற்றீண்டுமேயவ்வச்சாதி
பிறிவினிற்பிறழாவண்ணம்பிஞ்ஞகனடாத்துங்காலை. உஎ

இன்னினியுனதுசென்னியிறுவதுதேற்றங்காண்டி
புன்னெறிக்குலத்தோயென்னப்புகன்றுதன்னுளத்தேவெம்பிப்
பன்னரும்புலையன்றன்பாற்பட்டுளேனந்தோசிசி
யென்னுடைத்தவமும்யானுமழிந்தவாறெனப்புழுங்க. உஅ

விழிபயினுதலுமுந்நீர்விடம்பொதிமிடறுங்கூர்வாய்
மழுமறிக்கரமுஞ்செங்கேழ்வடிவமுங்கரந்துசாலக்
கழிபுலைவேடந்தாங்கியெழுந்தருள்கருணைத்தோன்ற
லிழிவறுமிராமன்கூற்றுச்செவிமடுத்தினையசொல்வான். உகூ

வடுவறுமறைவலாளர்மரபினையெனில்யான்றீண்டப்
படுகுவையல்லைநீதான்பார்ப்பனக்கடையனுவை
யடுதொழிற்புலையன்யானவ்வொழுக்கினிற்சிறந்தவாற்று
விடுகிடைத்தாயைக்கொன்றேயென்னினுங்கடையனீகாண். ௩௰

இழிஞருக்கிழிஞனையெனக்குநீயடிமையெய்திக்
கழிபெருமகிழ்ச்சிகூர்வாயுனக்கியான்களைகணுவேன்
மொழிவதுசரதமென்றானவ்வுரைமுனிவன்கேளாப்
பழியுறுகதையிற்றாக்கப்புடைமரவென்னப்பொங்கி. ௩௧

அண்ணலைமலர்க்கையோச்சியடித்தனனமர்தோற்
புண்ணியமுதல்வன்றானும்பொருக்கெனமுனிவன்றன்னைத்
திண்ணியவிரண்டுகையுஞ்சிக்கெனவொருகைபற்றிக்
கண்ணறக்கொடிறுவீங்கப்புடைத்தனன்கமலக்கையால். கஉ

முறைமுறையிரத்தாக்கியிருவருமுனைந்துவெம்போர்
மிறையுறப்புரிதலோடுமெல்லியற்பிராட்டிநோக்கி
யிறைவனின்னடிக்கீழன்பினினியவன்வருந்தவண்ணம்
பொறைகொளப்புடைத்தியென்றாள்புனிதனுமெலிதிற்றாக்க. கங

கடனறிமுனிவன்வாகைதனதெனக்கருதிவாங்கும்
வடவரைச்சிலையோன்மார்பிற்கரங்கொடுவலிதிற்றாக்கி
மிடலுறத்தெழித்தானாகவிண்ணவர்க்கரியகோமான்
கெடலருஞ்சினமீக்கொண்டான்போன்மறைக்கிழவன்றன்னை. கச

கன்றிடக்கரங்கள்காலிற்பிணிப்புறக்கட்டிநோன்றா
ளொன்றினாலுருட்டிச்சேணினுந்தினனவனைவேத
வன்றிறன்ஞாளிசுற்றிவளைந்தனமருங்குநின்ற
வென்றிகொண்மைந்தர்நோக்கிவிலாவிறச்சிரித்திட்டாரால். கரு

திருவிளையாட்டானண்ணல்சேவடிக்கமலத்துந்தப்
பருவருமுளத்தனாகிப்பசும்புதல்செறியநீண்ட
தருவடித்தலத்தினாவிசாம்பினானைத்துவீழ்ந்தான்
மருமலர்க்கருமென்கூந்தலிரேணுகைமைந்தனம்மா. கசா

அடங்கருந்துயரத்தாழுமவ்வுழிவேரிக்கஞ்சத்
தடம்புனல்குடைந்துவாசந்தாங்கிமென்மலர்ப்பூஞ்சோலை
யிடந்தொறும்வதிந்துவீழ்ந்தாரின்னுயிர்தளிர்ப்பச்செல்லு
மடந்தையரென்னமெல்லப்படர்ந்ததுமலையத்தென்றல். கஎ

தேம்பொதியிளங்கான்மேனிதைவரத்தெளிவுதோன்றி
மேம்படுமயர்ச்சிநீங்கவிழித்துணைவிடுத்துநோக்கித்
தேம்பினானிடும்பைக்கெல்லையாயினான்றிரியாச்சிந்தை
யேம்பலின்மறையோனெஞ்சத்திவையிவையெண்ணலுற்றான். கஅ

பரசிராமன்பரிதபித்தல்.

கலிவிருத்தம்.

மறையொழுக்கம்வழாநெறிவாய்மையோர்க்
கிறைவனாமுனிவன்குலத்தெய்தினே
னிறையவேதமுமங்கமியாயமு
முறையினேதினன்மூவறுகல்வியும். ககூ

பன்னெடும்படையாவும்பயின்றுளே
னின்னனாயவெனக்கிதுகாலையின்
முன்னைவல்வினைமூட்சிவிளைந்தவா
றென்னபாவமெவரிதுதாங்குவார். உ0

என்னையீன்றவள்வெம்பழியெய்துநீஇக்
கொன்னுமென்னாற்சிரங்குறைபட்டனள்
பின்னரெந்தையும்பேதையரசனாற்
சென்னியிற்றாச்சினந்தனனம்மவோ. உக

ஈண்டுமற்றுமிழிஞன்புலைக்கரந்
தீண்டியென்னையவமதிசெய்திட
மூண்டவெம்பழிமூழ்கியுமையவோ
மாண்டிலேனுயிர்வல்வினையேனரோ. சஉ

கவளமாகக்கடல்விடமுண்டருள்
சிவனையேத்துநர்செல்லலுறார்களாம்
பவனடித்துணைபற்றியுமென்னிடர்க்
கவதிகண்டிலனற்புதமற்புதம். சங

இன்பஞ்செய்தலிற்சங்கரனெம்பிரா
னின்பமாக்கலிற்சம்புவிடும்பைநோ
யென்பதோட்டுமியல்பினுருத்திர
னென்பராலவையென்னிடைபொய்த்தவோ. சச

பேதைநீரிற்பெரும்பிழைசெய்துளே
னாதலாலிவ்வருந்துயரெய்தினேன்
பூதநாதனைப்போதப்பழிச்சியென்
னேதந்தீர்வலெனத்துணிந்தேத்துவான். சரு

வேறு.

மூவாதபடைப்புமுதற்றொழிலந்
தோவாமையியற்றியுயிர்த்தொகைக
டாவாமலேமூன்றுமறத்தருவா
யாவாவடியேனுன்னடைக்கலமே. சசு

படியாதியபற்பலதத்துவமாய்க்
குடிலாந்தமகன்றகுருஉச்சுடரே
முடியாமுடிவேமுதலாமுதலே
யடிகேளடியேனுன்னடைக்கலமே. சஎ

உமையாளொருபாலுடையாய்முறையோ
விமையாசலவில்லிறைவாமுறையோ
வமையாவிடமுண்டமைவாய்முறையோ
தமைநாடினர்தந்தலைவாமுறையோ. சஅ

கச்சிப்பதியெய்துபுநின்கழல்க
ணச்சிப்பணிசீர்நரர்வானவரு
ளிச்சித்தபெறாதவரேயெனினும்
பொச்சத்தொடுபோயினர்தாமுளரோ. சகூ

உளையுஞ்சிறியேனிடருன்னலையோ
களைகண்பிறகண்டிலனெம்பெருமா
னிளையாதினியேனுமிரங்கிடுவாய்
முளைவாநன்மதிவேய்ந்தமுடிச்சடையோய். ருO

பெருமான்காட்சிகொடுத்தநளல்.

கலிநிலைத்துறை.

என்றின்னபழிச்சியிரந்தயர்கின்றமேருக்
குன்றன்னதவத்தவனன்பினளாயகொன்றை
துன்றுந்துதிவார்த்தைசெவித்துணையேற்றுநின்று
நன்றும்பெரிதுள்ளமகிழ்ந்தருணங்கைபாகன். ருக

அன்னனெதிரவ்வுருமுன்னுருவாகத்தோற்றித்
தன்னேர்வடிவங்கொடிருந்திழைத்தையலோடு
மின்னார்வடிவேற்படைவிண்ணவன்வேழப்புத்தே
ளென்னுவருமைந்தரொடுந்திருக்காட்சியீந்தான். ௫௨

கண்டான்முனிவன்கழிகாதலடுக்கமச்சங்
கொண்டானெழுந்தான்றுனிகூருமிடுக்கண்முற்றும்
விண்டானுவகைக்கடன்மூழ்கிமருட்கைமேவித்
தண்டாதவன்பிற்பெருமானிருதாள்பணிந்தான். ௫௩

பணிந்தான்றனையொல்லையெடுத்தணைத்துப்பனிகோ
டணிந்தானருள்கூர்ந்துநம்பக்கமிருத்துமன்பிற்
றுணிந்தாயுளம்வேட்டதுசொல்லுதியென்னவுள்ளந்
தணிந்தார்வமுறக்கரமஞ்சலிசார்த்திநின்று. ௫௪

பின்றாழ்சடிலத்திறையோய்பிழையொன்றுமில்லா
வென்றாதையாகுஞ்சமதக்கினியென்னுமஞ்சும்
வென்றான்றனையேகயவேந்தனருச்சுனன்றான்
கொன்றானவனைக்குலத்தோடறக்கொன்றழித்து. ௫௫

எந்தைக்கவர்தங்குருதிப்புனலங்கையேந்தி
நிந்திப்பறுதர்ப்பணமாற்றியசிந்தைநேர்ந்தே
னந்தத்திறலுன்னடியேற்கருளென்னவையன்
வந்திக்குமழுப்படைமீதுகடைக்கண்வைத்தான். ௫௬

திருவுள்ளமுணர்ந்துகணிச்சிதிருந்துதன்கூற்
றொருதிண்படையாக்கவுவற்கதுநல்கியெங்கோன்
பெருவெண்களிறாளிதடுப்பினும்பேணலாரைச்
செருவின்கண்விடாதுசெகுத்தனைவெற்றிகொள்வாய். ௫௭

பரசுப்படைபெற்றனையப்பெயர்பற்றிவாழ்கென
றரவச்சடையங்கணனின்னருள்செய்யுவன்றேன்
மரபிற்றொழுதிவ்விலிங்கத்துமகிழ்ந்துவாழ்வாய்
புரமட்டருள்புண்ணியவிப்புனலயாறுமூழ்கி. ௫௮

கற்றைக்கதிர்வெள்ளொளிகான்றிருட்கட்டறுக்குங்
கொற்றச்சசிநாணமுதனாள்களிற்கொள்ளுமென்பேர்
பற்றிப்பயிலிவ்விலிங்கம்பணிந்தன்பர்க்கேன்ற
தற்றைப்பகனல்குபரெய்துகவாக்கம்வீடு. ௫௯

எனவேண்டிவணங்கிவணங்கியெழுந்தகாலை
முனிவன்றனக்கவ்வரமுற்றும்வழங்கிமூரிப்
பனிமால்வரைநல்கியபைந்தொடிமைந்தரோடு
மனலங்கைகொளண்ணல்கரந்தபினங்கணீங்கி. ௬௦

முனிவன்முனிவன்மழுவான்மணிமோலிவாய்ந்த
சினவெம்படைவேந்தர்தமைச்செருவிற்படுத்துக்
கனலன்னசெழுங்குருதிக்கயநீரிறைத்திட்
டினமன்னுபிதிர்க்கடனாற்றிமெய்யின்பமுற்றான். ௬௧

அப்பொற்பினருட்சிவலிங்கமெய்யன்பினங்க
ணெப்பெற்றியரேனுமிறைஞ்சினிறைஞ்சுமுன்னர்க்
கைப்பட்டதோராமலகக்கனிபோலவீடுஞ்
செப்பற்கரிதாகியசெல்வமுமெய்திவாழ்வார். கூ௨

பரசிராமீச்சரப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஎ௪.

# ௫௨. இரேணுகீச்சரப்படலம்.

கலிவிருத்தம்.

கொங்கவிழ்நறுமலர்க்கொன்றைவேணியன்
றங்கியபரசிராமீச்சரஞ்சாற்றினு
மங்கதன்றென்புடையலைநதிக்கரைப்
பொங்கர்சூழிரேணுகீச்சரத்தைப்போற்றுவாம்.

இரேணுகைகாமமுறுதல்.

கரேணுகதிப்பரைகணவனன்பரா
தரேணுகவசமுடற்றுங்கிநேர்ந்தமன்
னரேணுகவெல்பரசிராமனம்புதா
யிரேணுகையென்பவளழகினெல்லையாள். ௨

விச்சைதேர்பெற்றியவருமவேந்தனார்
மெச்சியவரத்தினிற்றோன்றுமெல்லிய
லச்சமதக்கினிமனைவியாயினள்
பொச்சமில்கற்பினிற்பொலியுமேன்மையாள். ௩

மனையறக்கிழமையினொழுகுமாணிழை
நனைமலர்க்குழலியோர்ஞான்றுபொய்கையிற்
கனைதிரைத்தடம்புனல்கவரப்போந்துழி
வினைவழிக்கண்டனன்காத்தவீரியன். ௪

காண்டலுங்காமவேள்கணைக்கிலக்கமா
யாண்டகையவளொடிரணுகிகின்றனன்
மாண்டதன்புறவடிநோக்குமாதரா
ளீண்டுபேரழகுடையிறையைநோக்கலள். ௫

இனிச்செயலெவ்வனெனவெண்ணிவேந்தர்கோன்
புனற்குமேல்விசும்பிடைப்பொலிந்துதோன்றினன்
பனித்தநீர்ப்பரப்பினப்பதகனிழலை
முனிக்குரிமாபினண்முந்திநோக்கினள். ௬

காமனுஞ்சிறிதுதன்மதுகைகாட்டினன்
பூமலர்க்கூந்தலாளுளத்தைப்பொள்ளென
வாய்மையிற்றன்வழிப்படுத்துமாண்குடத்
தாமுகந்தெடுத்துமீண்டகத்தைநண்ணினள். ௭

பரசிராமன்தாயைக்கொன்றெழுப்புதல்.

எதிருறப்போந்துழிமுனிவரேறனன்
மதிமுகமனைவிபாணித்தவாற்றினைக்
கதுமெனவறிவினிற்கருதித்தேர்ந்தனன்
முதுநெறிகோடியமூர்க்கன்செய்கையே. ௮

வடவையின்வெகுண்டுதன்மகனைநோக்கினன்
படர்புகழிராமனிற்பயந்தபூங்குழல்
கடல்புரையெழினலங்காமுற்றண்மினன்
விடமெனத்தோன்றியகாத்தவீரியன். ௯

ஆங்கவனிளமையுமரசுமாற்றலு
நீங்கருமடமையுநிறைந்தநீர்மையா
லீங்கிவட்பற்றுவனெம்மையெண்ணலா
னோங்குயர்குணத்தினோயுரைப்பக்கேட்டியால். ௧௦

என்னுடையாணையினிற்றியேயிவள்
சென்னியைத்தடிமதிவிரைந்துசெல்கெனத்
தன்னுடைக்குருமொழிசிரத்திற்றாங்கின
னன்னையைக்கொடுபுறத்தணுகினனரோ. ௧௧

அல்லலேபெண்ணெனப்பிறத்தலாங்கதி
னல்லலேயிளமையிற்சிறத்தலாங்கதி
னல்லலேகட்டழகுடைமையாங்கதி
னல்லலேயிரவலர்சார்பினுகுதல். ௧௨

அரங்குறைபடுத்தவாளங்கையேந்திநல்
லுரங்குறைபடுத்திடாவுறுவனன்னைதன்
சிரங்குறைபடுத்துமீண்டெய்தித்தேசிகன்
வரங்குறைபடுத்திடாவடிவணங்கலும். ௧௩

துன்பமுற்றருந்தவனிரங்கிச்சொல்லுவான்
வன்பெருமன்னவன்மகட்குமைந்தனீ
யென்பதுமென்னிடத்தன்புமின்றியா
னின்புடைக்கண்டனனறிவினீடியோய். ௧௪

என்னுரைநிறுவினையேனுந்தாய்கொலை
நன்மையன்றுலகமும்பழிநவிற்றுமென்
றன்னுரைப்படியவணைகித்தாழ்குழல்
சென்னியைப்பொருந்துறச்சேர்த்தெழுப்பியே. ௧௫

பொன்னடிவணங்கியஞ்சலித்துப்போற்றியெ
னன்னைநின்கருத்தினுக்கடுத்தவாறுசெல்
கென்னவங்ககற்றியீண்டெய்துவாயெனத்
தன்னுடைத்திருமகற்கியம்பித்தாபதன். ௧௬

சமதக்கினியைக்காத்தவீரியன்கொலைசெய்தல்.

வெகுளியேயுயிர்க்கெலாம்விளைக்குந்தீவினை
வெகுளியேகுணந்தவம்விரதமாய்க்குமால்
வெகுளியேயறிவினைச்சிதைக்கும்வெம்மைசால்
வெகுளியிற்கொடும்பகைவேறொன்றில்லையால். ௧௭

என்றிவைதன்மனத்தெண்ணிவெஞ்சின
மொன்றறத்துறந்தினிதுறையுங்காலையப்
புன்றொழில்வேந்தனஃதுணர்ந்துபொள்ளென
வென்றிமாதவன்சிரந்துணித்துமீண்டனன். ௧௮

இரேணுகைசிவபூசைசெய்துதெய்வமாதல்.

மதலையிருவிபெற்றகன்றமாணிழை
யிதமுறுகணவனையிழந்ததுன்பிரு
னுதலருமகன்வரப்பேறுநோக்கியப்
புதல்வனதிசைவுபெற்றூங்குப்போயினள். ௧௯

இளங்களிவண்டினமிமிரும்பூம்பொழில்
வளங்கமழ்காஞ்சியைமருவிமைந்தனு
ருளங்கொளவழிபடுநகரினூங்குற
விளங்கொளிச்சிவக்குறிவிதியிற்றாபித்தாள். ௨௦

மகவிடத்திருத்துபோன்பின்மாட்சிமை
தகவுறப்பூசனைதவாதுபல்பக
லகமுறப்புரிவுழியருளியாங்கெதிர்
நகமடப்பிடியொடுநம்பன்றோன்றினன். ௨௧

நுண்ணிடையிரேணுகைமடந்தைநோக்கினு
ளுண்ணிகழ்காதலினுருகிக்கைதொழூஉ
வண்ணமென்குயிலினஞ்சமழ்ப்பவாய்திறந்
தண்ணலைப்பழிச்சிநின்றறைதன்மேயினள். ௨௨

ஏதமிலுயிர்த்தொகையெவற்றினுக்குநீ
தாதைதாயிமவரைத்தையலாகுமாற்
கோதறுமிருமுதுகுரவர்மாட்டெவர்
மேதகுமானம்விட்டியம்பிடாதவர். ௨௩

கலிநிலைத்துறை.

அடியனேன்பலதிறத்தினும்பரிபவமடைந்தேன்
பொடிகொண்மேனியாயிங்குனைப்பூசனைபுரியும்
படியிலாப்பெருவாழ்வுபெற்றெய்தினேன்படியோர்
கடிதராதருள்வைத்தெனைக்காப்பதுன்கடனால். ௨௪

புகழுமாக்கமுமுத்தியுமுயிர்க்கருள்புராண
னிகழுமின்னலுந்தவிர்ப்பவனிருண்மலக்கிழங்கை
யகழுநாயகன்யாங்கணுநிறைந்தவனடியார்
திகழுமன்பினுக்கெளியவன்சிவபிரானென்றும். ௨௫

கொழுநன்யாரினுமினியவனென்றுகூறுவரக்
கொழுநனிவ்வுடற்குரியவன்குறிக்கிலாருயிர்க்குக்
கொழுநன்றந்தைதாய்செல்வமுமேனவுங்கொன்றைக்
கொழுநனைத்தொடைக்குளிர்சடைச்சிவபிரானென்றும். ௨௬

இனையவாயினபெருமகளெடுத்தெடுத்தெனக்கு
வினையினீங்குமென்கணவனுடொறும்விரித்துரைக்கு
மனையகிற்றெருழுதுய்ந்துளாரளவிலாரடியேன்
றனையனுக்குமீண்டரும்பெறற்பேறுதந்தளித்தாய். ௨௭

ஐயனேயடியேனையுங்காத்தருளசலத்
தையலேசகமுழுவதுமளித்திடுந்தாயே
யுய்யுமாறெனைக்காத்தருளுநமைச்சரணடைந்தேன்
பொய்யர்சிந்தையினகப்படீர்போற்றியென்றிரந்தாள். ௨௮

அம்மையப்பராயிலமும்புரந்தருள்கருணைச்
செம்மலார்நகைமுகிழ்த்தெழத்திருவுளமகிழ்ந்தே
யெம்மைவேட்டவைவிளம்புதியிமயமீன்றளித்த
கொம்மைமென்முலையுனக்கவைதருமெனக்கூற. ௨௯

அன்பினேத்தினின்றிரேணுகையணியிழைவேண்டு
மென்பணிக்கினியாய்நனிவிழுத்தகவெய்தித்
துன்பமெண்ணிலபட்டயான்றாயநின்னருளான்
மன்பதைக்கெலாம்வழிபடுதெய்வமாய்வயங்கி. ௩0

போகமவ்வவர்வேண்டியபுணர்ப்பெலாங்கண்கூ
டாகநல்குபேறெனக்கருளிவ்விலிங்கத்தி
னேகநாயகவினிதமர்ந்திருமையுமெவர்க்கு
நீகனிந்தருள்புரிமதியெனநிகழ்த்துதலும். ௩௧

அண்ணலாருமைகூற்றினலவட்கவையுதவி
மண்ணின்மேற்கலியுகத்துறுமானிடர்கருது
மெண்ணமெண்ணியாங்கியாவையுமிழிகுலத்துள்ளார்
நண்ணிவேட்டனசாலமிக்களிப்பவுநல்கி. ௩௨

கொம்பனுள்பெறத்தெய்வதத்திருவுருக்கொடுத்துக்
கம்பனூர்மலைமகளொடுங்கரந்தருள்செய்தார்
வம்புவார்குழலிரேணுகைமடந்தையப்பொழுதே
யம்புவிக்கொருதெய்வதமாயினளம்மா. ௩௩

கலிவிருத்தம்.

காதராவணியினுள்பலகைவாட்கையினுள்
போதராசன்முதல்பலகணம்புடையுற
வேதராசிகள்பயில்விரிபொழிற்காஞ்சியின்
மாதராளாயிடைத்தெய்வமாய்வைகினுள். ௩௪

எண்ணியாங்குதவிசெய்திரேணுகையீச்சரத்
தண்ணலார்பெருமையாரளவிடற்பாலரே
கண்ணுமிக்காதையைக்கற்றுரைப்போரையவ்
வொண்ணுதற்றெய்வதமூறுசெய்யாதரோ. ௩௫

இரேணுகேச்சரப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௬0அ.

## 43· யோகாசாரியர்தளிப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

உரவுநீர்ச்சடைமுடிப்பகவனுருமையொடும்
விரவிவாழிரேணுகையீச்சரம்விளம்பினும்
பரசிராமீச்சரத்தெனுதுபாலியோகமாக்
குரவர்சூழ்பஃறளித்திறனினிக்கூறுவாம். ௧

சுவேதனேசுவேதகேதுக்கருத்தொடர்பிலாச்
சுவேதசிகன்சுவேதாச்சுவன்றூயசீர்ச்
சுவேதலோகிதனொடுஞ்சுதாரனேசாதனஞ்
சுவேதநீற்றணியொளிர்துந்துமிமுதலியோர். ௨

ஏயுமெய்த்தவமருவிலகுளீசன்முதி
வாயினோர்மற்றுமெண்ணில்லவரிலமும்
பாயசீர்யோகமர்க்குரவர்கள்படைமழுத்
தூயவன்கூற்றினிற்றோன்றியோரிவர்கடாம். ௧

யோகமாக்குரவர்தம்முயர்பதத்தெய்தவு
மோகவல்வினையுறுமுததியின்வைகவும்
போகுவெண்கயிலையின்மெய்த்தவம்புரிவுழி
யேகநாயகனவர்க்கெதிரெழுந்தருளியே. ௨

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அம்மநீர்கச்சிமூதூரணுகிமாநீழல்வைகு
மெம்மடிவழுத்திவெவ்வேறிலிங்கமங்கிருத்திப்போற்றி
மம்மர்தீர்தவங்களாற்றிவைகுமினுண்டுநுங்க
டம்மனக்கருத்துமுற்றத்தருதுமென்றருளிச்செய்தான். ௩

மற்றவர்தொழுதுபோற்றிவள்ளலைவிடைகொண்டேகி
முற்றிழைமகளிர்நலலாருடலினுகுத்தமுத்தங்
கற்றைவெண்ணிலவுகான்றுகனையிருள்பருகுநீண்ட
பொறறடநெடுந்தேர்வீதிபொலிதிருககாஞ்சிநண்ணி. ௪

முழங்கிசைருதிமிறுபாயமுகைமுறுக்குடைந்துநீந்தேன்
வழங்குபூங்கமலத்தெண்ணீர்மணிச்சிவகங்கைதோய்ந்து
பழங்கணையறுக்குமாவிற்பகவனைவழிபாடாற்றித்
தழங்கொலிமறையினூற்றாற்றனித்தனியிலிங்கஞ்செய்தார். ௫

முன்பொருகாலத்தங்கண்முதல்வனைத்தொழுதுமுந்நாற்
றைம்பதிற்றைவர்யோகாசாரியராகிமுத்தி
தம்பதமாககொண்டாரவரெனத்தாமுமன்பி
னம்பனைத்தத்தம்பேராலத்தகநிறுவிப்போற்றி. ௬

கறையணிமிடற்றுப்புத்தேளகருணையாலுகங்கடோறு
நிறைபுகழ்படைத்தயோகாசாரியநிலைமையெய்திக்
குறைவிலாமுததிபெற்றாராங்கவர்குலவிப்போற்று
மிறையவன்றளிகள்யார்க்கும்வீடுபேறெளிதினல்கும். ௭

வென்றிகொளினையவெல்லாம்பரசிராமீச்சரத்தின்
றென்றிசைதொடங்கிச்சாற்வதீர்த்தத்தின்வடபால்காறு
மொன்றறுஞ்சுவேதலிங்கமுதலிலகுளிசமீறாத்
துன்றிடுமிவற்றுண்மேலாச்சொலப்படுமிலகுளீசம். ௰

யோகாசாரியர்தளிப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௬௪௬.

## 44. சருவதீர்த்தப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருட்கொடும்பிறவிமாற்றுமிலகுளீச்சரமீறாகத்
தருக்கறுகாட்சியோகர்சாரியர்தளிகள்சொற்றாம்
மருத்துதைமலர்மேற்பூத்தவளம்புனல்குடைவோர்தங்கள்
கருத்தவிர்சருவதீர்த்தக்கரைபொலிதலங்கள்சொல்வாம்.

காமீச்சரம்.

குடவளையலறியின்றகுரூஉமணித்தாளக்குப்பைப்
படலைவெண்ணிலவுகான்றுபடரிருளிரிப்பஞாங்க
ருடைதிரையொதுக்குந்தெண்ணீரொலிபுனற்சறுவதீர்த்தத்
தடநெடுங்கரையிற்காமீச்சரமெனுந்தலமொன்றுண்டால். உ

கருப்புவிற்குழையவாங்கிக்கடிமலர்ப்பகழிதூண்டு
மருப்பிளங்கொங்கைச்சேனையடல்வலிக்காமன்முன்னாண்
மருப்பொதியிதழிக்கோமான்மனத்திடைப்பிறந்தானையன்
றிருப்பதமிறைஞ்சிப்போற்றிசெய்துமற்றிதனைவேண்டும். ௩

மகப்பயில்பிறவிக்கேதுவாகிவண்புணர்ப்புநல்கி
யிகப்பில்சிரிரதிக்கென்றுமினியனாய்க்கொடுப்போர்கொள்வோ
ரகத்திருந்தினையசெய்கையாற்றியென்னாணைமூன்று
சகத்தினுஞ்செலுத்தும்பேறுதந்தருளென்னக்கேட்டு. ௪

மற்றெமக்கினியமூதூர்வளம்பயில்காஞ்சியங்க
ணுற்றெமைவழிபட்டேத்தியூங்குவைபெறுகென்றெங்கோன்
சொற்றலும்விரைந்துகாஞ்சித்தொன்னகரெய்திக்காம
னற்றமில்சறுவதீர்த்தத்தடந்திரையலைக்குங்கோட்டின். ரு

தவாதபேரன்பிற்காமீச்சரன்றனையிருத்திப்போற்றி
புவாமதிமுகத்துமென்றூளொள்ளிழையுமையாடன்னைக்
கவான்மிசைக்கொண்டபெம்மான்கண்ணருள்கிடைத்துநெஞ்சத்
தவாவியபேறுமுற்றுமங்கிலையெய்தினால். ௬

ஏதமிலுயிர்களெல்லாந்தோற்றுதற்கேதுவாகிக்
கோதறத்தானமீவோன்கொள்பவன்றானுந்தானாய்
மேதகுமிறைமைபெற்றுவிளங்கினன்மறையோரேற்கும்
போதுளத்தவனையெண்ணிற்புரைதவிர்ந்துய்வாரன்றே. ௭

தீர்த்தீச்சரம்.

பரவினோர்விழைந்தகாமப்பயனளித்தருளுங்காமீச்
சரநகர்வந்தவாறுசாற்றினமிதன்பாலாகப்
பரிதிமான்றடந்தேரீர்க்கும்பரிக்குளம்பிடறிப்போய
திருமணிச்சிகரக்கோயில்வயங்குதீர்த்தீசமுண்டால். அ

குழையுதைநெடுங்கட்செவ்வாய்க்கோமளச்சயிலப்பாவை
விழைதகத்தழுவுமாற்றால்விரிசினைத்தனிமாநீழன்
மழைதவழ்மிடற்றுப்புத்தேள்வருகெனவிளித்தனான்று
தழைபுனற்றலைவனோடுந்தடநதிவடிவந்தாங்கி. ௯

விழுமியவண்டத்துள்ளும்புறத்தினும்விரவுந்தீர்த்த
முழுவதுந்திரண்டுகாஞ்சிமுதுநகர்க்குடபாலெய்திக்
கொழுமலர்த்தனிமாநீழற்குழகனையுமையாள்வல்லைத்
தழுவலுமெழுந்தவேகந்தணிந்துமீட்டல்கியங்கண். க0

கலைமதிக்குழவிமோலிக்கடவுளைத்தீர்த்தராசத்
தலைவனென்றிருத்திவீங்குந்தடம்புனலருவிக்குன்றச்
சிலைநுதற்பிடியினோடுமருச்சனைதிருந்தச்செய்ய
மலையினைக்குழைத்ததிண்டோள்வள்ளலுமெதிரேநின்று. கக

இற்றைஞான்றுதியாகநும்மிடத்தெய்திமூழ்கிச்
செற்றமின்முனிவர்விண்ணோர்தென்புலவாணர்தங்கட்
குற்றநீர்க்கடன்கணல்கியுறுபொருளுறுநர்க்கீந்து
மற்றெமையீண்டுக்காண்போர்முத்தியின்மருவுச்செய்கேம். கஉ

இன்னமும்புகலக்கேண்மினெனப்பெருங்கருணைகூர்ந்து
தன்னிகர்பிராட்டியாரத்தழீஇக்கொளச்செய்தவாற்று
லன்னதற்கியையக்கைமாறளிப்பவனென்னவங்கேழ்ப்
பொன்னவிர்சடையோன்றீர்த்தப்புனல்களுக்கிதனைநாட்டும். கக

கொலைகளிற்கொடுமைசான்றபார்ப்பனக்கொலைவல்வீரக்
கொலைகருக்கொலைதாய்தந்தைக்கொலைகவைக்கோட்டுநல்லான்
கொலைமுதல்பிறவுநீங்குங்கொடுவினைப்பாசத்தெவ்வைக்
கொலைபுரிமரபினும்பாற்குடைந்தெமைத்தொழப்பெற்றோர்க்கே. கச

முரிதிரைசுருட்டுதெண்ணீர்நும்மிடத்தொருகான்மூழ்கி
விரிபுகழ்த்திருவேகம்பம்விழைதகக்காணப்பெற்றோ
ருரிமையினன்றநாற்கூற்றுறுதியும்பெறுவர்மீள
வரிவையரகட்டுளெய்தாதெம்மருளகட்டின்வாழ்வார். கரு

என்றிதுங்றுவித்தீர்த்தநாயகனிலிங்கத்துற்று
னன்றுதொட்டங்கண்மேவுமலங்கொளிச்சருவதீர்த்தத்
தின்றடம்புனலின்மூழ்கியெழில்வளர்திருவேகம்பஞ்
சென்றுகண்டிறைஞ்சப்பெற்றோர்செய்கொலைத்தீமைதீர்வார். கசு

சருவதீர்த்தப்பெருமை.

தந்தையைச்செகுத்தபாவந்தணந்தனன்பிரகலாதன்
முந்தையோர்ச்செகுத்தபாவம்வீடணன்முழுதுந்தீர்ந்தான்
மைந்துடைப்பரசிராமன்வீரரைவதைத்தபாவஞ்
சிந்தினன்சருவதீர்த்தச்செழும்புனல்குடைந்துபேற்றால். கஎ

அருச்சுனன்றுரோணமேலோனுயிர்ச்செகுத்தபாவம்
பிரித்தனனசுவத்தாமன்பெறுங்கருச்சிதைத்தபாவ
மிரித்தனனுலகிலின்னுமெண்ணிலர்சருவதீர்த்தத்
திருப்புனல்குடைந்துதீராக்கொலைவினைத்தீமைதீர்ந்தார். கஅ

சிலைநுதன்மகளிர்மைந்தரின்றுமத்தெண்ணீர்மூழ்கிற்
கொலைவினைப்பாவந்தீர்வார்குரைகடற்பரப்பென்றெண்ணித்
தலைவருமுகிலின்கூட்டந்தனித்தனிவாய்மடுக்கு
மலைபுனற்சருவதீர்த்தப்பெருமையாரளக்கற்பாலார். கசு

கங்காவரீச்சரம்.

மற்றதன்கரையின்கீழ்பால்வருணனெம்பெருமான்றன்னை
முற்றிழைக்கங்கையாளோடிருத்திமுன்றொழுதுநீரு
ளுற்றுறையுயிர்க்குநீர்க்குமொருதனித்தலைவனாகப்
பெற்றனனதன்பேர்கங்காவரமெனப்பிறங்குமாலோ. உ0

விசுவநாதீச்சரம்.

பாற்றினமிடைந்தகூர்வாய்ப்படைமழுக்குடங்கைப்புத்தேண்
மாற்றருங்கருணைமுன்னீர்வாரியினிறைந்துதேங்கு
நாற்றிசையணவுஞ்சீர்த்திநளிபுனற்சருவதீர்த்த
மேற்றிசைக்கரைக்கண்மேவும்விச்சுவநாதத்தானம். உக

மலர்தலையுலகின்முக்கண்வானவனினிதுவைகுந்
தலமெலாமருவுங்காஞ்சிவிச்சுவநாதன்றன்பாற்
கலிபுகழ்விசுவநாதமுதல்வனுங்காசிதன்னி
லிலகொளிமாடக்காஞ்சிநகரெமக்கினிதென்றெண்ணி. உஉ

வெள்ளிவெண்கயிலையாதியிடங்களின்மேன்மைசான்ற
வள்ளலம்பழனக்காஞ்சியணிநகர்ச்சருவதீர்த்தப்
பள்ளநீர்க்கரைக்கணெய்திவைகினன்பரிவாலங்கண்
வள்ளலைத்தொழுதுமுத்திமண்டபங்காண்போர்முத்தர். உ௩

முத்தீச்சரம் - முத்திமண்டபம்.

மண்டபவருநாள்செல்லாக்காஞ்சிமாநகரின்மூன்று
மண்டபந்திகழுமுத்தீச்சரத்தெதிர்வயங்குமுத்தி
மண்டபமொன்றுசாற்வதீர்த்தத்தின்மருங்குமுத்தி
மண்டபமொன்றுகண்டோர்தமக்கெலாம்வழங்குமுத்தி. உ௪

இராமீச்சரம் - பரமாநந்தமண்டபம்.

உருவமென்கமலம்பூத்தவுயர்சிவகங்கைத்தென்பாற்
றிருவிராமீச்சரத்துச்சிவபிரான்றிருமுன்னாக
விருவினைப்பிறவிக்கஞ்சியெய்தினோர்க்குறுபேரின்ப
மருவுறும்பரமாநந்தமண்டபமொன்றுமாதோ. உ௫

மண்டபமினையமூன்றும்வைகறையெழுந்துநேசங்
கொண்டுளநினையப்பெற்றோருணர்வெலாங்கொள்ளைகொண்ட
பண்டைவல்வினையின்வீறும்பற்றியமலங்கண்மூன்றும்
விண்டுபேரின்பவெள்ளவேலையிற்றிளைத்துவாழ்வார். உ௬

சருவதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கசுசச.

## ௪௫. நவக்கிரகேசப்படலம்.

கலிநிலைத்துறை.

தழங்குபெரும்புனற்பரவைச்சருவதீர்த்தத்தடங்கோட்டின்
முழங்குமறித்திருக்கரத்துமுதல்வனிடங்களெடுத்துரைத்தாம்
வழங்குவளிக்கடவுளுமொன்பதிற்றுக்கோளும்வழிபட்ட
குழங்கனறுந்தொடைக்கொன்றைக்குழகன்றளிகளினிப்புகல்வாம். க

பைத்தலைப்பூண்வயிரவனூர்பணைத்தடங்தோளந்தகனை
முத்தலைச்சூலத்தலைநின்றிழித்தஞான்றுமுழங்கழல்வா
யத்தகைத்திண்சூலத்தாலகழ்ந்தசூலத்தடந்தீர்த்த
மித்தரைக்கட்சிறப்பெய்துமுவாவிலங்நீரினிதாடி. உ

தென்புலத்தோர்கடன்செலுத்திலனையர்துறக்கஞ்சென்றெய்தி
யின்புறவாரதன்கரைக்கணிலிங்கமமைத்துமருத்திறைவன்
மென்பனிநீர்செவ்வந்திவேரிச்செழும்பூப்பலகொண்டு
வன்பகலவழிபட்டுக்கந்தவாகனெனப்பெற்றான். ௩

மருத்தேத்துஞ்செவ்வந்தீச்சரமால்வரைப்பின்வடகுடக்காந்
திருத்தேத்துக்கதிர்ப்பரிதிச்செல்வன்பரிதிக்குளங்கொட்டிக்
கருத்தேய்த்துவீடளிக்குமங்கீராட்டிக்கருதாரு
ருருத்தேத்துஞ்சுரர்க்கருளுமொளியைத்தொழுதுவரம்பெற்றான். ௪

வீங்கிருள்சீத்தொளிபரப்பிப்பைங்கூழ்புரக்கும்வெண்கதிரோன்
றேங்கமலமுகையவிழ்க்குஞ்சுறுவதீர்த்தத்தென்றிசையி
ளுங்கணுறுஞ்சுவைத்தெள்ளாரமுதத்தடங்தொட்டதன்கோட்டிற்
பாங்குபெறப்பிஞ்சகன்றுளருச்சித்தேத்திப்பயன்பெற்றுன். ரு

நலமொன்றுசெவ்வந்தீச்சரக்கீழ்ஞாங்கரேழிலிங்க
நிலமைந்தன்மதிமைந்தன்வியாழம்வெள்ளிநீடுசனி
யலமந்தவிருபாந்தளருச்சித்தருங்கோணிலைபெற்றுர்
வலம்வந்தங்கவைதொழுவோர்தம்மைக்கோள்கள்வருத்தாவால். சு

நவக்கிரகேசப்படலம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - கக௬௦.

---

## 46. பிறவாத்தானப்படலம்.

கலிவிருத்தம்.

பவனனேடொன்பதிற்றுக்கோள்களும்
மிவறிப்போற்றுமிடங்கள்கூறினுஞ்
சிவனைச்செவ்வாய்முதலியோர்தொழும்
புவியிற்பிறவாத்தானம்போற்றுவாம். க

வாமதேகனென்னுமாமுனி
காமரன்னைகருவின்வைகுநாட்
பேமுறுத்தும்பிறவியஞ்சின
னேமுருமையிதுநினைக்குமால். உ

பொதியுமாயப்புவியிற்றேன்றினான்
மதிமயங்கிமற்றுமின்னணங்
கொதிபிறப்பிற்கொட்புறுதெனக்
கதிபனேயிங்கருளிச்செய்யென. ௩

தோற்றமீறில்லாதசோதிவெள்
ளேற்றினனையிதயத்தன்பினுற்
போற்றுகாலைபுனிதனுண்டுறீஇச்
சாற்றலுற்றுன்றவமுனிகாரோ. ௪

மண்ணின்மீதுதோன்றியற்றெமை
நண்ணிக்காஞ்சிநகரிற்பூசனை
பண்ணுமோவெம்பவத்தொடக்குனை
யண்ணுறுதென்றருளிச்செய்தனன். ரு

வள்ளல்புகலுமாற்றங்கேட்டனன்
னுள்ளமேன்மேலுவகைபூத்தனன்
பள்ளமுந்நீர்ப்படிமிசைப்பிறந்
தெள்ளருஞ்சீர்க்காஞ்சியெய்தினன். சு

இலிங்கமங்கணினிதிருத்திநூற்
புலங்கொண்முறையிற்பூசையாற்றுபு
கலங்குபிறவிக்கரிசினீங்கினன்
மலங்கருஞ்சீர்வாமதேகனே. எ

கலிநிலைத்துறை.

அன்னவாற்றாற்பிறவாத்தானமாயதா
லின்னதானம்வழிபட்டேத்தப்பெற்றவர்
பின்னர்மாதர்கருவினெய்திப்பேதுறார்
கன்னிபாகன்கருணைவெள்ளங்காண்பரே. அ

அங்கட்போற்றிவாமதேகனருளினாற்
றங்கக்கயிலையெய்தினோன்றாடொழுதெழுஉக்
கங்கைச்சடையானுதவிலிங்கங்கைக்கொடு
பங்கப்பழனக்காஞ்சிப்பதியின்மீண்டரோ. கூ

முத்தீச்சரம்.

மேன்மைசான்றபிறவாத்தானமேற்றிசை
ஞானவாவினாங்கர்முத்தீச்சரனென
மானமுத்தித்தளியினிறுவிவாழ்த்தினு
னேனவெண்கோட்டணியார்க்கினிதாமன்னதே. க0

பிறவாத்தானப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கசுசு0.

# 47· இறவாத்தானப்படலம்.

கலிநிலைத்துறை.

புள்ளிவண்டுபெடையொடாடிப்பொங்கரிற்
பள்ளிகொள்ளும்பிறவாத்தானம்பன்னினாந்
துள்ளிவாளைபாயுநீர்சூழிதனயல்
வெள்ளிவரையாரிறவாத்தானம்விள்ளுவாம். க

இறவிக்கஞ்சிச்சிலீருபதர்கண்மாதவ
முறையிற்செய்தார்முன்னாளங்கான்முன்னுற
நறவிற்றிகழுமுளரிமேலோனண்ணினின்
றறவர்க்கென்னேவேட்டதென்றானங்கவர். உ

உலகமுழுதுமுதவுமெந்தாயுன்னடித்
தலமேயன்றிச்சரணமில்லேஞ்சாவதற்
கலகிலச்சமுற்றேமதனைவெல்லுமா
றிலகவெங்கட்குரையாயென்றங்கேத்தினர். ௩

செங்காலன்னப்பாகன்கேளாத்தேத்துணர்க்
கொங்கார்பொங்கர்க்காஞ்சிநண்ணிக்கோமளை
பங்காராதிபகவன்பாதம்வழிபடி
னங்கேயிதனைப்பெறலாமென்றானவர்களும். ச

அன்னத்தோன்றலடிகள்போற்றிவிடைகொடு
நன்னர்க்காஞ்சிநகரநண்ணிநாயகன்
றன்னைத்தாபித்தேத்திச்சாவாமாட்சியின
மன்னப்பெம்மானுதவப்பெற்றுவாழ்ந்தனர். ரு

சுவேதனென்பான்வாழ்நாட்கழிவுதுன்னுநாட்
சுவேதந்தீற்றுமாடச்சூழலதனிடைச்
சுவேதநல்லானூர்தினோன்றாடொழுதனன்
சுவேதநீற்றானீத்தானிறவித்துன்பமே. சா

மார்க்கண்டேயனங்கட்போற்றிமறலியைத்
தாக்கிநிலைமைபெற்ருன்சாலங்காயின
னுக்கமைந்தன்மகனுமங்கணேத்துபு
சாக்காடற்ருன்கணநாதச்சீர்தழுவினுன். ௭

ஆயுண்மாய்வினின்னுமங்கணெண்ணிலர்
தூயவன்பிற்ருெழுதுநிலைமைபெற்றன
ரேயவாற்ருலாயுள்வேட்டோர்யாவரும்
பாயசீர்த்திஇறவாத்தானம்பணிகவே. ௮

இறவாத்தானப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௬௬௮.

# 48. மகாலிங்கப்படலம்.

கலிநிலைத்துறை.

வெள்ளைத்திங்கட்பிள்ளைக்கீற்றுமிளிர்சடை
வள்ளற்கோமானிறவாத்தானம்வாழ்த்திணுங்
கிள்ளைச்சொல்லார்பயிலுமதனின்கீழ்த்திசை
விள்ளற்கருமாலிங்கததானம்விள்ளுவாம். ௧

அரியுமயனும்யுத்தஞ்செய்திளைத்தல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வையமுழுதுமடியவருமோருழிமுடிவின்
வெய்யவிருள்வந்தடரவிரிநீர்ச்சலதிவேகஞ்
செய்துநிமிர்ந்துபொங்கித்தேங்கிக்கிடந்தகாலைப்
பையவுறக்கநீத்துமீளப்படைககவுன்னி. ௨

துங்கத்தனதுநகரிற்சுடருமறையின்கிழவ
னெங்குமலைகள்புரளவேகப்புணரிவெள்ளந்
தங்குசெயலைநோக்கித்தடவுககருவிமுகில்போ
லங்கணரவிற்றுயிலுமையன்றனையுங்கணடான். ௩

கண்டுபுடையினணுகிக்கடுகவெழுப்பினையல்
கொண்டுநீயாரென்றுவினவக்கொண்டலனையா
னண்டமுழுதுங்காக்குமகிலமுதல்வன்யானே
மிண்டுநீயாரென்பால்வேட்டதென்கொலென்ருன். ௪

நறவமொழுகுமலரோன்கேட்டுநகையுட்கொண்டு
பிறருமல்லர்நீயுமல்லைபேணியுலக
நிறுவுமுதல்வன்யானேயென்னுமினையநெறியின்
மறலிக்கூறித்தம்முளுடல்வளர்த்துநின்ருர். ௫

சிந்தைநாணுக்கழலச்சிலையிணுணுப்பூட்டி
முந்துகணைகநேர்த்தார்மூரிக்கனலிவருண
னிந்துவிரவிப்படையுமேவியவைகண்மடியப்
பந்தவினையின்மருள்வார்தத்தம்படைவிட்டார்த்தார். ௬

மும்மைப்புவனமீன்ருேன்படையுமுகுந்தன்படையுந்
தம்முட்பொருதுமாய்ந்தபின்னர்க்கமலத்தவிசோன்
வெம்மைப்பாசுபதமாப்படையைவிடுப்பமாயோன்
செம்மலுருத்திரத்திண்படையைச்செலுத்திநின்ருன். ௭

பெருமான்சோதிலிங்கவடிவாயது.

அம்மவிரண்டுபெடையுமயுதவருடஞ்சேர்ந்து
தம்முளுடலுங்காலத்தழங்குமெரியின்பொறிக
டும்மவெழுந்துதோன்றிச்சோதியிலிங்கவடிவாய்
நம்மையுடையபெருமானவற்றினடுவுநின்றான். அ

நின்றசோதியுருவினோர்ந்தவிரண்டுபெடையுஞ்
சென்றுகரப்பநோக்கித்திருமங்கரியுமயனு
மின்றுதோன்றுமிதுவென்னென்றுதம்முளெண்ணிக்
கன்றுமிதன்றனடியுமுடியுங்காண்டுமென்னு. ௯

கேழலேனமாகிக்கீழுமேலுந்துருவி
யூழினிரண்டைஞ்ஞூறுவருடமுழிதந்துற்றார்
வாழிமுடியைக்காணன்வண்டுமுரலுமலரோன்
பாழிச்சிறகர்முறியாப்பையுளெய்திவீழ. ௧0

நாறுந்துளவத்தவனுநாடிச்சரணங்காணன
வீறும்வலியுங்குன்றியெய்ப்புமிளைப்புமிரவ
வேறும்பரவைப்பெருநீரிடையுளொழுந்தங்குற்று
மாறுமிருவர்களுமாலெய்திமருட்கைகொண்டார். ௧௧

வேதம்முதல்வனுண்மைகூறல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஏமுறுபொழுதவணொலிவடிவினதமதெழுபுமுனிருதிறனு
யோமெனவுமையெனமருவியிருக்கோடுயர்நெறியருள்புரியெசுவுஞ்
சாமமுமெனநிலைபெறவிரிவுற்றங்கவைதம்வலிமிகுமவர்முற்
காமுறுதகையநல்வடிவொடுநின்றிணையனகருணையினுரைசெயுமால்.

எவனடிமறையவர்மகவினையாலிருவினைவலிகெடவழிபடுவா
ரெவனரியயனெனுநுமையொருதனிடவலவடியினில்வரவருள்வோ
னெவனுமைநும்பதமுறநிறுவுமிறையவனுமதிருள்கழியவரு
மவனதுகுறியிதுவறிமினெனுவருள்வழிவருமறையவைபுகல.

அயனுமரியும்பழிச்சல்.

நறைகமழ்துளவணிதொடையவனுநகைமலரணைமிசைமறையவனு
மறைமொழிசெவியுறமயல்கழிவுற்றலைகடல்வரும்விடமமுதுசெயு
மிறைவனைமுறைமுறைபரசினராலெலையுடைமுதல்வனுமவரெதிர்நின்
றுறைபெருமயலினையினிவிடுமோவுதவுதும்விழைவனவுரைமினென.

பங்கயனிருகரமுச்சிமிசைப்பயில்வுறவடிதொழுதுளமுருகி
யெங்குறையின்றுபொறுத்தருளியெளிவருநாயகவுனையுணரா
துங்குறுமயலினியெனையணுகாதுன்புடைநிலைபெறுமன்புதவி
மங்கலிலூழிதோறென்வடிவில்வந்தருளெனமொழிவிண்டனனே.

திருமகள்விழைதருதிகழ்மருமச்செம்மலுமடியிணைதொழுதினியிம்
மருளெனையொருபொழுதினுமடராதுன்னடிவழிபடுசெயல்பிறழல்
கருமுகிலுறழ்மிடறுடையவநின்கருணையென்னிடைநிலைபெறநிறுவி
லொருகுன்றயுள்துகொலடியடியேற்கென்றுளமகிழ்வுடனோதினனால்.

அயனுமரியுஞ்சிவப்பிரசாதம்பெற்றுய்தல்.
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இவ்வண்ணமிருவர்களுமிரந்தேத்திவிண்ணப்பஞ்செய்யக்கேளா
வவ்வண்ணமாகவெனப்பெருங்கருணைகூர்ந்தருளியகிலமீன்ற
மைவண்ணக்கருங்கூந்தன்முலைச்சுவடும்வளைத்தழும்புமாறுமேனிச்
செவ்வண்ணப்பரமேட்டிபின்னருமங்கவர்க்கிதனைத்தெரித்துக்கூறும்.

இற்றைநாணீர்காணுமிவ்விலிங்கப்பெருவடிவமிறுதிக்கால
முற்றுநாளணுகாதுகொற்றங்கொடிருக்காஞ்சிமூதூர்மாடே
பற்றுபெருங்காதலினுற்றுபித்துவழிபட்டுப்பரசியானுப்
பெற்றியுறுவியனுலகம்படைத்தளிக்கும்பெருமதுகைபெற்றுவாழ்மின்.

வெண்டிரைநீரகல்வரைப்பினும்முதலோர்விண்ணவர்களவுணர்சித்தர்
பண்டைவினைக்குறும்பெறியுமுனிவரர்மானிடர்யாரும்பாசக்கூட்டம்
விண்டகலும்படியின்றுதொட்டெம்மையிலிங்கத்தின்மீளாநேசங்
கொண்டுபூசனைபுரிகபுரிவோர்க்குமயலென்றுங்குறுகலோம்பல். கசூ

கடப்பாடுவறுமைபயமனக்கவலைபசிபாவங்கடுநோய்மற்று
முடற்றுமையாங்கவர்க்குமீளவினைப்பிறவியுறலுறினுமின்பங்
கிடைத்தானுப்பெருமகிழ்ச்சிதலைசிறப்பநனிவாழிகிளருஞ்சீற்ற
நடைக்காலன்மற்றவர்பானணுகற்கஞ்மாணைவலியான்மன்னே. உ0

வேதியர்மன்னவர்வணிகர்வேளாளர்சங்கரத்தின்மேயோராக
மூதிமையோருரகர்தயித்தியரரககர்கந்தருவர்முனிவராகப்
பூதிதருமிலிங்கபூசனையில்லார்பூதிசாதனங்கள்பேணு
ரேதிலராமிழிஞரினுமிழிஞரேயவரொடுபேச்சியம்பினேரும். உக

நியதிமகந்தவந்தானம்விரதநிலைபிறவற்றினிகழ்த்தும்பூசைப்
பயனெவையுமிலிங்கபூசனைக்கோடிகூற்றினொருபயனுக்கொவ்வா
வியனுலகமுய்யுமுறையிவ்வாறுநமதாணைவிதித்தேம்போற்றி
யுயலுறுவீரென்றருளிச்சிவபெருமானடியருளகோயில்புக்கான். உஉ

பாப்பணையிற்றுயில்வோனும்பனிமலரிற்பயில்வோனும்பணிந்துநீங்கி
யாப்பமைநீர்த்தடம்பொய்கைத்திருக்காஞ்சிவளநகரமெய்தியாங்கண்
மீப்பொலியுமகாலிங்கநிறீஇதொழுதுபயன்பெற்றார்விரிநீர்வைப்பி
னீப்பரியசிவலிங்கவழிபாட்டின்பேறெவரேநிகழ்த்தவல்லார். உ௩

மகாலிங்கப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - கசூசூக.

---

## 49. வீராட்டகாசப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தண்காமர்புனல்குடையுந்தையலார்திமிர்ந்தநறுந்தகராளுாழ
லெண்காதங்கமழிலஞ்சிமகாலிங்கத்தளிபுகன்றாமிதன்வடாது
விண்காவலுடையார்முன்னிளநகைபூத்திவ்வாலம்விடுக்காவன்றி
யுண்காவென்றருள்செய்தான்வீராட்டகாசநகருரைத்துமாலோ.

சர்வசம்மாரகாலத்திருநடனம்.

வள்ளவாய்நறைக்கமலவெண்பீடத்தரசிருக்குமாதரன்னப்
புள்ளவாநடைநல்லாண்முலைமுகட்டிற்கோட்டியபூங்களபந்தோய்ந்த
கள்ளவார்த்தொடைத்திண்டோண்மறைக்கிழவனொருவனுக்குக்கடையேனுள்ளத்
துள்ளவாமிறைவகுத்தபரார்த்தங்களோரிரண்டுமொழிந்தகாலை.

ஐவண்ணநிறம்படைத்ததிருமுகமைந்துடையபிரானருளாலந்திச்
செவ்வண்ணக்காலத்தீயுருத்திரப்புத்தேணுதற்கட்செந்தீப்பொங்கி
மொய்வண்ணவண்டமெலாமுழங்கிமிர்ந்தெழுந்துருக்கியுண்டுதேக்கி
மெய்வண்ணமனத்தன்பர்வினைப்பறம்பினீறாக்கிவிட்டதாக.

ஆயநாளிரவில்லைபகலில்லையயனில்லையரியுமில்லை
மேயவான்முதல்பூதமிலையேனைப்பவுதிகத்தைவிளம்புமாறென்
பாயபேரண்டமெல்லாமிவ்வாறுபடநீறறிப்புரமூன்றட்ட
நாயகனேயோனனந்தமேலீட்டிற்றன்னியல்புகருத்துட்கொள்ளா.

கடைநாளுமழியாதுதன்னொருபாற்பெருமாட்டிகாப்பவைகு
நடைமாறாத்திருக்காஞ்சிநகர்மன்னியுலகீன்றநங்கைகாண
விடையாமவிரவெல்லாந்திருக்கூத்துநவின்றருளியெறுழ்சால்வெள்ளை
விடையானுந்தனிப்பாகனுர்த்துவீரநகைவிளைத்தான்மேன்மேல்.

அவ்விரவுபுலர்காலைத்திருநடனநீத்திலிங்கவடிவமாகி
யவ்வரைப்பின்விளங்கினைதலினல்வீராட்டகாசத்தேவா
மவ்விலிங்கம்வழிபட்டுச்சிலர்சித்தரம்புதமாஞ்சித்திபெற்று
ரவ்வியல்புதனைக்கேட்டுக்கொங்கணமாமுனிச்செல்வனங்கணெய்தி.

கொங்கணமாமுனிவர்வழிபாடு.

அவ்விலிங்கமேன்மையினையளந்தறிவானுங்கதன்றன்சென்னிமீது
செவ்வனேதன்குளிகையிந்திட்டான்மற்றவற்றின்சிரமேல்வைப்பி
னெவ்வமுறநீறாக்குமனையதையக்கணமேயவ்விலிங்கமுள்ளால்
வெளவியதுதனைக்கண்டான்வியப்பெய்தியவ்விலிங்கமுன்னர்வைகி.

மெய்த்தவங்களினிதாற்றிப்பேறுற்றானின்னுமவன்மேவிச்சீர்சால்
சித்திகளையுழவாதுபெறுகின்றோரெல்லையிலர்செந்நீர்தேக்கு
முத்தலைவேல்வீராட்டகாசீசன்மேன்மையெவர்மொழிவார்மாய
னத்தலத்தேவழிபட்டுப்பவளநிறம்பெற்றனவ்வகையுஞ்சொல்வாம்.

திருமால்பவளநிறம்பெற்றகாரணம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விரிதிரைசுருட்டிக்கரைமிசையெறியும்வெள்ளிவெண்பாற்கடல்வரைப்பி
னெரிமணிமாடப்போகமாபுரத்தினெய்தருந்தனியிடத்திருந்து
புரிமுறுக்குடைந்துநறவுகொப்புளிக்கும்பூந்தவிசணங்கிணேடிணங்கி
வரிவளைக்குடங்கைவானவன்விளையாட்டியற்கையின்மகிழ்வுறுமொருநாள்.

மாயிருஞாலமுழுதுமீன்றளித்துமனைவியுமணுளனுமாயோ
ராயிடைப்பொழுதுகழிப்பியதம்முட்கதைசிலவறைகுவானமைந்தார்
பாயபாப்பணையிலறிதுயிலமர்வோன்பனிமலர்க்கிழத்தியைநோக்கித்
தேயுநுண்ணுசுப்பினகன்றபேரல்குலொருகதைகேளெனச்செப்பும்.

நன்னிறம்படைத்தநாமநீர்ப்பரவைநளிதிரைப்பாற்கடன்மாமை
புன்னிறந்தோற்றவெள்ளொளிவிரிக்கும்புகரறுகயிலையெம்பெருமான்
மின்னிடைமருங்குலுமையுடனொருநாட்கறங்குவெள்ளருவியஞ்சாரற்
றன்னிறமாண்டமந்தரப்பறம்பிற்றனியிடத்தினிதுறுமேல்வை.

எழான்மிடற்றளிகள்கொள்ளைகூட்டுண்ணவீர்ந்தொடைகருவிரியைம்பாற்
கழாமணிமேனிப்பிராட்டியைநோக்கிக்காளியென்றெம்பிரானழைப்ப
வழாநிலைக்கற்பினுள்ளகம்வெதும்பிவரிவிழிநித்திலமுகுத்துக்
குழாமுடையிமையோரேத்தெடுத்திறைஞ்சுங்கோமளையின்னதுகூறும்.

விடுந்தகைக்காளநிறம்படைத்துளன்யான்வெண்ணிறம்படைத்துளைநீயே
நெடுந்தகாய்நமக்குப்புணர்ச்சியெவ்வாறுநிகழுமற்றிங்கிதுகாறுங்
கடுந்தகையென்மாட்டருளினாலின்பக்கலவியிற்றிளைத்தனையினிநா
னடுந்தகைப்படையோய்கவுரியாம்வண்ணம்பெறுமுறையருடியென்றிரந்தாள்.

பொலங்குவட்டிமயப்பனிவரைப்பிராட்டிபுகன்றனதிருச்செவிசாத்தி
யிலங்குவெண்ணீற்றுச்சுந்தரக்கடவுளியம்புவான்வரிவிழிகேட்டி
கலங்கலுறெய்தேல்கடவுளர்கருமப்பொருட்டுனையிம்முறையழைத்தே
னலங்கொளவுலகநாடொறுமபுரத்தனநகடனுதலிற்கண்டாய்.

மற்றதுபின்னர்த்தெளிதிநீகவுரநிறம்பெறுமாறெனக்குரைப்பல்
வெற்றிடமின்றியெங்கணுநிறைந்துபரவெளிப்பரப்பிடைமேவும்
பெற்றியன்யானேயாயினுந்தகைசால்பீடுயர்தலங்களின்மாட்டு
மற்றமின்மறையோரகத்தினுமுலவாவருள்சுரந்தினிதுவீற்றிருப்பேன்.

மேம்படுமவற்றினுத்தமத்தளிகள்விதியுளிமறைநெறியொழுக்க
மோம்பிமிக்குயர்ந்தோருள்ளமுமெனக்குச்சிறந்தனவவற்றினுமேலாய்த்
தேம்பொழிலவேலிக்காசிமாநகரும்யோகிகள்சிந்தையுஞ்சிறந்த
வாம்பகரவற்றிற்காஞ்சியுமுண்மையடியவருள்ளமுஞ்சிறந்த.

தகைபெறுமவற்றின்வேறெனக்கினியதானமற்றெங்கணுமில்லை
நகைமலர்க்கொடியேயந்நகரெய்திநயந்தெனையருச்சனையாற்றி
மிகையறுதவத்தான்வேட்டவாபெறுதியென்றலும்விளங்கிழையுமையாள்
பகைவினைதுரக்குங்காஞ்சியினெய்திப்பஞ்சதீர்த்தக்கரைஞாங்கர்.

மாதவமியற்றிப்பொன்னுருப்பெற்றுக்கவுரியாய்வயங்கினளினைய
மேதகுமிறும்பூதென்னெனப்புகல்வேன்வெறிமலர்ப்பங்கயத்தவிசின்
மாதர்வாணகையாயென்றெடுத்துரைத்தான்மந்தரமலமரச்சுழற்றி
யோதநீரளக்கரமுதெடுத்திமையோர்க்கூட்டியபெருந்திறற்குரிசில்.

திருமகள்வேண்டுகோள்.

செய்யவள்கேட்டுவியப்புமீக்கூர்ந்துசெப்புவாளென்னையாளுடையா
யையவிச்செயலைக்கேட்டொறுமுலவாவற்புதம்பயக்குமான்மன்ற
மெய்யுணர்வின்பசத்தியுஞ்சிவனும்விளைக்குமிவ்விளைவுகளெல்லா
மையறத்தெளிந்தோர்திருவிளையாட்டின்வன்மையென்றியம்புவர்மன்னோ.

இற்றலாற்காமற்காய்ந்துமுற்றுணர்ந்துவரம்பிலின்புடையவீசனுக்கு
மற்றெவனுளதோவவ்விளையாட்டுமுலகெலாமுய்யுமாறன்றே
யற்றெனவுணராக்கயவர்கள்காமத்திறமெனக்கருதுவரனையர்
பெற்றியையாரேதெளிதாற்பாலார்பிறங்கொளிமணிநிறக்குரிசில்.

நிலையியற்பொருளுமியங்கியற்பொருளுநிலைபெறத்தொழிற்படுத்துடைய
தலைவனங்கவனேபனிவரைப்பிராட்டிதன்னையுமென்னையுமிடப்பான்
மலரணைப்புத்தேடன்னையுமெனையும்வலப்புடைக்காலருத்திரனைக்
கலைமகடனையுமுளத்திடைத்தந்தான்காத்துயிர்த்தழிப்பதுகருதி.

அகிலமுந்தானேயருட்டொழினடாத்துமாங்கவற்கெவற்றினுஞ்சால
மிகுபெருங்காதலுமையவளிடத்தும்விரவுநின்னிடத்தினுமன்றே
முகிலுறழ்கூந்தலவளெனநீயுமுதல்வனேயுன்னடியேற்கு
மகிழ்வுமீக்கிளைப்பவவ்வுருப்பெறுதியென்றனண்மலரணைக்கிழத்தி.

விளங்கிழைமாற்றமச்சுதன்கேளாவெகுண்டுநின்மனக்கருத்திதுவேற்
களங்கனியனையேன்றன்னுடனிந்நாள்காறுநீபொலஞ்சுடர்நிறத்தாய்
வளங்கெழுமின்பமென்னணுகர்ந்தாய்மற்றினிச்செக்கர்வானுருவ
முளங்கொளப்பெறுகேனென்றவட்கியம்பிக்கதுமெனக்கரந்தனனாங்கு.

கச்சிமாநகரமெய்திவீராட்டகாசநல்வரைப்பினுக்கெதிரா
வச்சிவன்வீரநகைதிரண்டனையசக்கரதீர்த்தமுண்டாக்கி
முச்சகமேத்துங்கங்கையிற்சிறந்தவத்தடமூழ்கிநோன்பியற்றிப்
பச்சைமால்வதிந்தான்வதிந்திடம்பச்சைவண்ணனாலயமெனப்படுமால்.

ஆங்கனம்வைகிநாடொறுமீரேழாயிரமலிகெழுபொகுட்டுத்
தேங்கமழ்கமலங்கொண்டுவீராட்டகாசமாதேவனையருச்சித்
தோங்குபேரன்பிற்றொழுதெழுந்திரப்பவுலப்பருங்கருணைமீக்கூர்ந்து
மாங்குயில்பாகனெதிரெழுந்தருளிவழங்கினன்பவளநேர்வடிவம்.

பொரியரைக்காயாம்போதுறழ்வண்ணங்கழீஇத்துகிர்புரைநிறமெய்திப்
பெரிதுளமகிழ்ந்தாளாயிடைச்சிலநாள்வைகிமீண்டரவணைப்பெருமான்
விரிதிரைத்தீம்பாற்கடலகத்தணுகிவிரைமலர்க்கிழத்தியோடிணங்கித்
தெரியிழைத்திருவேகாண்டிநீபவளச்சேயொளிதழைக்குமிவ்வடிவம்.

கச்சறப்பணைத்துப்புடைபரந்தெழுந்தகதிர்மணிமுலையினாயிதுவென்
னிச்சையாற்பெற்றேன்விழைந்தவாறென்மாட்டினலநுகரெனக்கேட்டுப்
பச்சிளந்தோகையிந்நிறமடிகளிச்சையாற்படைத்ததேன்மாய
விச்சையேபோலுநிலைமையன்றெனக்கீதென்பயன்விளைத்திடுமென்றாள்.

திருமகள்காஞ்சியடைதல்.

பாய்சிறைக்கலுழப்புள்ளரசுகைக்கும்பஃறலைச்சேக்கையன்வெகுளா
நீயினியிருந்தைவண்ணமாகென்னச்சபித்தலுமேரிழைமேனிச்
சேயொளிகருகக்கண்டுளம்பதைத்தாள்சிறியனேன்செய்பிழைபொறுத்திங்
கேயுமிச்சாபந்தவிர்த்தருள்பொறையாள்கொண்கனேயென்றடிபணிந்தாள்.

தெம்முனைகடந்ததிகிரியோனிரங்கிச்சீற்றத்தால்விரைந்துனைச்சபித்தே
னம்முறையாற்றாற்கரிநிறம்பெற்றாயாயினுமுன்னையின்விழைய
வெம்முலைப்போகமெனக்குளதாகவெருவலையெனத்தழீஇக்கொள்ளச்
செம்மலர்த்திருவுமடியிணையிறைஞ்சித்திருந்துதன்னிருக்கையுட்புக்காள்.

புக்கபினங்கட்பாங்கியர்தம்மோடுசொவினள்புதுநறாக்கான்று
நக்கபூஞ்சோலைக்காஞ்சிமாநகரைநண்ணியாங்கிணைவிழிகளிப்பத்
திக்கெலாம்பரசத்திகழுலகாணித்தீர்த்தநீர்த்தடங்கரைமாடே
மைக்குழலுமையாளினிதமர்ந்தருளித்தவஞ்செயும்வரைப்பினைக்கண்டாள்.

அனையநல்வரைப்புநுண்பிலமாகியருட்பரவெளியதாய்த்திகழுங்
கனைகடலுடுக்கைநிலமகட்குந்தித்தானமாங்கமழ்நறுங்கடுக்கைத்
தனிமுதற்பிரமந்தனக்கொருவடிவாந்தாழ்குழலுமையவட்கடியார்
வினைதபுமூலத்திருவுருவதுவேவிளங்கொளிக்காஞ்சியம்பதியுள்.

குறைவிலாநிறைவாயுண்மையாயறிவாய்க்கொட்புறுமனமடங்கிடமாய்
மறைமுடிப்பொருளாயின்பமாய்ச்சிவமாய்மாசறவயங்குபேரொளியை
நிறைதவயோகத்தலைவரிவ்வாறுநெஞ்சகத்தேவழிபடுவா
ரறைகடற்பரப்பிற்காஞ்சிமாநகரினுயிடைவழிபடுவாரால்.

காமக்கோட்டப்பேருரைமாகதி.

ஒருமுறையங்கட்காமமாந்தருமமுனூற்றுநர்தமக்குமத்தருமந்
தருபயன்கோடியாதலிற்கரடத்தடத்திழிகடாம்படுகெலுழிப்
பெருவரைவதனப்பிள்ளையைக்குகனைப்பெற்றவளமர்பிலமதுதான்
கருதருகாமக்கோடியென்றுலகிற்காரணப்பெயரினுல்வயங்கும்.

அன்றியுங்காமக்கிறைவர்தனதரனையவர்கோடியர்த்தரலா
லென்றுமோரியல்பினெங்கணும்விரவியெவற்றினுங்கடந்தபேரொளியைக்
குன்றுறழ்கொம்மைக்குவிமுலைத்தடத்தாற்குழைத்தருள்கருணையெம்பிராட்டி
நன்றுவீற்றிருக்கும்பேரொளிப்பிலத்திற்கப்பெயர்நாட்டலுமாமால்.

இன்னுமிப்புவனப்பரப்பினிற்காமமென்பனமனைவியர்மக்கள்
பொன்னணியிருக்கைப்பூண்முதல்பலவாம்பூந்தளிரணிநலஞ்சவற்றுந்
தன்னடிவணங்கியிரந்தவர்தமக்குத்தடங்கிரிபயந்தபேராட்டி
யன்னவைகோடியளித்திடலானுமப்பெயரெய்துமங்கதுவே.

அல்லதூஉங்கவைத்தாட்கரும்பகட்டேர்தியடுதொழிற்கூற்றினைக்குமைத்த
கொல்லையேற்றண்ணனுதல்விழிச்செந்தீக்கோட்படுமொருதனிக்கருப்பு
வில்லியைவிளையாட்டியற்கையிற்கோடிகாமராவிழித்துணைக்கடையா
லல்லியங்கோதையாங்களித்திடலாலப்பெயர்பூண்டதுமாமால்.

மற்றுமாருயிர்சேர்நாற்பொருட்பயனில்வகுத்தமூன்றுவதுகாமம்
பற்றுகாமத்திற்கோடியாமுடிவிற்பயில்வதுவீடுபேறுகு
முற்றவர்தமக்குவீடுபேறளிக்குமுண்மையினுலுமப்பெயராற்
சொற்றிடப்படுமாலுலகெலாமீன்றுளமர்ந்தருள்சுடரொளிவிமானம்.

பின்னருமொன்றுககரமேயகரமகரமாப்பிரிதருமூன்று
மன்னவேறுகைக்குமயனரியீசனுயமுத்தேவரைப்பகரு
மின்னவர்தம்மையுகந்தொறுங்கோடிமுறையெழில்விழிகளிற்படைத்தாண்
மின்னிடைப்பிராட்டியென்பதனுலுமப்பெயர்விளங்குமென்பதுவே.

வேறுமொன்றுங்கட்காவெனப்படுவாள்வெண்மலராட்டிமாவென்பா
ளூறுதேங்கமலப்பொகுட்டணையணங்காமூங்குவரிருவருமுகிலை
மாறுகொளைம்பாலுமைவிழிக்கோடிதன்னிடைவருமுறையானு
மேறுமத்திருப்பேரெம்பெருமாட்டிக்கென்றெடுத்தியம்புவருணர்ந்தோர்.

விந்துவின்வயங்கியம்பைவீற்றிருக்கும்வியன்றிருச்சக்கரவடிவா
மந்தவான்பிலந்தானியம்பியகாமமனைத்திற்குமாதரமாகிப்
பந்தமில்காமக்கோட்டமென்றொருபேர்பரித்திடுமெற்றெவற்றினுக்கு
முந்தியபீடமாதலினுதிபீடமுமொழிந்திடப்படுமால்.

திருமகள்வழிபாடு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இனையதாகியதிருப்பிலமதனையெழான்மிடற்றிளஞ்சுருப்பினமுரலு
நனைகலுழ்ந்தலர்மலர்த்தவிசிருக்கைநகைமலர்க்கொடிகண்டுகைதொழுதே
யனையசூழலினிடப்புறம்வைகியடங்கலார்புரமழலெழச்சிரித்த
முனைவனூர்க்கொருசத்தியாயின்பாய்முழுதுமாகியவகிலகாரணியை,

பாதமொன்றுநேமிவிர்த்தியாற்றரைக்கட்பதமிரண்டொடுபெதிட்டையாற்புனற்கட்
பாதநான்கொடுவித்தையாற்கனற்கட்பதங்களெட்டொடுசாந்தியால்வளிக்கட்
பாதமொன்பதனொடுவெளிப்பரப்பிற்பகருஞ்சாந்தியதீதமாங்கலையாற்
பாதமாயிரத்தொடுபரவெளிக்கட்பயிலுமக்கரத்தனிமுதல்பரையை.

கருமைசெம்மைவெண்ணிறமுடையாளைக்காமக்கோடிவான்பிலவடிவாளை
யருவிதாழ்குவட்டணிமலைமகளைமாயையோடுலகனைத்துமீன்றாளை
யுருகிநெக்குநெக்குளப்பெருங்கோயிலுள்ளுறுத்தியென்னுடம்பினைபொதிந்து
மருவுமிக்கருநிறஞ்செதிளெடுப்பான்கருணைசெய்கெனவழிபடலுற்றாள்.

வருணனருணைவாருணியென்னப்பிருகுமாதவற்கருளியவாற்றாற்
பிருகுவாரநாளுனைவழிபடுவார்பெருவளத்தொடுவாழ்வரென்றுரைப்ப
வருவினைப்புலக்குறும்பெறிந்துயர்ந்தபிருகுமாமுனிமகளடியேற்குங்
கருணைசெய்வதுகடனுனக்கன்றேகருப்புவில்லியைக்காய்ந்தவர்க்கினியாய்.

காவெனப்பெயரியகலைமகளைமுந்தைஞான்றுநின்கண்ணெனப்புரந்தாய்
மாவெனப்பெயருடையமற்றனையுமலர்ந்தநின்விழிபோற்புரந்தருளி
யேவெனப்பிறழ்தடங்கணாய்காமக்கண்ணியாம்பெயரெய்துவையென்றுப்
பூவெனப்பயிலணைமிசைக்கிழத்திபோற்றிசைத்தலுமெதிரெழுந்தருளி.

### திருமகள்வரம்பெறல்.

எம்பிராட்டிவான்கருணைகூர்ந்தருளியேடவிழ்ந்தபூந்தவிசுறையணங்கே
கம்பியாதிமற்றுன்னுடற்கருமைகரியசாந்தமாக்கழிகமுன்னையினு
நம்புநல்லுருப்பெறுதியிப்பொழுதேநாரணற்குமிக்குரியவளாவாய்
வம்பறுத்தெழுந்தோங்கியண்ணுந்துமதர்த்துவீங்கியவனமுலைத்தோகாய்.

அழகுவாய்ந்தநின்வடிவினிற்கழியுமனையசாந்தணிந்தலினர்தமக்கு
விழவுமின்பமுஞ்செல்வமும்புகழுமேகலின்மையுமிகழுமற்றொழிக
பழையவேதமுற்றுணர்ந்துயர்சிறப்பிற்பனுவலாட்டியுமிவணமாசெயலாற்
கழிவிலன்பினீவேட்டவாறெனக்குக்காமக்கண்ணியாம்பெயருறுகென்ன.

### திருமால்தேவியார்கட்டளையேற்றல்.

* இனையவாறிவணிகழ்வுழிச்சுரும்பரிமிருந்தாமரையுந்தியங்கடவுண்
மனையகத்துமாமடந்தையைக்காணான்மனமழுங்கினன்பிரிவுநோய்வருத்தக்
கனைகடற்பரப்பெங்கணுந்தேடிக்காஞ்சிமாநகராவயிற்கண்டா
னனையதாரமுமிறைவியுந்தம்முளறைவகேட்டவணொளித்துநின்றனனால்.

ஒள்வளைக்கரத்திருவருமவனையுணர்ந்துநோக்கினளென்னையாளுடையாள்
கள்வனொத்திவணிற்பவன்யாரேயெனக்கடாயினள்கடிமலரணங்கும்
வெள்கலுற்றுமுன்னிறைஞ்சினண்மாயோன்விரைவினம்பிகைதிருவடிவணங்கி
யுள்ளகம்பெருமகிழ்ச்சியிற்றிளைப்பவொருமருங்குறவொடுங்கிநின்றனனே.

நங்கைநாகணைக்குரிசிலைநோக்கிநன்றுவந்தனையோவெனவின்வி
யங்கண்முச்சகநீபுரந்தளிக்குமாருயிர்த்தொகையினிதுவாழ்ந்தனவே
பங்கயக்கணாயென்றலுங்கலுழப்பாகனின்னருட்கருணைபெற்றுடையே
மெங்கள்வாழ்வினுக்கெவன்குறையானுமிவளுமுய்ந்தனமெனத்தொழுதுரைத்தான்.

இறைவிபின்னருமொன்றவற்கியம்புமீண்டுமுப்பதிற்றிரண்டறம்வளர்க்கு
முறையினென்னறச்சாலையீதிங்கோர்மூரிப்பாரிடமிதற்கிடையூறுய்க்
குறைவிலாற்றலினுழிதருமதனைக்குறும்படக்குதிநீயெனவேவ
நறைமலர்த்துழாய்மோலியுமிறைஞ்சிப்பஞ்சதீர்த்தத்தடங்கரைப்பால்.

திருமால்பூதனுயிருண்டெழுந்தருளல்.

அன்றுபாரிடம்பாரிடைவீழ்த்தியாற்றலான்மிதித்ததன்மிசைநின்றா
னின்றவன்றனையுந்திமேலெழும்பனெரித்திருந்தனனிருந்தவன்றனையும்
வென்றிசால்விறற்பூதமேலுந்தநீண்மெற்றதன்மிசைப்படக்கிடந்தான்
கன்றுபூதமும்வலிமுழுதிழந்துகபலக்கண்ணனைவணங்கியொன்றிரக்கும்.

வள்ளலேமலர்த்திருவிளையாடுமார்பனேபெரும்பசியெனைவருத்த
வுள்ளுநடைந்துளேனாண்டுதோறடியேற்கொருமகன்றனையுயிரொடுமுதவித்
கொள்ளுமப்பலியேற்றுளமகிழ்வேன்கொடுத்தியிவ்வரமெனக்கெனவரவப்
பள்ளியோனுமற்றாகெனவிளம்பிப்பத்தர்போற்றவத்தலத்தினிலிருந்தான்.

கள்வனின்றவனிருந்தவன்கிடந்தோனென்னுநால்வகைக்கரிசறுவடிவால்
வெள்வளைக்கரக்கடவுளங்கமர்ந்தான்விமலநாயகியாணையினாற்றான்
முள்ளெயிற்றராப்பணம்புரையலகுன்முளரிமாதுமப்பிலத்தயலிருந்தான்
புள்ளுயர்த்தவற்கினியவாமங்கட்போற்றப்பெற்றவர்வைகுந்தம்புகுவார்.

கறைமிடற்றிறைவைகும்வீராட்டகாசமேன்மையின்றொடர்ச்சியாலிங்கே
யறைகழற்றிருநாயகன்வரலாறனைத்துங்கூறினாமத்திருநகரை
நிறைவிருப்பினால்வழிபடப்பெறுவோர்நிலமிசைப்பெருவாழ்வினராகிப்
பிறைமுடிப்பிரான்றிருவடிக்கலப்பிற்பெறலரும்பரபோகமுற்றிருப்பார்.

வீராட்டகாசப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௧௭௪௯

---

# ௫௬. பாண்டவீசப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

பேரின்பச்சாக்கியனார்கல்லெறிக்கும்பேறுதவு
வார்தங்கும்வீராட்டகாசவரவிதுவாற்
சீர்தங்குதென்பாற்றிருப்பாண்டவீச்சரமாங்
கார்தங்குமிஞ்சிக்கடிநகரங்கட்டுரைப்பாம் ௧

தருமம்பயந்ததநயன்முதலோ
ருருகெழுவெங்காட்டினுரோமசனேயாதித்
திருமுனிவர்தம்மோடுந்தீர்த்தமெலாமாடக்
கருதிநடந்தார்கழியாதகாதலார். ௨

அங்கங்கிலிங்கநிறுவியருச்சித்துப்
பங்கந்துமிக்கும்பரம்பொருளைப்போற்றிசைத்துச்
சிங்கம்படுக்குந்திறலார்வருநெறியார்
தெங்கம்பொழில்சூழ்திருக்காஞ்சிநண்ணினார். ௩

அங்கட்பலதளியுநோக்கியகமகிழ்ச்சி
பொங்கித்திருக்கம்பமாதியாப்புண்ணியநீர்க்
கங்கைச்சடிலக்கடவுளிடமெல்லாந்
துங்கப்பேரன்பிற்றொழுதுதொழுதேகினார். ௪

வீராட்டகாசங்கடைக்கால்வியன்மலர்கொண்
டாராப்பேரன்பினருச்சித்ததன்றென்பா
லோராத்தத்தம்பெயர்சாத்தியெல்லாருந்
தாரார்த்தகொன்றைச்சிவலிங்கந்தாபித்தார். ௫

அறமைந்தன்வீமன்விசயனலர்பூந்தார்
நறவிண்டதிண்டோணகுலசகாதேவர்
மறனின்றியின்னோர்மனைக்கிழமைபூண்ட
முறையொன்றுகற்பிற்றுரோபதைமுன்னோர். சு

சீரார்திருட்டத்துமனன்சிகண்டிமற்று
மோரார்கழற்கால்யதுமரபின்மன்னருட
னாரானற்கன்பினுரோமசர்முற்கலனார்
பாரார்வியாதர்முதலாயபன்முனிவர். எ

என்றினையரெல்லாமிலிங்கந்தனித்தனியே
நன்றிருத்தியேத்திங்யப்பாடுபெற்றாரா
லன்றவர்கள்போற்றுமிலிங்கமவைகண்டோர்
மன்றினடமாடும்வள்ளலருள்பெறுவார். அ

கயிலாயநாதீச்சரம்.

அன்னவற்றின்றென்பாற்கயிலாயமவ்வரைப்பி
னன்னர்கயிலாயநாதன்றனைநிறுவி
மன்னுந்திசைக்கிறைமைபெற்றான்மருவலார்க்
கின்னல்புரிமுத்தலைவேலீசானனென்பவே. கூ

பாண்டவீசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - களருரு.

## 51. மச்சீசப்படலம்.

கலிவிருத்தம்.

பார்த்தராதியோர்வழிபடும்புக
ழார்த்தசூழல்கள்விளம்பினமருள்
கூர்த்தவப்புலக்குடக்கணிப்பிரீர்த்
தீர்த்தனாங்கர்மச்சீசங்கூறுவாம். க

ஒப்பிலற்புதமுணர்த்தவெம்பிரா
ணிப்பிமுத்தமங்கெடுத்தளித்தலாற்
செப்பரும்புகழிப்பிதீர்த்தமென்
றப்பெரும்பெயரதனுக்காயதே. உ

மற்றதன்கரைமச்சலிங்கமொன்
றற்றமில்லரியருச்சித்துள்ளது
துற்றபாதகச்சோமகாசுரன்
கற்குமாமறைகவர்ந்தொளித்தநாள். ங

ஒத்தொழிந்தனவுலகம்யாவையு
நீத்தவேள்வியநிலைமைகுன்றலாற்
றீத்தெறும்பசித்தேவர்மாயனைச்
சோத்துநீசரணெனத்துதித்தனர். ச

அஞ்சலீரெனவருளியச்சுத
னெஞ்சகத்துறநினைவினொடினை
னெஞ்சுறுமறையாவுங்கைக்கொடு
வஞ்சனாழியுண்மறைந்தவண்ணமே. ரு

பிருகுமாமுனிசபித்தபெற்றியா
லொருவருங்கயலுருவுதாங்குபு
மருமலர்ப்பொழிற்காஞ்சிவைப்பிடைப்
பொருவிலிப்பிநீர்ப்புடையினண்ணினன். ௬

வேறு.

சலங்கொண்மீனுருத்தன்பெயர்நாட்டியவ்
விலிங்கமன்பினிருத்தியருச்சனை
துலங்கச்செய்தருள்பெற்றுத்தொகுநிதிக்
கலங்கண்மல்குகடலகத்தெய்தினன். ௭

சோமகன்றனையட்டுச்சுருதிகண்
மாமறைக்குலத்தார்க்குவழங்கின
னமைநீர்க்கடனாகணைப்பள்ளிமேற்
றாமரைக்கண்வளருந்தகைமையான். ௮

சங்கநேருருப்பஞ்சசனப்பெயர்
வெங்கணனையுமாயிடைவீட்டியே
துங்கவோசைவலம்புரித்தோற்றமா
மங்கவன்றனெலும்பையணிந்தனன். ௯

கச்சிமாநகர்வைப்பிற்கருந்துழாய்
மச்சமர்ச்சித்தமச்சலிங்கத்தினை
நச்சியேத்துநர்தாம்பெறுநன்னல
மிச்சகத்தெவரிற்றென்றளப்பரே. ௧0

மச்சீசப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௭௬௯.

# ௫௨. அபிராமீச்சரப்படலம்.

கலிவிருத்தம்.

காவுசூழ்கச்சிமச்சுருப்பின
மேவுமச்சலிங்கேசம்விளம்பினும்
வாவிமல்குமதன்வடமேற்றிசைத்
தாவில்சீரபிராமீச்சரஞ்சொலவாம். ௧

வேறு.

மாவலியெனப்பெயர்மரீஇயதானவர்
காவலனுலகெலாங்காத்தளிக்குநாட்
டேவர்கட்கிறையவனரசுதேய்தலின்
யாவதுசெயலெனக்கினியென்றெண்ணுழி. ௨

செந்தளிர்மலரடித்திருவினாயக
னிந்திரற்கிளையவனென்னக்காசிபன்
மைந்தனாய்க்குறளுருத்தாங்கிமன்னினன்
முந்தையோர்க்காசியவுதவமுன்னியே. ௩

அலங்கொளிக்காஞ்சியினபிராமீச்சர
விலிங்கமங்கியல்புளிவழிபட்டேத்தினன்
வலம்பெறச்சிலபகல்வைகிக்கங்கைநீர்
சிலம்புவேணியனருள்செய்யப்போந்தனன். ச

வெய்யவாளவுணர்கோன்வேள்விச்சாலையி
னெய்திமூவடிநிலமிரந்துவேண்டினன்
கைதவமுணர்ந்தெதிர்தடுத்தகாழ்படு
மையறுவெள்ளியைவிழியைமாற்றினன். ரு

தன்னடிமும்மையினளவைசாலிட
மன்னிலையவுணர்கோனளிப்பவேற்றனன்
கொன்னுறவளர்ந்தனனண்டகூடமேற்
சென்னிபோயுரிஞுறத்திகழ்ந்துதோன்றினன். சு

ஈரடிப்படுத்தனனுலகம்யாவுமற்
றோரடிக்கிடம்பெறாதுதவினன்றனை
யாரிடைப்பாதலச்சிறையினுக்கின
னேருடைப்புரந்தரற்கிறைமைநல்கினன். எ

மறுவறுங்காஞ்சிமாவரைப்பினண்ணுபு
நறுமலர்ச்சடையபிராமநாயகன்
பிறைமுடிக்காட்டுவான்வாமனப்பெயர்
நிறைபுனற்குண்டமொன்றகழ்ந்துநீடியே. அ

புண்ணியப்பூம்புனலாட்டிப்போர்விடை
யண்ணலைத்தொழுதுலகளந்தபேருருக்
கண்ணுதன்மகிழ்வுறக்காட்டிப்பூந்துழாய்ப்
பன்னவனுயிடைப்பணியின்மேயினன். சு

அபிராமீச்சரப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ககஎச.

## 53 கண்ணீசப்படலம்.

கலிவிருத்தம்.

வாமனப்பெயர்மாணிதொழுமபி
ராமநாதவரைப்புவிளம்பின
நாமநீர்த்தடங்காஞ்சிநகர்வயி
னேமமாண்டகண்ணீசமியம்புவாம் க

கடலுயிர்த்தகடுவிடந்தாக்கிமுன்
னுடலெலாங்கரிவுற்றுவெதும்பலாற்
படவராவணைப்பண்ணவன்மாழ்கியவ்
விடமயின்றவிமலனைப்போற்றுவான். உ

கச்சியெய்தினன்கண்ணலிங்கத்தினை
நச்சியன்பினிறீஇநயந்தேத்தினன்
பச்சைமென்கொடிப்பாகன்கருணைகூர்ந்
திச்சையாதுவிளம்புதியென்றலும். ங

குமுதவாய்ப்பசுங்கோமளைகூறநீ
யிமிழ்திரைக்கடல்வெவ்விடமென்பொருட்
டமுதுசெய்தனையங்கதன்முன்னமத்
திமிரகஞ்சஞ்சிறிதெனைத்தாக்கலால். ௪

மேனிமுற்றுங்கருகிவெதும்பினேன்
யானினிப்படும்வெப்பிதுவாற்றலேன்
கானிலாயகடுக்கைத்தொடையொடு
தூநிலாப்பிறைசுற்றியமோலியாய். ௫

பங்கநீக்கிநலந்தருபான்மையாற்
சங்கரன்சிவன்சம்புவுருத்திரப்
புங்கவன்னெனநாமங்கள்பூண்டனை
யங்கணுவடியேனுன்னடைக்கலம். ௬

என்றுமாயனிரந்திதுவேண்டலுங்
கொன்றைமாலைக்குழகனிரங்கிஞான்
மன்றலந்துணர்வாசத்துளவினோ
யொன்றுகேட்டியுனக்கிதுவேண்டுமேல. ௭

என்றும்யாமகிழ்ேகமபலிங்கமுற்
சென்றுநம்முடிதகிங்கணிலைத்தய
னின்றுகச்சிநிலாததுணைப்பாமலனை
வொன்றுநாமம்பெறுதியென்றும்பர்கோன். ௮

நாமவெந்துயர்தீர்திறநல்குபு
வாமமேகலையோடுமெறைநதனன்
றாமலர்த்துளவோனுந்தொழுதெழூஉத்
தீமைதீரத்திருமுன்னர்வைகினான். ௯

கவுசிகீச்சரம்.

கரியவன்பணிகண்ணலிங்கசனை
யுரியவன்பின்வழிபடுவோரும்பர்
மருவிவாழ்குவர்மற்றுங்கவுசிகீச்
சரமொன்றுள்ளதுசங்கரன்றனமே. ௧0

வரையணங்குவடிவிற்கழிந்தகா
ருரிவைகோசத்துதித்தகவுசிகி
யிருமையன்பினிருத்தியருச்சனை
புரியும்பொற்பதுமற்றும்புகலுவாம். ௧௧

மகாகாளீச்சரம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உலகாணித்தடமருங்குமாகாளீசமொன்றுளதுமாகாளனெனும்பேரன்பின்
விலகாதபாப்பரசுவீடுபேறுவிழைந்தேதென்றிசைக்கயிலைவேணித்திங்கட்
கலையானைத்தொழுதுறைநாளாணையாற்குருற்காசூசியிற்போந்தவ்விலிங்கநிறுவிப்போ
நிலமீடுதென்கயிலைமீளகண்ணிநீப்பரியபெருவாழ்வுநிலாயதன்றே. [ற்றி

கண்ணிசப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௭அ௧.

# ௫௪. குமரகோட்டப்படலம்.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கடப்பரும்பிறவிவேலைசுவற்றுங்கண்ணலிங்கமொடுகேவுசிகலிங்க
மடப்பிடிக்கிடமளித்தபிரான்மாகாளலிங்கமெனுமூன்றுமொழிந்தா
மடற்படைச்செறுநர்சேனையனைத்துமழித்துழக்கிநிணமுண்டுதிளைத்துக்
குடர்க்கொழுந்தொடையிலைச்சியசெவ்வேற்குரிசில்வாழ்குமரகோட்டமுரைப்பாம்.

குமாரக்கடவுள்திருவிளையாடல்.

தருக்குமிக்குடையதாருகனென்னுந் தானவர்க்கிறையைவெய்யகளததின்
முருக்கியாருயிர்செகுத்துவிசும்பின்முதல்வனுக்கிறைமைநல்கியபின்னாச்
செருக்கடர்தவடிவேல்வலனேந் துஞ்செம்மல்வெண்கயிலைமால்வரையெய்தி
மருக்கடுக்கைமுடிவள்ளலையோர்பானமலைமடந்தையைவணங்கிமகிழ்ந்து.

அலகிலண்டமுமளித்துவளர்க்குமம்மையப்பர்தமடித்தலமேறி
நிலவரும்புகனிவாயெழில்காட்டிநெடிதுபோதுவிளையாடியடுக்கற்
குலமடப்பிடிகலன்பலபூட்டிவிடுப்பமீண்டுகொடிநீள்கடைவாயில்
வலமிகுத்தகயமாமுகனுவிமாட்டுமுன்னிளவல்வைகுழியுற்றான்.

ஊங்குவன்மடிமிசைக்கொடுபலகாலுச்சிமோந்துகவுண்முத்தமுமுண்டு
வீங்குமன்பொடுதழீஇக்களிகூர்ந்துவிடையளிப்பமுகமாறுடையெங்கோன்
யாங்கும்வைகுகணநாதரிடந்தோறெய்தியாடலுறுவானதுகாலை
யாங்கணுன்முகவனும்பர்குழாத்தோடம்மையப்பரைவணங்கவணைந்தான்.

அங்கணின்றுவிளையாட்டயர்செவ்வேலண்ணலைச்சிறிதுநோக்கலனண்ணி
மங்கைபாகனைவணங்கிவழுத்திவாழ்வுபெற்றுவிடைகொண்டுதனது
பொங்குசீருலகமெய்தியமீண்டான்மீளுமப்பொழுதுமாவயினுடுங்
துங்கவேலிறையைநோக்கலனேகத்தோகைமஞ்ஞையுடையானதுகண்டான்.

பிரமன்சிறையடைதல்.

செழுமலர்க்கமலம்வைகியசெம்மலிகழ்ந்துசெல்லுமறிவின்மைகுறித்து
விழிசிவந்துகுறுமூரலரும்பிவருகவீண்டெனவிளித்தலுமன்னோன்
கழிசெருக்கினன்வணங்கியடங்கிக்கைகள்கூப்பிநணுகிப்புடையுற்றான்
கொழிமறைப்பனுவலான்முகநோக்கிக்குன்றெறிந்தசுடாவேலிறைவிள்ளும்.

யாவனீயுறைவதெவ்விடமன்னும்யாதுசெய்தொழிலுமெக்கலைவல்லாய்
நீவிளம்புகெனயான்பிரமன்சீர்நிறையருட்கருணைநுந்தையெனக்கன்
றேவறுங்கலைகண்முற்றும்விளங்கவோதுவித்துலகநன்குபடைப்பா
னேவவைகுறுவல்சத்தியலோகத்தென்றுபன்முறைவணங்கியுரைத்து.

இமவரைத்தலைவியோடுபிரானையேத்தவேண்டியிவணெய்தினனன்னோர்
தமதுகட்கருணைபெற்றனன்மீண்டேன்றாழ்விலாதுசெய்தவத்திறனுமுன்
கமலநோக்கருளுமின்றுகிடைத்தேன்காதலுன்னடியேனினியென்னூர்க்
கமலநாயகசெல்கின்றனனென்றானறுமுகக்கடவுளன்னதுகேளா.

நன்றுசொற்றனையுணர்ச்சியின்மிக்காய்ஞாலமுற்றுதவுநான்முகனீகொல்
குன்றவில்லியருளாற்கலையெல்லாங்கோதறத்தெளிதலுற்றனையன்றே
யொன்றுமக்கலைகண்முன்னுறவென்னேயோதுமக்காமதன்பொருள்யாதோ
வின்றெனக்கிதுவிளம்புதியென்றானேடவிழ்க்குமலராளியிறைஞ்சி.

ஐயநுந்தையருளின்றியெமக்கோரறிவுமுள்ளதுகொலாதியிலோது
மெய்யெழுத்தையறிகின்றிலனங்கண்விளம்புமுப்பொருளுமியானறிகில்லே
னுய்யுமாகருணைவைத்தெனையாளொன்றுரைத்திரங்துகடிதேகமுயன்றான்
பொய்கடந்தவனுமாதியெழுத்தின்பொருளுரைத்தலதுபோகலையென்ற.

சென்னியைத்தடையவெந்தைபிரான்றன் திருவடிக்கண்விரையாக்கலிலைப்பேன்
பன்னுகிற்றிகடிதென்றலுமன்னேன்பகவனின்றதனிமாமகனீயே
யென்னபல்கலையுமுன்னிடைவைகுமெம்பிரானடியிலாணைதரேல்யா
னுன்னரும்பொருளினுண்மையெனக்குத்தெரிந்தவண்ணமுரைசெய்குவலென்று.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பல்கலைக்குமுதலாகப்புகன்றிடுவதோமென்னும்பதமாமந்தச்
சொல்விளக்கும்பொருளயன்மாலீசனெனுமூவரெனச்சொல்வர்மேலோர்
மல்குமறையுட்பொருளாய்ச்சுடரொளியாயோருடையார்மனத்தேதோன்று
மல்கியசீர்ப்பிரணவத்தையுணர்ந்தவரேவீட்டின்பமடையவல்லார்.

முன்னெழுத்துமதன்பொருளுமிவ்வளவேயானறிந்தேன்முதல்வாபோற்றி
யென்னையினிவிடுத்தருளாயெனலோடுங்கணங்கண்முகநோக்கியன்னோன்
புன்னிலையன்சிறிதேனுமுணர்ந்திலான்றருக்குமிகப்பூண்டான்கண்டீர்
துன்னரியசிறையின்கண்மற்றிவனைப்புகுத்துமெனவெகுண்டுசொல்லி.

தன்வரைப்பிலலரோனைச்சிறைபடப்பித்துலகமெலாந்தானேதோற்று
மிந்நிலைமைத்தலைநின்றானறுமுகவேளுடனமைய்துமுனிவர்தேவ
ரன்னவனைக்கொடுபோதப்பின்சென்றாரவ்வரைப்பினளவுமப்பாற்
கன்னவிரேட்கணநாதர்பிடித்துந்தமீண்டமுங்கிக்கயிலைபுக்கார்.

பெருமான்பிரமன்சிறைவிடுவித்தல்.

புக்கிறைவன்றனைவணங்கிநிகழ்ந்தவெலாம்விண்ணப்பஞ்செய்யப்பூந்தே
னக்கநறுந்தொடையிதழிக்கடவுளவர்தமைநோக்கிநவில்வானென்னே
யக்கமலன்விளம்பியவாநம்மையுநம்புதல்வனையுமன்றேமாண
மிக்கபுகழ்ச்சுருதியெலாம்பிரணவத்தின்பொருளாகவிளம்புமாறே.

எக்கலைக்கும்பூதங்களெவற்றினுக்கும்பிரமனுக்குமீசனென்னத்
தக்கமுதலபரப்பிரமஞ்சதாசிவனேமெனவேதஞ்சாற்றுமல்லான்
முக்கனல்சூழ்வேள்வியிற்சுப்பிரமணியனேமெனவுமுக்காற்கூறு
மிக்கருத்தையறியானையெவ்வாறுவிடுவிப்பதியம்புமன்னே.

அருள்வலியாலாங்கவனைவிடுவித்துமஞ்சேன்மினென்றுகூறித்
திருநந்திநாயகனையெதிர்நோக்கியறுமுகன்பாற்சென்றுமுற்றுந்
தருகின்றான்றனைவிடுமோவெகுளேலென்றெம்முரையாநசாற்றிதேன்பாய்
மருவொன்றுமலரோனைவிடுவித்துநம்மாட்டுக்கொணர்தியென்றான்.

வேத்திரத்தின்படையாளிவிடைகொண்டுவேற்படையோனுலகநண்ணி
மாத்தடிந்தபெருமானைத்தொழுதிறைஞ்சியெங்கோவேமழுவாளெம்மான்
பூத்தவிசிற்புத்தேளைநீவிடுமாறருள்செய்தானென்றுபோற்றி
யேத்துவழியறுமுகவேளிதழதுக்கிவெகுளுதலும்வெருவிமீண்டான்.

பிஞ்ஞகன்றிருவாணைவிண்ணப்பஞ்செய்சிறிதும்பேணுகி
மஞ்ஞையூரான்சினவுதலின்வெரீஇப்பெயர்ந்தேனெனநந்திவள்ளல்கூற
மொய்ஞ்ஞிமிறுமுரல்பூந்தார்க்கடவுளருமுனிவருங்கேட்டுத்தம்முட்
கைஞ்ஞெரித்தார்வெருக்கொண்டாரிறைவனேகாவாயென்றடியில்வீழ்ந்தார்.

சயிலாதிவாய்மொழியுஞ்சுரர்முனிவர்மனத்துயருந்தரைசால்வெள்ளிக்
கயிலாயத்தெம்பிரான்றிருவுளத்திற்கொண்டருளிக்கருணைகூர்ந்து
மயிலாலுமலைமகளோடெழுந்தங்கணமகவிருப்பாலெய்தநோக்கி
யயிலாளுந்திருக்கரத்தான்விரைந்தெதிரசெனறடிவணங்கிப்போற்றிநின்றான்.

அனையானையிருவர்களுமடித்தலமீதிருத்திமகிழ்ந்தன்புகூரக்
கனிவாயின்முத்தங்கொண்டுச்சிமோந்தகங்கனியத்தழீஇயபின்ன
ரனையாளுஞ்சிவபெருமான்குறுமூரலெழில்காட்டிமேனிதைவந்
துணையோராவேதியனைச்சிறைவிடுத்திமைந்தவென்றுரைத்துப்பின்னும்.

## சேனாபதீச்சரப்பிரதிட்டை.

நம்மாணைகடந்தனையாலன்னதற்குக்கழுவாய்நீயியற்றதல்வேண்டும்
வெம்மாயமணுகரியதிருக்காஞ்சிநகர்வரைப்பின்மேவியன்பி
னம்மாடேசேனாபதீச்சரமென்றோரிலிங்கமருச்சித்தேத்திக்
கைம்மாணத்தவம்புரிதியென்றருளக்கேட்டெழுந்தான்கடப்பந்தாரான்.

திசைமுகனைக்கணங்களாற்சிவபெருமான்றிருமுன்னர்ச்செலுத்தியுள்ளப்
பசையினிருமுதுகுரவரடிவணங்கிவிடைகொண்டுபழனக்காஞ்சி
வசைகடந்தநகரெய்தியுலகாணித்தடமேல்சார்மாகாளப்பா
லிசைவிளங்குதேவசேனாபதீச்சரவிலிங்கமிருத்திப்போற்றி.

புள்ளிமான்றோலுடுக்கைமுஞ்சிநாணரைப்பொலியவக்கமாலை
தெள்ளுநீர்க்குண்டிகையுங்கரத்தொளிரத்திருக்குமரகோட்டமென்னு
முள்ளியோர்பிறப்பறுக்குமாசிரமத்தினிதிருந்தானுறுவர்போற்ற
வள்ளியாரிணைக்களபமணிக்கலசமுலைதிளைக்கும்வாகைத்தோளான்.

குருமணிகள்வெயிலெறிப்பக்குயிற்றுநீண்மதிறகுமரகோட்டமோரா
விருவிழியிற்காண்டல்பெறிற்கடையோருமெழுபிறப்பினமறையோராவா
திருமறையோர்முதலானோர்தொழுதிறைஞ்சப்பெறுகிற்பிறறேவர்தேருப்
பொருணிலைமைதெளிந்தின்பப்பெருவீட்டிற்பரபோகந்திளைத்துவாழ்வார்.

கறங்கருவிப்பொலங்குடுமிவரைகிழித்தநெட்டிலைவேற்கடவுள்போற்றப்
பிறங்கியவித்தேவசேனாபதீச்சரமுதலைப்பெட்பினேத்தி
மறங்குலவுஞ்சுடராழிவலனேந்துமாலுருகுமுள்ளத்தானென்
றறங்கரைவாரெடுத்துரைக்குமொருதிருப்போபெறறுணம்முறையுஞ்சொல்வாம்.

## மகாப்பிரளயம்.

கலிநிலைத்துறை.

முள்ளரைச்செழுந்தாண்மலர்முளரிவீற்றிருக்கும்
வள்ளல்கற்பமொன்றிறுதலும்யாவையுமலங்கப்
பொள்ளெனப்பரந்துலகெலாம்விழுங்கியபுணரி
வெள்ளநீர்மிசைமிதந்தனன்மார்க்கண்டிமேலோன். உஎ

தனியனாகிவெஞ்சலதியினூழிதருந்தகைசால்
புனிதமாதவனாயிடைப்பொறியராத்தவிசி
னினிதுகண்வளர்மாயனைக்கண்டுசென்றிறைஞ்சி
நனிமகிழ்ச்சிமீக்கிளர்ந்தெழுமனத்தொடுநவில்வான். உஅ

நகைமலர்த்துழாய்நாயகனாலமற்றெவையும்
பகல்செய்வெங்கதிர்ச்சண்டமாப்பரிதிநின்றெரிப்பத்
துகள்படுஞ்செயல்கண்டயானத்துணைப்பொழுதி
னிகழருந்திறலறிவுபோயெய்தினன்மயக்கம். உ௯

ஏய்ந்தமையறீர்ந்திதுபொழுதுணர்ச்சிவந்தெழுந்தேன்
காந்துவெம்புனற்கடுந்திரைப்பரப்பிடைமிதந்து
நீந்திநீந்தியென்னெடியகால்கரங்களுமெலிந்தே
யோய்ந்தநல்வினையிருந்தவாறனையிவட்கண்டேன். ௧௦

நிலமடக்கொடிவனமுலைதிளைக்குநீண்மார்ப
வுலகமெங்கணுங்கருகிருண்மூடியதுரவோ
யிலகுபேரொளியிருசுடர்யாங்ஙனம்போய
குலவுமேனையகோளொடுநாள்களெங்கிறந்த. ௧௧

சகமிசைப்பயில்பொருளெலாமெய்வழிச்சார்ந்த
திகழுநீயெனக்கிவையெலாந்தெரித்தியென்றிரப்ப
நிகழுமாதவன்மாதவன்றன்னைநேர்நோக்கி
யகலிடத்துளபொருளெலாமென்னகட்டுளவால். ௧௨

மார்க்கண்டர்மாயையைமுனிதல்.

புகுந்துநோக்குதியென்றலுமுனிவரன்புகலவான்
முகுந்தமுன்னொருகுமபதநிமமொழியினனென்றே
மிகுந்தவஞ்சனைப்படுத்தனையிளமதுப்பிலிற்றி
நகுந்தடம்பொகுட்டமலர்வாழ்நகைநான்முகனை. ௧௩

முனைகடந்தவேன்மணிமுடியம்பரீடன்றன்
மனையினூரதப்பருப்பதமுனிவரைவஞ்சித்
தனையமன்னவன்புதல்வியைக்கவர்ந்துகொண்டகன்று
யினையமாவலிதனக்குமுன்வஞ்சனையிழைத்தாய். ௧௪

இன்னவாறனைநம்புநரடியவரிடத்துந்
துன்னுமாயமேசெய்வதுன்றொழிலெனக்கண்டே
னின்னையஞ்சுகேமெனறிகெகொடுஞ்செயலமென்றியம்பி
யன்னநீரினைக்கரங்கொடுநீந்தியங்ககன்றான். ௧௫

மார்க்கண்டரநள்பெறல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செல்லுமெல்லைநீர்மிசைத்தோன்றும்வேதமாஞ்சினைப்
பல்லவங்கள்கண்டவைபற்றியுள்ளிழிந்தன
னெல்லையங்கணேக்கினனொளிப்பிழம்பினிடிய
மல்லலம்பொனிஞ்சிசூழ்மாடகாஞ்சிமாநகர். ௧௬

எற்றுதெண்டிரைப்புனற்குஞ்சியினவனைப்பவெண்
புற்புதத்தினுள்வெளிப்பொற்பெனைத்திகழ்ந்துநீ
ளொற்மைமாவினூருவொளிதுளுப்பமன்னுமூ
ரற்புதத்தைநோக்குதோறற்புதத்தனாயினன். ௧௭

அங்கணெய்ப்புநீத்தபினன்னல்கம்பவாணரை
யுங்கணெய்தியர்ச்சனையுஞற்றியவ்விராவெலாந்
துங்கமாவினீழல்வாழ்சோதிமுன்னர்வைகினன்
சங்கமாழியேந்தியோன்றானுந்தொடரநண்ணினன். ௧௮

விஷ்ணுவரங்கோட்டமைதல்.

நண்ணுநெறியிற்காஞ்சிமாநகரமெய்தியங்ககர்
வண்ணமுற்றுமற்புதமருவநோக்கிமாநிழ
லண்ணலாரையேத்தியம்முனிவன்சொன்னயாவையு
மெண்ணியெண்ணிநெஞ்சுளைந்தென்னினைந்தவாறெனா. ௧௯

சேர்ந்தவர்க்குவஞ்சமோரொடொறுஞ்செய்கின்றனேன்
வார்ந்தகூந்தலம்பிகைமாயையின்மயங்கினே
னேர்ந்தமாயநீக்குமாநீள்வரைப்பிராட்டிதாள்
சார்ந்துபோற்றுவேனெனத்தனிப்பிலத்தைநண்ணினான். ௬

ஆயிடைப்பிராட்டியையருச்சித்தேத்தியருளினான்
மாயநீங்கிமெய்யுணர்வெய்திப்பஞ்சவாவிநீ
ரேயமூழ்கித்தேவசேனாபதீசத்தேகியந்
நாயனாரைவிதியுளிநயந்துபூசையாற்றினான். ௭

கருணைகூர்ந்துநம்பனார்காட்சிதந்தளித்தலும்
பரசியேத்திநின்னடிப்பத்திமாறிலாவர
மருளவேண்டுமெய்த்தவரடியர்மாட்டுவஞ்சனை
யொருகணத்துமெண்ணிடாவுளமெனக்குவேண்டுமால். ௮

ஈண்டுநின்புதல்வனேடெந்தைதிருமுன்வைகவும்
வேண்டுமென்றிரந்துவிண்ணப்பஞ்செய்யவெண்பிறை
நீண்டசெஞ்சடைப்பொதிநிருமலப்பரம்பொரு
ளாண்டகைப்பிரான்மகிழ்ந்தன்னவாகவென்றபின். ௯

என்றுமன்பினேகிநீயுருகுமுள்ளக்கோயிலா
னென்றுநாமமெய்துகென்றருளியிறைவனீங்கினான்
குன்றெடுத்துமுந்துகோநிரைகள்காத்தகுரிசிலு
மன்றலவெட்சிமாலையானருளினங்கண்வைகினான். ௧0

கூறுமினையமேன்மைசால்குமரகோட்டவைப்பினிற்
பாறுநச்சுவேலினான்பாதமங்கியநிலநாள்
வேறுநாற்றினங்களில்விரும்பிச்சென்றிறைஞ்சினோர்
பேறுமுற்றும்யாவரேபேசவல்லநீர்மையார். ௧௧

குமரகோட்டப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௫௩௯

## 55 மாசாத்தன்றளிப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நறைகொப்புளிக்குநறும்பொருட்டுநளினவாழ்க்கைப்புத்தேளைச்
சிறையிற்புகுத்தும்பெருமானார்குமரகோட்டச்சிறப்புரைத்தா
நிறையப்பூத்தமலர்ப்பொதும்பர்நீடுமதற்குத்தென்றிசைக்கண்
முறையிற்றிகழுமாசாத்தமுதல்வன்றளியெடுத்துரைப்பாம். ௧

கூராகூரர்கலகம்

வைவாளெயிற்றுத்தானவரும்வானாட்டவருமந்தரத்திற்
பைவாய்த்தாம்புபிணித்தீர்த்துக்கடைந்தஞான்றுபரவையெழும்
வெவ்வாய்நஞ்சமிடற்றடக்கிவெருவாதளித்தபெருங்கருணை
யைவாய்ப்பணிப்பூட்பெருமானாரருளான்மீளக்கடைந்தவழி. ௨

சேட்டையணங்குதிருமணியான்றெய்வமகளிர்மருத்துவர்நாற்
கோட்டுமதமாமுதல்பலவுங்குரைநீர்க்கடலுட்டோன்றியபின்
வாட்டுமிறவிப்பெரும்பிணிக்குமருந்தாவமிழ்தந்தோன்றுதலும்
வேட்டவிண்ணோரவுணர்களுநந்தம்முட்கலாங்கள்விளைத்தனரால். ௩

### மாயோன்மோகினிவடிவமாதல்.

ஆற்றன்மிகையாற்சுதைக்குடத்தையடல்வாளவுணர்கைப்பற்றத்
தோற்றுமறுகிப்புத்தேளிரலமந்தேங்குந்துயர்நோக்கிக்
காற்றும்பிரசநறுந்துளவக்கமஞ்சூற்கொண்டலிணைவிழிக்குக்
கூற்றம்பதைக்குமோகினியாம்வடிவமாங்குக்கொண்டனனால்.

கலிவிருத்தம்.

இரண்டறப்பெண்மையுமெழிலும்வஞ்சமுந்
திரண்டுருக்கொண்டெனத்திகழ்ந்துதோன்றிமான்
முரண்டகுமவுணர்கைக்கொண்டமூரிநீர்
வரண்மோமணிக்கடலமிழ்தம்வாங்கினன். ௫

வாங்கினின்றசுரருஞ்சுரரும்வல்லையே
யாங்கணீர்நிரைநிரையாகவைகுமி
னீங்குநல்லமிழ்தமெல்லீர்க்கும்வேட்டவா
பாங்குறத்தனித்தனிபகுந்துநல்குகேன். ௬

வேல்விழிமாதர்யான்வீழ்ந்துளார்பெறச்
சாலநல்குவலெனச்சலதிச்சேக்கைவாழ்
வால்வளைக்குடங்கையான்மகிழக்கூறலுங்
கோல்வளைத்திதிமைந்தர்குறித்துநோக்கினர். ௭

கேசாதிபாதவர்ணனை.

எழுசீரககழிநெடிலாசிரியவிருத்தம்.

கலிதிரைமுகந்தசூன்முகில்விளாப்பக்கடைகுழல திருண்டுகெய்த்தொழுகிப்
பொலிவுறமகரம்வலம்புரிதிரித்திஙியெஃகிடைதொட்ட பூங்குழலைக்
குலிகநீரளவிமழவிளம்பரிதிக்குரூஉச்சுடருரிஞ்சியகாட்சி
யிலகொளித்தேய்வையரும்பெறற்றிலகமிட்டகீற்றிளம்பிறைநுதலை. ௮

மாற்றருமதுகையைங்கணைக்கிழவனவாங்கியநறுஞ்சுவைத்தேறல்
காற்றுவெஞ்சிலைக்குச்சிலைதொழில்பயிற்றுங்கட்டெழிற்புருவமென்கொடியைச்
சீற்றவல்விடமுமமிழ்தமும்விரவிச்சிதரரிபரந்துமைதோய்ந்து
கூற்றரசிருக்குமிணைவிழிகளவுகொள்ளநோக்கிடுஞ்சிறுநோக்கை. ௯

செயிரறுந்தரளவெண்மணிநாலத்திருந்தெழில்படைத்தெதிர்கண்டோ
ருயிரினைப்பருகிக்குமிழெனத்திகழ்ந்தவொள்ளொளிநாசியின்வனப்பை
வெயில்விடுமணிப்பூட்காளையர்மனங்களாடுபொன்னூசலின்விளங்கி
மயிரெறிகருவிமுதலெனக்கவின்றுமணிக்குழைவயங்கிருசெவியை. க0

குயிலினஞ்சமழ்ப்பக்குழலிசைபழகுஞ்சின்மொழிக்குறுநகைமொக்குட்
கயிரவமலர்ந்தசெய்யவாயமிழ்தமூற்றெழுங்கனியிதழொளியைப்
பயிலிருளொதுக்கிப்பாளிலாககான்றுபடரொளிபரப்புவெண்மதிய
முயலறுத்தெழுந்தாலனையபேரழகின்முண்டகவாண்முகமலரை. கக

மடலவிழ்ப்பாளைப்பசியபூங்கமுகோவயிறுநொந்தலறிமுத்துயிர்க்குங்
குடவளைப்பொலிவோவெனமருளுறப்பக்கவின்குடியிருந்தகந்தரத்தைக்
கடிகமழ்கொளுஞ்சாறெழுகமென்கரும்பைக்கண்ணறததகர்ந்திளம்பணையைத்
தடவரைப்புகுத்தித்தொடையலைவாட்டித்தகையமையணிகெழுபுயத்தை.

மடிதிரைப்பரவையமுதுறழிசையமகரயாழ்புறங்கொடுத்திரியத்
தொடிகளும்வயிரக்கடகமுஞ்செறித்துத்தூநலம்படைத்தகூர்ப்பரத்தை
கொடிபயில்கிள்ளைப்பவளவாய்கடுக்குநுதியுடைக்கூருகிர்வனப்பிற்
படியறுவிரல்வாய்ந்தொள்ளொளிதுளும்பும்பணிமலர்க்காந்தளங்கரத்தை.

சுணங்குடைவனப்புமாசறுமெழுதற்றொய்யிலுஞ்சந்தனக்களியு
மிணங்கியன்றூ தபாதிகாண்டகமேற்படாம்பொதியினறுமலைப்பொருப்பை
யணங்குறுத்திளையோர்மதியினைப்படுக்கும்படுகுழியனையவுந்தியின்மே
லுணங்குவண்டொழுக்கிற்கருமயிரொழுகிநோக்கமைசிறுவயிற்றழகை.

கொடியெனநுடங்கிவேளெனக்கரந்துகுவிமுலைக்கிடைந்துசெந்தளிர்க்கைப்
பிடியினுளடங்கித்தடியெனச்சுருங்கிமின்னெனப்பிறங்குநுண்ணுசுப்பைப்
படிமையர்சீலக்குறும்பெலாமடக்கிநடுவுயர்ந்தகன்றெழில்படைத்து
வடிமலர்ப்பகழிவேந்தரசிருப்பவயங்கியவல்குலின்பரப்பை கரு

நெட்டிலைக்கதலித்தண்டெனச்சேர்ந்துசெறிந்துநீள்விலைவரம்பிகந்த
வட்டொளியரத்தநுழைமிழைக்சகிங்கமணிகெழுவளம்பயில்குறங்கைக்
கட்டெழின்மதவேளூதுகாளமுங்கணைபொதியாவகாழிகையும்
பெட்டவர்மருளவீற்றிருந்தனையபிதிரொளிப்பொற்கணைக்காலை. கசு

கறுத்தவாண்முகனைவெரீஇப்பதம்பணியுங்கலைமதிவெள்ளுகிர்மதனால்
பொறித்தபுத்தகமாம்புறவடியன்னமென்னடைப்பூந்தளிரடியைக்
குறித்துரையுவமைக்கிடம்பெறுதள்ளிக்கொளத்தகும்பேரழகமைந்த
மறுத்தபூமேனியிளநலங்கனிந்துமணிநிறம்வயங்குகோமளத்தை. கஎ

மாயோனமுதமளித்தல் - சாத்தனாவதாரம்,

கலிவிருத்தம்.

காண்டலுமாரவேள்கணைக்கிலக்கமாய்
மாண்டனரெனவறிவழிந்துமையலுய்
பூண்டனர்தானவர்மடந்தைபோல்வரு
மாண்டகைமாயையாலவரைவஞ்சித்து. கஅ

கடவுளர்க்கமுதெலாங்கடுகவீந்தவர்
வடிவெடுத்துடனுறவதியிராகுவைத்
தடநெடுமழையானரிந்துதானுமக்
கடலமிழ்தருந்துபுகளிப்பினீடினன். ககூ

வேறுகொளவுணரைநூட்பின்வென்றுபோய்
மாறமொழியானிருக்கைமன்னினு
னேறணினெடுங்கொடியெரியினீள்சடை
யாறணியடிகளிவ்வனைத்துங்கேட்டரோ. உ௦

தன்னடிவழிபடச்சார்ந்தமாயனை
யன்னவையென்னெனக்கடாவியவ்வுரு
வென்னெதிர்காட்டுகென்றியம்பச்சார்ங்கனு
மன்னியமலைமகள்வதனநோக்கியே. உக

மையல்செய்மோகினிவடிவங்காட்டுபு
வெய்தெனகடந்தனன்வேலைவென்றகோ
னெய்யெனவெழுந்துசென்றுற்றுப்புல்லவுங்
கையகன்றோடினன்கரியமேனியான். உஉ

மறுவலுமெம்பிரான்வலிந்துபற்றியாங்
கிறுகுறத்தழீஇயினனினையகாலையி
னுறுபுகழ்சாத்தனாங்குவர்க்குத்தோன்றினு
னிறுமுறையுலகெலாநிறுத்துங்கோலினன். உ௩

சாத்தனார் சிவப்பிரசாதம்பெற்றுவந்தல்.

ஆயபின்கேசவன்வெள்ளியண்டர்கோன்
சேயதாடொழுதுதன்னுலகஞ்சேர்ந்தனன்
பாய்புகழ்சாத்தனும்பகவன்றாளிணை
வாயினாற்றுதிசெய்துவணங்கிவேண்டுவான். உ௪

அரிலறச்செய்பணியருளிநின்னருட்
குரியபேரிறைமையுமுதவவேண்டுமோற்
கருவிடம்பருகியகளகணெந்தைநின்
றிருவடிச்சார்புடைச்சிறியனேற்கென. உ௫

மறைமிடற்றெம்பிரானியம்புமைந்தகே
ளிறைமைநம்மருளினாலெய்தற்பாலதா
மறைதருமருளுமெய்யன்பினாவதப்
பொறைகெழுபத்தியும்பூசைப்பேறரோ. உ௬

பூசையாவதுசிவலிங்கபூசையத்
தேசமையருச்சனைக்கிடனுஞ்சீர்த்திசா
லாசறுதலங்களாமங்கவற்றினுங்
காசிமற்றதனினுங்காஞ்சிமாநகர். உ௭

கண்ணகன்புரிசைசூழ்காஞ்சிவைப்பிடைப்
புண்ணியச்சிவக்குறிநிறுவிப்பூசித்து
விண்ணவர்தவமுனிவேந்தர்யாவரு
மெண்ணரும்பேறுபெற்றின்பநீடினார். உ௮

ஆயிடைநீயெமையருச்சித்தேத்துதி
மாயிருந்தலைமைநாம்வழங்குகேமெனச்
சேயிழைபங்கினனருளிச்செய்தலுங்
காயிலைப்படையவன்காஞ்சிநண்ணினான். உ௯

உருகெழுபனிவரைப்பிராட்டியொண்மலர்த்
திருவடிச்சுவடுதோய்செல்வக்காஞ்சியின்
மருவிவேற்கடவுளைவழுத்தியாங்கவ
னருளினாற்சிவக்குறிநிறுவியர்ச்சித்தான். ௩0

மறைமுதல்விடைமிசைத்தோன்றிமற்றவற்
கறைகழலிமையவருருகுசூழ்தர
முறைகெழுபூதங்கண்முழுதுங்காப்புறு
மிறைமையின்மணிமுடியினிதுசூட்டினான். ௩௧

பல்கரிவீரர்தேர்பரிகடம்முட
னல்கியதலைமைபெற்றனையசாத்தனு
மொல்கிடைமலைமகளுவகைமீக்கொள
மல்குசீர்ப்பிலத்தயன்மகிழ்ந்துவைகினான். ௩௨

கடாரிகையேழுயர்கரிகண்மேல்கொடு
நடாயுளங்களித்திருமாக்துகாடொறும்
வடாதுபாற்செண்டணைவெளியின்மாறடு
மடாவலிபடைத்தவனுடல்பேணுமால். ௩௩

வலம்படர்சிறப்பின்மாசாத்தனைத்திய
நலம்படர்கருணைமாசாத்தநாதனைப்
புலம்படர்சிந்தையாற்போற்றப்பெற்றவ
ரிலம்படாரிருமையுமின்பமெய்துவார். ௩௪

மங்களீச்சரம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மற்றதன்வடபான்மலைமகளிகுளைமங்களைமண்டபமிழைத்து
வெற்றிமண்டபத்தின்பிறகுறமங்களீசனைவிதியுளிநிறுவி
யற்றமில்சிறப்பின்மங்களதீர்த்தமகழ்ந்துநீராட்டுபுதொழுதாள்
பற்றுமங்களநாளத்தடம்படிந்துபணிபவரிருமையும்பெறுவார். ௩௫

இராமநாதீச்சரம்.

உரைத்ததன்குடபாற்றசரதன்மதலையரக்கனையடுபழியொழிப்பா
னருட்குறியிருத்திச்சேதுவிற்றொழுதங்கண்ணலாரேவலிற்காஞ்சி
வரைப்பினுற்றிராமநாதனைநிறுவிவழிபடூஉக்கொடுவினைமாற்றித்
திரைப்புனலயோத்திப்புகுந்தரசளித்தான்சேதுவிற்சிறந்ததத்தலமே. ௩௬

மாதலீச்சரம்.

இனையதன்வடபான்மாதலியென்பானிராகவனிலங்கையர்கோமான்
றனையடுஞான்றுவாசவன்விடுப்பத்தயங்குதேர்செலுத்துவானாகி
நனைமலர்வாகைமுடித்தபினிராமன்றன்னொடுகாஞ்சியைநண்ணிப்
புனைபுகழ்மாதலீச்சரந்தொழுதுபுரந்தரற்கினியவனானான். ௩௭

மாசாத்தன்றளிப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௮௬௮.

# 56. அனந்தபற்பநாபேசப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வருவினைதெறுமாசாத்தன்றளியொளிமங்களீசந்
திருவிராமீசமாதலீச்சரந்தெளியச்சொற்றாந்
தருவலர்நிரந்தமுன்றின்மாதலீச்சரத்தின்மேல்பா
லொருவில்சீரனந்தபற்பநாபத்தினுண்மைசொல்வாம். ௧

உமாமகேசன்திருவிளையாடல்.

எண்ணருமுயிர்களீன்றவிருமுதுகுரவராகே
ரண்ணலங்கயிலைவெற்பினமர்வுழியொருநாளங்க
ணுண்ணிறைகளிப்பினீடியொள்ளொளிமணிச்சூதாடக்
கண்ணினரகிலமுய்யக்கண்ணிணரனையகாலை. ௨

மாலையந்துளவோனெய்திவணங்கிச்சாந்தாற்றிக்கோடன்
மாலையனாகிநின்றுமெய்வெயர்மாற்றநோக்கி
மாலைவெண்பிறைதாழ்வேணிவள்ளலுமுமையுமாங்கண்
மாலையவ்வினைக்குச்சான்றுவைத்தனராடினார்கள். ௩

பிடித்தெறிகவருட்டத்திற்பின்னுகன்றேற்பச்செங்கே
ழடித்தளிர்ப்பிராட்டிநோக்கியடிகளைவென்றேனென்றாள்
விடைக்கொடிப்பெருமான்யாமேவென்றனமென்றான்பாச
முடைத்தவர்தங்கட்கிவ்வாறுற்றனகலாங்கண்மேன்மேல். ௪

மாயோன்சாபமடைதல்.

யாமினிக்கலாய்த்தல்வேண்டலொழிகெனவிருவர்தாமு
மாதணிமார்பன்றன்னைவிளுதலுமாயோனையன்
ருமறைவதனநோக்கித்தலைவனும்வென்றானென்றான்
கோமளங்கவின்றமேனிக்கோற்றொடிசீற்றங்கொண்டாள். ௬

கண்டதுகண்டவண்ணங்கழறிலைவாரம்பற்றித்
தண்டுணர்த்துளவத்தாரோய்கைதவச்சான்றுசொற்று
யண்டரும்பிறருமேசுக்கட்செவியாதியென்று
வொண்டொடிச்சபிப்பமாயோனுளம்பதைத்திரந்துபோற்றி. ௬

மாயோன்சாபநீத்தருள்பெறல்.

அடியனேன்மடமைநீராலறைந்ததுபொறுத்துச்சாப
முடிவளித்தருளாயென்றென்றேக்கறமுதல்விநோக்கி
நெடிதருள்சுரந்துமாயோயஞ்சலைநிலைநீர்க்காஞ்சிக்
கடிநகர்வரைப்பினேகிக்கடிதெமைப்புரிதிபூசை. எ

இகழறுமிலிங்கவேதியென்னுருவிலிங்கமூர்த்தி
திகழ்மதிச்சடிலமோலிச்சிவபிரான்வடிவுகண்டாய்
புகழ்தருமிலிங்கவேதிப்பொற்பினுலென்னைநின்பேர்
நிகழ்வுறநிறுவிப்போற்றிநீக்குதிசாபத்தீமை. அ

நலம்புரியனந்தபற்பநாபனென்றேங்குவாயால்
வலம்புரிக்கரத்தோயென்றுவழங்கினளுகுவவுத்திண்டோ
ளுலம்புரியனந்தபற்பநாபனுமுமையாடன்னைப்
பொலம்புரிசடிலத்தேவைத்தொழுதுபோய்க்காஞ்சிபுக்கான். ௬

வணங்கினன்றிருவேகம்பமற்றதனயலேவேதி
யிணங்குறுமனந்தபற்பநாபமாவிலிங்கம்பூசித்
தணங்கருள்பெற்றுப்பாந்தண்மூதுரியகற்றியாங்குப்
பிணங்கியசாபநீத்துப்பேரருட்குரியனானான். க0

அனந்தபற்பநாபேசப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - க௲எஅ.

---

## 57. கச்சிமயானப்படலம்.

கொச்சகக்கலிப்பா.

சிற்பநிகழ்மணிமாடநெடும்புரிசைத்திருவனந்த
பற்பநாபேசத்தின்பரிசறிந்தவாறுரைத்தா
நிற்பனவுஞ்சரிப்பவுமாய்நிறைந்தபிரானினிதுறையு
மற்புதமாந்திருக்கச்சிமயானத்தினடைவுரைப்பாம். க

பண்டாசுரன்பிறப்பு.

முன்னொருநான்முகன்புருடப்பெயர்க்கற்பமுடிவெய்திப்
பின்னுறுசீரகோரமாங்கற்பத்துப்பிறங்குலகின்
மன்னுயிர்கள்வளர்ந்தோங்கிவைகுநாள்விறற்பண்ட
னென்னுமொருவல்லவுணனிப்புவனத்துளனானான். உ

அங்கவன்செய்மாதவத்தாலகமகிழ்ந்துகாட்சிதரும்
பங்கயனையடிவணங்கிப்பன்னுசுராசுரர்முதலோர்
தங்களுடம்பிடைவிரவித்தகைபெறுவீரியமனைத்து
நுங்கவரமருளென்றான்முண்டகனுநுனித்தெண்ணி. ௧

அற்றாகென்றகலுதலுமவுணர்கோனுடம்புதொறு
முற்றாவியுடன்விரவிவீரியங்களுண்டிருப்பப்
பற்றாயவீரியம்போயாருயிர்கள்பருவந்து
வற்றுதவொளிமாழ்கிவளர்வின்றியஃகினவால். ௨

சுராசுரர்துயர்கூறித்துதித்தல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருத்துவரியக்கர்வானவரவுணர்மானிடர்சித்தர்கந்தருவ
ருருத்திரர்வசுக்களிராக்கதருக்கருரகர்சாத்தியர்மருத்துக்க
ளருத்திகூர்விரிஞ்சனச்சுதன்பிறருமவ்விடராற்றலர்குழுமித்
திருத்தகுகயிலைப்பருப்பதம்புக்குச்சிவபிரானடிதொழுதுரைப்பார். ௩

வீரியமின்றிவலிகுறைந்தடியேம்வெற்றுடம்பெனத்திரிகின்றேங்
காரணங்காணேமன்னதுதவிர்க்குமுபாயமுங்கண்டிலேமென்று
நாரணன்முதலோருலந்துநின்றிரப்பநாயகனகைமுகிழ்த்துரைக்குஞ்
சீரியநுமதுவீரியமுழுதுந்திருந்துபண்டாசுரன்கவர்ந்தான். ௪

ஆங்கவனெல்லாவுடம்பினும்விரவியாவியோடுறைதலினெவ்வா
றீங்கினிவெல்லப்படுவனென்றருளவிமையவர்யாவரும்வெருவி
மாங்குயிற்கிளவிமலைமகள்கொழுநாமறிதிரைவளைகடலுயிர்த்த
பூங்கடுமிடற்றுப்புனிதனேயெம்மைப்புரப்பதுன்கடனெனத்துதிப்பார்.

வேறு.

முடிவிலாற்றலைதன்வயத்தினைமுற்றுணர்ச்சியைபேருண்
மடிவிலாட்சியைதூயமேனியைமற்றியற்கையுணர்ச்சியை
படியிலாவியல்பாகநீங்கியபாசநோயைவரம்பிலின்
புடையையுன்னடியேங்களென்றுமுனக்கடைக்கலமையனே. ௮

அண்டமோரணுவாம்வளர்ச்சியையணுவினுண்ணியையண்டமார்
பிண்டமெங்கணுநின்றசைக்குநிமித்தனைய்நிறைபெற்றியை
கண்டயோகியர்சிந்தைமேயினைகரணமுற்றுமகன்றனை
யொண்டொடிக்கொருபங்கயாங்களுனக்கடைக்கலமையனே. ௯

பிரமமென்மருமீசனென்மருஞ்சிவனென்மரும்பேதுறுங்
கருமமென்மரும்வேறுமவ்வவகடவுளென்மருமாகியே
முரணியவ்வவர்பேசநின்றருண்முதல்வனேமுதலீறிலா
வொருவனேயடியேங்களென்றுமுனக்கடைக்கலமையனே. ௧0

சிவபிரான் வேள்வியிற் பண்டனுேலேகையோடுக்கல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இனையவாறுளக்களிவரப்பழிச்சுறுமிமையவர்தமைநோக்கிக்
கனைகழற்பிரான்வீரியம்பெறுவதேகருத்துமக்கெனிலேற்கும்
வினைமுடித்தவற்கொல்லுதுமல்லதுவிரவியெங்கணுநிற்கு
மனையகள்வனைச்செகுத்திடஎரிதுமக்கினைவுகொலதுவென்றான். ௧௧

ஐயன்வாய்மொழிகேட்டலுங்கடவுளரவ்வினைதாழாமே
செய்யவேண்டுமேற்றலகெலாம்புரப்பதெம்மிசைவுபெற்றேசெந்தீக்
கையனேயெனத்தலைவனும்மன்னதேற்காஞ்சியினுமதாக்கை
வெய்யசெந்தழற்குழியிடையவியெனவிரவுகென்றருள்செய்தான். கஉ

யாங்களிங்கிருந்தென்பயனின்சுடர்க்குழியிடைக்கரந்தேமே
லோங்குமின்பமேதலைப்படப்பெறுதுமென்றுரைத்தடிதொழுதேத்து
மாங்கவர்க்கெலாம்விடையளித்தருவரையணங்கொடுந்திருக்காஞ்சி
ஞாங்கரெம்பிரான்செழுந்தழற்பிழம்பொளிகலந்திகழுருக்கொண்டான்.

அளப்பருஞ்சிகைப்படலைமீக்கவைத்தெழுந்தெங்கணுமழல்வீசக்
கிளைத்துநின்றுதன்வலப்புடையுகிரினாற்குண்டமுங்கெழுவித்து
வளைத்தகுண்டத்துவாமதேவத்திருவடிவினெய்பூரித்து
விளக்குதத்துவத்தருப்பைமுக்குணப்பெரும்பரிதிமேவரக்கொண்டு.

வேறு.

வேள்வியுந்தானேவேள்விப்பொருள்களுந்தானேவெய்ய
வேள்விவேட்பவனுந்தானேவேள்விகொளிறையுந்தானே
வேள்வியின்பயனுந்தானேயென்பதுவிளக்கியெம்மான்
வேள்விசெய்தீக்கையுற்றான்விளங்கருட்சத்தியோடும். கரு

வண்டுற்றமலரோனாதிவலிகெழுதருக்களிற்று
வண்டத்தினகத்துபூதமனைத்தையும்பெருங்கால்வேகச்
சண்டத்தின்வாங்கிவாங்கியாச்சியந்தயங்குமங்கேழ்க்
குண்டத்திற்றூய்மைசெய்துகொழுந்தழன்மடுத்திட்டானால். கசு

வேறு.

மடுப்பமடுப்பமீதெழுந்துவயங்கிச்சுடருந்தழற்பிழம்பி
லடுப்பநனைக்கும்புறத்தெண்ணீரண்டமுகடுவேவாமைத்
தடுத்ததாகுமன்றுயின்மன்றநிறையுஞ்சராசரங்க
ளடுத்தமேலைச்சுவர்த்தலமுமுருகிக்கவிழுமுலகன்றே. கஎ

வேறு.

இவ்வகைவடிவுமுற்றுமிணரெரிப்பிழம்புளாக்கிக்
கௌவையிலகாலச்செந்தீப்பிரான்முதல்கணங்கடாமு
மெவ்வமின்றுளிருந்தன்னேடேகமாய்ச்சேர்த்துப்பின்ன
ரவ்விடைவிரவும்பண்டாசுரனையுமழலிற்பெய்தான் கஅ

எண்ணருமுயிர்களெல்லாமெரியகத்தொடுங்கினாளுங்
கண்வளர்காலத்தெய்துமின்பத்திற்களித்துவாழ்ந்த
வண்ணுதற்கரியவத்தீயன்றுதொட்டிலிங்கமாகிப்
புண்ணியமயானலிங்கமெனப்பெயர்பொலிவுற்றன்றே. ககூ

அத்தகையிலிங்கந்தன்னிலளப்பருங்கருணைபூத்துப்
பைத்தபாப்பல்குற்செவ்வாய்ப்பனிவரையணங்கினேடுந்
தத்துநீர்வேணிப்பெம்மான்றன்னடியிணைக்கீழ்ச்சிந்தை
வைத்தவர்க்கிருமைப்பேறும்வழங்கிவீற்றிருக்குமன்னே. உ0

சிவகங்கைவரலாறு.

நிகழ்பெறுவேள்விமுற்றிநிறைந்தநெய்க்குண்டந்தன்னைத்
திகழ்சிவகங்கைப்பேராற்றீர்த்தநாயகமாய்ச்செய்து
புகழபவிரதன்னீராடினன்புரமூன்றட்ட
விகழறுசிற்றத்துப்பினீர்ந்துழாய்ப்பகழிவல்லான். உக

மறக்களிற்றடியினேனையடியெலாமடங்குமாறு
முறக்குமால்வித்தினுள்ளாலொடுங்கியவாறும்போலத்
திறப்படச்சிவபிரான்செய்சிவகங்கைத்தடத்தினண்ட
புறத்தனவகத்ததீர்த்தமியாவையும்பொலியவைகும். உஉ

அத்தடம்படிந்துமேனுளருந்தவமுனிவர்சில்லோர்
வித்தகமயானத்தெம்மானருளினல்வினையினீங்கி
முத்தியிற்கலந்தாரன்னமுளரிநீரிலஞ்சிமேன்மை
சித்தமாசகன்றீர்யாரேயிற்றெனத்தெரியவல்லார். உ௩

கச்சிமயானப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௩0௧.

# 58. திருவேகம்பப்படலம்.

கலிநிலைத்துறை.

கல்வித்தமிழோர்புகழ்கச்சிமயானமீதாற்
றொல்லைத்தவத்தீரினித்தோமறுசீர்த்திசான்ற
மல்லற்றலங்கட்கரசாமணித்தெய்வக்கோயிற்
செல்வத்திருவேகம்பஞ்சிந்தையுட்கொண்டுசொல்வாம். ௧

பெருமானுலகதிக்கத்திருவுள்ளஞ்செய்தல்.

மயானச்சுடரின்வடிவான்மணிவண்ணன்றேறுத்
தியானப்பொருளாக்கைகளோடும்விராயசிந்தைத்
தயாவற்றபண்டன்றனையட்டபினுவியெல்லா
முயாவற்றுடலோடிசையத்திருவுள்ளஞ்செய்து. ௨

பகுப்பின்றிமன்னும்பழமாமறைதன்னைநோக்கி
வகுக்கும்படைப்பின்பொருட்டுத்தனிமாவதாகிச்
செருக்குந்திறல்வல்லமயானத்தின்மேற்றிசைக்கட்
டொகுக்குந்தளிர்பூகனிதுன்றவயங்குகென்றான். ௩

வேறு.

தாவரும்பழமாமறைதம்பிரானருளான்
மேவருந்தனிச்சூதமாய்மயானத்தின்மேல்பாற்
பூவரும்பிமென்றளிர்கனிபுதுமலர்துறுமி
யோவருங்குளிர்நிழல்குலாயோங்கியதன்றே. ௪

கொன்றைமாலிகைச்சடைமுடிக்குழகனங்கதன்கீழ்த்
துன்றுமானந்தப்பேரொளியிலிங்கமாத்தோன்றி
வென்றநல்லெழில்விரிந்ததன்மெய்யிடப்புறத்து
மன்றலவார்குழலிலளிதைமாதினையுயிர்த்தான். ௫

வணங்குநுண்ணிடைக்கிடர்செயமதர்த்துமேலெழுந்த
விணங்குபூண்முலையிலளிதைப்பிராட்டியுமெழுந்தங்
கணங்குவெம்பவக்கடலினின்றருட்கரைவிடுக்கு
மிணங்கொள்சூற்படைநெடுந்தகைதிருவடியிறைஞ்சி. ௬

விளங்குமேகம்பமேவியவிமலவிண்ணவர்க
ளுளங்கவார்கலிமுகட்டுவங்தெழுஞ்சுடுவிடத்தைக்
களங்குலாவவுண்டமைத்தருள்களைகணேயெனக்கு
வளங்குலாவியவருட்பணிவகுத்தருளெனலும். ௭

நிரந்தநீருலகுக்குபாதானநிமித்த
மரந்தைதீர்த்தருள்செய்யும்யாமாதலினைங்கே
கரந்தவையகம்பண்டுபோற்காண்டகுமாறுன்
சுரந்தபேரெழில்வடிவினிற்றோற்றெனப்பணித்தான். ௮

அரவுமம்புலிக்குழவியுமலையெறிநதியும்
விரவுசெஞ்சடைப்பெருந்தகைபணித்தமெய்யருடன்
சிரமிசைக்கொடுசெறிந்தபல்லுயிர்களுமுறையாற்
பரவைநித்திலமுறுவலாள்படைப்பவளானாள். ௯

எண்கணாளனையெழில்வலக்கண்ணினும்பதும
வண்கணாளனைமற்றிடக்கண்ணினுநுதன்மே
லொண்கணாளனைநள்ளுடைக்கண்ணினுமுலவாப்
பெண்கணாயகியீன்றனண்முத்தொழில்பிறங்க. ௧0

தழங்குமங்கியங்கடவுள்காயத்திரிச்சந்த
முழங்குசீரிரதந்தரசாமமுந்தோமம்
பழங்கணின்மறையோருடனயந்தினைப்பரிவின்
வழங்குபேரருட்கருணைகூர்மதிமுகத்தளித்தாள். ௧௧

காமரிந்திரன்றிரையிட்டுப்பெனக்கரைசந்தந்
தோமிலைந்துமூன்றுறழ்ந்ததோமம்பெருஞ்சாமந்
தாமநீண்முடிமன்னவரவியினைத்தகைசான்
மாமணிக்கலன்வயங்குமென்புயத்திடைத்தந்தாள். ௧௨

தக்கவிச்சுவதேவர்கள்சாகதச்சந்த
மொக்கமில்வயிரூபமாம்புகலருஞ்சாமந்
தொக்கமேன்மையிற்பதினெழுதோமமான்வணிக
ரிக்கிளந்தவைமுழுவதுங்கவானிடத்தீன்றாள். ௧௩

சந்தமாமனுட்டுப்புவைராசமென்சாமம்
வந்தமூவெழுதோமம்வாம்புரவிபின்னவரைச்
செந்தளிர்ப்பதத்தீன்றனளிவர்க்கொருதெய்வந்
தந்திலாமையின்முன்னவரிவர்தொழுந்தலைவர். ௧௪

ஏனைப்புன்மரமுதலியபூதகாரியமு
மேனிப்பாலுரோமங்களினுயிர்த்துமெய்யன்பி
னானைப்பூங்குழனாயகிமாந்தருநீழல்
வானக்கங்கைதோய்முடிச்சடைவள்ளலைத்தொழுதாள். ௧௫

தொழுதங்கையைத்தூமடித்தலமிசைக்கொண்டு
முழுதுமாகியமுன்னவன்மாந்தருநிழற்கீழ்
விழுமணித்தவிசும்பரின்விளங்கிவீற்றிருந்தான்
கழுமனீங்கியெவ்வுயிர்களுங்களிப்பொடுவளர்ந்த. ௧௬

மூவரும்முதல்வனைத்துதித்துவரம்பெறல்.

அந்தணாளன்முன்மூவருமிலளிதையவள்பால்
வந்தமாத்திரையேதுயின்றெழுந்தவர்மான
முந்தைவாலறிவெய்தினர்முதல்விதன்பதமு
மெந்தைபாதமுந்தொழுதெழுந்திறைஞ்சியேத்தெடுப்பார். ௧௭

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தரங்கவெண்புணரிகான்றதழல்விடம்பருகியெம்மை
யிரங்கியன்றளித்தாய்மற்றமின்றொருபண்டன்றன்னு
ளுரங்கெழுமடியேமாவிமுழுவதுமுய்யக்கொண்டு
வரங்கிளர்கருணைகூர்ந்தவள்ளலேபோற்றிபோற்றி. ௧௮

சைவச்செந்தழலின்யாங்களாகுதிச்சமிதையாகச்
செய்வித்துவேள்வியாற்றுஞ்சிவபிரானருளினாலே
யுய்வித்துமீளவெம்மையுதவியகருணைநாட்டத்
தெய்வப்பூங்கொம்பரன்னசெல்வினின்சரணம்போற்றி. ௧௯

அம்மையாயப்பனாகிக்குருவுமாய்த்தெய்வமாகிச்
சும்மைநீர்க்காஞ்சிவைப்பினிருவகையுருவுதோற்றி
யெம்மையுமாண்டுகொண்டவிருமுதுகுரவீரன்பர்
வெம்மனச்சுரும்புவீழும்விரைமலர்ப்பாதம்போற்றி. ௨௦

மைந்தர்கள்குழறிப்பேசுமழலைமென்கிளவிவேட்குந்
தந்தையுந்தாயுமென்னத்தமியரேம்புகழ்ச்சிகொண்டு
புந்திமிக்குவகைபூப்பத்திருவருள்புரியீரென்று
நைந்திருவிழிநீர்சோரநயந்திருந்துதிகள்செய்தார்.

௨௧

மடங்கருங்காதன்மேன்மேல்வளர்ந்தெழக்குடந்தம்பட்ட
முடங்குகான்ஞிமிறுபாயுமுண்டகத்திறையைமாலை
யடங்கமூவுலகுநீற்றுமண்ணலையருளினோக்கி
விடங்கனிமிடற்றுப்புத்தேள்வேட்டதெனுரைமினென்றான்.

அவ்வண்ணமருளிச்செய்யக்கேட்டவரறைதலுற்றார்
கவ்வெனுங்கமலத்தோனுமவ்வெனுங்கரியமாலு
மவ்வெனுமரனுமாயமற்றெமைவிழியினீன்ற
விவ்வன்னைகாமக்கண்ணியெனப்பெயர்பெறுகமன்னே. ௨௩

சேந்தமென்றளிர்கள்கோதித்தீங்குயிலினிதுகூவு
மேந்திணர்ச்சாகைதோறுமிளநறுவொழுக்கிவாசப்
பூந்துகளுகுத்துச்சீதப்புதுநிழல்விரிக்குந்தெய்வ
மாந்தருவடியினீவிர்வைகலும்வதிகவென்றார். ௨௪

தவளவெண்ணீற்றுமேனித்தலைவனவ்வரங்கணல்கி
யிவறிமற்றவர்கண்மீட்டுமிணைக்கரங்குவித்துவேண்டப்
புவனமோர்மூன்றுமுய்யப்புதுநிழன்மாவின்மூலத்
தவிரொளிமயமாய்த்தோன்றுமருட்குறிமேன்மைவிள்ளும். ௨௫

திருவேகம்பப்பெயர்மாட்சி.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இன்னிசைச்சுரும்புளர்மலர்த்தொடையலிணங்குதோட்டுணைமைந்தர்காள்கேண்மின்
மன்னுருத்திரனொருவனேபிரமமொன்றுமற்றிலையென்பதுதுணிபாற்
பன்னுமெய்ப்பொருட்பிரமமாம்வேதமொற்றைமாவெனப்பணைத்ததுகண்ட
ரன்னதற்கிறையாகியயாமேயிவிண்கமாயதனடித்தலத்துறைகேம்.

ஏதகீக்குசொல்வடிவினுந்தனிமாவெனப்படுந்தருவடிவினுமதற்கு
நாதர்யாமெனத்தெளிமினிங்கெமதுநாமமேகம்பநாதனென்றுரைப்ப
வாதிமந்திரமஞ்செழுத்திதுவேயைம்பெருங்கொடும்பாதகமறுக்கு
மோதுமவ்வகைப்பிரமமந்திரத்துமஞ்செழுத்தினுமுயர்ந்ததிம்மனுவால்.

விதிவழாதபல்லுறுப்புடைமறையின்மிக்கதாகுங்காயத்திரியதனி
னதிகமஞ்சமாமந்திரமதனினீரண்டெழுத்ததனினெட்டெழுத்தாம்
பதியுமேன்மையெட்டெழுத்தினஞ்செழுத்துக்கோடிகோடிமேம்பட்டதஞ்செழுத்தி
னுதலுமேகம்பநாதமாமனுத்தானூறுகோடியின்மிக்கதென்றுணர்வீர்.

அன்னதன்மையின்மனுவெவற்றினுக்குமதிகமாகியவேகம்பநாத
னென்னுமந்திரமியம்புநாவுடையாற்கிப்பிறப்புறும்பெரும்பயனெய்தும்
பன்னரும்பெருங்கீர்த்தியுமூக்கப்பாடுமாக்கமுமாயுளும்வளரு
மன்னுகல்வியுங்கேள்வியுமொழுக்கும்வழுக்கிலானவனேயெனத்தெளிவீர்.

கன்னிதந்தைதாய்வேதியர்ச்செகுத்தோர்கள்ளுமாந்துநர்கள்ளுநர்குரவன்
பன்னிமாணலம்விழைந்தவர்மற்றைத்தீர்வுகாணரும்பழிவினைவினைத்தோ
ரென்னராயினுமேகம்பநாதனென்னுமந்திரமொருமுறைகணிப்பிற்
றுன்னுவெங்கொடும்பாதகமனைத்துந்துனைவினங்கவர்தம்மைவிட்டோடும்.

அறப்பயன்பொருளின்பம்வீடென்றவனைத்துமோதுநர்க்களிக்குமிம்மனுவை
யிறப்பவந்துமுற்றிரும்பசிப்பிணியினீண்டியாருயிர்கவற்றும்வல்விடரின்
மறப்பினுமிலங்கிளக்கவல்லுநரேமற்றெமக்குமிக்கினியவர்கண்டீர்
சிறப்பவிம்முறைமனுவிதன்பெருமைதெரிந்துகூறினர்க்கின்பவீடளிப்பேம்.

காஞ்சித்திருநகர்மாட்சி.

என்றுமாவடிமுளைத்தெழுந்தருளுமிலிங்கமேன்மையையெடுத்துரைத்தருள
வொன்றுமானந்தவுததியின்மூழ்கியொன்னலார்குடர்குழம்பியுள்வெதும்ப
வென்றகூர்ம்படைத்தானுமாலயனும்விளம்புமூவரும்விரைத்தபூந்தொடையற்
கொன்றைவார்சடைமுதல்வனாகமலக்கொழுமலர்ப்பதந்தொழுதுபோற்றிசைத்து.

காட்டினுடகங்குயின்றருளிறைவகம்பமேவியகருணையங்கடலே
மோட்டுநீர்ப்புவிவியத்தகுமினையமுதுநகர்ப்பெருந்தன்மையுந்தனிமா
வீட்டுமேன்மையுமெமக்குரைத்தருளாயென்றுவேண்டலுமீர்த்துணரிதழித்
தோட்டுமாலிகைச்சடைமுடிக்குழகன்றன்னகர்த்திறங்கேண்மினென்றியம்பும்.

கறங்குவண்டிமிர்கமலமுந்துழாயுங்கடுக்கைமாலையுந்துயல்வருபுயத்தீர்
பிறங்குகவ்வெனுமொழிப்பொருள்பிரமம்பிரமமானயாமஞ்சிக்கப்படலா
லுறங்கிடாப்புகழ்க்காஞ்சியென்றுரைக்குமொருதிருப்பெயரெய்துமிந்நகர
மறங்கரைந்தநூலெமைப்பரப்பிரமமகிலகாரணமென்பதுதெளிவீர்.

இலகுவாணகையரிமதர்மழைக்கணிருண்டவார்குழல்வேய்மருள்பணைத்தோட்
கலபமாமயிலியலெழின்மடவாருந்தித்தானத்தைக்காஞ்சியென்றுரைப்ப
சுலவுவெண்டிரைப்பணிக்கடலுடுக்கைத்தொல்லைமாநிலமடக்கொடிதனக்குள்
குலவுகாஞ்சிநற்றானமாய்ப்பொலிந்தகொள்கையானுமத்திருப்பெயர்வழங்கும்.

மற்றுங்கவ்வெனல்சென்னியோடின்பமலரவன்றனையுணர்த்துமஞ்சித்தல்
சொற்றபூசனையடைவுமாம்யாருஞ்சென்னிமேற்கொடுதொழத்தகுஞ்சிறப்பார்
பற்றிவைகுநர்பேரின்பமுறலாற்பங்கயத்தவன்வழிபடலானும்
பெற்றதாகுமித்திருப்பெயரிதனாற்பிரமலோகமென்றுரைக்கவும்படுமால்.

வீடுபேற்றினர்தேவரென்றுரைப்பவிழையுமிந்நகர்வரைப்பிடைவீடு
கூடும்வாழ்க்கையர்நிறைதலிற்றேவபுரமெனப்படுங்கொடுவினைத்திறத்தாற்
பாடுசான்றபோர்புரிவருக்கவினையோத்தியென்னவும்பகருமிந்நக
ரீடுமென்னவருமைதருமயோத்திகெழுமுத்தருக்குறைவிடமன்றால்;

சுவர்க்கமெய்தினர்தேவரென்றோதுஞ்சுருதியாலதுநாகநாடன்று
கவிற்றுருத்திரலோகமேசுவர்க்கமாகுமாதலினலங்கெழுஞ்சோதி
நிவக்குமென்றிடுமயோத்திநீள்பிரமலோகநீடொளித்தேவமாபுரமும்
புவிக்குண்மேதகுகாஞ்சியேயன்றிப்புவனமூன்றினும்வேறிலைகண்டீர்.

இத்திருப்பெருங்காஞ்சியினெம்மைமறலிக்கஞ்சுகரிகபரம்விழைந்தோர்
நித்தமன்பொடுவழிபடேஉப்பழிச்சநிறைந்தபேரருட்கருணைபூத்துறைகே
மெய்த்தமாமறைமுழுதுமிவ்வாறுவிளம்புமாதலின்மற்றெமக்கினிய
வுத்தமப்பதியிதுவெனத்தெளிமினேங்குமாந்தருப்பெருமையுமுரைப்பாம்.

மாவிருட்சமாட்சி.

மீதுமன்னியமூலமுங்கிழக்குநோக்குசாகையுமாய்விரைகமழும்
பாதவந்தனையுணர்ந்தவன்வீடுபெற்றுமாங்கதுபலகனிபடைத்துச்
சீதவார்புனலொழுக்கருக்கம்பைத்திருநதிக்கரைமருங்கொலிவேதச்
சூதமாமரமெனத்திகழ்ந்தொளிருந்தொல்லைவையகமபெரும்பயன்படைப்ப.

ஏழிரட்டியகல்வியுமதன்மேன்மல்லிகைக்கொடியெனப்படர்ந்தமரும்
பாழிவிச்சைகட்கிறைவியாங்காமக்கண்ணியத்தகுபசுங்கொடிக்கினியா
ளூழியீற்றினுமுலப்பருந்தகைசான்றோங்குமாவினுக்குரிமையம்யாமே
பாழியேந்தியநாரணன்விரிஞ்சனரனெனப்படுமென்புடைப்புதல்வீர்.

மாறிலாமறையெமதுவாசகமாம்வாசகத்தொடுவாச்சியந்தனக்கு
வேறுபாடில்லையாதலினெமக்குமினையமாவிற்கும்வேறுபாடில்லை
யீறிலாவிதன்மூலத்தினென்றுமிலிங்கமூர்த்தியாயுறைகுதுநெருநல்
காறும்யாவருங்கண்டிலரிந்நாட்கவுரியோடுநீர்காணவீற்றிருந்தேம்.

அகிலநாமமுமெமக்குரிப்பெயராமவற்றினும்பவன்முதல்பெயர்சிறப்பாத்
தகுமவற்றினுஞ்சம்புவேமயோபுசங்கரன்மயக்கான்சிவன்மற்றை
யிகழருஞ்சிவதரனெனும்பெயர்களினியவாகுமங்கெவற்றினுமேலாய்ப்
புகழ்படைத்தவேகாம்பரநாதனெனப்புகல்பெயரெமக்குமிக்கினிதாம்.

இன்னதன்மையிற்கான்முளைமுதலோர்க்கித்திருப்பெயரிடடழைப்பவாக்குத்
துன்னும்வல்வினைமுழுவதுமகலத்தொலைதலுமுதியுஞ்செல்வமுமளிப்பேம்
பன்னருந்தனிமந்தணமுமக்குப்பகர்ந்துளேமெனப்பண்ணவனிறுப்ப
வன்னமூவருமுவகைமீக்கிளைப்பவம்மையப்பரைவணங்கிவேறுரைப்பார்.

கம்பாநதிமாட்சி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

கன்னிமாநதிகம்பையொன்றிவணுள்ளதென்றருள்செய்தனை
யின்னகாரணமென்றுதேறிலமிறைவனேயெனவெம்பிரான்
முன்னெழுந்துமதர்த்துவீங்கிமுகிழ்த்தமென்முலையம்பிகை
தன்னைநோக்கிமகிழ்ந்துமைந்தர்கள்கேண்மினென்றதுசாற்றுவான். சரு

வடிவமெட்டுமெமக்கமைந்தனமறையுரைக்குமவற்றுளோர்
வடிவமாம்புனலுலகெலாமுறுதூய்மைசெய்யும்வனப்பது
வடிவமுற்றவருயிர்தளிப்பவழங்குமற்றிதுமாநதி
வடிவுகொண்டிவணொழுகுகின்றதுமன்னுயிர்த்தொகையுய்யவே. சசு

இந்நதிப்புனலெம்மைநேர்வுரயார்விழிக்குமகப்படா
துன்னருஞ்சிவயோகசிந்தையுள்யாமுறைந்திடுமாறுபோல்
வன்னிலத்தினகத்துவார்ந்துவழங்குகின்றதுகாண்மினோ
கன்னியாறிதுகம்பையென்றொருகாரணப்பெயர்பெற்றதே. சஎ

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பன்னுபாவென்றறாய்மைபருகுதல்காப்புங்கூறுங்
கன்னிவான்கங்கையர்திகம்மெனும்புனல்கடம்பாற்
றுன்னிமூழ்குநர்வெம்பாவத்தொகுதிமெய்யழுக்குந்தீர்த்
தன்னிடைமுழுகித்தூய்மைதாங்கலாற்கம்பையென்ப. ௪௮

கம்மெனுஞ்சிரமேற்றீண்டிற்றூய்மைசேர்கவினுமுண்டோர்
கம்மெனுமாவிதம்மைக்காத்தலான்மூழ்கினோரைக்
கம்மெனும்பெருவீட்டின்பநுகர்விக்குங்காட்சியானுங்
கன்மநோயறுக்குமிந்தத்தடநதிகம்பையாமால். ௪௯

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கங்கைமாநதியமுனைவாணிமுதல்கவின்பெறுநதியெலாம்
பொங்குவெண்டிரையெற்றுகம்பைநறும்புனற்கிணையெய்துறா
மங்கலந்தருகம்பைமென்புனறோய்ந்தகாற்றுவழங்கிடத்
தங்கண்மேவியபுன்மரங்களுமின்பமுத்தியையண்ணுமால். ௫௦

யோகநன்னிலையிற்றவத்தின்வழீஇயினருயர்கம்பையின்
மோகமில்கயலாதியாகியுயிர்த்துமுத்தியினண்ணுவார்
போகுமக்கரையிற்கிளைத்தபுதன்மரங்களுருத்திர
லோகநின்றுவழூஉமுருத்திராகுமுண்மையுணர்ந்திடீர். ௫௧

யாண்டிறப்பவர்கட்குமிப்புனலிறுதிவேலையினுச்சியிற்
றீண்டுமேலவர்முத்தியெய்துவர்தீஞ்சுவையமிழ்துண்பவ
ரேண்டகுந்திறலமாராகுவரினையபூம்புனலுண்பவ
ராண்டநம்முடனுவராதலினமிழ்தின்மிக்கதுகம்பைநீர் ௫௨

காட்சியெய்தருமேன்மைசான்றுயர்கம்பைவார்புனலாற்றினு
லாட்சியெய்தியபதியெவற்றினுமதிகமாயதுகாஞ்சியூர்
மீட்சியில்புகழிவ்விரண்டினும்வேறெமக்குளவேணவா
மாட்சிபெற்றுறுகங்கைகாசியின்வைத்திலேமிதுமெய்ம்மையே. ௫௩

பன்னிருநாமமாட்சி.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புவனசாரமும்மூர்த்திவாசம்விண்டுபுரங்காஞ்சி
தவமார்கவிசித்திலயசித்துசகலசித்திதபோமயவூர்
கவினார்பிரமபுரமாதிபீடங்கன்னிகாப்புவினைப்
பவநோயறுக்குஞ்சிவபுரமாப்பகர்பன்னிரண்டுதிருப்பெயர்த்தால். ௫௪

புவனமூன்றன்பயனாகிப்பொலிவுபெறலாற்புகழ்தகைய
புவனசாரமெனத்திகழும்புனல்காலுயிர்தீயிருசுடர்வான்
புவனவடிவாநந்தமைநீர்மும்மூர்த்திகளும்பூசித்துப்
புவனமேத்தவைகலின்மும்மூர்த்திவாசபுரமாமால். ௫௫

பரவுமேகவாகனமாங்கற்பத்தெம்மைப்பங்கயக்கண்
வரதராசன்வழிபடலால்விண்டுபுரமாம்வளர்காஞ்சி
புரமாயதுமுன்வகுத்துரைத்தாம்பொல்லாக்கலிநோய்கலியுகத்தும்
விரவாவண்ணநல்குதலால்விளங்குங்கலிசித்தெனப்படுமால். ௫௬

கடைநாளெமக்கீதாடரங்காங்கவினுலிலயசித்தாகுந்
தடைதீர்சகலசித்திகளுந்தரலாற்சகலசித்திபுரம்
படையாவாய்மைத்தவமியற்றிப்பனிமால்வரையின்வருமன்ன
நடையாள்வழுத்தும்பரப்பிரமமயமாநகரந்தபோமயமாம். ௫௭

வேதனெமக்குத்தகுஞ்சோமவேள்விசெயலாற்பிரமபுர
மாதிபீடமுதல்பீடமாயசிறப்பாற்கன்னியெனும்
காதலணங்குபுரந்திடலாற்கன்னிகாப்பியங்கென்மக்கண்டோர்
பேதமின்றிச்சிவனுண்மைபெறலாலாகுஞ்சிவபுரமே. ருஅ

வேறு.

எடுத்தியம்புமிப்பன்னிருநாமமும்வைகறையெழுந்தோதி
லடுத்ததீக்கனுக்காட்டியவிடும்பைநோய்வறுமைதீர்ந்தருள்வாரி
மடுத்துவான்கதியெய்துமாறுமக்கிவைவகுத்தனமருளாலென்
றுடுத்ததிக்குடைநாயகன்விளம்பலுமுவகையங்கடலாழ்ந்து. ருசு

மூவர்விண்ணப்பங்கேட்டு பெருமானுபதேசஞ்செய்தல்.

உலம்படைத்ததோட்பண்டனுமவுணனுமொளியிழந்துலந்தேமை
நலம்படைத்தவான்சோதியுளொடுக்கிமீட்டிறைவிதன்னடுவாமம்
வலம்படைத்தமூவிழியினும்வருவித்தவள்ளலேயடியேங்கள்
புலம்படைத்தினிச்செய்பணியருளெனப்போற்றினர்முதன்மூவர். சுo

ஓதுமவ்வுரைதிருச்செவிசாத்தியெம்முளங்களிவரச்செய்யுங்
காதன்மைந்தர்நீராதலினுமக்கருள்காட்டுதுமெனவோர்பாற்
போதளாங்குழன்முகிழ்முலைப்பொலந்தொடிப்பூங்கணைமதர்வேற்கண்
மாதர்வாணுதற்பசுங்கொடிமணந்தவன்வாய்மலர்ந்தருள்செய்யும். சுக

பிள்ளைவண்டினமுரன்றுபண்பயிற்றிவார்ந்திழிநறுப்பெருவெள்ளங்
கொள்ளைகூட்டுணுமலர்த்தடம்பொதும்பரிற்கொழிதமிழ்மறைப்பாடற்
கிள்ளைபாடுசீர்க்காஞ்சியினென்றுமிக்கிளரொளியிலிங்கத்தே
வெள்ளைவாணகைத்துவரிதழுமையொடுமினிதுவீற்றிருக்கின்றேம். சுஉ

எம்மையாவருங்காணலரொருபொழுதியோகியர்க்கெதிர்காண்பே
மம்மநீரிவணெம்மடிப்பூசனையருமறைவிதியாற்றுன்
மும்மையாகியவுலகமும்படைத்தளித்தழிக்குமாமுயல்கிற்பீர்
நம்மிடத்துறுபத்தியுமருச்சனைநலத்தினுற்பெறுவீரால். சுரு

படைத்திபங்கயனளித்திமாலுருத்திரன்பற்றறவுலகெல்லாந்
துடைத்தியென்றருள்வழங்கியிச்சுரிகுழற்றேவியுமெமையீண்டே
கிடைத்தபேரன்பினுடொறும்பூசனையாற்றுகவெனக்கேட்டோ
ரடைத்தநல்விதிபுகன்மறையாததுவந்தவாறெவனென்றூர். சுச

என்றமூவருக்கிளநிலாநகைமுகிழ்த்தெம்பிரானுரைசெய்யு
நன்றுகேண்மினெம்மிரவிடைத்திருநடநவின்றிருள்புலர்காலை
மன்றவெம்மிடையொடுங்கியவுலகுயிர்முழுவதும்வழுவாமே
தொன்றுபோற்படைத்திடுவதுகருதினேமுத்தொழில்புரிவீர்காள். சுரு

படரொளிப்பிழம்பாகுமிவ்விலிங்கமேபற்றிநின்றுலகெல்லா,
முடையநம்மிடைநிலைபெறுமறைகளைமுன்னுறவுயிர்ப்பித்தேந்
தொடையிணங்குமப்பழமறைமுழுவதுமெம்மடிதொழுதேத்திக்
கடையிலாதபேரன்பினுற்பழிச்சினசிரமிசைக்கரங்கூப்பி. சுசு

பாரின்மேயினைபாரொருவடிவினைபாரினுக்கறியொண்ணுய்
பாருமற்றையப்பாரிடைப்பொருளுநின்னுணைவிற்பயில்வித்தாய்
நீரின்மேயினைநீரொருவடிவினைநீரினுக்கறியொண்ணுய்
நீருமற்றையநீரிடைப்பொருளுநின்னுணையினிலைப்பித்தாய். சுஎ

நெருப்பின்மேயினைநெருப்பொருவடிவினைநெருப்பினுக்கறியொண்ணாய்
நெருப்புமற்றையக்நெருப்பிடைப்பொருளுநின்னுணையினிறவித்தாய்
மருத்தின்மேயினைமருத்தொருவடிவினைமருத்தினுக்கறியொண்ணாய்
மருத்துமற்றையம்மருத்திடைப்பொருளுநின்னுணையின்வதிவித்தாய்.

விண்ணின்மேயினைவிண்ணொருவடிவினைவிண்ணினுக்கறியொண்ணாய்
விண்ணுமற்றையவ்விண்ணிடைப்பொருளுநின்னுணையினிறவித்தாய்
கண்ணுமாருயிரிருசுடரெவற்றினுமிம்முறைகலந்தோங்கி
யெண்ணிலுலறிவரும்பெருமுதல்வநின்னிணையடிமலர்போற்றி. சுகூ

கலிவிருத்தம்.

இன்னவண்ணம்பழிச்சியெமைத்தொழு
மன்னுமன்பின்மறைகளைநோக்கிநீர்
நன்னர்வேட்டனநல்குதும்வேதங்காள்
சொன்மினென்றலுஞ்சொல்லுதலுற்றன. ௭௰

எந்தைநின்முகத்தெங்களையீன்றனை
யந்தமெய்ப்பெரும்பேறுடையெங்களைச்
சிந்தைசெய்துதிருவருள்வைத்துநின்
சந்தமேனியணியெனத்தாங்குவாய். ௭௧

நயக்குமாறினிநாங்களுலகிடைச்
செயத்தகும்பணிசெப்புதிமற்றெமை
வியப்பவேதங்களென்றுவிளித்தனை
யுயர்த்தவப்பெயர்க்காரணமோர்கிலேம். ௭௨

என்றமாமறைதம்மையியல்பினு
லன்றுகோவணநூபுரமாதியா
மன்றமெய்யணியாக்கிமகிழ்ந்துபி
னென்றுகூறினமூங்கிவைகேட்பவே. ௭௩

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறம்பாவமென்றிரண்டினம்முண்மைத்தன்மையினுமகிலலோகந்
திறம்பாமற்பிரமாணமாவீர்வித்தெனும்பகுதிஞானஞ்செப்பும்
புறம்பாயாமனப்பெரியோருமொழியானைமையுணரும்பொலிவான்வெள்ளிப்
பறம்பாருமெமக்கினியபான்மையீர்வேதமெனப்பெயர்பெற்றீரால்.

வேதியர்கண்முதன்மூவருமையோதிவீடுபேறடைகமுற்று
மோதுமறையிரண்டானுமான்றுணுமோதாதுபுறநூல்கற்கு
மேதிலிருபிறப்பாளரிருட்குழிவீழ்ந்திடர்ப்படுவாராகநீயிர்
பேதியாமெய்யன்பினைமையீண்டுவழிபாடுபேணிவாழ்மின்.

உலகுய்தற்பொருட்டுநாமெவ்விடத்தினெவ்வுருவமெடுப்போமக்க
ணலமெய்துமதற்கியைந்தவடிவநீர்கொள்கென்றுநயப்பமுன்னு
ளலர்தலைமாநிலம்பாசுமிக்கநின்வரமளித்தேமடையாருட்கும்
வலமன்னுந்திரடிண்டோண்மைந்தர்களாதலினுனம்மறைகளெல்லாம்.

ஈங்குநாம்பரஞ்சோதியிலிங்கவடிவாயமர்ந்தேமாகவீண்டைத்
தேங்கவிழ்க்குங்கவிழிணர்ப்பூங்கனிதவன்றமொருமாவாய்த்திகழ்தநின்ற
வீங்குதிறற்புரமூன்றுமிறுத்தகாட்போர்க்கோலமேயினேம்யா
மாங்கவையுங்கொய்யுளிவெங்கனிவாம்பரிவடிவாயமைத்தகாண்மின்.

மற்றைவேருருவாதிவடிவநாங்கொண்டுழிமாமறையுமாங்கட்
பற்றமைகூருகிர்ஞாளிமுதலியவாய்ப்போந்தனவிப்பதியுளோர்பால்
வெற்றிநடம்புரிகாலைநூபுரமாய்ப்பொலிந்தனவவ்விரிநீர்ச்சூழ
லற்றைநாண்முதல்வேதநூபுரப்பேர்பெற்றுவினையறுக்குமாலோ. எஅ

மாண்டபெருவளம்படைத்ததாருகாவனத்திடைநாம்பயிக்கவேடம்
பூண்டவழிகோவணமாய்ப்பொலிந்தனவாலிவ்வாறுபுரைதீர்நம்பால்
வேண்டும்வரம்பெற்றேருங்கும்வேதநூலுணராதாரெம்மைத்தேரு
ராண்டகைமைவேதியர்க்குமேம்பாடுவேதமேயாகுமன்றே. எகூ

இத்தகையமாமறைநூன்முன்னளித்திருக்காஞ்சிவரைப்பிற்றென்சார்
தத்துநீர்லைபுரட்டுஞ்சேயாற்றின்றடங்கரைக்கணிமையோர்கட்கு
மெய்த்தவர்க்குமோதுவித்தோமாதலினுன்மேவுதிருவோத்தூரென்னு
மத்தலத்தினைமைத்தொழுவோரருமறைநூன்முழுதுணர்ந்துவீடுசேர்வர்.

இன்னமறைவிதியாலிவ்வேகம்பத்தெமைப்பூசையியற்றீரென்னப்
பன்னகப்பூணணிமார்பிற்பரமேட்டிபணித்தமொழிபேணியன்னோர்
சென்னிமிசைக்கரங்கூப்பியானந்தப்பெருங்கடலிற்றிளைத்துவாழ்ந்து
பொன்னிமயப்பிடிமணந்தமணவாளநம்பிகழல்பூசிப்பாரால். அக

கலிவிருத்தம்.

பார்வதிமுதலியோர்பரன்பூசைசெய்தல்.

சயமுறுகாரணத்தலைவர்மூவரைக்
கயல்விழித்தோற்றியகாமக்கண்ணியாம்
பெயரியவிலளிதைப்பிராட்டிவானளா
யுயரியமாமுதலொளியைப்பூசித்தாள். அஉ

வெள்ளக்கம்பம்.

மற்றதற்கணியதென்மருங்கினப்பெயர்
பற்றியசிவக்குறிநிறுவிப்பாயிதழ்
பொற்றசெந்தாமரைப்புனிதன்பூசனை
தெற்றெனச்செய்தனன்றெளிந்தசிந்தையான். அங

கள்ளக்கம்பம்.

பன்னருமாமுதல்வாமபாகத்தி
னன்னணமணியணியகன்றமார்பினன்
மன்னியவுலகெலாமயக்குமாசையிற்
பொன்னவிர்மலர்கொடுபூசையாற்றினன். அச

நல்லகம்பம்.

பேதமில்பாவனைபிறங்கத்தாணுவுங்
காதலிற்பூசைமுன்னியற்றிக்கண்ணுதன்
மேதகையடிகளோடொருமைமேயினு
னாதலினிருவர்க்குமில்லைவேற்றுமை. அரு

இம்மூர்த்திகள்விசேஷம்,

வாலியசிந்தையான்மலர்ப்பொகுட்டணை
மேலவன்வழிபடும்வெள்ளக்கம்பனை
யாலியவன்பினுலருச்சித்தேத்துவார்
தோலுடற்பொறைகழீஇத்தூயராகுவார். அசு

மருள்புரிகருத்தினன்மாயனேத்தலிற்
கருதுமப்பெயரியகள்ளக்கம்பனைத்
திருவடிவழிபடப்பெற்றசீரியோ
ருருகெழுகொடுவினைமையலுட்படார். அஎ

உருத்திரனலத்தகுமொருமைபூண்டுயர்
கருத்தொடும்வழிபடுநல்லகம்பனை
யருத்தியின்வழிபடுமடியரெம்பிரான்
மருத்தபூந்திருவடிக்கலப்பின்மன்னுவார். அஅ

கருதருநல்லனேகள்ளன்வெள்ளனோர்
தருதிருவேகம்பனென்றுதன்னொடு
மருமலர்க்கவிழிணர்மாவினீழல்வா
ழொருவனேநால்வகையுருவமேயினன். அகூ

தென்னுயர்கச்சியினகிலபித்தியு
மன்னுயிர்க்குதவியமகிழ்ந்துநம்பிரா
னன்னணம்பூசைகொண்டருளிமூவர்க்கு
முன்னியவரங்களுமுறையினல்கினன். கூ0

இறைவிவேண்டுகோள்.

இறைவியிம்மாநிழலினிதுவைகிய
மறைமுதலடியிணைவழிபட்டேத்துபு
நிறைபெருமகிழ்ச்சியினீடுகாதலாற்
குறைவறுவரம்பலகுறித்துவேண்டுவாள். கூக

வேறு.

வேதக்கோவணவேதப்புரவிய
வேதப்பூணவவேதமுதல்வனே
வேதத்தாலுமுணர்வருமேதகாய்
வேதச்செல்வவென்விண்ணப்பங்கேண்மதி. கூஉ

மன்றலார்மறைமாவினடித்தலத்
தென்றுமேவுதியேனுமியோகியர்க்
கன்றித்தோன்றிலையாயினையீண்டினி
மன்றயாவர்க்குங்காட்சிவழங்குவாய். கூங

தெள்ளுநீம்புனலித்திருக்கம்பையும்
வள்ளலோரிடைக்காண்டகமன்னுகென்
றுள்ளிழைக்கிரியுத்தமிவேண்டலும்
பிள்ளைவெண்பிறைக்கண்ணியன்பேசுமால். கூச

இறைவன் கூறல்.

வேறு.

மன்னுயிர்முழுவதும்பயந்தமாணிழா
யன்னவையுய்யுமாகருதியன்பினு
லின்னவைபுகன்றனைமகிழ்ச்சியெய்தினேம்
பன்னுதுமனக்கொளப்பரிந்துகேண்மதி. கூரு

மேதகுசிற்பரவியோமரூபநீ
யோதியசிற்பரவியோமரூபியா
மாதர்வானுதலியப்பரமவானமும்
பேதுறவெரழிக்குமிப்பிலத்துவாரமே. கூசு

மற்றிருவேங்கட்கும்வடிவமாகுமப்
பொற்றனிப்பிலத்தினைப்புண்ணியஞ்செய்து
பற்றறத்துறந்தவர்காண்பர்பற்றமை
சிற்றறிவுடையவர்தமக்குச்சேயதே. சுஎ

ஆயிடைமகிழ்ந்தினிதுறைதுமாய்தொடி
மேயவப்பிலத்தினுமிக்ககாதலி
னேயுமிச்சுடரொளியிலிங்கத்துன்னொடு
மாயிரும்புவிதொழமன்னிவைகுவேம். சுஅ

இதற்குமுன்னீண்டெமையெவருங்காண்கில
ரிதற்குமேனீபெறுமெழில்வரத்தினாற்
கதித்திடயாவருங்கண்டுபோற்றுக
கதிர்த்தவான்பிலத்திடையுனையுங்காண்கவே. சுசு

எற்றுநீர்க்காஞ்சியேயெமக்குமேனியாந்
தெற்றெனத்தெளிமதியினையசீர்மையான்
முற்றொளிவானவர்முனிவர்தாமெலா
மற்றிவண்விளங்கியுமறைந்துவைகுவார். கOO

உலகமிக்கோயிலினுறப்புமுற்றுமாய்க்
குலவியீங்கெமைத்தொழுதுறையுங்கோற்றொடிப்
புலவுவேலிணைவிழிப்புளகப்பூண்முலை
யிலவிதழ்மதிநுதலிமயமாதராய். கOக

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விரவுசீர்நல்லகம்பம்விளங்கொளிவெள்ளக்கம்பம்
வரமருள்கள்ளக்கம்பம்வண்டிருமயானம்வாலீச்
சரமெனுமிலிங்கமைந்திற்றகுபஞ்சபிரமமாகி
யிரவுசெய்குழலாய்நின்னோடினிதுவீற்றிருப்பங்கண்டாய். கOஉ

வாலீச்சரம்.

என்னலுமிறைஞ்சிநல்வாலீச்சரம்யாங்கணெந்தா
யன்னதுகண்டோர்யாவரதன்றிறம்யாதோவென்னப்
பொன்னவிர்சுணங்குபூத்தபொம்மல்வெம்முலையாள்கேட்பக்
கன்னல்வேளெரியநோககுங்கண்ணுதலருளிச்செய்யும். கOங

வாலிமாலிங்கமேன்மைகேண்மதிமயானக்கீழ்சார்
சீலமார்சித்தர்பல்லோர்சித்திகள்வேண்டிப்போற்ற
மூலமாயொளியாயின்பாய்முகிழ்த்ததுவாயுலிங்க
மேலவார்குழலாயென்றுமகிழ்ந்தினிதிருப்பேமங்கண். கOச

வாலிமுன்றொழுதுநேர்ந்தார்வலத்தினிற்பாதியாண்டுந்
தோல்வியில்வாகையோடும்பெற்றனன்றேகாயென்றான்
கோல்வளைவாலியென்பான்யாரெவன்குமரன்மற்றுன
பால்வரம்பெற்றதெவ்வாறென்றலும்பகரலுற்றான். கOரு

பண்ணவர்முனிவரான்றோர்பாங்குறமிடைந்துவைக
விண்ணவர்க்கிறைவன்புத்தேள்வேத்தவைத்தவிசின்மேனு
ணுண்ணிடையணங்குநல்லார்மின்கொடிநுடக்கமானக்
கண்ணெதிராடமாடல்கண்டுவீற்றிருந்தானாக. கOசு

அங்கவராடல்காணுமாசையாலிருள்கால்சீக்குஞ்
செங்கதிர்க்கடவுண்மான்றேர்செலுத்துறுமருணனுங்கண்
வெங்கதிர்விடைபெற்றேகியரம்பையர்விண்ணோரெல்லாம்
மெய்கணுங்நிறைந்தவாற்றாலிடம்பெறாதிகளைச்செய்வான். ௧0எ

அற்புதவனப்பின்வாய்ந்தவரம்பையரெவர்க்குமுன்னர்
நிற்பதுநோக்கித்தானுநேரிழைவடிவுகொண்டு
பொற்புறுமாடல்பார்த்துநிற்றலும்புல்லாருட்கு
மற்பொலிகுலிசப்புத்தேளத்தகைவடிவைக்கண்டான். ௧0அ

காண்டலுங்குழைத்தவிலவேள்கடுங்கணைக்கிலக்கமாகி
மூண்டவெங்காமமூழ்கிமுரணிறல்வலிந்துபற்றி
யாண்டொருபாங்கரெய்தியணிமுலைபொதியப்புல்லிப்
பூண்டபேரின்பவெள்ளப்புதுநலம்பருகலோடும். ௧0௯

## வாலியின்பிறப்பு.

அரக்கர்கோனகைப்பகந்திவெகுண்டுனையழிப்பவல்வா
னரக்குலந்தாமேயென்னச்சபித்தவாநயந்துவிண்ணோர்
குரக்கினமானாரன்றேயினையவன்குரக்குவேந்தாய்ச்
சுரர்க்கிறைகூற்றலப்போதாயிடைத்தோன்றினனல். ௧௧0

ஆயபின்கூத்துநோக்கியாவயினின்றுபோந்து
சேயொளிப்பரிதித்தேர்மேற்றிகழ்ந்தனன்வலவனுகக்
காய்கதிர்க்கடவுளங்கணிகழ்ந்தமைகடாவிமுற்றும்
வாய்மையிற்புகலக்கேட்டவ்வடிவிவட்காட்டுகென்ன. ௧௧௧

உவகைமீதூரமேன்மேல்வேண்டலுமுருவில்லான்
பவளவாய்கரியகூந்தல்பான்மொழிதிதலைபூத்த
குவிமுலைபரந்தவல்குல்கோல்வளைத்தளிர்கைதோற்றிக்
கவினுருக்கொண்டாலென்னக்காட்டினன்றனதுபெண்மை. ௧௧௨

## சுக்கிரீவன்பிறப்பு.

காண்டலுங்கதிரோன்றானுங்காமுற்றுக்கலவிசெய்ய
வாண்டகைச்சுக்கிரீபனுயிடைப்பிறந்தானரிப்பான்
மாண்டகுமகவானீன்றவாலியைக்கமலக்கையாற்
றீண்டினனுச்சிமோந்துசெவியறிவுறுத்தல்செய்வான். ௧௧௩

பண்ணவர்முனிவர்யாரும்பரவினர்பேறுபெற்ற
புண்ணியநகரங்காஞ்சியாயிடைப்போந்துமுக்க
ணண்ணலைத்தொழுதுமைந்தாகவிகளுக்கரசாம்பேறு
நண்ணுகென்றுரைப்பவாலிநளிர்புனற்காஞ்சிபுக்கான். ௧௧௪

நடலைவெம்பிறவிமாற்றுஞ்சிவகங்கைநன்
சுடரொளித்திருவேகம்பர்தொழுதுபோய்மயானக்கீழ்பான்
மடனறச்சித்தர்பல்லோர்வழிபடும்பெருமைசான்ற
கடனுடைவாயுலிங்கங்கண்களிபயப்பக்கண்டான். ௧௧௫

மடல்பெறுவேட்கையாளன்வாயுவின்மிடலென்றெண்ணிக்
கடல்புரையன்பினங்கட்கைதொழூஉத்தவங்களாற்றி
மடலவிழ்கடுக்கைநம்பால்வரம்பலகொண்டுசேர்ந்தா
ரடல்வலிபாதியோடுகுரக்கினத்தரசும்பெற்றான். ௧௧௬

பெற்றபிணிலிங்கத்தன்னைப்பிறங்குதன்னிருக்கையுய்ப்பான்
பற்றினன்வலியாற்காஞ்சிப்பதிகமகனியவாற்றான்
மற்றவன்பெயர்க்கலாற்றான்மிடலெலாம்வைத்துவாலிற்
சுற்றியீர்த்தணிவாலிற்றுத்தூரத்தேயலறிவீழ்ந்தான். ௧௧௭

வீழ்ந்தவனெழுந்துவந்துமென்மலரடிகள்போற்றித்
தாழ்ந்தெழுந்தடியேனில்லந்தனிலெழுந்தருளிச்சூடும்
போழ்ந்தவெண்மதியாய்செய்யும்பூசைகொண்டருளாயென்று
சூழ்ந்துநின்றிரந்துவேண்டத்தோன்றிமுன்னிதனைச்சொன்னேம்.

கச்சிமூதூரினீங்காக்காதலமெம்மையீண்டே
யர்ச்சனைபுரிதிநின்வாலகழ்ந்தியதழும்புபூண்டு
சச்சைவெண்ணீற்றுவாலீச்சரனெனவிளங்கித்தோன்றி
முச்சகம்பரசவாழ்துமெனமொழிந்திலிங்கத்துற்றேம். ௧௧௯

அன்றுதொட்டனையசூழலற்புதத்திருவாலீச
மென்றொருபெயரினோங்குமேரிழாய்பஞ்சதீர்த்த
மன்றநீர்வாவிமூழ்கிவகுத்தவிப்பஞ்சலிங்க
நன்றுகண்டேத்தப்பெற்றோர்நலிவினைப்பிறவிதீர்வார். ௧௨௦

இன்னணமருளிச்செய்துபொலங்குவட்டிமயம்பூத்த
மின்னொடுமூவரோடும்விளங்கொளித்திருவேகம்பந்
தன்னிடைக்கரந்துநின்றான்சதாசிவப்புத்தேளந்த
நன்னகர்ப்பெருமைமுற்றும்யாவரேநவிலவல்லார். ௧௨௧

திருவேகம்பப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௨௦௨௨

# 51. தழுவக்குழைந்தபடலம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கம்பமால்கரியுரித்தவர்சிரமேற்கம்பதித்தவர்பசும்பொழிற்றலத்துக்
கம்பலம்விரித்தெனமலர்பரப்புங்கம்பமேவியதோருசிறிதுரைத்தாங்
கம்பலைத்ததிர்த்தெழுந்துமீக்கடுக்குங்கம்பைமாநதிப்பெருகினைக்காணூஉக்
கம்பமுற்றுமைதழுவமெய்குழைந்தகருணைமேனமையுங்கடவுரைத்திடுவோம்

பிரமன்பெருமானருளாலுலகைப்படைத்தல்.

பொற்றதாமரைப்பொகுட்டணைக்கிழவன்புகுதலுற்றதற்புருடகற்பத்திற்
பற்றும்வைகறைத்துயிலொழிந்திமயப்பாவைபாகனாடிதொழுதெழுந்தான்
முற்றும்வெள்ளநீர்ப்பரப்பிடையவனிமுழுதுமாழ்ந்ததுகண்டுளங்கவன்று
மற்றினிச்சகவகிலமும்படைக்கும்வண்ணம்யாதெனமயங்குறும்பொழுது.

பூதிமேனியார்திருவருள்கூடிப்புரிந்தமுன்னிகமுணர்ச்சிவந்தெய்த
வாதிகற்பத்திலெதிரெழுந்தருளியண்ணலார்கற்பந்தொறுந்தொறுநின்பாற்
சோதிசேரெழிற்குமாரநல்வடிவாற்றோன்றிநாமுனககருளுதுமென்னுப்
பேதியாவகைதனக்குமுன்னளித்தபெருவரத்தினைத்தெளிந்தனன்பிரமன்.

அன்னதன்மையினின்றுமங்கவரேயருள்செய்வாரெனத்துணிபுடைமனத்தாற்
றன்னுதற்றலத்தடியிணைகருதித்தவங்கள்பல்பகலாற்றுழித்திகழுஞ்
சென்னியாற்றினருத்திராகாயத்திரியினோடெழிற்குமாரநல்வடிவாய்
முன்னரெய்திடலோக்கியம்மனுவான்முதல்வனுர்த்தமையுணர்த்துகைதொழுது.

ஏற்றதற்புருடற்குறவினைதமெமக்குருத்திரனருளுகவென்று
மாற்றல்சான்றகாயத்திரிமனுவையனைத்துமாக்குவான்முறையுளிகணித்துப்
போற்றவார்ந்திழியருவியங்குவட்டுப்பொருப்புவில்லவாகருணைகூர்த்தலகத்
தோற்றுமாறருள்கொடுத்தெழுந்தருளத்தோட்டுவெண்மலர்க்கலைமகடுணைவன.

ஒருமையன்பினைப்புருடனைநினைந்தாங்குலகமாக்குழியாண்மையேதோன்ற
முருகுலாங்குழற்பெண்மையும்படைப்பான்முயன்றமெய்நிலன்புத்தியிற்றேர்த்து
புருடனுக்கெனத்தற்பொருட்டெய்தும்பொருண்மைநீத்தனன்சகத்திரயனைப்
புருடன்றன்னுடைப்பேருணிவினைகேமுருத்திரப்பிரானெமக்கருள்புரிக.

என்னும்வேறுகாயத்திரிமனுவையெழிற்புணர்ச்சியினுலகமுண்டாக்க
மன்னுசீர்க்கிழமைப்பொருள்வாய்ப்பக்கணித்துமாதவம்புரிவுழிவரிக்காப்
பன்னகம்புனைசடைமுடிப்பிரானுர்பாதிபெண்ணுருத்திகழ்தருவடிவான்
முன்னரெய்தியிம்மனுவினைக்கணித்தாய்முளரிவாழ்க்கைநீவேட்டதுதெளிந்தேம்.

நினக்குநாயகியிவளெமதிடப்பாணின்றுநீங்குபுதன்னொருகூற்று
னக்குப்பெண்ணுருப்படைத்திடுமோற்றலுதவுமென்றுரைத்தருளவக்கணமே
தனக்குநேர்வரும்பிராட்டியுமாங்குத்தணந்துதோன்றுபுதன்னொருகூற்றின்
வனப்புமிக்கவேறணங்கினைப்படைத்துமலராப்பொருட்டணையவற்கிதவுப்பான்.

இவளைநாடொறுநீவழிபட்டுப்பெண்கள்யாரையும்படைத்தியென்றியம்பி
யவளைநோக்கிநின்கூற்றினிற்பெண்களனைத்துநீபகுத்திடுகெனவருளித்
தவளமுண்டகக்கிழத்திதன்கொழுநன்றனக்குதவித்தன்றலைவரைமணந்தான்
கவளவெங்கரியுரிகதவர்தாமுங்கருணைசெய்துபோய்க்கயிலையைப்புக்கார்.

புக்கபின்றனைத்தொழுதுபோற்றிசைக்கும்போதினுனையவ்வனைக்கையாய்நோக்கி
நெக்கசிந்தையோய்நினக்கியான்புரியுநிகழ்ச்சியாதெனமலரவன்வணங்கித்
தொக்கபேரருளெந்தையாரிடத்துத்தோன்றுமன்னைநீபெண்ணுருமுழுதுக்
தக்கவாபடைத்தருள்கதில்லன்றேற்படைக்குமாற்றலென்றனக்கருள்புரியாய்.

பிரமன்வேண்டஇறைவிதிருவவதாரஞ்செய்தல்.

உம்பர்போற்றுநின்றிருவடிப்பொடியையுச்சிமேல்கொண்டுநான்படைக்கின்றே
னம்மையின்னமோர்விண்ணப்பமுளதாலடியனேன்பெறுதக்கன்றன்மகளா
யிம்பர்நீயவதரித்திடல்வேண்டுமென்றுவேண்டலுமுலகமீன்றளித்த
கொம்பர்நுண்ணிடையெம்பெருமாட்டிகூர்த்தபேரருட்கருணையினுணர்த்தும்.

முழுதுமாயுயிர்க்குயிரெனத்திகழுமுதலுருத்திரனென்றிடுஞ்சுருதி
தழுவியாங்கவனிடப்புறமேவுஞ்சத்தியாமவன்சத்தியனதனுற்
றொழுதகுந்திறலவன்றிருவடிவாந்தொல்சகங்களினிடப்புறமெனதாம்
பழுதிலாளநின்வடிவினைப்பகுத்துப்பாதிபெண்மையாண்பாதியிற்றிகழ்தி.

அண்ணலார்ருட்சத்தியுஞ்சிவனுமாயதன்மையினன்றுதொட்டுலகம்
பெண்மையாண்மையென்றிருவகைப்புணர்ப்பாற்பெண்ணுமாணுமாய்ப்பிறங்குமென்
பண்ணைமாமறைக்கடவுளுக்கருளிப்பாவையம்பிகையாயிடைக்கரந்து [றியம்பிப்
மண்மெணலாமுய்யச்சதியெனும்பேரால்வயங்குதக்கனுக்கொருமகளானள்.

ஆயநங்கையைவிதியுளியரனுர்க்களித்துநான்முகனன்னணந்திகழ
மாயிருஞ்சகமாறெணுடுபெண்ணுய்வயக்குமுற்றனவிலகாயகியும்
பாயும்வெள்விடைப்பாகரைமணந்துபழித்ததக்கனைவெறுத்தவன்மகண்மை
மேயமேனியைநீத்திமகிரிக்குமேனைபான்மகளாயவதரித்து.

அங்கண்மேவியபின்குகனைவற்பணியின்மேவினளாகமற்றங்நாட்
பங்கயத்தவனல்கியவரத்தாற்றருகாசுரனெனப்பயிலகொடியோன்
பொங்குமாண்மையினுலகெலாம்வருந்தப்பொன்னகாக்கிறைகுரவனை முதலோா
தங்குழாததொடுமுசாவிநான்முகத்தோனறன்னையெய்தியக்கொடுந்தொழிலியம்பி.

எந்தைநீயிதுதீர்திறம்புகலென்றிறைஞ்சிவேண்டலுந்திசைமுகப்புத்தே
ளந்தவெந்திறற்றருகனசெருக்கையடக்குமாண்மையனமுருகவேளனறிக்
கந்தமென்றொடைக்கடவுளரேனோர்வல்லரல்லரக்கந்தனைத்தருவா
னிந்துசேகரனுமையினைமணக்குமுபாயநீபுரிகெனவிடைகொடுத்தான்.

மீண்டுவாசவன்மாரனைநினைப்பவேனில்வேள்சிலைபகழிகைக்கொண்டு
காண்டகுங்கவினிரதியுமதுவுமருங்குமேவரக்கடுகிவந்திறைஞ்சி
யீண்டுநின்னருளாணையின்வலியால்யாதுமாற்றுவல்செய்பணியருளாய
மாண்டமுப்புரம்பொடிததவாதமையுமவெல்லவல்லுநன்மற்றுரையெவனோ.

ஈதியம்புழியிந்திரனுவகையெய்திவிண்ணவரிடும்பையுமவுண
னீதியில்லனபுரிவதுமலரோனிகழ்த்துமாற்றமும்வகுத்துரைசெய்து
பேதியாவகைபெருநதகையின்னேபிருருகன்றனையுமையொடுஞ்சோத்தி
போதியென்றலுமைங்கணைகிழவன்பொனனகாககிறைவிடைகொடுமீண்டான்.

இறைவன்இறைவியைமணத்தல்.

மீண்டுசெம்மலாரிருந்துழியணுகிமெல்லவெஞ்சிலைவாங்கலுமவனை
மாண்டகுந்திருநுதல்விழிநெருப்பின்மடுததுவார்குழலிரதிநின்றிரப்பக்
காண்டகாவகையுருவிலியாககிககடுந்தவம்புரிமலைமகண்மணந்து
தூண்டுவேற்படைக்குரிசிலையுதவித்தாருகன்றனைததொலைத்தருளசெய்தார்.

அறுசீாக்கழிநெடிலாசிரியவிருத்தம.

ஆங்கதன்பின்னர்ச்செங்கேழலங்கொளிவடிவினஞ்சந்
தூங்கியமிடற்றிறைருஞ்சுரிகுழலிமயமாது
மோங்குயர்பலவுஞ்சந்தும்வேரொடுமொடியத்தளி
வீங்கொலியருவிதாழுமந்தரவெற்பின்மேலால். ௨௦

உலகெலாமுய்யுமாற்றானுவளகத்தைந்துமூன்றுச்
சிலதியரடுக்கியிட்டசெழுந்தவிசணையின்மன்னி
விலகருமகிழ்ச்சிமீதூாதிருவிளையாடற்செய்கைக்
கலவியினயந்துதம்முட்களித்தினிதிருக்குமேல்வை. ௨௧

கலிநிலைததுறை.

மும்மைப்புவனங்களுஞ்செய்தவப்பேறுமுற்றச்
சும்மைத்திரைநீருடைமேதினிதோற்றமெய்தச்
செம்மைத்திசையெட்டினுந்தென்றிசைமிக்குவெல்ல
மம்மர்த்தொகைநூறியவண்டமிழ்நாடுவாழ. ௨௨

வேறு.

நலமன்னியதண்டகநாடுசெழித்துமல்கப்
பலரும்புகழ்காஞ்சிவளம்பதிமேன்மைசாலக்
குலவுஞ்சமயங்களொராறுமகிழ்ச்சிகூர
வுலகெங்கணும்வைதிகசைவமுயர்ந்துமன்ன. ௨௩

எவ்வெத்தவத்துஞ்சிவபூசனையேற்றமென்னப்
பௌவப்புனல்சூழ்படிமேலவர்தேறியுய்யத்
தெவ்வுத்தொழில்பூணுமறக்கடைதேயநல்கூ
ரெவ்வத்திறநீங்கியுயிர்ப்பயிரோங்குமோங்க. ௨௪

முப்பான்முதலிட்டவிரண்டறமுந்தழைப்ப
வெப்பாலுலகத்தொளியாவையுமெம்பிரானுர்
தப்பாவிழியின்னெளிச்சால்பெனயாருங்காண
வப்பார்சடையாரடித்தொண்டரகங்களிப்ப. உரு

இறைவி இறைவன் திருக்கண்புதைத்தல்.

கைம்மிக்கெழுகாதல்விருப்புமீதூர்குறிப்பின்
விம்மிப்பணைத்துப்புடைவீங்கியெழுந்தகொங்கைப்
பொம்மற்பெருமாட்டிவெரிந்புறத்தெய்திவல்லே
செம்மற்பிறைவேணியனுர்த்திருக்கண்புதைத்தாள். உகூ

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருண்டபூங்குழலாள்செங்கையிறுகுறப்புதைத்தலோடு
மிருண்டகந்தரத்தார்நோக்கினிருசுடர்மறைந்தவாற்ரு
லிருண்டதுபுவனமுற்றுமிருண்டவெண்டிசையுமென்று
மிருண்டறியாதவிண்ணேரிருக்கையுமிருண்டதந்நாள். உஎ

அழுங்கவேதன்னைநாளுங்காய்ந்துலாமருக்கர்தம்மோ
டொழுங்குறத்திரட்டிநீட்டிச்செருகிவைத்திட்டாலொக்குஞ்
செழுங்கதிர்மதியஞ்செந்தீயுமெணித்திரளையெல்லாம்
விழுங்கித்தன்வீறுகாட்டிப்படர்ந்ததுதிமிரவீக்கம். உஅ

சிறைபடுகூகையாதிகருங்கொடித்திரள்களொத்த
மறமலிபுலிகளாதிவானரக்குலங்களொத்த
நறைகமழ்குமுதப்போதுநளினமுந்தம்முளொத்த
வுறுதுயர்நேமிப்புள்ளுஞ்சகோரமுமொருங்கேயொத்த. உகூ

அலர்தலையுலகங்காணுரதற்படுபொருள்கள்காணுர்
நிலைபெறுதத்தம்யாககைநீர்மையுங்காணுர்முந்நீர்க்
கலிதிரைவரைப்பினேருங்கண்டறியாதவானத்
தலைவருந்திமிரமொன்றேதணப்பறககாண்டல்பெற்ருர். ௩0

இறந்ததுபடைப்பினுக்கமிகந்தனவேள்விச்செய்கை
பறந்தனதவந்தானங்கள்பறைந்தனகடவுட்பூசை
துறந்தனகலவியின்பந்தொலைந்தனவறிவின்றேர்ச்சி
மறந்தனமறைநூற்கேள்விமயங்கினவுலகமெலலாம். ௩௧

இறைவிகாநீப்பஇறைவன்கண்திறத்தல்.

கடவுளர்முனிவர்மக்கள்யாவருங்கவன்ருங்காங்குப்
படலைவல்லிருளின்மூழ்கிப்பதைபதைத்தாவாவென்னக்
கடலொலிக்கிளர்ச்சிநாணமுறையிடுங்காலைவெற்பின்
மடவரல்கரங்கணீப்பமலர்விழிதிறந்தாரையர். ௩௨

அல்கின்வொளிகளெங்குமஃகியதிருளின்வீக்க
மல்கினபடைப்புங்காப்பும்வயங்கினவறத்தினீட்டம்
பலகினவேள்வியெங்கும்பரந்தனவிறைவர்சீர்த்தி
புல்கினவேதவாய்மைபொலிந்தனவுயிர்களெல்லாம். ௩௩

வெறிமலர்த்தளவமூரல்விழியிணைமறைத்துநீக்குஞ்
சிறுபொழுதுலகுககெல்லாமெண்ணில்பல்லூழிசென்று
மறைநெறிபடைப்புச்செய்கையாதியமறுத்தவாற்ரு
லிறைவிதன்வதனநோக்கியேந்தலாருளிச்செய்வார். ௩௪

### இறைவியைத்தவஞ்செய்யப்பணித்தல்.

இருசுடர்தமக்காதாரமாகியவெமதுகஞ்சத்
திருவிழிபுதைத்தவாற்றூற்படைப்பாதிச்செய்கைமாறி
யுருகெழுதீமைநின்னையுற்றதாலதற்குத்தீர்வு
மருமலர்க்குழலினாய்நீமரபுளியியற்றல்வேண்டும். ௩௫

இகப்பருங்கருணைபூண்டவெமக்குநின்றனக்குநந்த
மகத்தடியவர்க்கும்பாவமணுகுவதில்லையேனும்
வகுத்தவாபுரிதியெல்லாக்கருமமுமரபினால்யா
நிகழ்த்தியவாறேபற்றிநிகழ்த்திடுமுலகங்கண்டாய். ௩௬

என்றருள்செய்யக்கேட்டுநடுக்கமுற்றிறைஞ்சிநின்று
மன்றலங்குழலாள்கூறும்வள்ளலேகழுவாய்ச்செய்கை
யென்றறியாதுசெய்யுங்காலமேதிடமேதெல்லா
நன்றெனக்கருளாயென்னநம்பனார்வகுத்துச்சொல்வார். ௩௭

கலிநிலைத்துறை.

வில்லிழைபூண்டிறுமாந்தெழுகொங்கைவிரைக்கோதா
யல்லனசெய்துபினஞ்சுபவர்க்குறுகழுவாய்தா
நல்லறநூல்களின்மாதவர்நாட்டினரவையெல்லாஞ்
சொல்லியதீர்வுமிகச்சிறுமைத்திதுதுணிவாயால். ௩௮

எத்துணைவன்மையறக்கடைமுற்றுமிறச்செய்யு
மத்தகுசீர்க்கழுவாயெமையன்பினருச்சித்தல்
சித்தமொருக்கிநினைத்தல்பழிச்சுதல்பேர்செப்பல்
பத்தியினெம்மடியார்வழிபாடெனுமிவையாமால். ௩௯

முற்றியசீரிருமுப்பருவங்களுமுறையானே
யற்றமில்காலமெனப்படும்யாம்பெரிதானந்த
முற்றுறைகின்றவிடங்களிடங்களெம்முறுமன்பர்
பற்றியதானமுமத்தகைமைத்தெனவறிபாவாய். ௪0

ஆதலினான்முறைவைப்பிடையாயினுமெம்மன்பர்
மேதகவைகும்வரைப்பிடையாயினுமீப்பொங்குங்
காதலினாலெமையர்ச்சனையாற்றுதியிதுகாணூஉப்
பாதலமண்ணகம்விண்ணகமுய்வதுபண்பென்றார். ௪௧

என்றலுமங்கணர்பங்கயபாதமிறைஞ்சித்தாழ்ந்
தொன்றியசிந்தையினாளுடைநாயகியுரைசெய்வா
ளன்றியநெஞ்சுரைசெல்லருநீயவரவர்தத்தம்
பொன்றுமுணர்ச்சியினர்ச்சனைபூணவுமெளிவந்தாய். ௪௨

நானுமகிழ்ந்துனையர்ச்சனைசெய்யுநலம்பெற்றேன்
றேனமர்கொன்றைமிலைச்சியசெஞ்சடைவள்ளானின்
ஞானமில்பூசனைசெய்திறமெத்திறமுரையென்ன
வானுடையூர்தியருட்கடலன்னவர்புகல்கிற்பார். ௪௩

கரிசறுநித்தநைமித்திககாமியமெனமூன்று
முரிமையினெம்மடியர்ச்சனையேனையவுலகத்துப்
புரிதருபூசனைநித்தியபூசனையாமன்றித்
தெரிதரிலன்னவைகாமியநைமித்திகமாக. ௪௪

பொருவறுமூன்றுமுறுங்கருமம்புரிநிலமீதே
கருமநிலக்திகழ்பாரதமாம்வருடங்கண்டாய்
திரைகெழுகீழ்க்கீடன்மேல்கடல்சேதுவொடிமயத்துன்
மருவியமேதினிபாரதமால்வருடம்மாமால். ௪௫

இத்தகுபாரதமாம்வருடத்தினெமக்கான
வுத்தமவைப்பின்விதிப்படியெம்மையிலிங்கத்தின்
முத்துறழ்வெண்ணகைமுற்றிழைமூதலகெல்லாமெய்ச்
சித்திபெறும்படிவில்லையருச்சனைசெய்கிற்பாய். ௪௬

காஞ்சியேதவஞ்செயற்கிடமெனல்.

என்றலுமாவயினெண்ணிறலங்களுளெம்பானீ
நன்றுமகிழ்ந்துறைமிக்குயர்நற்றலம்யாதென்னக்
குன்றுகுழைத்துவடிக்கணைபூட்டினர்கோலகோடி
யன்றினரிஞ்சியழித்தருளங்கணர்தாஞ்சொல்வார். ௪௭

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆயிடைநாமகிழ்ந்துறையுந்திருப்பதிகள்பலகோடியவற்றுண்மேலா
மாயிரத்தெட்டவற்றதிகமொருநூற்றெட்டவற்றதிகமறுபத்தெட்டா
மாயினவற்றுயர்காசிகாஞ்சியெனுமிரண்டதிகமறிவான்மிக்கோ
ராயினவையிரண்டுள்ளுஞ்சாலநனிகன்னியநகரணிநீர்க்காஞ்சி. ௪௮

இவ்வண்ணந்தானங்கள்பலவகுத்ததெற்றுங்கேலியம்பக்கேளாய்
மைவண்ணவிருண்மலத்தினிருவினையாற்பிணிப்புண்டுமருளின்மூழ்கி
யுய்வண்ணமறியாதபசுக்கடமையமலத்தினுருதநாமே
மெய்வண்ணப்பெருங்கருணைதகன்மையினுலவிடுவிக்கவேண்டுமாற்றான்.

மருவாரும்பூங்குழலாயைவகையசத்திகளைவகுத்துப்பின்ன
ரருநான்குமுருநான்குமருவுருவந்தானென்றுமாகவொன்பான்
றிருமேனிதோற்றுவித்துத்தோற்றமுதலைந்தொழிலுஞ்செய்வானுன்னி
யிருவேறுமாயைகளினுடலகருவியிடமனைத்துமுயிர்கட்கீந்து. ௫௦

உள்ளமுதல்விகாரத்தினெய்துமிருவினைக்குரியபிறவிகாட்டிப்
பள்ளநீர்நடுக்கீழ்மேலூசலெனகமகாட்புறுததுப்பருவநோக்கி
மெள்ளவினைப்பயனூட்டிநஞ்சோடுசுவையமிழ்தும்விராவித்தீற்றித்
தெள்ளுதவமறிந்தறியாதுபாயத்துமுண்மையினுஞ்சேரச்செய்வேம்.

தீக்ஷையினுட்பிரிவு.

சரியையெனக்கிரியையென்னயோகமெனஞானமெனச்சாற்றுநான்கா
மிரியமலத்துகளறுத்துநமைக்காட்டுமெருந்தவங்களிவற்றிற்சேரற்
குரிமைதருமுயர்தீக்கைசமயமுதன்மூன்றவைதாமுதவுமுத்தி
யரிலகன்றம்வம்முலகத்துறலாதிநான்கென்னவறையுநூல்கள். ௫௨

தேக்கூறுதேமொழியாய்மலஞ்சிகருந்திக்கைபலவிதமாமங்க
ணேககூறுமொழியெண்ணநூல்யோகமவுத்திரியாநுவலுமேழுண்
மீக்கூறுமவுத்திரிதான்வியன்கிரியைஞானமெனவிருபாலாய்முப்
பாற்கூறுபடுஞ்சமயவிசேடநிருவாணமெனும்பகுப்பினாலே. ௫௩

சமயதீக்ஷையுஞ்சரியையும்பயனும்.

மருவுபுறமகமென்னுமதத்துழன்றுவருணநிலைவழாதுநின்று
மிருதிமறைநெறிவேள்விபலபுரிந்துவேதாந்தப்பொருண்மைதேறி
வருமுறையானிவையனைத்துமுற்றியபின்மேனோக்குமதியான்மிக்கோர்
தெருளுதவுசைவநெறிப்படுஞ்சமயதீக்கைதனக்குரியராவர். ௫௪

அவ்வாற்ருன்யாமருவுக்திருக்கோயிலலகிடுதன்மெழுகலன்பின்
செவ்வாற்ருன்மலர்கொய்துதார்மாலைதொடுத்தணிதறீபமேற்றன்
மெய்வாய்ப்புச்சிவனடியார்பணித்தபணிதலைநின்றுமேவலாதி
யிவ்வாற்றிற்ருதநெறிச்சரியையினைப்புரிவோரெம்முலகின்வாழ்வார்.

விசேஷதீக்ஷையுங்கிரியையும்பயனும்.

ஈதியற்றிமுற்றியபின்மகநெறிக்காம்விசேடத்தையெய்திப்பூசைக்
கோதியகொண்டாதாரசத்திமுதல்சத்தியீருேங்குகஞ்சத்
தாதனமேமூர்த்திமுதல்பாவித்தாவாகித்தாவரணபூசை
யாதியசெய்தழலோம்புமிக்கிரியைவழாதாரெம்மருகுவாழ்வார்.

யோகமும்பயனும்.

இக்கிரியைமுற்றியபினியமாதியெட்டுறுப்பினியல்புவாய்ந்து
பக்ஷவளிதனையடக்கிநடோடியுறப்பயிற்றியாருதாரந்
தொக்கபொருளுணர்ந்தேகிமதிவரைப்பினமுதுண்டுசோதியுள்ளாற்
புக்கழுந்துஞ்சகமார்க்கயோகுழப்போரெம்முருவம்பொருந்திவாழ்வார்.

நிருவாணதீக்ஷையுஞானமும்பயனும்.

முறையானேயிம்மூன்றுமுற்றியருள்பதிந்துவினையொப்புவாய்ந்து
நிறைவாயபருவத்தினுயிர்க்குயிராய்நின்றருளும்யாமேதோன்றி
மறைவாய்மைநிருவாணவிதியாற்ருல்வழியாறுந்தூய்மைசெய்து
குறையாதபேரருளினறிவுறுக்குமஞ்செழுத்தின்கொள்கைதேற்றி.

அருவுருவங்குறிகுணங்கண்முதலீறுகட்டுவீடனைத்துமின்றிப்
பெருமையதாய்நுண்ணியதாய்ப்பேருணர்வாயானந்தப்பிழம்பாயெங்கு
மொருமுதலாயழிவின்றியோங்கொளியாய்நிறைந்துளதாயுயிர்கடோறும்
விரவியுடன்ருெழிற்படுத்துப்புலங்கொளுத்திவீடுய்க்கும்பதியாமெம்மை.

எண்ணிலவாய்வகைமூன்ருய்வெண்சிலைபோற்பற்றியவைதாமாயென்று
முண்மையவாய்ச்சத்தசத்தும்பகுத்துணர்சத்தாயிருளுமொளியுமல்லாக்
கண்ணியல்பாய்வசிப்பவருநிறைவாயெம்மருளாற்கட்டறுத்துவீடு
நண்ணுபவாயுணர்த்தவுணர்சிற்றறிவிற்பலவாநற்பசுக்கடம்மை.

ஒன்ருகியழிவின்றிப்பலவாற்றலுடைத்தாய்ச்செம்புறுமாசென்னத்
தொன்ருகியருள்வினைவினீங்குமிருண்மலத்துடனத்தொடக்குநீப்ப
மின்ருவுமுடலாதிநல்குமிருமாயையிருவினைகட்கேது
வென்ருேதுகருமமிவைநிகழ்த்துதிரோதமுமெனுமைவகைப்பாசத்தை.

திரிபுணர்வுபொதுமாற்றிச்சிறப்பியல்பானுணர்ந்தெண்ணித்தெளிந்தேறு
மரியபெறற்சன்மார்க்கஞானநிலையிதுகிடைத்தவறிவான்மிக்கோர்
பெரியமலப்பிணியவிழ்ததுச்சிவானந்தப்பெரும்பேறுமருவிப்பாச
மிரிவதூஉம்புகுவதூஉமின்றியொருநிலையாமவ்வியல்புதன்னில்.

உணர்பொருளுமுணர்வானுமுணர்வுமெனும்பகுப்பொழியாதொழிந்துபாலுப்
புணர்விழியுநீர்நிழலுந்தீயிரும்பும்புனலுவரும்பரிதிமீனும்
துணையவிரண்டறுகலப்பினெம்முடனுய்ப்பேரின்பந்துய்த்துவாழ்வா
ரிணர்விரைத்தமலர்க்கோதாயவர்வடிவேயெமக்கினியகோயிலாமால்.

பூமியிற்பலதளிபோருந்தியகாரணம்.

முத்திமுடிபிதுகண்டாய்முன்னியம்புமூன்றுமுத்திபதங்களாகு
மித்தகையமுத்திகளையிம்முறையான்முயன்றவரேயெய்தற்பாலா
ரத்தகையவழியிலோரெளிதாகவீடுபேறடைவானெண்ணி
வைத்தபெருங்கருணையினுன்மேதினிமேற்பலதானம்வயங்கச்செய்தேம்.

அங்கவற்றின்வதிவோர்கண்முயலாதெம்முலகாதிபதங்கள்சேர்வர்
கொங்குயிர்த்தமலர்க்குழலாயவற்றின்ஞங்குருமாடக்காசிவைப்பிற்
றங்குபவரெம்முருவந்தனைப்பெறுவர்திருகாஞ்சித்தலத்தின்வாழ்வார்
மங்கரியமலந்துமித்தநம்முடனும்பேரின்பவாழ்வுசேர்வார். ௬௫

எம்முலகத்துறைவதனிலெம்மணிமைக்கண்ணமர்தலேற்றமாகு
மெம்முருவந்தனைப்பெறுதலதற்கதிகமதற்கதிகமிறவாவின்பத்
தெம்முடனுயொற்றித்தலிம்முறையான்வதிவோர்களெவர்க்குமாரு
தெம்முடனும்பேறளிக்குங்காஞ்சியெவற்றினுமதிகமென்னத்தேருய்.

மறைமுடிவுமிவ்வாறேவிடுதெவும்வளநகரங்காஞ்சியென்ன
வறைதருமாலன்னதூஉம்வகுத்துரைப்பக்கேட்டியெனவருளிச்செய்வார்
மிறைபுரியுந்தக்கனர்வேள்வியகத்திமையவர்தம்மேனிமுற்றுங்
குறைபடுத்துத்துகைத்துழக்கிச்சவட்டியபினிரங்கியருள்கொடுக்கவல்லார்.

கேசாந்தமுத்தி.

தன்னிகரில்கேசாந்தமுறுமாவிதன்சிரத்துக்கபாலங்கீறி
வன்னியினிற்பூவெனப்போய்வாயுவினிற்புவ்வெனப்போயிரவிமாட்டுப்
பின்னமறுசுவ்வெனப்போய்விண்ணரசினமகவெனப்போய்ப்பிரமத்தொன்றாய்
மன்னிடுமிக்கேசாந்தமுத்தியினையெவ்வுயிர்க்கும்வழங்குங்காஞ்சி. ௬அ

கவ்வெனச்சொல்விதிக்கீசனுயவெமைக்கேசனெனக்கழறும்வேத
மெவ்விடத்திலாருயிர்களெம்பாலேயந்தத்தையெய்தாநிற்கு
மவ்விடத்திலதுமுத்திகேசாந்தமுத்தியெனப்படுமாலந்தச்
செவ்விடமுநமக்கென்றுமாசிருக்கையெனத்திகழுங்காஞ்சிமூதூர். ௬௯

இன்னுமொருவாறியம்பக்கேண்மதிநீகம்மென்றல்சிரமாமந்தச்
சென்னிமிசைச்சயனமுறுவதுகேசமதுதனையஞ்சித்தல்காஞ்சி
யன்னதனுற்காஞ்சியொடுகேசமொருபொருட்கிளவியாகுந்தேம்பு
மின்னிடையாய்கேசாந்தமாவதுமேதகுகாஞ்சியந்தமாமால். ௭௦

என்றுநமக்கினியதனுன்முதன்மையாற்றுனங்கட்கெல்லாஞ்சென்னி
யென்றியம்பப்படுங்காஞ்சியித்திறத்துக்கேசாந்தப்பெயர்சால்வைப்பி
னென்றுணராமடவோர்சூள்விலங்குமரமுதலனைத்துமுயிர்போங்காலை
மன்றமிசைத்தலையோடுகீறியுடல்விடுத்தேகுமலர்ப்பூங்கோதாய். ௭௧

ஆதலினங்கிறந்தவர்கட்குடல்வேங்காற்சிரமனலின்வெடியாதின்றும்
வேதமெலாமெடுத்தியம்புமங்நகரின்பெருமையெவர்விளம்பற்பாலா
ரேதமறவங்கெய்திக்கழுவாய்நீயியற்றுதிமுன்னிடபவேறுங்
கோதகலக்கழுவாயங்காற்றியதுகோதாயென்றருளிச்செய்தார். ௭௨

தருமம்பெருமானுக்குவிடையாதல்.

கலிநிலைத்துறை.

அருளுந்திருவாய்மொழிகேட்டலுமங்கைகூப்பிப்
பெருவெள்விடையாததுசெய்பிழையென்னைதீரப்
புரியுங்கழுவாயெவனுபுகல்கிற்றியென்றுட்
கிருள்கண்டனவல்விடமேந்தியகண்டர்சொல்வார். ௭௩

முன்னோர்கடைநாண்முளரிக்கண்முகிழ்த்தபுத்தேண்
முன்னுஞ்சகமுற்றுநம்மான்முடிவுற்றதாகப்
பொன்னேர்சுணங்கிற்பொலம்பூண்முலைப்பூவையன்று
யங்காளறத்தெய்வதமத்திறமுற்றுநோக்கி. ௭௪

நில்லாவுலகத்துளவாயசரிப்பநிற்ப
வெல்லாமழிவுற்றனயானுமிறப்பலோவென்
றல்லாந்தினிச்செய்வகையாதென்றிறைஞ்சிநம்பாற்
கொல்லேறுருவங்கொடுவந்ததுபோற்றியென்ன. எரு

கண்டாமதனைக்கவலாதியென்றார்தியாக்கிக்
கொண்டாங்கொளப்பெற்றுலவாக்களிகூர்ந்ததாக
வண்டாரளகக்கொடியவ்விருண்மாண்டகாலைத்
தண்டாவருளாலதற்கின்னதுசாற்றலுற்றேம். எசு

தரிப்பித்தலினீதருமந்தரிப்பித்திடாமை
தெரிப்பிக்குமதன்மமெனப்பெயர்செப்புமாலெம்
பொருட்டுப்புரிபாவமும்புண்ணியமாக்கியெம்பால்
விருப்பற்றவர்செய்யறமும்மறமாக்குவிப்பாய். எஎ

இவ்வேற்றிடபப்படிவத்துடனெங்குமெம்முன்
செவ்வேவதிகென்றருள்செய்திடுநலவரம்பெற்
றவ்வாறுநமக்கெதிர்நித்தலும்வைகுமங்கேழ்ச்
செவ்வாய்க்கருமென்குழல்வெண்ணகைச்செம்பொற்பூணாய்.

வீறுர்தருமக்கடவுட்சினவெள்விடைக்கோர்
கூறுதலின்மாயனுமுப்புரங்கொன்றவஞ்ஞான்
றேறுயெமைத்தேரொடுதாங்கினனேறுவந்த
வாறுமிதுமேலதுசெய்பிழைமற்றுஞ்சொல்வாம். எகூ

கருடன்செருக்கடைதல்.

கலிவிருத்தம்.

பின்னொருகாலததுப்பிறங்குமாற்றலசால்
பன்னகப்பகைமைகொள்பறவைநாயகம்
பொன்னமர்மார்பனைப்பொறுத்துவல்லையே
யங்கிலயுலகெலாமணுகிமீண்டதால். அ0

மீண்டபின்றருக்குமீக்கொண்டுவீறுடை
ஞண்டகைமாயனைநோக்கியண்ணலே
காண்டகுமாற்றலிற்கதழ்விசைன்னிகர்
மாண்டவருளர்கொலோவையமூன்றினும். அக

நிற்பனசரிப்பனயாவுமாய்நிறை
நிற்பொறுததரைக்கணப்பொழுதினீடியோய்
பொற்பமூவுலகினும்போந்துமீளுமிவ்
வற்புதமெனக்கலாதார்க்குண்டாகுமோ. அஉ

என்றிதுபுள்ளரசியம்பக்கேட்டலு
நன்றெனக்குறுநிலாநகைமுகிழ்த்தரோ
வின்றிதன்செருக்கெலாமிடபநாயக
மொன்றறக்களையுமென்றுளத்திலெண்ணினன். அங

மெய்யுரைவிளம்பினையுலகமீமிசை
யையநிற்கிணையெவராருமில்லெனக்
குய்யம்வைத்தணிமுடிதுளக்கிக்கூறினன்
செய்யவள்வனமுலைதிளைக்குமார்பனே. அச

வார்சடைப்பிரானடிவணங்குவாமெனுப்
போர்வலிப்புள்ளொடுங்கயிலைபுக்கன
னேர்கெழுபோகமாபுரத்தினெல்லையவ்
வூர்தியினிழிந்துசென்றங்கணெய்தினான். ௮௫

ஐந்ததாமாவரணத்தினெம்மெதி
ரைந்துகோமாதர்சூழ்ந்தனுகிவைகவாழ்
மைந்துடைவிடையவன்மாயனேடுறும்
வெந்திறற்புட்குலவேந்தைக்கண்டதால். ௮௬

விடையினுயிர்ப்பில்கருடனலமறல்.

தன்னெதிரிகழ்ச்சியாற்றருக்குமாங்கதன்
புன்னிலைநோக்குபொருக்கெனச்சிரந்
தன்னிடகுறங்கினிற்சார்த்தித்துஞ்சுவ
தெனநெட்டுயிர்ப்பினிற்சிமிழ்த்ததேந்திழாய். ௮௭

மாயவனெம்மடிவணங்கியன்பிறு
ஞயிடைநெடும்பொழுதமர்ந்துவைகினன்
பாய்விடையூர்திநெட்டுயிர்ப்பிற்பட்டுழல்
காய்சினக்கலுழனுங்கழியநொந்ததே. ௮௮

விட்டுவிட்டடக்குதோறுயிர்ப்பின்வேகத்தா
லட்டநூறியோசனையவதிபோந்துபின்
கட்டெழினுசியினுனிக்கட்சார்தரக்
கொட்புறுத்தலைததுபறவைக்கோவினை. ௮௯

ஓய்யெனநெட்டுயிர்ப்புதைந்துமீடொறு
மெய்வயிற்சுஃஃஃறெமளவிரிந்துசுடம்பிடுஞ்
செய்யபொற்சிறைகளிற்சிதைந்துபுன்மயிர்
துய்யெனவெளியிடைச்சுழனறயாங்கணும். ௯0

அதிர்ந்தனவிண்ணெலாமயர்ந்ததிக்கய
முதிர்ந்தனதருத்தழையுக்கமீன்கணம்
பிதிர்ந்தனவரைக்குலம்பெயர்ந்தகோள்களு
முதிர்ந்தெழுஞ்சினவிடையுயிர்ப்பின்மொய்ம்பினன். ௯௧

எதிருறவிலங்கியவரையுமேனவு
மதலையிற்பற்றுவான்மனத்தினெண்ணுமுன்
கதழ்வினூறியோசனைகடத்திமீட்குமான்
மதனுடைக்கலுழனையுயிர்ப்பின்வாயுவே. ௯௨

சரிந்ததுதருக்குடல்சழங்கலுற்றதா
விரிந்ததுமிடலிறுமாப்புமிற்றது
முரிந்தனபொலஞ்சிறைமுதிர்ந்ததின்னனேய்
கரிந்ததுமாமையுங்கருடற்கென்பவே. ௯௩

பருவரும்புடையினிற்கழியப்பார்க்குமீ
தொருவருந்தகைத்தெனுமூக்கமின்மையிற்
றெருமருமுணங்குறுந்திகைக்குந்தேம்பிடும்
வெருவருமாயனைவிளிக்குமென்செயும். ௯௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஐயவோவுலகங்காக்குமடிகளோகாயாம்பூவின்
மெய்யவோவென்னையாண்டவிமலவோதிகிரியேந்துங்
கையவோவெய்ப்பின்வைப்பாங்களைகணேகலந்தார்க்கென்று
மெய்யவோகலவாதார்க்குவெய்யவோவேந்தனேயோ. ௬௫

விடையரசுயிர்ப்பிற்பட்டுமெலிகின்றேனேலிந்தத்
தடைவிடுத்தடியனேனைத்தாங்குவாயோலமன்றேற்
கடையனேனுவியின்றேகழிந்திடுமோலமென்னை
யுடையவாவோலமென்றென்றோலமிட்டழைத்ததாலோ. ௬௬

விடையுங்கருடனுமெதிர்வரப்பணித்தல்.

சீறுவெம்பணிவாய்ப்பட்டதேரையின்மறுகியோசை
வேறுபாடெய்திமாலேவிளிப்பதெஞ்செவியிற்கேட்டே
மாறடுதிகிரியோயிதென்னெனவட்கார்தம்மை
நூறியசிற்றத்துப்பினேன்றகைநெடியோன்சொல்வான். ௬௭

இன்றுநின்னடிகள்போற்றுமிச்சையினென்னோடிங்கு
வன்றிறற்கலுழன்போந்தான்வாய்தலிற்றுயிலும்வெள்ளிக்
குன்றுறழிமிலேற்றண்ணலுயிர்ப்பினிற்கோட்பட்டாவி
பொன்றுவானென்னநொந்துவிளிக்கின்றான்புனிதவென்றான். ௬௮

மாதவன்விளம்பக்கேளாமற்றிதுநிகழ்தற்கேது
வேதுநீயறிந்ததுண்டேவியம்புதிவிடுத்துமென்ன
நாதனேகலுழன்சாலத்தருக்கினனதனைப்போக்குங்
காதலாலீங்குவந்தேன்காரணமிதுவாமென்றான். ௬௯

உள்ளதுபுகன்றாயென்னநந்தியையூங்குநோக்கிக்
கள்ளவிழ்தொடையாய்நம்மைவழிபடுங்கருத்தானெய்தும்
புள்ளரசினையீர்வண்ணம்பொருக்கெனப்போந்துசீற்ற
வெள்விடையுயிர்ப்பினின்றும்விடுவித்துக்கொணர்தியென்றாம்.

இத்தகுமாணைதாங்கியாவயினெய்திநந்தி
பொய்த்துயில்கொள்ளுமேற்றைப்புடைத்தனனெழுப்பலோடு
மெய்த்துயிலுணர்ந்தான்மானவல்விரைந்தெழுந்துகண்க
ளத்துறுகலக்கங்காட்டியாங்ஙனநின்றகாலே. ௧௦௧

போற்றுசீர்நந்திப்புத்தேள்புண்ணுறுமுடம்பிற்புள்ளி
னேற்றொடுவிடையினேற்றையெம்மெதிருய்த்தானுக
சீற்றமுஞ்செருக்குமாண்மைத்திட்பமும்வீறுங்குன்றி
மாற்றருமதுகைப்புள்ளேறெம்மடிவணங்கிப்போற்றி. ௧௦௨

ஒடுங்கியுள்ளுடைந்துதண்டாதுயிர்ப்பெறிந்திரங்கிமேனி
நடுங்கிடக்கண்ணீர்வாரமுரிசிறைமருங்குநால
நெடுங்கைதன்சிரமேற்கூப்பிமால்புடைநிற்பநோக்கிக்
கொடுங்கொலைப்பகழிக்கண்ணாய்விடைக்கிதுகூறலுற்றாம். ௧௦௩

விடையினைச்சிவபூசைசெய்யப்பணித்தல்.

எம்முடையாணையின்றியெம்மெதிர்நீயேயிந்நாண்
மம்மரினிதனைச்செய்தாய்மாணிடவடிவந்தாங்கிச்
சும்மைநீர்வரைப்பிற்காஞ்சித்தொன்னகரெய்தியங்க
ணம்மைநீபுரிதிபூசைகளைவிதுகழியுமாறே. ௧௦௪

எனவிடையளிப்பப்போற்றிப்புடைபரந்தெழுந்துவஞ்சி
யனவிடைதுவளவீங்குமலர்முலைக்கொம்பனாய்
சினவிடையரசுவல்லேகரவுருத்திகழக்கொண்டு
மனவிடையிழைத்தசெம்பொன்மாளிகைக்காஞ்சிகண்ணி. ௧0௫

இடபேச்சரம்.

கவிழிணர்த்தனிமாமூலத்தெம்மெதிர்கமலப்பூத்தோ
டவிழ்சிவகங்கைக்கோட்டினுங்கதுவைகும்வைப்பிற்
குவிவரும்பெருமைசான்றகுடதிசைமுகமாத்தன்பேர்
புவிபுகழிலிங்காபித்தருச்சனைபுரிந்துபோற்றி. ௧0௬

காட்சியித்தருளுநம்பால்வரம்பலகருதிப்பெற்று
மாட்சியினுலகமெல்லாமனுமுறைவழாதுபன்னு
ளாட்சிசாலரசுசெய்துகடைமுறையானேற்றண்ணன்
மீட்சியினருள்பெற்றிங்குமேவிவீற்றிருந்ததன்றே ௧0௭

இறைவியிறைவனருள்வழியேற்றல்.

ஆதலினீயுமங்கணகிலமுமுய்யவனெம்மை
மேதகுகழுவாய்நீரின்விதியுளிப்பூசைசெய்யப்
போதராயென்றுநல்கப்புரிகுழலணங்குதாழ்ந்து
நாதனுரிசைவுபெற்றுநயந்தெழுந்தருளலுற்றாள். ௧0௮

நம்பனார்தம்மையின்பநகையிடைத்தணக்குநோயுங்
கம்பரைப்பூசைசெய்யுங்காதலுமிருபாலீர்ப்ப
வெம்பிரானருளாயென்றுதாழ்ந்துதாழ்ந்தெழுந்துநின்று
கொம்பரினலைகப்பலகாற்புறவிடைகொண்டுபோற்றி. ௧0௯

மின்கொண்டன்மிடற்றார்காட்சிவிழிக்கெதிர்மறையுங்காறும்
பின்கொண்டுநடந்துசென்றுபெருமுதல்வாய்தனீங்கி
முன்கொண்டுநடவாநின்றாண்முககுறும்படக்கியைவர்
வன்கொண்டிகடந்தமேலோர்காண்டகவயங்குமம்மை. ௧௧0

இறைவிபாங்கிமாரோடுகாஞ்சிக்கெழுந்தருளல்.

ஆயிடையரிதினீங்கியங்கணரருளாலங்கட்
பாயபல்கணங்களுய்த்தபடரொளியெறிக்குமங்கேழ்
மாயிருவிமானத்தும்பர்மன்னுயிர்த்தோழிமார்தம்
மாயமுந்தானுமேறிவழிக்கொண்டாளனையகாலை. ௧௧௧

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உலகெலாமீன்றவெம்பெருமாட்டியோங்குயர்விழுப்புகழ்க்கம்பத்
தலைவரைவிதியானருச்சனைசெய்யச்சார்கின்றாளென்றுபேமிராகை
மலியெடுத்தியம்புமங்களங்கேளாவுருத்திரமடந்தையர்முதலோ
ரலகிலாமகிழ்ச்சிமீகொளுங்களிப்பினோடதெழுந்தொறுங்குவகதிருத்தார். ௧௧௨

தாமரைமட்வார்புடைபரந்துணுகத்தாமரைமடவால்வந்தா
ளுமிசைக்கிழத்திபற்பலவெள்ளநாரியர்புடைவரவந்தாள்
கோமளவனப்பினும்பன்மெல்லியலார்குழாத்துடனுயர்சசிவந்தாள்
காமருமாதரெழுவருஞ்சங்கக்கன்னியர்சூழ்தரவந்தார். ௧௧௩

வான்மடமகளிர்வேறுபல்வகுப்பின்மங்கையர்பற்பலாயிரவ
ரூன்மலிசூலத்திடாகினிகாளியோகினித்திறத்தவரனேகர்
நீன்முகிற்கூந்தன்முனிவர்பன்னியருகிரந்தரமிடைந்தனருவகைப்
பான்மையினிறைஞ்சியவரவர்க்கடுத்தபணிதலைநின்றுடன்போத.

உரகர்கந்தருவரிராக்கதரியக்கருருத்திரர்மருத்துவர்வசுக்கள்
கருடர்கிம்புருடர்சாரணர்சித்தர்கடவுளரயனரிமுனிவர்
மருவுபல்சமயதேவர்கண்முதலோர்வந்தனரடிதொழுதிறைஞ்சிப்
பொருவருங்களிப்பாற்சயசயபோற்றிபோற்றியென்றேத்திமுன்செல்ல.

தண்ணுமைமுருடுகுடமுழாமொந்தைதகுணிச்சம்பேரிகைதக்கை
யண்ணலம்பதலைதிர்குரன்முரசமாதியவெழுப்புவபிறவும்
பண்ணமைசின்னங்காளங்கோடுபணிலமேதீங்குழன்முதலா
வெண்ணருந்திறத்தினாதுவபலவுமெழுகடன்முழக்கினையடக்க. ககசு

பயின்மணிக்கவரிகவிகைசாந்தாற்றிபடரொளியாலவட்டங்கள்
வயின்வயின்வயங்கக்கற்பகத்தாருமலர்மழையெங்கணுமிறைப்பக்
குயின்மொழிமடவாகுழாங்குழாமாகிக்குலவுபல்லாண்டெடுத்திசைப்பக்
கயின்மணிக்குழையாராணுடை தாங்கிக்கதிர்த்தவாளேந்தினரேக.

வேதகம்பயக்குஞ்சிலைமுதலானவிம்மிதத்திறத்தனபலவும்
பூதிமிக்களிக்குங்கடவுளர்தருககள்புண்ணியதீர்த்தங்கணதிக
ளோதமில்சிறப்பினிளையனபிறவுமுடன்செலச்சிந்தொடுகுறள்கள்
காதலின்முன்னேகையிணைவீசிக்கதுமெனக்குறுகுறுநடப்ப. ககஎ

கலகலமுழக்குங்களகளமுழக்குங்கலின்கலின்முழக்கமுங்கருவிச்
சலசலமுழக்குஞ்சளசளமுழக்குஞ்சடசடமுழககமுமேனைச்
சிலசிலமுழக்குமரகரமுழக்குஞ்சயசயமுழக்குமெண்டிசைவாய்ப்
பலபலமுழக்குமடைத்துமேலோங்கிப்படியொடுவானமுநிறைப்ப.

மறைமுதலொருபான்மணந்தவள்வந்தாள்வானவர்க்கரியவள்வந்தா
ணிறைபெருங்கருணைநாயகிவந்தாணிருமலப்பேரொளிவந்தா
ளறைபுனற்காஞ்சிக்கம்பரைவணங்கவகிலமுமாதிநாட்பயந்த
விறைவியேவந்தாளென்றுபல்சின்னத்தெழுமொலியாங்கணும்விம்ம.

அளவிலாக்கருணைப்பெருங்கடலென்னவடர்ந்தவல்லிருளுடைந்தோடுங்
கிளைவழிதுருவித்துரந்துகொண்டெய்துங்கேழ்கிளரொளிக்குழாமென்ன
வளமலிதென்பாற்செய்தவந்திரண்டுவருவதேயென்னவுமுலவாக்
களிவருசிறப்பின்வானெறிபடர்ந்தாள்கணவனாருள்வழிநின்றாள். கஉக

கலிநிலைத்துறை.

எண்ணிலார்மிடைந்துவிண்பிரப்படைத்தியங்கலா
லண்ணன்ஞாயிறுதிவாண்மறைந்திருளடர்ந்திடக்
கண்ணுறுத்தயிர்க்குமுன்கடுப்பினெய்துவோரொளி
வண்ணமவ்விருள்கிழிப்பநோக்கினாலமர்ந்தர்தாம். கஉஉ

மாலுறுக்குநீர்மையோடுதோன்றியிங்குமாய்ந்தது
நீலமின்னலபோலுமென்பரொன்னுமுன்னர்நீளிடைச்
சாலமிக்கவோதைகேட்டுமின்பயந்ததண்முகில்
காலுமோதையாங்கொலென்றுகாதினோர்த்துநிற்பரே. கஉ௩

செல்லுவோர்நெருக்கிடைத்தெறித்திடும்பொலஞ்சுடர்ப்
பல்லணிக்கலன்களுக்கபன்மணித்திரள்களை
யொல்லைநோக்கியார்த்தமேகமொன்பதிற்றுமாமணிக்
கல்லின்மாரிபெய்வதென்றுகாண்டொறும்வியப்பரே. கஉச

முறையினுலடுக்ககண்ணுமொய்குழாத்தையோக்குவா
ரிறைவியென்றசின்னமெங்குமேங்குமோசைகேட்குவார்
நிறைமகிழ்ச்சியிற்கிளர்ந்துநீடுமின்புவெள்ளநீர்த்
துறைபடிந்துகண்கணீர்துளிப்பநின்றுபோற்றுவார். கஉ௬

எம்பிரான்றனிப்பவம்மையிங்குவந்ததென்னெனக்
கம்பவாணர்பூசைசெய்கருத்தின்வந்ததாமென
நம்பினேங்கள்வீடுபேறுநண்ணுகாலமீதென
விம்பர்ஞாலமெத்தவம்படைத்ததென்னவிள்ளுவார். கஉ௭

மண்ணகத்துவைகுமாந்தரின்னராகமாணிழைப்
பெண்ணிநல்லவள்விமானநின்றுமிப்பெரும்புவிப்
புண்ணியத்தலங்கடோறிழிந்திழிந்துபோர்விடை
யண்ணலாரிலிங்கபூசைசெய்துகாசியண்மினுள். கஉ௮

முச்சகம்புகழ்ந்துபோற்றுமொய்கொள்காசிமாநகர்
விச்சுவேசர்பூசையாற்றிவேறிலிங்கமொன்றமைத்
தர்ச்சனைத்திறத்தினைத்திவைகியங்ககன்றுசீர்க்
கச்சியம்பதிக்கண்வைத்தகாதலுய்ப்பவேகினுள். கஉ௯

அங்கணங்கணெங்கையாரமர்ந்துவாழிடந்தொறும்
பொங்குகின்றகாதலோடுபூசைசெய்துசெய்துபோய்
மங்கலத்தமிழ்ப்புவிக்குவாண்முகமெனத்தகுந்
துங்கமிக்ககீர்த்திபெற்றதொண்டைநாட்டைநண்ணினுள். கஉ௬

இறைவிகாஞ்சியையடைந்தநாள்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அண்ணலந்துலைசேறெனுமாழைப்பசித்திங்கட்பூரம்
வெண்மதியாட்சிமூன்றும்பின்பக்கநந்தைமேய
புண்ணியத்திருநாளெலலாப்புவனமும்பெருவாழ்வெய்த
விண்ணவர்பிராட்டிகாஞ்சிவியனகரெல்லைசேர்ந்தாள். கஙo

பார்த்தனள்கடைநாள்செல்லாப்பழம்பதிமகிழ்ச்சிமேன்மேற்
கூர்த்தனள்சிரமேற்செங்கைகுவித்தனள்புளகமேனி
போர்த்தனள்விழிநீர்மாரிபொழிந்தனளங்கோர்வாவித்
தீர்த்தநீர்குடைந்துமூழ்கிச்சங்கற்பஞ்செய்துமுற்றி. கஙக

கங்கணதீர்த்தம் கங்கணேச்சரம்.

அலங்கொளிக்கரத்துச்செமமபாற்காப்புநாணணிந்துமூவா
விலிங்கமாண்டிருவிப்பூசையியற்றினளனையதீர்த்த
நலங்கெழுகாப்புத்தீர்த்தமெனப்பெயர்நவில்வர்சேர்ந்தார்
குலங்களோடுய்யசசெய்யுமிலிஙகமுங்கொள்ளுமப்பேர். கஙஉ

கடகேச்சரம்.

நவமணிகடகம்பூணுஞாங்கருங்கடகேசானச்
சிவபரஞ்சுடரைப்பூசைசெய்துதன்கரத்திற்பூண்டா
ளவிர்மணிநகையாள்போற்றுமகருதியிரண்டுங்கண்டோர்
தவலருமலநோய்மாற்றிமுத்தியிற்றரித்துவாழ்வார். கஙஙு

பிலாகாசம்.

அன்னணமருச்சித்தேத்தியாளுடையெம்பிராட்டி
யுன்னுவோர்பிறவிமாய்க்குமுண்ணகர்வரைப்பின்முற்ற
மன்னியவளங்களெல்லாமனங்களிபயப்பநோக்கிப்
பன்னரும்பெருமைசான்றபரவெளிப்பிலத்தையுற்றுள். கஙச

ஐம்பெரும்பூதமுன்னுளாயிடைமலர்ப்பூம்பொய்கை
தம்பெயர்நிருவித்தொட்டுத்தடந்திரைகொழிக்குந்தூநீர்ப்
பைம்புனல்படிந்துபன்னுண்மெய்த்தவம்பரிக்குங்காலைக்
கம்பனூர்கருணைகூர்ந்துகாட்சிதந்தருளப்போற்றி. ௧௩௫

உலகாணித்தீர்த்தம்.

மூவருந்தம்முட்கூடன்முதலியவேறுபாட்டான்
மேவருங்கரணம்யாக்கைவிடையமாதாரமெல்லா
மாவகைவரங்கள்பெற்றவத்திறத்துலகமுற்றும்
பாவுதன்வடிவாயோங்குமுலகாணிக்கரையின்பாங்கர். ௧௩௬

ஆங்கினிதமர்ந்துவைகித்தவம்புரிகருத்தளாகி
யூங்குடனணைந்தவிண்ணோர்க்கருள்விடையுதவியங்குத்
தேங்குநீருலகமுய்யத்திருவறச்சாலையாக்கி
மாங்குயிற்கிளவிநங்கையறமெலாம்வளர்க்கலுற்றாள். ௧௩௭

இறைவிமுப்பானிரண்டறம்வளர்த்தல்.

தெய்வந்தென்புலத்தார்பூதமானிடம்பிரமமென்றோ
ரைவகையெச்சஞ்சூக்தந்துறந்தவர்மடங்களன்பு
செய்யுமில்வாழ்வார்க்கில்லமனைக்குபகரணந்தேம்பூப்
பெய்தமைதண்ணீர்ப்பந்தரெங்கணும்பிறங்குசோலை. ௧௩௮

இரப்பவர்குருடரெவ்வமுற்றவர்புரத்தல்வெந்நோய்
துரக்குநன்மருந்துதூவாய்மகவினையோம்பல்சுண்ணம்
பரித்தபாகடையேயெண்ணெய்பைம்புனல்குளிப்பவேண்டு
மருக்கிளர்துவர்களாதிமலரணைநிலனுன்கன்னி. ௧௩௯

கடிமணம்விளக்குமாறுக்கடனொழித்திடுதலீச்
னடியவர்விழைவவீகையக்கமாமணிவெண்ணீறு
படியிலாக்கடவுட்பூசையுபகரணங்கள்பாசந்
தடிதருவேதவாய்மைச்சைவநூல்புராணநல்கல். ௧௪0

சிவபிரானடிக்கீழ்ப்பத்திசெவியறிவுறுத்தலோடு
மூவகையினபயம்யார்க்கும்வழங்குதலுள்ளிட்டோது
நவையிரியறமெண்ணான்குநாடொறுநிகழ்ச்சிமாணப்
பவநெறிதுரக்குஞானப்பைந்தொடிநிறுவிப்பின்னர். ௧௪௧

இறைவிதிருக்கோயிற்கெழுந்தருளல்.

வீங்குநீர்க்கம்பையாற்றின்கரைமிசைவிரிமாநீழ
லோங்கொளிப்பொருளைக்காணுமுறுபெருங்காதலீர்ப்ப
வாங்குநுண்மருங்குனோவவளரிளங்குவவுக்கொங்கைப்
பாங்கியர்முதலோர்சூழப்படரொளிமறுகிற்போந்தாள். ௧௪௨

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மலையான்மடமகண்மறுகூடணைதலும்வளமாநகரவர்தொழுதாடி
யுலவாநசையொடுபணிலார்மனமகிழுறுவார்வயின்வ்யினணிசெய்வார்
குலைநீள்கதலிகள்கமுகந்துகில்விரிகொடியென்றினையனநடுவார்கண்
மலர்மாலிகைநவமணிமாலிகையெழின்மலிதோரணநிரைநிறைவிப்பார்.

மறுகெங்கணும்விரைகமழும்படிகுளிர்பனிநீர்விடுவர்கண்மறையோதி
நிறுவுந்தவநிலைமுனிவோர்கரமிசைநிறைபொற்குடமுடனெதிர்கொள்வார்
சிறுநுண்ணிடைமறைமடவாரவாழ்த்திசைதிகழ்மங்கலமொழியுரைசெய்வா
நறவம்பயில்குழலரமங்கையரொடுநரமங்கையர்நடமிடுவாரால். ௧௪௪

பொங்கும்பெருங்கழில்புனையுந்திருநகர்புரிவின்வலம்வருமுறையானே
தங்குங்கலைமகண்மலர்மாதிமையவர்மடவார்காளிகள்சாத்தன்சீ
ரெங்கும்பரவியதிறல்யோகினிகளையெழுமாதர்களையிடந்தோறு
மங்கங்கிருவினளென்னெஞ்சிருவியவம்பொற்றிருவடிபிறர்காணாள்.

குணபான்முதனதிமுடியாரினிதமர்கோயின்முழுவதுமுறையிற்சென்
றிணரார்மலர்கொடுவழிபட்டருளொடுமெனையாளுடையவளெய்துற்று
ணராதரியயன்முதலோரலமருமொருபேரொளிமருமலர்தூவு
மணமாநிழலிடைவெளியேயெளிவரமாகம்புவிதொழுமேகம்பம்.

ஏணிற்பொலிமலையரசன்றருமயிலுள்ளங்களிவரவெம்மாறு
ராணைப்படிமனநினைவிற்கடவுளர்யவனன்புரியுமருட்கோயின்
மாணப்பலமணிகுயிலுந்தமனியவடிவிற்புரிசையினோக்கத்தைக்
காணப்பெறுகழிகாதற்கடலிடைமூழ்கித்துளைபவள்கரைகாணாள்.

விழிநீர்பொழிதரவுள்ளங்குழைவுறமெய்யிற்புளகமுகிழ்ப்பெய்தப்
பொழிகார்மழைநிகர்கற்றைப்புரிகுழன்மிசையேகையிணைகுவியப்போய்க்
குழுவானவர்மிடைவிண்வத்துயரியகொடிநீள்கோபுரநெடுவாய்தற்
றொழுநீர்மையினிலிறைஞ்சிப்பன்முறைதுதிசெய்துவகையினுள்புக்காள்.

அங்கட்சகமுழுதடையப்பொலிவுறுமைந்தாமாவரணந்தன்னிற்
றங்கித்திகழ்சிவமறையோர்முதலியசைவர்க்கருள்செய்துவலம்வந்து
செங்கட்கதிரவர்காலத்தீயிறையவர்மாலயனொடுசெறிநான்கி
னெங்கட்கிறையவளெய்தித்தென்புடைவிண்டுத்தளியெதிர்கண்டுற்றாள்.

விண்டுவீச்சரவரலாறு.

கலிநிலைத்துறை.

என்றுகூறியசூதனையிருந்தவததலைவர்
நன்றுபோற்றினர்நலிதருமைம்புலக்குறும்பு
வென்றமேதகாய்விண்டுவீச்சரமென்றதென்னை
யின்றுநீவிரித்துரையெனக்கடாவலுமிறுப்பான். ௧௫௦

அள்ளிலைப்படைக்கடவுளார்க்காரமுதளிக்கும்
வெள்ளிவெண்டிரைவிரிகடல்வரைப்பினின்மாயோன்
முள்ளெயிற்றராவணைமிசைநாடகமுயலும்
வள்ளலாரடிமனத்திடைத்தழீஇயினன்றுயில்வான். ௧௫௧

அனையதன்மையினறிதுயிலமர்பவனொருநாட்
கனைவிளங்கொளியிதயமென்கவிழ்நனைக்கமலந்
தனைமலர்ந்துமேனோக்குறச்செய்தனன்றணவா
வினையிகந்துயர்யோகினல்வளிமிசையெழுப்பி. ௧௫௨

பக்குமுந்தியின்மேலிடத்தலருமப்பதுமத்
திகழருந்திறத்திலங்குநுண்குகையதனிடத்து
நுகருமூண்பகுத்தமருநோன்றழலதன்றலையிற்
றிகழமேவருநுணங்குபூஞ்சிகையதனவேண். ௧௫௩

சாற்றுமெய்ப்பரப்பிரமமாஞ்சதாசிவப்புத்தேள்
வீற்றிருப்பதியோகத்திற்கண்டனன்விரைத்தே
னூற்றுபூந்துழாய்ப்பண்ணவனுவகையின்வல்லே
போற்றிபோற்றியென்றிறைஞ்சினனன்புமீப்பொங்க. ௧௫௪

விண்டுயோகநீற்றிருநடங்கண்டுபோற்றல்.

அன்பினுக்கெளியார்பெருங்கருணைகூர்ந்தருளி
யின்பவானந்தத்திருநடமாயிடையயற்ற
வன்பழம்பகைமலவிருள்கடிந்ததுகாணூஉ
வென்புநெக்குநெக்குருகினன்முராரியன்றிறத்தோன். ௧௫௫

புளகமெங்கணும்போர்த்துமெய்பனித்துவாய்குழறி
விளங்கியின்பநீர்விழியுகக்கம்பனமெய்தித்
தளர்விலார்வத்தாற்றனைமறந்தறிதுயின்மேவு
மளவிலாங்கயலிருந்தவரன்னதுகண்டார். ௧௫௬

கண்டுநெஞ்சகம்பதைத்தனர்திகைத்தனர்கவலை
கொண்டழுங்கினரஞ்சினரிரங்கினர்குறிப்பின்
வண்டலத்திருமுதலியோர்மற்றிதுவிகழ
வண்டர்நாயகற்கடுத்தவாறென்னெனத்தெரிவார். ௧௫௭

மென்றளிர்ச்செழுங்கோமளத்திருவடிவினையேன்
வன்றனிக்கரம்வருடலான்வருந்தினகொல்லோ
வன்றியென்மடித்தலமிசையசைந்துநொந்தனவோ
வென்றுதன்னுளமயிர்த்தனளிலங்கெழின்மலராள். ௧௫௮

மெல்லணிச்சமுங்குழைக்குமெம்பிரான்றிருமேனி
கல்லெனக்கடுந்திட்பமுந்தட்பமுங்கதுவும்
புல்லியேனுடல்வைகலானுளைந்ததுபோலு
மல்லதொன்றறியேனெனவெரீஇயினனனந்தன். ௧௫௯

எருத்தமீதுகொண்டுலகெலாங்கொட்புறுமென்னுன்
மருத்துழாய்முடிமாமறுமார்பினன்மேனி
வருத்தமுற்றதேயாங்கொலென்றெண்ணினன்வலியா
லுருத்துமாற்றலர்முனைகெடப்பொருதிறலுவணன். ௧௬0

இன்னவாறிவர்யாவரும்வேறுவேறெண்ணிப்
பன்னரும்பெருங்கவலைகூர்வுழிவரைபயந்த
கன்னிபாகனார்திருநடக்கருணையிற்றிளைத்த
பின்னைநாயகன்யோகமாத்துயில்பிரிந்தெழுந்தான். ௧௬௧

கண்டபேரின்பவனுபவக்கருத்தினேடெழுந்து
மண்டுவெள்ளநீரருவிகண்பொழியமன்றுடையார்
தொண்டனேற்கெளிவந்தவாறெனக்களிதுளும்பிக்
கொண்டகாதலாலஞ்சலிசென்னிமேற்குவித்து. ௧௬௨

ஐயனேயருள்புரிகவாரழற்சிகையேந்தும்
கையனேயருள்புரிகபல்கதிரொளிபரப்பு
மெய்யனேயருள்புரிகமெய்க்கூத்தனைக்காட்டுஞ்
செய்யனேயருள்புரிகெனச்செப்பினன்பலகால். ௧௬௩

விண்டுவடைந்தவின்பம்விளம்பல்.

அன்னபெற்றிகண்டியாவருமதிசயமெய்தி
யென்னையென்னைமற்றிதுவெனக்குதகுதுப்போடும்
பொன்னடித்தலம்போற்றினர்வினுதலுமெடியோன்
மன்னுறும்பெருமகிழ்ச்சியானவர்க்கிதுவழங்கும். ௧௬௪

செறியுநான்மறைச்சிரமிசைப்பரம்பொருளிங்கா
ளறிஞர்காண்கிலாவற்புதத்திருநடமெனக்குப்
பிறிவரும்பெருங்கருணையாற்காட்டிடப்பெற்றேன்
மறியுமிவ்வுடல்வருபயன்கிடைத்ததென்றனக்கே.   ௧௬௫

அவ்வருட்டிருக்கூத்தினைக்கண்டவர்வத்தா
லிவ்வுறுப்பெலாம்விதிர்விதிர்ப்பெய்தினகண்டீர்
செவ்வனேர்மினென்றியம்புசொற்செவித்துளைநிறைப்பக்
கொவ்வைவாய்த்திருமுதலியோராதரங்கொண்டார்.   ௧௬௬

கேட்டவப்பொழுதேயெதிர்கண்டெனக்கிளர்ந்து
காட்டும்வேணவாமீமிசையெழக்கழல்வணங்கி
நாட்டுமத்திருக்கூத்தினைநாங்களுங்காண
வேட்டனங்கண்மற்றதுபெறுநெறிவிரைந்தருளாய்.   ௧௬௭

என்றுபன்முறைவேண்டலுமீர்ந்தொடைத்துளவோ
னன்றுநுங்கருத்தெனமிகநகைமுகமலர்ந்து
குன்றவில்லியார்சேவடிசிந்தையிற்கொண்டாற்
கன்றுநம்பர்தம்மருளினலறிவுவந்துதிப்ப.   ௧௬௮

விண்டுமுதலியோர்தில்லையடைந்துபோற்றல்.

மல்லற்றெண்டிரைமறிகடன்மணிகள்கொண்டொதுக்குந்
தில்லைக்கானுடைச்சிதம்பரவரைப்பிலெஞ்ஞான்றுஞ்
செல்வத்தாண்டவநவிற்றுமெம்பிரானெனத்தெளிந்தா
னல்லிப்பூமகண்முதலியோர்க்கன்னதுசெப்பி.   ௧௬௯

அங்கணெய்திநாமாளுடைநாயகன்றிருமுன்
பொங்குகாதலானடைகலம்புகுந்துபோற்றிசைத்துந்
தங்கிமெய்த்தவமியற்றிடிற்றண்ணருள்சுரந்து
நங்களுக்கெதிர்காட்டுவனனந்தநடனம்.   ௧௭0

யோகியோர்களுமெய்தருந்திருநடமுரிமை
யாகுமன்புடையடியவர்க்கெளியதுகண்டீ
ரேகுவாமினிவம்மினென்றவருடனெழுந்து
மாகவாற்றினல்வயங்கொளித்தில்லைவந்தடைந்தான்.   ௧௭௧

கலித்தலைத்துறை.

சேர்ந்துதிருமூலட்டந்தொழுதுபோற்றிச்சிந்தைகளி
கூர்ந்துதிருப்பாப்பரசுகலுழன்முதலோருடன்குழும
நேர்ந்ததவயோகத்தினெடுநாண்முயன்றனக்காலை
வார்ந்தசடைப்பிரானுருமகிழ்ந்துகாட்சிகொடுத்தருளி.   ௧௭௨

ஒன்னுதாருயிர்பருகியொளிருந்திகிரித்தனிப்படையோ
யென்னீமற்றிவரோடுமெம்பால்விழைந்ததியம்புகெனப்
பொன்னுடையுடைத்தோன்றல்புவியின்வீழ்ந்துபணிந்தெழுந்து
நன்னுமமெடுத்தோதிப்புகழ்ந்துபோற்றிநவில்கின்றான்.   ௧௭௩

அண்ணலேயானந்தத்தெள்ளாரமுதேயடியேங்கள்
புண்ணியமின்றிருக்கூத்தினமுதம்பருகிப்பொலிவெய்த
வுண்ணிறைந்தபெருங்காதலுடையேங்கருணைசெய்தருளா
யெண்ணியாரெண்ணமெல்லாமுடிக்கவல்லவெம்மானே.   ௧௭௪

விண்டுவைக்காஞ்சியிற்சிவபூசைசெய்துவரப்பணித்தல்.

குறளுருவாயுலகளந்தானியம்புங்கூற்றுக்கேட்டருளி
யறவனுரெதிர்மொழிவாராழிப்படையோயெவ்வெவரும்
பெறலரியநடங்காணப்பெட்டாயாகிலெம்மிலிங்க
மறனணுகாத்திருக்காஞ்சிவரைப்பினெய்தித்தாபித்து. ௧௭௫

நறுமலர்கொண்டருச்சித்துவல்லையீண்டுநண்ணுதிநின்
னுறுகருத்தைமுடிக்கின்றேமென்றுங்கருளுமுரைகேளா
மறுவிகந்தமனத்தன்பின்மாயோனங்கண்யாவரையு
நிறுவிவளவயற்காஞ்சிநெடுநீர்நகரங்கடித்தடைந்தான். ௧௭௬

ஏகம்பத்தொளிமணிலயயின்பத்தொழும்பர்செய்தவங்க
ளேகம்பத்தெனக்கொள்ளுமிறையைக்குறளாய்மாவலிமுன்
னேகம்பத்தாற்புரிசையொருமூன்றிறுத்ததனிமுதலை
யேகம்பத்தொடும்புளகமெய்தவணங்கித்தொழுதெழுந்து. ௧௭௭

அக்கம்பமுடையார்க்குத்தென்பாலங்கட்சிவலிங்க
மிக்கன்புதழைத்தோங்கவிண்டுவீசனெனவிருவிப்
பொக்கங்கண்முழுதகலப்போற்றிவேண்டியருள்பெற்றுத்
திக்கெங்கும்புகழ்பரப்புந்தில்லைவனத்தைமீண்டணைந்தான். ௧௭௮

விண்டுநடங்கண்டுபடகமுழக்கும்பேறுபெறல்.

ஆண்டணைந்ததிருமாலுக்கருளாரமிழ்தமனையாருந்
தூண்டரும்பேரொளிப்பிழம்பாய்ச்சுடருந்திருச்சிற்றம்பலத்துட்
காண்டகையவானந்தநிருத்தங்காட்டக்கழியன்பு
பூண்டதிருப்பாப்பரசுபுள்ளேற்றண்ணலொடுங்கண்டான். ௧௭௯

கண்டளவில்பெருங்காதலின்பவெள்ளங்கரையிகப்பக்
கொண்டநிறைமகிழ்ச்சியினாலாடிப்பாடிக்கும்பிட்டுப்
பண்டைநிலைமறந்துமதுப்பருகுஞ்சுரும்பிற்பாவசனாய்
மண்டியபேரார்வத்தால்வணங்கித்தொழுதுகளிசிறந்தான். ௧௮௦

இறைவனார்திருக்கூத்துக்கிசையக்கணங்களியமுழக்கு
முறையுணர்ந்துபெருங்களிப்பாற்றானும்படகமுழக்குதலு
மறைமுதல்வரதுநோக்கிமகிழ்ந்துபடகப்பணிதனக்கே
நிறைவிருப்பினருள்செய்யப்பெற்றுவாழ்ந்தானெடியோனே. ௧௮௧

விதுவொன்றுஞ்சடைமுடியார்விண்டுவீசம்வந்தவா
றிதுகண்டீர்முனிவீர்காளீண்டுத்தொழுதுவழிபட்டுத்
துதிசெய்துகணநாதர்திருமாளிகைசூழ்தருமுன்றின்
மதுவிள்ளுமலர்க்கூந்தன்மலையான்மடந்தையெய்தினாள். ௧௮௨

அகத்தீச்சரவரலாறு.

பண்ணிசைந்தவரிச்சுரும்பர்பாடல்பயிலுமலரிலைஞ்சித்
தண்ணிசைந்தசிவகங்கைத்தழங்குந்திரைநீர்குடைந்தாடிப்
பெண்ணிசைந்தபெருவனப்பிற்பிராட்டியாங்குப்பிறங்கொளியாற்
கண்ணிசைந்தகளிசிறப்பவகத்தியீசங்கண்டணைந்தாள். ௧௮௩

வேறு.

என்றகூதனைமாதவர்யாவருமேத்தியே
பன்றிகாணருஞ்சேவடிபற்றியசிந்தையோய்
துன்றுசீர்மையகத்தியீசத்தியல்சொல்கென
நன்றுமுள்ளமகிழ்ந்துவிளங்கநவிற்றுவான். ௧௮௪

நாரதன்விந்தமலைக்குமேன்மைகூறிப்போதல்.

கடவுண்மாமுனிநாரதன்முன்னொருகாலையி
னிடனுடைத்திருக்காஞ்சியினேகம்பநாதரைச்
சுடருமாடகயாழிசையாற்றொழுதேத்துவான்
றடவுவெள்ளிப்பருப்பதநின்றுந்தணந்தனன். கஅரு

அண்ணலார்தம்மடியிணைதைவருசிந்தையா
னண்ணுகின்றநரப்புக்கருவித்தலைவனை
விண்ணினேக்குபுழிவய்தெனவிந்தநெடுங்கிரி
யெண்ணம்வாய்ப்பவியங்குமுருக்கொடுமுன்னுறா. கஅசு

அருக்கியம்முதலாயினகொண்டுவழிபடேப்
பெருத்தகாதலிற்பேணித்தொழுதுவணங்கலுங்
கருக்கடிந்துயர்காழறுமாதவனேனையான்
மருத்தபூஞ்சுனைவிந்தவரைக்கிதுபேசுவான். கஅஎ

மன்னுமெய்த்தவர்பாற்புரியும்வழிபாட்டினி
னின்னமெயாப்பவர்கணடிலனித்தகுநின்னையும்
பொன்னினாட்டவர்போதவிகழ்ந்தனரன்னதை
யுன்னியுன்னிவருந்திடுகின்றதென்னுள்ளமே. கஅஅ

என்றதாபதவேந்தனைமீளவிறைஞ்சிமுன்
னின்றதேவருள்யாவரிகழ்ச்சிநிகழ்த்தினா
ரென்றனக்கிகழ்யாதுசொல்கூறினையேலது
மன்றமாற்றுவன்யானெனவிந்தமலகுத்ததால். கஅகூ

முனிவனவ்வுரைகேட்டுமொழிதருமேன்மையிற்
புனிதநின்னொடுபுன்வரைநேரெனுநாலெலாம்
பனிமதிச்சடைப்பணணவர்தேவர்குழாத்தொடு
நனிமகிழ்ந்தவண்வைகுவர்நாடொறுமாதலால். ககூ0

இயங்குகோள்களுடுக்களிராசியெவற்றொடும்
வயங்குசந்திரசூரியர்தாம்வடமேருவை
நயந்துசுற்றுவர்நாடொறுமத்திறநோக்கியே
யுயங்குகின்றனன்யானெனப்பின்னருமோதுவான். ககூக

தனக்குநேர்வரியாய்பலசாற்றுவதென்கொலோ
வெனக்குநீநனிநண்பினையாதலினித்திற
முனக்கியம்பினனின்னினியேகுவலொய்யென
மனக்குவேண்டியசெய்கெனமாதவனீங்கினான். ககூஉ

விந்தம்கநுவமடைந்துமேனோக்கியெழுதல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பத்தர்மெய்க்கிளைமகதியாழ்பயில்படிமவுண்டியனீங்கலு
மெய்த்தவெஞ்சினமீக்கொண்மாலவரைவீயுமெல்லைவிளக்கினைச்
செத்திறப்பவளர்ந்தெழூந்துவிசும்புசென்றுநிவந்ததான்
மைத்தவல்லிருள்கீறிவாள்கள்வயங்குமாறுதடுத்தரோ. ககூங

துருவமண்டலவெல்லைகீழ்ப்படமேக்கெழுஞ்சுடர்வெற்பினைத்
தருநிலத்தவர்நோக்கிமுந்துதழற்படைக்குலிசக்கொடுங்
கருவியிற்சிறகரிவலாரியுடன்செருச்செய்கருத்தினால்
வருவதாங்கொலெனத்திகைத்துமருண்டுதம்முள்வெரீஇயினார். ககூச

தங்களொப்புமைகொண்டென்னுதருக்குணர்ந்துவெருட்சியாற்
பொங்கிவிம்மிமதர்த்தெழுந்தெதிர்ப்போர்செயப்புகுதன்மையிற்
கொங்கைவழ்புசழக்கமார்பமலைத்துவீறுகொளக்கதழ்க்
தங்கண்மங்கையர்வெற்பினேக்கமுன்னேக்கவீண்மிசையண்மினர்.

சிட்டிநாண்முதலோய்விலாதுதினம்பொலங்கிரிசூழ்வர
வட்டமிட்டகறங்கினேலெனச்சுழன்றலமந்துகைக்
திட்டகோள்களிராசிநாள்களுமன்றுதன்னமிளைப்பொழிக்
துட்டதும்புகளிப்பின்வைகினவோங்குமால்வரையாலரோ ௧௯௬

மாயிருங்கனகமாமலைத்தலையின்மன்னிவன்குயவனேமியின்
ஞாயிறுதிகளேயிடையறுதுகடுகச்சுழற்றிநனிதளர்வுகூர்
பாயசீர்த்திமிகுதருவனுஞ்சிறிதுபணியொழிந்துறைநலம்பெற
மீயுகந்தமணியருவிதாழ்நெடியவிந்தவெற்புதவிசெய்ததால். ௧௯௭

அருவிதாழ்சயிலமொளிவழங்குநெறிதனையடைத்துமிசையணவலா
லொருபுடைத்திமிரமொய்ப்பமற்றையொருபுடையுறக்கதிகண்மொய்த்திடு
மிருதிறத்தினுமெருவுபெற்றிமையிசைந்தமன்னுலகமற்றைநாண்
மருமலர்க்குழலிபாகமாகவளர்மறைமுதல்பொருணிகர்த்ததால். ௧௯௮

இகழ்ந்தநீரினிடப்பதெங்கணெனவெள்ளிவாள்களைநகைப்பதூஉந்
திகழ்ந்தமேருவொடுசெருவிளைப்பவறைகூவிவீரநகைசெய்வதூஉ
முகந்தெழுந்தனதுசீர்த்திபல்குவதுமொப்பவெங்கணுமடித்தல
மகழ்ந்துகல்லெனவிரைத்துவெள்ளெனவிளர்த்துவீங்குபுனலருவியே.

இறவுளர்க்குமிசையுலகவாழ்க்கையர்விருந்தளித்துவகையெய்தினர்
குறமடந்தையருமரமடந்தையருமளவளாயுறவுகொண்டனர்
முறைநிறுத்துசுரமுனிவர்வெற்புறையுமுனிவர்நல்வரவெதிர்ந்தனர்
மறைமுழைப்பணிகள்வானுலாம்பணிபுலம்புதீர்ந்திடமணந்தன. உ00

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மிளைபடுசாரற்குன்றமேக்குறநிவத்தலோடு
மொளிவழங்காமைகாலவேறுபாடொழிந்தவாற்றான்
வளமலிதவந்தானங்கண்முதலியமறுத்துப்பைங்கூழ்
விளைவுகளஃகிஞாலம்வெறுவியதாயிற்றன்றே. உ0௧

புரந்தரனாதியோர்முறையீடு.

அங்கதுநோக்கிவல்லைபுரந்தரனாதிவிண்ணோர்
தங்குலக்குரவனேடுஞ்சதுமுகனிருக்கைசார்ந்தார்
பங்கயகிழவனேன்றுள்பணிந்தனர்பரசிப்போற்றி
யெங்களைவெருவாவண்ணம்புரத்தியென்றிதனைச்சொற்றார்.

இருசுடர்வழங்குமாற்றையிறும்புசூழ்சோலைவிந்தப்
பருவரைதடுத்தவாற்றாற்பகலிராத்தொடக்கமின்றித்
திருநெறிவேள்விமாறித்தெருமந்ததுலகமுன்னே
மருமலர்க்கமலவாழ்க்கைவயக்கெழுகடவுளேமே. உ0௩

இனியெமக்குறுதியென்னேயென்றலுமிளவண்டூதும்
பனிமலர்க்கதுப்பினம்பாற்பாரதிகொழுநன்கேளாத்
தனிமிடல்படைத்தவிந்தத்தருக்கினைப்பௌவமுண்ட
முனிவனேயடக்கவல்லுமென்றுமுன்னிச்சொலவான். உ0௪

கடலேயின்றுயர்ந்தோய்கேட்டிகாசிமாநகரம்வைகுங்
குடமுனிதன்னைவிண்ணோர்குழாத்தொடுகணுகிவிந்தத்
தடவரைத்தருக்குநீப்பான்வேண்டுதிதவத்தான்மிக்கோன்
கடலெலாங்குடங்கையேற்றுப்பருகினுன்முன்னங்கண்டாய். உ0ரு

என்றிதுவியாழப்புத்தேட்கியம்பினுனியம்பிப்பின்னுந்
தன்றிருவுளத்தினெண்ணிச்சயிலவீறடக்கயானே
மன்றலம்பொழில்சூழ்காசிவரைப்பினைக்குறுகியந்த
மின்றிகழ்சடையாற்கோதிவிடுப்பலென்றெழுந்துசென்றான். உ0சு

பொன்னவனுதிதேவர்புடையுறப்போந்துசெங்கா
லன்னமுங்கருமென்கூந்தலன்னமுமறலியாடுங்
கன்னிவெண்டரங்கத்தெண்ணீர்க்கங்கையாறுடுத்தகாசி
நன்னெடுநகரம்புக்கானகைமலர்க்கமலத்தோன்றல். உ0எ

அயனகத்தியர்க்குரைத்தல்.

அவ்வயினகிலநாதரடியிணைதொழுதுபோற்றித்
தெவ்வலியடுபேராண்மைத்தேவர்தங்குழாத்திேனாடு
மெவ்வமில்கேள்விசான்றகுறுமுனியிருக்கைநண்ணிப்
பெளவநீர்பருகினுனைக்கண்டிதுபகரலுற்றான். உ0அ

முக்குறும்பெறிந்தகாட்சிமுனிவரேறனையாய்சால
மிக்குயர்விந்தநாகந்தருக்குமீக்கொண்டுநாளும்
பொககமிலிரவிதிங்கள்புகுநெறிதடைசெய்தன்றா
லக்கிரியிறுமாப்பெல்லாமகற்றுவானீயேவல்லை. உ0கூ

இன்னினிவிரைகவல்லேதாழ்க்கலேயென்றுவேண்டு
மன்னவேறுயர்த்தபுத்தேட்கருந்தவக்கிழவன்கூறு
மென்னிதுபுகன்றாயையாவெம்பிராற்கினியகாசி
தன்னைவிட்டகலேன்வீடுதருவதித்தலங்காணென்ன. உக0

வண்டொடுஞிமிறுந்தேனும்வரிச்சிறைச்சுரும்புமார்ப்பத்
தண்டுளிநறவமூற்றுந்தடமலர்ப்பொகுட்டுத்தெய்வப்
புண்டரீகத்தின்மேயபுணணியன்கேட்டுமுந்நீ
ருண்டுயர்முனிவர்கோமானுளங்கொளவுணர்த்துகின்றான். உகக

வெறுப்பொடுவிருப்பொன்றில்லாய்விண்ணவரிடுக்கண்டீர்க்குந்
திறத்தினையெவ்வாற்றானுமுடிப்பதேசீரிதன்றி
மறுப்பதுதகாதான்மற்றிவயங்கொளியுலகமூன்றும்
பெறத்தகுகருமமென்றாலென்னினிப்பேசுமாறே. உகஉ

சீருடைத்ததீசிமுன்னோர்தேவர்தம்பொருட்டுத்தங்க
ளாருயிர்க்கிறுதிநோக்காதுடம்பையுமளித்தாரன்றே
காரியமிதுமற்றம்மஞூறிதெனக்கருதல்வேண்டா
யோரின்வேறுன்னையொப்பாருலகமூன்றிடத்துமில்லை. உகஙு

வேசறவொழிதிவெள்ளைவிடையவர்க்குவகைநல்கிக்
காசியின்மேன்மைசான்றகடிநகரங்கணுண்டான்
மூசிளஞிமிறுபாயமுகையுடைந்தொழுகுந்தேறல்
வாசமென்மலர்ப்பூம்பொய்கைவளவயற்காஞ்சிமூதூர். உகச

மதுமலர்ப்பொழில்சூழ்காசியிறக்திடின்வழங்குமுத்தி
யதுவுநம்பெருமானூர்தம்மருளுருப்பெறுவதாகும்
முதுநகர்க்காஞ்சிதன்னைநினைப்பவேமுத்திநல்கும்
கதுவருஞ்சிவபிரானூர்திருவடிகலப்பதாமால். உகடு

அத்தலப்பெருமைமுற்றுமழலவிர்சடைமேற்கங்கை
வைத்தவரறிவதல்லரன்மற்றெவரறியப்பாலார்
சித்திகளனைத்துநல்குமாயிடைச்சென்றுயாகி
லுத்தமகுணத்தாய்மற்றும்பெருநலமுனக்குண்டாமால். உகசு

சிமிழ்விடப்பாம்புசுற்றித்திரைகடல்கலக்கிப்பெற்ற
வமிழ்தினையிமையோர்க்கூட்டுமரியெனக்கம்பமேய
குமிழ்மறிவிழியாள்பாகரருளினாற்கொழிக்குமின்பத்
தமிழ்மொழிப்பாடையொன்றுதரைமிசைவிளங்கச்செய்வாய்.

பாணித்தலமையுமின்னேபடர்கெனும்பவளச்செவ்வாய்
வாணிக்குமணாளன்றன்னைவிடைகொண்டுமகிழ்ச்சிகூர
வாணிப்பொன்மாடக்கோயிலகிலநாயகரையன்பாற்
பேணித்தாழ்ந்தெழுந்துகாசிப்பெரும்பதிதணந்துபோந்தான்.

அகத்தியர்விந்தமடைதல்.

கச்சிமாநகரங்காணுமாதரங்கைமிக்கீர்ப்ப
நச்சணிமிடற்றூர்பாதநகைமலர்மனத்துட்கொண்டு
பொச்சமின்மனையாளோடும்வானெறிபோதுகின்ற
விச்சைதேர்முனிவன்றன்னைக்கண்டதுவிந்தநாகம். உகக

ஊற்றெழும்பரவைத்தெண்ணீருழுந்தளவாக்கியுண்ணு
மாற்றலினெடியனுகியளவினிற்குறியனாய
நீற்றணிமுனிவர்கோனைக்காண்ட லுநெஞ்சமாழ்கிப்
பாற்றரும்பயமீக்கொண்டுபதைபதைத்தொடுங்கிச்சோர்ந்து. உஉ0

குறுகிமுன்குறுகித்தாழ்ந்துகோதறுவிதியினாற்று
னிறுவியவருக்கியாதியருச்சனைநிரப்பனோக்கி
யுறுவனுமகிழ்ந்துபத்திவிளைவினையுயர்த்துக்கூற
மறுவலுந்தொழுதுபோற்றிமணிவரையிதனைவேண்டும். உஉக

ஐயனேயடியேன்மாட்டுமருட்பெருங்கருணைவைத்த
செய்யனேயணங்குலோபாமுத்திரைநிலைக்குந்தூய
மெய்யனேயலைகள்வீசும்விரிகடன்முழுதுமேற்ற
கையனேயினியான்செய்யக்கடவதென்னருளாயென்ன. உஉஉ

அகத்தியர்விந்தமலையையடக்குதல்.

பொன்னிலமிருக்கைகொணடார்பொருட்டிவட்டென்பாலாசை
தன்னையான்குறித்துப்போந்தேன்சயிலமேமீளுங்காறு
மிங்கிலேயிருத்தியென்னக்கரத்தினாலிருவிக்காஞ்சி
நன்னெடுநகரநோக்கிநடந்தனனிகரொன்றில்லான். உஉங

வேறு.

செங்நெறிநோக்கியமைந்தான்கொழுகானளவறிகில்லான்
றன்னைவியந்தான்விரைந்துகெடுமெனல்சத்தியங்கண்டா
மன்னியமேருவரையோடிகலிவளர்ந்தெழுவிந்த
முன்னுளதோற்றமும்வீறுமுழுதுமிழந்ததுமன்றே. உஉச

சங்கரனூரெதிர்தோன்றமறையுங்கடாதகைதன்னோர்
கொங்கைகிகர்த்ததுசெல்லுங்குறுமுனிகேளுதகுன்ற
மங்கதுகண்டவிமையோரனைவருமத்திறங்கேட்ட
நங்கையையின்றபொன்மாலையுவகையினாற்றியடைந்தார். உஉ௬

அகத்தியர்காஞ்சியையடைதல்.

குன்றிடைமுட்டிமறுகுங்குரீஇயிற்றடையுண்டழுங்கி
நின்றவருக்கன்முதலோர்நெறிகொளச்செல்லவிடுத்துத்
தன்றுணைப்பாவையினோடுஞ்சார்தருதாபதவேந்து
மன்றலம்பூம்பொழிற்காஞ்சிவளநகர்தன்னைமுன்கண்டான். உஉ௭

கண்டுதொழுதுவணங்கிக்கையிணையுச்சியிற்கூம்ப
மண்டியகாதலிற்புக்குமாபுளிச்செய்கடனாற்றி
யண்டர்பிரானூர்தளிகளனைத்துமுறையானிறைஞ்சிப்
பண்டைமறைகண்முழங்கும்படரொளியேகம்பஞ்சேர்ந்தான்.

செல்வமணித்திருவாய்தல்சென்றுபணிந்துபுகுந்தாங்
கல்வளர்கின்றமிடற்றாராருளென்னநிறைந்த
சொல்வளர்சீர்ச்சிவகங்கைத்தூநறுமென்புனலாடி
யெல்வளர்கண்டிகைவெண்ணீறெங்கும்வயங்கவணிந்தான். உஉ௮

வாங்குநுணங்கிடைபாகர்மாளிகைசூழ்மணிமுன்றிற்
பாங்குவலங்கொடுசென்றுபடரொளியானந்தவெள்ளந்
தேங்குந்தனிமறைச்சூதத்தெய்வத்தருநிழன்மேய
வீங்குங்கருணைப்பிழம்பைவிழியெதிரேகண்டுகொண்டான்.

இணங்குமுறைமையினங்கமெட்டினுமைந்தினுஞ்சால
வணங்கிமகிழ்ந்துதிளைத்துவார்புனல்கண்கள்சொரியக்
குணங்குறியின்றியெழுந்தகோலத்திருவுருப்போற்றி
யணங்கருமெய்யருள்பெற்றுமீண்டனனூர்கவியுண்டான். உ௩0

வன்பழவல்வினைமாற்றுங்கம்பமகிழ்ந்தவர்தென்சார்த்
தன்பெயராற்சிவலிங்கந்தாபித்தருச்சனையாற்றி
முன்புவரம்பலபெற்றுமீமிசைமூண்டெழுமன்பான்
மின்புரிசெஞ்சடையாரைமீளப்பழிச்சுதலுற்றான். உ௩௧

அகத்தியர்தோத்திரம்.

* கொச்சகக்கலிப்பா.

இந்நாளெனக்குப்பயப்பட்டதிப்பிறவி
யிந்நாளெனக்குப்பயப்பட்டதியான்செய்தவ
மிந்நாளெனக்குப்பயப்பட்டதென்னறிவு
மிந்நாளுனைக்காணப்பெற்றமையினெங்கோவே. உ௩௨

எண்ணமெலாமெய்தினேனெண்ணமெலாமெய்தினே
னெண்ணமெலாமெய்தினேனெங்கள்பெருமானே
கண்ணனொடுநான்முகனுங்காணாத்துணையடிகள்
கண்ணெதிரேயிற்றைநாள்யான்காணக்காட்டினையால். உ௩௩

சங்கராசம்புவேசங்கராசம்புவே
சங்கராசம்புவேசாம்பசிவனேயென்
னங்கணனென்றென்றுமோலிட்டழைத்தாற்று
மிங்கெனக்குவாழ்நாள்கனிவ்வாறேபோகியவே. உ௩௪

குன்றாதவன்புனக்கேகுன்றாதவன்புனக்கே
குன்றாதவன்புனக்கேமிக்கோங்குகொள்கையது
வென்றுமெனக்குண்டாகவென்றுமெனக்குண்டாக
வென்றுமெனக்குண்டாகவென்றுமோர்பெற்றியனே. உகரு

வையமிசைத்தோற்றமுதல்சாங்காறுமன்றவுனைத்
தெய்வமெனப்பேணுத்திருவிலிகளென்குலத்தி
லெய்தியொருஞான்றும்பிறவற்கவெய்துறினும்
வெய்தெனமற்றுங்கேவிளிந்தொழிகவெம்மானே. உகசு

ஆனேறுயர்த்தருளியன்றிளைரெரித்த
கோனேயெனக்குக்குலதெய்வமாம்பேற்றால்
யானேபெருஞ்செல்வன்யானேபெருஞ்செல்வன்
யானேபெருஞ்செல்வனெல்லாவுலகினுமே. உகஎ

சிறந்துன்னைத்தெய்வமெனக்கொள்ளாதசித்தை
பிறந்தகுலம்பிறவாநின்றகுலம்பீளி
னுறந்தகுலத்துமுமையொருபான்மேயாய்
மறந்தும்பிறவாதவாழ்வெனக்குவேண்டுமால். உகஅ

ஏழைக்குறும்பினிமையோர்தமக்கிரங்கிப்
பீழைக்கொடுவிடத்தையுண்டளித்தபேராளா
வாழிப்பெருங்கருணையாரமுதேவெற்பீன்ற
மாழைப்பூங்கண்ணிமணாளாவடிபோற்றி. உகசு

அகத்தியர் வேண்டுகோள்.

வேறு.

என்றென்றுபன்முறையுந்துதித்திறைஞ்சித்தாழ்ந்தெழுந்து
நின்றுகாஞ்சிரமுகிழ்ப்பநிறைந்தபெருமகிழ்ச்சியுடன்
குன்றனையபெருந்தவத்தோனிதுவொன்றுகூற்றுதைத்த
மின்றிகழுஞ்சேவடிக்கீழ்விண்ணப்பஞ்செய்கின்றான். உச0

அடியனேன்வடகாசிநீத்தகன்றுநினக்கினிய
கடிமதில்சூழ்கொடிமாடக்காஞ்சியினைத்தலைப்பட்டுப்
பொடியணிந்ததிருமேனிப்புண்ணியமேயிமயவரைப்
பிடிமணந்தமதகளிறேபெரும்பேறுபெற்றுய்ந்தேன். உசக

இத்தகுபேறுடையேற்குமற்றின்னுமொருகருத்து
மெய்த்தபெருவேட்கையினுலொழியாதுமேன்மேலுஞ்
சித்தமிசைமூண்டெழுமாலதுநிரம்பச்சிறியேன்பால்
வைத்தபெருங்கருணையினல்வழங்குவாயெனப்போற்றி. உசஉ

எவ்வினையுமோப்புதலாற்றிராவிடமென்றியல்பாடை
யெவ்வமறப்புதிதாகயான்வகுப்பநல்கியது
வெவ்வருணத்துள்ளார்க்குமெளிதாகப்பூத்தேளி
ரெவ்வெவர்க்குஞ்சுவையமிழ்தினினிதாகச்செய்தருளாய். உசங

மூன்றுறழ்ந்தபதிற்றெழுத்தான்முழுவதுமாயுனக்கினிதாய்த்
தோன்றிடுமத்தமிழ்ப்பாடைத்துதிகொண்டுமகிழ்ந்தருளி
யான்றவரமெல்லார்க்குமிவ்வரைப்பினளித்தருளா
யென்றெடுத்தமொழிகல்வியெவற்றினுக்குமிறையோனே. உசச

மன்னியவித்தமிழ்க்கிளவிமந்திரங்கள்கணித்தடியேன்
செந்நெறியின்வழுவாவித்திருக்காஞ்சிநகர்வரைப்பி
னுன்னனுக்கனுகியினிதுறைந்திடவும்பெறவேண்டு
மின்னவரமெனக்கருளாயெம்பெருமானென்றிரந்தான். உ௬௫

அகத்தியர்தமிழாசிரியராதல்.

கூம்பியகைத்தலமுடையகுறுமுனிக்குப்பினுகனுர்
தாம்பரிந்துதமிழ்விளக்குமாசிரியத்தலைமையொடு
மேம்படுதென்றிசைக்கிறைமைநல்கிவேட்டனபிறவு
மாம்பரிசினளித்தருளியவ்விலிங்கத்திடைக்கரந்தார். உ௬௬

இவ்வண்ணமருள்பெற்றவிருந்தவனும்மகவிடத்தின்
மெய்வண்ணவோத்துமுறைத்தீந்தமிழைவிளக்குவித்துச்
செவ்வண்ணத்திருமேனிப்பெருமானுர்திருவடிக
ளவ்வண்ணந்தொழுதேத்திநெடுங்காலமங்கிருந்தான். உ௬௭

வடமொழியைப்பாணினிக்குவகுத்தருளியதற்கிணையாத்
தொடர்புடையதென்மொழியையுலகமெலாந்தொழுதேத்துங்
குடமுனிக்குவலியுறுத்தார்கொல்லேற்றுப்பாகரெனிற்
கடல்வரைப்பினிதன்பெருமையாவரேகணித்தறிவார். உ௬௮

இருமொழிக்குங்கண்ணுதலார்முதற்குரவரியல்வாய்ப்ப
விருமொழியும்வழிப்படுத்தார்முனிவேந்தரிசைபரப்பு
மிருமொழியுமான்றவரேதழீஇயினுரென்றாலிவ்
விருமொழியுநிகரென்னுமிதற்கையமுளதேயோ. உ௬௯

வடதிசைதாழல்.

கலிவிருத்தம்.

இத்தகுதமிழோதியாங்கினிதுறைநாளி
லத்தலையானுா தாமாயிழையுமையாளைப்
புத்தணிதிகழ்மன்றல்புரிநலமுளதாக
வெத்தலையுறைவோருமீண்டினரிமயத்தில். உ௭௦

முனிவொடுவரைதாழ்த்தமுனிவனுமதுநோக்கிப்
பனிவரைதனையுற்றான்பலபலவுலகத்தி
னினிதுறையுயிரெல்லாந்தொகுதலினிருஞாலத்
தனிமகளொருபக்கஞ்சாய்ந்தனள்பொறையாற்றாள். உ௭௧

தென்புவிமிசையோங்கித்திகழ்வடபுவிதாழப்
பொன்பயிலுலகத்துப்புங்கவரதுகாணுஉத்
துன்பொடுபயமெய்தித்துணையடிதொழுதேத்தி
யென்பணிவரைமார்பற்கின்னதுபுகல்கிற்பார். உ௭௨

தாழுறுபுவிதன்னைச்சமனிலைபெறவைத்துக்
காழுறுதமியேமைக்காப்பதுகடனெந்தா
யாழ்கடல்விடமுண்டோயில்லெனிலடியேங்கள்
வாழலமிதுபோதேயவல்விழுவதுதிண்ணம். உ௭௩

வெருவருசெயலோராய்விண்ணவரிதுகூறத்
திருமுடியசைவோடுஞ்சினவிடையவர்சொல்வார்
தருமலர்த்தொடையீர்காள்சனமிகநிறைவுற்று
மருவியபாரத்தாற்றாழ்ந்ததுவளர்ஞாலம். உ௭௪

அகத்தியர் பொதியமலையடையப்பணித்தல்.

ஆதலினியாமாதலெம்மொடுங்கராமோர்
மாதவமுனியாதறென்றிசைவயினின்னே
போதரினுலையாமேபுவிநிலைபெறுமென்னக்
காதரமுறுவிண்ணோர்கேட்டனர்கவலுற்ருர். உருரு

மணவினைநிகழ்காலைமதிமுடியுடையானங்
கணைவதுதகுமேவேறவனொடுங்கர்வார்யா
ரிணையிலிமுழுதிற்குமிறையவனெவ்ராலு
முணர்வருமுதலென்றேயோலிடுமறையெல்லாம். உருசு

என்றிவைபலவெண்ணியிணையடிதொழுதேத்தி
யன்றினர்புரமூன்றுநீற்றியவடிகேளிம்
மன்றலினீசேறலெவ்வணமுனேநோரா
கின்றவருளரென்றுகேட்டிலமெங்கெங்கும். உருஎ

என்னலுமணலங்கையேற்றவரிமையீர்நீர்
சொன்னவைமெய்யேயித்தொல்லுலகினிலெம்மை
யன்னவரிலைகண்டீர்குறுமுனியலதென்னுப்
பன்னியமொழிகேளாப்பண்ணவர்களிகூர்ந்து. உருஅ

மங்கலவினைசான்றவதுவைசெயமையத்தி
னெங்களையுடையாய்நீயேகுவதமையாதே
யங்கினியணைகிற்பான்றமிழ்தெரியறவோர்க்குச்
சங்கரவிடைநல்கத்தகுமெனவுரைசெய்தார். உருகூ

கடல்விடமமுதாக்குங்கறைமிடறுடையாருங்
குடமுனிதனையங்கட்கூயினரெதிர்நோக்கிப்
படரொளியிளமூரல்பனிமுகமலர்காட்டித்
தொடர்புடைவிழிகாட்டுங்கருணையினிதுசொல்வார். உசூ0

புத்தெழில்பெறுவிந்தம்புரிதருமிடர்மாற்றி
முத்தமிழ்முனிவாமுன்முச்சகமுழுதுய்ய
வைத்தனையிதுபோதுஞ்சந்தனவரைநண்ணி
யித்தரைசமமாகப்புரிமதிகடிதென்ருர். உசூக

அகத்தியரிறைவன்பாலிரங்கல்.

இருள்பொதிமணிகண்டாடிதொழுதிருமுங்நீர்
பருகியமுனிவேந்தன்பையுளினுரைசெய்வா
னருள்பெறுமடியார்கட்கவரினுமினியானே
கருணையினிறைவேயான்கழிவதுமுறையேயோ. உசூஉ

மருவினர்பிரியொண்ணுய்மற்றிவரில்லாநின்
றிருமணநிறைகோலங்காண்டகுதிறல்பெற்ருர்
பெருமணநடுவேநீபிரிகெனவெனைநீப்ப
விருளுறுமெனடியேனிங்கெப்பிழைசெய்தேனே. உசூ௩

துணைவியரொடுவானத்தொல்லுலகுடையாரும்
பணைமணிமணிநாகர்பாரிடர்முனிவோரு
மணவணிதொழுதுய்வானின்னமும்வருகின்ரு
ரணைவுறுதமியேனைத்தள்ளுவதழகேயோ. உசூச

விரைசெலன் முனிவோர்கள் விரைகெழுகனைதோய்வா
ரரசிலைகுசைமற்றுமன்புடனெதிருய்ப்பார்
கரகமுமிழைசூழ்வாரவரொடுகெளியாமே
தெருமரவடியேனைத்தள்ளுதல்சிரேயோ. உகூ௫

பாடுவர்சிலரன்பர்பரவுவர்சிலரன்ப
ராடுவர்சிலரன்பரழுகுவர்சிலரன்ப
ரோடுவர்சிலரன்பருவரொடுமெகிழாமே
வாடுறவடியேனைத்தள்ளுதன்மரபேயோ. உகூகூ

ஒளிமணிமழைதூர்ப்பாரொண்மலர்மழைதூர்ப்பார்
புளகமுமுடல்போர்ப்பார் புகழ்பலதிசைபோர்ப்ப
ரளவறுமகிழ்கூர்ப்பாரவரொடுகலவாமே
தளர்வுறவடியேனைத்தள்ளுவதருளேயோ. உகூஎ

கண்டனமணவின்பங்காழுறுவினையெல்லாம்
விண்டனமுலவாதமேதகுசிவபோகங்
கொண்டனமெனவார்ப்பாரவரொடுகுலவாமே
தொண்டறவடியேனைத்தள்ளுதல்குழேயோ. உகூஅ

குழலவிழ்வதுமோரார்குழைவிழுவதுமோரா
ரிழைசரிவதுமோராரெதிரெதிர்மடமாதர்
மொழியுமங்கலவோதையிருசெவிமுகவாமே
கழிவுறவடியேனைத்தள்ளுதல்கடனேயோ. உகூகூ

முனிவரர்கணநாதரயனரிமுதலானோர்
பனியறுகணிகாலைப்பேரிசைபடமுன்பி
னெனவெழுநிறைபூசலகன்டினிதுவவாமே
மனமடிவுறவென்னைத்தள்ளுதன்மாண்பேயோ. உஎ0

மண்டிலமணிவேதிகுண்டமுமலிவித்திங்
கெண்டிசைபுகைவிம்மவெரியிடையிழுதூற்றித்
தண்டிரள்பொரியட்டுந்தகவதுகாணுமே
விண்டிடவடியேனைத்தள்ளுதல்விழைவேயோ. உஎக

ஒழுகொளிமணிவேய்ந்தகரகமதுறுபான்மை
விழிமனையவள்வார்ப்பவெற்பிறைகினதாள்கள்
கழுவினன்மலர்தூவிவழிபடல்காணுமே
யழிவுறவடியேனைத்தள்ளுதலறனேயோ. உஎஉ

காரொடுநிகர்கூந்தற்கன்னியைமலைவேந்த
னீரொடுநின்கையிலுதவிடுநிறைகோல
மாரொடுமெதிவேய்ந்தவங்கணகாணுமே
பேரிடருறவென்னைத்தள்ளுதல்பெட்பேயோ. உஎ௩

ஒருவர்முனணிசாந்தமொருவர்தம்முதுகப்பப்
பருவிலைமணியாரம்பட்டுடல்வவோக
நிரல்படமிடைகுற்றார்தொழுநிலைகாணுமே
பருவரவடியேனைத்தள்ளுதல்பண்பேயோ. உஎச

குடையொடுகுடைதாக்கக்கொடியொடுகொடிதாக்கப்
படையொடுபடைதாக்கப்பண்ணவர்குழுவோடும்
விடைமிசைவருகோலம்விழியெதிர்காணுமே
கடைபடவடியேனைத்தள்ளுதல்கவினேயோ. ௨எரு

வாரணநிரைசூழவாம்பரிநிரைசூழத்
தோரணிநிரைசூழத்தேவர்கள்புடைசூழ
வேரணிநகர்சூழுநினதெழில்காணுமே
யாரணுருறவென்னைத்தள்ளுதலமைவேயோ. ௨எசு

தொடிபலநிலம்வீழத்துணைமுலைநனிவிம்மக்
கடிபடுகுழல்சோரக்கன்னியர்மயல்கூரும்
படிமறுகிடைநண்ணும்புத்தெழில்பாராமே
மிடியுறவடியேனைத்தள்ளுதல்விதியேயோ. ௨எஎ

மரகதவடிவாளுமழவிடையனையாயு
மொருமணியணையும்பரினிதுறையுயர்கோல
மிருவிழிகளிகூரப்பருகுவதில்லாமே
பரிவுறவடியேனைத்தள்ளுதல்பாங்கேயோ. ௨எஅ

வந்தனர்மணநாட்பின்மலரடிதொழுவார்க்குத்
தந்திடுமருளேக்கந்தமியனுமுடனின்று
சிந்தையின்மகிழ்வெய்தப்பெறுவதுசெய்யாமே
நைந்திடவடியேனைத்தள்ளுதனலமேயோ. ௨எகூ

அன்றியுமுயர்காஞ்சிப்பதியினிலடியேற்கு
மன்றநினணிமைக்கண்வைகிடவரமீந்தா
யின்றதுதனைமாற்றியெழில்வளர்பொதியத்திற்
சென்றினிதுறைநீயென்றருளியசெயலென்னே. ௨அ0

என்னையுமுடையாய்நின்றிருவருளிதுவோவென்
றின்னனபலபன்னியிருவிழிபுனலவார
வந்நிலைநனியேங்கியழுதழுதயர்வெய்துந்
தன்னிகர்தமிழ்வாய்மைத்தலைவனையெதிர்நோக்கி. ௨அக

அகத்தியர்க்குறுதிகூறல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுவலிற்றாழ்குதம்பைக்காதிற்சுந்தரரருளிச்செய்வா
ரவலித்தல்வேண்டாகேட்டியருந்தவக்கிழவநாலஞ்
செவிலித்தாயென்னவோம்புந்தீம்புனற்கன்னிநாட்டிற்
றவலிற்றீர்வேறுகாஞ்சிசமைததுமுன்பொருட்டுமோதோ. ௨அஉ

அத்தலைக்காஞ்சியூருமெமக்குமிக்கினிதாமங்க
ணித்தகுசிறப்புவாய்ப்பயாம்புனைவதுவைக்கோல
முத்தமக்கிழத்தியோடுமுனக்கெதிர்காட்டுகின்று
மெய்த்தபேருவகைபூப்பவிழியுறக்காண்டிமற்றும். ௨அ௩

கருதிநீவரங்கள்பெற்றவடநகர்க்காஞ்சிமாட்டும்
வருமுறையாண்டுதோறும்பங்குனித்திருநாண்மல்கத்
திருவிழாமுடிவின்மன்றற்செய்கையுமெமக்குண்டாக
வருள்புரிந்திடுதுங்கண்டாயறிவநீமகிழுமாற்றால். ௨அ௪

என்றிவையுலகமெல்லாமுய்யுமாறியம்பிவேலை
வென்றவர்தழுவித்தேற்றிவிடைகொடுத்தருளப்பெற்று
வன்றிறன்முனிவர்கோமான்மகிழ்ந்தடிவணங்கிப்போந்து
தன்றுணைக்கிழத்தியோடுஞ்சையமால்வரையைச்சார்ந்தான். ௨௮௫

வேறு.

சலம்படைத்தவாதாவிவில்வலன்றனைச்சவட்டியபெருகோன்பின்
வலம்படைத்தவனவ்வரையணுகலுமறிதிரைக்கடலாடை
நிலம்படைத்ததுதொன்னிலையாவருநிறைபெருங்களிகூர்ந்தார்
நலம்படைத்தசீருறுவனுமாயிடைவதிந்துதென்மலைநண்ணி. ௨௮௬

தெனுதுகாஞ்சியுமுத்தரகாஞ்சியுநித்தலுஞ்சென்றேத்திப்
பினுகபாணியார்திருமணங்கண்ணுறப்பெற்றுளங்களிப்பெய்தித்
தனுதுபத்தியாலணிபெறத்தொடுத்திடுஞ்செந்தமிழ்ப்பாமாலை
மனுதியாலுணர்வரியவரிணையடிமலர்மிசைப்பலசாத்தி. ௨௮௭

தென்றற்பிள்ளையைவயிறுளைந்தீன்றுதீம்பொருநைநீர்குளிப்பாட்டி
மன்றற்சந்தனப்பொதும்பரிற்றமிழொடுவளர்த்துமென்மெலஞால
முன்றிற்பால்விளையாடவிட்டமர்முதுமலயவெற்பினுஞ்சையக்
குன்றத்தும்மகத்தீசத்துமுறைமுறைகுலவிவீற்றிருக்கின்றான். ௨௮௮

இன்னதாமகத்தீச்சரம்வந்தவாறிவ்விடைப்பணிந்தேத்தி
யன்னமன்னவண்மண்டபமாளிகையங்கணமாங்காங்குத்
துன்னும்வந்திகர்கணுதிபர்வாயிலகாப்புடையவர்தொழப்போந்து
மன்னுமாமுதலிடவயின்மத்தளமாதவீச்சரங்கண்டான். ௨௮௯

என்றியம்பியசூதனைப்பழிச்சினரிறும்புசூழ்வடமேருக்
குன்றவார்சிலைவாங்கியமதனுடைக்குழகனுரடிப்போதி
லொன்றுசிந்தையோய்மத்தளமாதவீச்சரத்தியலுரையென்ன
வென்றமாதவர்வினுதலுமாங்கவன்மேவரவிரிக்கின்றான். ௨௯0

மத்தளமாதவீச்சரவரலாறு.

விரைப்பசுந்துழாய்மணிமுடிப்புங்கவன்வீங்குநீர்க்கலிக்கச்சி
வரைப்பின்விண்டுவீச்சரக்குறிநிறீஇத்தொழும்பேற்றினுன்மறைநான்கு
மிரைப்பவார்பொழிற்புலிநகர்ப்பொதியிலிலெடுத்ததாண்டவங்காணூஉ
வுரைப்பரும்பெறற்படகமுங்கொழுப்பிடப்பெற்றபினுவப்பாலே. ௨௯௧

அடியளந்தவன்கறைமிடற்றடிகளையானந்தக்கூத்தாடன்
முடிவிலேத்தெடுத்தடியனேன்மத்தளமுழக்கவும்பெறவேண்டும்
படியிலாப்பெருங்கருணையஞ்சலதியேபணித்தருளெனப்போற்ற
வடிநெடும்படைக்கழுக்கடையேந்தியவள்ளலாரருள்செய்வார். ௨௯௨

இவ்வரைப்பிடைநித்தலும்படகநீயெழுப்பிடவரம்பெற்றாய்
செவ்விமத்தளமுழக்கவும்விழைதியேற்செப்புதுமிதுகேட்டி
யவ்வியத்தொகையறவெறிந்துயரியவான்றவர்குழூப்போற்றுங்
கௌவையம்புனற்காஞ்சியைமுன்புபோற்கதுமெனச்சென்றெய்தி.

அங்கண்மத்தளமாதவீச்சரனெனவருட்குறிநிறீஇப்போற்றிப்
பொங்குமன்பினுல்விதியுளியருச்சனைபுரிகுதிமற்றாங்கே
துங்கநீடியபரவெளிப்பிலத்தயற்சூழலினென்றனைஞாலத்
தங்குகாப்புடைநடமெனப்பெயரியதாண்டவம்புரிகின்றேம். ௨௯௪

செல்வமல்குமித்தில்லேயின்வனத்திடைத்திருச்சிற்றம்பலமொன்றே
சொல்லிறந்தொளிர்பரவெளியெனப்படுஞ்சிவனேக்குலமார்க்கு
மல்லனீர்த்தடம்புறம்பணேவேலிசூழ்வளம்பொழிற்றிருக்காஞ்சி
யெல்லேயுட்படுவரைப்பகமுழுவதும்பரவெளியெனத்தேறும். உகூரு

ஆதியந்தமுமில்லதோர்மெய்யறிவானந்தநிறைவாகுஞ்
சோதிநந்தமைத்தம்மனக்குகையினுந்தொழுபவர்கருத்தீமை
காதுகாஞ்சியாம்பரவெளித்தலத்தினுங்காண்டகப்பெறுவோரே
யோதிமுற்றுணருறுவரும்பெறலரும்வீட்டினையுறுவாரால். உகூசு

வன்னியிற்படுபொருள்களக்கணந்தனில்வன்னியாமதுபோல
வென்னராயினும்பரவெளிக்காஞ்சியினெய்தினெம்மியல்பாவா
ரன்னதன்மையானத்தலத்திறந்தவர்க்கழற்கடன்கழிப்போரைத்
துன்னுசூதகந்தொடக்குறுதிழிஞரைத்தீண்டினுந்தொடக்கிலலே. உகூஎ

பாப்புப்பாயலோயித்தகைச்சிறப்புடைப்பதிவயினெமைப்போற்றிற்
காப்புத்தாண்டவமாயிடைக்காட்டுதுமந்நடந்தனக்கேற்பக்
கோப்புச்சீரமைமத்தளமுழக்குவாயாகெனக்கொடும்பாச
நீப்புச்செய்தெமையாளுடை யண்ணலார்நிகழ்த்தியமொழிகேட்டு.

வண்டினம்புகுந்துழக்கியபூந்துழாய்வானவன்பெரிதோகை
கொண்டுவல்விரைந்தணுகினன்காஞ்சியிற்கோமரைத்தனிமாக்கீ
ழுண்டர்போற்றவாழங்கணர்க்கணிமையினுகமவிதியாற்றாற்
கண்டுமத்தளமாதவீச்சரன்றனைப்பூசனைக்கடன்பூண்டான். உகூகூ

இறைவர்காப்புநடனஞ்செய்தல்.

கலிநிலைத்துறை.

போக்கருந்தவம்பற்பகல்புரிந்துபேரன்பு
தேக்குசிந்தையான்மீச்செலத்திருவருள்வழங்கி
வாக்குமுள்ளமுந்தொடர்வருவள்ளலார்முழுதுங்
காக்குநாயகர்காட்டினார்காப்புநன்னடனம். ௩00

வீங்கிருட்பிழம்பள்ளிவாய்மடுத்துவெழுங்கதிர்கான்
றோங்குசெங்கதிராயிரமொருவழிக்குழுமி
யாங்குவில்லுமிழற்புதப்பொலஞ்சுடர்ப்பொதுவின்
பாங்கரெங்கணும்படரொளிவிரிகதிர்பரப்பி. ௩0௧

அனையமன்றினுக்கரும்பெறலணியெனக்கவின்று
புனையுநீற்றொளிவயங்கியதிருவுருப்பொலிய
வினையிகந்தவர்விள்ளருஞ்சரண்மிசைவீசுகுங்
கனைமணிக்கழல்கலின்கலின்கலினெனக்கறங்க. ௩0௨

வார்ந்தசெஞ்சடைமாதிரமெட்டினுஞ்சுலவ
வார்ந்ததெய்வதக்கங்கையாறலம்பிநீர்துளிப்பக்
கூர்ந்தவின்னருட்குறுநகையிளநிலாமுகிழ்த்துச்
சார்ந்துபோற்றெடுத்திசைப்பவர்தம்முயிர்பருக. ௩0௩

கஞ்சவாண்முகமலர்தரக்கட்கடைக்கருணைப்
பஞ்சினேரடிப்பனிவரைப்பிராட்டிபாணடப்ப
வஞ்சுபூதமும்படைத்தளித்தழிக்கவும்வல்ல
தஞ்சரும்புகழ்க்குறட்கணந்துணங்கையாட்டயர. ௩0௪

ஊனமில்பசுங்கொடியெனவொல்கிநின்றருபாற்
கானளாங்குழன் மலைமகள் கண்டுகண்களிப்ப
வானநாட்டவர்கற்பகமலர்மழைபொழியத்
தானமெங்கணுமரகரசயவொலிதழைப்ப. ௧0௫

கட்டுவார்முரசாதியபெருங்கணப்பூத
ரெட்டுநாகமுமாகமுஞ்செவிடுறவெழுப்ப
மட்டுவார்ந்தெனச்செவியெலாமண்ணிக்குமதுரம்
பட்டதீங்கிளைநரப்பியாழ்கின்னரர்பயில. ௧0௬

வேதமாயிரமொருவயின்வெண்குடைப்பணில
நாதமாயிரமொருவயினலங்கிளர்முழவப்
பேதமாயிரமொருவயிற்பெரும்புனற்பரவை
யோதமாயிரமார்த்தெனத்தழங்கொலியோங்க. ௧0௭

நடிக்குமற்புதநாடகங்காண்டலும்புளகம்
பொடிக்குமேனியன்புனல்பொழிவிழியினன்றுதிகள்
படிக்குநாவினனஞ்சலிபற்றியகரத்தன்
கடிக்குழுந்துழாய்க்கண்ணியான்படிமிசைவீழ்ந்தான். ௧0௮

வீழ்ந்தெழுந்துளமகிழ்ந்துபேரின்பவெள்ளத்தி
னாழ்ந்துபன்முறைபணிந்துபோற்றிசைப்புழியவற்கு
வாழ்ந்தபேரருட்கருணையான்மத்தளமுழக்கப்
போழ்ந்தவெண்மதிக்கண்ணியார்திருவருள்புரிந்தார். ௧0௯

நீண்டமேனியானிறைபெருமகிழ்ச்சியிற்றிளைத்துத்
தாண்டவந்தனக்கிசையமத்தளவியமுழக்கி
மாண்டகுந்திறன்மத்தளமாதவனுனன்
வேண்டுமெய்வரமவன்பெறவளித்தனர்விமலர். ௧௧0

அச்சுதன்பெறுவரத்தினலன்றுதொட்டென்றுங்
கச்சிவைப்பினின்மத்தளங்கறங்குபேரோதை
முச்சகத்தையுநிறைத்திடமுழுவதும்புரக்கும்
பச்சிளங்கொடிபாகனர்திருநடம்பயில்வார். ௧௧௧

காப்புநன்னடங்கண்ணுறப்பெற்றவர்கரும
யாப்புவீழ்ததுயர்வீடுபேறெய்துவர்பிறவி
யோப்புமத்தளமாதவிச்சரமிதுவுரைத்தாம்
வாய்ப்புறுந்தவக்கொள்கையீர்மேலினிவகுப்பாம். ௧௧௨

இறைவிமகாமண்டபத்தெழுந்தருளல்.

எம்பிராட்டியங்கிறைவரைத்தொழுதுபோற்றிசைத்து
நம்புகாதலித்தோழியர்குழாத்தொடுகடந்து
கம்பநாயகர்திருவருட்பெருமையேகருதிச்
செம்பொன்வேய்ந்தொளிபிறங்குமாமண்டபஞ்சேர்ந்தாள்.

எண்ணில்பன்மணியாங்கணுமிளவெயிலெறிப்ப
வண்ணமூண்டபொற்றூண்பலநிரைநிரையயங்கக்
கண்ணிறைந்தபேரழகினுக்கணியெனக்கவின்று
விண்ணளாங்கொடியிடையுமம்மண்டபவரைப்பின். ௧௧௪

சுற்றுநீடியதோழியர்கவரிசாந்தாற்றி
பற்றிநின்றிருபாங்கரும்பணிநனிபுரியச்
சற்றிருந்திளைப்பாறினளெழுந்துமீத்தருக்கு
முற்றிலாமுலையன்னலார்க்கின்னதுமொழிவாள். ௯௧௫

மன்னுயிர்த்தொகைமுழுவதுமாயையின்மறைப்புண்
டின்னல்செய்யிருவினைவலைப்படுங்களிவ்வினைதா
முன்னையெம்மையெம்மடியரைப்பிணிப்பதொன்றில்லை
யன்னதாயினுமகிலமுந்தெளிந்துய்தற்பொருட்டு. ௯௧௬

ஆடலான்விழிபுதைத்தலினிருட்படல
மூடயாவையுமிடர்க்கடன்மூழ்கியவதனாற்
கூடும்வல்வினைகழுவுறக்காஞ்சியைக்குறுகி
நீடநீயெமையருச்சனையியற்றுதிநெறியால். ௯௧௭

என்றுமந்தரப்பறம்புறையெம்பிரான்விடுப்ப
மன்றவிந்நகர்க்கெய்தினன்வளரிளமுலையீ
ரின்றுநான்புரிபூசனைக்கிசையவென்பணியி
னின்றுவேண்டுவதம்மினென்றுணர்த்தினணிமலை. ௯௧௮

உரைத்தவாய்மொழிகேட்டலுமுளங்களிதுளும்பி
விரைத்தகூந்தலார்மென்மலரடிதொழுதெழுந்து
திரைத்தபாற்கடலமிழ்தனாய்செய்பணிவெவ்வே
றரைத்தவாய்திறந்தெங்களுக்கருளெனவருள்வாள். ௯௧௯

இறைவிதோழிகட்குக்கட்டளையிடல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிலந்தாங்குவிண்ணவரும்விழைதகுதீம்புனற்கூவல்
காலந்தோறும்யானுடிக்கருமமியற்றுதற்கொன்று
மாலந்தாங்கியகண்டத்தடிகளுக்காட்டுதற்கொன்று
மேலந்தோய்ந்திருள்கூறுமீர்ங்குழலவர்சிலரகழ்மின். ௯௨௦

அலைகள்வெண்மணிவீசியதிர்புனனதிக்கரையருகு
மலர்கள்பச்சிலைகனிகண்மல்கியமயிலைவில்லந்தண்
பலவுமாதியபலவுமபயில்வுறுநந்தவனங்க
ளிலைமுகப்பொலம்பூணினெழுமுலையவர்சிலர்புரிமின். ௯௨௧

நறியசந்தனவிழுதுநாறியமான்மதச்சாந்தம்
வெறிகுலாங்கருப்பூரம்விரைகெழுகுங்குமம்பிறவுஞ்
செறிவுகொண்டபூங்கதிரின்றெய்வதமணியணிவிலையிட்
டறிவரும்பரிவட்டமாதியசிற்சிலர்கொணர்மின். ௯௨௨

ஆனினைந்துடனேவேறமுதமுஞ்சிலர்சிலர்தம்மின்
றேனளாந்திருவமுதுமுதலியசிலர்சிலர்தம்மின்
வானளாவியகோயின்மாளிகையெங்கணுமணிகள்
கானளாமலர்பட்டிற்கவினலஞ்சிலர்சிலர்புனைமின். ௯௨௩

தோழியர்பூசாதிரவியம்சேகரித்தல்.

இன்னவாறிமயத்தினிளம்பிடியேவுதலோடு
மன்னதோழியர்பலருமையெனவடியிணைதொழுது
முன்னர்யாஞ்செய்துமென்றங்கொருவரினொருவர்முன்முடுகித்
துன்னுகாதலின்மூண்டுதொழிறலைநின்றனர்மன்னோ. ௯௨௪

தெவ்வடுவேற்கணுமாபத்திரையொடுகீர்த்திமதியென்
றிவ்விருமாதர்வடக்குந்தெற்குமகிழ்ந்திருகூவல்
கௌவைநெடுந்திரைக்கங்கைகாளிந்தியங்கண்மடுத்தா,
ரவ்விருதீர்த்தங்குடைந்தோரல்லற்பவப்பிணிநீப்பார். ௧௨௫

வார்ந்தநெடுஞ்சடைமோலியேகம்பவாணர்தமக்கு
நேர்ந்ததிருவமுதாக்கநீடுமனற்கிறைஞிக்கி
னீர்ந்தண்மணிப்புனற்கூவலிடம்பெறத்தொட்டுவனப்பி
னூர்ந்ததிருமடைப்பள்ளியமைத்தனராலொருசாரார். ௧௨௬

நிலவுமெருக்குமணிந்தநீண்முடிசாத்தியமேல்பாற்
குலவுநதிக்கரைஞாங்கர்க்கோதறுதூயவரைப்பிற்
பலருந்தொழத்தகுமேன்மைபயிலம்பிகாவனமென்னு
மலர்நிறைநந்தவனங்களாக்கினராங்கொருசாரார். ௧௨௭

நெட்டிலைவாழைக்குலங்கணெருப்புறழ்செம்பழம்பூக
மட்டுமதுக்கழைதூணத்தியாத்தவிதாழ்வடநாற்றி
மட்டவிழ்பூந்தொடைதூக்கிவன்னவிதானம்விதானித்
திட்டுமணித்திருக்கோயிற்கெழில்புரிந்தாரொருசாரார். ௧௨௮

வாசக்கொழும்புழுகப்பிவண்ணமலர்த்துகளட்டி
வீசிச்செழும்பனிநன்னீர்விரைகமழ்தீம்புகையேற்றிக்
காசைத்தகர்த்துக்கரைத்துக்கவின்றிருமாளிகைச்சுற்று
மாசைச்சுவர்த்தலமுற்றுஞ்சித்திரித்தாரொருசாரார். ௧௨௯

வீறும்விரைப்பாளிதங்கள்வெறுவியவல்சியக்காரச்
சோறுபுளிந்தயிர்ச்சொன்றிதுப்புடையேனைப்புழுக்க
லுறுநறுங்குய்க்கருனைமுதலியநால்வகையுண்டி
யாறுசுவைத்திறம்விம்மவட்டனராலொருசாரார். ௧௩௦

ஓட்டொழியாநறுந்தேறலொண்மலர்குற்றனர்கொண்டு
சூட்டொடுகண்ணிகளிண்டைதொங்கன்முதல்பலவாக்கி
யீட்டுநறும்புகையேற்றியிர்ம்பனிநீர்தெளித்தம்பொற்
சேட்டொளிமூழியமைத்துச்சேர்த்தனராலொருசாரார். ௧௩௧

செம்பொனிழைத்தசும்பிற்றெய்வதமந்திரமோதி
யம்பொனிழைத்துகில்வாய்ப்பெய்தலையெறிதீர்த்தம்வடித்துக்
கொம்பினெறிசிந்தனர்கொண்டுகுளிர்மணிக்கோயிலினுள்ளாற்
பம்புநிறைகணிறையப்பாய்த்தினராலொருசாரார். ௧௩௨

சுடர்விடுமோடகச்செம்பொற்றூமணிவட்டகையோடு
படலிகையாதிகள்சுத்திபண்ணியமைத்துநறும்பூ
வடைதளிர்யாவையுமாய்ந்தங்கார்த்திமணத்தவேலாதிக்
கடிதிருமஞ்சனமட்டிக்களிமிகுந்தாரொருசாரார். ௧௩௩

தூங்குபலாக்கனிதாற்றுத்தூத்திரள்வாழைப்பழங்கண்
மாங்கனிக்குப்பைநாரந்தமாதுளைநாறெலுமிச்சை
தேங்கமழ்தெங்கின்குடக்காய்தீம்படுபூகப்பழுக்கா
யாங்கணிரப்பினர்கைக்கொண்டணுகினராலொருசாரார். ௧௩௪

ஆனுடைப்பாற்குடக்கோடியருஞ்சுவைநெய்க்குடக்கோடி
தேனுடைப்பொற்குடங்கோடிசெழுங்கரும்பட்டதண்சாறு
தானிறைபொற்குடங்கோடிதயிருடைப்பொற்குடங்கோடி
வானமிழ்தக்குடங்கோடிவல்லையுய்த்தாரொருசாரார். ௧௧௫

திருமலியோவியப்பட்டுந்தீபத்தியன்றவெண்பட்டுங்
குருமலிபாசிலைப்பட்டுங்கோபநிகர்த்தசெம்பட்டு
முருவுடைமாழையம்பட்டுமொளிர்தருநீனிறப்பட்டுந்
தருவுதவும்பலபட்டுந்தந்தனராலொருசாரார். ௧௧௬

விற்படுமோலிகுதம்பைமின்னுமிழ்பொன்னணிபட்ட
மற்பகைவிள்ளவிளங்குமங்கதமாழிகடகம்
பற்பலகண்டத்தணிகள்பாயொளியாரமுதலாங்
கற்பகமுய்த்தனகொண்டுகெடுகினராலொருசாரார். ௧௧௭

முழுதுலகுங்கமழ்கிற்குமுருகுடைச்சந்தனத்தேய்விற்
புழுகினைவாக்கிநுணங்கப்பொடித்திடுகப்புரமட்டிச்
செழுவியகுங்குமம்பெய்துசெறிவுறமட்டித்தெடுத்த
விழுதமைபொற்குடமேந்திவிரைந்தனராலொருசாரார். ௧௧௮

கண்ணடிசாமரைவெண்கேழ்க்கவிகைவளியெறிவட்டம்
புண்ணியநீறுபளிதம்புகைமலிகுங்குலியங்கள்
வண்ணமணிக்குடந்தட்டோடாராதனைக்குவகுத்த
வெண்ணிலுறுப்பிற்பிறவுமீட்டினராலொருசாரார். ௧௧௯

நெய்விரவம்புயநாளநீளிழைத்தீபமனந்தம்
பைவிரிபாந்தளுயிர்த்தபருஉமணித்தீபமனந்தந்
தெய்வதத்தீபமனந்தந்தீமபுகைவர்க்கமனந்தங்
கைவகுத்தெங்கணுமல்கக்கண்டனராலொருசாரார். ௧௨௰

மாடகவச்சிரப்பத்தர்வார்நரப்பின்னிசையாழும்
பாடுறுபாடலுமொன்றப்பண்ணினமைமின்களென்று
மீடறுபற்பலியங்களெழுப்புமினென்றுமிணங்க
வாடுமினென்றும்விண்ணோரைப்பணித்தனராங்கொருசாரார்.

இறைவிபூசைக்கெழுந்தருளல்.

கலிவிருத்தம்.

இன்னணம்பணியெலாமிகுளைமார்செய
மின்னவிர்மணிவடஞ்சுமந்தவெம்முலைக்
கன்னிமாமண்டபநின்றுங்காதலாற்
கொன்னுமாபத்திரக்கூவணண்ணினாள். ௧௨௨

நிறைபரஞ்சுடரடிநினைந்துகூவனீர்
மறைநெறிவிதியுளிவழாமையாடியே
யிறுநசுப்பநலாரெடுத்துநீட்டிய
வறுமையினொற்றிமெய்யீரமாற்றினாள். ௧௨௩

தேசிகப்பட்டியாண்டுடுத்துத்தீவினை
யாசிரித்தருளுநீறுகமெய்க்கணும்
பூசிமுப்புண்டரம்பொறித்துக்கண்மணி
[illegible]. ௧௨௪

காவலர்பூசனைபுரியுங்காதலான்
மேவரவேண்டிவேகொண்டுமெல்லியற்
பாவையர்புடைவரப்படர்ந்திரண்டெனு
மாவரணந்தனையணுகினளரோ. ௧௪௫

சங்கினம்வயிரொடுதாரைகாகளம்
பொங்கொலிச்சின்னங்கள்வீணைபூங்குழல்
வங்கியம்பேரிவார்முரசந்திண்டிம
மெங்கணுங்கடலுடைந்தென்னவார்ப்பவே. ௧௪௬

கின்னரர்கருடர்கிம்புருடர்பாண்டுசெயக்
கன்னியரெதிரெதிர்கலவியாடிடத்
துன்னியமுனிவரர்துன்றும்வேதிய
ரென்னருமறைமுழக்கெடுத்துச்சூழவே. ௧௪௭

ஐவகைப்பிரமமுமங்கமாறுமோர்
கைவளர்முகனுடைக்கட வுள்வேழமுங்
கொய்விரைக்கடம்பணிகோவுமோகையான்
வைகுமச்சூழலைவலங்கொண்டெய்துவாள். ௧௪௮

ஐங்கரப்பிள்ளையைநிருதியாசையிற்
செங்கைவேலிளவலையுலவைத்திகதினு
முங்குறுபூசையினுவப்பச்செய்துபோய்
மங்கலநந்திவாழ்வாய்தனண்ணியே ௧௪௯

வாயிலோர்பூசனைமரபினாற்றினண்
மாயிருமறைத்தனிமாவினீழல்வாழ்
காயனார்தமைவிழிநயப்பக்கண்டலு
மீயுயர்காதலான்வீழ்ந்தெழுந்தனள். ௧௫௦

ஒருங்கியமனத்தினஞ்செழுத்துமோதியே
கருங்குழற்கற்றைமேற்குவித்தகையொடும்
பெருங்களிதுளும்பியுள்புகுந்துபிஞ்ஞகர்
மருங்குறமுறைமுறைவணங்கியேத்தினள். ௧௫௧

முருகலர்மாவடிமுளைத்ததீஞ்சுவை
யருள்விளையமுதினையாரக்கண்களாற்
பருகினள்பன்முறைபழிச்சியண்ணலார்
கருணையேநோக்கிவெங்களிப்பினீடினள். ௧௫௨

விழிகளானந்தநீர்த்தாரைமெய்யெலாம்
பொழியநெக்குருகினள்புளகம்போர்த்தனண்
மொழிதடுமாறினளறிவின்முற்றிய
தொழிலமைபூசனைதொடங்கன்மேயினள். ௧௫௩

இறைவிபூசைதொடங்கல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வழுவறுதோற்றமாதிவழுக்கியபாவத்தீமை
கழுவவின்பூசையின்காட்கடைப்பிடித்தருளாற்செய்கேன்
முழுதருள்வழங்கியூறுநீக்கிமுன்னின்றகோடி
செழுமதிமுடியாயென்றுசங்கற்பஞ்செய்துகொண்டாள். ௧௫௪

பூமுதல்பூதசுத்திபுரிந்தகப்பூசையாற்றிக்
காமருமலரும்வாசவருக்கமுங்கலந்ததெண்ணீர்த்
தோமில்பாத்தியமேயாசமனமருக்கியந்தூய்தாக்கி
மாமுரலிதழித்தாரார்முடிமிசைமலரைமாற்றி. கருரு

மாதர்வண்சத்தியாதிசத்தியீறிலகவாய்ந்த
வாதனமதன்மேல்வைகுஞ்சதாசிவவடிவினுன்ற
சோதியைத்திருவேகம்பச்சுடரினோடுக்கீழ்பக்க
மீதறநிறைந்துவிம்முமானந்தநிமலவாழ்வை. கருசு

சீத்திருளறுக்குநோக்கர்ற்றெளிவுறக்கண்டுபோற்றிப்
பாத்தியமுதலாமூன்றும்பதமுகமுடியினீத்து
நாத்திகழ்மனுவின்மாண்டநறுமதுபருக்கநல்கி
யாத்தனூல்விதியினுற்றூன்மறித்துமாசமனமீந்தாள். கருஎ

இணங்கியநெய்பால்பெய்தவின்னமுதிசையநல்கி
மணங்கமழெண்ணெய்க்காப்புமாநெல்லிமஞ்சட்காப்பு
மணங்கருங்கபிலையைந்தைந்தமுதுபல்குடத்துத்தீம்பால
குணங்கெழுதயிர்நெய்செந்தேன்குளிரிளநீருமாட்டி. கருஅ

கருப்புமிழ்தேறலாட்டிப்பல்கனிவருக்கமாட்டி
யருத்திகூரன்பினுன்றசந்தனக்குழம்புமாட்டி
மருக்கமழ்ந்தெடுத்தநீர்த்திமதித்தடங்கூவற்றெண்ணீ
ருருத்திரமனுக்களோதிவிதியுளிநிறையவாட்டி. கருகூ

நுழையுநூற்கலிங்கமேந்திநொய்தெனமேனியொற்றி
விழைதகுநறும்பட்டாடைவிளங்கெழின்முந்நூலசாத்தித்
தழையுமான்மதங்கர்ப்பூரஞ்சந்தனக்கலவைசாத்தி
யிழையணிவருக்கமேனையீர்ந்தொடையலங்கலசாத்தி. கசுO

நறுவிரைத்தூபந்தீபங்காட்டிநால்வகைவேறுண்டி
யறுசுவைதிறத்தின்மாணவமுதுசெய்வித்துச்சீத
முறுபுனலுதவிக்கைவாய்பூசியொண்பழுக்காய்வாசம்
பெறுமிலேமுகவாசங்கண்மந்திரம்பேசிநல்கி. கசுக

அகிற்புகைதீபமெல்லாமினிதளித்தரக்குநன்னீ
மகிழ்ச்சியிற்சுழற்றிப்பல்கால்வலஞ்செய்துவணங்கிப்போற்றி
யிகப்பிலஞ்செழுத்துமெண்ணியின்னனபிறவுமாற்றி
முகிழ்த்தபேரன்பினுன்றபூசனைமுற்றச்செய்தாள். கசுஉ

முற்றுவித்தெழுந்துமீண்டுமொய்யொளிப்பிலத்தின்பாங்க
ரற்றமிலறமெண்ணான்குமருள்வழிவளர்ப்பாளாகிப்
பற்றலார்புரஞ்செற்றூரையிம்முறையெண்ணில்பன்னாட்
சிற்றிடையெம்பிராட்டிபூசனைசெய்துவாழ்நாள். கசுக

அன்னணமளவில்காதலருச்சனைத்திறத்திறேங்க
மன்னியமறைநூல்வாய்மையாகமவழியிற்பேணுந்
தன்னிகரிமயமீன்றமதரரித்தடங்கடசெவ்வாய்
மின்னிடைக்கொருநாளங்கணிகழ்ந்ததுவிளம்பலுற்றேன். கசுச

மண்டுபோதுங்கம்பையாற்றுமணிப்புனல்படிந்துமெய்யிற்
கண்டிகைநீறுதாங்கிக்கடப்படுநியமமாற்றித்
தொண்டினில்வழாதுபூசைத்தொழிற்றலைநின்றுகாதன்
மண்டவேகம்பனுரைமஞ்சனமாட்டுங்காலை. உகடு

மருமலர்த்தனிமாநீழல்வள்ளலார்மேன்மேலன்பு
பெருகியகருத்திறைட்குப்பேரருட்கருணைகூர்ந்த
வொருதிருவிளையாட்டாலேபத்தியினுறுதிநோக்கித்
திருவருள்புரிவானெண்ணியிதுதிருவுள்ளஞ்செய்தார். உகசு

இறைவன்கம்பாநதிவரவிடுதல்.

விழுமியவண்டத்துள்ளும்புறத்தினும்விரவுந்தீர்த்த
முழுவதுமொருங்குநண்ணமுன்னினர்முன்னலோடு
மொழுகுநீர்க்கம்பையாற்றினுடன்பிராய்க்கடைக்கால்வெள்ள
மெழுவதுகடுப்பவெல்லாப்புனலும்வந்திறுத்தவன்றே. உகஎ

கொச்சகக்கலிப்பா.

மிடைவானவர்திசைகாவலர்புவிமேலவர்காணாஉக்
கடைநாளணுகிற்றெனவெருவிக்கலுழ்கண்ணீ
ரிடையாறெனவிரவக்கொடுவேகத்தொடுமெய்வெப்,
புடைநீர்களுமுடனாகியகம்பைப்புனல்வருமால். உகஅ

படலைக்கருமுகிலும்மிடையிடையேபடரொளிசேர்
தொடலைக்கதிருடுவுந்துவளுறுபாசடைவிரவு
மிடையிற்றிகழ்மலரும்மெனவிலகக்கானமுழுட்
படமிக்கெழுபரவைப்புனல்பயமுற்றிடவருமால். உகசு

அடிநேடியதிருமாலெனவிருமாநிலமகழு
முடிநேடியமலரோனெனவின்மேற்செலமுடுகுங்
கடவாமுரணிருவோரெதிர்கனலாயெழுமுருவ
முடையானெனவிரைசெல்புனல்வீழ்மேலுறநிலையும். உஎ0

வாழைக்கனிபலவின்கனிமாவின்கனிநெடிய
தாழைக்கனியகிலகுங்குமநிறைசந்தனமலர்தேன்
வேழத்துணிமுதலின்னனகொடுமேவலினுமையா
ளூழிற்புரிபூசைக்குரியவையுய்ப்பவருறழும். உஎக

இருபாலினுமணிதங்கியவிருகோடுபடைத்து
வெருவார்களும்வெருவித்துயர்மேவத்தவவுரறி
மருவார்குழலுமையச்சுறவரலாலுயர்கம்பை
பெருமானெதிர்பண்டெய்தியபெருவேழமுநிகரும். உஎஉ

இறைவிஇறைவனைத்தழுவிக்கொள்ளல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மலைபடுவளங்கள்வாரிமணிபலவரன்றிப்பொங்கி
யலையெறிந்திலைத்துவிம்மிவிசும்பெலாமடைத்துப்பம்பித்
தலைவருவெள்ளந்தன்னைத்தடவரைபயந்ததிங்கட்
கலைநிறைவதனத்தேவிகாண்டலும்வெருஉக்கொண்டாளால்.

புடையுறுமிகுளைமாரும்பொள்ளெனவச்சம்பூப்பத்
தடைபடாதணுகுநீத்தந்தனையெதிர்நோக்கிநோக்கிக்
கடல்கிளர்ந்தனையவெள்ளங்காரணமின்றியென்னே
விடையவன்பூசைதாப்பன்மேவியவாறென்றெண்ணி. உஎ[illegible]

என்னுடைத்தீங்குதன்றற்பூசனைக்கிடையூறாகத்
துன்னியதிதுவாமென்றுசொல்லருங்கவலைகூர்ந்து
சென்னியின்மதியம்வைத்தார்திருவடியிதயத்தெண்ணு
முன்னாப்பெருநீர்வெள்ளமுடுகிவந்தடுத்ததாக. கூஎரு

துன்புறநோக்கிநெஞ்சந்துண்ணெனத்துளங்கியாவா
வும்பர்வான்றடவிச்செல்லுமொப்பரும்பெருநீர்வெள்ள
மெம்பிரான்மிசையேநண்ணுமினிச்செய்வதென்னேயென்று
தம்பிராணர்பாலன்புதழைந்தெழுமுள்ளத்தோடும். கூஎசா

அட்டொளிப்பசும்பொன்மேனிவடிவெலாமதிர்ப்புக்காட்டப்
பொட்டணிநுதலின்பாங்கர்க்குறுவெயர்த்திவலைபூப்ப
மொட்டிளமுலையிற்றாங்குமுத்தொளிவடங்களாட
விட்டிடைவருந்திச்சாலவிறுமெனத்துவண்டுவாட. கூஎஎ

கூந்தலினறவந்தோய்ந்தகுருமலர்ச்சுரும்பரார்ப்ப
வேந்தகலலகுற்சூழ்ந்தவெரிமணிப்பருமமார்ப்பச்
சேந்தொளிபிலிற்றுஞ்செம்பொற்கிண்கிணிசிலம்போடார்ப்பக்
காந்துபொற்கடகக்கையிற்கதிர்வளைகுலங்களார்ப்ப. கூஎஅ

ஒருகொடியெழுந்துசெம்பொனுயர்வரைக்குவடுதன்னை
யிருகொழுந்திருபாற்போக்கித்தழீஇயெனவெழுந்துவல்லே
முருகலர்வேதியும்பர்த்கன்வலமுழந்தாளூன்றிக
கருமணிப்பாவையன்னாள்கணவரைத்தழுவிக்கொண்டாள். கூஎகூ

இறைவன்இறைவியின்சுவடுபெறல்.

மணிமுலைக்குவட்டினோடுவளைக்கையானெருக்கிப்புல்லித்
தணிவருங்காதல்விம்மக்காதலிதழுவலோடுந்
திணியிருளறுக்குஞ்சோதித்திருவுருககுழைந்துகாட்டி
யணிவளைத்தழுமபினோடுமுலைச்சுவடணிந்தாரையர். கூஅ0

கலிவிருத்தம்.

வற்றிநின்றருந்தவமுயன்றுபன்மறை
கற்றவருணர்வையுங்கடந்தபேரொளி
சிற்றிடைத்திருந்திழைத்தேவிவால்வளைப்
பொற்றழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. கூஅக

உருவருவனுமலையுண்மையின்மைமற்
றிருளொளியன்றிநின்றிலகுபேரொளி
மருமலர்க்கருங்குழன்மங்கைவாலவளைப்
பொருதழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. கூஅஉ

பெருவிரலளவையினுளத்திற்பேணிநின்
றுருவுயிர்முழுவதுமாட்டுமொள்ளொளி
யருள்பொழிகுறுநகையணங்குவால்வளைப்
புரிதழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. கூஅகூ

உயிர்ப்பினையொடுக்கியேவிழித்துறங்குவோ
ரயர்ச்சியிலகக்கணேக்குமாரொளி
குயிற்பெடைச்சின்மொழியிறைவிகோல்வளைப்
புயத்தழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. கூஅச

என்றுமோரியல்பினிற்பகலிராவற
நின்றவரன்பினுக்கணியநீளொளி
மென்றளிர்ச்சீறடிவிமலைகைவளைக்
கொன்றழும்பொடுமுலைச்சுவடுகொண்டதே. கஅரு

மனத்திடைத்தனதடிநினைந்தமாத்திரை
வினைப்பெரும்பிறவிவேரகழுமெய்யொளி
யனைத்துலகீன்றருளமலைபல்வளை
யினத்தழும்பொடுமுலைச்சுவடுமேற்றதே. கஅசு

வடவரைகுழைத்ததோர்பவளமால்வரை
முடிவொடுமுதலிலாமரவின்மூலத்து
மடநடையிளங்கொடிவளைகரத்தொடு
குடமுலைக்கம்மவோகுழைந்துமெல்கிற்றே. கஅஎ

தேவராதியோர்ஒருங்கணைந்துபோற்றல்.

கலிநிலைத்துறை.

அம்பொன்வால்வளைத்தழும்பொடுமுலைச்சுவடணிந்து
கம்பவைப்புடைவாழ்மனையார்திருணைகூர்ந்தருளி
நம்புமோகையிற்பெருங்களிசிறந்தனுருவமாய்ந்
தும்பரிம்பரினுயிரெலாமுவகையிற்களித்த. கஅஅ

திக்கும்வானமுமம்பரத்திகழ்ந்தொளிபடைத்த
தக்கபலவியமெண்ணிலதழங்கினவிளங்கால்
புக்குமெல்லெனப்புதுமணமகொணர்ந்தசைந்த
விக்கடற்பெரும்புவியெலாமடங்கனதுகள்கள். கஅகூ

மந்திரத்தழல்வலஞ்சுழித்தெழுந்தொளிதிகழ்ந்த
சுந்தரப்பொலம்பூமழைநிரந்தரஞ்சொரிந்த
சந்தமாமறைத்தனித்தனிமகிழ்ந்தெழுந்தார்த்த
வெந்தவையமுமயலிடையின்றியோங்கினவால். ககூ0

எங்குமின்னணிகூழ்வுழியிருமதக்கலுழித்
துங்கவெண்கரிக்கோமுதல்சுராசுரரெல்லாந்
தங்களின்றுணைக்கிழத்தியர்தம்மொடும்வல்லை
யங்கணைந்தனரகநிறையுவகைமீக்கிளைப்ப. ககூக

புண்டரீகமென்பொகுட்டணைக்கடவுளும்புதுப்பூந்
தண்டுழாய்முடித்தனிப்பெருந்தலைவனுமிருகேழ்
முண்டகத்துறைமுதல்வியர்தமையுடன்கொண்டு
மண்டுபேரின்பங்கிடைத்ததின்றெமக்கெனவந்தார். ககூஉ

சேர்திநாரதன்முதல்சுரர்முனிவரும்வசிட்ட
ஞதியாயபல்பிரமஙன்முனிவருமளவில்
காதன்முந்துறுகளிப்பொடுங்குழாங்கொடுகரத்தின்
மீதுதண்டமும்வேணியும்விளங்கவந்தடைந்தார். ககூக

சத்திமார்திதியதிதிமற்றுறுதக்கன்மக்க
ளொத்தயோகினிப்பகுதியாருந்ததியுலோபா
மூத்திரைத்திருந்திழையனசூயையேமுதலா
மித்திறத்தவர்யாவருமகிழ்துவந்திறுத்தார். ககூச

சனகனுதியர்தமிழ்முனிதவத்துருவாசர்
முனிவர்சூழுபமன்னியன்முதுதிறற்பூதர்
நனிபூருத்திரர்களுதிபர்நந்தியெம்பெருமா
னினையர்யாவருமாயிடையொருங்குவந்திறுத்தார். க௬௫

நண்ணியாவருநாயகிதழுவிடக்குழைந்த
வண்ணலார்திருக்கோலநேர்கண்டுகணடார்த்தார்
விண்ணிறைந்தபேரானந்தவெள்ளத்தினிறைந்தார்
கண்ணினுற்பெறுபெரும்பயன்கைவரப்பெற்றூர். க௬௬

அலர்ந்தவாள்விழியின்பநீர்சொரியநின்றழுதார்
மலர்ந்தகாதலின்வடிவெலாம்புளகங்கணமலிந்தார்
கலந்தசிந்தையாரருட்பெருங்கருணையேநோக்கிப்
புலந்தழைத்திடச்சென்னிமேலஞ்சலிபுனைந்தார். க௬௭

ஆயிரங்கதிராழியங்கடவுளுமயனு
மாயிரம்விழிபெற்றிலேமென்றழுங்கினர்க
ளாயிரம்விழியுடனமுழுதாளியுமமையா
வாயிரங்கணிவ்வற்புதங்காண்பதற்கென்றூன். க௬அ

இன்னதன்மையின்யாவருந்தொழுதெழுந்தாடி
மன்னுமேழ்கடன்முழகெனப்பழிச்சினர்வாழ்ந்தா
ரன்னவர்க்கவணிகழ்ந்தபேரானந்தமிதழிச்
சென்னியாரன்றிமறறெவர்தெளிதரற்பாலார் க௬௯

ஏகம்பர்காட்சிகொடுத்தல்.

அந்தவேலையினிறைவிதனணிவளைததழும்பு
சந்தமென்முலைச்சுவடுதோய்தனியுருபபொலியச்
சுந்தரந்திகழ்சுடரொளியிலியகததினின்று
முந்துதோன்றினர்மூவருககறிவருமுதலவர். ௨௦௦

தோன்றிவாணிலாகுறுநகைதோற்றிமீக்கடுக
வேன்றவெளளநீர்சறுவதீர்த்தபபெயரிசையான்
மான்றுமேதகநிறுவினர்மாதினைதழீஇககொண
டான்றகாதலாற்செயயவாய்முததமுணடளிததார். ௨௦௧

தோகைமஞ்ஞையஞ்சாயலாய்துளங்கியுளவெருவே
லோகையுறறனஙகாண்டிநீயென்றுரைததருள
வாகையேற்றினர்தம்மணவாளநற்கோல
மேகநாயகிநோககினளிணைவிழிகளிப்ப. ௨௦௨

தழீஇயகைகளைவிடுதெழுநதவனியிற்றாழ்ந்து
குழீஇயவன்பினலஞ்சலிசென்னிமேற்குவித்தாள்
கழீஇயசெம்மணிவடிவினைககாண்டொறுமுலவாக்
கெழீஇயகாதலாற்கிளர்ந்தெழுமுவகையிற்றிளைத்தாள். ௨௦௩

இறைவிதோத்திரஞ்செய்தல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கொடியுவன்பிரமன்காணுநின்மலக்கொழுந்தேபோற்றி
படியுனைற்கபயகல்குமருட்பெருங்கடலேபோற்றி
படிமுதலாறுகிவேறுமாம்பரனேபோற்றி
[illegible] ௨௦௪

பெறலரும்பெரும்பேறின்றுபெற்றனனடியேன்போற்றி
முறைமுறையுலகமெல்லாமுகிழ்த்தளித்தழிப்பாய்போற்றி
யறைகழல்கறங்கமன்றினின்றொழிலடித்தாய்போற்றி
நிறைமலர்த்தனிமாநீழனிர்த்தனேபோற்றிபோற்றி. சo௬

தரைபுனலிரவியிந்துதழலுயிர்வளிவானென்று
வுரைபெறுவடிவோரெட்டுமுடையனேபோற்றிபோற்றி
வரையெழும்பரிதிசெந்தீமதியமைவிழியாய்போற்றி
விரைமலர்த்தனிமாநீழல்வித்தகாபோற்றிபோற்றி. சoஎ

கறைமணிமிடற்றாய்போற்றிகண்ணினுண்மணியேபோற்றி
மறவியின்வழிபட்டோர்க்கும்வழங்குபேரருளாய்போற்றி
நிறைபரஞ்சுடரேபோற்றிநெஞ்சகவிளக்கேபோற்றி
மறைமுதற்றனிமாநீழலவள்ளலேபோற்றிபோற்றி. சoஅ

முன்னுறுபொருள்கட்கெல்லாமுற்படுபழையாய்போற்றி
பின்னுறுபொருள்கட்கெல்லாம்பிற்படுபுதியாய்போற்றி
புன்மதியாளர்தேருப்பூரணமுதலேபோற்றி
சின்மயத்திருவேகம்பசிவசிவபோற்றிபோற்றி. சoகூ

இறைவன்இறைவிக்குக்கூறல்.

கொச்சககலிப்பா.

என்றுளநெக்குருகியெல்லையிலன்பினளாய்
மன்றன்மலர்த்தொடையலவார்குழல்போற்றிசெயக்
கொன்றைமுடிச்சடையார்பேரருள்கூர்ந்தருளித்
துன்றியகேண்மையினுன்மற்றிதுசொல்லினரால். சoக

பொங்கிமணங்கமழப்பூசுநறுங்களப
மங்கலமென்முலையாய்காளிமகிழ்ந்திதுகே
ளங்கணினின்னொடுநாம்வேறலமாரமுதத்
திங்களும்வெண்ணிலவும்போலுமெனத்திகழ்வேம். சகo

இலளிதையாம்பெயரான்முன்னிவணெம்முருவிற்
பலர்தொழவந்துலகம்பங்கயனுதியெலா
மலர்தரநல்கினைபின்மற்றொருகற்பமதிற்
சலமறுமெய்ஞ்ஞானசத்தியிலீங்கியரோ. சகக

அந்தணனுக்கருளியாகியதுப்புதவிக
கந்தமலர்க்கடவுள்கான்முளைதன்மகளாய்
நிந்தனைசெய்தவனைநீத்துவரைக்கிறைபால்
வந்துமறித்துமெம்மையன்பின்மணந்தனையால். சகஉ

இத்தகுநீயுலகம்யாவையுமுய்யுமுறை
யித்தனிமந்தரமேல்யாமருளாற்றினிலேஇப்
பொய்த்திறனில்கழுவாயின்றுபுரிந்தனையாற்
கொத்தலர்மென்குழலாய்வேட்டதுகூறுகென. சகங

இறைவிவரம்பலவேண்டல்.

வன்றனிமால்விடையாய்மந்தரம்வண்கயிலை
வென்றவினைச்சிவலோகத்தினுமேதகவுந்
றென்றுநமக்கினிதாமிந்நகராதலினிந்
கொன்றுமவர்களுமுத்தியுறப்பணியாய். சகச

மறந்துமறம்பிறழாக்காஞ்சிவளம்பதியி
னறிந்துசெய்தீவினையுமன்றியெழுந்தனவும்
பிறிந்துதவப்பயனென்றெண்ணிலவாய்ப்பெருகி
யறம்பொருளின்பமெலாமாகவுநீயருளாய். சகரு

இங்கிவைவேண்டுமெனக்கெம்பெருமானெனமீப்
பொங்குபெருங்கருணைப்பூரணிவேண்டுதலுஞ்
சங்கணிவெண்குழையார்தந்திருவுள்ளமகிழ்ந்
தங்கலுழ்மேனியினாய்கேளிதுவென்றருள்வார். சகசு

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எய்சிலைநீள்புருவத்தேந்திளமென்முலையாயெம்மிடையெம்மடியார் தம்மிடையெய்தலுறச், செய்பிழையன்றிவருந்தீவினையேனையெலாஞ்சீர் வளர்காஞ்சியினிற்றேய்ந்துதவம்பெருகி, மெய்திகழ்நாற்பயனுமேவநிறி இயினமால்வேறுமுனக்கினியென்வேண்டுவதென்றிடலு, மொய்யொளி மேனியினாண்முன்றொழுதேத்தியிளமூரன் முகத்தலரப்பேசுதலுற்றன ளால்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முதுகுடுமிப்பொலங்குவட்டுமந்தரத்தின்முன்னரெனைக்காளியென்று
புதுமையுற்விளித்தனையாலதுகேட்டதுண்டிலைபோலிருந்தேனந்நா
ளிதுபொழுதுமிவ்வாறேவிளித்தருளிச்செய்தாய்மற்றிதனைமாற்றி
விதுவணியுஞ்சடையானேகவுரநிறம்பெறவேண்டுமருளாயென்றாள்.

ஆண்டகையாரதுகேளாக்குறுமூரன்முகத்தரும்பவருளிச்செய்வார்
மாண்டவலித்தயித்தியராலலைப்புண்டதிவ்வுலகம்வாழ்வானெண்ணி
யீண்டுமுனையவ்வாறுவிளித்தேமிக்கருங்கோசமின்னேமாற்றி
வேண்டியவாகவுரநிறம்பெறுதிநீவிண்டிடுமக்கோசந்தன்னில்.

கூற்றமுறழ்சும்பனையுநிசும்பனையுங்கொலைசெய்யக்குறுகாருட்கத்
தோற்றுதிறற்கவுசிகியாந்துர்க்கையினிததோன்றுமிதோகாண்டியென்றார்
கோற்றொடியுமக்கணமேவரியரவின்மூதுரிபோற்காளமேனி
மாற்றினாண்மணிக்கவுரவுருப்பெற்றாள்காதலரைவணங்கிச்சொல்வாள்.

நாதனேநின்னருளாலிப்பொழுதேநவைககாளவடிவமாற்றிக்
காதல்புரிகவுரியெனவயங்குற்றேனுதலினிக்காஞ்சிமாடே
மாதரொடுவானவர்தங்குழாநெருங்கப்பனிவரையினிகழ்ந்தவண்ண
மேதகையகடிமன்றலெமக்கிந்நாளுண்டாகவிழைகினறேனல்.

உருத்திரர்கள்கணநாதர்பலவேறுகடவுளர்களுவணவூர்தி
மருத்தமலரணைப்புத்தேளிந்தவித்தமாதவர்மற்றுள்ளோர்யாருங்
கருத்துவகையுறத்தத்தம்பன்னிகளோடிங்கெம்மைக்கண்ணிற்காணு
மருத்தியினாலொருங்கணைந்தாரண்ணலேயருளென்றுபின்னும்வேண்டும்

இவ்வதுவைகவுரிதிருக்கலியாணமென்றுலகின்வழங்கவேண்டுஞ்
செவ்வியுறவையாட்டைக்கன்னியெனயானீங்குச்சிறந்தவாற்றாற்
பௌவநீரகல்வரைப்பிற்பைப்பாந்தண்மணியல்குற்பணைத்தோண்மாத
ரெவ்வெவருமையாண்டிற்கன்னியர்கள்கவுரியரென்றுதல்வேண்டும்.

ஏராளுமையாண்டிற்கன்னியரைச்சைவநெறிமறையோர்க்கீயுஞ்
சீராளர்குலமுதலோர்சிவலோகந்தனிற்சிவணப்பெறவும்வேண்டுங்
காராளுமணிமிடற்றாயெனத்தொழுதுவணங்குதலுங்காமற்காய்ந்த
பேராளர்திருவுள்ளஞ்செய்தருளிப்பெருங்கருணைகூர்ந்துசொல்வார்.

இறைவனிறைவிக்கதனல்.

திருத்தகுவண்காஞ்சிதனிலாண்டுதொறும்பங்குனியுத்திரநாள்யார்க்கு
மருத்திபுரிதிருவிழாநிகழ்ந்திற்றின்வதுவைநமக்கமைவதாகப் [வக்
பொருத்தமுறக்காண்டியெனத்தமிழ்முனிக்கன்றருள்புரிந்தேமதனுற்பா
கருத்துடைக்கும்பிலத்தயலேயாண்டுதொறுங்கடிநமக்குநிகழ்வதாக.

கல்யாணமண்டபத்தினனக்குரிமைத்தொழின்மறையோர்கன்னிசெய்ய
வெல்லாருமிதுகண்டுகளிப்புறுகவின்னுமுனக்காண்டுதோறு
நல்வாய்மையறம்வளர்க்கும்வித்தாநெல்லிருநாழிதருகேமந்த
நெல்லாலேயிகபரத்துமுயிர்ப்பைங்கூழ்தழைகவெனவிறுவல்செய்தார்.

அவ்வண்ணம்பெறலரியபெருவரங்களளித்தருளியகிலமீன்ற
மைவண்ணக்கருங்கூந்தன்மனக்கருத்துமுற்றநெடுமலயவாழ்க்கை
மெய்வண்ணக்குறுமுனிவன்றவப்பேறுநிரம்பவியனுலகம்வாழச்
செவ்வண்ணப்பெருமானார்மணவினையிற்றிருவுள்ளம்பற்றினரால்.

தழுவக்குழைந்தபடலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - உசசகூ

---

# ௬௦ திருமணப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விண்டாழ்மாவின்மூலத்தெழுந்தவிமலனுந்தந்திருமேனி
தண்டாவன்பினுமையம்மைதழுவக்குழைந்தவாறுரைத்தா
மண்டாணவத்தின்றருக்கிரித்துமாறாவின்பப்பெருவாழ்வு
கண்டார்களதுவவருள்கொழிக்குங்கவுரிமணத்தின்றிறம்புகல்வாம். க

இறைவன்கட்டளைப்படிவிண்டுபணிசெயல்.

திருவேகம்பத்தமர்ந்தருளுந்தேவர்பிரானார்புடைநின்ற
மருவார்துளபத்தொடைமவுலிமாயோன்றன்னையெதிர்நோக்கிக்
கருவார்கூந்தற்றடங்காமக்கண்ணிதனக்குமற்றெமக்கும்
பெருவாய்மையினுற்கடிவிழாத்திருநாள்பிறங்கப்புரிகென்றார். உ

பல்லார்நிற்பத்தனைநோக்கிப்பணித்தகருணைத்திறம்போற்றிப்
புல்லார்வெருவுந்தனித்திகிரிப்புத்தேளோகைதலைசிறப்பச்
சொல்லாற்றெழுகிமணவெழுச்சித்தொழிலின்மூண்டுவேண்டுவன
வெல்லாப்பொருளுங்கடிதீங்குக்கொணாகென்றிமையோரைவிடுத்தான். ௩

தொடியார்தழும்பிற்பெருந்தகைக்குந்தோகைதனக்குங்கலியாணங்
கடிமாநகரமுழுதறியக்கறங்குமுரசமறைவித்துக்
கொடிநீண்மாடமாளிகைசூழ்கடிமண்டபமுன்கோடிப்ப
நெடுமால்விசும்பின்யவனரைக்கூய்ப்பணித்தானவருநிருமித்தார். ௪

கலியாணமண்டபவலங்காரம்.

கலிவிருத்தம்.

அகனிலம்பசும்பொனினமைத்தொராயிரப்
பகலொளிமழுங்குசெம்பவளத்தூணிரீஇ
யுகுமொளிமரகதப்போதியும்பர்வைத்
திகலறவயிரவுத்திரமுமேய்வித்தார். ௫

உருக்கியசெழும்பொனின்மணிகளொன்பது
நெருக்குறப்பரப்பியோவியநிகழ்த்திய
திருக்கிளர்பலகைமேலிணக்கித்தெள்ளொளி
பெருக்கும்வெண்பளிங்கினுற்பித்தியாக்கினுர். ௬

மேனிலைமாளிகைவேதிகுளிகை
யேனவும்பலபலவியற்றிமேவர
வானெழுமிருசுடர்மணிகளாதியா
லூனமில்சிகரமுழும்பர்ச்சூட்டினுர். ௭

காவியங்கண்ணியுர்விழையுங்காமுக
ராவியுஞ்சிந்தையுமழியவேக்கற
வோவியத்தொகையெலாமும்பர்மாதர்போற்
பாவியல்பாடலிற்பயிலச்செய்தனர். ௮

வரையினின்றிழிதருமாலைவெள்ளநீ
ரருவியென்றயிர்ப்புறவலங்குநித்திலக்
குருமணிவடமொளிகொழிக்குஞ்சுற்றெலா
நிரைநிரையாத்துமண்ணீவநாற்றினுர். ௯

மணிவடக்கிடையிடைமறுவில்கணணடி
தணிவறவொளிவிடுந்தவளச்சாமரை
பிணிமலர்த்தொத்துவண்பிரசப்பல்கனி
யணிபெறுமுறைமையினலங்கத்தூக்கினுர். ௧௦

நெட்டிலைக்கதலியுநீலப்பூகமு
மட்டுமிழ்கன்னலும்வானிற்ருருவும்
விட்டொளியெரித்திருள்விழுங்குதூண்டொறுங்
கட்டினர்மலர்கனிகாய்களீனவே. ௧௧

கொடிகளுந்தாருவுங்கோணைப்பொய்கையும்
வடிவுடைக்கிளிபுருமஞ்ஞையுமற்றவுஞ்
சுடர்பலநிறங்களுந்தொகுத்துலேகித்த
விடுகதிர்ப்பட்டினுல்விதானஞ்செய்தனர். ௧௨

முத்தொளிமாலையுமூரிப்பன்மணிச்
சித்திரமாலையுஞ்செம்பொனுற்செயுந்
தத்தொளிமாலையுந்ததைந்துவண்டுலாந்
தொத்தலர்மாலையுந்துவன்றத்தூக்கினுர். ௧௩

நாப்பணினெம்பிரானங்கையோடுறை
பூப்பொலிமணியணைபொருத்திப்பாங்கெலா
மூப்புடைவிண்ணவர்முனிவர்வைகிட
வேற்புடையணைகளுமிட்டுவைத்தனர். ௧௪

குண்டமும்வேதியுங்கோலமார்தரு
மண்டிலவகைமையுமற்றுமேர்பெற
விண்டவர்புரமடும்விமலர்தான்முறை
பண்டருமுனிவருமயிர்ப்புச்செய்தனர் ௧௫

கொங்குயிர்சந்தனக்குறடுகொழுகில்
குங்குமங்கருப்புரங்குரவமான்மதம்
வெங்கடிகமழ்தரப்புகைத்துமேதக
வெங்கணுமையவிசிதறியோர்செய்தார். கசு

பாங்கெலாம்பனிமலர்ப்பந்தர்கட்பொறி
வாங்கியவெழிலபெறவகுத்துமாமணம்
வீங்கியநானநீர்துவற்றிநித்தில
மாங்கவாலுகமெனவகமபரப்பினார். கஎ

பந்தரின்புடையெலாமபங்கயப்புன
லந்தராராட்டயரலங்கற்பொய்கையுஞ்
சந்தனங்கற்பகந்தருக்கண்மலகிய
சுந்தரப்பொழில்களுந்துவன்றமைசெய்தனர். கஅ

வேறு.

யவனர்தந்தொழிலின்றிறமைக்கமுங்
கவுரிமனைறலெனக்கசப்பகுமபனைர்
சிவமலிந்தசெழுங்குரலைக்கோட்டது
முவகைபூத்தனரானைனைமாகத்தே. ககூ

நகராலங்காரஞ் செய்தல்.

இயங்குமாந்தர்நெருக்கினிலிற்றுவீழ்ந்
தயங்குகாழ்களுந்தாரும்பலவியின்
முயங்குமாதருகுத்தவுமாயப்பித்தாளி
வயங்குவீதியிற்குப்பைகண்மாற்றுவார். உ0

சந்தமலகுதமனியச்சுண்ணமுஞ்
சுந்தரககருப்பூரத்துகள்களுங்
கந்தநீரிற்கரைத்துமறுகெலாம்
பந்திஞாட்டிப்பனிப்பர்களொன்பவே. உக

வண்டுலாமலர்யார்மணிப்பந்தரு
விண்டுறாவுபதாகையும்வின்மணி
கொண்டதோரணக்கூட்டமும்யாணரிற்
பண்டையுள்ளனபாற்றியியற்றுவார். உஉ

தாமநாற்றிருதமணியவேதியிற்
பூமெனீர்நிறைபூரணகும்பமுங்
காமர்பாலிகையுங்கதிர்த்திபமுந்
தூமமுந்தொகுப்பாரிடந்தோறுமே. உங

நித்திலத்திணைநீற்றுபுவேதியிற்
சித்திரித்துச்செழும்பொனின்பாளிகைப்
பித்தியோவியம்பெட்பப்புதுக்குவார்
பத்திமாடம்பழுதொழித்தாக்குவார். உச

இருகவுட்டுளையீர்ங்கலுழிக்கடக்
கரிகள்பண்ணுவர்காலவிசைத்தோடுவாம்
பரிகள்பண்ணுவர்பார்குழியாழியி
னிரதம்பண்ணுவரெங்கணுமெண்ணிலார். உரு

நீண்டபொன்னிலைத்தேர்கணிறுத்துவார்
மாண்டதூண்டொறும்வாருறைசேர்த்துவா
ரீண்டுவார்கட்கிடம்பலவாக்குவார்
வேண்டியார்க்கும்விருந்துதிருத்துவார். உ௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கச்சிமாநகர்முழுவதுமின்னணங்கவின்பயில்சிறப்போங்க
முச்சகத்தவர்குழாங்கொடுவையின்ருறுநிறைந்திடமுடிவானே
ரிச்சையாற்றினின்மணவினைக்குரியவையெங்கணுங்கொணர்ந்தீண்டப்
பொச்சமில்பெருமங்கலத்துழனியிற்பொலிவுறுமதுகாலை. உஎ

விண்டுதிருவிழாவியற்றல்.

கம்பநாயகன்றிருவருள்பெற்றுவெண்கதிர்வளைக்கரத்தோன்ற
லம்புயத்தவன்முனிவரர்தம்மொடுமெணிபெறுநன்னாளாற்
செம்பொன்மாமணிப்பாலிகைமுளைவித்திச்சினவிடைக்கொடியேற்றி
யெம்பிரான்மலைமாதுடனுலாத்தருந்திருவிழாவெழுவித்தான். உ௮

ஒன்பதிற்றுநாள்விழாவணிநிகழ்ந்தபினுற்றவீரைந்தாநா
ளின்பமீக்கொளப்பங்குனியுத்திரத்திமையவர்குழாத்தோடு
மன்பதைத்திரண்மகிழ்ந்தெழுந்தார்ப்புறமணவினைக்கவின்கொள்வா
னென்பணிப்பிரான்மஞ்சனச்சாலையினினிதெழுந்தருளுற்றான். உ௯

இறைவன்மணக்கோலங்கோளல்.

வேறு.

திருத்துயிலகலப்புத்தேள்செய்தவப்பேறுவாய்த்து
மருத்தபூங்கடுக்கைவேணிப்பரஞ்சுடர்வடிவந்தீண்டிப்
பெருத்தபொற்குடத்துத்தெண்ணீர்மஞ்சனம்பிறவுமாட்டி
யருத்திகூரான்பினுண்ணூலறுவையொற்றுடைசாத்தி. ௩0

கற்பகமளிப்பவாய்ந்தகைபுனைந்தியற்றல்செல்லா
வெற்படுநுழைநூற்பட்டினிலங்கவுள்ளாடைசாத்தி
யற்பகவிமைக்குஞ்செம்பொனுடைமற்றதன்மேற்காமர்
விற்படுபுருவமாதர்விழியிணைகவரச்சாத்தி. ௩௧

தனிவிரைப்பனிநீர்வாக்கித்தேய்த்தசந்தீனப்பூஞ்சேறு
நனிமணம்பயில்கற்பூரங்குங்குமநறுங்கத்தூரி
யினியமான்மதமேமற்றுமட்டித்தகலவையெண்டோட்
கனிமொழிபாகன்மேனிகமழ்தரமெழுகிக்கீறி. ௩உ

சுடர்ததிருமேருவெற்பிற்சூன்றனர்நுண்ணிதாகப்
பொடித்தபொற்சுண்ணந்தெய்வப்பூந்தருமலரின்வாங்குங்
கடித்திரட்சுண்ணத்தாதிற்கலந்துமேலட்டிவாச
மடுத்தெழுந்தூமமீரம்வறலுமாறன்பினேற்றி. ௩௩

அரிக்குரற்சிலம்புபோற்றுமடியவர்மலங்கண்மூன்று
மிரிக்குஞ்செங்கமலப்பாதத்திணக்கிவல்லிருளையெல்லாம்
பொரிக்கும்விற்பிழம்புகாலும்பொலங்கழனரலவீக்கிப்
பரிக்கும்பட்டுடைமேலொண்கல்பதித்தபொன்னரைநாண்சாத்தி.

கதிருமிழ்பதுமராகவுதரபந்தனங்கால்யாத்துப்
புதியநித்திலப்பூங்கோவைபொன்னரிமாலைதண்டா
ரெதிரறுசன்னவீரமிலைமுகப்பைம்பூண்முந்நூன்
முதலியமார்பின்வார்ந்துமுதிரொளியெறிப்பச்சாத்தி. ௩௫

மணிவடங்கழுத்திற்சாத்திவாள்கிடந்திமையாநிற்கும்
பணியுமிழ்மணியிற்செய்தவாழியல்விரலுங்கோத்துத்
திணிவயிரத்திற்செய்தகடகங்கூர்ப்பரத்துச்சேர்த்துத்
துணிகதிர்முத்திற்செய்தவங்கதந்தோளிற்பூட்டி. கசு

மாதர்வண்குழையுந்தோடும்வார்ந்திருபுயத்துநீவக்
காதிடையணிந்துசெம்பொற்கதிர்மணிப்பட்டநெற்றி
மீதுறவிசித்துத்தெய்வவிற்குலாமணியின்மோலி
போதமல்வேணிச்சென்னிபொலிதரக்கவித்தான்மன்னே. கஎ

திருவணியணிந்துபோற்றச்சிவபிரானெழுந்துகும்ப
மிருகயல்கவரிதோட்டியிலங்குகண்ணடிபதாகை
முரசொளிவிளக்கினோடுமுன்னிவிண்மகளிர்போற்றப்
புரிமணிமண்டபத்திற்புகுந்துபூந்தவிசினேறி. கஅ

உருத்திரர்முதலோரதத்தமொண்டவிசிருக்குமாறு
திருத்தகுகடைக்கணோக்கஞ்செய்துவீற்றிருந்தபின்னர்
விருத்துவண்டமிழ்தப்பாடலவிளரியாழ்முரன்றுசேக்கு
மருத்துழாய்ப்படலைத்தண்டார்வயங்கியமருமப்புத்தேள். கசு

இறைவிமணக்கோலங்கோளல்.

மனைக்குரிமரபின்வாசமலர்மகள்வதனநோக்கிக்
கனைக்கும்வண்டிமிழ்க்குமென்பூங்கருங்குழற்கவுரிமாதா
தனைக்கலன்றிருந்தப்பூட்டிநதமமெனவுரைத்தலோடுஞ்
சுனைக்கருநீலக்கணணாள்பெருங்களிதுளும்பசசென்றாள். சுo

உவளகவரைப்பினெல்லாவுபகரணமுங்கொண்டுற்றுப்
பவளநீள்பலகைமீதுபகிரண்டமுழுதுமீன்றாங்
துவளிடைக்கன்னியாகிதூநலங்கனிந்தகாம
ரவளைநன்கிருவிககூந்தலவிழ்த்துநெய்யள்ளிச்சாத்தி. சுக

நெல்லிநுண்விழுதுமஞ்சள்விழுதுமெய்நிரம்பப்பூசி
மல்குபேரன்புகூரவாசமுந்துவருமற்று
நல்லவைநயப்பச்சேர்த்திநறுவிரைத்தூநீராட்டி
யெல்லுமிழ்குழையாண்மேனியீர்ம்புலாலவறலவொற்றி. சுஉ

நனைமுறுக்கவிழ்பூங்கற்பகல்குபட்டாடைசாத்திப்
புனைமணித்தவிசினேற்றிப்பொருந்தலர்வெருவச்சீறு
முனைமதக்களிநல்யானைமூரிவெணகோட்டிற்செய்த
தனைநிகர்சீப்புக்கொண்டுதாழ்குழலொழுங்கநீவி. சுஙு

வம்புவிழ்நானம்பூசிமான்மதமகில்சந்தாதி
யம்புறப்புகைத்ததூமம்பரிமளங்கமழவூட்டி
யம்பொன்வாய்மகரந்தாழமண்ணுறுதளிர்ந்தபெண்ணைப்
பைம்பழமென்னமுச்சிபசும்பொன்வார்நாணிற்சேர்த்தி. சுச

நகுசுடர்முத்தமாலைக்கொத்துநான்றெருத்தினீவித்
திகழொளிவிரிப்பவங்கேழ்முச்சியிற்செருகிவாச
முகையவிழலங்கல்சூழ்ந்துமொய்கதிர்கைமாலை
தொகுமணிமாலைகூந்தற்பரப்பினிற்சுடரப்போக்கி. சுரு

ஒழுகொளிபரப்புந்தெய்வவுத்தியுமயிலுமிக்க
வழகுறவணிந்துநாப்பணைதுறுகீற்றின்வெய்யோன்
மழகதிர்கிடந்ததென்னவயங்குகுங்குமத்தூளட்டிப்
பொழிகதிர்மாசைப்பட்டம்பொலியவாணுதலில்வீக்கி. ௪௬

சிந்துரஞ்சேறுசெய்ததிருந்தெழிற்றிலகமிட்டுக்
கந்தமென்குவளைநோக்கினஞ்சனங்கவினத்தீட்டிக்
கொங்கொளிமுத்தினூசித்திருவணிகொளுவிக்காதி
னந்தழன்மணியின்றோடுமெவிர்கதிர்க்குழையுஞ்சாத்தி. ௪௭

விலகிவில்லுமிழுங்கட்டுவடத்தினைமிடற்றிற்சூழ்ந்து
நிலவுமிழ்மணியிற்செய்தவங்கதநெடுந்தோள்சாத்தி
யிலகொளிவாய்ந்தமுன்கைக்கடகமுந்தொடியுமேற்றி
யலர்கதிர்மோதிரங்கள்வார்விரலமையக்கோத்து. ௪௮

மிகக்கடிகமழ்ந்தசாந்தால்வெரிந்புறமெழுகிக்கையி
னகத்தினாலெழுதிச்சாலநறுவிரைக்களபச்சேறு
முகைத்தனம்புகையக்கொட்டி முருகுயிர்பூந்தாதப்பிப்
புகைத்துஞ்சாந்தாற்றிக்கொண்டுவீசியும்புலர்த்திப்பின்னர். ௪௯

நித்திலமாலைதுப்புநிரைத்தபூந்தொடைமாணிக்கக்
கொத்துறுதாமம்பச்சைக்கோப்பமைதெரியல்வேரித்
தொத்தலர்ப்பிணையல்செம்பொற்சுடர்விரிதொடலையேனைத்
தத்தொளிநீலக்கோதைதண்கதிரெறிப்பச்சாத்தி. ௫௦

எரிச்சிகையெழுவதென்னவிளங்கதிர்விரிக்கும்பைவா
யரிச்சிகைமணிகளாதியழகுறக்கோத்தகாழின்
விரிச்சிகைகலாபங்காஞ்சிமேகலைபருமமைந்துங்
கரிச்சிகைமதகத்துக்கடிதடம்புலம்பச்சாத்தி. ௫௧

அலம்புகிண்கிணிமின்காலுமவிர்பரியகஞ்செம்பொற்
சிலம்புபாடகமென்றின்னபுறவடிதிகழச்சாத்தி
நலம்புனைசெய்யபஞ்சினறுங்குழம்பலர்ந்தகஞ்ச
மிலம்படச்சிவந்ததாளினூட்டினளிறைஞ்சிநின்றாள். ௫௨

## இறைவி இறைவனிடம் எழுந்தமர்தல்.

கலிவிருத்தம்.

தூககுழலுமைதிருவடிவிற்றுன்னலான்
மாக்கவின்மிகுமணிவனப்புநோக்குதோ
றீக்கணமுரண்மலரேழையீதியா
னாக்கியவணிகொலென்றயிர்ப்புமேயினாள். ௫௩

விண்ணரமடந்தையர்பலரும்வேற்றடங்
கண்ணிணைகவர்பெருவனப்புக்காண்டொறு
மெண்ணருங்களிப்பினரெம்பிராட்டியைப்
புண்ணியச்சோபனம்புகன்றுவாழ்த்தினார். ௫௪

நங்கையுநறைகமழ்நளினப்பாவைதன்
பங்கயமலர்க்கரம்பற்றியாங்கெழுந்
தெங்கணுமலர்மழையிறைப்பவானவர்
மங்கலவாழ்த்தொலிமல்கப்போந்தனள். ௫௫

நிழலுமிழ்மணிக்குடை நீண்டகேதனந்
தழையொளிக்கவரிசாந்தாற்றியாதிய
மழைமதர்க்கண்ணரமகளிரேந்தியே
விழைதகுதொழின்முறைவிளைத்துடன்செல. ௫௬

பாவியவாடைமேனடந்துபைப்பய
மாவணிமணவினைமண்டபத்திடைப்
பூவணைமிசைப்பொலிபுனிதன்பாங்கரி
னேவியக்கொழுந்தெனவுற்றுவைகினள். ௫௭

திருமணம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருத்தகுமணைமேலண்ணலணங்குடன்றிகழநோக்கி
யுருத்திரர்முதலோர்யாருந்தொழுதெழுந்துவகைபூத்தார்
மருத்துழாயலங்கன்மார்பன்மலரடிவிளக்கப்புக்கான்
பெருத்தபல்லண்டமொன்றாய்ப்பிளந்தெனவியங்களார்த்த.

பொலம்புனைகரகத்தீம்பாலபூமகள்வணங்கிவார்ப்ப
வலம்புரிகரதனோயுமலரடிவிளக்கிப்போற்றி
யிலங்கொளிப்பட்டாலீரமெலமெனப்புலர்த்தியேந்து
மலங்கொளிப்பாததீர்த்தம்பருகினனுர்வங்கூர. ௫௯

கன்னனெய்கனிபாலின்னகமழ்மதுப்பருக்கநல்கி
யென்னையாளுடையகோமானேட விழ்கமலச்செங்கை
தன்மிசையுலகமீன்றதனிமுதற்பிராட்டியான
கன்னிகைவைத்துநீர்பெய்தளித்தனன்கமலக்கண்ணன். ௬0

கலிவிருத்தம்.

ஆர்த்தனபணிலங்களார்த்ததுந்துமி
யார்த்தனபலவியமார்த்தமங்கல
மார்த்தனநான்மறையார்த்தவாகம
மார்த்தனபல்கலையார்த்தவாழ்த்தொலி. ௬௧

பொழிந்தனர்வானவர்கற்பகப்பூமழை
வழிந்தனபாடலின்மதுரத்தேமழை
யிழிந்தனவடியவரிணைக்கணீர்மழை
யழிந்தனவினையெலாமனையகாலையின். ௬௨

பங்கயக்கிழவனைப்பகர்ந்தநான்முறை
செங்கனல்வளர்ப்பவங்கருளிச்சேவுடை
யங்கணன்மலைமகண்மிடற்றிலாருண்
மங்கலநாணினைவயங்கச்சாத்தினன். ௬௩

முண்டககடவுளுமுதல்வனுணையுட்
கொண்டுவேதாகமக்குறிவழாவகை
மண்டியகொழுங்கனலவளர்த்துவாசநெய்
மொண்டுதூய்க்கடிவினைமுற்றச்செய்தனன். ௬௪

மாண்டசெந்தமிழ்முனிமனககருத்தொடு
காண்டகுகவுரிதன்கருத்துமுற்றின
வேண்டியவேண்டியாங்களிக்குமெய்யரு
ளாண்டகைவிளக்கினன்போலுமற்றைநாள். ௬௫

கலிநிலைத்துறை.

திருமணத்திறங்கண்டவர்யாவருஞ்செழுந்தேன்
பருகுவண்டெனவானந்தவெள்ளத்திற்படிந்தா
ருருகியேத்தினர்கையிணையுச்சியிற்குவித்தா
ரிருகணீர்மழைத்தாரையின்மூழ்கியின்புற்றார். ௬௬

மலைக்கொடிக்குறுகவுரமெய்வடிவும்வள்ளலுக்கு
முலைச்சுவட்டொடுவளைத்தழும்பணியுமுன்னோக்கிச்
சிலைத்தடம்பனிவரைமிசைத்திகழ்மணக்கோல
நிலைக்குமற்றிதுவேற்றமிங்கெனநெடிதுவந்தார். ௬௭

அலகிலோகையிற்றிளைப்பவிப்பேறெமக்களித்த
மலையமாமுனிவாழியவாழியென்றுரைத்தார்
குலவுமங்கலம்பாடினராடினர்குழைந்தார்
தலைவிபாகனுமவரவர்தமக்கருள்வழங்கி. ௬௮

இறைவன்திருவுலாப்போதல்.

எட்டுமாதிரக்கரிகளுமுடலபனிப்பெய்த
நெட்டுயிர்ப்பெறிமதுகைவெள்விடைமிசைநீல
மட்டுலாங்குழன்மடவரலொடுமகிழ்ந்தேறிச்
சிட்டர்போற்றிடமறுகிடைத்திருவுலாப்போந்தான். ௬௯

பிளிறுவெம்மதயானையின்வெரிந்தலைபிணித்த
குளிறுவார்மணிமுரசொடுகொககரைமுழவ
மொளிறுமாமுடிவானவரியங்களுமொருங்கே
களிறுதாங்குமெண்டிசைகளுஞ்செவிடுறக்கறங்க. ௭0

வாணிகோன்பணிபானுகம்பப்பெயர்வயவன்
வாணிலாவளையாயிரம்வாயில்வைத்தூத
வாணனுமிரங்கரங்கொடுமணிமுழாமுழக்க
மாணமத்தளமாதவன்மத்தளமெழுப்ப. ௭௧

காமனோக்கியைமணம்புணர்காதலன்வந்தான்
பூமுலைச்சுவடணிந்தருள்புண்ணியன்வந்தான்
யாமெலாமுய்யவந்தவன்வந்தனனென்னுத்
தாமரித்திலச்சின்னமுங்காளமுந்தழங்க. ௭௨

கீதவேய்ங்குழல்யாழிசையெங்கணுங்கிளர
வேதவோசையுமாகமமுழக்கமும்விம்ம
மாதர்நாடகநூன்முறைமடந்தையர்நடிப்பப்
போதவிண்ணவர்பூமழைவியனிலம்போர்ப்ப. ௭௩

வீதிவாய்த்திருவிழாவணிதொழுதிடப்போந்த
பேதில்பேரிளம்பெண்முடிவாயபல்பருவ
மாதர்யாவருகாமெனுடுவளைகலைதோற்றுக்
காதல்வேள்சிலைப்பூங்கணைமாரியிற்குளிப்ப. ௭௪

புதியசாமரைவெண்குடைபூங்கொடிமிடைய
வெதிரில்கொள்கையினகர்வலங்கொண்டெழுந்தருளி
மதுரமென்மொழிமங்கலவாழ்த்தொலிமலியக்
கதியிலார்க்கெலாமின்னருட்காட்சிதந்தளித்து. ௭௫

இறைவன்தேவர்கட்குவரமருளல்.

மீண்டுகோயிலினுள்ளெழுந்தருளிமெல்லணைமேன்
மாண்டமெல்லியற்பனிவரையணங்கொடும்வைகி
யாண்டுநின்றமாலயன்முதல்யாரையுநோக்கி
யீண்டுநீர்வரம்வேண்டுவகொண்மினென்றிசைத்தான். எசு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருமுதுகுரவர்பாதமிமையவர்வணங்கியிந்தத்
திருமணங்காண்டலபெற்றேமுய்ந்தனந்திரைநீர்வைப்பின்
மருவினர்வதுவைசெய்யுமிடந்தொறுமன்னியாங்காங்
கிருநலமுதவல்வேண்டுமிவ்விருவிருமென்றார். எஎ

இவ்வரமளித்தேங்காஞ்சியிருநகர்காவல்பூண்டு
செவ்வனிக்குறைமினென்றுசிவபிரான்பணித்தலோடு
மவ்வருள்சென்னிமேற்கொண்டகமகிழ்ந்திமையோரெல்லாங்
கௌவைநீர்காஞ்சிமூதூர்காவல்கொண்டிருந்தாரங்கண். எஅ

அரந்தைதீர்கவுரிகூற்றிற்றோன்றியவணங்குமென்னே
வரைந்துகொண்டருண்மோவென்றுவணங்கிநின்றிரப்பவங்காட்
கரந்தைவார்சடையோன்மன்றன்மூடித்துநீகச்சிமூதூர்
புரந்திவணுறைதிதுற்காயென்றருளபுரியப்பெற்று. எகூ

கவுசிகேச்சரம்.

கன்னிகாப்பெனும்பேரெய்தக்கவுசிகிமடந்தைகாஞ்சிப்
பொன்னகர்காவல்பூண்டுபொங்கொளிகவுசிகேசன்
றன்னையங்கிருவிப்பூசைதழைத்தபோன்பிறுற்றி
யின்னறீர்ந்துலகமுய்யவிருந்தனளிருக்குநாளில். அ௦

சும்பனேநிசும்பனென்போருலகெலாந்துளக்கநோக்கி
யம்புயக்கடவுள்போந்தங்கன்னனுக்கியம்பிவேண்ட
வெம்பிரானருளாற்கன்னிவிந்தவெற்பெய்திவைகி
வெம்புவாளவுணர்தம்மைச்செகுத்துமீண்டினிதுவாழ்ந்தாள். அக

பகர்பெருவளஞ்சாலிந்தமன்றலேப்பண்புகூற
வகனமர்ந்தேத்தினோர்கள்கண்டவரறையக்கேட்டோர்
தகவுறநினைந்தோரெல்லாந்தையலார்மன்றலவாய்ந்து
புகலரும்பரமானந்தமன்றலும்பொருந்திவாழ்வார். அஉ

திருமணப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - உ௩௧௧.

---

## 61· விம்மிதப்படலம்.

---

கலிநிலைத்துறை.

சாமகண்டர்தம்மாணையாலகிலமுந்தழைப்பக்
காமநோக்கியெண்ணுன்கறங்கரிசறவளர்க்கு
நாமநீர்வயற்கச்சிமாநகர்வயினளவில்
சேமவிம்மிதமுள்ளனசிலவெடுத்திசைப்பாம். க

தெள்ளொளிக்கதிர்ப்பன்மணித்திரளெலாஞ்செறியப்
பள்ளநீர்க்கடலாகரமாகியபரிசின்
வெள்ளவேணியரருளினலற்புதவிளைவென்
றுள்ளவைக்கெலாமுறைவிடமாயதுகாஞ்சி. உ

பலவற்புதவிலிங்கம்.

தீண்டில்யாவையுஞ்செய்யபொன்னுக்குவதிறலின்
மாண்டசித்தர்களெண்ணிலர்வழிபடப்படுவ
வேண்டிலென்னவுமளிப்பனமெய்த்தவமுடையோர்
காண்டகும்பலவிலிங்கமக்கடிநகருளவால். ௩

ஒருதனிப்பொருளிருந்திறனுகியுவ்விரண்டு
மொருமையுற்றிடும்வியப்புமங்குள்ளதுவிரிக்கி
லொருபரம்பொருள்சிவனெடுசத்தியென்றிரண்டா
மொருமையுற்றிடுமுமையவள்கம்பரைத்தழுவி. ச

இருமையோர்பொருளெண்ணிலவாதலுமெண்ணில்
பொருள்களொன்றெனத்திகழ்தலுமுடைத்ததுபுகலி
னெருசிவச்சுடர்பற்பலவடிவுகொண்டுறையு
மருவுபன்மறையொருதனிமாவெனவயங்கும். ரு

பன்னிரண்டுவற்புதம்.

மற்றுமூன்றிடம்வேதிகைவயலகணுறைறவிசு
பொற்றவைந்தருத்தடமறுபுட்களேழ்பொதியில்
பற்றுமெண்பொய்கையொன்பதுசிலைபொழில்பத்தாங்
கொற்றமன்றுபத்தோடொருகூவலுங்குலவும். சு

மூவகைத்தானம்.

ஒன்றுபல்பவத்தாதையர்க்காட்டிடுமொளிசே
ரொன்றுபல்பவத்தாயரைவேண்டுறிற்காட்டு
மொன்றுபல்பவக்கிளைஞரோடுரைபயில்விக்கு
மென்றுமூவகைத்தானமவ்விருநகருடைத்தால். எ

மூவகைத்தேற்றி.

ஊங்கணைந்தவர்க்கமுதுநீருதவிடுமொன்று
பாங்கின்வேட்டனயாவையும்பயந்திடுமொன்று
மூங்கைபேசவும்பேசினேன்மூங்கைனமயுறவு
மாங்களிப்பதொன்றுகமுததெற்றியுமுளவால். அ

மூவகைவயல்.

மீளமீளநெல்லரிதொறும்விளைவதோர்பழன
நாளின்வித்துமன்றேபயனல்குமோர்கழனி
தாளினேருழவின்றியேதகும்பயிர்விளைக்கும்
கோளதொன்றெனவயல்கண்மூன்றுள்ளனகுறிக்கில். கூ

மூவகைத்தவிசு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்பகுப்பின்மூவரொடுமுனிவர்விண்ணோர்பழிச்சிடவாழ்சதுமுக
னைக்காட்டுமொன்று,தன்பகுப்பின்மூவர்திருமுதலோர்சூழுந்திருமாலைச்
சார்ந்தோர்க்குக்காட்டுமொன்று, தன்பகுப்பின்மூவரொடுகணங்கள்போ
ற்றுந்தழற்காலருத்திரனைக்காட்டுமொன்று, தன்பகுப்பின்மூர்த்திகளோ
டென்றாழ்காட்டுந்தவிசொன்றுமடங்கலணைநான்குமன்னும். ௧0

### ஐவகைத்தரு.

ஓவாமையமிழ்தொழுக்கும்பொலம்பூச்சூதந் தன்னிழலைப்பிறர்க்குதவாக்காஞ்சியொன்று, பூவாதுகாயாதுகனிகனல்கும்பூம்புளிபல்வகைப்போதுந்தருமதூகந், தாவாதசெம்பொன்மல ரத்தியென்று சாற்றியதெய்வதமாத் தருக்களைந்துந், தேவாதிதேவரினி தமருங்காஞ்சித் திருநகரினிறும்பூதுதிகழவோங்கும். கக

### ஐவகைத்தடாகம்.

எல்லியிடைப்பங்கயமும்பகற்காலத்தி னிருங்குமுதச்செழும்போதுமலர்ந்துதீந்தேன், பில்குவதொன்றொருகாம்பின் முளரிமூன்றுபிறங்குபுனற்றடமொன்று குளித்தோரெய்த, வல்லைவானரத்துருவ மளிப்பதொன்று மூழ்கினோர் மாற்றார்க்குக் கொடியதீமை, நல்குவதொன்றொடினோருற்றார்க்கின்பநலந்தருவதொன்றெனலாந்தடாசமைந்தே. கஉ

### அறுவகைப்பறவை.

பெய்யாத காலத்தி னகவிக்கொண் மூவருவிக்கும் பெருமஞ்ஞைமறைநூலெல்லா, மெய்யாமை யின்றியுணர் கிள்ளையேனைக் கணிதநூலனைத்துமெடுத் துரைக்குமாங்கை, நையாதுமுழுதுணர்ந்த கபோதம்பாடு நல்லிசைநூலவைவல்ல நலஞ்சேர்பூவை, பொய்யாதுவேட்டவெலாம்வழங்குநேமிப் புள்ளுமெனவறுபறவைபொருந்துமாங்கண். கஙு

### ஏழ்வகைப்பொதுத்தானம்

வானுடர்வார்த்தைசெவிப்புலனுமொன்றின் மதகரியையுமயனூக்கித் துரக்குமொன்றின், மேனகருவுருவிழிபடபுலனுமொன்றின் மேவினர்க்குத் திசைமயக்கமெய்துமொன்றிற், காணூர்செய்யின்றிவிளக்கெரியுமொன்றிற் பாதலத்தோர்கழறுமொழிகேட்குமொன்றி, லானைதூதுந்துமிகண்முழங்குமொன்றிலாகவேழ்பொதுத்தானம்வயங்குமாலோ. கச

### எண்வகைத்தடாகம்.

மூழ்குநர்க்குப்பொன்னுருவமளிக்குமொன்று முழுமணியேர்தருமொன்றுவிண்ணோர்கோமான், வாழ்வளிக்குமொன்றுமனக்கினியவெல்லாந்தருமொன்றுவேண்டியவைவழங்குமொன்று, வீழ்நகைத்தாமெய்ஞ்ஞான மளிகுமொன்று வீடுதவு மொன்றுவினைப் பிணிநோய்முற்றும், பாழ்படுத்துமொன்றென்னமலங்கண்மாற்றும் பனிமலர்ப்பூம்பொய்கையிருநான்குமேவும். கரு

### ஒன்பதுவகைச்சிலை.

தீண்டினரைத்தேவாக்குமொருகல்பாம்பின்கடிவிடந் தீர்த்திடுமொருகல்சித்தியெல்லா, மாண்டளிக்குமொருகலுயிருதவுமோர்கல் வழக்கனைத்துநடுவாய்நின்றறுககுமோர்கல், மூண்டபிணித்தழும்புறுபுண்மாற்றுமோர்கன் மொய்யொளிமெய்த்துணியுறுப்பைப் பொறுத்துமோர்க, லீண்டியதீவினையிரிக்கு மோர்கன்ஞானந் தருமொருக லெனச்சிலைகளொன்பதோங்கும். கசா

### ஒன்பதுவகைப்பொழில்.

ஒன்றினோர்பெறக்கனகமாறியொன்றி லிரசதமாமழையொன்றின் முத்துமாரி, யொன்றிலொளிர் குருவிந்த மாரியொன்றில் வயிரமழையொன்றில்வயிடூயமாரி, யொன்றிலொளிவிடும்புருடராகமாரி யொன்றிலடற் புள்ளேற்றுப் பச்சைமாரி, யொன்றினிலிந்திரநீலமாரியொன்றிற் பொழியுமலர்ப்பொழிலிவையோரொன்பதோங்கும். கஎ

பத்துவகைமன்றம்.

சொல்லருமா பாவியுறின் மூங்கையாக்குஞ் சோரர்களைமருளுறுத் துங்கல்விதேற்றும், பல்வகையவடிவுதவுஞ்சாவாமேன்மை பாலிக்கும் பாதலஞ்சேர் பிலத்தைக்காட்டும், வல்லவர்க்குந்திசைமயக்கும் பொன் மாணிக்க மழைபெய்யும் பகலிரவுமாறுக்காட்டுஞ், செல்லுநரைப்பிறர் காணுவியப்புச்செய்யுமிவைமன்றமொருபதெனத்திகழுமாலோ. ௧௯

பதினேருவகைக்கூவல்.

தயிர்க்கூவல்பாற்கூவ னறுநெய்க்கூவன் மதுக்கூவல்செழுங்கருப் புச்சாற்றுக்கூவன், மயக்கமறமுத்திநெறிதுறக்கமார்க்க மற்றுலகின்கதி காட்டுமும்மைக்கூவல், வியப்பெய்தவிழல்பிணிக்குங்கூவல்பாரின் வித் தின்றி நாறுசெயும் விரிநீர்க்கூவ, லயர்ப்பின்றி யங்கணைந்தோர் மீளச் செய்யுமருங்கூவலொடுங்கூவல்பதினென்றுமால். ௨௦

சேக்த - சிலை - சிலம்போலி.

தன்னிடையெள்ளினைப்பெய்யின்மற்றோர்ஞாங்கர்த் தயிலமெழச் செய்வதொருசெக்குமுண்டு, மன்னுயிர்செய்வினைப்பயனைத் தாமேநல் குஞ் சிலையொன்றுசிலைப்பாவை யொன்றுமன்னுங், கன்னிமதிற்காஞ்சி நகர்காவல்பேணுங் கருமேனிவயிரவமாக்கடவுள்பாத, நன்னடனச்சிலம் போசையிடையறுதுநானிலத்தோர்வியப்பெய்தக்கேட்குமோர்பால்.

இன்னனவாமதிசயங்கண் மற்றுமுளளவெல்லையிலை யவைமுழுது மறிவார்யாரே, முன்னுகத்தினெல்லார்க்குங்காட்சியெய்து மூண்டகொ டுங்கலியுகத்திற்படிமைவாழ்க்கை, மன்னினோர்சிலர்க்கன்றித்தோன்று முத்திமருவினர்க்கும்மேலுலகின்வைத்தவண்ண, மன்னமலிவயற்காஞ்சி வரைப்பின்வாழ்வாரகங்களிப்பக்கண்ணுறுதலாரமைத்தவாகும். ௨௧

இங்குரைத்தமேன்மையெலாங்கண்டுங்கேட்டு மிந்நகரிற்கொடுந்தீ மையிழைப்பாராயி, னங்கவரேகயவரெனப்படுவராந்தோ வறிவின்றியறி யாதுஞ்செய்தபாவப், பங்கமெலாமொழிவெய்துமறிந்துசெய்யிற் பாற் றரிதாமாதலினற் பயனும்வேண்டி, யுங்குறைவோர் தததமக்குவிதித்த வாற்றுனொழுகியேகம்பரருட்குரியராவர். ௨௨

விம்மிதப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௨௫௫௩.

## ௬௨. ஒழுக்கப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாதரையெல்லாம்வீழுமடவனுமீன்றதாயைக்
காதலனுகானச்சீர்க்கடியனுஞ்சிவன்வாழ்வைப்பிற்
பாதகம்புரியல்காஞ்சிப்பதியிடைச்சிறிதுஞ்செய்ய
லோதியவிதியினுறேயொழுகுதன்முறைமைத்தாமால். ௧

செந்துவர்படருமாழித்தினகரனெழுமுன்கன்ன
லைந்தெனவெழுந்துவெண்ணீறணிந்துயர்மாவின்மூலத்
தெந்தையைக்காமகோக்கினிறைவியையினைந்துபோற்றிப்
புந்தியினுறத்தான்செய்யும்பொருளறஞ்சிந்தைசெய்து. ௨

கரகமுந்தண்டுமேற்றுங்கரந்தழீஇக்காமரூர்க்கு
நிருதியிற்படர்ந்துகாதினீண்டமுப்புரிநூலேற்றித்
தரணியிற்றிருணமிட்டுச்சந்திகள்பகல்வடக்கு
மிரவுதென்பாலுநோக்கியிருந்திரண்டியக்கநீத்து. ௩

குறியிடக்கரத்துப்பற்றிக்குறுகிநீர்முகந்திட்டோர்கால்
வெறிகமழ்புனலான்மண்ணாற்குறியினைவிழுமிதாக்கி
நிறையமண்முக்காலிட்டுக்குதங்கழீஇக்கழுவுநீள்கைக்
கிறுதியினீரைங்காலுமிருகைசேர்த்தேழுகாலும். ௪

அடியெழுகாலும்பூசியறவினாற்சுத்திசெய்க
விடனுடையில்லோர்க்கீதாமிரட்டிமும்மடங்குநாற்றி
கடனறிபிரமசாரிகாட்டகத்துறைவோன்மற்றைக்
கெடலருந்துறவியின்னோர்கெழுதகவியற்றல்வேண்டும். ௫

கொணர்வுறுநீர்வாய்ப்பெய்துகொப்புளித்திருகாற்றூய்மை
யணையநீர்குடித்துப்பின்னரணிவிரலுறுப்புத்தீண்ட
லிணைவிழைச்சுணவுமாற்றீரியக்கமுற்றிடினெலெண்கா
லிணையிலீரெண்காலெண்காற்கொப்புளித்திடுதல்வேண்டும். ௬

சல்மலம்விடுக்கும்போதுந்தையலார்கலவிப்போதுங்
குலவெரிவளர்க்கும்போதும்வென்பல்கோறின்னும்போது
முலவுநீர்குடையும்போதுமுணவினும்பேசல்செய்யார்
மலவலிதூரக்குமெய்கோள்வகுத்தநான்முறையினிற்போர். ௭

விதித்தகோறின்றுதூயமென்புனல்படிந்துமேனி
கதிர்ப்பநீறணிந்துசந்திகடன்புரிந்துறுபேரன்பின்
முதிர்ச்சியினிலிங்கபூசைநாடொறுமுட்டாதாற்றித்
துதித்தனர்காலந்தோறுமேகம்பந்தொழுதுபோற்றல். ௮

இம்முறையொழுக்கின்மாறுதியங்குறும்பிரமசாரி
செம்மணிவடிவிற்கம்பர்திருவருள்கிடைத்தல்வேண்டி
மம்மரில்குரவன்மாடேமறையெலாமுறையினோதன்
மும்மறையிரண்டொன்றானுமுற்றுறப்பயிறல்வேண்டும். ௯

மடங்கலிற்கன்னிதன்னின்மதிநிறைந்துறுநாளோதத்
தொடங்குகமகரத்தந்நாட்டுகளறமுடிககமீண்டு
மடங்கரும்வெண்கேழ்ப்பக்கத்தோதுகவங்கமாதி
யுடங்குதேய்ப்பக்கத்தோதலவிலக்குநாளோதல்வேண்டா. ௧௦

செவ்விநாணுடையேதண்டந்திகழ்முந்நூலுத்தரீய
மவ்வவர்தமக்குவெவ்வேறருமறைவிதித்தவாற்று
லெவ்வமின்மறையோராதிமூவருமியல்பிற்கொள்க
செவ்வழல்விதியினோம்பியணிகவத்திருவெண்ணீறே. ௧௧

முன்னிடைகடையினென்றப்பவதிச்சொன்மொழிந்துபார்ப்பார்
மன்னவர்வணிகர்பிச்சையேற்பதுமரபாமாயுண்
முன்னுறுமிளையர்தம்மின்மூத்தவர்ப்பணிகதாழ்ந்த
பின்னவர்தமக்குமூத்தோர்வாழ்த்துரைபேசல்வேண்டும். ௧௨

ஓதியபிரமசாரியொழுக்கினில்வழாதுநின்று
மூதருமறைநால்கற்றோர்முனிவர்தங்கடனிற்றீர்ந்து
வேதமாமூலத்தெங்கோன்றிருவருண்மேவப்பெற்றுப்
பேதமில்பெருவீட்டின்பப்பேற்றினுக்குரியராவார். கங

வேறு.

பின்னவர்கள் பற்றிகந்துபத்தியினாற்றிருக்காஞ்சிப்பேரூர்வாழ்க்கை
மன்னுதல்வேட்டனராயினேகம்பன்றனக்கணித்தாமிருக்கைவைகிப்
பன்னருஞ்சீர்க்கண்டிகைநீறுடல்வயங்கச்செய்பணிகள் பலவுமாற்றித்
துன்னியமாந்தருமூலச்சுடரொளியைமுட்டார்துதொழுதுவாழ்வார். கச

கலிவிருத்தம்.

வற்றருமறையவ்வாறூதிவாழ்க்கையிற்
பற்றிலனுயிடிற்குரவன்பாலென்று
முற்றினிதுறைகபற்றுடையனேயெனிற்
பெற்றியினருட்குருவிசைவுபெற்றரோ. கரு

கடவுளர்பிதிரர்தங்கடனகணிக்குவான்
வடிவறுமிலக்கணமாண்டகற்பினின்
மிடலுடைக்கிழத்தியைவிதியின்வேட்டுப்பி
னெடுமனைவாழ்க்கையினொழுகனீதியே. கசா

கருதுமுப்பதிற்றிருகவளமெய்பக
மிருபொழுதுண்டலுமெச்சமைவகை
புரிந்துலும்விதிதநாண்மனைவிபூண்முலை
மருவலுமினையவுமிவர்க்குமானுமே. கஎ

ஓதெரிசமிதையினேமபறெய்வமா
மேதமில்பிதிரருக்கீதலன்னதாம்
பூதருக்கிடுபலிபூநவெச்சமே
வேதியர்க்கோதனம்வீதன்மாணிடம. கஅ

பெருமறையோதுதல்பிரயவெச்சமிவ்
விருமகமைந்தனுட்பிரமவெச்சந்தான்
றிருமிகச்சிறத்தலிற்றெய்வவேதிய
ரொருதலையாகவீதோம்பல்வேண்டுமால. ககூ

வைகறையெழுந்துசெய்வினைகண்மாணடகச்
செய்துயாநகர்ப்புறத்தொழுகுந்தெய்வநீ
ரெய்தினர்குடைந்துவெண்டுகிலிரண்டுடுத்
தைதுறுகண்டிகைநீறணிந்துபின். உ0

வண்புதற்றருப்பைமேல்வைகிமும்முறை
யொண்புனல்வேதங்களுவப்பவாசமித்
தெண்பெறவாய்துடைத்தியல்பிற்றீண்டியே
பண்பயின்மறைகளைப்படித்தல்வேண்டுமால். உக

மாதவப்பேற்றினான்மறைகளண்ணலைச்
சூதமாய்நிழற்றலிற்றெல்லையேகம்ப
நாதனுக்கினியதிப்பிரமநன்மக
மேதகுமறங்களுண்மிக்கதாகுமால். உஉ

ஆற்றலுக்கியையவெவ்வளவைத்தாயினும்
போற்றருமறையினைப்போற்றிமேதகச்
சாற்றுகாயத்திரிசதவுருத்திர
மேற்றவைந்தெழுத்திவைவிதியினெண்ணியே. ௨௩

அனைத்தினுநிறைந்துறையடிகள்பூசனை
தனக்குறுதிருப்பள்ளித்தாமங்கொய்துபோய்
மனைத்தலைவைத்துமேல்வாழ்க்கைக்கேய்ந்தன
வெனைத்துளகர்மமுமியல்பினுடியே. ௨௪

கதிரவனுச்சியினணுகுங்காலையின்
முதுசிவகங்கைநீர்முறையின்மூழ்குபு
மதியுறுநியதிகண்முடித்துமாநிழ
லதிபனைமுறையுளியணைந்துபோற்றியே. ௨௫

மீண்டுதன்மனைவயின்மேவித்தற்பொருட்
டீண்டியவருட்குறியிறைவனர்ச்சனை
பூண்டபேரன்பினிற்புரிந்துபூசனைக்
காண்டுறப்பெனப்படுமழலுமோம்பியே. ௨௬

அறமுதலிழிஞரீறனவற்றினுக்
குறுபலியுதவியூய்கெச்சமைவகை
முறையுளியாற்றியவ்வேலைமுன்னிய
பெறலருவிருந்தினர்ப்பேணியூட்டியே. ௨௭

நீத்தவர்க்கையமுநேர்ந்துநோயினர்
வாய்த்தவெஞ்சூன்முதிர்மகளிர்பிள்ளைகண்
மூத்துறுகிழவரைமுந்தவூட்டிப்பி
னேத்துறுகிளைஞரோடுண்டலேயுமால். ௨௮

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

கங்கைவார்சடிலக்கடவுளைநினைந்துகறிதயிர்நெய்யுடனுவி
யங்கியையெழுப்பியாகுதிச்செய்கையாகமுப்பதிற்றிருகவளம்
பங்கமில்விதியாலுண்டுகைபூசிப்பாகடைதின்றதன்பின்னர்ப்
பொங்குபேரன்பினொக்கலோடமர்ந்திப்புராணமேகேட்டிடல்வேண்டும்.

நான்மறைப்பொருளாய்க்கதைக்கெலாமிடனாய்நாற்பயனுதவுமேகம்பன்
மேன்மையுங்காமநோக்குடையிறைவிமேன்மையும்விளக்குவதிதுவே
நான்முறைவருணநிலைகளினொழுக்கநுண்ணிதிற்றெரிப்பதுமிதுவாம்
பான்மையாற்காஞ்சிப்புராணமேநாளும்பயில்வுறக்கேட்பதுமரபால்.

அலர்கதிரென்றூழ்மறைந்திடுங்காறுமான்றவர்படித்திடக்கேட்டுக்
குலவுசீரந்திசெய்கடன்முற்றிக்கோயிலைக்குறுகியேகம்பத்
தலைவனைத்தொழுதுமனைவயினணுகிச்சமிதையினங்கிவேட்டமர்ந்து
பலருடனருந்திமனைவியோடிரவிற்பள்ளியின்மேவுதல்விதியே.

தருக்குறுவனப்பிற்பிறர்க்குரியவரைத்தவ்வையிற்றங்கையிற்காண்க
வுருத்திரகணிகைமகளிரைத்தாயினுன்னுகவிணைவமடவா
ரருப்பிளங்கொங்கைத்தாதிகண்மாட்டுமன்னதேயாகவிற்புணர்ச்சி
விருப்பினையவர்பான்மறப்பினுமெண்ணலோம்புகநன்னெறிவிழைவார்.

இருட்சுரிகருமென்மலர்க்குழன்மனையாளிளமுலைப்போகமுமகவின்
பொருட்டெனக்கொண்டேவிலக்குநாளொழித்துப்புணர்ந்தபினீங்கிவெ
ளரைக்கசைத்தருளுமடிகளீரடியுமகந்தழீஇத்துயிலுகமற்றீங் [ம்பாந்த
குரைத்தவர்றென்றுமொழுகுநரெங்கோன்றிருவருட்குரியவராவார்.

கச்சிமாநகரிற்கம்பநாயகன்முன்கரிசறுத்தான்றவர்முகப்ப
வச்சுவமாடையூண்முதற்றானமாதரித்தியைந்தவையளித்தல் [வரைப்பி
பொச்சமிலவ்வக்கொடைப்பெரும்பயனென்றனந்தமாய்ப்பொலியுமவ்
னச்சிமெய்யுணர்வுகொளுத்துவோன்வீடுநணுகுமேம்பட்டதித்தானம்.

ஓதல்வேள்வீகையோதுவித்திடல்வேட்பித்தலேற்றலுமுறுமறையோர்க்
காதியின்மூன்றோடளித்திடலூர்திபடைத்தொழிலரசருக்குரிய
வாதியின்மூன்றுவாணிகம்பசுவேர்வணிகருக்காகுமங்கவற்று
ளாதியின்மூன்றுமல்லவைமுறையேயவ்வவர்விருத்திகட்காமால்.

இருதமோடமிர்தவிருத்தியுமான்றோர்க்கிசைவனமிருதமுமாகுந்
தருபிரமிருதஞ்சத்தியாநிருதந்தழுவலுமொன்றுநாய்விருத்தி
யொருவலேவேண்டுமுஞ்சநல்விருத்தியிருதமாமொன்றிரவாமல்
வருவதேயமிர்தமிரந்துறன்மிருதமுழவின்வந்துறல்பிரமிருதம்.

சத்தியாநிருதம்வாணிகவிருத்திதாழ்வுறுஞ்சேவகஞ்செய்யல்
வைத்தநாய்விருத்தியாதலினதனைமாற்றியேயிருபிறப்பாள
ரொத்ததோர்தூய்விருத்தியாற்றம்மையோம்பிமெய்ந்நூல்பலபயின்று
தத்தமக்குரியநியதியினொழுகித்தங்குதன்மரபெனப்படுமால்.

கைசெவிசென்னிகழுத்தினெப்போதுங்கண்டிகையணிதல்வெண்ணீறு
மெய்யெலாம்பூசியைந்துமூவிடத்தும்விலங்குமுப்புண்டரம்பொறித்தல்
வைதிகநிலையோர்மரபெனமறைநூல்வகுத்திடுமாதலினிவற்றைக்
கைவிடாதென்றுங்கடைப்பிடித்திடுகவிகழ்ந்திடிற்கடையரேயாவார்.

வைதிகசைவநெறிகளைப்பற்றுமாண்பிலாச்சூத்திரர்முதலோர்க்
கைதுமீப்போயபுண்டரமாதியணியலாமேனையர்க்காகா
மெய்திகழ்மறைகளாகமம்விதித்தகருமமற்றினையனபிறவு
முய்தியைவேட்டோராசரித்தொழுகிவிலக்கினவொழிவதுமுறையே.

தவத்தினாற்செருக்கல்கண்டதுவிளம்பல்பொய்யுரைசாற்றுதலைந்து
மவித்தவந்தணரையிகழுதல்யாதுமளித்ததுபுகழ்ந்தெடுத்துரைத்த
லெவற்றினையானுங்கொலைசெயல்பிறர்பாலிடுக்கணையுறுத்துதல்குறளை
செவிப்புகப்புகறல்பூப்புடைமனையைத்தீண்டலும்வழுவெனப்படுமால்.

மனைவியோடுண்டலவளுடன்றுயிறன்மனைவியாவித்துழிப்பசிப்பில்
வினையிகந்தியல்பானிருப்புழியுண்ணும்வேலையுமாங்கவட்பார்த்தல்
கனைகதிர்த்தேவைக்கிழக்கெழுங்காலைமேல்கடற்பால்வீழுங்காலைப்
பணிவிசும்புச்சியுற்றிடுங்காலைபார்த்தலும்பழுதெனப்படுமால்.

உடையொழிந்திருநீராடுதலாடையொன்றுடுத்துண்டலீரியக்க
நடைவழிச்சாம்பரானிலைநீர்நள்ளுறவிடுதலாங்குமிழ்த
லுடையிலாமாதைநோக்குதலிருகாலொளிர்ந்தசெங்கனலிடைக்காய்ச்ச
லிடையுறுமந்திவேலையினருந்தலிவைகளும்விலக்கெனப்படுமால்.

இந்திரதிருவில்விசும்பிடைநோக்கியேனையர்க்கறிவுறக்காட்ட
னிந்தையின்வாளாபேரிகல்விளைத்தல்கையிணைக்குவித்துநீருந்தல்
செந்தழற்கடவுள்வான்பசுபார்ப்பார்தேவர்கண்ஞாயிறுகுரவ
ரிந்துவின்முன்னரிச்சையாறிருத்தலின்னவுந்தீங்கெனப்படுமால்.

கேழுகிருரோமந்துணித்திடலுகிராற்பல்லினைக்கிளைத்திடறனியே
பாழ்மனைதுயிறல்கண்படையெழுப்பன்முடிவடபாலின்வைத்துறங்க
லாழ்துரும்பொடித்தலோட்டினையடித்தறனிவழிச்செலல்பிறரணிந்த
காழகஞ்செருப்புமுதலியவணிதலினையவுங்கடிந்திடப்படுமால்.

அறக்கடைமிகுமூர்பெரும்பிணியுறுமூரமரிழிகுலத்தவர்பதிதர்
மறக்கொடுந்தொழிலோர்துவன்றுமூர்வைகலவரையிடைநெடும்பொழு
விறப்பருமிசும்பினேறுதலிழிதலிளவெயிற்காய்தனீராடா [துறைத
துறப்பெருஞ்சிவலிங்கார்ச்சனைபுரியாதுண்டலும்வழுவெனப்படுமே.

பூத்தவள்பதிதனிழிஞனையழுகலைப்புத்தளைத்திகிரிமேற்பொறித்த
மூர்த்தியைத்தீண்டல்காண்டலும்விலக்கேயிலங்குமுப்புண்டரமின்றி
மீத்திகழ்வடிவமுதலியபொறித்தவேதியர்முகத்தினைமறந்தும்,
பார்த்துளோர்கம்பத்தலைவனைப்படர்ந்துகண்ணுறினண்ணுவர்தூய்மை.

மறையுடனேனைநூல்களையெச்சந்தன்னுடன்மற்றைநல்வினையைக்
கறையறும்பார்ப்பாரோடுஞ்சூத்திரரைக்காஞ்சியினெடும்பிறநகரைப்
பிறைமுடிக்கடவுளோடரியயனையொப்பெனப்பேசற்கபேசிற்
குறைவருநிறையக்குழியினீழ்குளிப்பதற்கையமொன்றிலையே.

இன்னனபிறவுமறைமுதனூல்கள்விலக்கிடுமிவற்றினையொழிக
பன்னருமறையின்புறத்துநூலனைத்துமவகெடுதியேபயக்குமாதலினு
லன்னவைவிடுத்துமறைநெறிவழுவாதொழுகிநீளலர்பொழிற்காஞ்சி
தன்னிலேகம்பநாயகனடியார்தம்மொடுங்குலாவுதன்முறையே.

இருமுதுகுரவரிறந்திடுமதிநாளாண்டுதோறெய்துழியுகாதி
வருமனுவாதியுவாமுதற்றினத்தின்வயங்குதென்புலத்தவர்க்குறித்துத்
திருமறையவர்க்குமுறையினூட்டிடுகவேனைமாத்தலங்களிற்செய்யும்
பெருநலமனைத்துங்காஞ்சியினூட்டிடும்பேற்றினைச்சிறிதுமொவ்வாவால்.

தென்புலத்தவர்தாமயன்மருமரீசிமுதலியோர்சிறுவராங்கவரு
ளின்புறுமரீசிவிராட்டுவைமுதலோரீன்றவர்சுராசுரர்முதலோர்க்
கன்புடைப்பிதிராகுவர்கவியோடங்கிராபுலத்தியன்வசிட்ட
னென்பவர்குதித்தோர்மறையவராசர்வணிகர்வேளாளருக்கியைவர்.

முனிவரிற்பிறந்தார்தென்புலத்தவரம்முதல்வரிற்சுராசுரர்பிறந்தார்
புனிதவிண்ணவரிற்சராசரமனைத்தும்புகரறத்தோன்றினமுறையா
லினையசீர்ப்பிதிரர்தமைக்குறித்தீசனிணையடிக்கன்புடைமறையோர்
நனியுளங்களிப்பவுறுதியாற்காஞ்சிநகர்வயினூட்டுதல்கடனே.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இம்முறையில்லின்வைகியிடைப்படுங்காற்கூறாயுள்
செம்மையிற்கழிப்பிப்பின்னர்ச்செறிமயிர்நரைப்புக்காணு
மம்மரினறிவுமிக்கார்மனைவியைமகன்பால்வைத்து
வம்மெனவுடன்கொண்டேனும்வனத்திடைச்சேறல்வேண்டும்.

விழைதருகாஞ்சிமூதூர்ப்புறனிலவரைப்பின்மேவித்
தழைபொதிசாலைவைகிவேனிலைந்தழலினுப்பண்
மழையினிற்பனியினீருள்வதிந்துமாதவங்களாற்றிக்
குழைவுறுமனத்தானுஞ்சவிருத்திகொண்டுறைகமாதோ. ௫௩

கண்டிகைநீறுதாங்கிக்கம்பனைக்காமநோக்கி
யொண்டொடிப்பிராட்டிதன்னையுன்னியஞ்செழுத்துமெண்ணி
யண்டர்கோன்பூசையாற்றியன்னணம்வதிந்தபின்னர்
மிண்டறும்வனத்தின்வாழ்க்கைமெய்த்தவமுதிர்ச்சியாலே. ௫௪

அற்றமிலறிவிற்றூயராகியிவ்வுலகவாழ்வும்
பொற்றபூங்கமலவாழ்க்கைப்புண்ணியன்முதலோர்வாழ்வும்
பற்றறவெறுத்துவீட்டினவாவுறும்பான்மைபெற்றான்
முற்றுறத்துறவினெய்திமறைமுடிபுணர்தல்வேண்டும். ௫௫

ஐந்தவித்துயர்ந்தவாசான்றன்புடையருணூல்கேட்டுச்
சிந்தனைசெய்துமாணத்தெளிந்துபினிட்டைமேவு
மிந்தவாறடைவினெய்துமியல்பினைத்தலைநின்றேறா
ரந்தணனிருதாளென்றுமகந்தழீஇயொழுகலாறே. ௫௬

அடற்கொடும்பாசமாற்றிப்பசுக்களையருள்வீட்டுய்ப்பப்
படைத்தளித்தழித்துநோக்கும்பரம்பொருள்சிவனேயென்ற
லுடற்றுநர்க்கரியவேதவுள்ளுறையாவதென்னத்
தொடககமீறெழுவாயானவிலிங்கத்தாற்றுணிதல்கேள்வி. ௫௭

உவமையினேதுத்தன்னாற்கேட்டதையுள்ளங்கொள்ள
வவமறச்சிந்தைசெய்தல்சிந்தனையதனைப்பல்காற்
சிவணுறப்பயிற்சிசெய்கைதெளிதலாம்விளங்கக்காண்ட
றவலறுநிட்டையென்றுசாற்றுவர்புலமைசான்றோர். ௫௮

இத்திறம்பயின்றுவைகியிருவகைப்பற்றுநீத்த
வுத்தமதுறவின்மேலோரூர்வயிற்பிச்சையேற்றுச்
சுத்தநீரலம்பிமுக்கட்சுடரினுக்கூட்டிப்பின்ன
ரத்தகுவிதியினோர்போதெண்பிடியருந்தல்வேண்டும். ௫௯

அல்லவைமுழுதுநீக்கலான்றவர்கழித்ததூசு
கல்லசும்பெற்றிக்கோடல்காழ்மரத்தடியின்மேவல்
பல்லவுமொப்பக்காண்டறமியனாய்ப்படர்தல்வேற்றுப்
புல்லியரிணக்கந்தீர்தல்பொறிவழிமனஞ்செல்லாமை. ௬0

அடித்துணைநிலத்தினோக்கிமிதித்திடலறுவைதன்னில்
வடித்தநீர்பருகல்நெஞ்சிற்றூயதுமாணக்கோடல்
படிற்றுரையின்றிக்கூறனன்மையேபயப்பப்பேச
லெடுத்துரைபிறவுமுத்தனிலக்கணமென்பமன்னோ. ௬௧

உறையுளோடங்கிபேணல்கல்வியினுடலையோம்பல்
சிறையுடற்பொருட்டுச்சீற்றஞ்செய்திடல்சாலப்பேசல்
புறனுரையிகழ்ச்சிபிச்சைப்பொருட்டலதூர்க்குட்சேறன்
மிறையுறுத்திடும்பைசெய்வோர்தம்மையும்வெகுளலாகா. ௬௨

சினவிடைக்கடவுட்பூசைகண்டிகைதிருவெண்ணீறு
கனவினுமிகழாதோம்பல்கதிரொளியுலோகமல்லாப்
புனிதபாசனத்தினீராற்றூய்மைகள்பொருந்தக்கோடல்
வினையிகந்தவர்க்காமென்பவேள்வியிற்சமசம்போலும். ௬௩

என்பினைநரம்பிற்பின்னிக்குடர்வழும்பிறைச்சிமெத்திப்
புன்புழுப்பொதிந்துசெந்நீர்ப்புண்ணசும்பொழுகிநாறித்
துன்பநோயெவற்றினுக்குமுறையுளாய்ப்புறந்தோன்றூடும்
வன்புலையுடம்பேயாவிவருத்திடும்பிணிவேறில்லை. ௬௪

பெரும்பிணியிதனைத்தீர்க்குமருத்துவன்பிறவியில்லாப்
பரம்பொருளானமுக்கட்பரமனேயென்றுதேறி
முரண்பயில்விடையோன்றென்பான்முகத்தினைச்சரணமெய்தி
விரும்பிவீடுறுதற்பாலர்பிறப்பினைவெருவப்பெற்றார். ௬௫

கலிநிலைத்துறை.

மற்றைத்தெய்வங்களெவற்றையும்விடுத்துமாநீறற்
கற்றைச்செஞ்சடைப்பிரான்சரணரணெனுங்கருத்தே
பற்றிச்சாவினும்வாழ்வினுங்களிப்பிகல்படாமை
யெற்றைப்போதுமொத்தொழுகலேதுறந்தவர்க்கியல்பாம். ௬௬

பொறுமைகல்விமெய்தூய்மையைம்பொறிதெறலடங்க
முறுதிநாண்வெகுளாமைகள்ளாமையொண்பூதி
மறுவில்சாதனஞ்சிவார்ச்சனைதியானம்வண்பதினொன்
கறமுநல்லறம்புரிபவர்க்கிலக்கணமாமால். ௬௭

சொன்னநால்வகைநிலைகளிற்றுரிசறவொழுகிக்
கன்னிமாநிழற்கண்ணுதலகத்தொழும்பாற்றி
மன்னிநீடியகாஞ்சிமாநகர்வயின்வதிவோர்
துன்னுமும்மலத்துகளறுத்தின்பவீடுறுவார். ௬௮

ஒழுக்கப்படலம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௨௬௨௧.

---

# 63. சிவபுண்ணியப்படலம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கச்சிநகரமர்ந்துறையுநியதியராயேகம்பக்கடவுள்பாதச்
செச்சைமலர்வழிபடுவோர்மேம்பாடுநானேயோதெரிக்கவல்லேன்
முச்சகமும்புகழ்ந்தேத்தும்பன்னிரண்டுபெயர்படைத்தமூதூர்வைப்பிற்
பொச்சமறச்செய்தக்கசிவதருமத்திறனுமினிப்புகலக்கேண்மின். ௧

எவ்வறமுந்திருக்காஞ்சிக்கடிநகரிற்புரிகிற்பினேற்றமெய்து
மவ்வறத்துட்சிவதன்மமதிகமவைசிவலிங்கப்பதிட்டையேனைச்
செவ்வியுடைத்திருமேனிதிருக்கோயிற்பணிபூசைச்சிறப்புமற்று
மௌவியந்தீர்மெய்யடியார்திருத்தொண்டுமுதல்பலவாமவற்றுண்மாதோ.

சிவலிங்கப்பிரதிஷ்டையும்பயனும்.

கயக்கமுறுமறக்கடையின்சிமிழ்ப்பறுத்துப்பிரமாண்டக்கனத்தைநூறி
மயக்கமிகும்வினைப்பகையும்பெரும்பிறவிப்பழம்பகையுமறுகமாட்டி
வயக்கமுறுசிவபதத்தினுய்க்குமிலக்கியில்வாளாய்மாறாவாழ்வு
பயக்குநுதல்விழிக்கடவுண்யக்குமருட்சிவலிங்கப்பதிட்டையம்மா. ௩

விரைமலரோன்மணிவண்ணன்முகிலூர்திமுனிவர்சித்தர்விண்ணோர்யாரும்
வரைகளினும்வனங்களினும்வார்ந்தநதிப்புடைகளினுமணிநீர்வேலைக்
கரைகளினுமெங்கெங்குங்கண்ணுதலோன்சிவலிங்கப்பதிட்டையொன்றே
யுரைவிளங்கச்செய்தமைத்தாரன்றிவேறெவன்செய்தாருணர்வான்மிக்கீர்.

மேதகையதவந்தீர்த்தங்கொடைவேள்விதுறவுநிலைவிரதம்யாவு
மோதுசிவக்குறியிறுவும்பயன்கோடிபடுங்கூற்றிஞென்றுக்கொவ்வா
வாதலினிச்சிவலிங்கம்வேதிகையினெடுஞ்சிலையானமைப்போர்யாரு
மேதமறுத்தவ்வுடம்பின்வீடெய்தப்பெறுவரிதற்கையுறேன்மின். ரு

இம்முறையிற்றாபித்தசிவலிங்கமிறைஞ்சுநரும்விமானமேல்கொண்
டம்மலர்ப்பூங்குழற்பணைத்தோளரம்பையர்சாமரையிரட்டவமராபோற்ற
வெம்மருங்குமிசைமுழங்கப்பெருந்தேவரழைக்கறுப்பவினிதினேகிச்
செம்மலருட்சிவலோகத்தானந்தந்திளைத்துறைவார்பிறவுங்கேண்மோ. சு

சோமாஸ்கந்தர்.

வேறு.

அடலிற்கொதிக்கும்படையாழியண்ணன்முதலோரேத்தெடுப்பத்
தடவுச்சியப்பிடர்த்தலையிற்கவினுமணிப்பூந்தவிசும்பர்க்
கடவுட்பிராட்டியுடனிருப்பக்கதிர்வேற்காளைநள்ளிருப்ப
நடலைப்பிறவிமருந்தாகிவைகுநாதன்றிருவுருவம். எ

ஏகபாதர்.

அடுப்பார்க்கருளுமொருதாளுமம்பொற்கமலவிழிமூன்றும்
படப்பாம்பணிந்தபுயநான்குஞ்சூலப்படையுமெழில்வயங்க
விடப்பாலரியைவலத்தயனையெழுநாற்கோடியுருத்திரரை
நடுப்பாற்றோற்றியையந்துவடிவுமுடனாலம்பிறக்கி. அ

புகன்றவிடப்பாற்பகுதியினைப்புந்தித்தலத்திற்புந்தியினை
யகங்காரத்தினுறுதன்மாத்திரையிற்பொறியினவ்வவற்றைத்
தகுந்தாள்குய்யமுந்திகளந்தலையிற்பார்நீரனல்வளிவான்
மிகுஞ்சீர்விழியினிடத்திரவிவெண்கேழ்மதியைப்படைத்தருளி. கூ

அடியினடங்குங்கீழுலகமனைத்துமடியினுறத்தோற்றி
முடியினடங்குமேலுலகமுழுதுமுடிப்பாலளித்தருளிப்
படியில்கருணைப்பிழம்பாகிப்பரசுமடியாரகவிளக்காய்க்
கொடியமலநோயரட்டொதுக்குங்கோனைப்பெருமான்றிருவுருவம். ௧0

எக்ஷேஸ்வரர்.

ஓவாவின்பப்பெருங்கருணையொன்றும்வதனமோரிரண்டும்
பூவார்கமலப்பதமூன்றும்போகுகூர்ங்கோடொருநான்கும்
காவாயென்பார்மலமைந்துமறுமாறளிக்குங்கரமேழுந்
தாவாவருளும்படைத்துடையவெச்சத்தலைவன்றிருவுருவம். ௧௧

இடபாரூடர்.

இகலியெதிர்ந்தோர்குடர்குழம்பவிடியின்முழங்கியேற்றெதிர்ந்து
தொகுவெம்படைகண்முழுதுழக்குந்தோலாமதுகைச்சூர்த்தவிழிப்
புகரில்காட்சிவெள்ளிவரைநடந்தாலனையபோர்விடைமேற்
றிகழமலைமாதுடனுறையுந்தேவதேவன்றிருவுருவம். கஉ

சந்திரசேகரர்.

உடையாளொருபால்வீற்றிருக்குஞ்செவ்விநோக்கியுள்புக்கு
மிடையாநின்றபெருந்தேவர்விலகப்புடைக்கும்வேத்திரத்திண்
படையார்குடங்கைத்திருநந்திபகவன்றனக்குவாமுதவிப்
புடையார்கணங்கள்போற்றிசைப்பவைகும்புராணன்றிருவுருவம். கஙு

நடராஜர்.

சிலம்பினொலிகேட்டருகணையுஞ்செங்காலன்னப்பெடைமானப்
புலம்புமணிப்பூண்முலையுமையாண்மகிழ்ந்துநோக்கிப்புடைநிற்ப
வுலம்பிமறைகளோலமிடவும்பர்பழிச்சமுடிக்கங்கை
யலம்பவழகார்பொதுந்திருக்கூத்தாடும்பெருமான்றிருவுருவம். கச

உக்கிரர்.

வடாதுமலையிற்புயநான்குமலர்க்கண்மூன்றுமுருத்திரமுந்
தடாயபடப்பாப்பரைநாணுங்கபாலக்கரமுந்தழலன்றிக்
கடாதுசிவந்தசுரிபங்கிகவின்றமுடியும்வெண்ணிறமுங்
கெடாதவனப்பிற்பெருங்கோலங்கெழீஇயபெருமான்றிருவுருவம். கரு

புரசைக்களிறட்டுரிபோர்த்தகோலப்பொலிவும்புகைவடிவு
மரசச்சீயவுரிகொண்டவுத்தரீயத்தனியழகும்
பிரசக்கமலமெனச்சிவந்தவிழிகண்மூன்றும்பிறங்குலகம்
பரசத்தகுவெண்டலைதண்டம்பரித்தகரமுங்கூரெயிறும். கசு

மருவிற்பொலிந்தமலர்க்கிழவன்வகுத்தவண்டமனைத்தினையும்
பொரியிற்கொறித்துக்கொறித்துமிழும்பூட்கைக்குரண்டப்பெயரானைச்
செருவிற்படுத்தவெள்ளிறகுதிங்கட்குழவிக்கதிர்கிளைத்திட்
டுருவுற்றெழுந்தாலெனமாடேயொளிரச்செருகுந்திருமுடியும். கஎ

திருமால்பணிலக்கோவைநிரைவயங்கும்புயமுந்தெரித்தருளிப்
பெருநீளக்கர்வாய்மடுத்துமுங்காரப்பேரொலிவிளைத்தும்
வெருவாவீரம்படநகைத்தும்பூதகணங்கண்மிடைந்தேத்த
வருளானந்தநடங்குயிற்றுமண்டர்பெருமான்றிருவுருவம். கஅ

அர்த்தநாரீஸ்வரர்.

உமையுந்தானும்வேறன்மையுருவினிடத்துந்தெளிப்பான்போ
லிமயமயிலையொருபாதிவடிவினிருவிநாற்கரத்து
மமையவனசந்திரிசூலமபயவரதமிவைதாங்கி
நமையுமுய்யக்கொண்டருளுநாரிபாகன்றிருவுருவம். கசு

இலகுளீசர்.

அடுத்தங்குடனும்பரம்பொருளையன்றேவிரவவொட்டாமற்
றடுத்துமுக்கூற்றுயிருணர்வைத்தகையுமவிச்சைமுழுதிரிய
மடுத்தகருணைத்திருநோக்கின்மாணுக்கருக்குப்பொருளுரைப்ப
வெடுத்தகரத்தான்வீற்றிருக்குமிலகுளீசன்றிருவுருவம். உ0

விஷாபஹாரணர்.

நவிலோநீலகண்டாயநமவென்றியம்புமெட்டெழுத்து
நுவல்வார்மீளமலக்கூட்டினுழையாவாறுபெறவிமையோர்
கவலாதிரங்கியாலாலங்கதிர்ப்பூங்கரத்தினேந்தியரிச்
சுவலாரணையின்வீற்றிருக்குஞ்சோதிச்சுடரோன்றிருவுருவம். ௨௧

சலந்தராரி.

இருகூறுகச்சலந்தரனையிறுத்துமாட்டியவ்வடிவ
மருகேதோன்றச்சுதரிசனமங்கைத்தலத்தின்மிசையேந்தி
முருகார்கடுக்கைத்தண்ணறும்பூந்தொடையல்வாகைமுடிவிளங்கத்
திருவார்காட்சியளித்தருளுந்தேவர்கோமான்றிருவுருவம். ௨௨

சக்கரதானர்.

வழிதீஞ்சுவைக்கள்வாய்மடுத்துமழலைச்சுரும்பரிசைமிழற்றுஞ்
செழிபூங்கமலமொன்றினுக்குத்திருந்துகாதன்மெய்யன்பின்
விழிசூன்றடியினருச்சித்தவிறன்மாயனுக்குச்சுதரிசனங்
கழிபேரருளாலீந்தருளுங்கடவுட்பெருமான்றிருவுருவம். ௨௩

அந்தகாசுரஹரணர்.

வெருவாநிகும்பன்மிசையொருதாளூன்றிநின்றுவெஞ்சூலத்
தொருகூற்பரம்வைத்தொருகரத்தாலுமையைத்தழுவிக்கைகூப்பி
யருகேநிற்குமந்தகனைநோக்கியரவச்சிலம்பணிந்து
திருமான்முதலோர்தொழுதேத்தச்சிறக்குமிறையோன்றிருவுருவம். ௨௪

திரிபுராந்தகர்.

பொருப்புச்சிலையில்வாசுகிநாண்பூட்டியரிகோல்வளியீர்க்கு
நெருப்புக்கூராம்படைதொடுத்துப்பிரமவலவனெடுமறைமா
விருப்பிற்செலுத்துநிலத்தேர்மேனின்றுகெவ்வூர்வெந்தவிய
வருப்புக்குறுவெண்ணகைமுகிழ்த்தவந்தணாளன்றிருவுருவம். ௨௫

கங்காதரர்.

விசும்பினின்றும்வெகுண்டார்த்துமுழங்கிக்கொதித்துவீழ்தந்த
வசும்புதிரைநீர்வான்யாற்றையாங்கோர்வேணிமயிர்நுதியிற்
பசும்புலறுகிற்பனியுறைபோற்ருங்கிவைகிப்பாவவினை
யிசும்புகடக்கும்பகீரதனின்றிரப்பமகிழ்வான்றிருவுருவம். ௨௬

ஆபத்சகாயர்.

கணங்கள்கலுழிமதக்கடவுள்கதிர்வேற்குரிசிலெழுமாதர்
நிணங்கொடிகிரிப்படையேந்தனிலவெண்டோட்டுமலர்ப்புத்தே
ளணங்குநவக்கோண்முனிவரர்சூழ்ந்தனுக்கராகப்பொலந்தவிசி
னிணங்குமாவற்சகாயனெனுமிறைமைப்பெருமான்றிருவுருவம். ௨௭

சோதிலிங்கேஸ்வரர்.

கடைக்கால்வெள்ளப்பெரும்புணரிநாப்பட்கதிர்த்தசுடரிலிங்கத்
திடைப்பான்மதியமுடிவயங்கத்தோன்றிவிசும்பினெனைமுங்கீழ்த்
தொடைப்பூந்துளபச்சூகாமுந்துலங்கமுடிமேற்காங்குவித்துப்
படைப்பான்முகுந்தன்வலமிடமும்பரவத்திகழ்வோன்றிருவுருவம். ௨௮

மச்சசம்ஹாரர்.

வானம்பழிச்சவலைமாக்கள்வடிவுதாங்கிவலம்புரிக்கை
மீனம்படுத்துவிழிசூன்றுவிரன்மோதிரத்தினெவ்வுயிர்க்கு
ஞானம்பயப்பக்குருவிந்தநலங்கேழ்மணிபோற்பதித்தணிந்த
கானம்படித்துச்சுரும்புளருங்கடுக்கைத்தொடையோன்றிருவுருவம். உ௯

கூர்மசம்ஹாரர்.

மகரந்திளைக்குங்கடலேழுமலங்கக்கலக்கும்பசுந்துளவ
முகைவிண்டலர்தாராமைதனைப்பற்றித்தகர்த்தமுதுகோடு
நகுவெண்டலைமாலிகையணிக்குநடுநாயகமாக்கோத்தணிந்து
புகரின்றுயர்ந்தோர்தொழப்பொலிந்தபுத்தேள்செல்வத்திருவுருவம். ௩0

வராகசம்ஹாரர்.

சுழிக்கும்புனலேழ்கடல்சுவற்றிமலைகளேழுந்துகள்படத்தீ
விழிக்குங்கடவுட்பன்றியினைவிறல்வேடுருக்கொண்டெழுந்தருளி
யழித்தங்கொருவெண்கோடுபறித்தணிந்துமற்றையிடக்கோடு
பழிச்சுந்துதிகேட்டுளமிரங்கிவிடுத்தபகவன்றிருவுருவம். ௩க

நாசிம்மசம்ஹாரர்.

நன்னுவிரண்டுதிருவடியுநனிநீள்வாலுமுகமிரண்டுங்
கொன்னுர்சிறகுமுருத்திரமுங்கொடும்பேரார்ப்புமெதிர்தோற்றிச்
செந்நீர்பருகிச்செருக்குநரமடங்கலாவிசெகுத்துரிகொண்
டொன்னுர்குலங்கண்முழுதழிக்குமுடையான்சரபத்திருவுருவம். ௩௨

கங்காளர்.

குறளாயணைந்துமூவடிமண்கொண்டுநெடுகிமூவுலகுந்
திறலானளந்துமாவலியைச்சிறையிற்படுத்துவியந்தானை
யிறவேசவட்டிவெரிநெலும்பையெழிற்கங்காளப்படையென்ன
வறவோர்வழுத்தக்கைக்கொண்டவங்கணனென்றிருவுருவம். ௩௩

காலபைரவர்.

பொலங்கொள்பங்கிமுகரோமம்பொலியவுமையோடம்புயம்போ
லலர்ந்தவிழிகளிரண்டுமெதுமுகிழ்த்தாலனையநுதல்விழியு
மிலங்கவிரவிநடுவிளங்கியிருவரிகல்போதயன்சிரங்கொய்
தலங்குமுகிரான்மருங்கமரவமர்ந்தபெருமான்றிருவுருவம். ௩௪

பிக்ஷாடனர்.

அடியிற்றொடுத்தபாதுகையுமசைந்தநடையுமிசைமிடறும்
வடிவிற்சிறப்படைந்தருளிமூழையேந்திமருங்கணைந்த
தொடியிற்பொலிதோண்முனிமகளிர்சுரமங்கையரைமயல்மூட்டிப்
படியிட்டெழுதாப்பேரழகாற்பலிதேர்பகவன்றிருவுருவம். ௩௫

பிரதிஷ்டாபயன்.

என்றுமறையாகமம்வகுக்குமின்னோரன்னதிருவுருவு
ளொன்றுகாஞ்சித்திருநகரிலுடையபெருமானேகம்ப
மன்றல்கமழுமலர்வாவிமதில்சூழ்கோயிலகவரைப்பி
னன்றுமகிழ்ந்துவிதியாற்றுப்பிரதிட்டைபுரிந்தகமுடையோர். ௩௬

எண்ணில்கோடியிளம்பரிதிசூழ்இக்கொண்டெழுந்தாலெனவயங்கி
விண்ணேவிழுங்கும்வளரொளிசூழ்விமானமேல்கொண்டிருமருங்கும்
வண்ணமணிச்சாமரையிரட்டவானோர்முடிகளடிவருடத்
தண்ணெனநறும்பூமழைபொழியத்தனிவெண்கவிகைமிசைநிழற்ற.

மிதுனம்பயிலுங்கின்னரங்கண்மெய்சோர்ந்தணுகிப்புடைவீழப்
பொதுளுந்தருக்கள்கனிந்துருகிப்புதுப்பூங்கொம்பர்தலைகுரங்க
மதுரங்கனிந்தமென்கிளவிமடவார்பாடமிடற்றிசையு
முதிருஞ்சுவைதீங்குழலிசையுமுதல்யாழிசையுந்தலைமயங்க.

பண்ணின்மழலைத்தேன்றுளிப்பப்பணிப்பூங்கதுப்பிற்றேன்றுளிப்பக்
கண்ணும்விரலும்புடைபெயர்க்கண்டோர்மனமும்புடைபெயர
வண்ணமணிமேகலையிரங்கமறுகுமிடைகருவேளிரங்க
விண்ணின்வாழ்க்கைமெல்லியலார்மின்னுக்கொடிபோலெதிர்நடிப்ப.

சென்றுசேர்ந்துபன்னெடுநாட்சிவலோகத்திற்பரபோக
நன்றுநுகர்ந்துபின்னெடுமானனினக்கிழவன்வாசவன்சீ
ரொன்றுமேனைப்பெருந்தேவருலகமனைத்துமணைந்தணைந்து
மன்றநெடுநாளாங்காங்குப்போகநுகர்ந்துவைகியபின்.

முந்நீர்வரைப்பினவதரித்துஞாலமுழுதுமொருகுடைக்கீழ்ப்
பன்னாளாண்டுமறுவலுஞ்சீர்பரவுங்காஞ்சித்திருநகரிற்
பொன்னார்வேணியேகம்பப்புத்தேளடிக்கீழ்வழிபட்டு
மின்னேர்பாகன்றிருவருளான்மீளாவீட்டினிலைபெறுவார்.

மற்றையதெய்வப்பிரதிஷ்டையும்பயனும்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஓங்குயர்விழுச்சீர்க்கம்பனார்கோயிலுள்ளுறைநந்தியெம்பிரானே
யாங்கவர்திருமுன்வெள்ளியங்கயிலையமர்ந்தெனத்தருமவெள்விடையை
வாங்குவில்வரையார்வாய்தலினிருபால்வாயில்காப்பாளரையமைப்போர்
தேங்கியசெல்வச்சிவபுரியணுகித்திருநலந்திளைத்துவீடடைவார்.

அங்குசபாசம்வரதமோடபயநாற்கரத்தமைவரக்கலைமான்
பங்கயக்கிழத்திபாங்கியர்சூழப்பத்திரபீடமேல்வைகு
மெங்கணுயகிதன்றிருவுருப்பிறவுமியற்றிவண்காஞ்சியினமைப்போர்
தங்கிளைகுளிர்ப்பநெடிதுநாள்வாழ்ந்துகடைமுறைதாளிணைசேர்வார்.

ஐங்கரப்பெருமானறுமுகக்குரிசிலறிவிலான்வேள்விபாழ்படுத்த
வன்கழல்வீரன்கேத்திரபாலவயிரவர்தம்மையாங்கமைப்போர்
செங்கதிர்துற்கைமாயனேயயனேத்திருத்தகுசிறுவினர்தாமும்
புங்கவர்வழுத்துமவ்வவருலகம்புகூஉப்பெரும்பயனுகர்ந்தமர்வார்.

அறநெறியொழுகிச்சிவாகமமறைநூலஞ்செழுத்துண்மைதேர்ந்துணர்ந்து
முறையுளிவழாதுகண்டிகைபூண்டுமுழுதுநீறணிந்துவெள்விடையூ
ரிறையவனடிக்கீழ்ப்பொதுவறுசிறப்பினெண்வகையுழுவலன்புடையார்
மறையவர்வேந்தர்வணிகர்வேளாளர்மற்றையர்யாவரேயாக.

மன்னியபிரமசரியமில்வாழ்க்கைவனம்புரிநிலையினராக
வன்னவர்தமக்குமனைநிலையிகையாதியவளித்துவண்காஞ்சித்
தொன்னகர்வரைப்பிற்கவலையின்றிருத்துந்தூயவர்கறைமிடற்றிறைவன்
றன்னருள்வடிவம்பதிட்டைசெய்தவர்க்குச்சாற்றியபயன்முழுதடைவார்.

பற்றெலாமீசன்றிருவடித்தலத்தேபதித்துடற்சார்பறநீத்த
வற்றமில்காட்சிப்பெருந்துறவுடையாரடியிணைதொழுதுபோற்றிசைத்து
சுற்றுபூம்பொதும்பர்த்தடம்புனற்காஞ்சிச்சூழலுட்பயிக்கநன்குதவப்
பெற்றவர்பெறும்பேறிற்றெனக்கிளத்தல்பெரும்பணித்தலைவர்க்குமரிதே.

பொருணிலைக்கேற்பவோவியத்தலத்திற்புகாறுபடாந்தனிலனைய
திருவடிவங்களெழுதிவைப்பவருந்தீவினைதுணித்துவீடடைவா
ரருமறைமிருதிசிவாகமபுராணமனைத்திலும்புகன்றவாபுகன்று
மருணிலைகழித்தமாசறுதவத்தீர்மற்றுளதருமமும்புகல்வாம்.

### சிவாலயபிரதிஷ்டையும்பயனும்.

கலிநிலைத்துறை.

வளங்கொள்கச்சிமாநகர்மறுகிடைவிளையாடு
மிளஞ்சிறார்களும்புழுதியிற்சிவாலயமியற்றிக்
கிளர்ந்துபோற்றினுஞ்சிவபுரங்கெழுமுவரென்றால்
விளங்குகாஞ்சியிற்சிவாலயமெடுப்பதேவேண்டும். ௪௯

நாட்டுகின்றதம்பொருள்வருவாயினுக்கிசைய
ஆட்டருஞ்சுடர்மணிகளிற்கனகத்தினொட்பங்
காட்டுதாதுவில்வெள்ளியிற்சுதையினிற்கனலிலம்
வாட்டுசெய்கலின்மரத்தினின்மண்ணினுமுதல் ௫௰

கந்தமாதனம்பனிவரைநீலம்வான்கயிலை
மந்தரந்திகழேமகூடம்வார்நிடத
முந்துபொன்வரைமுதல்குலவரைப்பெயரொன்றாற்
சந்தமேனிலைக்கோபுரமண்டபந்தயங்க. ௫௧

விளங்குநாகரந்திராவிடம்வேசரமற்றுங்
கிளந்தவற்றுளோர்பெற்றியிற்கெழுவுபேரன்பாற்
றுளங்குவெண்டிரைக்கருங்கடற்சுடுவிடம்பருகிக்
களங்கறுத்தவனாலயங்காண்டகவெடுப்போர். ௫௨

மேவுமவ்வமால்வரைநிகர்விமானமேல்கொண்டு
தேவர்மாலயன்முனிவர்சித்தரேத்தெடுப்பக்
காவிநேர்மிடற்றெம்பிரான்கயிலையைநண்ணி
யோவரும்பெரும்போகமுண்டுறைந்துவீடடைவார். ௫௩

### சீர்ணோத்தாரமும்பயனும்.

முரிந்துவீழ்ந்தனவெடித்தனவுடைந்தனமுதிய
நெரிந்தவாகியகோபுரநெடுமதிலபிறவும்
தெரிந்துமுன்னையிற்சீர்பெறப்புதுக்குவோர்பண்டு
புரிந்துளோர்பெறும்புண்ணியநான்மடங்குறுவார். ௫௪

மெய்யனாலயப்பணியுடல்விருத்தியைக்குறித்துச்
செய்துளோர்பெறும்பயனுமொண்மகமெலாஞ்செய்தா
ரெய்துமாறறிதென்றிடிலுறுதியோடியற்று
முய்தியாளருக்குரைத்திடவேண்டுவதெவனோ. ௫௫

எட்டுச்செங்கலினாயினுமீர்ம்புனல்வேணி
வட்டச்சென்னியானாலயத்திருப்பணிவகுத்த
லொட்டிப்பெற்றவிவ்வுடற்பயனாவதென்றுணர்வீ
ரட்டுத்தீவினையைந்தவித்தொழுகுமந்தணர்காள். ௫௬

### சாதனங்களும்பயனும்.

ஏற்றின்மேலவனுலயத்திருப்பணியியற்று
மாற்றமில்லருங்கோயிலினகம்புறமெங்கும்
போற்றிநுண்ணுயிர்மெல்லெனவலகிடல்புரித
னூற்றுநூறுசாந்திராயணகிரிச்சிரமோக்கும். ருஎ

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குடம்புரைசெருத்தற்றீம்பால்கொழித்திடுங்கபிலையாப்பி
யிடம்படும்விசும்பினேந்திவடித்தநீர்வாக்கியென்று
மடம்பணிசடிலத்தெங்கோனுலயமெழுகுவோர்க்குப்
படும்பயனதனினூறுமடங்கெனப்பகருநூல்கள். ருஅ

ஒலிமலர்த்தொடரிபெம்மானெண்ணிலாக்குழவிவேய்ந்த
வலர்முடிச்சடையிற்சாத்தனூற்றுநூறதிகமாகு
மலர்தொறுமுவகைபூத்துவானவர்வதிவாரந்த
நலமிகுமலர்கொண்டேத்தனுதனுக்கினிதென்றோர்வீர். ருகூ

### புட்பத்தினதிதேவதைகள்.

கன்னிகாரத்தில்வாணியலரியிற்கமலப்புத்தேள்
வன்னியில்வன்னிநந்தியாவட்டப்பூவிற்
புன்னையில்வளிநமேருப்பூவினிற்கணங்களோடு
துன்னியவெருக்கினங்கித்தோன்றல்செண்பகத்துச்செவ்வேள். சூ0

திருமகள்வில்லந்தன்னிற்சிறந்தகொக்கிறகின்மாயோன்
வருணன்வாருணமென்போதில்வகுளத்திற்சுயஞ்சைமற்று
நிருதிமென்சிரீடப்பூவிற்சாதியினிகழீசானன்
பரிதிசெங்கழுநீர்ப்பூவிற்குமுதத்திற்பனிவெண்டிங்கள். சூக

இந்திரன்மந்தாரத்தினியக்கர்கோன்பொலம்பூமத்தத்
தந்தகனபாமார்க்கத்தினருள்கூர்ந்துவாழ்வார்
கந்தமென்கமலப்போதிற்கண்ணுதலிறையேவைகும்
பைந்துகணீலப்பூவிற்பனிவரைப்பிராட்டிமேவும். சூஉ

மேதகுவாசத்தெல்லாமலைமகள்விரும்பிவைகு
மாதலாலினையபூக்களமைந்தவைகொண்டுசெய்யும்
பாதபூசனைக்கேகம்பப்பரம்பொருள்கருணைகூரும்
போதணிபுயத்தின்மேலாம்பூந்தொடைதொடுத்துச்சாத்தல். சூ௩

அவற்றினுமதிகமாகுமலர்ந்தபுண்டரிகமாலை
யெவற்றினுஞ்சிறந்தமேன்மையெழிற்கருங்குவளைப்போது
நிவப்புறுநூற்றுப்பத்தானெடுந்தொடைமாலைசாத்திற்
பவத்தொகையிரியநூறிமுத்தியேபயக்குமம்மா. சூச

ஓங்குயர்திருவேகம்பமுடையவன்றிருமுன்வாசம்
வீங்குநெய்விளக்குத்தூபம்விளைத்திடின்முருகுநாறிப்
பாங்கொளிபரப்புமேனிபடைத்துவெண்கயிலைநண்ணித்
தேங்கருட்பரமானந்தவேலையுட்டிளைத்துவாழ்வார். சூரு

மட்டவிழ்பொழில்சூழ்கம்பவரைப்பிடைமதிதேய்பக்கத்
தட்டமிபதினன்கானதினங்களினன்புகூர்ந்து
கட்டெழிற்கபிலையானெய்கலந்தகுங்கிலியத்தூப
மிட்டவர்செய்தகுற்றமாயிரம்பொறுப்பனெங்கோன். சுசு

வடித்தநீர்வாசம்பெய்துவள்ளலுக்காட்டல்செய்யிற்
படித்தலைப்பத்துநூறுபரிமேதஞ்செய்தபேறுங்
கடிச்செழுந்தயிலமானெய்கமழுமைந்தமிர்தமெம்மா
னடித்துணைக்குறுமானந்துமொன்றினென்றதிகமாமால். சுஎ

மண்டுபேரன்பினன்பான்மணிமுடிக்காட்டுவோர்பா
லண்டர்தம்பெருமான்மேன்மேலளவிலாமகிழ்ச்சிகூரும்
வெண்டயிர்கருப்பஞ்சாறுவிளைமதுபிறவுமாட்டி
னெண்டபும்வேள்வியெல்லாமியற்றியபெரும்பேறெய்தும். சுஅ

மந்திரத்திருவொற்றுடைசாத்திமான்மதங்கற்பூரஞ்
சந்தனக்கலவைசாததிச்சாந்தாற்றிப்பணிசெய்கிற்போர்
தந்திருமரபிற்கோடிதமர்களைநரகினீக்கி
யிந்துவாழ்சடிலத்தெந்தையிணையடிநீழல்வாழ்வார். சுக

நுழையுநூற்கலிங்கம்வெண்கேழ்நுரைபுரைநறும்பூம்பட்டு
விழைதகுதீவிற்றந்தவிசித்திரபடங்களன்பான்
மழைமிடற்றிறைக்குச்சாத்தின்மழுவலானுலகினேரோ
ரிழையினுக்கியம்புங்கற்பமாயிரமினிதுவாழ்வார். எ0

நால்விரலளவைகொண்டநல்லிழைதொண்ணூற்றாறிற்
சால்புறமும்மூன்றுக்கிமூன்றுறச்சமைத்தபூணூல்
சீலமோடென்றுஞ்சாத்துந்திருமறையவரைக்கண்டான்
மாலுடைப்புலையர்தாமுமறுமையின்மறையோராவார் எக

இம்மியினளவுசெம்பொனெம்பிரான்முடியிற்சாத்தி
னம்மவாங்கவர்பெறும்பேறனந்தற்குமளத்தல்செல்லா
விம்மியசெல்வர்கோடிவீசலும்வறியோர்தன்ன
முண்மையினளித்தற்கொவ்வாவுறுதியன்புடைமைபெற்றால். எஉ

வெறிமலரிண்டைமாலைவிரைகமழ்தூபதீப
மறுசுவையடிசிலான்றவெள்ளிலைபழுக்காய்மற்று
முறுகுடைகவரியாதிபூசனைக்குரியவெல்லா
முறுகுபேரன்பினெந்தைக்காககுவோர்முத்தராவார். எங

நித்தியத்திருநாள்பக்கவிழாநிகழ்திங்கட்சாறும்
புத்தலரிளவேனிற்கட்பொருவரும்வசந்தங்கோடை
மெத்தியமுதுவேனிற்கண்மிதவைநீராட்டுமாரி
மொய்த்தகார்ப்பருவந்தன்னிற்பவுத்திரமுதுவிழாவும். எச

அன்புறுகூதிர்க்காலையைப்பசிப்பூரச்சாறு
முன்பனிப்பருவந்தன்னில்வைகறைமுகிழ்த்தபூசை
பின்பனிப்பருவந்தன்னிற்பிறங்குபொன்னூசலாட்டு
மென்பனசிறப்புமாணவியற்றுவோர்வீடுசேர்வார். எரு

பொங்கரிபரந்தவுண்கட்பூவையோடொருமாசீழற்
றங்கியபெருமானூர்க்குச்சார்தருமாண்டுதோறும்
பங்குனித்திருநாட்செய்கைபழுதறுசிறப்பின்மல்க
மங்கலவிதியினற்ருல்விடைக்கொடிவயங்கவேற்றி. எசு

கலிவிருத்தம்.

முழவந்திண்டிமம்பேரிமுரசுசீ
ரொழுகுகாகளமாதிபுலம்புவ
கழிபெருங்கடல்காட்டவதனிடைக்
குழூமுபேனமொத்தொண்குடைபம்பிட. எஎ

அன்னமாக்கடற்ருேன்றியவாரமிழ்
தென்னமாதர்மிடற்றிசைப்பாடலு
நன்னர்மங்கலநாதமும்வேதமு
மன்னுமன்பர்கள்பாட்டுமலிந்தெழ. எஅ

இமயமாதியவீகையங்குன்றெலாந்
தமதிருங்குடித்தையனல்லாளொடும்
விமலர்கொள்ளும்விழாவணிகாணவந்
தமைவுகொண்டெனத்தேர்களலங்குற. எகூ

பொன்னங்கிண்கிணிபூஞ்சிலம்பின்ஞெலி
மின்னுமேகலையார்ப்பொலிமிக்குற
வன்னமன்னவணங்கனையார்குழாந்
துன்னியெங்கணுமாடன்ருெடங்கிட. அ0

சிகரமாளிகைத்தெற்றிதொறும்பயின்
மகரதோரணப்பன்னிறமாமணி
துகளில்பேரொளிதுன்றியவீதியும்
புகரில்சித்திரந்தீட்டியபோலுற. அக

பூகமும்பசும்பொற்குலைவாழையு
மாகமுந்திடநாட்டிவயக்கிய
போகுபந்தரும்பூரணகும்பமு
மேகுமவ்விடந்தோறுமிலகிட. அஉ

வளியுலாமதர்மாளிகைசூளிகை
குளிர்கொண்மண்டபங்கோபுரமீதெலா
நளிமலைத்தலைநன்கொடிபூத்தெனக்
களிமடக்கொடியார்களுலித்தொழ. அந

குங்குமக்குழம்புங்குளிர்சாந்தமும்
பொங்குவாசப்புதுப்பனிநீரொடு
வெங்கண்மங்கையர்பந்தினில்வீசுவ
வெங்குமல்கியடிகளிழுக்குற. அச

முடிகடம்மினராவிழுமணி
படியிலுக்களபாறினங்கொண்மினென்
றுடையமாந்தர்க்கறிவுறுத்தாங்கவ
ரடிகள்பேதுறத்தங்கங்கவிர்தர. அரு

இளிந்தபூகத்திருங்கனிவெள்ளிலை
யொளிர்ந்தபொன்மணியொண்பொரிபன்மல்
ரளிந்தபல்பழமாதியிறைப்பன
குளிர்ந்துவீதிகுழீஇத்திடர்செய்திட. ௮௬

கவளயானைக்கடாமழைத்தாரையு
மிவுளிவாயினிழிந்தவிலாழியு
முவரியாகியுயர்ந்தவத்திட்டையைத்
திவளமோதிப்படர்ந்தனசெல்லவே. ௮௭

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கல்வரைப்பிராட்டிசெவ்வேளைங்கரன்கணங்கள்சூழப்
பல்வகையூர்தியும்பர்ப்படரொளியரசவீதி
யெல்லையிலுயிர்கட்கெல்லாமெண்ணருங்கருணைபூத்துப்
புல்கொளித்திருவேகம்பன்றிருவுலாப்போதச்செய்வோர். ௮௮

மேதகுதவந்தானங்கள்வேள்விகளனைத்துஞ்செய்தோர்க்
கோதியபயத்திற்கோடியுடையராய்க்கோடிகோடி
யேதமில்குலத்தினோடுமெம்பிரானுலகின்வாழ்ந்து
சாதலும்பிறப்புமில்லாத்தத்துவந்தலைப்பட்டுய்வார். ௮௯

இத்தகுகடவுட்சாறுநோக்கியங்கிறைஞ்சுவோரு
மத்தகுவிழவினீற்றிற்றீர்த்தநீராடுவோரும்
பைத்தபாம்பல்குற்செவ்வாய்ப்பணிமொழியொருபான்மேய
வித்தகன்கயிலைநண்ணிவிறற்கணநாதராவார். ௯௦

ஏழுயர்ந்தேழுமண்டோய்ந்திலக்கணநிரம்பும்வேழங்
காழ்மணியணிகள்பூட்டிக்கவின்பெறவிருத்தியோடுங்
கோழரைத்தனிமாநீழற்குழகனுக்குதவப்பெற்றோர்
பாழ்வினைச்சிமிழ்ப்பிற்றீர்ந்துதிருவருள்பற்றுவாரால். ௯௧

நலமிகும்பரிமாவாக்கணுடகக்கணிகைநல்லார்
நிலநகர்நாடுமற்றுநெடுமனைறமாவின்மூலத்
தலைவனுக்கினிதுநல்குந்தவத்தினோர்கயிலைநண்ணி
யலகில்பல்லூழிவாழ்ந்தங்கரும்பெறல்வீடுசேர்வார். ௯௨

மாயிருமறைகண்மற்றும்புத்தகத்தெழுதிக்கம்பக்
கோயிலினமைப்போர்வெள்ளிக்குன்றிடையெழுத்தொவ்வொன்றற்
காயிரங்கற்பம்வாழ்வார்சிவாகமமமைக்கும்பேறு
மேயினோரெய்தும்பேற்றையாவரேவிளம்பவல்லார். ௯௩

வண்டுளர்தனிமாநீழல்வள்ளலுக்கன்புகூர்ந்து
பண்டுளோராக்குமின்னவறங்களைப்பாதுகாப்போ
ரொண்டிறலன்னோர்பேற்றிற்பதின்மடங்குறுவர்மையல்
கொண்டிவைகாவாவேந்தர்நிரயமேகுளிப்பருண்மை. ௯௪

அனந்தராலவற்றொன்றேனுங்கவருநரையமின்றி
யினம்பயில்கடும்பினோடுங்கெடுவராலினையநீராற்
றனங்களுங்கிளையுந்துன்றத்தங்குதல்விழையும்வேந்தர்
கனம்பயில்பொழில்சூழ்காஞ்சியுறுதியின்வழாதுகாத்தல். ௯௫

கச்சியின்வாவிகூவல்கடிபொழில்வகுத்துப்பேணிப்
பொச்சமில்சிவநேசர்க்குப்பொருணிலம்வதுவையீவோர்
நிச்சலுமன்னதானநிகழ்த்துவோரெய்தும்பேறு
பச்சிளங்கொடியினோர்பாற்பகவனேயறியுமன்றே. கூகூ

சொல்லுமித்தருமவாய்மைத்தொகுதியுள்யாதொன்றானும்
வல்லுநர்வல்லாராகமதிபொதிவேணியார்கசு
நல்லரசிருக்கையாயகாஞ்சிமாநகரினோர்நா
ளல்லதோர்கணமேயானுமமர்ந்திடிற்பிறப்புநீப்பார். கூஎ

கண்டிகைநீறுதாங்கிக்காலையுமாலைப்போது
மண்டர்கோனடிகள்போற்றியடியவர்பூசையாற்றித்
தொண்டினலங்கண்வைகுந்தூயவர்தமக்கேகம்பத்
தொண்டொடிபாகனெங்கோன்கருணைகூர்ந்துதவுமுத்தி. கூஅ

பற்பலபேசியென்னேபருவருநிரயத்துன்புந்
துற்றபல்யோனிதோறுஞ்சுழன்றுழல்பிறவிநோயு
முற்றிடுமாண்டாண்டெய்துமுறுதுயர்பலவுநோக்கி
மற்றிவையொழிதல்வேட்டோர்காஞ்சியில்வதிதலவேண்டும். கூகூ

காஞ்சியேகலியில்வசித்தற்கிடமெனல்.

கலிவிருத்தம்.

காமருஞ்சிவிகைகள்காவியாயினுந்
தோமுறுபிறர்சுமைசுமந்திட்டாயினுஞ்
சாமியென்றிழிஞர்தம்பணிசெய்தாயினு
மாமதிற்காஞ்சியின்வதிதல்வேணடுமால். க00

கழுதைமேய்த்தாயினுமற்றுங்காழ்படு
மிழிதொழிலியற்றியுமிரந்துண்டாயினு
மொழிவறுபத்தியினுறுதியாளராய்
வழுவறுகாஞ்சியின்வதிதல்வேண்டுமால. க0க

பாதகமிகுதியோர்பதிதர்மூர்க்கர்கள்
போதமில்கயவர்கள்புலையராயினு
மாதர்வன்காஞ்சியின்வதிவராயிடிற்
கோதறுகலியினின்முத்திகூடுவார். க0உ

ஔவியங்கொலைகளவாதிமிகுதுடைக்
கௌவைகூர்கொடுந்திறற்கலியுகத்திடைத
தெய்வதக்காஞ்சியந்தேயத்தன்றிமற்
றெவ்விடத்தெய்தினுமுத்தியில்லையே. க0௩

இல்லைவைதிகநெறியில்லைநல்லற
மில்லைநால்வருணமாச்சிரமமில்லையா
மில்லைமாணுக்கர்களில்லையாரிய
ரில்லைநல்லொழுக்கமுங்கலியினென்பவே. க0௪

வைதிகசைவநூன்மானக்கோளிலை
பொய்யிலைந்தெழுத்திற்கண்மணியிற்பூதியி
லைமுகப்பிரானிடத்தன்புமிவ்வுகத்
தெய்திடுமிருபிறப்பாளர்க்கில்லையே. க0௫

தாபதப்பிருகுமெய்த்ததீசிகௌதமன்
சாபமன்றியுங்கலிதோடத்தான்மிகத்
தேய்பொருட்பாஞ்சராத்திரம்பவுத்தமாம்
பாபநூலுறுதியேபனவர்க்குண்டரோ. க0சு

யாதுகொல்கலியதனியல்புமங்கதற்
கேதமுமதன்மிறைகாஞ்சிக்கின்மையு
மோதுதிவிரித்தெமக்கெனவுரைத்தலுஞ்
சூதமாமுனிமுனிவரர்க்குச்சொல்லினன். க0எ

யுகம்நான்கும்வரம்பெறல்.

கலிநிலைத்துறை.

சகமெலாமலைமாதொடுந்தன்னகத்தொடுக்கிப்
பகலிராவுளதிலதெனும்பகுப்பிலக்காலைப்
புகழ்படைத்ததாருவனேவைகிமுன்போல
வகிலலோகமும்படைத்திடக்கருணைசெய்தருளி. க0அ

அறிவுமிச்சையுஞ்செய்கையுமடைவுறத்தோற்றி
வெறிமலர்த்தவிசிருக்கைவேதியனைமுன்படைத்து
மறைகளீந்துபின்மாயனையும்பரையுலகை
முறையினின்றளித்தருளினன்முக்கணெம்பெருமான். க0கூ

மன்னுநான்மறைவேதியர்மனனவர்வணிகர்
பின்னுளோருடன்வீடறம்பெரும்பொருள்காம
மென்னுநான்கினையிசைவுறததோற்றியிங்கான்கிற்
பன்னுசீருகப்பெயரியநான்கையும்படைத்தான். கக0

கனிந்தகாதலாலன்னவைகாஞ்சியைக்குறுகி
யனந்தபற்பநாபீச்சரந்தனக்கயல்வடபான்
மனந்தழைத்திடச்சிவக்குறிநிறுவிநாண்மலர்கள்
புனைந்துபோற்றிநின்றருந்தவமாற்றிடும்பொழுது. ககக

கம்பநாயகர்விடைமிசைக்காட்சிதந்தருளி
யிம்பர்வேட்டதுவினம்புமின்றருதுமென்றருள
வம்புலாமலர்தூய்த்தொழுதிறைஞ்சிவாழ்த்தெடுத்துத்
தம்பிரானெதிருகங்கண்மற்றின்னதுசாற்றும். ககஉ

நரகும்வானமுநல்கிடும்பனிவரைத்தென்பாற்
கருமபூமியையாம்பகுத்தாள்கருத்துடையேம்
பெருமநீபகுத்தெங்களுக்கருளெனப்பேசித்
திருவடித்துணைபழிச்சலுஞ்சேவுடைக்கொடியோன். ககங

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கருமநிகழ்ப்பாரதமாம்வருடமிசைக்காலப்பேரிறைமைநும்பா
லிருவினைமாண்டள்வையொன்றொழிந்தபதினொருநான்கிலக்கமேலா
லிருபதினாயிரமுறுகவிங்கிவற்றைநால்வீர்க்குமேயுமாற்றால்
வருமுறையிற்கூறுபடுத்துதவுதுமென்றருள்செய்துவகுக்கலுற்றான்.

அருள்பயக்கும்வீடுதவுங்கான்முளையாங்கிருதயுகமூத்தோயாதி
தெருள்பயக்குமறம்பயக்குந்திரேதாநீயிளையோய்காண்செப்புங்காலைப்
பொருள்பயக்குந்துவாபரநீயிவர்க்கிளையாய்பொலிவுபெறுகாமமீன்ற
மருள்பயக்குங்கலியுகநீமூவருக்குமிளையோயாய்வயங்குவாயால்.

வேதியனேகிருதயுகம்வேல்வேந்தன்றிரேதாமெய்வணிகன்ருனே
யோதுதுவாபரமேனேன்கலியாகுமிம்முறையானுமக்குவைத்த
வேதமிலிந்நாற்பத்துமூன்றிலக்கத்திருபதினுயிரமாமாண்டும்
பேதமுறுமீரைந்துகூருகப்பகுத்தந்தப்பிரிவின்மன்னே.

கிருதமோர்நாற்கூறுமுக்கூறுதிரேதாவுங்கிளந்துகூறு
மிருகூறுதுவாபரமுமொருகூறுகலியுகமுமெய்துவீராற்
பெருவாய்மைமறையாகநாற்குலத்துமனேவியர்பாற்பெறுஞ்சேய்கட்கு
வருகூறுமிவ்வாறேநான்குமூன்றிரண்டொன்றுவழக்கமாமால்.

இவ்விடையேற்றறக்கடவுண்முறையானேயெழிற்கிருதமுதலீர்நும்மை
யெவ்வமறுநாற்பாதமுப்பாதமிருபாதமொருபாதத்தாற்
கௌவையறநடத்திடநீர்காசினியைநடாத்திடுமின்முதன்மூவிர்க்கு
மௌவியமிலம்புயத்தோனிரவிமாலிவர்முறையேயிறைவராவார்.

தீமையேமிகப்படைத்தகலியிவராற்காப்பரியதிறத்தாலிந்த
நாமநெடுங்கலிநாளின்மன்பதைகள்புரப்பதற்குநாமேயுள்ளேங்
காமருசீருகங்காண்மற்றின்னுமொருமொழிகேண்மின்காதல்கூர்ந்தி
யாமினிதுமகிழ்ந்துறையுங்காஞ்சியிடைநும்மவத்தையெய்தாதாக.

வெய்யகொடுங்கலித்தீமைசிறிதுமிவணுறல்வேண்டாவிவ்வாறென்று
மையகலகம்மாணேவழியொழுகியுய்மினெனவரங்களீந்து
கையொளிருமழுப்படையோனருள்செய்தானதலினிக்கலிநாண்முத்தி
யெய்தியிடும்விழைவுடையோர்திருக்காஞ்சியிடம்பிரியாதிருத்தல்வேண்டும்.

நந்திபிரானருள்பெற்றுச்சனற்குமரனவின்றபடிவியாதமேலோ
னிந்துவாழ்சடைப்பெருமான்றிருவடிகாண்பதற்கேதுவிதுவேயென்ன
வந்திலெனக்குரைசெய்தவரும்பொருளிங்குமக்குரைத்தேனறிவினுன்ற
சிந்தையீர்தெளிமினெனச்சூதமுனிமுனிவரர்க்குத்தெருட்டினுனல்.

சிவபுண்ணியப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - உஎசஉ.

---

முதற்காண்டம்முற்றியது.

---

சிவஞானயோகிகள்சேவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவாவடுதுறைக்கச்சியப்பமுனிவரர்

அருளிச்செய்த

# காஞ்சிப்புராணம்.

## இரண்டாங்காண்டம்.

காப்பு.

கலிநிலைத்துறை.

பதட சக்கர முதற்பலபவமெனுந்துயரி
னிகட சக்கரங்கடத்திடுநெடும்புணை விண்போழ்
முகட சக்கரவாளத்திற்சூழ்வினைமுடிக்கும்,
விகடசக்கர தந்திமென்மலரடித்துணையே.

## கடவுள்வாழ்த்து.

திருவேகம்பநாதர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மழலைவண்டிமிருங்கொன்றைமாலிகைதுவற்றுந்தேனுங்
குழவிவெண்மதியுநீருந்தருகுளிர்க்குடைந்தான்மானத்
தழல்விழித்தலத்துமங்கைத்தலத்தினுமேந்தியாடு
மழகனைத்திருவேகம்பத்தடிகளைவணக்கஞ்செய்வாம். ௧

காமாட்சியம்மை.

முறுவலித்தருளுந்தோறுமொய்த்தெழுநிலவுபொங்கி
யுறைபடத்துளித்தவில்லேயொழுங்குறக்கிடந்தாலென்னப்
பிறைவடஞ்சுமந்தகொங்கைப்பேரமைத்தோளிமம்மர்க்
கறைதபுகாமக்கண்ணிகழலிணைகருத்துள்வைப்பாம். ௨

## நூல்வரலாறு.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வியன்சனற்குமாரசங்கிதைதெரித்தமேன்மையீண்டறைந்தனமிதன்மே
லியம்புபல்வேறுபுராணத்துமாண்டாண்டிலகியகாஞ்சிமான்மியத்தை
யயக்கெடுத்தொழுங்குபடத்தொகுத்துரைப்பான்புகுந்தனமுன்னவிஸ்பிரமாண்டத்
தயன்சனற்குமாரன்றெளிதரத்தெருட்டிடுமற்புதக்காதைகட்டுரைப்பாம்.

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

# 64. திருக்கண்புதைத்தபடலம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நிலத்திடைச்சிறந்தநகரென்ப்படுவநீள்புகழயோத்திமாமதுரை
மலர்ப்பொழிற்காசியவந்திகைதுவரைமாயைவண்காஞ்சியென்றுரைப்ப
மலக்குறும்பறுக்குநகரமேழுள்ளுமேம்படுகாஞ்சிமற்றதன்கட்
பலப்பலதளியுளேழுநான்கதிகம்பகர்தருமவற்றுண்மூன்றதிகம். க

அன்னவைகச்சபாலயங்காயாரோகணங்கம்பமாமவற்றி
னின்னநீர்பலாசுகூவிளஞ்சூதமெனப்படுமரங்கண்மூன்றுளவான்
முன்னுமத்தருக்கண்மாடுறவாணிதிருவுமைமூவருமென்று
மன்னினர்வழுத்தப்படைத்தளித்தழிப்பார்வடிவமாய்த்திகழுமத்தளிகள்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பஞ்சதீர்த்தத்தவள்காஞ்சிப்பதியாண்மணித்தானத்துடையா
ளஞ்சந்தியினில்வாழ்வாள்சேயாற்றங்கரையாள்கீர்த்திமதி
கஞ்சவதனத்தென்மலையாள்காப்புத்தீர்த்தத்தவளென்னுந்
துஞ்சுமிளவண்டுளர்கூந்தற்றுற்கைகூற்றினெண்மர்களும். ௩

புரைதீர்கருப்பத்தானத்திபோற்றுமம்பிகாபுரத்தி
தரைசூழ்கோடிமாரணைதன்காயோற்காரகாரணிசீர்
வரையாவென்றியிலயசித்துப்பீடாபுரத்திமணிசிந்துக்
கரையாள்கூவத்தவளென்றுகாளிகூற்றினெண்மர்களும். ௪

சத்திபீடமுருத்திரனுர்பீடஞ்சசாங்கமாபீட
முத்திபீடமாரியைதன்பீடந்தருமமுதற்பீடம்
பித்தரணுகாவுயராதிபீடம்யோகபீடமென
நித்தநினைப்போரிடும்பையெலாநீக்கும்பீடமோரெட்டும். ௫

உரைக்குமிரவிமதிகனலிசுவணமமிழ்தமுறுபெயரான்
வரப்புட்கரணித்தடமைந்தும்வாசுதேவனாரணனே
பிரத்துமினனோடனுருத்தன்சங்கருடணனெனப்பீதாம்
பரத்தன்பகுப்பினைவர்தொடும்பஞ்சதீர்த்தமுதற்பலவும். ௬

மதுகைசான்றகணநாதர்மருவுசாத்தரெண்மர்களு
முதுமாதவத்தோர்பலரிமையோர்மொய்பூங்கூந்தலரம்பையர்கள்
பொதுமையிழந்தபலசமயத்தெய்வம்பூதம்பேய்பலவுங்
கதுவித்துவன்றவிறும்பூதுகவினிப்பொலியுந்திருக்காஞ்சி. ௭

இனையசிறப்பாற்பன்னிரண்டுதிருப்பேர்படைத்தவிவ்வரைப்பி
னனையபொழில்சூழிமயவரைப்பிராட்டிநணுகிவழிபட்டு
நினைவார்க்கினிக்குமேகம்பநிதியையிறுகத்தழீஇக்கொண்டு
முனைவன்மேனிகுழைத்ததிறமொருவாறிங்குமொழிகின்றாம். ௮

கலிநிலைத்துறை.

செறுத்தவன்றிறலரக்கனைத்திருவடிவிரலா
லொறுத்தஞான்றவன்வாய்திறந்தலறுபேரோதை
மறுத்தடாதின்னுமதிர்ந்தெனவயின்வயினருவி
வெறுத்தபூம்புனன்முழக்கறுவெள்ளிமால்வரையில். ௯

முடங்குவாலுளைமடங்கலேற்றணைமிசைமுனிபு
மடங்கலார்புரஞ்செற்றவரினிதமர்ந்தருளி
யுடங்குவந்துதாழும்பர்கோன்றிசைமுகன்பணிலக்
குடங்கையாளிதங்குறைவினைத்திருவருள்வழங்கி. க௦

எல்லையில்பெருங்கருணையால்விடையளித்தெழுந்தாங்
கல்லிமென்மலர்த்தொங்கல்சூழுவளகத்தணுகி
வல்விரைந்தெதிர்கொண்டடிவணங்குமாலிமயச்
செல்விதன்னைமுன்றழீஇக்கொடுபள்ளியிற்சேர்ந்தார். கக

அங்கணுருயிர்த்தொகைக்கெலாமளப்பரும்போகந்
தங்குமாட்சியின்றலைநின்றுபழையனதணப்பப்
பொங்கொளிப்புதுப்பூண்பலவணிந்துபூந்தவிசி
னெங்கணாயகருமையொடுமகிழ்ந்துவீற்றிருந்தார். க௨

அம்மையப்பராயகிலமும்படைத்தளித்தருளு / [illegible] - 126
மெம்மையாளுடைப்பேரருளிருதிறத்தவரும்
தம்முளின்னணங்களித்துவாழ்ந்துறையுழித்தணந்தோர்.
மம்மர்கூரிளவேனில்வந்திறுத்ததுமாதோ. க௩

மலயமாதவன்றமிழ்ச்சுவைதெரிந்தவான்றென்றல்
கலைவிளங்கியவடமொழிச்சுவையையுங்காண்பான்
குலவுதண்மையும்வெம்மையுமணமுங்கொண்டெதிர்ந்தாங்
கிலயம்வார்பொழிலியற்றவந்துலாயதுமன்றே. க௪

துன்றுதம்வளமுழுவதுந்தொலைந்தபூஞ்சோலை
தென்றன்முற்றலும்பண்டையிற்செழித்திடுஞ்செயலா
னன்றுமென்புபெண்ணாக்குநற்றமிழ்ப்பயின்மலயத்
தோன்றுதென்றலுஞ்சித்திமிக்குடையதுபோலும். க௫

புனிதமென்றளிர்கஞலியபூம்பொழிற்பொலிவு
பனியெனுங்கொடுங்கோலனைப்பலர்புகழ்வேனி
லெனுமனுக்குலத்தவனிறுத்திறத்தபுன்கான்ற
கனலியொத்தநெய்த்தோர்பரந்திட்டதுகடுக்கும். க௬

தளிர்த்தமென்றளிர்ச்சேயொளிததைபொழிற்றோற்றம்
வெளிப்படாவகையொளித்துவெவ்விருட்பகைநாளுங்
களித்துவைகிடமிதுவெனக்கதிரவனங்க
ணொளிப்பிழம்பெரியூட்டநின்றொளிர்வதும்புரையும். க௭

நெருங்குபன்மலர்நிரம்பியகாட்சிகாமுகர்மே
லொருங்குவெங்கணைசொரியுநாளிதுவெனவுன்னிப்
பருங்கரும்பினூன்றனதுபாசறைக்கணேவாது
பொருங்கடன்படப்பூங்கணைதுறத்ததுபோலும். க௮

புரிமுறுக்குடைந்தலைத்தெழும்புதுமதுத்தோய்ந்து
விரிமலர்த்திரடோற்றியபொலிவுவேட்குரிசி
லுரியவன்சமருளுற்றுவாளொழுகுதன்கணையிற்
றுரிசகற்றநெய்பூசியதொழின்மையேதுணையும். க௯

தேந்துளிப்புனறெளித்துநன்சுண்ணமேற்சேர்த்தி
யேந்தலர்த்தவிசுள்ளெலாமிட்டுவெண்காவு
பூந்தண்வார்கணைமதன்விழாப்பொலிவுறப்போது
மாந்தர்யாவரும்வைகுமாறழகுசெய்தமைக்கும். ௨௦

அயிற்குழாம்பொருகண்ணியர்குரலெனவகவுங்
குயிற்குழாங்குடைகாஞ்சியின்கோமளத்தாது
வெயிற்குழாமறைத்திருவிசும்பிருள்செயநோக்கி
மயிற்குழாமெழுந்தாடுவமழையெனமருண்டு. ௨௧

கடம்புசண்பகங்கன்னிகாரங்கணிகடுக்கை
யடம்புவில்லமென்போதவிழ்நறுந்துகளெங்கு
மிடம்பெறுவெயில்செய்தலிற்பகலெனவிரவு
நெடும்பசும்பொழிற்கயத்துறைநேமியின்புறமால். ௨௨

வார்புனைந்தபூண்வனமுலைமாதரையிசையாற்
போர்புரிந்துறவழைப்பனபோலவும்பொழில்கள்
சீர்புனைந்தமைதெரிப்பனபோலவுங்குயில்க
ளாரபுமென்றளிர்கொழுதிநின்றுலுவவெங்கும். ௨௩

செக்கரம்புயந்தைதடஞ்செழுங்கனற்குண்ட
மொக்குமன்னதன்கரைப்பஃறுதுகுபுளினந்
தக்கநூன்முறையாற்றினுற்றயங்குநுண்பொடிக
டொக்கபன்னிறச்சருப்பதோபத்திரந்துணையும். ௨௪

சிலதர்தேனழித்தமைத்துமேற்றெங்கினமுகுத்த
குலவுதீங்கனிமூடியங்கிருத்துபொற்குடந்தா
னலரவூழ்த்துதிரணிமலர்மென்றளிரேந்தி
யிலகுவேனில்வேளருச்சனைக்கும்பமொத்திலங்கும். ௨௫

விழுந்தமாதுளங்கனிவனச்சிறார்விளையாட்டா
னெழுங்கவாயிடையுறுத்தினமாவிலைசெருகிச்
செழும்பொனீர்க்கலசங்கள்சுற்றமைத்தெனத்திகழுந்
தழைந்தகொம்பரினுகுவனசமிதையிற்றதையும். ௨௬

முருங்கைபுன்குகான்றுக்கபூமுகைகள்வெண்பொரியி
னெருங்குநீனிறப்பூவையாதிகணெகிழ்ந்துகுவ
மருங்குதொக்கனவெண்முதலொன்பதுவகையு
மொருங்குமல்கியதோற்றமொத்ததிசயம்விளக்கும். ௨௭

இடங்கொள்பூந்தடமெடுத்தெறியூன்கழிகூர்மத்
தடங்களோடும்வெண்பணிலமுந்தளிர்த்தகார்ப்பொதும்ப
ருடங்குவாக்குசெந்தேனிறைந்துறுவனநறுநெய்க்
குடங்களோடெரிகூர்க்குநெய்யகலெனக்குலவும். ௨௮

கிளியும்பூவையுங்குயில்களுமஞ்ஞையுங்கிளையு
மளியுமாறுகூயாலுவமுறையுளிவழாமை
யொளிர்செழுங்கனலோம்புமத்தலைமறைமனுக்கள்
களிகொள்சிந்தையிற்சந்தையிறோதுநர்கடுக்கும். ௨௯

வண்டுபாய்ந்துபாய்ந்துழக்குதோறுவியின்மலர்ந்த
முண்டகத்தினின்றெழுந்துகண்முழக்குவெங்கனலிக்
குண்டகின்றெழும்புலிங்கமேயுறழ்தருவகொழுந்தே
னுண்டுவானெழுஞ்சுருப்பினம்புகையினையுறழும். க0

ஏமமல்கியவின்னபல்வளம்பயில்காட்சித்
தூமலர்ச்சினைசெறிமாப்பசும்பொழிற்றோற்றம்
பூமருங்கணைமாரனூற்பொருளறிவுறப்போர்
காமதீக்கைசெய்கவின்பொலிசாலையுங்கடுக்கும். கக

முருக்குபோர்புரிகாலம்வந்தடுத்தமைமுன்னித்
தருக்குவேல்கணைமாசறக்கழுவியதகைபோன்
மருக்கொடாமரைத்தேம்பொழிநறுமலரனைத்துந்
திருக்குலாவினபணிபடககருகியதிறம்போய். கஉ

கொழுதுவண்டுலாமங்கையர்கருங்குழல்புரையப்
பழுதில்பூந்துகண்மலர்தளிர்பரித்துநுண்ணறல்கண்
முழுதும்வார்ந்துகட்புலப்படமூரிநீர்குறுகுந்
தொழுதியோதிமம்பயினதித்துறைதுறைதோறும். கங

அறுசீரகழிநெடிலாசிரியவிருத்தம்.

சிறுவளிக்கொடிஞ்சித்திண்டேர்செலுத்திவந்திறுத்தவைங்கோல்
பெறுசிலைக்குரிசிறன்னைக்காணியபெட்டாற்போல
வுறுநலநுகர்ச்சிகொண்மாரொண்ணகர்மாக்களெல்லா
முறுகியகாதல்பொங்கமுன்னுவார்பனிப்பூஞ்சோலை. கச

தெள்ளமுதயின்றூர்மானச்சிந்தையிற்களிப்புத்துள்ள
வள்ளெயிற்றணங்கனுருமைந்தருநுகர்ச்சிமேலா
னுள்ளகநெருங்கிச்சென்றகிளர்ச்சியானும்பர்நாடும்
வெள்ளுறச்சிறந்தவென்பவியனகரிருக்கையெல்லாம். கரு

முழங்குறுமதுப்பெய்தண்டுமுருகுலாமெண்ணெய்த்தண்டுந்
தழங்குமானிழுதுத்தண்டுந்தண்பனிநறுநீர்ச்செப்புங்
குழங்கன்மாலிகைப்பூஞ்செப்புங்கூட்டமைகலவைச்செப்பும்
வழங்கியவாசச்சுண்ணமான்மதச்சாந்துச்செப்பும். கசு

கடகமுங்குழையுந்தோடுங்கதிர்மணிவடமும்பூணும்
வடகமுந்துகிலுமற்றும்வகைவகையமைத்துமூடும்
படலிகைக்குலமும்வேட்குக்கையுறைபரிப்பதேய்ப்பச்
சுடரிழைத்தோழிமார்களேந்துவதொகையிலாத. கஎ

மாடமேலிருந்துதாங்கள்வார்மணிச்சிவிறிவீசும்
பாடமைபனிநீர்தோய்ந்தகுங்குமச்சேறுபாய்ந்த
வாடகவீதிமன்றவழுக்குமென்றஞ்சினர்போற்
றேடருமணியிற்செய்தசிவிகையினிவர்ந்தார்சில்லோர். கஅ

மறப்பெருந்திறத்தாற்சுற்றம்புறந்தருமாண்பாலேனை
விறப்பவுந்தோற்றுத்தம்மையெடுத்தனசுமத்தல்போலப்
பறப்பளியிமிருந்தானைப்பருமிதக்களிநல்யானை
சிறப்புறுகளிப்புத்துள்ளவிவர்ந்தனர்மைந்தர்சில்லோர். ககூ

நடைத்திறங்கற்பத்தத்தானந்தலைக்கானநீங்கிக்
கடைத்தலைபன்னுட்காப்பக்கருணைகூர்ந்தூர்ந்துமேன்மை
படைத்ததன்னடையைச்சாலப்பயிற்றுவார்மானக்கோலப்
பிடித்திரளிவர்ந்தார்காமர்பெண்களிமடவார்சில்லோர். ௬௦

வாரினல்விசித்தமாதர்வனமுலைதாக்கவிள்ளுந்
தாரினல்வனப்பாற்காமன்றனைப்புறங்காணத்தென்றற்
றேரினனவனென்றெண்ணித்தாங்களுந்தேரூர்வார்போ
லேரிளற்பொலிந்தவையமிவர்ந்தனர்புகன்றுசில்லோர். ௬௧

எத்திறத்தரசனின்றுனத்திறத்தினிதுவைகும்
பைத்தநீர்ஞாலமென்னும்பழமொழிபுதுக்குவார்போன்
மொய்த்தெழுதென்றற்றேரான்முனைகெழுபடையாயுள்ள
தத்தைமென்கிளவியாருமிவர்ந்தனர்தடந்தேர்சில்லோர். ௬௨

விரியொளிகினதுபொற்றேர்மென்னடைக்காலையெங்க
ளுரியகொய்யுளைகள்சண்டவுலவையென்றழகாற்றம்மோ
டரியபோரேற்குங்காமற்கறிவித்தச்சுறுத்துவார்போற்
பரியினமிவர்ந்தார்வீங்கும்பாழித்தோண்மைந்தர்சில்லோர். ௬௩

ஒழுகியவுதரபந்திமடிப்பிறைலுடைந்துவெள்கிச்
செழுவியகடலில்வீழ்ந்ததிரையினையஞ்சலென்னக்
கழிசிறப்பளித்தாலென்னக்கலன்பலவணிந்துபாய்மா
விழுமியவமுதங்காலும்விழியினரிவர்ந்தார்சில்லோர். ௬௪

மாக்கதிரெறிக்கும்வெய்யோன்வாளொளிகரந்துமாய
மேக்கொளிகொளுந்துங்காமர்வெண்மணிமாலைவேய்ந்து
தூக்கியகவிகைபிச்சந்தூமணியூர்தியாதி
நீக்கறத்துவன்றியெங்குநிழற்றமேற்பிடித்துக்கொண்டார். ௬௫

இழையொளியிரதப்பந்தியிலங்கொளிகவிகைக்காடு
பொழியொளிதகர்த்தசெம்பொற்பொடியொளிமாதர்மூரன்
முழுதொளிமைந்தர்வெள்வேன்முதிரொளியிமைக்குமாற்றாற்
றழையொளியிரவிமாய்ந்துஞ்சார்ந்திலதிருளின்வீக்கம். ௬௬

அரிபரந்தகன்றவாட்கணங்கலாரிரட்டவார்ந்து
முரிதிரையென்னத்துள்ளுமுழுநிறக்கவரிக்கற்றை
யெரிமணிக்கோவைசுற்றினிணக்குசாந்தாற்றிவெப்பம்
பரிமணியாலவட்டம்பதாகையுமலிந்தபாங்கர். ௬௭

தழங்குபேரோதைவிம்மத்ததைந்தமாசனத்தினீட்ட
மழுங்கியகடலேயென்னவமாருமயிர்த்துநோக்க
முழங்கினசங்கநாதமுரன்றனசின்னங்காளம்
வழங்கினகலிப்புப்பேரிவங்கியமாதியெல்லாம். ௬௮

இடைதெரியாதுதம்மைச்சுமந்துமிக்கெய்ப்பநோக்கிப்
புடைநகர்ப்புறம்போயந்தவெய்ப்பினைப்போக்குவார்போற்
கொடியபின்மாடப்பந்திக்கோணையுண்ணகாநின்று
நெடுமெதில்வாய்தனீங்கியென்னருநெருங்கிப்போந்தார். ௬௯

கரியினமுலம்புமோதைகவனவாம்புரவியோதை
தெரிமணித்தேரினோதைசிலம்புகிண்கிணியினோதை
புரிகுழற்சுரும்பரோதைபொலஞ்சுடரிழையினோதை ,
யுரைமொழியோதைதோற்றுதொழித்தனவிசும்புகாறும். ௫0

மதனுறைபாசறைக்குவழிக்கொண்மாத்திரையேபூங்கோல்
புதைபடவருந்தியாங்குப்பொருகரிபரிகளூருஞ்
சிதாரிவிழியினல்லாரவைகள்செண்டாடனொந்து
நுதல்வியர்பொடிப்பக்கூந்தல்சோரமெய்நுடங்கானின்றார். ௫க

மதகரிகொடிதுவாங்கிவாம்பரியேற்றுகென்பார்
கதழ்நடைமாவும்வேண்டாகாலிடையேற்றுகென்பார்
பிதிரொளித்தேருநஞ்சேபெருநிலத்திறக்குகென்பார்
குதலைமென்சொல்லார்துன்பேபழகுறுவினைமேற்கோடல். ௫உ

மயிலனும்மானையஞ்சேல்வருகின்றேன்பாங்கரென்பார்
குயிலனும்முந்தேலொன்றாய்க்கூடினம்போதுமென்பார்
தயனலாய்பொதும்பர்தேசார்ந்தனமென்பாரங்கை
யயிலினாரின்னவாறேயறைந்தனர்கலந்துசென்றார். ௫௩

பொதும்பரைக்குறுகியூர்திபொள்ளெனவிழிந்துவேகக்
கதம்படுவேழமாதிகளும்றுழிகளூற்றியாத்துக்
குதம்பைநான்றொருத்தினீவகொண்கரோடன்பிற்பின்னிப்
பதம்பனிப்பெய்தவுள்ளாற்படர்ந்தனர்பாவையன்னார். ௫௪

தூமணிவிளக்கமல்கித்தூங்கிருள்புகாமலோப்பிக்
காமருபொதும்பர்கற்பக்காவினைவென்றவங்கண்
மேவரவின்பந்துய்ப்பமேவியமாந்தரெல்லாம்
பூமருகற்பநாட்டுப்புலவரைவென்றாரம்மா. ௫௫

விருந்தெதிர்கொண்டாலென்னமென்மொழிகுயிலாற்சொல்லி
வருந்தியநடையின்வெப்பமாய்ந்திடநீழனல்கி
யிருந்துணர்சுண்ணப்போதுந்தேறலுமேந்திற்றென்ப
பொருந்தியபுக்குள்ளார்க்குப்புதுமணப்பொதும்பரீட்டம். ௫௬

சிங்கமுங்கோட்டுவேழத்திரள்களுமைந்தர்க்காட்ட
வெங்களிப்பிடியுமானுமயிலுமின்னனையார்க்காட்ட
மங்குறோய்மாடமேடைமலையொடுபுளினங்காட்டப்
பொங்கருமில்லேயென்னப்புகுந்தனர்மகிழ்ச்சிபூத்தார். ௫௭

கிளிகுயில்பூவைமஞ்ஞையாதியகிளர்ந்துதத்த
மளியுறுபெடையினூடலகற்றியும்புணர்ந்துங்கொம்பிற்
களியுறக்கண்டுமைந்தர்காமமீக்கொள்ளவல்லே
யிளிமொழிமனைவியாரையிறுகுறத்தழுவிக்கொண்டார். ௫௮

அளியெறிந்திருந்துதேறலருந்தவாய்கிழிந்தசெங்கேழ்ச்
சுளைபயில்கனியும்வாழைச்சுவைப்பழத்திரளுமாவின்
விளைமதுப்பழமுமற்றும்விழியுறநோக்காமுன்னங்
கிளைமணமுயிர்த்துகாவிற்றீம்புனலூறநின்றார். ௫௯

அஞர்த்திறமனத்தையெய்க்குநடையவராமசத்தீஞ்சொ
லுஞற்றியகிளியினோதையொண்சிறைக்குயிலினோதை
மிஞிற்றினமுரலுமோதையேனவும்விம்மியெங்குங்
கஞற்றியபண்ணையீட்டங்கேட்டொறுங்களியரானார். ௬0

புள்ளகம்பிணிக்குஞ்சோலைப்பொலிவுமப்பொழிலினுள்ளாற்
கள்ளகம்பிணிக்குங்கஞ்சக்கயங்களுங்கதிரின்றேரை
நள்ளகம்பிணிக்குங்கோட்டுநாகமும்புளினச்சீரு
முள்ளகம்பிணித்துக்கொள்ளநோக்கினருலாவியெங்கும். ௬௧

பொங்கருள்ளகத்துச்சாலப்பொங்கியவளனையெல்லாந்
தங்களுட்பகுந்துதத்தந்தனியடையாளமிட்டாங்
கெங்கணுமெழினிவாங்கியெழில்பெறவிதானித்தும்பர்ச்
சிங்கவல்லேற்றுக்கட்டில்கம்பலந்திகழவிட்டார். ௬௨

மாடகமுறுக்கும்யாழின்மதுரமெல்லிசையுங்காமர்
நாடகத்திறனுங்கேட்டுநோக்கியுநயந்தார்மைந்த
ராடகமசும்புகொங்கையந்நலார்குழாங்குழாமாய்த்
தோடகந்துறுத்தசெந்தேன்சொரிமலர்கொய்வான்புக்கார். ௬௩

நித்திலவடந்தாழ்கொங்கைநிரைமணிமகுடமேந்தி
முத்தவிர்கருப்புவில்லிமுடிமிசைககவிப்பவன்ன
னைத்தலையுள்ளானென்றுநேடுவாரென்னவெங்குந்
தத்தமக்கொத்தவாறேதிரிந்தனர்தையனல்லார். ௬௪

தங்களைப்புலம்புநோக்கித்தழலெனச்சரம்பெய்வேளை
யங்கவனென்னத்தாமுமலர்க்கணைசொரிந்துபோரான்
வெங்களிகாற்றிவாட்டமுயற்சியின்மேவுவார்போற்
பங்கயவதனநல்லார்பன்மலர்கரத்திற்குற்றார். ௬௫

மின்னுறழிடையார்கொய்தவெண்மலர்கரத்துச்செம்மை
துன்னலுநோக்கிவெண்பூத்துவர்மலராயதென்று
முன்னுறக்காட்டிக்கேள்வர்வாங்கித்தம்முலைமேற்சேர்த்தி
யன்னதுபொற்கென்றாயதறிகெனநாணுக்கொண்டார். ௬௬

இணர்மலர்பறிக்குந்தோறுமிருத்தியபாரந்தீர்ந்து
தணிமலர்க்கொம்புமேன்மேலெழுதலுந்தருவுந்தன்பா
லணிகுறைகின்றதென்றீங்கலர்கொடாதகல்வதென்னைப்
பிணிமலர்க்கோதைநல்லார்பெருவியப்பினராய்நின்றார். ௬௭

சுந்தரவனங்கன்வாளிதொடவிளைவிகாரமென்னக்
கந்தமென்கதுப்புச்சோரக்கால்கரம்விதிர்ப்பவாங்குஞ்
சிந்துரநுதல்வேராடச்சிற்றிடையொசியநின்று
ருந்தியங்காந்துகோட்டினுறுமலர்பறிக்குமாதர். ௬௮

பிடிநெடுந்துளைக்கைநீட்டிப்பிடித்திழுத்தெனப்பூங்கையாற்
கடியவிழ்சினைகள்வாங்கிக்காமர்பூக்கொய்யுமாதர்
கொடியெனநினைந்துதம்மைக்குமரரோடாங்குவேற்று
மடவியர்கலவியாற்றத்தணந்தனர்மயிலிற்றோன்றி. ௬௯

மருத்தபூங்கோடெட்டாமைவருந்துவாள்பறியென்றன்ப
னிருத்தியதிணிதோடன்னேயேந்தியகளிப்பால்வித்தப்
பொருப்பெனவீங்கவும்பருடனெழீஇப்பொதும்பர்தாழத்
திருப்பொலிமார்பனேயென்றயிர்த்தனள்பரிவுந்தீராள். எ0

வேறு.

அல்லிமலர்க்குழலியரெம்மூரனிகராதென்றேயரும்புதோற்றாய்
முல்லையெனநகையாடவனேவயுமெமதரும்புறமூாமுறையாலன்றோ
பல்லிதழ்வாயொளித்தபரிசறிந்தேமென்றெதிர்நகைத்தபண்புமான
மெல்லரும்பீனலும்வெகுண்டுதண்டம்விளைப்பாரென்னவிரைவிற்கொய்தார். எக

கணவரொடுநெடுங்கானத்துடன்போக்கிற்கதிரப்பரிதிகனற்றும்வெம்மை
தணியநறுநிழல்களுற்றித்தளர்வகற்றும்பண்டையநன்றேர்க்தாரென்ன
மணமலர்கொய்திலம்படுமேழிலேம்பாலைமரத்தோடுகெட்புச்செய்து
துணர்விரிபாலையுநண்பூண்டென்னமலர்முகிழ்ப்பத்துணைந்துகொய்தார. எஉ

தோடணிந்துநனிபூத்திங்கெமைப்போலுநீயெமக்குச்சுரும்பரார்ப்ப
வேடவிழுநறும்போதுநல்காவாழ்வென்னேயென்றிகழ்ந்துகூழ
பாடிரியும்பழிப்பஞ்சியிகழாதிரெனப்பணிந்தாய்கெட்டாதோய்குங்
கோடம்லமீட்டுமலர்ந்தெதிர்குராங்கும்பாடலத்திற்கொழும்பூக்குற்றார்.

செழுமதியைப்புறக்கொடைகண்டெக்கழுத்தம்படுமுகத்தார்சில்லோர்தங்க
ணிழல்படுபெற்றியின்முழுதுமறப்பறிக்குந்தொறுமீட்டுநிறம்பப்பூத்துத்
தழைதருசண்பகநோக்கியேதுவிஃதெனக்காணார்தழங்கும்வண்டு
விழையகிலாச்சண்பகமுமுலவாப்பொற்கிழிகொலெனவியந்துநின்றார்.

தம்முடையவடிவொப்பத்தளிர்த்ததெனவழுக்கற்றுத்தடந்தாட்கொக்கின்
செம்மைநிறத்தளிரனைத்துங்கொய்தொறுந்தம்விழிப்பார்வைசெறியுஞ்சீரா
லம்மரனுமெதிரிகலியாங்குமிகத்தளிரீனவதற்குநாணிக்
கொம்மைமுலேமடமாதாதோற்றென்னக்கொய்தளிர்க்கையிளைத்துநீத்தார். எரு

இக்கிளையின்மலர்முன்னம்யான்பறிப்பல்யான்பறிப்பலென்றாய்கொட்டிப்
பக்கசிலரொருகரத்தாற்சினேபற்றிமலர்பறித்துமானநோக்கித்
தொக்கமலர்சினேவாயிற்சௌவியிருகைபறித்துந்தொலையாவண்ண
மிக்கலருமகிழ்மரத்தைநடுப்பிழைத்ததெனக்கனன்றுவிடுத்தார்சில்லோர்.

பஞ்சமூத்தமிகப்பனிக்கும்டரிபுரச்சீறடிமடவார்பல்லோர்செய்ய
கஞ்சமலர்வாய்திறந்துதம்மியல்பிற்பாடுதலுங்கமழ்தேன்வார்ந்து
விஞ்சமலர்பூத்துக்குமாதவியைவேறுசிலருவந்துநோக்கித்
தஞ்சரிமென்கரமலரான்முகமதியம்வியரரும்பச்சார்ந்துகொய்தார். எஎ

ஒளியுமிழ்தம்முருவெழிலேயொண்டளிராக்கவர்ந்தமைகண்டொறுப்பார்மானக்
கிளைநரம்பினிசைமொழியார்கமுகிலிடுங்கேழ்த்தமணிபூசலேறித்
தளிரடியினுதைந்தாடுந்தொறுந்தவப்பூத்தசோகுமலர்தரையிற்கொட்ட
வளவின்மகிழ்ச்சியின்வருந்தாதலையளைத்தம்வேறுசிலரன்னிக்கொண்டார். எஅ

அலம்புமணிமேகலேயுமரிக்குரற்கிண்கிணியுமணிச்சிலம்புமார்ப்பக்
கலம்படுபொற்குயமடவாராடுதலுமாட்டமைதிகவினக்கண்டு
நலம்படுபொற்பரிசிலெதிர்வீசுவபோலிளம்புன்னேநறியவீயின்
குலம்புதிதுபூத்துகுப்பவிம்மிதராய்ச்சிலரிவர்ந்துகுற்றுநின்றார். எகூ

ஒக்குமணியம்மனைதன்னுயர்பாவைக்களிப்பதுபோற்சினைமேலேந்து
மாக்குரவையங்கலாரிவர்ந்துகொளத்தழுவலுநம்மகவையின்னோர்
தாக்குவரென்றஞ்சியடிதாழ்வதெனமலர்நெருங்கிச்சாகைதாழப்
பூக்களுடனம்மனையுந்தாழ்ந்தெமக்குத்தந்ததெனப்புகழ்ந்துகொய்தார்.

பண்ணைபொரமுரன்ஞிமிறுபாய்ந்துழக்கத்துயருண்டுபாரின்வீழ்ந்த
வண்ணமலர்த்துகணெருங்குஞ்சனமிதித்தற்கஞ்சிமாமலரின்மீட்டு
நண்ணவெழுவதுபோன்றுமேக்கெழக்கந்துகந்தழுவிநடுத்தள்ளாட
வொண்ணுதலின்வியாபொடிப்பக்கரஞ்சேப்பவுடல்குழையப்புடைத்தாசில்லோர்.

வெள்ளிமலையெனக்குவவிக்கிடந்தநெடும்புளினமிசைவதிந்தும்வாசக்
கள்ளுயிர்க்குமுழைக்குவட்டுக்கண்மணிப்பொற்சிலம்பெதிர்கூய்க்களித்தும்வட்டத்
தெள்ளொளியபளிக்கறையிற்கண்ணடியிற்றிருவழகுதெரிந்துமைந்த
ருள்ளுருகவெவ்வேறுவிளையாட்டுத்திறங்குயிற்றியுவந்தார்சில்லோர்.

கலிவிருத்தம்.

சாயலினிகர்மஞ்ஞைதளரியபொழிலாடன்
மேயவர்நடைநோக்கிவெள்ளனமயர்கூர
நாயகரொடும்வெள்ளநதிகயமுதலெங்கும்
பாயினர்கரியோடும்படர்தருபிடியென்ன. ௮௩

பங்கயமலாமானும்பாவையரடியூட்டும்
பொங்கியசெம்பஞ்சிபோகறலிடைதோறுந்
தங்குவவவர்நீலத்தண்குழல்பொருதட்ட
செங்கனலுறழ்நெய்த்தோர்சிவணியபுண்போலும். ௮௪

கிண்கிணியொலிபூணிற்கிளரொலிகுழல்வண்டின்
பண்கனியொலியெல்லாம்பரவலினனியுட்கி
யொண்கயன்மிசைதுள்ளுந்தமையுறழ்தருமாதர்
கண்களின்வரவைத்தாங்காணியவெழுவதென. ௮௫

மைந்தருமடவாருந்தங்களுண்மயிர்நீவிக்
கந்தமதிடுமெண்ணெய்கமழ்தரமுடிதேய்ப்பச்
சுந்தரமலரோன்முன்றொகுபலவிதியுள்ளும்
வெந்துயரனதேய்த்துவீத்திடுதிறமான. ௮௬

ஒண்ணிறமணிசாலக்கழுவுதொறுளிகான்று
நண்ணுவதெனமிக்குநள்ளிருள்குடிகொள்ளக்
கண்ணிகொண்மயிர்நெல்லிக்கமழ்விழுதினிதூட்டி
மண்ணினர்கடிவீசும்வார்புனல்குடைகின்றார். ௮௭

வேறு.

தனதினமென்றுபின்சார்தருதோகை
யனமெனமீண்டலர்பொங்கரையண்மக்
கனமுறழ்கூந்தலினர்கரைநின்றும்
புனலலையும்படிபாய்ந்தனர்புக்கார். ௮௮

மான்மதவேழமதங்கொடுவீழ்ந்தாற்
போன்மெனவாடவரும்புனல்பாய்ந்தா
ரூன்மலிவேல்பொருமொண்டொடியார்கண்
டான்மருண்மீனம்விண்டாயதையன்றே. ௮௯

மாதரெனுங்களிமாமயிலீட்டந்
தாதவிழ்தந்துறைசாரவவற்றின்
போதுறுபொங்கர்புகுந்திறன்மாண
வோதிமமஞ்சினவோடினசோலை. ௯௦

தலைவரெனும்மததந்தியைமாதர்
வலவரின்வங்கமெனும்பிடியூரா
வலர்ததைமாலையருந்தொடரோக்கிப்
பலமுறையண்மினர்பற்றமுயன்றார். ௯௧

தொங்கலைவாரினொழுக்குபுதூய
வெங்களின்மாலைவலைத்திரள்வீசி
மங்கையராமுழைமானைவனத்தி
னங்களிவேடரினாடவர்சூழ்ந்தார். ௯௨

நறைக்குழல்சோர்தரநங்கையர்பந்தின்
முறுக்கியதாரைமுகங்கிழிசெய்து
பொறைக்குயமார்புபுதைப்புறமைந்தர்
நிறைக்குநராயினர்தாரைகணீரான். ௯௩

சுண்ணமெடுத்தெதிர்தூவினர்சந்த
வண்ணநறுங்களிவாரியெறிந்தார்
கண்ணெகிழ்பூக்கள்கஞன்றினர்சிந்தி
யுண்ணிகழோகையினும்பரையொத்தார். ௯௪

வீக்கியதாரைகள்வெய்துறவாங்கி
யோக்கினனோர்மகனோர்மகளாற்றாள்
வாக்கியதாரைமழைக்கொசிகின்ற
பூக்கொடிபோற்பொருமித்தளர்வுற்றாள். ௯௫

பூசலெதிர்ந்தொருபூவைதுனைந்து
வீசியகுங்குமமேதகுசாந்தங்
காசவிர்மார்புகலந்துறநின்றான்
மாசறுசெந்திருமார்பனையொத்தான். ௯௬

களிப்பினோர்மாதெறிகாமருதொங்கல்
வளைப்புறமார்பின்வனத்திடைநின்றா
னளப்பருவேலையராவிடையாத்துத்
இளைப்புறநட்டசெழுங்கிரியொத்தான். ௯௭

ஆற்றலளாயவிழ்சோர்குழல்போர்த்த
கோற்றொடிமேற்கொழுந்தாரையுறுத்தான்
மாற்றருங்கூடன்மறைத்திடுமேக
மேற்றழைதாரைவிடுங்கனமொத்தான். ௯௮

உறுங்களிமாதர்களோக்கியதாரை
கறங்கியகைத்தொடிகார்க்குரல்செய்ய
விறங்கியகூந்தலிடைப்பொலிமெய்ம்மின்
றிறங்குலவப்புயல்சிந்துவவொத்த. ௯௯

கலிநிலைத்துறை.

மருப்பதுமமலர்நீலமலர்பறித்துமங்கையரும்
விருப்புறுமைந்தருந்தம்முள்வீசிவிளையாடினார்
கருப்புகொடுஞ்சிலையானுங்காமரிரதியுந்தம்மு
ளுறப்பொலியுமலர்வாளிகொண்டெடற்றுந்திறனிகர்ப்ப. ௪00

துருத்தியினீர்க்குடைந்துபுனலொளித்தோடுந்தோகையரை
வருத்தமுறப்பிணித்தடர்சைவலமகிணர்தமைக்காட்டும்
பெருத்தமுலைமடமாதர்பிரசமலர்க்கூந்தலினு
வுருத்தபழம்பகைமுடிக்குங்காலமெனவுன்னியபோல். ௪0௧

போர்க்குடைமங்கையர்முகமேபுறந்தோற்றிப்புனலொளிப்ப
வார்க்கழலாரதுவனசமெனவிடுத்துத்துருவுவார்
சீர்க்கவுளத்தினிதிருந்துஞ்சிவபெருமான்சேவடிகள்
பார்க்குளிலைப்புரைகிளைத்துப்பருவந்தவரிபோன்றார். ௪0௨

முழுகுமடமாதர்குழன்மூசுமிளஞ்சுருப்பினம்போய்க்
கொழுதிமுழுவதும்பரந்துகுடிகொண்டகமலமல
ரெர்ழுகொளியவவர்வதனவொண்கமலமொடுபொருவான்
விழுமியகாழகக்கவயம்வீக்கியதுபொருமன்றே. ௪0௩

அரிவையர்வான்முகமதியாலாம்பன்மலர்தரநோக்கி
யிரவணைந்ததெனக்கரையினிவர்ந்தவைமீட்டஃகுதலும்
பொருகளத்துச்சயத்திரதன்பொன்றியநாளிதுகொலென
விரவியவிம்மிதராகிமீட்டுமிரும்புனல்குடைந்தார். ௪0௪

சந்தனங்குங்குமஞ்சுண்ணந்தார்மாலைவிழக்குழும்பி
யிந்துவொளிபடைத்தபுனலிரவியொளிபடைத்தன்றால்
வந்துதனைவருத்தமுறவுழக்கலுறுமாந்தரைப்பொன்
சிந்துமணிக்கரையுறுப்பான்சிவந்தெழுந்ததிறம்போல. ௪0௫

வளைக்குலமுங்கயற்குலமுமலர்க்குலமும்விளையாட்டி
விளைக்குமிகுதுயர்க்கிரங்கியேறுவாரெனப்போகம்
விளைக்குமணிமுலைக்குவட்டுமெல்லியருங்காளையருந்
தளைக்குமனக்களிப்பினராய்த்தடங்கரையின்மருங்கணைந்தார். ௪0௬

தனக்குநிகரெனக்கிடந்தசைவலத்தைத்தாக்குதற்குச்
சினத்தெழுந்துசெல்வதனைவலிந்துதடைசெல்பவர்போற்
கனக்குழலோர்கரந்தாங்கிக்கலைகலையோர்கரந்தாங்கிப்
புனக்கிளியன்னவர்சில்லோர்புணர்ந்தவர்போற்றோன்றினர். ௪0௭

அலைக்குமணிநீராட்டினஈற்றுவிழுமேகலையும்
கலைக்குலமும்புனல்கரப்பக்காணுதுதாமரையி
னிலைக்குலத்தாற்பின்னியுடையிணக்கியவல்குலினோடு
மலைக்குறவர்மகளிரெனமாதர்சிலர்தோன்றினர். ௪0௮

களித்துநறுந்திரைகெழுநீர்காதலிற்றம்முடனாடி
யிளைத்துமிகவருந்தியபோலீர்ம்புனற்பூம்பட்டமூழ்த்தி
முளைத்தெழுந்துகொழுந்தோடுமொய்யொளிமேகலையோதை
யொளித்தொழியச்சிலமாதரொய்யெனமேற்றோன்றினர். ௪0௯

கலிவிருத்தம்.

வார்ந்துதுளிசிந்துமயிர்வண்டுகிலினொற்றி
யூர்ந்தொழுகுமாதாகமூட்டிவிரனீவி
யார்ந்தவகிலின்புகையினூட்டியளிசூழ்தேன்
கூர்ந்தமலர்மாலிகைகொளுத்தினர்களித்தார். ௧௧௦

நெற்றியினறுந்திலகம்வைத்துநிழல்காலும்
பொற்றகுழைகாதினொடுகொன்றுபுயகக்கி
விற்றழையவிட்டுவிலையின்றுயர்சிறப்பின்
மற்றையணியும்பலவளம்படவணிந்தார். ௧௧௧

அனங்கனிவர்மெய்தழுவவாக்கையிலனென்று
மனங்கனியமாதர்கள்வனப்பிடையுயர்ந்தார்
தனங்களிவர்தோளுறுதவம்புரிகிலேனென்
றினைந்திரதிநோவவெழிலாடவர்மிகுத்தார். ௧௧௨

மின்னுபளிதக்குவையின்மீமிசைநிவந்து
மன்னியெரிதீபமெனவார்புளினவுச்சி
யன்னநடையன்னநடையார்கள்சிலர்நின்று
துன்னுகுழனுற்றினர்பரப்பினர்தொகுத்தார். ௧௧௩

மொட்டிளவடச்செழுமுலைக்குநிகராகிப்
பட்டபகையாற்பிதிர்படுக்குநர்கடுப்ப
நெட்டிலையதெங்குகளினின்றுவிழுகாயை
வட்டவறையிற்சிலர்புடைத்தறன்மடுத்தார். ௧௧௪

கோங்கொர்டுநிகர்த்தகுவவுத்தனமினாரும்
வீங்குபுயவாடவரும்வெய்யகலவிக்கட்
டாங்கணுகர்வாய்க்கனிதனக்குநிகர்தேர்வா
னுங்கநுகர்வாரெனநறுங்கனியயின்றார். ௧௧௫

நெய்யிடைமிதந்தகறிநீண்டுதிசையெல்லாங்
குய்யணவிநாறியுகொழுங்கருனைபாலாற்
செய்யுமுணவாதிமடைநூலவர்செறிப்ப
வெய்யவர்களாகிவிருந்தோடினிதுதுய்த்தார். ௧௧௬

வாசமொடுபாகடையயின்றுமகிழ்கூர்ந்து
தேசவிரும்யாழ்குழல்செவித்துளைநிரப்பி
வீசுமணமாருதமெய்யேற்றுவிளையாடி
வேசையரின்வீடரிய்வெங்கணுகர்வுற்றார். ௧௧௭

வேறு.

'சாடியின்றவினைத்தவள்வட்டிலிற்
பாடமைவிளிம்புவாய்நிரம்பப்பாய்த்தினு
ராடிநோக்குவதெனவங்கையேந்தினு
ரேடவிழாம்பல்வாய்பருகியின்புற்றார். ௧௧௮

மகிழ்ந்துமுன்வாக்கியவட்டிற்றேறலை
நுகர்ந்திடுமெயக்கினல்வட்டினேக்கினு
ரகங்கையினவிர்மதியதனைகாப்பனை
யகழ்ந்தெனக்களித்தனர்யானையென்றனர். ௧௧௯

தொட்டவெண்மதியுடற்கூறுதொக்கதென்
றட்டபான்மதுநுரையதனைவாரியவ்
வட்டில்வாய்நிறைத்துவிண்வாழப்போதியென்
றிட்டவழ்கருணையினேக்கிப்போக்கினர். கஉ0

எதிருறவிருந்துசூதாடுமோடவர்
கதிரிழையொதுங்கலுமல்குல்கண்ணுறீஇ
யதிரிடையாய்கொடியகத்தையுள்ளுறப்
பொதிவதென்னெழியெனப்பூங்கைநீட்டினர். கஉக

மங்கையரெடுத்துமாட்டிருத்தும்வல்லினைச்
செங்கனியெனக்குயில்கவரச்செல்வர்பி
னங்கதுகொடுமெனவற்றஞ்சாற்றல்கேட்
டிங்கிதோவுளதெனமுலையையீர்த்தனர். கஉஉ

மேகலையுடைபுவிவீழவல்குலை
நாகமென்றஞ்சிநன்கரத்திற்றள்ளியும்
போகுதலின்மையிற்பூவைமார்குகன்
வாகனமுன்னுறவெளவென்றேடினர். கஉ௩

ஆடியினேக்குமானனத்தின்வேற்றுமை
நாடியென்முகத்தினைவெளவிநாளமேற்
றேடவிழ்செம்மலர்சுடரவைத்துளா
ரேடியாருரையெனவொருத்திவேண்டினள். கஉ௪

நின்முகங்கவர்ந்தவரிவரெனநிறை
யின்மதுக்கலமெதிர்காட்டநோக்குபு
தன்னிழன்முகமுந்தன்முகமுமொத்தலி
னன்னதுந்தாமரையாமென்றாடினள். கஉ௫

வண்டுளர்கூந்தலோர்மங்கைதோழியென்
றெண்டகுமஞ்ஞைமுனினியதேறலைக்
கொண்டிடீதுண்கெனக்குறுகியோடலு
முண்டிடுமிச்சிலென்றெழிதியோவென்றாள். கஉ௬

ஊடியமாதகன்றெழியமுன்னுற
வாடியகொம்பினையவளென்றங்கையாற்
சேடுறுகாதலிற்சென்றுபுல்லின
ளடவர்நகைப்பவோர்நம்பியென்பவே. கஉஎ

தன்னுருவேற்றுமைதன்னைநோக்குறீஇ
முன்னையதன்மையின்முயங்குகாதல
னென்னையாரோவெனவிக்குமேயென
வுன்னினளுயங்கினளொருபெண்மாதரார். கஉஅ

முருகவிழ்குழலினர்முயங்குகாதலாற்
பெருமகிழ்மதுவுணும்பெற்றிநோக்கியான்
பருகினேனில்லைகொல்பருகினேன்கொலென்
றெருமடமயிலனையமோவிலள். கஉ௯

கூடினார்மறுவலுங்கூடிலோமென
வாடமைத்தோளினாலன்பர்ப்புல்லினா
ரூடினார்மறுவலூழூடிலேமென
நீடெரிப்பிழம்பெனப்புலந்துநீங்கினார். ௧௩0

ஆடினார்சிற்சிலராடிவீணையிற்
பாடினார்சிற்சிலர்பாடியன்பர்மு
னோடினார்சிற்சிலரோடியூடலி
னீடினார்சிற்சிலர்நீலக்கண்ணினார். ௧௩௧

ஆன்றவர்நோக்கிநீள்பனையுமம்மடவோ
சான்றவிக்கள்ளினைத்தரித்தலானன்றே
சூன்றெனவகந்துளைபட்டதென்னவே
மான்றுளம்புழைபடமானநீங்கினார். ௧௩௨

பறைந்தபேரறிவினும்பதின்மடங்கெதிர்
நிறைந்துவெங்காமநோயகத்துநீடலா
லுறந்தபூவணைமிசையும்பராரெனச்
சிறந்தமெய்க்கலவியிற்றிளைக்கப்புக்கனர். ௧௩௩

கலிநிலைத்துறை.

தூதுசென்றுசென்றுழல்வதுபோற்சுரும்பினங்கள்
போதிளுக்கியமாலையிலெதிரெதிர்போகித்
தாதுநொண்டிசைமிழற்றுறவிருந்தனர்தம்முண்
மாதர்வாண்முதநகையினான்மனக்குறிப்புரைத்தார். ௧௩௪

சாலப்பண்ணினைப்பயிற்றியுந்தடமுலையலைத்து
மேலத்தண்குழலவிழ்த்தெதிர்முடித்துமீர்ந்தளிரின்
கோலக்கொம்பினைக்குழைதரப்புல்லியுங்குறிப்பாற்
சீலப்பாவையர்கருத்தினைக்கொண்கரைத்தெளித்தார். ௧௩௫

தொய்யிலங்கலார்முலைமிசைத்தொழில்பெறவரிந்து
மையுண்கண்களினஞ்சனமெழுதியும்வாச
நெய்யுண்கூந்தலினிறைமலர்செருகியுநுதலிற்
செய்யசிந்துரந்தீட்டியுமாடவர்களித்தார். ௧௩௬

முலையுந்தோள்களுமிறுகுறமுயங்கியுமமிழ்த
கலைநிலாவியமுகத்தின்முத்தாடியுங்கலையுஞ்
சுலவுகாரளியோதியுந்தொடிகளுஞ்சோர
விலகுசூட்டராவெனவுடற்பின்னியுமணந்தார். ௧௩௭

காசுகண்பரிந்துக்கனகாழினம்பரும
மாசைவண்சிலம்பொலித்தனமருவுலாங்களபம்
பூசுகுங்குமமழிந்தனபூவணைமேலா
னேசவின்புமீக்கிளர்ந்தனபுணர்ச்சிநீடொர்க்கு. ௧௩௮

அப்புமாரிதூய்ப்பணிபுரியனங்கனுமன்பர்
செப்புநேர்முலைமகளிரிற்றிளைத்திடுநட்ப
வொப்பிலாதமெய்க்கலவியையுடனின்றுகவர்ந்தான்
முப்புநேர்சடையான்விழிக்கனலினைத்துதித்தான். ௧௩௯

தடக்கைவார்சிலைகணைகளுந்தொலைந்தனதழங்கி
மடைக்கண்வாஸ்வளைமணிசொரிபண்ணையிற்கரும்பும்
பொடிக்குந்தேம்பொழிற்பொய்கையிற்பல்வகைப்பூவுந்
தொடுக்கவற்றனமுழுவதுமனங்களுந்தோற்றான். கச0

வேறுமாந்தர்களணிமையின்மேவினரென்னு
மாறிலாநலக்கலவியையிடைமறத்தொழியத்
தேறுவான்கலைசிறைக்கிளிபூவையைத்தெளித்துக்
கூறுமன்னவர்வாங்கியவெழினியுட்குறுகி. கசக

அனங்கன்போர்விளைமாதர்தமணிமிடற்றொலியை
யினங்களின்குரலாமெனவெண்வகைக்குருகுந்
துனைந்துவாங்கியவெழினியுட்டுவன்றினவவர்தங்
கனிந்ததீங்குரற்பொலிவுகற்பான்புகுந்தனபோல். கசஉ

உடலுமாரனைத்துணைவரோடொற்றுமையாகி
யடலினேப்பியதிறற்பிரதாபமுமலங்கிப்
படருங்கீர்த்தியுமறிவுறுத்தனபணிமொழியார்
மடமைநோக்கமுமணிமுருக்கதரமுமாதோ. கசங

களவிற்கூடியகற்பினர்கருவிழிசிவந்த
வளனைநோக்கியசெவிலியரயிர்த்தவர்மலர்த்தேன்
றுளியிற்றோய்குழனைக்கலுமிகத்துளைந்தாடுந்
தெளிகொணீர்விளையாட்டதென்றகத்திடைத்தெளிந்தார்.

புலந்துபோதுழியாடவர்பொலந்துகிலீர்ப்ப
மலர்ந்தவல்குலைக்கதுமெனக்குடங்கையான்மறைப்ப
விலங்குபாம்பபிமந்திரத்தடங்குமோவெனலு
நலங்கொண்மின்னனார்குறுநகைவிளைத்தனர்நாணி. கசரு

கலையின்வென்றியுங்கரிபரியிரதமேகாலாண்
மலையும்வென்றியுஞ்சூட்டுடைவாரணங்குறும்பூ
ழலையமோதுவன்கடாப்பிறபோரிடையுறுத்திக்
குலவும்வென்றியுங்கொண்டனவாடவர்குழுக்கள். கசசு

பாடல்வென்றியும்பரிபுரஞ்சிறடிச்சிலம்பு
மாடல்வென்றியுமஞ்சுகம்பூவைவெம்பிடியி
னீடில்வென்றியுமேனையவென்றியுங்கொண்டார்
வீடிலின்பமேவிளையும்வெம்முலைக்கொடிமடவார். கசஎ

வேனிலின்னணமிறுத்தவேள்விழாத்தினத்தொருநாண்
மானைவென்றகண்மடவரலுடன்மலர்த்தவிசி
னுயர்த்தவரகிலமுங்களிப்புறும்பொருட்டுத்
தாங்கழ்த்துமத்தனிவிளையாட்டிடைமாதோ. கசஅ

வெள்ளிவெற்பின்மேல்விரைமலர்ப்பொதும்பர்காத்தமரு
முள்ளெயிற்றரவல்குல்வெம்முலைமுறுக்கவிழ்த்துக்
கள்ளுயிர்க்குமென்மலர்க்குழற்றெய்வதக்கன்னி
தள்ளமெல்லிடையுவளமைருங்குசார்ந்தனளால். கசகூ

அங்குவந்தடியணைந்தகாமகளிர்களோடுஞ்
செங்கைகூப்பினளடிருமுன்புபணிந்தனளெழுந்தா
ளெங்கணுமயசயசயவெனத்துதியிசைத்தா
ணங்கைபாலமர்நாயனார்தமக்கிதுகவில்வாள். ௧௫0

கருவிவான்முகில்குடியிருந்தனையகார்க்கூந்தற்
றிருவின்மேலவடிதலைவெம்முலைக்களிற்றுலவை
பொருதுவார்ந்திழிபுலவுநீரெனப்புதுத்தேற
லருவிதாழ்தொடைமார்பவந்தன்றிளவேனில். ௧௫௧

பாற்றனிக்கடற்றுகிரெனப்பைந்தொடிமுலையி
னேற்றகுங்குமமெழுதியகீற்றணிமார்ப
தோற்றவேனில்வேந்துவிட்டாலெனமலையக்
காற்றுமென்மெலவசைந்ததுங்கயிலாயம். ௧௫௨

நானமல்கியநறுங்குழனளிர்முகமலரிற்
றேனருந்துவபோல்விழிசெல்லும்வாண்முகத்தாய்
வேனின்மைந்தனைமேதினியினவெள்ளணிகற்
றுனணிந்தெனவயங்கினபரந்துதாழருவி. ௧௫௩

நிணந்துழாவுவேனிகருமைவிழியுடனளியின்
கணந்துழாவியகடுக்கையந்தொடைகமழ்புயத்தாய்
தணந்துளார்ப்பெறுமாதர்போற்றளர்வுமுற்றொழிந்து
மணந்துழாம்பொழிறென்றலால்வளம்படைத்தன்றே. ௧௫௪

வார்நிறுத்தியவனமுலைமங்கைகட்கடையின்
கூர்நிறுத்தியகுறுநகையாய்திறையென்னப்
போர்நிறுத்தியகருப்பினன்புனைமணிநெடும்பொற்
றேர்நிறுத்தியதொத்ததுசெழுமலர்க்கோங்கம். ௧௫௫

மடுத்தவல்விடம்வயங்கியமிடற்றினாய்கீயிக்
கடுத்ததும்பியகருங்கணாளுடன்விளையாட்டி
னடுத்ததன்றெனக்களைந்தெறிபுலியதள்போர்ப்ப
வெடுத்துநின்றதேபோன்றதாலிணர்விரிவேங்கை. ௧௫௬

பொன்றொடாடியபுரிசடைப்புராதனபொருப்பின்
மின்றொடாடியதிறனறிந்தராவணைமேலான்
றன்றொடாடவுஞ்சார்ந்துகாத்திருப்பதுதகையுந்
தென்றொடாடியசெறிமலருழ்த்துகுகாயா. ௧௫௭

பருப்புழைக்கரக்களிற்றுரிப்போர்வையம்பகவ
பொருப்புமாதுடனொட்டயர்பொலிவினைக்கேளா
கருப்புவில்லினின்னிப்பயமின்றெனக்கணைகள்
விருப்பினெய்யவந்திட்டதேவீழ்ந்ததுகாஞ்சி. ௧௫௮

குழந்தைவெண்மதிமிலைச்சியகுருச்சடைக்குழகா
விழந்தபல்லினையெய்துவானிரவியெற்பிழம்பு
பொழிந்தசேயொளித்தேரொடும்புக்கதேபோலும்
வழிந்துதேன்கமழ்மலர்த்திரடதைந்ததண்செருந்தி. ௧௫௯

சினங்கொள்வாளராத்தொடையல்சூழ்செஞ்சடைக்கூத்தா
வணங்கவேளெனுந்தமையனுக்கணியுருத்தருகென்
றினங்கொள்வான்றவமியற்றுவானவனுடையிளவன்
மனங்கொள்காதலின்வங்தெனத்திகழ்ந்ததுஞாழல். கசு0

கோதைவார்சிலேப்பொலங்கிரிகுழைத்தெயில்குலேத்தோய்
பாததாமரைபடர்ந்தருந்தவத்தினிற்பயிலும்
பூதிபூசியபுண்ணியத்தொண்டரேபோலு
மாதர்வெண்மலரூழ்த்தநீண்மராமரத்தொகுதி. கசுக

முனையசூற்படைமுழங்கழல்பிலிற்றுசெங்கரத்தோய்
நினையுமாதவர்தமக்குநின்னேவலாற்குறுகிக்
கனையவாநிரப்புறுமுருத்திரகணங்கடுக்கு
மனையநீண்மராத்தருகெலாமலர்ந்தகூவிளங்கள். கசுஉ

என்னவிவ்வகைதனித்தனிவனத்தெழின்முழுதும்
பன்னிமற்றுமீதுவகையிற்பகருதலுற்றுண்
மன்னுமெம்பிரான்குடங்கையால்வளர்த்தமாங்கன்று
மன்னேதன்கரத்தன்பினுல்வளர்த்தமாலதியும். கசுஙு

செய்யநின்றிருமேனிபோற்செந்தளிர்தளிர்த்து
மையுண்கண்ணிதன்மூரலின்வாண்முகைமுகிழ்த்து
மையசீரியவாயினவலங்குபொற்சடையி
னெய்யுண்கூந்தலின்மிலேச்சுதற்கமைந்தனவென்றுள். கசுச

கருணேநாயகர்கேட்டலுங்குறுநகைகாட்டித்
திருவின்மேலவள்செழுமுகத்தாமரைநோக்கி
யரிவைதன்மனக்குறிப்பறிந்தவையிரண்டினுக்கு
மிருமைமன்றல்செய்வாமெனவுமையொடுமெழுந்தார். கசுரு

மணிப்பொற்கோவையும்பூண்களுமருமலர்த்தொடையு
மணிப்பொற்சுண்ணமுங்குங்குமச்சேறுமூழாடைகளுந்
தணிப்பில்சீதளக்களபமுந்தனிவிரைபிறவுங்
கணிப்பிலாவரமகளிர்கைக்கொண்டுடன்சார. கசுசு

ஆடியேந்தினர்சிலர்வரவடப்பையேந்தினராய்த்
தோடுகொண்டுசெல்லோர்வரச்சுருண்முகவாச
மோடிமுந்துறநீட்டுவார்சிலர்வரவுமிழ்நீர்
பீடினேந்துவார்சிலர்வரப்படியகம்பிடித்து. கசுஎ

மாடகத்தனியாழ்குழன்முதலியவகையாற்
பாடலிற்பயின்றங்கலார்முன்பினும்படரச்
சூடகத்தொகைமேகலேசிலம்பொலிதோற்றி
நாடகத்தொழிலாற்சிலர்முந்துறநடப்ப. கசுஅ

வட்டவெண்குடைமீமிசைநிழற்றவார்கவரி
யிட்டிடைக்கொடியாரிருமருங்கினுமிரட்டப்
பட்டவொள்ளொளிபரப்புசாந்தாற்றிகள்பரவ
கட்டெழிற்றிருப்பாதுகைகழலிணேசூட. கசுகூ

தமதுசீர்முகத்துமைவிழியுமைதனிமுகத்துத்
தமதுவாள்விழியெதிரெதிர்சார்ந்தனகளிப்பத்
தமதுதோளணியுமைபுயத்துமைபுயத்தார்க
டமதுதோளுறத்தங்கையுமுமைகையுங்கோப்ப. கஎ0

மந்தமாருதமருங்குவந்தசைதரவினை
மைந்தர்பாடலின்வண்டுபாண்முரல்வனநோக்கி
மந்தமென்னடையால்வழிக்கொண்டனர்நடந்தார்
மந்தரத்தனமடந்தையர்தங்களுண்மொழிவார். கஎக

கலிவிருத்தம்.

குரும்பைவெம்முலையினாள்பாங்கர்க்குண்டுநீர்ச்
சுரும்புளர்காவிகடோடவிழ்த்தன
பெரும்பெயர்க்கடவுள்பாற்சுனையிற்பெண்டிர்கா
ளரும்பவிழ்த்திலவலர்க்காவியென்கொலோ. கஎஉ

பண்ணைமென்மொழியினாள்பாங்கரீர்ம்புனல்
வண்ணவம்புயமலர்வல்லைகூம்பின
வண்ணறன்புடையகன்சுனையினவ்விநேர்
கண்ணினீர்குவிந்திலகமலமென்கொலோ. கஎங

மான்றபூண்முலையினாண்மருங்கில்வாலொளி
யான்றதண்மதிச்சிலையரும்பிற்றீர்ம்புனல்
சான்றவர்தொழும்பிரான்புடையிற்றையலீர்
கான்றிலதொழுகுநீர்கலைக்கலென்கொலோ. கஎச

களித்தளியுள்ர்குழற்கன்னிபாலரக்
கொளித்தனிக்கதிர்ச்சிலைதீயுமிழ்ந்தில
தெளித்தருடருமிறைதேத்துநங்கைமீ
ரளித்தனசெழுந்தழலரிக்கலென்கொலோ. கஎரு

இறைவிதன்பாங்குறவிறைவன்பால்வளர்
சிறைபடுசகோரமுங்களித்துச்செல்லுவ
மறைமுதல்புடையுமைமாட்டுநேமியும்
பறையடித்துவகையிற்படர்வதென்கொலோ. கஎசு

எம்மையாளுடையவளிடத்திற்சார்தொறு
நம்மெலாவுடல்களுந்தண்மைநண்ணுறச்
செம்மல்பாற்புகுந்தொறுஞ்செல்வப்பேதைமீர்
வெம்மையார்ந்துடல்வெதுப்புறுவதென்கொலோ. கஎஎ

வேறு.

என்றனர்தம்முளிவ்வாறுகூறுபு
மன்றலோதியர்மகிழ்கூரவிம்மித
மின்றிகழ்விழிகளால்விளைத்துப்புக்கன
ரன்றினார்புரஞ்சுடுமடிகள்சோலையின். கஎஅ

புகுந்தபேரருளுடைப்புனிதர்பொற்சிதர்
இகழ்ந்தபூண்மணிமுலைத்தெய்வக்கற்பினாட்
ககங்களிபயப்பமெல்லரும்பர்ச்சோலையி
னுகந்தபல்வளமெலாமுலாவிக்காட்டுவார். கஎகூ

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முறுக்குடைந்தலர்ந்தமலர்களுந்தளிருமுருகுலாய்க்கவின்றபூங்கொம்பர்
நறைக்கொடிபுடர்ந்துதழுவிவந்தலேக்குநாகிளங்காவிளுலசைவ
நிறைக்களித்தலேவரொடுமடமகளிர்நிகழ்த்திடுகலவிதோற்றுவபார்
கறைக்கனமிகந்துமதுத்துளிதுளிக்குங்கடிமலர்க்கதுப்பிளந்தோகாய்.

தென்றல்வந்தசைப்பத்தரைவிழுந்தொசியுந்தேங்கமழ்மலர்க்கொடிப்பாங்கர்
மன்றலந்துணர்ப்பூங்கொம்பர்கள்குரங்கியாடுவுபுலந்தமங்கையரைக்
கன்றியகாமத்தலேவர்செந்தளிர்மென்கழல்பணிவதுதெரிப்பனபார்
வென்றிகொள்சிலேயும்பிறையுமேக்கறுப்பவிளங்கியதிலகவாணுதலாய்.

கடித்துணர்ப்பனிப்பூந்தேறல்வாய்மடுப்பக்காமாகொம்பிடத்துமண்கிடந்த
கொடித்திரளிடத்துஞ்சென்றுசென்றணவுங்குரற்சுரும்பிளேயவாபாலும்
பொடித்தபொற்றனத்தாரமருங்கினுந்திரியும்புலவிதீர்சேடர்போல்வனபார
பிடித்தயிற்பகழிதொடுத்திடாதமர்செய்பெருவிறற்புருவவிற்படையாய்.

அரிக்குரற்சிலம்புமிழற்றியசும்மைக்கஞ்சிறைச்சுரும்பினமிரிவ
வெரிக்கணினவிந்தகாமனுக்கநாளிருஞ்சிலேநாணெனப்போந்து
பரிக்குந்தம்பிழையைநினேந்துமுன்னிற்நப்பயந்தமைதெரிப்பனபாராய்
விரிக்கும்வெண்டரங்கவேலேயினகன்றுவேலெனகூர்த்தவாள்விழியாய்.

நந்தமைநோக்குங்கிள்ளேகள்பூவைநயப்புறநுதல்விழிப்பெருமான்
வந்தனனறிகென்றுரைப்பனதேரின்வாம்பரியெனத்தமையுடையாற்
கந்திலம்மதவேள்பாசறைதனில்யாமணேதிறமொழிவதேய்ப்பனபார்
கொந்தொளிமணிப்பொற்குதம்பைநான்றெருத்திற்குலாவுறும்வாாசெவிப்பாவாய்.

மட்டவிழிதழின்வனமுருக்கெதிரேமுழுவதுமலர்ந்தொளிர்தோற்றங்
கட்டழகுடையகாமன்பாசறைக்கட்கண்டைமைப்பொரவுருக்கொண்டு
சட்டவந்தழலின்மறுவலுமெரியுந்தன்மையைத்தெரிப்பனபாரா
யட்டொளியரத்தச்செய்யவாய்க்குமுதவலர்பொருங்கோமளக்கோதாய்.

அளியினமுரலத்தளித்தலர்கொடிமுன்னலேந்துவீழ்ந்தொசிவுறுதோற்ற
மொளிவிழித்தழலினுருவழிவேளேயுதவுசென்றன்னவன்மனேயாந்
தெளியிழையிரதிமறுவலும்வணங்கியிரப்பதுதெரிப்பதுபாராய்
தளிரிடையரும்புந்தளவவெண்முகையிற்றயங்கியதவளவாணகையாய்.

பாசொளிவிரிக்குநிைதுருநோக்கிப்பசுமுகிலெனமடமயில்பே
ராசையினெழுந்துநடிப்பனதமையூரறுமுகக்குரிசிலேயுயிர்த்து
நீசரணெதுங்கிவரப்பெறும்பேற்ருனிசழ்ச்ளிதெரிப்பனபாராய்
தேசவிர்முருக்கினிறங்கவர்ந்தமிழ்தத்தீஞ்சுவைபயின்றவாயிதழாய்.

நெருப்பவிர்ந்தனேயசெய்யமாந்தளிர்கணீனிறக்குயில்கொழுதுவநின்
குருப்பொலிமணிவாய்மொழிக்குநேராகக்கருதிநின்கொழுங்கனிவாயி
னுருப்பொலிவுடையசெந்தளிரிரதமுண்பதுதெரிப்பனபாராய்
மருப்பொலிகமுகின்கண்டமும்வளேயுமறலியமங்கலமிடற்ருய்.

இடைதெரியாமற்குயிற்குலமிசையினிரங்குவவெந்தமைக்காணூஉக்
கொடியினமெடுத்தகுடம்பைகணேடிக்கொழுங்கருவுயிர்த்திடலரிதா
லுடையவயாமேவளர்த்தியவருளென்ருேவிடறெரிப்பனபாராய்
சுடர்மணியுகுக்குமமையொடுகரும்பைத்தொலேத்தெழில்வாய்ந்தபூக்தோளாய்.

மலைத்தமிழ்முனிபாற்பழகியபயிற்சிமாண்பினைத்தெரிப்பதுபோல
வலைத்திரட்சுனைநீர்படிந்துமாதவர்மெய்யலங்கியபூதிமெய்தோய்ந்து
கலித்திரளருவித்துளிமணந்தென்றல்கவர்ந்துலாய்வழிபடல்காணு
யொலித்தடத்துயிர்க்குங்கமலநீத்தடுக்கற்சாந்தளோடுறவுகொள்கரத்தாய்.

எழுதருநினதுமெய்யுறுப்பாதியெழிலினைக்கவருவான்முன்னிக்
குழுமியசெயல்போற்குஞ்சரஞ்சீயங்கோலமான்பிணைமயில்கிள்ளை
வழுவில்பாண்மிழற்றும்பூவைகள்பிறவும்வயின்வயின்வெறுத்தமைபாராய்
செழுமணித்தரளவடஞ்சுமந்தெழுந்துசேண்வெளியடைக்கும்பூண்முலையாய்.

நாம்புகுமளவிற்பசும்பொழிலெமக்குக்கையுறைநல்குவதென்ன
மாம்பழம்வாழைப்பழநெடுஞ்சுளையவருக்கைநீள்பழம்விளம்பழங்க
டேம்படுபூகந்தெங்குமுந்திரிகைச்செழும்பழமாதிசிந்துவபார்
பாம்பெனக்கவின்றநிதம்பமேற்றழுங்கும்பருமமேகலையணிமடவாய்.

புரிமுறுக்குடைந்துமலர்த்திரளுகுக்கும்புதுமதுத்தோய்ந்துதாதளைந்து
விரியொளிதவளக்குவட்டினஞ்சேப்பவிரைகெழுகுங்குமச்சேற்றுப்
பெரியநின்முலைகளொக்குமாமுயலும்பெற்றிமைதெரிப்பனபாராய்
கரிநெடுந்தடக்கைகதலியென்றிரண்டுங்கவற்றுறச்சோர்குவார்தொடையாய்.

தேந்துளிதுவற்றியிளந்தளிர்பரப்பிச்சிறிதழ்மலர்த்திரள்குவவிப்
பூந்துகளதன்மேற்புதைபடச்சொரிந்துன்பொலங்கழல்பணிப்புறுவண்ண
மேந்தலர்ப்பொதும்பர்சிலதியரெனநின்னேவலினிற்பதுபாராய்
காந்துபன்மணியினரிக்குரற்சிலம்புகறங்குபொற்கமலச்சீறடியாய்.

நெட்டிளமூங்கில்கண்டொறுந்தரளநிரைபடவுகுப்பனவணிச்ச
மட்டவிழ்மலர்மேன்மிதிக்கினும்பனிக்குமலர்புரைநினதுதாள்பொதும்ப
ருட்டதைமலர்மேலென்படாதெனமிக்குருகிநின்றழுவநேர்வனபா
ரட்டொளியுருவச்சாயலான்மயிலென்றயிர்ப்புறுநுணங்குசிற்றிடையாய்.

வளையினமுயிர்த்தமணியினுலரவமணியினுலன்றியஞ்சுடர்கண்
டொளியிதழவிழாக்குமுதவம்புயங்களுறநதநீர்நிலையகம்பொலிவ
களிவருவேனிற்குடைந்துசார்நதொளிததகரவினைத்தெரிப்பனகாணு
யிளிவருதீஞ்சொலமுதெனவிசைக்குமிணைவராலனகனைக்காலாய்.

பல்வகைநிறத்தமலர்களுந்துறுமிப்பரந்தொளிர்பொதும்பரினீட்டங்
கல்வளரடுக்கற்குவடுசூழ்கயிலைக்காரிகைமடவரலணங்கு
வில்வளர்நுழைநூற்சிதறிரவுடுக்கைவிரித்துடுத்தமைபொரனேக்காய்
மல்வளரிபமுந்தோகையுமனமுமருட்டுகட்டினியமென்னடையாய்.

இனையவாறளவில்வளங்களுங்காட்டியென்னையாளுடையவளோடுங்
கனையுமாமறைப்பொற்சிலம்புகள்கறங்கக்கழலடிமென்மெலப்பெயர்த்து
வினைகணீத்துலகமுய்ந்திடச்செல்லும்வெண்பிறைக்கண்ணியாரங்க
ணனையவாஞ்சோலைநவெண்வீற்றிருக்குநனந்தலைமண்டபங்கண்டார்.

கலிவிருத்தம்.

எண்ணில்வளனும்புரியவல்லமெனவெண்க
ணண்ணலொடுதெய்வயவனுதியர்தருக்கா
வண்ணநதிவேணியவரேபுரிவனப்பி
னண்ணுமணிமண்டபநலஞ்சிறிதுரைப்பாம். ௧௧௯

வெண்மணியடித்தலம்விரித்திடையிணங்க
வொண்மையொளிகாலும்வயிரேயமுறுத்தி
யண்ணன்மணிநீலமதனும்பரினழுத்தி
வண்ணம்லிபொற்குறடுவையம்விலைகொள்ளும். ௨௦௦

நீலநிலமீதுநிகழ்செக்கர்மணிவிற்றாண்
சாலமிசையோங்குவதழுங்குமிருள்வேலைப்
பாலணவுதுப்புவரில்பாணியுணவேட்டு
மேலமருமுந்திசெலமேக்கெழுவபோலும். ௨௦௧

அன்னவொளிர்தூணமிசைவச்சிரமரிந்து
மின்னுகமுகட்டுவெளிமேய்ந்ததிறம்விண்ணின்
முன்னியெழுசெந்துகிர்முகந்தகுளிர்கங்கை
நன்னதிபரந்தொளிர்பரப்பெனநலக்கும். ௨௦௨

வேய்ந்தமுகடெங்கும்வளைமீன்கமடமன்னம்
பாய்துதிரிவண்டுபதுமங்குமுதமாதி
காந்துமணியிற்புனைகவின்றவுருவிண்ணத்
தேய்ந்தநதிமல்குவளனென்னவெழில்காட்டும். ௨௦௩

முத்தணிவடங்கண்முழுவெண்ணிலவுகாலக்
கொத்தொளியநாகமணிகூர்ந்தவெயில்காலத்
தத்தொளியநாசிகடயங்குவனவேணி
வித்தகர்முகங்களெனமிக்குவகையேய்க்கும். ௨௦௪

மாயவனிகர்ப்பமணிவாய்ந்தநிலநாப்பட்
சேயொளியமார்பின்மணியொப்பவிருள்சீத்துக்
காயுமொளிவித்துருமமேடையெழில்காட்ட
வேயுமதன்மேலணைமணிக்கிரணமென்ன. ௨௦௫

பத்தியின்வரைந்தபலவுங்கதிர்விராவித்
தத்தமுண்மயங்கியிதன்வண்ணமிதுவென்ன
மெய்த்தவறிவாளர்களும்வேறறியலாகாச்
சித்திரமியன்றுதிசைபோயதிசைமாதோ. ௨௦௬

எந்தைமலைமீமிசையியங்கினரிலாமென்
றந்தரமியங்குநர்களஞ்சியடையாளஞ்
சிந்தையுறவாய்ந்தனரமைத்ததிறமாலுங்
கொந்தொளிஞெமிர்ந்தசிகரக்குருமணிக்கல். ௨௦௭

ஊடுபெடைசோலையினொளிப்பவதுகாணா
வாடுகிளிபேடையெனலந்துசிகரத்தி
னீடியமணிக்கிளியைநேசமுடனண்மிக்
கூடவெனவூடலுணர்வித்துமதிகொட்கும். ௨௦௮

தத்தமதுபேடைபுடைதங்கவுமருண்டு
சித்திரமணிப்புறவணைக்குமிவர்சேவ
லத்தகையசேவல்புடைவைகவுமணைக்கும்
புத்தொளிமணிப்புறவைவீழ்ந்திடுபுறாக்கள். ௨௦௯

தூற்றுமொளிமாழையினியற்றியசோபான
நாற்றிசைமருங்கினுநலக்கவினைவித்துச்
சீற்றமலியாளிதிணிவச்சிரமிழைத்துப்
பாற்றமுழுவுமாறுபயில்வித்துளதையன்றே. உக0

துப்புறுமலத்தொகைதுரந்தவடியார்கட்
கெப்புடையுநேரறியலாகுமிறையென்ன
வெப்புடையினின்றுமெழிஞேக்கவெளியாகி
யப்பெரியமண்டபமிலங்கிமணநாறும். உகக

கந்தமலிதெண்புனல்கலந்தனரொழுக்குஞ்
சந்தனவசும்புதவழ்தண்ணியநிலந்தான்
சிந்துரநறும்பொடிகள்சிந்தியகிலாதி
யுந்துபுகையேற்றிவிழியொள்ளொளியைவாங்கும். உகஉ

மண்டபமருங்குறவயங்குநெடுவாவி
முண்டகநறுங்குமுதமூசளியநீலங்
கொண்டுகுருகார்ப்பவிரைகூருருவிபாய
வெண்டிரைபயின்றுமணிவீசிவிளையாடும். உகங

ஆடுவனபாடுவனவையவருகென்று
வோடியெதிர்கொள்ளுவனவாகியுழல்பாவை
நீடுமொளியாடிமணிமாலைகணிரம்பிப்
பீடினுயர்பந்தர்பெரிதோங்குமதன்மாடே. உகச

எவ்வழகுமெவ்வெவர்தமக்குமியைவிக்கு
மவ்வழகரம்மையுடனுடியமர்வெய்துஞ்
செவ்விமணிமண்டபமதன்றிருவளத்தைப்
பௌவவுலகத்தொருவர்பன்னிடவுமாமே. உகரு

வேறு.

இன்னணங்கவினியவிடிலாமண்டப
முன்னுறக்கண்டருண்முதல்வனுரிமவரை
யன்னையோர்டாயிடையண்மினுரகனிலாய்
மின்னுகும்பூவணைவீற்றிருந்தாரரோ. உகசு

இயலினுன்மயிலெனவிளமயிலீட்டமுங்
குயிலெனமொழியினுற்கோகிலவீட்டமு
மயலுலாயண்முறவங்கலாரோகையிற்
செயனிலாய்ப்பணிபலசெய்குவாராயினர். உகஎ

செழுமணிப்பாசனத்தேம்புனல்கொணர்குவார்
கொழுமணித்திருவுருக்குளிரநீராட்டுவா
ரிழைநுழையாடையானீர்ம்புனலொற்றுவார்
விழுமியசந்தனமெய்யெலாங்கொட்டுவார். உகஅ

தூவொளித்தமணியச்சுண்ணமேலட்டுவார்
மேவருங்காரகில்விரைபுகைத்தேற்றுவார்
தாவில்சாங்தாற்றியாற்றண்ணெனவீசுவார்
கோவைவாய்மணிகளாற்கோலமிக்காற்றுவார். உககூ

குதம்பையும்பட்ட முங்குருமணிப்பூணுடை
விதங்களுங்கதிருகமேதகவணிகுவார்
கதழ்ந்துபோய்நீண்மரக்கடிமலர்கொய்துநீஇப்
பதிந்தனிற்சென்னியிற்பரிவுடன்சொரிகுவார். ௨௨0

கண்ணடிசீரெலாங்காணியகாட்டுவார்
வண்ணவூணறுவகைச்சுவையொடும்வட்டிலி
னுண்ணியவென்றமுனுய்த்தனரேத்துவார்
தண்ணியநீரினுற்றூழ்கரம்பூசுவார். ௨௨௧

வாசமார்பாகடைநீட்டுவார்வண்சிலம்
போசையார்நாடகமோகையினுடுவார்
வேசறவின்றியாழ்பாடுவார்மென்குயில்
கூசநின்றின்சொலான்மங்கலங்கூறுவார். ௨௨௨

வேறு.

பாவைமார்களிப்பரிசுபோற்றிட
வோவிலின்பமுற்றுறையுமேல்வையின்
மூவருந்தொழுமுதல்வியாகிய
தேவிமற்றிதுசெய்கின்றாளரோ. ௨௨௩

மாதர்மாலதிவல்லிகாணிய
போதுவாமெனப்பொங்கிமேலெழுங்
காதலீர்த்தலாலெழுந்துகாந்தனர்
பாதமேத்தினள்படர்தலுற்றனள். ௨௨௪

கேடருந்தகைநிமலனூரவ
ணுடுவாரலர்கொடிகளேயிசை
பாடுவார்பசுங்கிளிகளேபணி
கூடுவார்கொழுந்தென்றலேயென. ௨௨௫

இனிதுவீற்றிருந்தருளவேழைமா
ரனைவரும்பிரானருளினெய்தியே
தனதுபாங்கரிற்றதையமங்கலப்
புனிதவாழ்த்தொலிபொங்கிமேலெழ. ௨௨௬

சங்குதுந்துமிதாரைதண்ணுமை
வங்கியங்கிளைமகரயாழுட
னங்கநான்மறையாதிமல்கிசை
யெங்குநீண்டுவெற்பெதிரிசைப்பவே. ௨௨௭

சிலம்புகிண்கிணிசெவ்வித்தாமரைக்
குலம்பழித்தநின்கோலச்சேவடி
நிலம்படப்பொறாதென்றுநெஞ்சுளேங்
கலம்பினுலெனவலம்பியார்ப்பவே. ௨௨அ

என்னைநேர்கிலாவிளங்கொடிக்கிவ
டன்னருட்டிறந்தந்தளிக்குமா
றுன்னினுளெனவுளேந்துநோக்கென
மின்னிடைக்கொடிமெலிந்துதேம்பிட. ௨௨௯

சோலைக்கொம்பர்வாழ்தும்பியைக்குழன்
மாலைக்கூட்டுணைப்படர்ந்துவம்மினென்
றாலிக்கூவியாங்களகத்தொங்கலி
னீலக்காரளிகிரைகளார்த்தெழ. ௨௯0

கட்டொளிக்கதிர்காணரும்பொழி
லுட்டலைப்படுமிருளொதுங்குமா
வட்டமிட்டொளிவூர்ந்தகாதிடைப்
பட்டபொற்குழையகல்விளக்குற. ௨௯௧

கற்குழைக்கதிர்ப்பரிதிகண்டதன்
விற்கலங்கியைக்கான்றுமெல்லிணர்
தொக்கமாலதிமன்றலகுழ்வினைக்
கக்கணுக்குறுமங்கிகாட்டவே. ௨௯௨

தேசுலாமுகத்திங்கள்கண்டத
ஞசிலாதகலறலுயிர்த்தவ
ணீசர்மாவினுக்கீந்துவாக்குறும்
வாசமல்குநீர்த்தாரைமானவே. ௨௯௩

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கருப்புச்சிலைக்குநாணுவெம்மைக்கைக்கொண்டருள்கென்
றொருப்பட்டண்மிமொய்த்தலுறழப்பொதும்பர்வண்டு
குருப்பொன்மகரப்பகுவாயொளிருங்கூந்தற்கொழுந்தேன்
மருப்பட்டலரும்தொடையன்மருங்குவந்துசூழ. ௨௯௪

தத்தையொன்றுமுன்கைதரித்தநீமற்றெமையும்
வைத்துப்புரத்தல்வேண்டும்வல்லையருள்கென்பனபோற்
கொத்தின்மலர்கொள்சோலைகுழூமுகிளிகண்மொழியின்
றித்திப்பிசையினமரச்சேர்ந்துமருங்குமொய்ப்ப. ௨௯௫

அண்ணல்கரத்துமான்போலளியினெமையுந்தாங்கும்
வண்ணமருளவேண்டுமென்றுவணங்கவந்தாங்
கெண்ணினகன்றவிழியினியலபைநோக்கியினமாக்
கண்ணியுகளுமான்கள்களுவியருகுகுவளைய. ௨௯௬

காமர்முருகவேட்குக்காதல்யாமுங்கடவுஞ்
சேமப்பரிகளாகத்திருக்கணருளென்றுற்றுங்
கோமப்பிறவியீருமியலினினமாவெண்ணிப்
பூமென்கலவமஞ்ஞைபுடையின்மிகவுந்திரள. ௨௯௭

தளிர்மெல்லடிகணிலமேற்றங்கிவருந்துமென்னை
யளியினாருகென்னுவன்பினனைத்தும்வந்தாங்
கொளிர்பொற்சிலம்பிறெலியுநடையும்பயிலவுன்னி
வெளியவன்னத்தொகுதிமேவிப்புடையின்னெமிர. ௨௯அ

தங்களினத்துக்கொடியுந்தருவும்புணர்க்கும்வதுவை
பொங்கவியற்றுகினைவாற்போதுஞ்செயலைநோக்கி
யங்கங்கெழுந்தகொடியுமரமுமலர்களுழ்த்துச்
செங்கட்புனலும்வாக்கிமகிழ்ந்துசேவைபுரிய. ௨௯௯

அருகுநீட்டுமேகளிரம்பொற்கடகமுன்கைக்
குருகுகறங்கப்பற்றிக்கோலவடிகளொதுங்கிக்
கருவிவானமின்னுக்காவினடைகற்றென்னப்
பொருவின்மகிழ்ச்சிதுள்ளமெல்லப்பெயர்ந்துபோந்தாள். உ௪0

கலிவிருத்தம்.

போந்தவிமயத்தலைவிபூத்தகொடியண்மிச்
சேந்தகளிர்மெல்லடிகள்செங்கையொளிர்வாயா
வாய்ந்தமுகைமூரன்மலர்த்தொத்துமுலைவாட்க
ணேய்ந்தவளியாகமகளென்னவெதிர்கண்டாள். உ௪க

ஒண்டொடிமணிக்கையின்வளர்த்தவொருதன்னைக்
கண்டடிவணங்குபுகசிந்துதுதியாரக்
கொண்டதெனவந்தகுளிர்காலின்முடிகோட்டி
வண்டிசையிசைப்புநனிமல்கவெதிர்கண்டாள். உ௪உ

மன்றல்வினைசெய்வகையறிந்துவதுவைச்சீர்
நன்றுபுரிபாங்கியரிஞறியயனின்ற
கொன்றைநிறைபொன்னணிகொளுத்திமதுவார்ந்த
மென்றுகளெனுங்கலவைமெய்யணிவகண்டாள். உ௪௩

தன்னிருவிழிக்கருணைதாங்கள்பெறவெண்ணி
யின்னதுசெயக்கடவமென்றமரர்நாட்டுக்
கன்னியரதற்கணுருகாப்புறுவதேய்ப்ப
மன்னுகுரப்பாலையொடுமோடமர்வகண்டாள். உ௪௪

ஓங்குமணமன்றல்வினைக்குய்ப்பமலர்மாலை
தாங்கிமடமாதர்பலர்தங்கியதுபோலப்
பாங்கரின்வளர்ந்துபலவீழ்விழல்கடுப்பத்
தூங்குமலர்மல்குமரவந்துதைவகண்டாள். உ௪௫

மாலதிநறுங்கொடியைமன்றல்வினையாற்றன்
பாலுரிமையாக்கவருபண்பினையறிந்தாங்
காலிமகிழ்மென்குயிலணைக்குமிளமாவுங்
கோலநிறைவேய்ந்துகுளிர்தூங்குவதுகண்டாள். உ௪௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இன்னவாறழகுநோக்குமெம்பெருமாட்டியோகைக்
கொன்னெடுங்கடலுண்மூழ்கிக்குளிர்முகமலர்ச்சிகாட்டத்
தென்னிறைமன்றல்செய்யச்சிவபிராற்குணர்த்தும்போயென்
றுன்னினளுங்கணின்றும்பெயர்ந்தனளொலிசங்கார்ப்ப. உ௪௭

தடம்படுகுளிர்பூஞ்சோலைத்தழைபெருவளங்கணோக்கி
யிடந்தொறுஞ்சார்ந்துமெலலவேகுவாளுரிமைபூண்ட
மடக்கையர்மலர்கள்கொய்துவந்தனர்நீட்டநீட்டக்
குடங்கையினினிதுவாங்கிக்குளிர்மணமுயிர்த்துமோந்தும். உ௪அ

இமிழிசைச்சுரும்புந்தேனுமின்மதுநுகர்ந்துகொட்குந்
தமனியவீழ்நான்றன்னதனையவிழ்கடுக்கைநோக்கி
யமரர்கள்பெருமான்றெய்வவலங்கலென்றண்மித்தானே
யுமிழொளிக்கரத்தாற்கொய்துபூங்குழலும்பர்ச்சேர்த்தும். உ௪௯

இணர்விரிபொதும்பர்காப்பனைறிதிரைப்பட்டம்பூத்த
மணநறுநீலங்கொய்துவந்தனர்நீட்டவாங்கி
நிணமலிமுனையவேற்கணீலங்களளவளாவத்
தணவருங்கடிப்புக்காதிற்றண்ணறுவொழுகவைத்தும். ௨௫௦

அள்ளிதழ்க்கமலச்செங்கேழலர்பலகயத்துட்குற்று
வள்ளிதழாய்ந்துகட்டிநீட்டியதொங்கல்வாங்கித்
தெள்ளொளித்தரளமாலைதினிமுலைக்கமலமொட்டு
நள்ளுமாறவற்றினுச்சிநாலவொண்கழுத்திற்பூண்டும். ௨௫௧

புலியுருமருளப்பூத்தபூந்துணர்வேங்கையொள்வீப்
பலபறித்துகுத்ததாதுபைந்தொடிமகளிர்நீட்ட
வலர்கரத்தேந்தியம்பொற்சுணங்கெனும்வேங்கையோடுங்
குலவவெங்களபக்கொங்கைக்குவட்டின்மேற்செறியப்பெய்தும். ௨௫௨

மருதிளந்தளிர்கண்மாவினறுந்தளிர்செயலைச்செங்கே
ழ்ருகெழுதளிர்கண்மற்றுமொய்யெனக்கொணர்ந்துமுன்ன
ரிருநிலம்பரப்பிமெல்லவெழுந்தருளென்றுவேண்டத்
திருவடித்தளிர்கள்சேப்பப்பையப்பயச்செல்லாநின்றாள். ௨௫௩

செக்கர்வானுருக்கொண்டென்னச்செந்தளிரிளமாநோக்கி
முக்கணனுருவந்தோற்றுமுதன்மையைக்குறித்துநீவி
ரிக்கடிமரத்துக்காரவீர்ம்புனலவார்குகென்னுத்
தக்கதன்புடைசூழ்மின்னார்தங்களுட்சிலரையேவி. ௨௫௪

தென்றலாலலைந்துவீழ்ந்துதளர்ந்தெழில்சிதையுமற்றோர்
மன்றலங்கொடியைநோக்கிவலலியன்னீர்கணீவிர்
நன்றிதுதன்னைப்பற்றிநாகிளமரத்தினேற்றி
யொன்றுறயாத்துப்பின்னருறுகெனச்சிலரையேவி. ௨௫௫

தெற்றியமலர்களானுந்தேத்துளிபருகவந்து
முற்றியசுரும்பினானுமுரிவதுபோலத்தாழ்ந்த
மற்றொருமரத்தைநோக்கிநீயிர்வண்டுண்ணப்பூவைக்
குற்றுமண்ணுகுத்துக்காமின்கோடெனச்சிலரையேவி. ௨௫௬

ஒளிகுலாம்பளிக்குப்பாறையுமிழ்கதிர்பாலென்றெண்ணி
வளைகுலாமவாயிற்கவ்விவருந்துபைங்கிளியைநோக்கி
யளிகுலாய்நீயிர்தேவரான்பயங்கொணர்ந்துவல்லே
கிளியினையூட்டுமென்னுக்கேண்மையிற்சிலரையேவி. ௨௫௭

படுபணையுரிஞ்சிக்கான்றபடரெரிதாவிவாடு
நெடுமரமொருசார்நோக்கிநீயிர்விண்ணரசின்வைகு
முடிபுடைக்கடவுட்கூவிமுகின்மழைபொழியுமாறு
விடுமதியென்றுசாற்றுமின்னெனச்சிலரையேவி. ௨௫௮

இன்னணம்விளையாட்டாற்றின்யாரையும்விடுத்துமெல்லத்
தன்னையேயனையாளையர்வெரிந்புறஞ்சாரச்சென்றாண்
முன்னெடுநெடுவீதில்லார்முழுமணித்தவிசினும்பர்
மன்னிவீற்றிருக்குங்கோலம்வாள்விழிகளிப்பக்கண்டாள். ௨௫௯

அரும்பிளமுலைகடோற்றியலர்முகங்காட்டிமென்கான்
மருங்குவந்தசைப்பமின்னுரெனப்புடைமலர்ப்பூங்கொம்பர்
கருங்குயிகுல்பாடவாடுமோடவிற்கருத்துவைத்துத்
தெருண்டவர்க்கமுதமன்னூர்தனித்துறைசெவ்விநோக்கி. ௨௬0

வளத்தின்மிக்குயர்ந்ததொண்டைமண்டலத்துறைவோருய்யக்
கிளைத்தபுண்ணியத்தின்பேறேகிளரொளிக்காஞ்சிமூதூர்
விளைத்தபுண்ணியத்தின்பேறேமேதகுமறமெண்ணுன்குந்
திளைத்தபுண்ணியத்தின்பேறேவிதுவெனத்தெரிதறேற்றேம். ௨௬௧

சிலம்பணியொதுக்கித்தேம்புஞ்சிற்றிடைப்பருமம்பற்றி
யலம்புறவண்ணமெய்யினணிகலந்திருத்திக்கொண்டு
குலம்புரிமஞ்ஞைசெம்பொற்குன்றினையணைந்தாலென்ன
வலம்புரிமிடற்றுள்கேள்வர்வெரிந்புடைமறைந்துநண்ணி ௨௬௨

செழுநலக்கலவியாற்றுஞ்செவ்வியிஞெளிகான்றுள்ள
முழுவதுநாணச்செய்வவிவையெனமுனிவாள்போலப்
பொழிகதிர்ச்சுடர்ப்பூங்கண்களிரண்டையும்பூங்கைநீட்டிக்
கழிகளியகத்துப்பொங்கக்கதுமெனப்புதைத்தல்செய்தாள். ௨௬௩

முருகுகொப்புளிக்குங்கொன்றைநறுந்தொடைமுடித்தவேணி
யொருவர்வாண்முகத்துக்கண்ணுயுறைமிஹும்பிடேங்களென்றங்
கிருதிறத்தரவுங்கூடியேல்லைபார்த்துண்டதொக்கும்
விரிமலர்க்கரங்கடம்மால்விழிச்சுடர்புதைத்ததோற்றம். ௨௬௪

இன்னணம்விளையாட்டாகவிமயமீன்றெடுத்தநங்கை
பொன்னவிர்சடையார்கண்கள்புதைத்தலும்புவனமெல்லாந்
துன்னியசகலத்தன்மையெய்தியுந்தொல்லைநாட்கண்
மன்னுகேவலமேயென்னச்செயலறவிருள்வந்தன்றே. ௨௬௫

நித்தியகேவலங்களின்பமேநிகழ்த்தலானும்
பித்தெனமருளுந்தொல்லைப்பெரியகேவலமுந்துன்பக்
கொத்தினைப்பகுத்துக்காட்டாக்கொள்கையினுனும்வாட்கண்
பொத்தியவிருளின்வீக்கமவற்றொடும்புணரயாதன்றே. ௨௬௬

விளக்கிருசுடரும்வேலைவிரியொளித்தழலுமற்று
மளப்பறுந்திறல்பல்வேறுகாரியவழலுமேனைத்
துளக்கில்காரணமாம்பூதவன்னியுஞ்சுடராவாகி
யொளிக்குமேலிருளின்வீக்கமிற்றெனவுரைப்பார்யாரே. ௨௬௭

இருந்தவாறிருந்துபம்புமெண்ணிலாவுயிரும்வாடி
வருந்திடுமிடும்பைநோக்கிவள்ளலார்வறிதேநெற்றித்
திருந்தழல்விழியைவல்லேதிறந்தனரிளமகார்கள்
கருந்துயருழக்கவின்றோர்காண்பரோசிறிதுபோதும். ௨௬௮

ஆரியனருளாற்பாசமனைத்தும்விட்டிரியஞானப்
பேரொளிநிரம்பியாங்குப்பிஞ்ஞகர்கனற்கணேக்காற்
காரிருளொதுங்கிச்சாம்பக்கதிர்வெயிற்கற்றைமூதோ
பாரிடந்துறக்கமெங்கும்பரந்ததாவிறும்பூதெய்த. ௨௬௯

எண்ணிலாவுயிருமின்பமெய்தினவிறைவர்கண்கள்
பண்ணுறுமொழியாண்மூடும்பொழுதினும்பானுர்செற்றிக்
கண்ணினைத்திறந்தபோதுங்கதிர்ச்சுடர்மூன்றுந்தத்தம்
வண்ணவாளொளிபெருமைமழுங்குதலுற்றவன்றே. உஎ0

எரிவிழிதிறந்தலோடுமிருட்குழாமுடைந்தும்பர்
வெரினுடைப்புறத்திலோடியொளித்ததேவிமையவர்காட்
கரிநிறவுருவம்பெற்றகாரிகைகரங்கணீத்துப்
பரிவொடுபணிந்துநெஞ்சிற்பயங்கிடந்தலைப்பக்கூறும். உஎக

அடியனேன்விளையாட்டாகவலர்விழிபுதைத்தேனந்தக்
கொடியதோர்செயலால்விண்ணுங்குரைகடலுலகுமெங்குங்
கடியிருண்மிடைந்ததிந்தக்கடும்பிழைபொறுத்தியென்னுந்
துடியிடைமடந்தைமீட்டுந்துணையடிவணங்கிநின்றாள். உஎஉ

நாயகிபரிவைநோக்கிநம்பனாருளிச்செய்வார்
பாயினபருமவல்குற்பசுங்கொடிபின்னர்வந்து
நீயெமையறியாவண்ணம்புதைப்பினுநீயேயென்று
சேயிதழ்க்கரங்கடோய்ந்தவூற்றினுற்றெளிந்துகொண்டாம். உஎ௩

ஆயினுநினக்குமைந்தராகியவுலகத்துள்ளோர்
மேயினவலக்கணீப்பானுதலவிழிவிழித்தாங்கண்டாய்
பாயினவிருளானீயுங்காளிமம்படைத்தாயென்ன
மாயிருஞாலமீன்றாண்மறுவலுமிதனைக்கூறும். உஎச

பற்பலவுயிர்களெல்லாம்பருவரவடிகேணின்றன்
விற்படுசுடர்கண்மூடிவிளைத்ததீவினையின்பேறு
மற்பனேனுடம்பின்மாசுங்கழியுமாதவங்களாற்றப்
பொற்பமரிடமுங்காட்டிவிடையருள்புரிதியென்றாள். உஎரு

எள்ளருங்காதற்பாவாய்நிற்றணந்திருத்தலாற்றே
மொள்ளியதவத்தின்மூண்டவுளத்தினைவறிதுமீட்டுக்
கொள்ளலுந்தகுதியின்றிக்கொள்கையாலெவ்வாற்றானு
மெள்ளயாமாற்றியிங்கண்மேவுதும்விரைந்துநீயும். உஎசு

வெயில்கிடந்திமைக்குஞ்செம்பொன்விலங்கலின்வடபாலெய்திச்
செயிர்தபுதவங்களாற்றிக்காளிமந்தீர்ந்துதீஞ்சொற்
குயிலனுய்கவுரியாகிக்குழைகிழித்தொழுகும்வாட்கண்
மயிலனார்மாடவீதிவளநகர்க்காஞ்சிநண்ணி. உஎஎ

திருந்தகம்பூசையாற்றிவிழிபுதைசெயலால்வந்த
வருந்தவமொழிவாயாகவங்கண்மாலதியுநின்றன்
பெருந்தனியிருக்கைவைப்பிற்பிரசம்வார்காஞ்சியாகி
வருந்தடங்கருங்கட்பாவாய்மற்றுநம்மிருக்கைதன்னில். உஎஅ

இந்நெடுந்தளிர்ப்பூங்கொக்கினினத்தொருசுருதிச்சூத
மன்னிடுமெமிழ்தமூற்றுவாலெயிற்றணங்கேயந்தப்
பொன்னெயிலுடுத்தகச்சிப்புரத்தொருமாவின்பாங்கர்
நன்னெடும்புணர்ச்சிமன்றனமக்கினிதுறுகவென்றார். உஎசு

இறைவரைத்தணத்தலெவ்வாறெனமிகப்பிணங்குநெஞ்சை
யிறையவர்பாலிருவித்தாழ்ந்துவிடைகொண்டங்கிமயமீன்ற
விறைவிபொற்சயிலநோக்கிநடந்தனளென்னையாளு
மிறைவருந்தமியராகியெழில்வளர்கோயில்புக்கார். ௨௮௦

அகளமெய்வடிவானந்தவற்புதக்கூத்தனூர்தம்
முகவிழிநங்கைசெங்கைமுளரியாற்புதைத்தகாதை
நிகழ்விளையுரைத்தாமிப்பாலவரடிஙினைந்துபோற்றித்
தகவுமைகழுவாயாற்றுந்தன்மையிற்றன்னஞ்சொல்வாம். ௨௮௧

திருக்கண்புதைத்தபடலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௨௮௫.

## 65. கழுவாய்ப்படலம்.

கலிவிருத்தம்.

குருவான்மதிவேய்ந்தகொழுஞ்சடிலப்
பெருமானடிதாழ்ந்துபிறங்கருள்பெற்
றொருமாமலையீன்றவளொண்கனக
வரைமேவியவங்கண்வழிக்கொளலும். ௧

பல்லாயிரகோடியர்பாங்கியருஞ்
சொல்லாலமையாததொகைப்படுவார்
வில்லார்நுதல்விண்ணரமங்கையரு
மெல்லாமடமாதருமீண்டினரால். ௨

காரார்மணிமேனியனுங்கமலச்
சீராரணைவானவனுஞ்செழிபொன்
னூரான்புருகூதனுமும்பர்களு
மோரார்கணநாதருமீண்டினரால். ௩

முழவாதிமுழங்கினமொய்ம்மணியாழ்
குழலாதியெழுந்தனகூர்ந்தடியிற்
றொழுவோரொலிபம்பினதூமறையின்
வழுவாவொலிமல்கினமாமழைபோல். ௪

எட்டுத்திசையுஞ்செலிளங்கிரண
வட்டக்குடைமீதுவயங்கியதேர்
பட்டுக்கதிர்கான்றபனிக்கவரி
தொட்டுச்சிலமாதர்துளக்கினரே. ௫

தேந்தாமநறுங்குழலார்சிலர்கள்
சாந்தாற்றியலைத்தனர்சார்ந்தனர்முன்
போந்தாடினர்சின்மடவார்புகழ்க
ளாய்ந்தோதினர்பாடினராயிரவர். ௬

இவ்வாறெவருந்தொகவேகலுழு
மைவாரளகக்கதிர்வண்பவளச்
செவ்வாயுமைமாதுசெழுங்கயிலை
யவ்வார்பொழினின்றுமகன்றனளே. ௭

கலிநிலைத்துறை.

கடாமதக்களிற்றைவென்றகஞ்சுகப்புராணரை
விடாதுளத்தமைத்துநீணெறிச்சென்மங்கைவில்லிடும்
வடாதுகுன்றிவர்ந்துசொன்னவைப்பணைந்துகாதலிற்
றடாதவன்புமீக்கொளுந்தவஞ்செயத்தொடங்கினாள். அ

சீதமல்கிவாசமேந்துதென்றல்வந்துமுற்றுறும்
போதுபோதிகந்தசாதிபோலவெற்புயிர்த்தசீர்
மாதர்பொற்சிலம்புதோரைவண்ணமுத்துமாலைபூங்
கோதையாதிமெய்யணிந்தகோலமுற்றுநீவினாள். கூ

நீலவண்ணமாகிநீண்டகொம்புதன்னிடைத்தலைச்
சாலவுஞ்சிவந்தமென்றளிர்க்கணந்ததைந்துநன்
றூலினாலெனப்பரந்தவல்குன்மீதுவற்கலை
ஞாலமுற்றுமீன்றளித்தநம்பிராட்டிதாங்கினாள். க0

கொழுங்கள்வாய்மடுத்துணக்குழீஇத்திரண்டுவண்டின
மொழுங்குகொண்டுசூழ்ந்தமொட்டுடைந்தகஞ்சமொப்புறக்
கழங்குபந்துசெய்யபங்கயங்கடிந்ததன்னிருஞ்
செழுங்கரத்தினக்கமாலைசீர்பெறத்தரித்தனள். கக

காதலாற்பிணைந்திணங்குகாந்தனாரைநீங்கலான்
மாதர்மாமைபோய்விளர்த்தவண்ணமென்னவாசநீர்ச்
சீதமல்குசந்தனந்திமிர்ந்திலங்குமெய்யெலாம்
பூதநாதரைந்தெழுத்துமோதிநீறுபூசினாள். கஉ

வெள்ளிவெற்பினண்டர்சூழவீற்றிருக்குமெய்யருள்
வள்ளலார்தம்மேனியைப்பகிர்ந்துதான்வதிந்தநாள்
வெள்ளவேணியும்பகிர்ந்துகொண்டதொப்பமென்மலர்க்
கள்ளுறுதகூந்தலைக்கதிர்க்கும்வேணியாக்கினாள். கந

அங்கிநாற்புறத்துமிகுகழற்றநாப்பணின்றுதன்
பொங்கரித்தடங்கணம்புயத்தைநிற்புறந்தரத்
தங்குகாதலான்மருங்குசார்தியென்றுபோக்கியாங்
கங்கண்வான்சுடர்க்குநேர்கதிர்க்குமாறமைத்தனள். கச

விரும்புதேனலங்கல்கந்தம்வீசுநானநீக்கியுங்
கரும்பனுக்குதீஞ்சொனங்கைகாரளாங்குழற்சடை
யரும்புதொன்மைவாசம்வேட்டுமுன்புபோலவஞ்சிறைச்
சுரும்பெலாமுரன்றெறிந்துசூழ்ந்துகொண்டவென்பவே. கரு

காரனங்குலாய்ப்படிந்தகாட்சியொப்பமெய்த்தவச்
சீர்புனைந்தகாமர்மங்கைசென்றுமூன்றுகாலமும்
வார்தரங்கநீர்படிந்தவண்சுனைத்தடங்களு
மேர்புனைந்ததெய்வவாசமெங்கணுங்களுற்றுமே. கசு

ஐந்தழற்குமெய்யினையழற்றவைத்தவெள்ளிவெற்
பெந்தையாரைநீங்கலாலெழுந்தவெய்யகாமமாஞ்
செந்தழற்குநெஞ்சினைச்சிளக்கவைத்திவ்வாறுவேற்
கந்தனைப்பயந்தநங்கைகாதன்மல்கநோற்றனள். கஎ

ஆயகாலேயிற்றனுதருங்குலப்பெணுமெனு
மேயவன்பின்வெள்ளிமால்விலங்கல்கொண்டணோங்தெனத்
தூயவெள்விடைக்கணெங்கள்சுந்தரப்புராதனர்
நாயகிக்கிரங்கியங்கணும்பர்சூழநண்ணினுர். கஅ

தோடுகொண்டவும்பரார்துதிக்குமோதையுங்கணம்
பாடுமோதையுந்திருப்பதச்சிலம்புகல்லென
வாடுமோதையுங்கறங்கியந்தரத்தெழுந்துலாய்ச்
சேடுகொண்டபொற்குழைச்செவிப்புறத்திறுத்தலும். ககூ

சாய்ந்தமஞ்சைகாரினந்தழங்கவார்த்தெழுந்தென
வாய்ந்தமெய்த்தவத்திருந்தமங்கையோகைநீடிமிக்
கேய்ந்தவன்புமுந்துமாறெழுந்துநேர்குறித்தெதிர்
வீழ்ந்துவீழ்ந்தெழுந்தெழுந்துமெய்விதிர்ப்பநின்றனள். உ0

கண்டுகண்டுகண்கடாரைகாலவுச்சியிற்கரங்
கொண்டுபோற்றுமெய்த்தவக்கொழுந்துமுன்னர்விண்ணெறிச்
சென்றுகொண்டவேற்றினைச்செலுத்தியண்மியெண்ணிலா
வண்டரண்டமும்படைக்குமாதியானவண்ணலார். உக

தணந்தநோய்தணந்திடத்தழீஇயினுர்தழுவலும்
வணங்குலாயனத்தினீர்வயங்குபாலினீங்கியாங்
கிணங்குகாளிமத்துவக்குநீங்கியேற்றரக்கருக்
கணங்குறுத்துகன்னியாகவண்டமீன்றவம்மையும். உஉ

கவுரவானிறத்தளாய்க்களிப்புமிக்குமேலெழ
விவறிநாதனுருட்டிறத்தையெண்ணியீர்ம்புனல்
குவளைவாட்கண்வாரவார்ந்தகோதைபோலொசிந்துபொன்
னவிர்பதாம்புயத்தின்வீழ்ந்தெழுந்தகங்கைகூப்பினுள். உங

சித்திரம்பொறித்தெனத்திகழ்ந்தநங்கைமேனியின்
புத்தெழிற்பெருக்கமும்பொருப்பெதிர்ந்தவெம்முலை
மத்தகக்களிற்றைவென்றுவாய்ந்தெழுந்தவீக்கமு
மத்தனுர்தடங்கணுரவள்ளியள்ளியுண்டனர். உச

ஆயிரத்தொரெட்டுமாற்றடுக்கல்வெற்புமோர்கவின்
மேயதம்மைமெய்க்கவின்விரிந்தலங்குபான்மையாற்
பாயவங்கண்யாவர்மெய்யும்பண்டைநீர்மைமாறிய
தூயவண்ணலேறுமின்றுலங்குவெண்மைநீத்ததால். உரு

அஞ்சுதுந்துமிக்கறங்கலோதையார்ந்துவிம்மின
விஞ்சுதேன்றுவற்றிவாசமிக்ககற்பகத்தலர்
மஞ்சுலாவுவானின்வானவக்குலங்கள்சிந்தின
பஞ்சிசேருமெல்லடித்துறக்கமாதர்பாடினுர். உசா

பூதரோடியாடினுர்புகழ்ந்துதொண்டராடினுர்
மாதரோடியாடினுர்மகிழ்ந்துசித்தராடினு
ரீடில்பாங்கிமாரெலாருமின்பவெள்ளமாடினுர்
வீடுகொண்டதென்னயாரும்விம்மிதத்தராயினுர். உஎ

இன்னவானபல்சிறப்பிணைக்கவென்னையாளுடைக்
கன்னிவெற்புயிர்த்தமாதுகண்ணுதற்பிரானடி
மன்னுமன்பினால்வணங்கிவாழ்த்தியான்வழுக்கலைக்
துன்னையங்கணணுகுமாறுவந்துமாதவஞ்செய. உ௮

மாதராடலோவுறுதமாடமல்குகாஞ்சியிற்
போதநீதவாதகாதல்பொங்கருட்கணல்கென
வோதவேதமுற்றுயிர்த்தொழுக்கனைத்தும்வைத்தரு
ளாதராதிதேவனாருமுண்ணையந்திசைந்துபின். உ௯

காதன்மங்கைபங்கயக்கரத்துமன்னுயிர்க்குலந்
தீதிலாதுவாழநீசெறித்தறஞ்செய்யென்றுல
வாதபாசனத்தினோடிரண்டுவண்சராவமு
மீதலீத்துவெள்ளிவெற்பையெய்திடப்பிராட்டியும். ௩0

ஈந்தபாசனஞ்சராவமுன்வணங்கியேற்றன
ளேந்தலாரணிந்ததிக்குநோக்கிநின்றிறைஞ்சினாள்
போந்தகம்பரோடுபோயபுந்திமீட்சிகண்டிலாள்
வாய்ந்தவன்புகொண்டுதான்வழிக்கொளக்குறித்தனள். ௩௧

சண்டிகைப்பிராட்டியுந்ததைந்தசாரதங்களு
மண்டவாணருங்குலாயடர்ந்துசூழவீற்றுநாள்
வெண்டரங்கவேலையேழுமிக்கெழுந்தொலித்தென
மண்டுபல்லியங்கறங்கமால்விடைக்கணேறினாள். ௩௨

பெருமைமிக்கதன்வழிப்பிறந்ததான்றனைத்தணந்
தொருவியேகுமாறறிந்துயிர்த்தாற்றினாலென
வருவிவீழ்ந்தழுங்குபொன்னடிக்கணீத்துமற்றிடை
மருவுமெண்ணில்குன்றநீள்வனங்களுங்கடந்தனள். ௩௩

அங்கணங்கண்வைகுதேவராதியோர்களன்பினாற்
பங்கயப்பதந்தொழப்பாரந்தநோக்களித்தளித்
தெங்குமாரனங்களங்கமீண்டிவிம்மமென்மெல
மங்கைகண்ணுகாலைமுற்றுவேனிலவந்தடுத்ததால். ௩௪

கற்பகத்தருக்களுங்கரிந்துநீழலோவிடப்
பொற்பிலங்குமண்டரூர்பொரிந்துநீறுபட்டுக
விற்பிறங்குகங்கையும்வறப்பவந்துமேயதாற்
றற்பரப்பிரான்கடைத்தழற்கணன்னவேனிலே. ௩௫

ஒற்றையாழிபூண்டவெய்யதேர்கடாவுறும்பரான்
கற்றைவெங்கதிர்ப்பிழம்புகாற்றியூற்றுநீரொடும்
வற்றவேரிவாவியோடைமற்றும்வாய்மடுத்தனன்
வெற்றவேனிலுக்குடைந்துநீர்நசைக்கண்மிக்கென. ௩௬

செஞ்சுடர்ப்பிரானும்வெண்டிரைப்பெருங்குளிர்க்கட
லெஞ்சலின்றிவைகறோறுமெய்திமூழ்கியாற்றலாற்
றஞ்சுவான்வழிச்சரிக்கவல்லனாயினானலால்
விஞ்சுவேனில்வெம்மைதாக்கிவீதலுண்மைபோலுமால். ௩௭

திங்கண்மேலுயர்ந்துமெய்துசெவ்விமாறிமாறியு
மங்கண்வேனில்வெப்பமெய்யடாதுதப்பியுய்ந்ததா
லிங்கிவ்வாறுசூழ்ச்சியின்மைபோலுமேனேவெய்யவன்
வெங்கனற்கொழுந்தளாவிமெய்வெதும்புகின்றதே. ௩௮

உதித்தெழுந்தவெண்ணிறத்துடுக்களென்றுகூறுவ
கதித்தெழுந்துமண்ணெலாங்கருக்கிமிக்குயிர்த்தொகை
விதிர்த்துவெவ்வுயிர்த்தழுங்கவேட்டையாடுவேனிலிற்
கொதித்தவெப்பின்மாதமேனிகொப்புளித்தபோலுமால். ௩௯

வெங்கனற்கொழுந்துமஞ்சும்வேனிலைத்தணித்துமென்
றெங்கணும்பரந்துசூழுமேழ்கடற்குலங்களு
மங்கணேயெழுந்துநோக்கியஞ்சிமேலெடுத்திடும்
பொங்குவெண்டிரைக்கரம்பொருக்கெனச்சுருக்குமே. ௪௦

பூதலக்கிழத்தியும்பொருந்துநீர்வறத்தலா
லேதமுற்றுநாவறந்திருங்கடற்குடித்தெழீஇச்
சீதநீரொழுக்குகென்றுசெல்லினத்தைவாய்பிளந்
தாதரித்திரேடிரப்பதொக்குமங்குறுங்கமர். ௪௧

விண்ணெலாம்பரந்துசென்றுவேனில்வெப்புடற்றலா
லண்ணல்வானவக்குழாமழுங்கிவாளகன்றொரீஇக்
கண்ணகன்றபாதலங்கரந்துவாழ்துநாமெனு
மண்ணகழ்ந்துபுக்கவாய்தலுங்கடுக்கும்வார்கமர். ௪௨

மாயிரும்புவிக்கண்விண்டுவார்கமர்க்குலந்தொறும்
போயுலாவியாதவன்பொழிந்தசெங்கதிர்த்திரட்
டேயவெந்தழற்பிழம்புதுஞ்சுகின்றதோர்கிலார்
பாயொளிக்கலென்பவாளராவினம்பரித்ததே. ௪௩

மானிளந்தனைக்கவற்றவல்லவேனினீர்த்திரண்
மேனிமிர்ந்துதாவியாடுபெற்றிவேனில்வாய்ப்படுந்
தீநிலங்கொதிக்கும்வெம்மைசென்றுடற்றுநோவினைத்
தானுமாற்றிடாதுமெய்தவப்பதைப்பதொக்குமே. ௪௪

கொள்ளுமன்பர்தம்மைவெய்யகூற்றம்வந்துகொண்டநா
ளுள்ளுநின்றிரங்குவோருமோர்துளிககணீர்பெறார்
கள்ளியுங்கரிந்துலர்ந்துகட்படாதிறக்குமேல்
லள்ளலாகும்வேனில்வீக்கமாருரைக்கவல்லரே. ௪௫

வேறு.

வேனிலின்னணமெங்கணும்விரிந்திடும்பருவந்
தேனிலாவியபணிமொழிமுகிழ்முலைச்செவ்வாய்க்
கானிலாங்குழற்கதிர்மலைக்கொடிவருநெறியால்
வானிலாம்புகழ்வயங்கியமகதநாடணைந்தாள். ௪௬

மகதநாடெலாமொன்பதுவருடமூழ்வலியான்
முகில்வழங்குதலின்றிநீர்வறந்துயிர்முழுது
மிகுபெரும்பசியுழந்துகண்சாம்பிமெய்தளர்ந்து
புகைமைகூரிலம்பாடுகோட்புட்டனவந்நாள். ௪௭

நற்றிறந்தருநறும்புனலுமழுமின்றி
யெற்றைநாள்களும்வேனிலேயனையவித்தேயம்
பற்றுவெந்தழல்வேனிலம்பருவத்தின்கடுமை
யிற்றெனக்கிளந்தியம்புதற்குவமையாதுளதே. ௨௮

நங்கைகண்ணிணைபுதைத்தலுநுதன்மிசைகாட்டஞ்
செங்கணேற்றவர்திறந்தநாளதற்படுமொளியே
யெங்குமாகவவ்வெரிவிழிவெம்மைதான்முழுது
மங்கண்வந்துவீழ்ந்தல்கிஞலனையதவ்வீக்கம். ௨௯

வழுவிலேனையபருவங்கள்வந்தடுத்துழியுங்
கழிவதின்றியிங்கிருக்கலாமெனப்பெறுங்களிப்பாற்
பழுதறும்புவிப்பரப்பெலாம்பரம்பியவேனின்
முழுதுமங்கொருங்கிறுத்ததுமனையதம்முதிர்ச்சி. ௩௦

வானினோடுபுட்குலமும்வாட்போக்கியார்மலையின்
மேனிலாவியகாகமேயெனவெந்துவீழ்ந்த
தீநிலாவியபுழுவெனத்தீந்தகானகத்தி
லேனமெண்குமானிபமரியேனவுமிறந்த. ௩௧

தண்டமாயிரமகழினுந்தண்புனலூறல்
கண்டிடார்பிறநாட்டுறுகயத்துநீர்முகந்து
கொண்டுநண்ணினுநண்ணுமுன்கொடுந்தழல்வெப்ப
முண்டுதேக்கிடவுணங்குறும்ழக்கொண்டபொருள்போல்.

அறிவிலார்தமைவருத்துழியொருபொழுதவர்பாற்
சிறியபுன்கொடைகாணினுமத்தினத்தன்றி
யுறுவதின்மைபோல்வறுங்கிணறகழ்ந்துழியொருகாற்
பெறினுமப்புனல்பிற்பொழுதுரையொடுங்கெடுமால். ௩௨

மனையின்மக்களினுக்கவினிதிகளின்மற்று
மினையவற்றிடையெய்துவதில்லையாலெவர்க்கு
மனையசேற்றுநீர்க்கலங்கள்மேல்வைத்திடுமென்பு
நினையினோங்குதம்முயிர்க்குறுமன்பையேநிகரும். ௩௩

அலநெடும்படையுழவர்களங்கைதொட்டறியார்
நிலவுபண்ணைகணெடுவரப்பினநிலைகுலைந்து
குலவுபேரொடுமறைந்தன்குளங்கள்காலேரி
பலவுங்கோடுகளழிந்தனபண்பிலார்பொருள்போல். ௩௪

நிரப்பெனும்பெரும்பகைவந்துநிலவலின்யாது
மிரப்பிலார்களுமிரப்பதுதுணிந்தனரம்மா
கரப்பிலார்களுங்கரப்பதுதுணிந்தனர்கருத்தின்,
விருப்பிலார்களுமிழிந்தவும்விரும்புமாதுணிந்தார். ௩௫

பொய்மைசொல்லுதற்கஞ்சியபுலனறிவோரு
மெய்மைசொல்லுதற்கஞ்சினர்விதியுளியுகந்த
தெய்வபூசனைசெய்தன்றிமற்றொன்றுஞ்செய்யா
ருய்யுமாறுதேர்ந்துடலினையோம்பியேகழிந்தார். ௩௬

களவுகேட்டறியார்களுங்களவினின்முயன்று
ளகமாதர்தம்முயக்கிடைதெரிந்தறியாத
விளமைமைந்தருமெய்தியபசியினல்யாவு
முளம்வெறுத்தொரீஇயின்பவீடடைந்துளாரொத்தார். ருஅ

கண்ணுமாவியுமெனவுறுகேண்மையர்களல்வே
மண்ணுடன்பசுமண்ணெனப்பகையினராறு
ரெண்ணுமூண்சிறிதெய்தினும்பாதியைநாளே
யுண்ணுவாமெனப்பசியினுலொளித்துவைத்தமர்ந்தார். ருகூ

மதுரமங்கலமுழக்கமும்மறையொலிமுழக்கு
மதிரும்வார்முரசோதையுமறுமனேதோறும்
பொதிநிரப்பினற்பொன்றிறைரழகையும்பறையு
முதகமாதிகட்கூடியகலாமுமேயோங்கும். கூ0

வேள்விமல்கியதீம்புகைப்படலையும்வினைஞ
ராள்வினைத்திறத்தட்டில்வாய்ப்புகையுமானனேயார்
வாள்விடுங்குழற்கேற்றியபுகையொடுமாளக்
கோள்விறந்தவானழுக்கடக்கொழும்புகைமலிந்த கூக

மாழையாற்பெரியோர்களுமாடெலாந்திரிந்தும்
வீழுமூண்வகைகிடைப்பருமெலிவினற்பெரிதும்
பீழையுற்றனர்சிபெருநிதிபடைத்தென்னே
யூழினல்லறம்பண்டுசெய்துள்ளகமுவவார். கூஉ

அரசன்கொல்லினுங்கொல்லியவதுநமக்கினிதே
யிரவுநல்குரவளித்திடுமெலிவினுமென்று
வொருவருண்பதினொருவர்போய்மிச்சிலைத்துமிந்தங்
கிருகரத்தினுமீர்ப்பர்மற்றவரெதிரீர்ப்ப. கூ௩

தகவிலாதவுந்தகவெனச்செய்தனர்தமக்கு
நுகரொணுதவுநுகர்ந்தனர்நூலினுன்மரபா
னிகவொணுதவுமிகந்தனரென்னெனவுரைக்கேன்
மகதநாடுறுபசிப்பெருங்கொடுமையைமாதோ. கூ௪

குழிந்தகண்களுங்கருகியவாயும்பைங்குடரை
யொழிந்துநின்றதேயெனமுதுகொட்டியவயிறுங்
கழிந்துவன்றசையலகிட்டுக்காணலாம்படியென்
பெழுந்தமெய்யுங்கால்பின்னியநடையுமேயெவர்க்கும். கூரு

பிணங்களீட்டமேதெருத்தொறுப்பிணநுகர்பெரும்பேய்க்
கணங்களீட்டமேகடிநகர்தொறுங்கணமாடுந்
துணங்கையீட்டமேநாடுகடொறுந்துணங்கையைக்கண்
டணங்குமாந்தரேமகததேயத்தலையனைத்தும். கூகூ

காவன்மன்னவன்பாருமவெங்களிறும்வாங்கவன
மாவுமற்றவும்வழங்கியவுணவினற்றுது
தாவும்வெப்பினுற்றுரும்பெனவுணங்கிமெய்தளர்ந்து
நாவைநாற்றிநின்றுயிர்ப்பனநாய்களேயனைய. கூஎ

கொடியவன்பசிக்கோமகனரசுவீற்றிருப்பப்
படியெலாமலங்காரஞ்செய்திட்டெனப்பசும்புன்
னெடியதிண்மரமாதிவெஞ்சாம்பருமென்புங்
குடருஞ்சோரியுங்கொழுவுமெங்கணுங்குழீஇனவால். ௬௮

இன்னவாறெலாந்துயருறுமகதத்திலெனையா
என்னைசேறலுமங்குளாரனைவரும்வருத்தந்
தன்னினீங்கினர்தரைகிடந்தவரெழுந்திருந்தார்
பன்னவாற்றலிலார்களும்பன்னினாரம்மா. ௬௯

நடையிலார்களுநடந்தனர்நன்பொருள்சிறிதுங்
கொடையிலார்களுமுள்ளத்திற்கொடுத்திடமுயன்றார்
கடையசெய்தவரென்செய்தாமெனவுளங்கரைந்தார்
கொடியராயினர்குளிர்முகத்தினியராயினரே. ௭0

அறஞ்செயாதிறந்தமைக்குழைந்தார்சிலரன்பின்
றிறஞ்செயாதிறந்தமைக்குழைந்தார்சிலர்தெய்வ
மிறந்திடாதினிக்காக்குமென்றார்சிலர்தம்மை
யறிந்திடாதெழுமகிழ்ச்சியாற்றம்முளீதறைவார். ௭௧

நெருநல்போற்பசிநெருப்பிற்றைநாளெமைநெருக்கிப்
பொருதுகின்றிலதென்கொலோபோனமெய்வலியு
மருவுகின்றதுவருத்தமுங்கவலையுமுள்ள
மொருவுகின்றதுகாரணமோர்கிலேமென்பார். ௭௨

எமக்குமன்னதேயாயதாலிங்கின்றமாந்தர்
தமக்குமன்னதேயாயதுபோலுந்தண்முகமு
மிமைக்குங்கண்களுமலர்ந்தனவெரிபெரும்பசியைக்
குமைக்கும்வாளுடையாரெனகுளிர்ந்தனரென்பர். ௭௩

சுற்றினெண்ணில்பல்பரிசனந்தொழுதுசூழ்வரவோர்
கற்றைவார்குழற்கன்னியிந்நாட்டிடைப்பெற்ற
முற்றுவந்தனளென்பராலன்னவுத்தமியாற்
பெற்றதேகொலாமிந்நலமெனப்பெரிதுவப்பார். ௭௪

அன்னமாதிவணகலுமேற்பண்டுபோலழலி
னின்னல்வந்தெமையிறுக்குமேயென்பரிவ்விடுக்கண்
டன்னைநாந்தணந்துய்யுநாள்வரினன்றிச்சாராள்
கன்னியாதலிற்கடந்தனமிடும்பைநோயென்பார். ௭௫

வந்தமாதுமண்மகள்கொலோவானவர்மகளோ
சிந்தைதேர்வரிதென்பர்கள்சேவுகைத்தருளு
மந்தமாண்பினுலெய்துமுன்னனூர்கெடலாளு
மிந்தவார்குழலிறைவியேபோலுமென்றிசைப்பார். ௭௬

மாந்தரின்னனதங்களுட்கூறினர்மகிழப்
போந்தவெம்பெருமாட்டியும்புகுதுமத்தேயம்
வாய்ந்ததன்றிருவாணையினிகழுமூழ்வலியாற்
றீந்ததன்மையைநோக்கினள்சேல்விழிவெதும்ப. ௭௭

இரக்கமுள்ளகத்தூற்றெழவினையநாடனைத்துஞ்
சுரக்குநீருணவாதியாற்றுயரெலாந்துரந்து
புரக்கவேண்டுமென்றுன்னினள்போதலைத்தணந்தாள்
பரக்கும்விண்மணிச்சாலைகணிருமித்தாள்பலவும். எஅ

தூயசெந்நெலின்கூடுகண்முதலியதுறுத்தாள்
காயமுட்டியகாக்களுநந்தனவனமுந்
தோயமுட்டியதோடவிழ்மலர்த்தடம்பலவு
மேயசாலையின்புறமெலாமேதகவிளைத்தாள். எகூ

உண்டிநால்வகைபறுசுவையூற்றெழச்சமைத்துப்
பண்டியேற்றினடெருத்தொறுமுய்த்தனள்பகர்ந்தாண்
ணீண்டிவந்தவர்தமையெலாஞ்சாலையின்வகுத்து
முண்டகச்செழுங்கரங்களான்முகந்தனள்படைத்தாள். அ0

எரிசெய்நோய்ப்பசியின்னலினுழந்தவெல்லீரும்
வருகவந்திடின்விலாப்புடைமலையெனவீங்க
விரதவுண்டிகளுண்ணலாமெனநகர்தோறு
முரசறைந்தனிர்வருகெனமுடுக்கினள்சிலரை. அக

கலனுமாடையுங்கமழ்விரைச்சந்தனச்சேறு
மிலகுமாலையுமரதனவீட்டமுமெவையு
மலகிலாதனவள்ளினளிறைத்தனள்விலங்கின்
குலமும்புட்களும்பசிகெடக்கொளுத்தினளிரைகள். அஉ

உண்ணவம்மினென்றலம்பியமுரசறையொலியு
மெண்ணிலார்களுங்குழுமினரெய்துறுமொலியும்
வண்ணவான்சுவையுணவுகள்வழங்குபேரொலியு
மண்ணியுண்டவர்துதியொலியுடனெங்குமமலும். அங

மறைவலாளர்கள்வேள்வியும்வளர்ந்ததுமனுவி
னிறைவலாளர்களியற்கையுமெழுந்ததுவணிக
முறைவலாளர்களொழுக்கமுமுளைத்ததேருழவி
னிறைவலாளர்கணிறைமையுநிலைத்ததாலெங்கும். அச

பிணங்கண்மல்கியவிடமெலாம்பெருஞ்சனம்பேயின்
கணங்கண்மல்கியவிடமெலாஞ்சாலைகள்கணங்க
டுணங்கையாடியவிடமெலாநடந்துணங்கைகள்கண்
டுணங்கிமாந்தர்சாமிடமெலாநடங்கள்கண்டுவப்பார். அரு

மறலியூர்கடாமலையுலாவிடந்தொறுமன்னர்
முறையினூர்கடாமலையுலாவினபிணமுகந்து
செறிவுகொண்டுபூந்தேருலாவிடந்தொறுஞ்செம்பொ
னுறுமணிச்செழுந்தேர்பலவுலாவினவன்றே. அசு

மகதநாடெலாமங்கலம்பொலியவென்னுள்கு
நிகரிலாவறநிருமலிவளர்த்தனள்வருங்காற்
புகரிலாதவிப்பொலிவினைமகதநாடாளுந்
தகவின்மன்னவன்யாவருஞ்சாற்றிடக்கேட்டான். அஎ

கேட்டமன்னவன்கிளரொளியிறைவியென்றறியான்
வாட்டுமெல்குரவோவறிவின்மையோமனத்தை
மூட்டவவ்வறச்சாலையைக்கவருவான்முன்னிக்
கோட்டங்கொண்டனனஃதுமைதிருவுளங்குறித்தாள். ௮௯

உயிரெலாந்தனக்கொருமகவெனவருள்சுரக்குங்
கயிலைநாயகிகண்சிவந்திலள்வழிக்கொண்டாள்
பயிலுமெல்லுறைகூடுகளாதியபலவு
மியலும்வார்சிறையெய்தினபறந்தனவுடங்கு. ௮௬

இறைவிநீத்தகன்றதுமிமவரைமகளாக்கு
நிறைவளங்களுஞ்சிறைமுளைத்துடங்குநீத்ததுவு
மறைகழற்சரண்மன்னவன்கேட்டனனச்சோ
நறைமலர்க்குழலுமைகொலோவென்றுளைந்தான். ௯0

எவண்படர்ந்தனளெவண்படர்ந்தனளெனவெங்குங்
கவலையுற்றிடுங்கண்கணீர்பொழிதருங்கசியும்
புவனிமேற்புரண்டரற்றுமெய்ப்புளகமும்போர்க்குந்
தவறுசெய்துவாழ்ந்திருப்பதிற்சாதனன்றென்னும். ௯௧

பொருமுஞ்செய்தபொல்லாங்கினையுன்னியுள்புழுங்கி
யிருமுமென்செய்தேனென்செய்தேனென்னுமென்குலத்தோர்
புரியுநல்வினையிருந்தின்றுகாத்ததாலென்னைக்
கருணைநாயகிகண்சிவவாமையாலென்னும். ௯௨

விண்ணுமண்ணும்பொல்லாதவனெனவெனைவெறுப்ப
நண்ணினேனெனுநரகமுந்துயரமுநயப்பப்
பண்ணினேனெனும்பற்பலநினைந்தனன்பசும்பொன்
வண்ணமாதினைவந்தித்துய்வேனெனவெழுந்தான். ௯௩

ஆய்ந்தமந்திரத்தலைவரெலாம்புடையணுகச்
சேந்தபங்கயவடிநிலந்தீண்டிமிக்கழுங்கப்
போந்துபூதரப்புதல்வியைக்கண்டனன்புகன்று
தாழ்ந்தெழுந்தனன்றணந்தனன்றணப்பருந்துயரம். ௯௪

ஆடினன்பலமுறையருமறைப்பெருந்துதிகள்
பாடினன்பலமுறைபணிமொழியினைவலமா
வோடினன்பலமுறையுளமுருகிமெய்யன்பு
நீடினனெதிர்நின்றனனெடுங்கணீர்சொரிய. ௯௫

குடந்தம்பட்டெதிர்நின்றிடுங்கோக்குலத்தரசன்
மடந்தவிர்ந்துவந்தனைபுரிபத்திமைநோக்கி
யடர்ந்தபூங்குழற்பிராட்டியுமாரருள்வழங்கித்
தொடர்ந்தவன்பினேய்வேட்டதென்னென்றலுஞ்சொல்வான்.

அறிவிலாமையாருயிர்க்குணமென்பதையறிந்து
நெறியிலேன்புரிபிழையினைப்பொருளெனநினைந்து
கறுவுகொண்டிடாக்கனைகணேயடியனேன்காவல்
செறியுநாடெலாமழைவளஞ்செழிக்கவென்றிரந்தான். ௯௭

தாங்களேகொடைவழங்குநர்தருகெனவிரந்தா
லாங்கணில்லையென்றிசைப்பரேயல்லலுக்கிரங்கி
யோங்குநல்லறம்வளர்த்தவளுவகைமீக்கூர்ந்து
தீங்குதீர்வரங்கொடுத்தனள்சென்றனள்காசி. ௯அ

அரையர்சூழ்தரவரசனுமலையரசுயிர்த்த
பெரியபெண்ணணங்கரசியைப்பெட்டனன்வணங்கி
யுரியவேவல்பெற்றுயரியதன்பதியடைந்தான்
பரவுநீண்முகிற்பருவமும்வந்ததப்பதத்தில். ௯௯

கலிவிருத்தம்.

பொறுப்பரும்வேனிலாற்பொன்றுநாடெலாஞ்
சிறப்பநல்வரமருள்செல்விகீர்த்திவிண்
ணெறிப்படர்ந்துலாயதேநிகர்ப்பவெண்ணிற
வறப்பெருமுகிற்குலமாழிநோக்கின. ௧00

விழுமமார்மகதத்துவெந்தபன்மரக்
குழுவினிலெழுந்துவிண்கூர்ந்தசாம்பர்மெய்
முழுவதும்பொதிதரமுரிதிரைக்கடற்
செழிபுனலாடப்போந்தகவிற்சென்றவால். ௧0௧

அள்ளிக்கோட்டக்கவந்நாட்டின்வெப்பினை
யுள்ளிக்குப்புற்றுவந்துடற்றுமென்றுவான்
பள்ளிக்கொட்புற்றெழுபளிக்குமேகங்கள்
வெள்ளிக்குப்பாயம்போர்த்ததுவும்வீழுமே. ௧0௨

அப்பெருவெப்பினையவிக்கமேகங்க
டெப்பினவலவெனத்தோகைநீற்றுமெய்
யொப்பறுகணங்களேவிடுப்பவூங்கவை
மைப்பெருங்கடலுணவழங்கலும்பொரும். ௧0௩

முழங்குவதின்றிவான்முடுகுமேகநீர்
வழங்குபுதன்னைநாமடிக்கச்சேறலை
யழுங்குவித்திடுமெனவஞ்சிவேனிலுக்
கொழுங்குகொண்டொளித்தொளித்தோடலொத்ததே. ௧0௪

வேனிலுக்குடைந்தனபோலமேகங்கள்
வானிடைநின்றும்வார்கடலின்வீழ்ந்தன
பேனநீர்மடுத்தனபெரிதுநீர்நசை
தானறவுண்டனபோலச்சாலவே. ௧0௫

ஆர்த்துநீர்வாய்மடுத்தலமருங்கருங்
கார்த்திரள்விசும்பிடையெழுந்தகாட்சிவிண்
சீர்த்தவாயிரவிழிச்செம்மற்சீறிய
போர்த்திறலவுணர்கள்போதல்போலுமே. ௧0௬

வெந்தழல்வேனிலைவிளைப்பதீதென
முந்துறவிழுங்கியமுறைமையேயெனச்
சுந்தரப்பரிதியின்றுளக்கங்காலற
வந்தரவெளியெலாமடைத்தநீன்முகில். ௧0௭

மறக்கொடும்பாதகம்வளர்த்தவேனிலைப்
புறக்கொடையறவெங்கும்புதையமுற்றியாங்
கிறப்பவுந்திசைதொறுமீண்டியன்னதைத்
திறப்படச்சிரிப்பபோன்மின்னுக்கான்றவே. ௧0௯

பரிதியினொளியறப்பகலும்பம்பிய
விருளிரவாயதாலிரவினேற்றுறு
தெருளொளிவிளக்கினைத்திசைதொறும்புதை
கருமுகில்கான்றமின்காட்டிற்றென்பவே. ௧0௬

நாகவார்கலனணிநம்பனுரைமுன்
மேகவாகனமெனத்தாங்கும்விண்டுவே
மாகமூடியபுயன்மருமநின்றொளிர்
பாகுலாமொழியவள்பயிலுமின்னரோ. ௧௧0

எடுத்துவாய்விழுங்கியவிடமெம்மான்கரந்
தொடுத்துநேர்கிழித்தபுண்டுணையமின்னொளி
படுத்தகாரெழிலியப்பகட்டினுதையின்
மடுத்தபேரொலிபுவிமலங்கவார்த்தவே. ௧௧௧

துணையறுநெடுவெளிமுழுதுந்தூமணிப்
பணைபொரப்பசியதோல்பரந்தகார்பொர
விணைதிரள்வார்கண்மின்னிழையவோதைசெய்
குணிலெனவிந்திரதிருவில்கொண்டதே. ௧௧௨

ஏர்த்துமின்னியங்குவவிடிகள்பல்லிய
நேர்த்தெழவிசும்பிடைநின்றுமண்ணெனும்
வேத்தவைகாணவிண்ணெழினிநீக்கிவந்
தார்த்தெழுகூத்தியராடல்போன்றவே. ௧௧௩

வருங்குயின்வழங்குமின்வயங்குபெற்றிமை
விரும்பிவெங்கிரிநிவிழுங்கித்தாங்குருக்
கரும்பணியுமிழவங்காக்குந்தோறுமவ்
விருங்கதிரொளிபுறத்திலங்கன்மானுமால். ௧௧௪

கருங்கடனிகர்த்ததுககனக்கார்க்குழாம்
பெருங்குரனிகர்த்ததுபிளிற்றுக்காரொலி
யிருங்கதிர்மணித்திரையெழுந்தடங்குவ
பொருங்கடித்தடித்தினம்பூத்தொடுங்குவ. ௧௧௫

மழைத்திரண்மின்னினம்வழங்குதோறுநோய்
தழைத்தவம்மகதத்துத்ததைந்தமானிட
வழைத்திரளுண்ணமுனண்ணும்பேய்க்கணம்
விழித்தழலவாய்களங்காத்தல்வீழுமே. ௧௧௬

வருந்தியநாட்டினின்மழையுகாமுனந்
திருந்தியபெருங்குளிர்செலுத்திப்பேரளி
பொருந்தினுலெனவுலாம்பொங்குவேனிலி
னருந்துயருடலுழந்தழன்றவூதையே. ௧௧௭

இடம்வலந்திரிதலுமெலிவோர்கடை
படுதலுமண்டிலம்பயின்றுசுற்றலுக்
தடையறவாவலுமுதலதாங்கலா
நெடுவெளியைக்கதிப்பரிகளொருமே. ௧௧௮

மலைவிளையாடியுமன்றற்சோலையி
னிலைவிளையாடியுமரங்கணிலைத்
தலைவிளையாடியுஞ்சார்ந்துமைந்தர்வெப்
புலையவின்பருள்வளிமாதரொத்ததே. ௧௧௯

வழிநடந்தண்மியுமனையினெய்தியுங்
குழலினைநீவியுங்குளிரமெய்யெலாந்
தழுவியுமாதர்கடமைப்பச்சேறலாற்
கழிமகிழ்மகிணரைக்கடுத்ததுதையே. ௧௨௦

வரைமிசைமோதியுமரத்தின்மோதியுந்
தரைமிசைவீழ்ந்துநீர்த்தடத்தில்வீழ்ந்தும்வார்
கரைமிசையிவர்ந்துநின்றுலாவுங்காட்சியாற்
புரைமதுநுகர்ந்தவர்போன்றதுதையே. ௧௨௧

அம்பிகையருள்பெறுமமையமீதெனப்
பம்பியமணிக்கடல்பலவும்விண்ணெழீஇத்
தம்பயமொழுக்குவதகையவண்புயல்
வெம்பயமுகத்தனவடவைமின்செய. ௧௨௨

அவுணரைப்பொரப்புருகூதனுக்குபல்
லிவரொளிவயிரவேற்கிடம்விண்ணின்றியிப்
புவனியெங்கணுநிரைத்திட்டபோன்றன
தவமணிமழைக்குலங்கான்றதாரையே. ௧௨௩

கலிநிலைத்துறை.

ஏற்றதானவர்கிளையறவிறுத்துவிண்ணரசன்
றேற்றுஞாலமாமவரினத்தொருவன்றூல்லுடலம்
பாற்றவச்சிரப்பகழிகணிரைத்ததும்பகரு
மூற்றுதாரைவில்லுடன்பொலியுராறுகார்மேகம். ௧௨௪

கலிவிருத்தம்.

தன்னிறம்பசந்தகடுளைந்துதாங்குரு
தின்னிசைமுழக்கினுவிரங்கிச்செய்யவாய்
மின்னினங்தெரித்தலான்மேகக்கன்னிநீ
ரென்னுமோர்மகவினையீன்றசெவ்வித்தே. ௧௨௫

அறைபலவடுக்கலிற்பெயர்ந்துதாரையா
னிறையுமிங்குலிகநீரலைக்கின்றன
பறையினுமுளைத்தெழப்பார்த்துவச்சிரத்
திறையினுமரிந்திடத்துடிப்பவென்பவே. ௧௨௬

முல்லைமென்குமிழ்முதிர்காந்தள்கோடுகள்
வில்லுமிழ்தாரையிற்றரையின்வீழ்ந்தன
வல்லவோர்வீரனுன்மறிந்தவேன்வியிற்
பல்லுமூக்கங்கைபன்முலைகள்போன்றன. ௧௨௭

கெடுவிசும்பெழின்முகினிரையினீளொளி
படுவதற்கெதிரகன்பாரும்பேரொளி
யுடையதுபோற்றணந்துறுநர்தேரொளி
கடலுறழியவொலியுகந்துவிம்மின. ௯௮

உருவினினிகர்த்தமையுண்டவாள்விழி
மருவியவினையினுமானவேட்டெனக்
கருமுகிலொடுமழைத்தாரைசான்றன
தெருமரத்தணந்தவர்ச்சிவனூருர்க்கெலாம். ௯௯

வீங்கியபெரும்பறைமுழக்கும்வேற்றுவி
யோங்கியகாலையாழிசைக்கலுற்றவர்
தாங்களேயடங்கியதன்மைபோன்றது
தீங்குயிலெழிலிமுன்னடங்குஞ்செவ்வியே ௱

அளவினூல்வழியறிந்திலாதவர்
களகளமொழிக்கெதிர்கற்றுமேதகு
வளமொழிதன்னமும்வழங்குகிற்கிலாப்
பளகறுமேலவர்பண்பும்போன்றதே. ௱௧

கருதுவாருள்ளமுங்கனற்றுவேனில்வல்
விருதுவாமன்னனையெழுந்தகாரினம்
பொருதுவாய்மடுத்தலிற்பொன்றுமன்னவன்
விருதுமாங்கவிந்ததும்வீழுமற்றது. ௱௨

அகன்றவர்வரப்பெறுவணங்களொடு
முகன்றளர்ந்தொடுங்கினமொயத்தகோகில
மிகுந்ததங்கணவர்வந்தெய்தப்பெற்றுளம்
புகன்றவரொடுபொலிந்தெபூந்தமஞ்ஞையே. ௱௩

எமதுருச்சாயல்பெற்றெம்மையொத்திடு
முமைமடவாலினுலுலகமின்புறு
மமைதினென்றெனமகிழ்ந்தாடலொத்தன
சிமயமெங்கணுமயிற்றிரள்களாட்டமே. ௱௪

உணக்கியவேனின்மன்னொழித்துவையகம்
வணக்கியகாரெனுமன்றன்றன்னிசை
யிணக்கியவிருதெனவெழுந்தவெங்சனுங்
கணக்கில்கட்டோகையகரையுமீட்டமே. ௱௫

மண்டலமெங்கணுமலிந்தகோபங்க
டிண்டிரைவான்பயந்தேக்கிவேனிலிற்
கண்டவருயிரெலாங்காற்றியாக்கையி
னுண்டசெந்நீரைமீட்டுமிழ்வதொத்தவே. ௱௬

கவற்றியவேனிலிற்கதித்தவெவ்வழ
றுவற்றிரும்பயத்தெதமைத்தொலைக்கழற்றிய
விவற்றினைச்சுடுதுமென்றெழுந்துநீண்முகி
லவற்றெறுடும்பொரவமன்றதுவும்போன்றவே. ௱௭

கடலுடையாடையின்கன்னிமெய்யெலாம்
படுமழைத்தாரைவெம்பகழிபுக்குநீஇக்
குடைநெடும்புண்வழிகொப்புளித்தெழுஞ்
சுடர்விடுகுருதிநீர்த்துளியும்போன்றவே. ௧௩௮

ஆடியமழையெனுமன்பன்றூரையாஞ்
சேடியர்கரங்களாற்சேர்ந்துபுல்லுற
நீடுமின்பெனுங்கருநிறைந்துநீணிலம்
பாடுருப்பசந்ததுபசும்புல்லாதியால். ௧௩௯

இழுமெனவிழுதருமிலங்குதாரையாற்
குழியுமெலலுடல்குழியாமைப்பேணிவன்
செழுமணிககவயமேற்செறித்ததும்பொரூஉ
முழுநிலம்பலவுமெய்முகிழ்த்ததோற்றமே. ௧௪௦

காம்புறழ்தோளியர்கடைக்கண்போற்சுடுந்
தேம்புவெப்பரசன்கார்ச்சேனைக்கோடுழித்
தாம்பிழைத்தவன்குடைதவிர்ந்ததாமென
வாம்பிகளிடந்தொறுமலங்கிப்பூத்தவே.

மழைமுகிலசனியின்வழக்கங்கேட்டொறு
முழைதொறுமொதுங்கியமூரிப்பாப்பினச்
செழுமணியொளிர்வனசெறிந்தகாரினை
யழலினம்பயந்துபுகலொளித்ததாமென. ௧௪௨

அருந்தவமுயல்வுறுமங்கலார்கள்பின்
னிருந்தனியிழையினுலிலங்கினுமெலன
வருந்தியவேனிலின்மரம்புல்லாதிய
பெருந்தளிராதியாற்பிறககமுற்றன. ௧௪௩

பெருத்தபன்மரங்களும்பின்னும்வல்லியு
மருததளிராதியின்வயங்குதோற்றமா
லுருத்திடுபிரிவினுருடங்குதொக்குற்இ
யருததியிற்கூடுழியழகுகாட்டுமே.

பொழிமழைத்தாரையிற்பூக்கள்சோர்ந்துமெய்
குழைவுறும்கொடிகளுங்கொம்பர்க்கூட்டமும்
விழைவினர்கலவியின்மெலிதல்காட்டின
கழியிழைகாட்டினகழன்றபூக்களே. ௰௫

தளியுகும்தொறுந்தடவரைவரைப்பெலாம்
விளியழல்வேனிலின்வெப்புநின்றுதந்
தெளியுடல்சுடவராநிவந்திவர்ந்தெனக்
களிதருகோடல்பாசரும்புகான்றவே. ௧௪௬

வாக்கியதாரைதன்மார்பம்போழ்ந்துநோய்
தாக்கலும்வரைமகள்சாலுநிலமலன
வோக்கியகரமெனவொளிர்ந்தகாரெதிர்
நோக்கியகாந்தளுய்யிதழின்பூக்குலம். ௧௪௭

சுரும்பினந்தூவழிதொடங்கமுல்லைக
ளரும்பினமுகிழ்ந்தநீரமையுமாற்றெனக்
கருப்புயறனைக்கடிப்புறவம்பற்றிறந்
திரப்பதுபோன்றனவிடங்கடோறுமே. ௧௪௮

பொறிவரிச்சுரும்பினம்புகுந்துதாதுண
வெறிமலர்பூத்தனகடுக்கைமேகநீர்க்
குறுகியுற்றிடும்புவியென்றுகங்கையிற்
செறிசடையேற்பவந்தெழுந்ததேவென. ௧௪௯

பொன்னணிமார்பினன்புவனிகாரினுக்
கின்னலுற்றழிந்திடுமென்றுவெற்பினன்
மன்னுயிர்முழுதுமாயாமற்றுங்கவன்
றங்கிலையெழுந்தெனவலர்ந்தபூவைகள். ௧௫௦

கருங்களிறட்டவன்றனக்குங்காப்பதிங்
கருங்குரைத்தெனவவனோடுதாங்கவப்
பெருங்கடல்வண்ணன்முன்பிறந்தசெம்மலு
மொருங்கவனுற்றெனமலர்ந்தவொண்பிடா. ௧௫௧

திருமயிலெதிர்நடஞ்செய்யவெட்சிதன்
னிருபுறத்தினுங்கொடியெழுந்துபின்னுறக்
குருதியின்மலர்ந்ததுகோலமஞ்ஞையூர்
முருகன்கார்க்கருளமுன்னெழுந்தமொத்ததே. ௧௫௨

பொருந்தனிவேலனைப்புயலைப்போக்கெனத்
திருந்தடிவணங்குவசிவணவெட்சிமுன்
குருந்துபொற்கூவிளங்குலலைபாங்கரு
மிருந்தலைகுரங்குவவிணர்க்கணத்தினல். ௧௫௩

மரந்தொறுமலர்தொறும்வண்டுசெல்வன
வுரந்தபுழ்வேனிலினுயங்கினிர்க்கெலா
மரந்தைகடீர்ந்தவோவம்மவென்றுவிண்
பரந்தகார்வினவுறப்படர்தல்போன்றவே. ௧௫௪

கானலைநீரெனக்கருதிப்பின்றொடர்ந்
தூனழிதங்களையுய்யச்செய்திடும்
வானினைத்தலைப்படமகிழ்ந்தெழுந்தென
வானுறத்தாவினமானினங்களே. ௧௫௫

குளகுமிக்குண்டுடல்கொழுத்தவேழங்கள்
களகளமுழங்குவகடங்கள்சிந்துவ
விளைமுகிலினமெனமேக்குக்கைநிமிர்த்
தளவளாயாடுவவடுக்கருேறுமே. ௧௫௬

பைத்தபாம்புலகினும்விடரிற்பாய்ந்துபோய்ப்
பொத்துதீச்சூட்டையும்புரட்டமண்கிளைஇ
மைத்தகாருழப்பதுமானப்புற்றினங்
கொத்துறுமெண்குகளகழ்ந்துகொட்டுமே. ௧௫௭

பாதலமருங்கினும்பனிவிராயது
போதரலென்றுபோம்புயன்மறுப்பபோன்
மீதொழுந்தியல்கள்பறந்துமென்சிறை
நீதினர்செல்வம்போற்சிதைந்துவீயுமே. கருஅ

திகழ்கயல்பாய்ந்தெடுத்துயர்ந்துசிர்ச்சிர
ெறுகுசிறையலைப்பனதோயத்தெல்லைதேர்ந்
துகுமழையோதும்வேண்டார்வென்றுண்கையான்
முக்கினைமறுத்திடுமுறைமைபோன்றவே. கருகூ

வேறு.

மேனிலத்தின்விராவியமைந்தரும்
கானிலைத்தகருங்குழன்மாதரும்
கீழ்நிலததிற்கெழீஇயகிற்சேக்கைமேற்
றுநிலைத்துத்தழீஇநுகர்ந்தாரரோ. கசுo

தேங்குநீரிற்சிதர்ந்துகுதாரையா
ஞேங்குபுற்புதமொண்டரைவேனிலிற்
றுங்குமெவப்பிற்றளர்ந்துதண்ணீர்களும்
வீங்குகொப்புள்விராயதுபோலுமே. கசுக

முக்கணாருளுள்ளமூளைத்தலுந்
தொக்கபல்பிறவித்துயர்த்தொல்வழி
யக்கணத்திலடைத்திடப்பட்டெனப்
பக்கமண்கமர்வாயடைபட்டன. கசுஉ

குன்றமும்புறவுங்குளிர்பண்ணையு
மொன்றுந்தோன்றிலவாயுதகத்தினுண்
மன்றமூழ்கினவெப்பறவாரியே
சென்றுசூழ்ந்தெங்குந்தேங்கியதொப்பவே. கசுஙு

எட்டறைக்குளிரிக்கினுமின்னிற்
கட்டழல்கடுகக்கெடுகின்றதாற்
பட்டமாரிதனைப்பயந்தாலென
மொட்டிளம்முலைவெப்பும்முடிந்ததே. கசுச

அமையுமென்றறைவாருரையன்றிநீ
ருமிழ்தல்வேண்டுமென்பாருரையில்லைவா
யமிழ்தமேனுமகட்டிடமுட்டுமே
னுமிழ்வதன்றிப்பின்னுண்ணவுங்கூடுமே. கசுரு

இன்னவாறிருதிங்களுமின்மழை
மன்னிநின்றனமாமகதப்புலந்
துன்னுமின்னறுமித்தின்புகூர்ந்ததா
லன்னதேயநிகர்த்தவனைத்துமே. கசுசு

வாய்ந்தமாமகதப்புலமின்னவ
ளுய்ந்தநுண்ணிடையம்பிகையோரு
ளேய்ந்தவாறெண்ணியின்பசிராமுன்
றேய்ந்துள்ளரெவரும்புறுத்தோயமே. கசுஎ

கருணைநாயகியுங்கடிக்கங்கைசூழ்
திருநிலாவுசெழும்புகழ்க்காசியின்
மருவிவிச்சுவநாதன்மலர்க்கழற்
பொருவில்பூசைபுரிந்திருந்தாரரோ. கசுஅ

கடவுள்வாட்கண்கரந்திடுகோளென
மடநலான்மகதத்திறைக்கீந்தரு
டடையிலாவநத்திற்றழைகாரினன்
மிடையுநீளிருண்மென்மெலநீங்கிற்றே. கசுகூ

விண்ணிவர்ந்தமழைக்குலமேதகு
மண்ணிறங்கியதென்னமணிக்கணத்
தண்ணலோதையடங்கினவம்புவித்
தண்ணெனீர்க்கட்டழுங்கொலிமிக்கதே. கஎ0

மாதரோதியின்மென்மெலவானிமி
ரோதைநீண்முகில்வெண்ணிறமுற்றன
போதன்மேயினபொள்ளெனமென்றுளிக்
கூதிர்வந்துகுலாவியதென்பவே. கஎக

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கோடலந்தீபமேந்திக்கண்டனகுன்றங்கான
நீடியகொடிகளேந்திக்கண்டனநிறைபூம்பண்ணை
பாடுசெய்பணிலமூதிக்கண்டனபரவைசால
வாடிமுற்கண்டகூதிரரசிளங்குமரன்றன்னை. கஎஉ

துணைவரைப்பிரிந்தோர்க்கெல்லாந்துயர்நனிகூர்க்கும்வெய்ய
கணைகளாயணையார்தம்முட்கழந்தனர்கூடச்செய்யுந்
தணவருந்தூதராயுந்தைந்தனகூதிர்காலை
யணவியவெழிலிதூர்க்குமரும்புனற்றிவலையம்மா. கஎ௩

தேம்பிழியளைந்துந்தூற்றுஞ்சிறுதுளியளைந்துந்தண்ணென்
றும்பரிசுடையதாயுமகனெலாம்வெதும்பியாரும்
பாம்புகொலென்னப்பாயும்பகழிகொலென்னக்கொல்வான்
வாம்புலியென்னத்தாவிவளாயதுகூதிர்க்காற்று. கஎ௪

கள்ளவாய்நுகர்ந்துகண்ணிற்கறங்குமென்சுரும்பரீட்டம்
வள்ளவாய்மலரின்குப்பைவால்வளைக்குப்பைசூழ்ந்த
புள்ளவாயிசையின்சும்மைபொங்கியொண்மணிநீர்சால
வுள்ளவாய்நிறைந்தவேரியுறுதடமாதியெல்லாம். கஎ௫

உடைகரையடைக்குமோதையுயர்த்தியமண்ணைவாரிப்
படுமவறூர்க்குமோதைபற்பலகால்கடோறும்
விடுபுனலொதுக்குமோதைவிரிபணைவிளைவுமூடிக்
கெடுபுனலொதுக்குமோதைகிளர்ந்தனதேயமெல்லாம். கஎ௬

அருள்பிரியாவியெண்ணில்புனைத்துநுகர்ச்சியோர்க்தவ்
வருவினைக்கூடுமோபோலலைகடனீரேமேகந்
தாமலையாதியுள்ளவாமெலாந்தழுவியாறுய்க்
கரைபொருதிரங்குவேலைக்கடலகநிறைந்ததன்றே. கஎஎ

பறந்தலையுழக்கிப்பேய்க்கும்பருந்துக்கும்விருந்துசெய்யு
மறந்தலைக்கொண்டாராவிமடநலார்மாட்டுநண்ணிற்
சிறந்திடுங்குணமேயென்னத்தேம்பியவேனிற்கொன்ற
நிறந்திகழ்பரிதிவெப்புந்தன்னமுநிகழ்ந்திடாதால். கஎஅ

மினற்றழற்கிரணக்கற்றையிரிக்குமாதவனைவைது
கனற்றினனென்றுவேனிற்காலத்துவெறுத்தார்தாமே
யனற்றினனல்லனென்றிக்காலத்தும்வெறுத்தாரந்தோ
வினற்றிறமுற்றூர்க்கின்னசொல்லலாமென்பதின்றே. கஎகூ

இரவுநன்பகலுமாறியிரவியுமதியுமாறி
வருவனவென்னவெய்யோனொளிமிகமழுங்கிச்செல்லப்
பரவுபைங்கிரணக்கற்றைப்பானிலாச்சாலக்கான்று
விரவியமாந்தர்க்கின்பம்விளைத்ததுபனிவெண்டிங்கள். கஅ0

அரவிரியல்குலார்தமரதநக்குவவுக்கொங்கை
கரவினிற்புணர்வோர்செல்லுங்கடங்களுந்தேய்ந்தகூதிர்
விரவலின்நெடுங்கிவேழக்கடங்களுந்தேய்ந்தவெற்பர்
குரைவைகடமுழவியாடுங்குமரவேள்குன்றமெங்கும். கஅக

தங்களுக்கின்பநல்குந்தண்புயற்பருவஞ்சாடிப்
பொங்கியகூதிர்நோக்கிப்பொருமிநின்றழுவதேய்ப்பத்
திங்களங்கதிர்தோயகோட்டுததேம்பயின்மரங்களெல்லாங்
கொங்குயிர்சினையின்மேகக்குறுந்துளிதுவற்றுநின்ற. கஅஉ

இருந்துளிகிளைகடூற்றுமியல்பினற்சோலையுள்ளும்
பருந்துளிகூதிர்வீசும்பான்மையாற்சோலைப்பாங்கும்
பொருந்துறுப்பறவைக்கூட்டம்பூவையர்வேதுசெய்யுந்
திருந்தொளிப்புகையின்மாடஞ்சேக்கையாய்ப்பயிலுமன்றே. கஅந

ஈண்டியகுளிரானுள்ளமிளகியவிளையமந்தி
தீண்டுதற்கரியவெந்தீச்செறிவெனவுவந்துதுள்ளிக்
காண்டகமலர்ந்தசெங்கேழ்க்காந்தளம்பூவையண்மி
மூண்டதன்கூதிர்மாயமுன்கைமேனீட்டுமன்றே. கஅச

தடித்தெழுந்திடித்துப்பெய்யுந்தண்புயலொழியுங்காறு
மடித்தலம்பெயர்த்தானமையாடியவினைப்பானாக்க
மடித்ததுபோலப்பூவைமலர்புரையெருத்துமஞ்ஞை
கடித்தழைதோகைகூப்பிக்கவன்றனகாவுதோறும். கஅரு

தொடங்கியகூதிருள்ளந்துளக்கலுந்துணைகளோடு
மடங்கலுங்கயமும்மெண்குமரைகளும்புலியுமற்று
மடங்கினவழைகுன்றன்னவிடரகமனைத்தின்மாட்டுந்
தடங்கொள்வெம்முலையார்மைந்தர்தனியகத்தொடுங்கியாங்கு.

கைத்தலங்குலையமெய்யிற்கனைமயிர்பொடிப்பவாம்பல்
செத்தொளிர்பவளச்செவ்வாய்துடிப்பத்தேமொழிதள்ளாட
வித்திறத்திருக்குமாந்தர்யாவருமினையவந்து
தத்தியகூதிர்தன்னைச்சாலவும்வெகுண்டாரொத்தார். கஅஎ

பத்தியிற்கலவிசெய்யும்பள்ளிகடோறும்வைகுஞ்
சித்திரமேடைதோறுந்தெற்றிகடோறுமெங்கும்
பொத்தியகூதிர்காயப்பொருந்தியவகலிற்சோதி
நித்தியவேள்விச்சாலைநெருப்பினுஞ்சிறந்ததன்றே. ௧௮௮

செய்யதாமரைகள்வென்றசெழுமுகஞ்சேப்பநீல
மையுலாங்கண்ணினல்லார்மதுநுகர்ந்தில்லந்தோறும்
பையராவலகுல்விம்மப்பணைமுலைவிம்மச்சேக்கை
நெய்யுலாங்கூந்தல்சோரக்கலவியினிகழ்ச்சிமிக்கார். ௧௮௯

விதிப்படிதோயமாடவிதித்தருள்கவுரிபாகர்
கழித்தெழுங்கூதிர்நோக்கிக்கல்லுருவண்ணம்போலு
மதிர்த்தெழுமங்கிவேட்டல்பின்னுறவமைத்தசெய்கை
கொழித்தெழும்பாசமாற்றித்திருவருள்கூடுவார்க்கே. ௧௯௦

விற்படுநுதலின்மாதர்வேணவாவென்னையார்க்குஞ்
சொற்படலரியவாகித்துமணிப்பண்ணைதோறு
நெற்பலூன்விளைந்தகன்னனிநறந்தனநெடியவாழை
யற்படப்பொதுளிவானமளந்தனநெடுமாலென்ன. ௧௯௧

தெருண்மணித்தெண்ணீர்பாய்ந்துதேங்கியபட்டமாதி
மருவியமீனக்குப்பைவரும்புனற்கெதிர்ந்துமீண்டும்
வெருவிமேலெழுந்தும்வீழ்ந்துமென்மலரலைத்துங்கொட்கும்
பெருவளமெய்தப்பெற்றபீடிலாவற்பரென்ன. ௧௯௨

இத்தகைக்கூதிர்த்தோற்றத்திமயமீன்றெடுத்தநங்கை
முத்தலைச்சங்கைசூழ்ந்தமுதுநகர்க்காசிவைகு
மத்தனைவணங்கியாயகுப்புறவிடைகொண்டுபோந்து
பைத்தநீர்க்காஞ்சிமூதூர்படர்தரநெறிகொண்டுற்றாள். ௧௯௩

வேறு.

எண்டிசையுங்குதுகுதுப்பூத்தெய்வமடவார்கணுலவிமையோரேத்த
மண்டியவெண்மணிக்கவிகைமேனிழற்றச்சாமரைகண்மருங்கிற்றுள்ளக்
கண்டவர்கள்களிதூங்கவெழுந்தருளுமுமைமாதுகயற்கண்சாதுதச்
சண்டிகைமங்கலையெனுந்தோழியர்வழிக்கண்வளமெய்த்துச்சாற்றுகின்றாள்.

பொங்குமொளிமுகமதியமுணவாரித்திரட்டுமிருள்போலுங்கூந்தா
றங்கையெனநினைக்காணவரிசைகொடுவருவதுபோற்றழுங்கியாடுங்
கங்கைநதியகினறுஞ்சந்தனமலர்கற்பூரமிளங்கனிகாய்த்தேறல்
செங்கனகமணிபலவுந்திரைக்கரங்கொண்டணைவதனைச்சிறிதுபாராய்.

நிறங்கூர்ந்தகருஞ்சுரும்பர்விளையாடுமுளரிமுகநிமலாய்சால
வறங்கூர்ந்ததாங்களம்பெருவளம்படைப்பமழைக்கருணைவழங்கிப்போந்த
வறங்கூர்ந்தநினையமுனைமுதல்கடவுணதிபலவுமலர்கவிவிக்
கறங்கோதைவழுத்தெடுத்துமகிழ்கூர்ந்துமுன்வணங்குங்காட்சிகாணாய்.

மணங்கமழுங்கருங்கூந்தற்புயலுயிர்த்தசிலைநிகர்வாணுதலாய்பூத
கணங்களொடுநீவருவதறிந்துதொழக்காத்திருந்தாற்றடுப்பமேக
மிணங்குமலர்ச்சோலையினின்றிரைதேரப்புகுதாமலீர்ந்தண்கூதிர்க்
கணங்கினவாய்ப்பஞ்சரங்கடொறுமொடுங்கும்புட்டொழுதியழகுகாணாய்.

விழிக்கெண்டைபொருதலையாதக்கறுத்தமகரமொடுவிளங்குகாதோய்
செழிக்கின்றவளனெழிக்தகாலையுமேன்றனைகொண்டுசிறப்பிப்பார்போற்
கொழிக்கின்றமலர்வேரிகூடிரினித்தொழிமரங்கள்குளிர்ந்தநீரான்
வழிக்கொண்டேகின்னெதிரேகுறுக்துளிதூய்ப்புணிமாறும்வளப்புநோக்காய்.

அலையுமிருவிழிப்புணரிக்கிடையிடுபேரணையெனமூக்கலங்குமாதே
கொலையுகளுஞ்செழுங்குலிசப்படையாளிநினதடிக்கோகனகப்போது
தலையுயர்காதலின்விசும்பினின்றுதொழுமாறுதக்குந்தன்மையேய்ப்ப
நிலையுமறுத்துகண்முழுதுநீங்குநெடுவான்விளக்கநெடுங்கண்சாத்தாய்.

பொங்கியவாணுதன்மதிகண்டலர்ந்தகருங்குவளையெனப்பொலிந்தகண்ணை
யங்கணனைத்தழுங்கத்தனைப்புதைத்தன்னைச்சாலவஞ்சினன்போற்
செங்கதிர்வானவனழற்றுந்தீக்கதிர்நின்றிருமேனிசெலுத்தானகிப்
பைங்கதிர்வாண்மதியெனகண்பகலும்வயங்குறும்பரிசுபார்வைக்கியாய்.

நெடியவிழிக்கடலெறிந்தசெபும்பவளமெனவதரநிலவுவாயாய்
படியிவர்வெண்கயிலையினியிருத்தலினைதுகாறும்படாமாட்டா
தடிவரையிற்றவழ்மதியின்றமையமெளிதாதலறிந்தலர்ந்தகஞ்சக்
கடிமலர்நின்முகவொளியைக்கவர்ந்துசவர்ந்தொளிமிகுத்தகவினைப்பாராய்.

கந்தரமென்கமுகுகுத்துக்கிடந்தவிருபாகனையகளபத்தொய்யிற்
சுந்தரப்பொற்கனதனத்துத்தூமொழிச்சிற்றிடைக்கொடியாய்சுரர்கண்மாத
ரந்தரநின்றனைத்தொழவந்தடைவதுபோற்கார்வரமுன்னகன்றுபோகி
யிந்திரகாட்டெய்துமனத்தொழுதியெறிநீர்மருதமெய்தல்காணாய்.

மல்குவிடநுகர்ந்தபிரான்வானவர்போலமுதுமுணவாஞ்சைமீக்கொண்
டல்குன்மணிக்கடல்கடையவமைத்தபெருங்குன்றமுநீளரவும்போலப்
பல்குமிளமுலையுமயிரொழுங்குமொளிர்பசுங்கொடியேபண்ணைச்சாலி
பில்குமணிகொடுநின்னையருச்சனைசெய்தெதிர்வணங்கும்பெற்றிபாராய்.

பணங்கவற்றுமல்குன்மணித்தேரிவர்ந்துகுழற்பொழிற்பாசறைக்கட்போத
மணங்கமழுமயிரொழுக்குத்தொடர்பூட்டிப்பண்ணமைததவகுத்தகொங்கை
யிணங்குகரிசேர்செலுத்துமனங்கனைநுணுகுமிடுகிடைகல்லாய்நின்
னிணங்கொளயில்விழிக்குடைந்துநீர்நிலையிற்கயலிரிவநெடுங்கண்சாத்தாய்.

இடங்கொளுலகனைத்திலுக்குஞ்சிவபெருமானல்லதுவேறிறையிலாமை
நடங்குயிலுமவ்விறைவன்விழிபுதைத்துத்தெரித்தசெழுநளினக்கையா
யடங்கருநீர்க்கயங்கணினைக்காணவிழியாயிரம்பெற்றமைந்தான்மான
வுடங்கவிழுமெல்லிதழுற்பலங்கள்பலமலர்ந்தொளிருமொண்மைகாணாய்.

கொம்மைமுலைமலையுயிர்த்தகொழுங்காந்தளனமலர்ந்தகோலக்கையின்
விம்முமிசைக்கிளிபரித்தவிளக்கொளியேதவக்கொழுந்தேவிரைப்பூங்கோதாய்
மும்மையுலகீன்றளிக்குநின்முகந்தன்போலிருந்தமுறைமைநோக்கிச்
செம்மைமலர்த்தாமரையிக்குவப்பதெனவலர்ந்தசெழுந்தடங்கள்காணாய்.

மயிரொழுக்குப்பணிவிரித்தமணிப்படத்திற்கவின்றவளர்நிதம்பமாதே
செயிரொழிக்குமடக்கொடியேதெய்வதமேதேவர்தொழுகுலமேதெண்ணீ
ரயிரொழுக்குத்திரைப்புணரிநின்வரவின்கறிந்துதனதுவர்ப்புநீப்பான்
வெயிலொழுக்குமணித்திரள்கொண்டெதிர்குவித்து[illegible]றைஞ்சுசெய்தல்காணாய்.

மூத்தமகனியல்காட்டுங்கரிநோக்கியிரியாமைமுன்னியாங்கம்
மாத்தடக்கையெழிறுமிக்குங்குறங்கினைமென்பட்டுடையான்மறைத்தமானே
நாத்திகச்சொற்கொருகரிபோயிழிந்தேனையிறைமுடிப்பநல்காயென்று
தேத்துளியநறுங்கைதைமடற்போதுதலைவணக்குஞ்செயலைநோக்காய்.

எழுதாதமறைமுடியுமிறைஞ்சுமடியார்முடியுமிலங்கப்பூத்துக்
கொழுதாடுசிறைச்சுரும்பினன்பர்துதிகுடிகொண்டகொழும்பூந்தாளா
யுழுதார்வமிக்குடையாரலர்தூவிப்பணிந்தெனத்தேனசும்பத்தும்பி
யுழுதாலுமலரிறைத்துக்குராங்குசினைநறும்புன்னையொசிவபாராய்.

தெள்ளரியவானந்தச்செழுங்கடலினெமைத்தோய்க்குஞ்செல்வமாதே
துள்ளுமறிவிழியுநறுங்குமிழ்மூக்குஞ்சுடர்க்கோபத்தொண்டைவாயுங்
கள்ளுயிர்க்குங்கடுக்கைமணிக்குழலுநறுந்தளவநகைக்கணமுந்தோற்றித்
தள்ளுகொடியிடைநுடங்கப்புறவமகளெதிர்கொள்ளுந்தகைமைபாராய்.

படைத்தளித்துத்துடைத்துமறைத்தருள்புரியுமைந்தொழிலும்பதுமப்புத்தேண்
முடைத்தலையினிரந்துண்டநின்கணவாக்குடனிருந்துமுடிக்குமன்னாய்
சடைத்தலைவர்கரத்துழைவந்தனதுசெயலொற்றியவற்சாற்றவோடு
நடைத்திறம்போலெழுந்துகளுநவ்வியின்பினினதுவிழிநவ்விபோக்காய்.

திருமாதுங்கலைமகளுஞ்சயசயவென்றேத்தெடுக்குந்தெய்வப்பெண்ணே
யொருமாணிக்கருளபுரிந்துதம்மரசுக்கரசையுதைத்துருட்டுமுக்கட்
பெருமானுக்கொருமனையாளெனநின்னைச்செறுவதுபோற்பிறங்குகானப்
பருமேதிமுகஞ்சுழித்துப்பார்ப்பதவணினதுவிழிப்பசுழிதுண்டாய்.

சுரிந்தவளைக்கரத்தானுந்தோட்டலர்த்தாமரையானுந்துருவிக்காணாப்
பிரிந்தகொடுந்துயருடற்றுமாற்றாமைநீக்குதற்கும்பிழைத்தாருட்க
வரிந்துகழற்கணத்தொடுநீசெலுமவனப்புநோக்குதற்கும்வாஞ்சைகூர்ந்து
விரிந்தபுகழ்க்கணவரெதிர்வந்தனையகடுக்கையினின்விழிப்பூச்சாத்தாய்.

மங்கலமுந்தவப்பேறும்வாழ்க்கையுமிங்கெமக்கருளும்வஞ்சியன்னாய்
தங்கள்குலத்தொருகொடிக்குமணம்புரியப்புகுந்ததுவேசார்பாவேணி
யங்கணாருழைநீங்கியறம்வளர்தலெல்லாவுயிருமளிக்குமேன்மை
யிங்கறிந்துநகைமுகத்தின்மகிழ்வனபோற்றளவரும்புமியல்புகாணாய்.

பிறந்தவர்க்கும்பிறப்போர்க்குநினையன்றிவீடணுகாப்பிறங்கற்கொம்பே
யிறந்துபடாதுலகளிக்குநின்வரவுகாணலுமிங்கிறவியெய்தச்
சிறந்ததவமாற்றினமென்றுளத்துவகைமீக்கிளைப்பத்திளைத்தார்த்தென்ன
விறந்தொழுகுமருவிபலகறங்கோதைபயில்குறிஞ்சிவிளக்கநோக்காய்.

கருமுகிலினிகர்த்தவுருக்கவுரநிறம்படைத்தொளிருங்கனகப்பாவா
யருவிபடிசுனைதோய்ந்தும்பொழிலபுகுந்தாட்டயர்ந்துமமர்ந்திருந்துதன்னை
மருவியநீதணந்ததனல்வழிமறப்பப்பலவுருவாய்வந்துவெள்ளிப்
பெருவிலங்கல்கிடந்தனையவருவிபொதிசிலம்புகளின்பிறக்கங்காணாய்.

கொடியபுரிசூர்முதலைக்கொடியபுரியொடுங்குலைத்தகுழவியீன்றோய்
படியகத்தினறம்வளர்த்தபரிசுணர்ந்துநுந்தைகுலப்பறம்புவானக்
கடியவிழ்கற்பகத்தரசாற்கழிந்தசிறைபெறப்புகன்றுகரமேற்றன்பர்
லொடிவறுநல்வரமிரப்பதொப்பநறைகாந்தண்மலரூழ்ப்பநோக்காய்.

முழங்குமதகளிற்றுருவினொருமகனைமுறையளிக்கமுகிழ்த்தமின்னை
தழங்குபுயலிடிக்குவிடராகத்தொளித்ததடம்பாந்தள்சாலவிந்நாள்
வழங்குவனதமதினத்தைமணியணியாப்பரித்தவர்க்குமனையாநின்னைப்
பழங்கணறத்தரிசனஞ்செய்பாக்குவெளிப்படர்வதனைத்தெரிப்பபாராய்.

கருப்புமதனுருக்கனற்றுங்கண்ணுதற்குவிருப்பளிக்குங்காமர்பொன்னே
பருப்பிளவெம்முலைக்கெதிர்ந்துபகைத்தமதக்களிற்றியானையறிவிற்றேர்ந்தன்
றிருப்பதத்துக்குறவாதல்வேட்டினதுதோட்கெதிருஞ்செயலைநாடிப்
பொருப்பெழுந்துவளாபனையைப்புழைக்கைவளைத்தெரிசிததலைக்கும்பொலிவுபாராய்

அடைந்தவடியாரகத்திலள்ளூறுந்தீஞ்சுவைத்தெள்ளமுதமன்னாய்
வடந்தழுவியிறுமாந்துபணைத்தெழுந்தகொங்கையொடுமானுவாகி
யுடைந்ததுவட்டினநின்னைக்காணுதற்குமிகநாணியுறுதோற்றமற்
படர்ந்தொழுகுபெருவெள்ளப்பரப்பிடைப்புக்கொளிததிருக்கும்பணைபுபாராய்,

போத்தனுக்கவுயிர்கடொறுமிருளிடத்துங்கலந்தருட்டேன்பொழியுநங்காய்
தீத்தகையபுரிந்தொழுகுஞ்சிதடர்களும்பெருங்கருணைதேக்குநின்றன்
மாத்தடங்கணருள்வாய்ப்பினல்லவருணல்லவராய்வயங்குவார்போற்
கூத்தியற்றுமழன்முரம்புங்குளிர்புனன்மிக்கூற்றிருக்குங்கொள்கைபாராய்,

இத்தகையவளம்பலவுமிகுளையர்களெடுத்துரைப்பவெழிற்கண்சாத்தித்
தத்துதிரைப்பணைமருதமுதலியபன்னிலங்கடந்துதரங்கத்தெண்ணீர்
முத்தலைத்துக்கரையொதுக்கிமுருகுயிர்க்குமலர்துறுமிமுடுகியோடிப்
பைத்ததிரைக்கடலகடுகிழித்தொழுகும்பாலிவடகரையைச்சார்ந்தாள்.

திருநகரையெதிர்நோக்கிப்பணிந்தெழுந்துதுதிகள்பலசெப்பிவெள்ளி
யொருநகத்தின்வலம்பிரியாவுத்தமனுறெய்தியவணுள்ளவெல்லா
மருளறநிற்றெரித்துமெனவுரைத்தருளுமொழிநினைந்துமழையைவேட்ட
கருநிறத்தகலவமயிலெனநின்றாளுலகளிக்குங்களைகண்மாது.

அந்நிலையேவழிபார்த்துநின்றார்போலானுடையபெருமானார்தாஞ்
செந்நிலைசேரைப்பசியிற்பூரநாள்சிறந்தோங்குமற்றைஞான்று
மன்னிவளர்தினகரமண்டிலத்தினடுஞ்சார்வதெனவயங்குஞ்செங்கேழ்ப
பொன்னணிதிண்டேருகைத்துப்பூதகணம்புடைசூழப்போந்தாரங்கண்.

செங்கிரணமண்டலமுமழுங்கவருந்தேரையெதிர்கண்டலோடு
மங்கமெலாமயிர்பொடிப்பவகத்துவகைமுகமலரினரும்பித்தேங்கக்
கொங்குமலிமலர்சிலதிமாகொடுப்பவாங்கியெதிர்குவவத்தூவிப்
பொங்குபெருங்காதலினூற்றடியின்விழுந்தெழுந்துபொலங்கொடியினின்றாள்.

மன்றனறுங்கடுக்கைமலர்மிலைத்தசடைப்பிரானுருமகிழ்ந்துமுன்னர்
நின்றமலைக்குலக்கொடியைத்தமதொருபாலாட்சிகொண்டநிலைமையாளைப்
பொன்றயங்குமணித்தேரினுடனேற்றிக்கொண்டுபுரம்வலமாய்ச்செல்வா
ரன்றனையவளநகரின்றற்புதங்களனைத்துமவட்கருளலுற்றார்.

மருவியகற்பங்கடொறுமணிமார்பன்விரிஞ்சன்முதல்வானோரெல்லா
மிருவியெமைப்பூசித்துநனிவரம்பெற்றோங்குமிடம்புவிமேற்காஞ்சி
யொருதலமேயாமிதனுட்பலதளிகளுளவவற்றுட்காரைக்காட்டார்
திருமலியிந்திரர்தொழுஞ்சத்தியுவிரதத்தலமிதுநீங்குதலைச்சொல்லாய்.

வெண்ணிறவின் கரியரியைவழிபட்டமலையஃதவ்விண்டுபோற்றும்
புண்ணியகோடீசமிதுவதுசேடன்மணிகளினாற்பூசையாற்றி
மணணிலந்தாங்கெறும்படைததாகுமதேவல்வழிமாயோன்சீறி
நண்ணியசீர்வேகவதிதடுத்ததிதுநறுங்களபக்கொங்கைநல்லாய்.

இலகுமணிப்பாப்பரசுநமைப்போற்றியிருநான்குபணிக்கும்வேந்தாய்க்
குலவுதலமிதுகாயாரோகணமற்றதுபருத்திக்குன்றீதாகும்
வலிகெழுபோர்க்கயமுகனைச்செகுத்தவன்றன்மத்தகத்துமணியாநம்மை
யுலைவையொருபாற்படைத்தநின்புதல்வன்பூசித்ததுவாங்கண்டாய்.

கச்சபாலயமிதுகேத்திரபாலன்புழைக்கரத்துக்கடவுள்கன்னி
செச்சைநிறககதிர்யாமென்றைநதிறத்தேயகளுஞ்சிவனுஞ்சேக்கையீது
நச்சியிடுமோணகாந்தன்றளியீதெனமுழுதுநவின்றாங்குள்ள
வெச்சிறப்புமெடுத்தியம்பியேகம்பத்தளிக்கோயிலெய்திச்சொல்வார்.

இடைதெரியாதெத்தினததுமெப்பொழுதும்யாங்குடிகொண்டிருக்குமேன்மை
யுடையதுதண்கடலாடைநிலவரைப்பிற்றேரிலிதுவொன்றேயான
வடைவதனாற்கணங்குழையேகாமபரமென்றொருபெயர்கொண்டதிலெல்லா
நெடுமொழிசென்றுறநினறதிதன்சீர்மறறெவராலுநிகழ்த்தொணாதால்.

கருணையொருகோழரையாய்த்தவங்கவராய்ச்சந்தைகளுல்சாகையாகிப்
பரவுமறமுள்ளீடாய்ச்சிவமுயிராய்நாற்பயனும்பழமாஞ்சூத
மரமிதன்கீழெமைப்பூசைபுரிநமக்குககூட்டமிவண்மருவுகென்னுக்
கரையிறந்தகாதலொடும்பஞ்சதீர்த்தககரையிற்கொண்டுபுக்கார்.

திருவளர்காமக்கோட்டமணிப்பீடத்துயர்ச்சியெலாந்தெரித்துப்பின்னர்
மருவியிவணருந்தவஞ்செய்தறங்களெலாமாருதுவளர்த்துக்காவென்
றருளிமறைந்தருளுதலுமம்பிகையங்கிடமுலையுங்கணனுமாடப்
பெருவிருப்பினணித்தாகக்கூட்டுறவுணவிடனப்பிறங்குமகிழ்ச்சிபூத்தாள்.

அலையெறியுமணித்திருத்தமைந்தினுநீர்தோய்ந்துகரையண்மிவேறு
கலைகொடுநீர்புலர்த்தியுடையுடுத்திமுறையுளிநீறுகமழச்சாத்திக்
குலவுமணியக்கவடமணிந்துபுரிதக்கவெலாங்குறையாதாற்றி
யுலகுபுகழஞ்செழுத்தும்விதிப்படியுச்சரித்துமை யாரடிகள்பேணி.

ஆயிடைநின்றானந்தப்பரவெளியாம்பிலச்சூழலணையச்செல்வாள்
பாயமணிப்பெருவாய்தலேழனையுந்தான்றுறந்துபையவுள்புக்
கேயுமருள்பீடத்தினியனேகவிம்மிதமிகவெய்தியந்த
மாயிரும்பீடத்தலையின்முக்கோணவடிவினெலாமகிழ்வைகி.

நின்மலமாய்ப்பேரொளியாய்நிறைவாகியானந்தநிலையாயோங்குஞ்
சின்மயத்தினிரண்டன்றியொன்றன்றிககலந்துசெயலற்றுத்தன்றன்
றன்மையெலாமொழிந்துளம்போற்றமனியப்பொற்றிருவுருவஞ்சலியாவண்ண
நன்மையதாஞ்சிவயோகத்தினிதிருந்தாளுலகமெலாங்டலைமாய.

பெருகுசிவபோகத்தினிடைதிளைத்தபின்பறங்கள்பிழையாதோம்பக்
கருதியறச்சாலைபலநிருமிதஞ்செய்தமைத்துமணிக்கனகவெற்பி
னொருதலைவரளித்தருளுமுலவாதபாசனமொண்சராவந்தம்மாற்
பொருவரியவண்டமெலாங்களிதூங்கவறம்பலவும்போற்றுகின்றாள்.

கலிவிருத்தம்.

தூங்கியதசைகழுத்துடையதூயவான்
வீங்குகண்டேதியைவிளித்துரிஞ்சுற
வோங்கியசிலையினுணெருங்கச்செய்தறி
பாங்குறவிடங்தொறும்பயிலநாட்டினாள். உ௩அ

வளர்ந்துநீண்டருங்குயத்தரிந்துவந்திடு
மிளம்பசும்புல்லிணர்த்தருவின்மூலத்திற்
றளர்ந்தஞர்பசியெலாந்தளரவானின்
முளர்ந்தழைத்துண்டுடல்வீக்கவுய்த்தனள். உ௩௯

இருவகைப்பற்றினையிகந்துவீடெனு
மொருபெரும்பற்றையேயுளத்திற்பற்றிமெய்த்
திருமலிபிச்சையிற்றிரிகின்றார்க்குமுன்
னருமைசெய்தட்டவூணுற்றநல்கினாள். உ௪0

தந்தைதாய்முதலியகடும்புதாமின்றி
வெந்துயரிடைப்படுமகவைமேதகு
புந்தியிற்களிவரப்புகன்றுதாயென
வெந்தநல்வரிசையுமியற்றியோம்பினாள். உ௪க

மயரறும்பழமறைவகுப்புமாமலச்
செயிரறுமாகமத்திரளுமேவரு
மியலிசைநாடகத்தமிழும்யாவையு
மயர்வறப்பயிற்றினளனைத்துமீந்தரோ. உ௪உ

ஈன்றவளிராதுயிரிறத்தலாலிருந்
தான்றபான்முலைசுரவாமையாற்பசி
சான்றழுகுழவிக்குத்தண்ணம்பானனி
கான்றெழுமுலையராற்களிக்கவூட்டினாள். உ௪௩

அறுவகைச்சமயத்திலமைந்தவர்க்கெலாம்
பெறலருந்தன்னுயர்பெருமைதேற்றுறீஇச்
செறிவுகொள்கருணையாற்றெய்வத்தீஞ்சுவைக்
கறிமுதலுணவெலாங்கமழவீசினாள். உ௪௪

வருந்தியபீளுடைமாதர்தங்களை
யிருந்துயருழவன்மினிக்கணத்தொளி
திருந்துமாண்மகன்வருமென்றுதேற்றிநன்
கருந்தலையளிபுரிந்தருளிக்காத்தனள். ௪௫

பண்ணியவேழமும்பரியுந்தேர்களுந்
திண்ணியமாடியந்தானைச்செல்வரு
மண்ணினர்சூழ்தரவண்மும்வேந்தருக்
குண்ணுவமுதலியவூழினல்கினாள். உ௪௬

சூலைநோயாதியதொடக்கப்பட்டுளோர்க்
கேலுறுமருந்துகளியற்றியன்பினாற்
காலையுமாலையுங்கைத்துருவகை
சாலுமின்மொழிகளாற்சாற்றியூட்டினாள். உ௪எ

கறுஞ்சினைபொதுளியகாகுசோலைகள்
செறிந்திடவிடந்தொறுஞ்செழிப்பவைத்தவற்
றுறுஞ்சிறைமயில்கிளியாதியுண்ணிய
பெறுஞ்சுவையுணுத்திரள்பெரிதுமோக்கினுள். ௨௪௮

தேத்துளிபிலிற்றிதழ்த்தெய்வத்தாமரை
பூத்துறுபொய்கையும்பொங்குவாவியுந்
தூத்தடமாதியுந்தொட்டுநல்லுண
வீத்தனள்கயன்முதலினங்களுண்ணவே. ௨௪௯

வானரக்குலங்களுமானினீட்டமுங்
கானிவர்மதக்கவுட்களிற்றினீட்டமு
மேனையமான்கணமெவையுமின்புறத்
தேனுமிழ்கவளங்கடிரட்டிவீசினுள். ௨௫0

உள்ளகவிருள்கெடவொருவன்கூறிய
தெள்ளியதேமொழிப்புராணஞ்செஞ்செவி
யள்ளியுண்டனைவருமன்புமீகவொளப்
பள்ளிகளெங்கணும்படிப்பித்தாளரோ. ௨௫௧

ஞானமேமுதலியநான்கும்வேட்டவர்க்
கூனமில்குரவராலுயர்நதீக்கைசெய்
தீனவன்மலமறவஞ்செழுத்தையுந்
தேனெனவமிழ்தெனச்செவியிலேற்றினுள். ௨௫௨

பனிமதிமிலைச்சியபகவன்றாட்டுணை
கனிவுறுபத்தியிற்கலந்தநேயரு
முனிவரும்வைகியமுறையினெங்கணுந்
தனியுயர்மடம்பலசமைத்துப்பேணினுள். ௨௫௩

ஆனநெய்வாக்கியட்டெடுத்தவுண்டியுந்
தேனினிலடுஞ்சுவைக்கறியுந்தேனுவின்
பானனிபெய்தமெபாளிதங்களு
மீனவர்க்குய்த்திடுஞ்சாலையீட்டினுள். ௨௫௪

வேண்டியபொருள்வியப்பெய்தவீன்றவர்க்
கீண்டுறவளித்தெழிற்கன்னிமார்களைக்
காண்டகுகலன்பலவணிந்துகாழிலா
மாண்டமைந்தருக்குநீர்வாக்கிநல்கினுள். ௨௫௫

தாயினைக்கண்டெனச்சார்ந்துவாங்கிப்பின்
பேயினைக்கண்டெனவொளித்துப்பேதுறீஇ
யீயவொன்றில்லவர்கடன்களேற்றவர்
மாயிருங்களிகொளவழங்கிப்போக்கினுள். ௨௫௬

சந்தனக்களபமுந்தயங்குபூண்களுங்
கந்தமென்றுகிலைகளுங்கலையுமற்றவு
மிந்திரன்றிருவெனவியற்றிவேசையர்த்
தந்தனள்காமுகர்தளர்வுதீரவே. ௨௫௭

ஐந்தணையமளியுமம்பொன்மாளிகைச்
சுந்தரவிடங்களுஞ்சுடர்ந்ததீபமுங்
கொந்தொளிமணிக்கடங்குலவுநீரொடு
மெந்திடத்தினுந்துயிற்கியற்றினளரோ. ௨௫௮

புதுககலத்தொளிகடம்பூக்குமுன்னெடுத்
ததற்படுவாசங்களட்டுநீர்களு
மதுப்பழத்தேறலும்வயங்கும்பல்விரை
விதத்தவுமேவுநீர்ப்பந்தரீட்டினள். ௨௫௯

பிணங்கியவுயிர்களைப்பிடித்திழுத்துத்த
னிணங்கருள்கொளுத்துவதேய்ப்பவின்சுவை
மணங்கமழுணவினைமறுத்திடுந்தொறுங்
கணங்கெழுசிறுர்க்கிதங்கூறியூட்டினள். ௨௬0

கலிநிலைத்துறை.

கரக்குமாந்தர்முனுளமெலாங்கலங்கியுமருளிப்
புரக்குமாந்தர்முன்முகமெலாம்பூவெனமலர்ந்தும்
பரக்கும்வெள்ளொளிபடச்செழுமபற்களைத்திறந்துற்
றிரக்குமாந்தருக்கெடுத்தனள்சாலைகளனந்தம். ௨௬௧

திருத்தயாத்திரைசெல்வர்தெய்வயாத்திரையி
னருத்தியோடுசெல்பவர்மற்றையேதுவானடைவார்
கருத்துக்கேற்புறக்கமழ்சுவையுணவுகளூட்டும்
விருத்துமாமணிச்சாலைகளிடந்தொறுமவிளைத்தாள். ௨௬௨

பொரியுநோலையும்பிண்டியும்புழுக்கலும்வாசம்
விரியும்பண்ணியவகைகளுமேமபடுபிறவு
முரியதாயினுங்கருணைவைத்துறுகிறுர்மகளிர்
பெரியமாந்தருநுகர்வுறப்பெட்டுமிககளித்தாள். ௨௬௩

பூவர்சோலையும்பொய்கையுமெழுதியதுகிலும்
பாவுநுண்ணிழைப்பட்டுடைவிதங்களும்பலவாங்
கோவைவாய்மணிமேகலையாதியுங்குவவி
மேவினார்க்கெலாமேவியாங்குதவினண்மிகவே. ௨௬௪

சிறக்கவீட்டினர்கெடுதலாற்செழும்பொருள்கெடலாற்
பிறக்கும்வேறிடர்பகையினுற்பிறங்குதலின்றி
யிறக்குமாலையபிறரறமெண்ணிலர்தனவும்
துறக்கம்வாழ்நரும்வியப்புறத்தொடங்கினள்வளர்த்தாள். ௨௬௫

கடும்பிலாப்பிணம்பொருளறும்பிணங்கடும்பங்க
ணுடங்குருப்பிணமின்னவைதம்மையொள்ளெரிவா
யிடங்கொளீமத்தினிட்டியற்றருங்கடன்யாவு
மடங்கவாற்றுமாறருளினளலகிலாதவரை. ௨௬௬

அழுங்கலாக்குவான்பற்றியபறவையாதிகளை
யொழுங்குநான்முறைதெரித்துமின்மொழிபலவுரைத்தும்
வழங்குமாழையானிரப்பியுந்தன்னுழைவாங்கிப்
பழங்கணீத்துயிர்காத்தனள்பயந்தமைந்தர்கள்போல். ௨௬௭

நவைகொடுசினைக்காண்டலுநயந்தனரண்மி
யிவைகொடுக்கியரொலித்துவந்திதுமென்றேலா
வுவருமாப்பியுமுறுத்தெரியேற்றிநன்கொலிக்குந்
தவறிலாதவேகாலியரிடம்பலசமைத்தாள். ௨௬௮

நீளுகின்றமென்மயிரினைக்காண்டலுநெடிது
மூளுமன்பினன்முன்னுறைப்போந்தின்னதிதியு
நாளுநல்லனவெனவழைத்துவப்பநல்வினைசெய்
கோளிலாப்பெருஞ்சிகர்குலம்பலதுறுத்தாள். ௨௬௯

இனையமுப்பதிற்றிரண்டறமோங்கலும்விசும்பி
னனைவருங்களிதூங்கினரலைகடல்வரைப்பிற்
றனையயாவருமுய்ந்தனர்சூழறக்கடைகள்
புனையுநாமமுமிறந்தனபுகழ்பெறூர்பெயர்போல். ௨௭௦

பூதலத்துளமாந்தரேயலர்பொழிற்கற்ப
மாதலத்துளவமரருமணிகிடந்திமைக்கும்
பாதலத்துளவுரகருங்காஞ்சியிற்படர்ந்து
காதலித்துமையருளுணவுண்டுகொழுறுப்பார். ௨௭௧

இரவலாளரையறிவிலார்தமையிடும்பையரை
விரவுதீவினைபுரிநரைச்செய்வமேவலரைக
கரவையாதியவுடையரையிழந்தனகாஞ்சிப்
புரியொன்றேயலவுலகங்கண்முழுதுவதும்போலும். ௨௭௨

விண்ணுளார்களும்பாதலத்துரகரும்விரிநீர்
மண்ணுளார்களுமேயலர்மலைமகளறத்தாற்
றிண்ணெனன்வலவினைமுழுவதுஞ்சிதர்படவுதறி
யண்ணல்வீட்டினையடைந்தனமிருகமாதிகளும். ௨௭௩

புறங்கொள்வேலையும்பொங்குமேழ்வேலையுமீற்றிற்
கறங்குமேகமுங்கலந்தெனக்கவுரிநாயகித
னறங்கொள்சாலையினடைபவரோதையும்வெளிக்கொள்
பிறங்குழோதையுங்களிப்புறுமோதையும்பிணங்கும். ௨௭௪

எண்ணிலாதவான்மகளிரின்னடிசில்களபகரும்
வண்ணமுன்கைவால்வளைகளும்வயங்குமேகலையும்
தண்ணந்தாமரைச்சிலம்புமுண்ணியரனச்சாற்றும்
பண்ணமைந்தவின்கிளவியும்பன்முறைதழங்கும். ௨௭௫

சுவையெலாநிருமித்தவளமைத்ததூவடிசிற்
சுவையையிற்றெனத்துய்த்தவர்தாங்களுமறியார்
சுவையவான்சுதைசுரர்களுமவெறுத்தனரெனிலச்
சுவையின்மேன்மைமற்றெம்மனோர்சொல்லுதற்கெளிதோ.

பூமென்கோதையரெழுப்பியபுரிநரப்பிசையுஞ்
சோமவாண்முகநகையொடுதுளும்புபாட்டிசையுந்
தாமநூபுரமாதியதழக்கமுமல்லாற்
காமசாலைகளிளைஞரைப்புறத்தினிற்காலா. ௨௭௭

திருவனீண்மறுகிடந்தொறுந்தெரிவைமார்தம்மை
மருவுதானமாவழங்கியமன்றலின்மகிழ்வா
ளொருவர்தோளிணையொருவர்கடழுவலுமுயர்வான்
பெரிதுமுத்தரியத்திணையெறிதலும்பிறங்கும். உஎஅ

அற்றைநாணகர்வளங்கெழுசிறப்புமங்கெவரும்
பெற்றவோகையும்பேசுவதரிதரிதம்மா
வெற்றைநாளுமவ்வறமெலாம்வழங்குமாறியற்று
முற்றிலாவிளமுகிழ்முலைமற்றிதுமுயலும். உஎகூ

கொச்சகக்கலிப்பா.

துப்புறிகர்செங்கனிவாய்த்தூமுறுவற்பசும்பணைத்தோள்
வைப்பெருவேலிகந்தவிழிமங்கலைக்குமணிசடைந்த
செப்புமுலைச்சண்டிகைக்குஞ்செய்தவறந்திறம்பாமே
யெப்பொழுதுங்காமினெனவியம்பியருள்பணித்தருளி. உஅ0

உடங்கணைந்தமலர்த்தவிசினெள்ளிழையாரிருவரையு
மடங்கவற்றும்பசுவில்வமலர்ப்பலாசிடத்தெய்திப்
பட்டங்கிளர்பாப்பணியாரைப்படர்ந்துதவஞ்செய்மினெனத்
தடங்கணருள்கொழித்தொழுகச்சாற்றிவிடுத்தருளியபின். உஅக

கலிவிருத்தம்.

விற்கான்மதிபோனுதன்மெல்லியலாள்
சொற்காமுறுமத்தகுசூழல்டை
நற்காமர்நறுங்கொடிமாலதியைப்
பொற்காஞ்சியெனப்பொலியக்கருத. உஅஉ

வண்டார்தருமாலதிமென்கொடியும்
விண்டாழ்கயிலைக்கிரிவிட்டெவருங்
கொண்டாடுபிலத்தயலிற்குறுகி
யுண்டாயதொளிர்ந்தெழுகாஞ்சியென. உஅங

களிபட்டகருங்கடனுறிவருந்
தெளிபட்டசெழுஞ்சுடருஞ்சிதையத்
தளிர்பட்டொளிர்சாகைதொறுங்கவினி
யொளிபட்டெழுதண்கதிரூழ்த்தத்வே. உஅச

சேண்டாழ்பிலம்வைகியதேத்துமணித்
தூண்டாதசுடர்க்கதிரைந்தலையி
னேண்டாங்கரவின்மணியின்கதிரோ
டாண்டார்ந்துநிரம்பியதக்கதிரே. உஅரு

அரவின்மணிதூண்டலடாதசுடர்
குரவங்கமழ்காஞ்சிகொழிக்குமொளி
விரவுற்றிடுமத்தலைவில்லொளிமூன்
றுரவுற்றபிரான்முகமொத்ததுவே. உஅசு

மாணுற்றுவயங்கியகாஞ்சியிழு
தூணுற்றிடலின்றியொளிர்ந்தசுடர்
காணுற்றிடவந்துகதிர்ப்பரிதி
பூணுற்றவணின்றதுபோன்றதரோ. உஅஎ

பொன்னின்மயமாய்ப்புரைதீர்ந்தகவ
மின்னும்மணிமென்றளிர்பாசடைபூ
துன்னுங்கனிகாய்துறுதொத்தினமா
மன்னிக்கவின்மல்கியதம்மரமே. ௨அஅ

மணிபொன்னலர்கற்பமரத்தொகையாற்
றணிவின்றுயர்பொன்னகர்தன்னிறுமாப்
பணிமல்கியகாஞ்சியினுனுமருட்
டிணிமல்கியகாஞ்சிசிதைத்ததுவே. ௨அகூ

சினைதோறவிர்செம்மணியம்மரமங்
கினிதுற்றுறைபாம்பொடிருப்பகினைங்
தினவொண்மணியாயிரமெய்துபணைத்
தனிவாளரவெய்தியதன்மைபொரும். ௨கூ0

மலருற்றிழிதாரைமதுப்புனலா
லலரிற்பொலிகாஞ்சியளித்துவளர்
தலைமைக்கொடிநீங்கியதன்றுயர்முன்
னிலவித்தெரிவிப்பதுநேர்ந்ததுவே. ௨கூக

நற்பாலனநல்லவர்பாலனுகிற்
பொற்பூமணமும்பெறலபோலுமெனு
சொற்பாரினிறீஇயதுதூயவிதன்
விற்பாய்மணமேதகுபொன்மலரே. ௨கூ௨

முன்னர்க்கருமெய்யுருமுற்றொழியு
மன்னைக்குநிகர்த்ததடுககலின்முன்
மன்னிப்பொலிபாசுருவங்கழுவிப்
பொன்னிற்பொலிபூவுடைநன்மரமே. ௨கூ௩

கயிலைக்கிரியேகருமப்புவியா
வியனற்பதமுத்தியி ங்கலைகள்
பயில்பொற்பமர்காஞ்சிநெடுமபதியா
வுயர்முத்தரையொத்ததுபூமரமே. ௨கூ௪

உலகேதுறினுங்கலையோவியரு
ணிலையேநிலையாகநிலைததவர்க
ளலையாரதுபோலொளியாங்குறினுஞ்
சலியாதடிநிறைருளிர்தண்ணிழலே. ௨கூ௫

சீரார்தவமாற்றுறுசெவ்வியினில்
வாரார்முலைவலலிதன்மீதுவெயி
லாராதுறுபொற்குடையானதரோ
போராதுபிறங்கியவங்கிழலே. ௨கூ௬

கிளிபூவைகள்கேழ்கிளர்மஞ்ஞைகுயி
லளிதேனினமாதிஞெமிர்ந்துலவக்
களிமாசனநோக்கியகண்களுட
னுளமோடிநெருங்கியுலாவியவே. ௨கூ௭

அருளேயிஃதென்மருமாரணநூற்
பொருளேயிஃதென்மருமாய்ப்புகழா
வருவானவர்யாரும்வலங்கொடுமுன்
பெருகோகையின்வீழ்ந்தொளிபெற்றனரே. ௨௯௯

இவ்வாறெழுகாஞ்சியிருங்கவினைச்
செவ்வாயுமைமாதிருசேல்விழியாற்
றவ்வாமகிழ்கூர்ந்துதொழூந்தகைமை
யவ்வாள்விடுதாருவடித்தலையின். ௨௯௯

முக்கோணமமைந்தமுழுத்தவிசின்
மிக்கோர்சடைவற்கலைமெய்யொளிர
வெக்காழுமிகந்துலகின்பமுற
வக்காலையமர்ந்துதவம்புரிவாள். ௩00

காக்குந்தனிநாயகனைக்கருதி
நோக்கங்குமிழ்மூக்கினுனிக்கணுறத்
தேக்கும்பரவின்புதிளைப்பவறம்
பூக்குங்கொடிபோல்பவணேற்றனளே. ௩0௧

ஈகைத்தழைகாஞ்சிதனக்கிசையத்
தோகைக்களிமாமயிலுஞ்சுடர்பொன்
ஞகித்தவிரற்புதமொத்ததுதீம்
பாகைத்தவிர்சொல்லிபதிந்ததுவே. ௩0௨

கொச்சககலிப்பா.

முப்பொழுதுமைந்தீர்த்தமுறையுளிதோய்ந்தலர்காஞ்சி
வைப்பினருந்தவமாற்றிவள்ளலாரருள்கிடைத்துப்
பொற்புமலியேகம்பந்தொழுதேத்தப்புறம்போந்து
செப்பரியவளநகரத்திருவீதிசென்றணைந்தாள் ௩0௩

தோரணங்களிடங்கடொறும்புதிதாகத்தொடுத்தணிவார்
காரணவவோங்குநடைக்காவணமெங்கணுங்கவிரி
நாரணவுமலர்மாலைநகைமணிமாலைகள்செறிப்பார்
தாரணிபொற்கொடிநிறுப்பார்தமனியவாடைகள்விரிப்பார். ௩0௪

தெருவீதிதிருவலகுப்பணிபுரிவார்தெண்பனிநீர்
மருவாரத்தெளித்தொழுக்கிமான்மதங்குங்குமந்தொகுப்பார்
முருகாலுமலர்மாரிமுகிலுணவெதிர்சொரிவா
ருருகார்வமுடனேடியொண்மணிமாரிகபேர்ப்பார். ௩0௫

முன்பணிவார்பின்பணிவார்முன்னேடியெதிர்பணிவா
ரென்பணிவார்திருமனைவியென்பணியேற்றருளென்பார்
மின்பணிலமுதலியங்கள்விரியோதையெண்டிசையின்
மன்பணிகண்முடிதுளக்கமங்கையர்கணடம்புரிவார். ௩0௬

மணிவிளக்குநிறைகுடமுமங்கலமுமெதிர்கொணர்வா
ரணிவிளக்கியிடங்கடொறுமமர்ந்தருளியெழுகென்பார்
பிணிவிளிக்குமலர்ப்பாதம்பெயராதுதொழுதணைவார்
தணிவளிக்கினுயர்வளிக்குந்தையலருளென்னென்பார், ௩0௭

எத்தவமுன்னியற்றினமிங்கிவட்காண்டற்கெனவியப்பா
ரத்தகையதவமிலதேலரியயனுந்தெரியாத
வுத்தமிநற்றிருக்காட்சியுதவுமோவெனநயப்பார்
மைத்தபொழிற்காஞ்சிநகர்வாழ்ந்தபயனிதுவென்பார். ௧0௮

கொம்மைமுலையிவள்வளர்கருங்கோதிலறப்பெரும்பேற்று
லிம்மையொடுமறுமைநலமெவையுநுகர்ந்தனமென்பார்
செம்மையெனத்துறக்கவளஞ்சேர்ந்துநுகர்பண்ணவரு
மம்மவிதற்கிவர்வரெனிலஃதனலமென்னேயென்பார். ௧0௯

மரகதமென்றளிரென்னவயங்குமுருவிவட்கென்பார்
பரவுபொளிக்கவுரநிறம்படைத்திருந்ததென்னென்பா
ரரவணிவார்திருவருளாற்றணந்திடுமவ்வுருக்கண்டு
ரொருபுடையில்வருநீலவுருக்கன்னியெனமொழிவார். ௧௧0

ஓருருவிலங்கணனுருடன்பயிலுமுத்தமிதா
னீருருவாத்தணந்துதவமியற்றுதிறமென்னென்பார்
பாருலகிற்றூனடந்தபடிநடந்துநாமெல்லாஞ்
சீருருவக்கதியடையுந்திருக்கருணைத்திறமென்பார். ௧௧௧

இருள்பரவியெவ்வுலகுமிடருழப்பத்தனிக்கணவர்
மருமலர்க்கண்புதைத்தருளுமணிக்கரமீதோவென்பார்
தெருமருமவ்வுலகமெலாமகிழ்விக்குந்திறம்போலும்
பெருகுபரமானந்தப்பேரறமாற்றுவதென்பார். ௧௧௨

சுந்தரவெங்கதிரவனுஞ்சோமனுமற்றேனையவுந்
தந்தமியல்பினினிருப்பச்சார்ந்தவெவனிருளென்பா
ரெந்தவொளிதனக்குமுயிரெனப்படுவதிவள்புதைத்த
வந்தணனார்முகத்தொளிருமலர்விழியினொளியென்பார். ௧௧௩

இவள்புதைப்பவேதுவாயிருந்தவெனமாலதியைக்
கவிழ்சினையதளிர்மாவைக்கைதொழுவார்கண்புதைத்த
பவளமலர்க்கரங்களையும்பணிகிற்பார்பதகனெனத்
தவறுபுரிமகதனையுஞ்சரண்பணிவார்பயன்பெறுவார். ௧௧௪

அறம்வளர்க்குமணிச்சாலையகப்படுத்திக்கொளநினைந்த
மறமுயிர்வேன்மகதனுக்கும்வரம்வழங்கினளென்பார்
நிறையருளினுலகனைத்துநெடிதோம்பியினிதளிக்கு
மிறைவிபொருளாயிடின்மற்றெவர்பொறுப்பார்பிழையென்பார். ௧௧௫

அலகிறந்தவிம்பிதத்தோடொன்றுகவம்பிகையா
னிலகுமணிக்காஞ்சியுமற்புதமாயிற்றிவணென்பார்
பலபலவற்புதமுமுனம்படைத்தவளேயிவளின்னு
நிலவுமதிசயமென்னநிகழ்த்துமோவெனவியப்பார். ௧௧௬

சடைமுடியும்வெண்ணீறுந்தாழ்வடமுமரவுரியு
முடையவளாய்த்தவம்புரிந்துமுருநிழற்றவிலையென்பார்
கடையயின்றமடமுடையீர்கரிசுபடுமாயையினும்
வடிவதுவோவானந்தவடிவன்றோவிதுவென்பார். ௧௧௭

இவ்வாறுபலர்போற்றவெழுந்தருளிவருநெறிக்கட்
செவ்வாய்மைப்பாங்குபுரிதிறத்தொழுகுமங்கலையா
மைவார்மென்குழன்மடந்தைமனமகிழ்விற்றாழ்ந்தெழுந்து
துவ்வாதவமிழ்தனையாட்கெதிர்காட்டிச்சொல்லுவாள். ௩௧௮

அடியனேன்குளிர்தடமொன்றகழ்ந்தொருமண்டபமெடுத்தே
னிடுகிடைமெய்த்தவக்கொழுந்தேயிவையவையாமித்தகைய
தடவரைப்புரிவதியத்தக்கதெனச்சாற்றுதலு
மடவடையாட்கவ்வாறுவரமருளியவணெய்தி. ௩௧௯

மலர்கொழிக்கும்புனற்றடமுமணிகொழிக்குமண்டபமு
மலர்கருணைவிழிசாத்தியாங்கொழிந்துமென்மெலப்போய்ச்
சுலவுதிரைக்கம்பைநதித்துறைமருங்குசென்றெய்திப்
பலர்புகழுமங்கலைக்குஞ்சண்டிகைக்கும்பணித்தருள்வாள். ௩௨௦

கலிவிருத்தம்.

பிறைநிகர்வாணுதற்பேதைமீரிவண்
மறைதிரண்டுருக்கொளுமாவிதாகுமா
லிறையவனென்றுமிங்கினிதுவைகலா
னிறைவுடையிதன்றிறநிகழ்த்தொணாதரோ. ௩௨௧

மாவடிவாகியபொழுதுமாமறை
மூவர்கண்முதல்வனைப்பழிச்சமூண்டெனப்
பூவலர்சினைதொறும்புக்கவண்டினம்
பாவலரிசைக்குரல்பயிற்றல்கேண்மினோ. ௩௨௨

யான்றழுவியபொருண்மெய்யினீர்க்குழன்
மான்றழுவியபரனென்றுமாந்தரைத்
தான்றெளிவுறுப்பதுதகையவவ்விறை
போன்றுபாசடைதளிர்பொதுளல்காண்மினோ. ௩௨௩

என்னையாளுடையவனெனதுமாணிழன்
மன்னியவைமுகவள்ளலகாணெனுப்
பொன்னவிருலகினைப்புகலப்போதல்போற்
பன்னெடுங்கிளைநிமிர்பரிசுகாண்மினோ. ௩௨௪

பிரிந்தமைக்கிரங்கியென்பெரியபூண்முலை
விரைந்தரன்புணரவோர்முயற்சிவேட்டென
வரந்தைதீர்த்தருளுமவ்வண்ணலான்மெய்யெலாம்
புரிந்துமென்மலர்க்கணைபொழிதல்காண்மினோ. ௩௨௫

இனியனவிவைநுகர்கென்றுதன்முதற்
புனிதனுக்களித்திடத்தாழ்ந்தபொற்பெனக்
கனிநறுங்காய்ஞெமிர்கனத்தினாற்கொழுஞ்
சினைநனிகுரங்கியசெய்கைகாண்மினோ. ௩௨௬

கொச்சகக்கலிப்பா.

இன்னவகைமறைமாவின்வளம்பலவுமெடுத்தியம்பிக்
கன்னிமாவடிமூலைத்தகண்ணுதலார்பெருமையுமற்
றன்னவர்கட்கறிவுறுத்தியண்ணலார்சிவபூசை
பின்னிலையில்யான்புரியவெப்பொருளுங்கொணர்கென்றாள். ௩௨௭

உய்ந்தனமுய்ந்தனம்யாமென்றொளிர்கமலப்பதம்வணங்கிச்
சந்தநறுங்களபமுலைத்தையலாரிருவர்களுங்
கந்தமலிகற்பகமுங்கதிர்மணியுமிருநிதியும்
வந்துவளமுழுதளிப்பவகுத்துவினைத்தலைநின்றார். ௩௨௮

பீடுமலிசிவபூசைபேரன்பிற்செயத்தொடங்கி
யாடுதற்குஞ்சிவன்முடியினாட்டுதற்குமிருதீர்த்தந்
தேடருஞ்சீர்க்கம்பத்தின்றென்பாலும்வடபாலுங்
கோடுயர்வெற்புயிர்த்தெடுத்தகொம்பனையாணிருமித்தாள். ௩௨௯

கீர்த்திமிகுமவ்விரண்டுங்கிளக்குமுமாபத்திரநற்
கீர்த்திமதியெனநாமங்கிளர்தரச்செய்துலகத்துக்
கீர்த்திபெறுதீர்த்தமெலாங்கெழுவித்தாள்காப்பதற்குக்
கீர்த்திமதியெனுமணங்கைநிறீஇனாள்கேடில்லாள். ௩௩௦

தென்பாலிற்கூவனறுந்தீர்த்தவுமாபத்திரத்தின்
மின்பாய்ந்துதுளைவதெனவிதிப்படிநீர்தோய்ந்தருளிப்
பொன்பாவுதிருமேனிபொலிதகவெள்ளணியணிந்து
கொன்பாவுவெண்ணீற்றுக்குருக்கவயத்திடைப்புக்காள். ௩௩௧

வெள்ளனத்துமிசைக்கிடந்தவெளவரிகளெனமெய்யி
னொள்ளொளியவுத்தூளத்தொழுங்குறுபுண்டரந்தீட்டிக்
கள்ளவினைக்கட்டறுக்குங்கடவுண்மணித்தொடைபூண்டு
தெள்ளுமுறையாலங்கட்செய்வனவெல்லாஞ்செய்தாள். ௩௩௨

கலவமயினடந்ததெனக்கமழ்புனலினகரைநின்றுங்
குலவியுயர்தனிமாவைக்குறுகுவாள்சென்றெய்தி
யலகில்புகழரசன்னமைங்கரனைததென்மேல்பாற்
பலவிடர்க்கும்பலவிடரைப்பண்ணுகவென்றிருவினாள். ௩௩௩

ஆனாதபேரறிவாயகம்புறமுநிறைந்தெல்லாந்
தானாகிநின்றருளுந்தனிமுதலையேகம்பத்
தீனோரும்வழிபடுமாறெளிவந்ததெள்ளமிழ்தை
பூனாதிகசிந்துருகவுயர்பூசைபுரிகுவாள். ௩௩௪

சுருக்கமிலாகமவிதியாலைவகைசுத்தியுமமைத்து
மருக்கிளர்பூங்குழன்மடவார்மாருதபணிகேட்ப
வொருக்குமனத்தினளாகியுயர்கீர்த்திமதித்தீர்த்தந்
திருக்கிளர்பாறயிரனைத்துஞ்சிவமனுவாலாட்டினாள். ௩௩௫

நுழையிழைநூற்கலிங்கத்தாற்றிருமேனிநொய்தொற்றி
விழைதருகோவணமரைநாண்மேதகுபட்டுடையணிந்து
குழைவிரைச்சந்தனச்சேறுகொட்டிமணத்துகளட்டி
யிழைவருக்கந்திருமேனியெங்குமெடுத்தலங்கரித்தாள். ௩௩௬

சுவையாறும்பழுத்தொழுகுந்தூயநால்வகையுண்டி
நவைதீர்ந்தபொற்கலத்தினயந்தமுதுசெய்வித்தாங்
கவிர்தூபதீபமுதற்பணிமாறியன்பாற்றி
யவர்தருசைவாகமநூல்விதியெலாமியற்றினாள். ௩௩௭

இவ்வாறுநாடோறுமேன்மேல்வந்தெழுமன்பிற்
செவ்வாய்மைத்திருவுள்ளங்களிசிறப்பத்தேம்புமிடை
மைவாருங்குழற்கவுரிமதின்மூன்றுமொருகணையா
லெய்வாரைப்பூசனைசெய்தினிதிருந்தாளக்காலை ௩௩அ

கலிவிருத்தம்.

உலையுங்குளிர்கூதிரொழிந்ததுவின்
மலையங்கையினுரைவழுத்தியருள்
குலவம்பிகைபாலுறுதன்குளிர்போய்ச்
சுலவுந்திறமஞ்சியசூழ்ச்சியென. ௩௩௯

தானுடியதண்மலையீன்றவிள
மானுடியவண்டவநோக்கியமண்
மேனுடியெழுந்ததுவீழுநறும்
பானுடியமுன்பனிபாய்ந்ததுவே. ௩௪0

வேறு.

கூதிராலுமுன்குழைந்தமாந்தர்க
ளேதுசெய்துமற்றிதனுக்கென்றுளம்
போதநோதகப்பொங்குதண்பனிச்
சீதவெண்முகில்செறிவுகொண்டதே. ௩௪௧

பிரிந்துளாருளம்பீழைமல்கலாற்
பொருந்தினுருளம்பொலிவுமல்கலாற்
பரந்துநின்றுவீழ்பனியின்மென்றுளி
வரிந்தவேள்சிலைவாளிபோன்றதே. ௩௪௨

ஐயபுல்லறுகாதியெங்கணும்
பெய்யுநுண்பனித்துளிபிறங்கின
வையமங்கைதன்மகிழ்நர்தோண்மரீஇ
மெய்யெலாம்வியர்பொடித்தல்வீழுமே. ௩௪௩

அன்னமென்றுளியவனிமங்கைதான்
றன்னிடத்துமைதவமியற்றலுங்
கொன்னறம்புரிகோலமும்வியந்
துன்னியுற்றமெய்ப்புளகமும்பொரூஉம். ௩௪௪

மலியுநீற்றுடற்கவுரிமானநோய்
மெலியிமத்தினுன்விளர்த்தயாவையு
முலகமுற்றுமையுருவமென்பகூ்த
யிலகுகாட்சியிற்றெளிவித்தென்னவே. ௩௪௫

அனையதண்பனியால்வெளுத்தொளிர்
கனைகடற்புவிக்கன்னிதானுமெய்
வனிதைபோற்றவமருவமெய்யெலாம்
புனிதநீறுதோய்பொலிவும்போன்றதே. ௩௪௬

கதிரினுற்றனைக்காதுவெய்யவன்
வதுவைசெய்மனையாவதோர்ந்தெனப்
பொதியும்வெப்பினிற்பொலிவழிந்துதண்
பதுமம்வாடுறப்பகைவிளைத்ததே. ௩௪௭

கரிந்ததாமரைக்கதியவண்டினம்
பிரிந்துபோதவபெட்பிணையினாற்
பரிந்தநுண்ணிடைப்பாவைமார்தமைத்
தெரிந்துகாமுகர்நீங்கிச்சேறல்போல். ௩௪௮

நோயினாலுயிர்நொந்துமென்மல
லியுமாந்தர்போல்வெய்யதண்பனி
பாயநீரினாற்பங்கயக்குலந்
தீயுடன்றெனமுழுதுந்தீந்தவே. ௩௪௯

ஆடுமாந்தருக்கார்வமற்றெனத்
தோடுகொண்டதூவெள்ளையன்னமு
நீடுதண்டுறையாடநீங்கின
பேடையோடுதண்சோலைபேணின. ௩௫௦

அணங்குவெம்பனிக்கழகழிந்துகா
ரிணங்குமெய்யினாரெவருமாதலாற்
றணைந்துளாரையுந்தலைப்பட்டன்பினான்
மணந்துளாரையும்வகுக்கொணாதரோ. ௩௫௧

மண்டுவெம்பனிமறலுநீர்மையான்
விண்டவூறுமான்மேயவன்பர்மே
லுண்டபற்குறியூறும்வேற்றுமை
கண்டிடப்படாகன்னிமாரிதழ். ௩௫௨

களவினனபரைக்கலந்தமாதரு
ளளவுபற்குறிக்கஞ்சுவாரிலை
யிளிவுறுத்திமத்திதழ்வெடித்ததோர்
பிளவிதாமெனப்பெயர்க்குமாற்றலால். ௩௫௩

இரவிமேற்கடலெய்துமுன்னரே
விரவுமாந்தர்கள்விளங்குமாளிகைப்
புரவுபூண்டுனர்புகுவரலலது
பரவைவீதியிற்படர்கிலார்நிசி. ௩௫௪

அரமியங்களுமலர்பொதும்பரும்
பரவுசீதளப்பனிமதிக்கலும்
விரவுமேனிலமேடையுங்கவி
னிரியல்போயினவெவருநீத்தலால். ௩௫௫

சந்தனங்களுந்தரளமாலையுங்
கந்தநீர்களுங்கமழ்செய்மாலையு
மந்திலேந்துருவாவணங்களு
நொந்திமத்தினாற்றுமுநூக்கல்போல். ௩௫௬

திங்கள்காலொளித்தெண்ணிலாவுடற்
றங்குதோறுயிர்தளர்வர்யாவரும்
பொங்குமில்லறம்புகரென்றேம்பினார்
நங்கைமார்கரந்தீண்டலைந்தென். ௩௫௭

அழற்றுவெம்மையவங்காரகமுஞ்
செழித்தகாரகிற்செறித்தனுமமு
மிழித்திலாவெளிமயிரின்போர்வையுங்
கழித்திலாரரைக்கணமும்யாவரும். ௩௫௮

ஒருவர்மெய்வெதுப்பொருவர்மெய்யினின்
மருவிவன்குளிர்மாயமார்பெலாம்
பொருமுகொங்கைகள்புதையப்புல்லுவார்
திருவனார்களுஞ்செல்வமைந்தரும். ௩௫௯

புகையுமப்புறம்போதொணுவகைத்
தகையுமுள்ளறைத்தடவுச்சேக்கையி
னகிலினிற்புகையார்த்திவைகலாற்
பகலன்றுருமாய்படிவமெய்தினர். ௩௬௦

மாலும்வானவரிறையுமாரனுங்
காலவெம்பனிகாதநொந்துமு
னீலவொண்புகையாத்தநீர்மையாற்
போலுமெய்யெலாம்புகர்படைத்ததே. ௩௬௧

நெடியவானமுநீண்டவேலையுங்
கடியசோலையுங்கரியகுன்றமு
மடமைமாதரார்வணர்மென்கூந்தலுங்
குடிகொள்காருமகொள்கைபோலுமால். ௩௬௨

முடங்குவார்கழன்முன்கைமார்புவைத்
தடங்கியன்னையரகட்டினென்றுற
வொடுங்கிமைந்தர்களுறக்கமேயினர்
வடங்கொணித்திரைமாயனைத்துளார். ௩௬௩

அறையும்போர்வையுமடுத்தணைத்தன
ருறைதலாற்றுயிலெவர்க்குமோங்கலான்
மறையிற்புல்லப்போமகளிர்க்கவ்விராக்
குறையின்றுயதுகூதிர்போலவே. ௩௬௪

கந்தைபின்புறங்சாக்கவிட்டுமூ
மந்திபோலமுள்காந்துவார்கழற்
பந்தமுற்றுறப்பாணிகோத்துள
நொந்திருப்பர்முன்னேற்றிலாரெலாம். ௩௬௫

முதுமைமாந்தர்கண்மூரற்பந்திக
டதையமோதுவதாளமாகவாய்க்
கதிகொண்மெல்லிசைகறங்கியங்களா
வதரமர்டுவவங்கையரடுவ. ௩௬௬

தலைவர்நீங்கியதையன்மெல்லிய
ருலையும்வாடையாலுடைந்துமாமழை
புலவுவேல்விழிபொழியப்பீர்முலை
மலைகள்பூப்பமுன்மாரிகாட்டுவார், ௩௬௭

## கழுவாய்ப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நாரணர்விரிஞ்சர்தேறாநம்பனார்க்கலர்கள்கொய்வான்
பூரணிவிடியற்காலைபுகுந்திறமுணர்ந்தாலென்னக்
காரணிசோலைமுற்றுங்கழீஇப்பெருந்தூய்மைசெய்யு
மோரணிசிறப்புவாய்ப்பவிறுத்தபின்பனிமாமேகம். ௧௬௮

அருள்கொழித்தொழுகும்வாட்கணம்பிகைபுரிபூசைக்கு
மருமிகுத்தொழுகுந்தேறன்மலர்நனியுதவித்தங்க
ளிருள்பழுத்தொழுகுநீலநிறமிரித்திட்டாலென்னச்
சுருள்விரித்தொழுகுஞ்சோலைதூத்தகவெளுத்தமாதோ. ௧௬௯

இறைமகளாகிவாழுமிறும்புசூழிமயக்குன்றங்
கறைகொடாதிருப்பச்சீறிக்கடாவலுமிறந்துமுற்றி
நிறைய்மேலிவர்ந்துவண்மைநிலைகெடவலைத்ததேய்க்குங்
குறையறுவளஞ்சூழெல்லாக்குன்றினும்பனிசூழ்தோற்றம். ௧௭௦

வலம்புரிதடந்தோளன்பர்வரப்பெறுமாதரார்க்குக்
கலம்புரிவெந்நீராட்டுங்கடும்பனிகணவரெய்தாப்
புலம்புறுமாதரார்க்கும்புணர்விழிவெந்நீராட்டி
நலம்புரியறிஞர்போலவொப்புரவாற்றுநாளும். ௧௭௧

கணவரைப்பெற்றாரன்னோர்கமழ்புயந்துணையாக்கொண்டு
மணியணைநீங்கிமுன்றில்வந்திடார்கதிர்த்தோற்றத்துந்
துணைவரையுறாருமன்னோதுன்பமேதுணையாக்கொண்டு
பிணிமலர்ச்சேக்கைநின்றும்பெயர்ந்திடார்கலந்தாரொத்தார். ௧௭௨

காலையுமிரவேயென்னக்கள்ளுயிர்த்தலர்ந்தபல்வீச்
சோலையுமாறுங்குன்றுஞ்சூழ்ந்துகொள்பனியின்றோற்றம்
வாலரைமுதலாயுள்ளோர்குளிர்ப்பிணிமடங்கக்காய்வான்
சாலவும்வளர்த்தசெந்தீதருபுகைப்படலையொக்கும். ௧௭௩

மாதரார்புலரிககாலைப்புறஞ்செலாவருத்தநோக்கி
மோதுதண்பனிதானன்னோர்முன்றிலுமறுகுமெங்குஞ்
சீதநலவாடைதன்னாற்றிருவலகிட்டுநாளு
மேதகுமாப்பிநீராமென்றுளிதுவற்றுமன்றே. ௧௭௪

காலைவெங்கதிர்காயாருங்கனலினைக்குளிர்காயாருஞ்
சாலவுமுறுகும்வெந்நீர்குளித்திடாதாருமஞ்ஞை
போலபவர்முலையின்மார்பும்புயங்களுஞெமுங்காதாரு
மாலுமப்பனியத்தில்லையலர்தலையுலகின்மாதோ. ௧௭௫

சேணிடைத்தணந்தோர்தாமும்வெம்பனிச்சீதநீங்கப்
பூணுடைக்கிழத்திமார்தம்புணர்முலைவெம்மைதங்க
ளேணுடைமார்பினொற்றியின்புறுபாக்குவல்லே
மாணுடையிரதமூர்ந்துவந்தனர்மகிழ்ச்சிபூப்பார். ௧௭௬

திங்களுங்கங்கையாறுந்தண்ணெனச்சென்னிதாங்கு
மெங்களையகருமங்காளித்தகுபனியிற்பட்ட
வெங்குளிர்க்குடைந்துசெம்பொன்வெற்பரசுயிர்த்தநங்கை
கொங்கையின்வெம்மைமார்பினொற்றிடுங்குறிப்போதேரும். ௧௭௭

பங்குனிப்பருவந்தன்னிற்பண்டுபோலொருநாளன்பின்
மங்கலக்கவுரமேனிமடமயின்மாண்டசாயற்
றுங்கலங்குழலாள்பூசைத்தொழிறலைநின்றகாலைச்
செங்கைமான்மறியாரங்கோர்திருவிளையாடல்செய்வார்; ௩௭௮

கங்கையந்தீர்த்தமுன்னாங்கடும்பவங்கழுவுந்தெண்ணீர்
பொங்குமேழ்நதியுமெய்தத்திருவுளம்புரிதலோடு
மங்கவையேழும்போந்துதொழுதருட்பூசையாற்று
மங்கைமற்றறியாவண்ணமறைந்தொருபுடைநின்றேதும். ௩௭௯

சிறியரேம்யாங்களெம்மான்றிருவுளஞ்செய்யப்பெற்றே
மறிவுறுத்தருளாய்செய்யும்பணியெனவருளினோக்கி
யிறைவிலிக்கம்பையாற்றினுடன்கலந்தெங்கும்விம்மிப்
பிறைநுதல்பூசைமுற்றுப்பெற்றியின்வம்மினென்றார். ௩௮௦

நன்றெனவணங்கியேழுநதிகளுமேல்பாலெய்தி
யொன்றலவேலையேழுமொருபுறக்கடலிற்கூடி
மன்றவிங்கெழுந்தாலென்னத்தன்னிடைமருவியீண்டப்
பொன்றிரைகொழிக்குங்கம்பையெழுந்ததுபுவனமஞ்ச. ௩௮௧

ஏழுயர்நதியுமேலையேழெனுமுலகும்போர்ப்பக்
கீழுலகனைத்துங்கம்பைத்திருநதிகிழிப்பதொத்து
வாழியபரந்துபொங்கிவரும்பெருவெள்ளநீத்த
மூழியீற்றளக்கரென்னவொல்லொலித்தெழுந்ததம்மா. ௩௮௨

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வன்னப்பனிவரையரையன்பெறுதனிமகள்கண்டிகலியுண்மறநீடிக்
கொன்னப்படைவிழியெரிசிந்தினுமுயிர்குழையாதிரிதரநினைவுற்று
முன்னர்ப்பலநெறிகண்டாலெனமிசையண்டச்சுவரொடுமுந்நீர்சூழ்
கன்னிப்புவிமகளுடல்விண்டெழுவதுகம்பைக்கலிகெழுநதிமாதோ.

கயிலைத்திருமலையுடையாரவரிருகண்ணையுறைதருநுந்தம்மை
யயரக்கரமலர்கொடுபொத்தியவுமையவளச்சுறவிவணுறுகின்றும்
வெயில்விட்டெழுமிருசுடர்காணீவிர்கடுணையாமேவுதிரெனவௌவி
யியலுற்றெனமிசையுழலுஞ்சுடர்களையெற்றிப்பெயர்வதுபுகழ்கம்பை.

கடையிற்பெருகியகடனீரிதுபுனலகடைநாளிதுதினமெனவெண்ணி
யுடைவுற்றரியயன்முதலாமமரர்களுறைதத்தமதிடம்விட்டோடி
விடையிற்பொலிவுறுவிகிர்தக்கடவுளைவிண்ணிற்சிவபுரநண்ணிச்சென்
றடைவுற்றனநினையடிகேள்புரவெனவயரப்பெயர்வதுபுகழ்கம்பை.

தாளத்தொகுதிகளெனவுந்தகைநரரெனவுந்தாரகையுடன்வானில்
விரவிப்பயில்சுரர்குழுவைப்புவிமிசைமிடையத்திரைகொடுதள்ளிப்பி
னுரவுத்தாரகையெனவுந்தேவர்களெனவும்பலமணியுடன்மல்கு
நரரைத்தாவில்விணிடுவிஞ்சையினொடுநடையுற்றெழுவதுபுகழ்கம்பை.

விண்ணத்துயரியதருவும்பதுமம்வெள்வளையென்றுரைபெறுநிதிதாமு
மண்ணிற்குழுமியமராமுங்கமலமென்மலருங்கதிர்பணிலமுநேரே
நண்ணிக்கிழமையினண்மிக்குழுமுறநாடிச்சந்திசெய்துதாகி
யெண்ணற்கரியபல்வளனங்களைவதரவேந்திப்பெயர்வதுபுகழ்கம்பை.

அம்மென்றளிரியலுமைபோலிறையவரடிவந்தனைசெயவுறுபொற்பின்
விம்முங்கதிரொளிமணியுந்தளிர்களும்விரைபொங்கியமலர்களுநாறுஞ்
செம்மென்பளிதமொள்ளகில்சந்தனநறைசெழுமைக்கனிகனிபலகொண்டு
கொம்மென்றெழுவதுகுரைமந்திரவொலிகுலவத்திரைபடுமுயர்கம்பை.

துங்கத்திரைபடுநதிகட்கிறையெனமருவுங்கனைகடலுயர்கூர
மங்குற்கடவுளர்கடைமத்தெனவுறுமலைமேனிகழ்வயிரத்தாலச்
சிங்கத்திரள்பயில்சிலைதன்குலமெனவெதிர்நின்றுயரியசிலையெல்லாம்
பொங்கிச்சினமுடனகழ்வுற்றலைசெய்துபோதுந்திறலதுபுகழ்கம்பை.

ஆனைக்கொடிமிசையுடையார்திருவருள்கடவாதனைவுறவிசையுந்தன்
மானப்பெருவிறல்வரவைப்பூசனைவழுவாவியதியினொடுபேணு
ஞானப்பரையைமுனறிவித்தவளருணலமும்பெறுமுறையுறமாபோன்
மீனச்சட்லகளுமவியப்பெருகொலிவிளைவித்தெழுவதுபுகழ்கம்பை.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புனலுடையண்டந்தம்முளிஃதுமோர்புனல்சேரண்ட
மெனவெழுகம்பைத்தெண்ணீரேகமாய்க்கோத்துச்செல்லத்
தனைமறந்தறிமால்கொண்டுதலைவனார்பூசையாற்றும்
வனமயிலனையாளேக்கிமனம்விதிர்த்துச்சம்பூத்தாள். ௯௬௧

அருந்தவநெடுநாளாற்றியரிதுயிர்புனிற்றுப்பிள்ளை
மருங்கொருபாந்தள்வெளவவந்தநூன்றவ்வைமானக்
கருங்குழலுமையும்வேறுகாரணநினையாளாகி
யிருங்கரத்துணையாலவீழ்ந்துதழுவினளிறைவனாரை. ௯௬௨

இருவளைக்கரங்கணீட்டியிளமுலைப்பொருப்புத்தண்டார்
மருமமுற்றழுந்தப்புல்லுங்காட்சியுமலைபோற்பொங்கி
வருபுனனோக்கிநோக்கிமறுககமும்பி த்தூன்று
மொருமுழந்தாளுமண்ணினெற்றைத்தாணிலையுமானாள். ௯௬௩

நறுவிரைத்தெண்ணீராட்டிநலத்தகுகளபஞ்சேர்த்தித்
தெறுகதிரிழைகள்சாத்தித்திருகிளர்கோலஞ்சாலப்
பெறுதனிக்கொழுநர்மேனிப்பேரெழினோக்கிக்காதன்
முறுகிடத்தழீஇயதேய்ப்பமுகிழ்முலைதழுவலோடும். ௯௬௪

இருவரும்புணர்ச்சிவாய்ந்தசெயலுணர்ந்தெழுந்தவெள்ள
மருகுறநாணுக்கொண்டாங்காயிடையஞ்சிநிற்பக்
கருணையங்கடலினருங்கவினுருக்குழைந்துமாதர்
திருமுலைச்சுவட்டினோடுசெறிவளைத்தழும்புபூண்டார். ௯௬௫

வலியன்வெவற்றினுள்ளும்வலியரென்பதற்குச்சான்று
விலகொளிமேருவாங்கிக்குழைத்தமைவிளக்கமற்றை
மெலியனவெவற்றினுள்ளுமெலியரென்பதற்குச்சான்று
குலவுமென்முலைக்குச்சாலக்குழைந்தமைவிளக்கிற்றம்மா. ௯௬௬

காமவேள்பகழியாயகமலமென்முகைகளென்றுந்
தாமமாலோடையானைத்தரளநீளலவையென்றும்
பாமலிபுலவர்கூறும்பதப்பொருள்விளைப்பவையர்
தூமணிமார்பந்தைத்ததுடியிடைமடவாள்கொம்மை. ௯௬௭

தொடிபொலிதடக்கைநீட்டித்துளங்கவெண்கயிலைக்குன்ற
மடல்வலியரக்கர்கோமான்பெயர்த்தநாளதனிற்சால
விடனுடைத்திருவேகம்பத்தெந்தையார்கம்பைக்கஞ்சிப்
பெடைமயிறழுவுஞான்றுபெரிதுளமகிழ்ச்சிபூத்தார். ௩௯௫

பயங்கிளருயிர்களெல்லாம்பரவசமகிழ்ச்சிகூர்த்த
வியங்களோரைந்தும்வானத்திடியெனமுழங்கியார்த்த
கயங்கிளர்சமயமுற்றுங்காலறமறைகளார்த்த
நயங்கிளரமரர்பெய்யுநறைமலர்விசும்புதூர்த்த. ௩௯௬

உள்ளகமகிழ்ச்சிபூப்பக்கணங்களுமுறுவர்தாமுந்
தெள்ளியதீந்தண்பாடற்றிவவியாழ்ப்புலவராதி
வள்ளயிற்படைவாள்விண்ணோர்வகுப்புமாங்கெய்தவேதன்
கள்ளவிழ்துளபத்தாமக்கடவுளோடடியிற்றாழ்ந்தான். ௪00

பொறித்தபூஞ்சிறகர்த்தும்பிபுரிமுறுக்குடைத்துத்தெள்யாழ்
குறித்திசைமிழற்றித்தாதுகொழுதிவாய்மடுத்துண்டாடும்
வெறித்தபூவணையிற்புத்தேள்வேதநான்மொழியாற்கூற்றை
யிறுத்துயிருண்டநோன்றாளிணைமலர்வழுத்தினால். ௪0௧

வழுத்தலுங்கருணைகூர்ந்துவார்மதுப்பருகிவண்டு
கொழுத்தபூங்கடுக்கைமாலைக்குவவுத்தோளண்ணலார்தாஞ்
செழுத்தநல்வரங்கள்வேட்டசெப்புதிதருதுமென்ன
முழுத்தபேரன்பினன்னோன்முகமலர்ந்திதனைவிண்டான். ௪0௨

இத்திருநகரின்வாழ்வாரெவர்க்குமித்திருத்தநன்னீர்
பத்திமீக்கிளைப்பத்தன்னம்பருகினோர்தமக்குமாயைப்
பித்தனேன்பழிச்சுநின்சீர்ப்பெருந்துதிபேசினோர்கரு
முத்திநீந்தருளாயென்னமுதலவனாதனைநல்கி. ௪0௩

நாமகடிருத்தப்பாங்கர்நாவின்வீற்றிருக்குமாதும்
பூமகடிருத்தப்பாங்கர்ப்பூவின்வீற்றிருக்கும்பொன்னு
நாமகிழ்பூப்பவெம்மைப்பூசனைநயந்தாரன்னோர்,
தாமகிழ்பூப்பநீயுந்தண்டுழாய்மருமத்தானும். ௪0௪

இருமையினுலகமுற்றுமிசைபெறவரைமின்னென்னுப்
பொருவறுவரங்களீந்துபுலவரோடவரைப்போகவித்
திருவளரொருமாநீழற்சிலம்புயிர்மடந்தையோடுங்
கருணைபூத்துவகையுள்ளக்கலப்பினினிருக்குமேல்வை. ௪0௫

சிறுமதிபெருநிலாவைச்செய்தெனவொளிரச்சற்றே
முறுவலித்தருளவேய்த்தோண்முகிழ்முலைப்பிராட்டிநோக்கி
யுறுசெயலிதுமற்றண்ணல்விளைத்திடுமிடையூறென்று
மறுவறுகாட்சிசான்றமனமுறத்தெளிந்துகொண்டு. ௪0௬

கீர்த்திமாமதியைநோக்கவண்மதிக்கீற்றுப்போலும்
வார்த்திருநுதலிற்காளியெனுமடவாலையீன்று
ளார்த்தெழுங்காளிமுன்சென்றடுக்கலினுயிர்த்தாள்செம்பொற்
சீர்த்தமெல்லடியிற்றாழ்ந்துசெல்வினமுழக்கிற்கூறும். ௪0௭

அலைகடன்மடுக்கோவெண்ணிலண்டமுநெரிக்கோபற்பன்
மலைகளுந்தெறிக்கோபாழிமண்ணெலாங்கரக்கோபூத
நிலையெலாமுறழச்செய்கோநித்திலநான்றுநீவு
முலைமுகிழ்பூத்தவன்னாய்மொழிந்தருளென்னாநின்றாள். ௪௦௮

நின்றவள்குன்றமீன்றநிருமலியேவலோடு
மன்றுபேரச்சமெய்தவார்த்தெழுந்துலம்பிப்பொங்கி
யொன்றிமேலெதிர்ந்துவந்தவோரெழுநதியுங்கஞ்சம்
வென்றதன்கரகபாலத்தேற்றனள்விறுகாட்டி. ௪௦௯

காட்டினுண்மதத்தவேழக்கணங்களுமிரியத்தாக்குங்
கோட்டிறலுழுவைவந்துகூட்டினுட்பட்டாலென்ன
வீட்டுபல்புவனமஞ்சவெழுந்தனவுந்தியெல்லாஞ்
சேட்டிருங்கபாலத்துள்ளாற்பட்டுளந்திகைத்துக்கூறும். ௪௧௦

அடியரேஞ்செய்தகுற்றமனைத்தையும்பொறுப்பாயோலங்
கடியவிழிமயமீன்றகவுரியேயோலம்வேத
முடியினிருத்தஞ்செய்யுமுருகவிழ்குழலாயோல
மிடிதுரந்துயிரைக்காக்கும்வித்தகியோலமோலம். ௪௧௧

எனப்பலமுறையுமோலிட்டிறைஞ்சலும்வருந்தக்கன்றின்
கனைப்பொலிகேட்டவாவிற்கவுரியுங்கருணைகூர்ந்து
மனப்படுந்துயரத்தாழ்ந்துமறுகன்மின்மறுகன்மின்னென்
றனைப்பெருநதிகளேழுக்காத்தவாய்மலர்ந்துகூறும். ௪௧௨

அளப்பருஞ்சீர்த்திசான்றவழகியகச்சிமூதூ
ருளப்படுமெண்ணிறீர்த்தமுளவெலாநிறைத்துப்பின்னர்
வளப்பெருங்கம்பையோடுமகரநீர்ப்பௌவத்தின்பந்
திளைப்புறச்செல்கவென்றுதனித்தனிசெப்பிவிட்டாள். ௪௧௩

கத்திகைப்பிணையலோதிக்கௌரியுட்கருணைபூத்துத்
தத்தமக்கருளிச்செய்ததடம்புனற்றீர்த்தமெல்லாம்
பத்தியினிறைத்தேயன்னாள்பதமலர்சிரமேற்சூடி
முத்தலைநதிகளேழுமுடுகியகடலின்மாதோ. ௪௧௪

பொற்றமென்சுணங்குபூத்தபுணர்முலைநதிகடம்மை
மற்றொருபுலத்திற்போக்காள்வளைமணிக்கடலிற்கூட்டும்
பெற்றிமைகணவர்கூட்டங்கதுமெனப்பேணுமப்பே
றுற்றிடத்தனக்குச்செய்தவுதவிநேருதவிபோலும். ௪௧௫

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இன்னவகைத்திருவிளையாட்டாடியெங்கோனிணரூழ்த்துமதுத்திவ
லையிறைக்குங்கொக்கி, னன்னிழலினரியணைமேலிமயமீன்றநங்கையொ
டும்வீற்றிருந்துநாளுநாளும், பொன்னகரிற்கடவுளருங்குலிசச்செங்கைப்
புத்தேளுமலர்த்தேவுங்கருவிமேக, மன்னவனும்பழிச்சவருள்கொழித்
துவாழ்ந்தாரங்கிலையினெடுங்காலங்கழிந்தபின்னர். ௪௧௬

மேதகுதன்கிழத்தியாநதிகளெல்லாம்வெருவவொருகபாலத்தினே
ற்றுவாட்டுந், தீதுதனைநினைந்துபகைச்செற்றங்கொண்டுசெம்பொன்மலை

வல்லியுடன் செருவாற்றற்கு, மேதமறவவள்படைத்தவுலகமெல்லாமி
மைப்பளவினழிப்பதற்குமெண்ணியாங்குப், போதமருமயனரியையுள்
ளிட்டோரும்பொன்றவருகடைவெள்ளம்பொங்கிற்றம்மா. சகஎ

பொங்கியெழுங்கடற்பெருக்கநோக்கிவிண்ணிற்புத்தேளிர்முதலெ
லாரும்பொருக்கென்றோடிச், சங்கரசங்கரபோற்றிபோற்றியெம்மைத்தா
மூதுகடைவெள்ளக்கடலினீக்கி, யிங்கணருள்புரிகவெனவிறைஞ்சியேத்
தவெம்பெருமானஞ்சாதிரென்றுகூறி,யங்கணெதிர்நின்றருளுங்காளிதன்
மேலருட்கடைக்கணோக்களிப்பவவளுந்தாழ்ந்து. சகஅ

விடைகொண்டுவல்விரைந்துபோதலோடும்வேறொருவரில்லையெ
னக்களவுசெய்யும், கடைகொண்டமனத்தினராங்கொருவர் தம்மைக்கண்
டபொழுதெனவெருவிக்கலங்கியஞ்சி, மடல்கொண்டபூங்குழலாண்ம
லர்த்தாள்போற்றிமழவிடையாரருளாறேவையம்பொன்றத், தடையின்றி
யெழுகின்றேனென்னையன்னைசாடுதற்குமுயலகின்றாய்சாற்றுகென்ன:

சொற்றமொழிவாயாகுந்தாளஞ்சிந்துஞ்சும்மைநெடுந்திரைக்கடலே
சொல்லக்கேண்மோ, பெற்றமுயர்த்தவனருளாலன்றியானும் பெயர்ந்
தீண்டுப்போந்திலன்காண்பெரியகோலப், பொற்றமணியெழுப்புயத்துக்
கடுக்கைப்புத்தேள்பொலங்கொடியன்னவளோடும்பொருந்திவாழு, மற்ற
மறுமுவளகமாங்காஞ்சிமூதூரணுகலைமற்றெவ்விடத்துமணுகலென்றாள்.

அதுபுரிவேனதுபுரிவேனம்மவென்றங்கருடலைமேற்கொண்டுபதமி
றைஞ்சிப்போற்றி, யுதிர்மலர்ப்பூம்பொழிற்காஞ்சிக்கப்பாலைந்தியோசனை
யெல்லையினகன்றதுததிவெள்ளம், விதுநுதற்காளியுமகன்றுதிருவேகம்
பமேவியடிபணிந்திறைஞ்சவிமலனுரு, மதிமுகமிக்கலர்ந்துபிரளயசித்
தென்னவழங்குபெயரவட்கந்நாளருளிச்செய்தார். சஉக

அப்பொழுதுபுத்தேளிர்முனிவர்யாருங்கடைநாளினிடும்பைவினை
யறியாராகி, யொப்பரியகாஞ்சிவயிற்றிருவேகம்பமுடையபிரானருட்க
டலின்முழுகிவாழ்ந்தா,ரிப்பரிசினிறைவரருட்பெருமைநோக்கியேழுநா
ளோவாதங்களகைவேந்தன், செப்பரும்பொன்மழையுநவமணியுமேழு
செல்லினமும்புறங்கொடுப்பச்சிதறியுய்ந்தான். சஉஉ

அளவுபடாச்சிவபெருமானருளினாற்றலளவுபடாப்பெருங்கருணைப்
பிராட்டியாற்று,மளவுபடாச்செயலனைத்துந்தெளிவொன்றில்லேனறிவள
வினொருவாறிங்கறைந்தேனிப்பா,லளவுபடாக்கடவுளர்கண்முனிவர்போ
ற்றுமளவுபடாச்சிவாலயங்களிடந்தோறுள்ள, வளவுபடாப்பெருவளஞ்
சூழ்புரிசைக்காஞ்சியகநகரந்தருவேதிமேன்மைசொல்வேன். சஉ௩

கழுவாய்ப்படலமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௪௦௪.

---

 66

# அந்தருவேதிப்படலம்.

7 கலிநிலைத்துறை.

மேகமுட்டிவிழுப்புனல்சிந்தும்விரைப்பொழி
னாகமுட்டியுடன்றமராற்றநகிற்றலை
யாகமுட்டரமாதர்கணோக்கினராட்டயர்
மாகமுட்டிவளர்ந்துயர்நந்திவரைக்கணே. ௧

மாதவத்தினுயர்ந்தவசிட்டன்மகத்தினுக்
கேதமில்சுவைத்தீம்பயமீந்திடுதேனுவங்
கோதநஞ்சமிடற்றவனூர்விடையேற்றினைக்
காதலாலொருநாள்விழிமுந்துறக்கண்டதால. ௨

கண்டுமீமிசைமிக்குலவாதெழுகாமநோய்
கொண்டுநொந்துவிம்மாந்துமெலிந்துகுழைந்துபான்
மண்டியூறுசெருத்தலும்வற்றியுலர்ந்ததா
லண்டர்யாருமுறுப்பிலடங்கியதேனுவே. ௩

அன்னதன்மைவசிட்டனறிந்துதருப்பையை
மன்னுமாமனுவாலொருகன்றின்வரச்செய்து
முன்னருய்த்தலுமோந்துடனக்கிமுகிழ்த்தெழு
நன்னரன்பினயர்ந்ததுகாமநலிந்ததே. ௪

மழையெலாங்குழுமிச்சொரிமாண்பெனவோகையாற்
கழியநீண்முலைதாரைகள்கான்றனகான்றபான்
முழுதுமோர்நதியாயவணின்றுமுந்நீர்ப்புகுந்
தழிவிலும்பருமாட்டயர்தீர்த்தமதாயதே. ௫

பரவைநீளுலகேத்தியவத்தகுபாலியின்
கரையின்மல்கியகண்ணுதல்கச்சமில்வைப்பினு
ளிருளையீர்க்கும்வராகவிரும்புரமுண்டதி
லரவின்மேற்றுயின்மாலுமலர்த்தலையண்ணலும். ௬

தருக்கியானிறையானிறையென்றனர்தம்முளே
யுரைத்துடன்றமராற்றழியங்கணுளச்செருக்
கிரித்தடக்கியவெம்பெருமானெரிவண்ணமாய்ப்
பொருக்கெனப்புவனங்களடங்கநிமிர்ந்தனன். ௭

அண்ணல்வார்கழல்காணுவலென்றரிவன்றியாய்
மண்ணகழ்ந்துபுகுந்தனன்வான்முடிநோக்குவா
னெண்ணியோதிமமாகியெழுந்தனனான்முகன்
கண்ணுமுள்ளமுமாழ்கினர்காணலர்மீண்டனர். ௮

அடுத்தவவ்வுருவோடொருதீர்த்தமகழ்ந்துமண்
ணெடுத்துநாட்டுமிருந்திறன்மால்வராகேசனைத்
தொடுத்தவன்புதுளும்புறுபூசைதொடங்கினான்
புடைத்தெழுஞ்சிறையோதிமமானபுத்தேளுமே. ௯

அன்னத்தீர்த்தமகழ்ந்தழகார்பிரமீசனை
நன்னர்ப்பூசையியற்றிநயந்தனனுதனு
முன்னர்த்தோன்றிமுருந்தனும்வேதனுமின்புற
வின்னுற்றீவினையீர்ந்தருளீத்துமறைந்தனன். ௧0

அனையசூழலினன்னவர்பூசனையாற்றிய
கனையுநீள்கடனஞ்சுறுகர்ந்தகளத்தனை
நினையவல்லவரேத்துநர்தாழ்பவர்கித்தலு
மினையும்வல்வினையின்றியிருங்கதியெய்துவார். ௧௧

கொச்சகக்கலிப்பா.

செழுங்கிரணவமுதுறைக்குந்திங்கள்பலவண்டமெலாம்
விழுங்கியபேரொளிப்பிழம்பாம்வித்தகனைவழிபட்டுக்
கொழுங்கடுக்கைச்சடைக்கணியாங்கோதறுசோமீச்சரமென்
றொழுங்கியவக்கரைத்தலையினொருதலம்வீற்றிருக்குமால். ௧௨

சலந்தரனுருயிர்பருகுஞ்சக்கரம்வேட்டுயர்திருமா
லலந்தவழ்பூசனைக்கெடுத்தநாண்மலரொன்றெஞ்சுதலா
லலர்ந்தவிழியிடந்தருச்சித்தஞ்சலித்துநேர்நிற்கும்
பொலஞ்சடைவித்தகன்றிருமாற்பேறென்றுபொலிவெய்தும். ௧௩

திருமலியுமரசர்குலஞ்செகுத்திறுக்கும்பொருட்டறங்கூர்ந்
தொருபரசிராமனெயிலுருத்தவனைவழிபட்டுப்
பெருகுமொளித்தழற்பரசுபெறுஞ்சீர்மைத்தாயுளது
விருதுபுகல்பரசிராமேச்சரமென்றொருதானம். ௧௪

இன்னுமரன்மகிழ்ந்தருளுமெண்ணரியசிவாலயங்க
டன்னுடையநெடுங்கரையிற்றழீஇககாஞ்சித்திருநகர்க்கு
மன்னுமெழில்விளைத்தொழுகுமணிப்புனற்பூந்தடம்பாலி
நன்னதியின்மேன்மையெலாநவிற்றுவாரெவரம்மா. ௧௫

பொருதாரகாசுரனைப்பொன்றமலர்ப்பொகுட்டணையி
னொருதேவும்பாப்பணையினுத்தமனும்வானவருங்
கருதார்முப்புரங்கடந்தகண்ணுதல்சீரருள்வாய்ந்து
பெருகார்வத்தொடுங்குழுமிப்பேணுசிவாகமமுறையின். ௧௬

காசறுசீர்வளக்காஞ்சிககடிநகருக்காயிரமாம்
யோசனையிற்சுமேருவெனுமோங்கலிடையுமையீன்ற
மாசின்மணிவேற்கரத்துவள்ளலைச்சேனுபதியா
வாசறுநீராட்டினாரத்தீர்த்தஞ்சேயாறாய். ௧௭

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூதலமருங்குபோந்துபொலஞ்சடைமுக்கண்மூர்த்தி
சீதவானிழலின்வைகித்தேவரைமுனிவர்தம்மை
யோதுவித்தருளுமோத்தூருறைச்சென்றுகடம்பர்கோயிற்
காதரத்தோடும்புக்குவடமுகமாகிப்பின்னர். ௧௮

பிரளயமுடிவின்மீளப்பிரமனெவ்வுலகுந்தோற்றத்
துரிசறுவேதங்காணுன்றுருவிப்போயுரகம்பூண்ட
பரசிவன்பூசையாற்றிப்பழமறையருளப்பெற்று
வரமலிகின்றவேதநூபுரவைப்பினெய்தி, ௧௯

இளந்தவப்பதியினின்றங்கிழக்கினைநோக்கிச்சென்று
வளம்பயில்புனிதவேகவதிமணிக்கம்பைகூடி
விளங்கியகூட்டத்தெய்திவிராவியததுமுக்கூடல்
களங்கறுத்தாடினோர்க்குக்கண்ணியவரங்கணல்கும். ௨௰

மருமலர்க்குவையல்கொட்டும்வளந்திரைப்பாலியென்று
வுருகெழுமணிகளுந்தியொழுகுபூஞ்சேயாறென்று
விருவகைநதியுங்காஞ்சியெழினகர்வடபாற்றென்பான்
மருவிடுமெல்லையாகித்தீர்த்தமாய்வயங்குமன்றே. ௨௧

அச்செழுநதிகளுப்பணந்தருவேதியாகி
யெச்சமில்யமுனைகங்கையிடைப்படுமந்தர்வேதிக்
குச்சமாய்முதுவதாயெவ்வூழியுமழிவின்றோங்குங்
கச்சிமாநகரமங்கணிகழ்சிலகாதைசொல்வாம். ௨௨

எரிமணிமோலித்தேவரியக்கர்களுரகரேனைக்
கருடர்காந்தருவர்தங்கள்கன்னியரானோரெல்லாந்
திருவளர்தத்தம்வைப்பிற்றீர்த்தநீர்மூழ்கினாளு
மருமலர்ப்பொழில்சூழ்கச்சிமாநகர்வரைப்பினெய்தி. ௨௩

பெருகொளிப்பரமானந்தப்பிலத்தினிதிருக்குந்தெய்வ
வரையணங்குமையாள்பாதம்வலம்புரிந்திறைஞ்சிவாழ்த்தித்
திருவருள்கிடைத்துச்செல்வார்செல்லுநாளொருநாட்சாலப்
பரிவொடுவணங்கிப்போற்றிப்பன்முறைபழிச்சிநின்றார். ௨௪

அளியினமுரன்றுமூசுமம்மலரலங்கற்கூந்தற்
களிமயிலனையகாமக்கண்ணிமற்றவரைநோக்கி
யொளிநகைமடவீரென்னைநுங்கருத்துரைமினென்னத்
தளிர்புரைசெங்கைகூப்பித்தாழ்ந்துவிண்ணப்பஞ்செய்வார். ௨௫

அதிரிடைக்குவவுக்கொங்கையன்னையிவ்வுலகத்துள்ள
நதிநதமுதலாந்தீர்த்தமுழுவதுநாளுநாளும்
விதியுளிப்படிந்துபோற்றும்விழைவினேம்விழைவுமுற்ற
முதிரருட்கடைக்கணல்கென்றிரத்தலுமுழுதுமீன்றாள். ௨௬

கருணைகூர்ந்தருளியோர்பாற்கைகுவித்திறைஞ்சிநின்ற
வருணன்மேற்கடைக்கண்சாத்தமற்றவனுங்காங்கெய்தித்
திருநுதலிறைவியாணைசெப்பலுங்கங்கையாதிப்
பொருபுனற்றீர்த்தமெல்லாம்பொருக்கெனதிரண்டுவந்த. ௨௭

வருவினைப்பிறவிமாற்றும்பிலமதன்வடமேல்பாங்க
ரொருதடங்கடவுட்பொய்கையுருவமாய்த்திகழ்தலோடுங்
கருமுகிற்கூந்தன்மென்றோட்கன்னியர்தொழுதுபோற்றி
யருளினலந்நீர்மூழ்கியளப்பருங்களிப்புமிக்கார். ௨௮

அங்கதிற்படிந்தேகம்பத்தடிகளைத்தொழுவோர்யார்க்கும்
வெங்கொலைத்தீமையாதிவீட்டிநாற்பயனுமெய்துந்
தங்கநல்வரமுமீந்தாள்கரிகுழற்பிராட்டியந்தப்
பொங்குநீர்சருவதீர்த்தப்பெயரினும்பொலிவுற்றோங்கும். ௨௯

முன்னொருநாளிற்செவ்வேள்முருகனும்விண்ணுடாரு
மன்னனுமூண்டபோரில்வலாரிதன்மீதிலோச்சு
மின்னவிர்குலிசத்தண்டின்வீறழித்துமையாளீன்ற
பின்னவன்புடைத்தான்றன்கைப்பிடித்தவெங்குலிசத்தண்டால்.

வானவர்க்கரசனோடுமெறுகிமாழாந்துமூர்ச்சித்
தீனமுற்றிரங்கும்வெள்ளையிபமொருசிறுவன்கையால்
யானுமென்னிறையும்பட்டேமின்னவனூர்தியாகி
லூனமொன்றுறுதென்றெண்ணியொப்பிருங்காஞ்சியெய்தி. ௰௧

வம்பலர்ந்துலவும்வேகவதிப்புனற்றிருத்தமாடி
யம்பிகைபாகற்போற்றியருள்பெறுநீலமேனி
யும்பனைமலையிற்போற்றியவ்வரமுற்றதற்று
னம்புமக்கிரியையத்திகிரியெனநவிலுவாரால். ௰௨

தானவர்கோடியோரைத்தடிகுடர்சரியக்கொன்று
மானவெங்குருதிச்சூலவார்நுதியேற்றும்பாவ
வினைமுற்றிரிக்குமாறுசண்டிகையெண்ணிவல்லே
கானமர்கோடிதீர்த்தங்கண்டனள்காண்டலோடும். ௰௩

தொட்டருள்குளிர்பூந்தீர்த்தச்சுடர்மணிககரையின்பாங்க
ரெட்டுருவுடையமூர்த்தியிலிங்கமாய்ச்சுயம்புவாக
வுட்டவழ்கருணையோடுமுளைத்தனனுதனால்யாரும்
பெட்டல்செய்தான்றோன்றீசமெனப்பெரும்பெயர்பெற்றோங்கும்.

இருவினைசவட்டியாளுமெம்பிரான்பயந்தசெம்மல்
பொருதிறற்சூரனாண்மைபொன்றியமுருகப்புத்தே
ளருள்விழிப்பார்வைதன்னாலணிகொண்மேற்றளியிற்செந்தேன்
முருகவிழ்துளபத்தண்டார்முகுந்தனோரிலிங்கமானான். ௰௫

வருங்கடைநாளின்மாலுமரைமலர்ப்பொகுட்டுளானு
மொருங்குவீட்டின்பந்துய்ப்பானுன்னிலூர்சங்கதீர்த்தஞ்
சுருங்குறுதழுந்துபட்ட குண்டிகைதீர்த்தந்தொட்டுப்
பருங்கனிதூங்கும்வில்வம்பலாசிவற்றடியினெய்தி. ௰௬

வடம்புரள்குவவுக்கொங்கைமால்வரையீன்றநங்கை
கடம்பணிகாளையோடுமிறைவனைக்கருததிற்பேணிப்
படம்படுமாரம்பூண்டபண்ணவவெம்மையின்னே
யுடம்படினதுகாயத்துறுத்துகென்றிறைஞ்சிநோற்றார். ௰௭

அடிகளுமவருக்கவ்வாறருளினனதனாலந்தக்
கடிபடுநகர்காயாரோகணமெனப்பெயர்பூண்டன்று
மிடிகெடவங்கணோற்போர்கயிலையைமெயயோடெய்திக்
குடிகொளுமற்றினாலுமப்பெயர்கொண்டதாமால். ௰௮

குலவுசீர்மயானவைப்பிற்கொழுஞ்சுடர்க்கனலிநாவி
லலகில்பல்லுலகுமெஞ்சாதாகுதியாக்கிப்போக்கி
யிலகுமாவிரதமென்னுஞ்சாத்திரமினிதுதோற்றி
நிலவியயோகபீடத்திருந்தனனிமலமூர்த்தி. ௰௯

திரையெறிகம்பையாற்றின்றென்புலத்தும்பர்மேவும்
விரைகமழ்கடப்பஞ்சூழல்வேலவன்வைப்பினந்தக்
குரைகழற்குமரவேட்குக்கோயிலாஞானந்தன்னை
வரைகுழைத்தருளுமெங்கள்வள்ளன்மிக்கருளிச்செய்தான். ௪௦

மையவிர்ந்தனையதன்கேழ்மாசுடல்கழிப்பான்முக்க
ணையனைவரங்கணல்குமமலனைக்கமலப்போதாற்
கையினாற்காலிற்றாவிககசிந்துளமுருகியேத்திச்
செய்யவண்பவளவண்ணம்பெற்றனன்றிருமாலென்பான். ௪௧

கடல்கடைந்தெழுந்தநஞ்சாற்காலெனப்பெயர்ந்துமீண்டெம்
மடிகளோசரணமென்றுவடைக்கலம்புககவொண்கேழ்
நெடுமுடியமரர்க்கெல்லாநின்மலன்விடவேகத்தின்
கொடுமையைமுழுதுங்காற்றிக்குளிர்விததுமாலுமாலே. ௪௨

சுந்தரமுடியிற்றிங்கட்டுணிபடுமமிழ்தந்தன்னால்
வெந்ததோரிருந்தைபோலுமெய்யெலாங்குளிர்வித்தங்கு
முந்துறத்தொழுதுநிற்பப்பணித்தனனந்தமொய்ம்பாற்
சந்திரகண்டமாயதப்பெருந்தானமாதோ. ௪௩

கச்சணிமுலையாள்பங்கன்கழலிணைபூசையாற்றிக்
கச்சபவடிவுநீங்கிக்கார்முகில்வண்ணன்மேனாட்
கச்சமிலின்பந்துய்த்துக்களித்தனனதலாலே
கச்சபாலயமென்றோர்பேர்பெற்றதககடவுட்டானம். ௪௪

அத்திருவரைப்பிற்றீர்த்தமருடருங்கச்சபேச
வுத்தமன்பூசையாற்றுமோதிமக்கடவுளாடிச்
சித்திகள்பெறலாவிட்டசிததியென்றுயதின்று
முத்தியோடிட்டசிததிமுகிழ்த்திடுமாடுவோர்க்கே. ௪௫

தாழ்ந்தவரெழுமுன்றாழ்ந்தோர்தங்களாலீட்டும்பாவம்
வீழ்ந்துபோயணங்கச்செய்யும்வித்தகன்கச்சபேசத்
தாழ்ந்ததன்குற்றந்தீர்ப்பானருட்குறிவேறுண்டாக்கி
வாழ்ந்தமாந்தாதாவென்பான்வழிபட்டான்வகுத்துச்சொல்வாம்.

இரவிதன்வழியின்வந்தானிகல்கடிந்திலகும்வேலான்
பரவியபுகழான்வையம்பாரித்தபுயத்தின்வைத்தான்
கரவினைக்கரக்குநீரான்காமர்மாந்தாதாவெனாறு
மரையனோர்தினத்திராவினமளியிற்கனவினனே. ௪௭

விடிந்தபினறுநீராடிவிதியுளிகருமமுற்றி
மடந்தபுகுரவனைவசிட்டனைக்கூவியையவர்க்
கடந்தமாதவனேயான்மன்கனவியகனவைக்கேளென்
றடர்ந்தெழுமார்வம்பொங்கவன்னவற்குரைக்கலுற்றான். ௪௮

கலிவிருத்தம்.

வையகமும்மையும்வந்துதாழ்தொறு
மையமோலியின்மணியழுத்தித்தேய்த்தலா
லொய்யெனத்தழுவியதழும்பினேடுபூஞ்
செய்யதாமரையெனச்சிவந்ததாளினான். ௪௯

அரியினமெதிரினுமதிர்ப்பத்தாக்குறுஞ்
சொரிமதக்களிறுதேர் துரகந்தானையோ
டிரியல்கண்டரையரையிரங்கத்தாண்மிசை
வரிகயிற்கழலொடுவயங்குஞ்செவ்வியான். ருo

மெல்லிழைப்பட்டுடைவிரித்துடுத்துமேல்
வல்லுறவீக்கியமணிக்கச்சூடுகோத்
தெல்லுமிழ்சுரிகையானேந்தகட்டினிற்
கல்லணியுதரபந்தனங்கொள்காட்சியான். ருக

சந்தனங்கலவைகடதைந்துதண்பனிக்
கந்தநீரொழுக்கிமேற்கமழுந்தாதுறீஇச்
சுந்தரமணிவடந்துலங்கிவெற்பென
மைந்தமைந்தகன்றுபோர்மலேந்தமார்பினன். ருஉ

பொன்னேயுந்துகிலேயும்பொருவில்பண்டமோ
டென்னவுமிரப்பவர்க்கீந்துசேப்புறீஇத்
தன்னுடைத்தாளினிற்றாழ்வதல்லதோர்
மன்னடிதாழ்கலாமலர்ந்தகையினன். ருங

அளவறுவீரர்களெறிந்தவாய்தழு
மிளமயிலனேயவரெண்ணிலாரெலா
முளமகிழ்வுடனெறியொண்கணுய்தமுந்
துளேபடவுருவியதொங்கற்றேளினன். ருச

அடைந்தவர்க்கமிழ்துமாருயிருமாயடி
யிடைந்தவர்க்காலமுமெரியுமாகிய
சுடர்ந்தசெந்தாமரைதுணையுங்கண்ணினன்
மடந்தையருயிருணும்வதனத்திங்களான். ருரு

ஒளிர்கதிர்பிலிற்றுமொன்பதிற்றுக்கோள்களுந்
தளேயுறுத்தியதெனத்தயங்குபன்மணி
யளவறுவிலேயினவமைத்திழைத்ததோர்
வளமலியொருமுடிவயங்குசென்னியான். ருசு

அற்புதவுருவினனலகில்சீர்த்தியான்
றற்பணியுலகெலாந்தவிர்ந்ததேசினன்
பற்பலதீமையும்பரிந்தபண்பினன்
பொற்பமர்திருவெலாம்பொலிந்தசீரினன். ருஎ

இன்னவன்வரவிறும்பூதுபூத்துளே
னன்னவன்யாவனீயறைதியென்றலுங்
கன்னலேயமிழ்தொடுகலந்திட்டாலென
மன்னவன்மகிழ்வுறவசிட்டன்கூறுவான். ருஅ

கொச்சகக்கலிப்பா.

உரவுமணிக்கடலாடையொருமகளைப்புணர்ந்தோய்கேள்
பரவுபுகழ்கினைத்தரும்பூபதியுலகுசுவனென்பான்
விரவுமொருகுடைநிழற்கீழ்மேதினியெலாங்குளிர
விரவகற்றிக்குடியோம்பியினிதிருக்குமந்நாளின். ருகூ

கெடுகோட்புத்திரனுயிராகிரப்பினுல்வான்கதியில்
விடுமேன்மைப்புத்திரகாமேட்டியெனுந்தனியாகம்
வடுவீழ்த்தமுனிவரரைவளர்த்தருளவேயினு
னடுவேகப்புலனவித்தவந்தணருமதுபுரிந்து. ௬0

நுந்தைமனையாட்குதவநோன்மைசான்மறைமனுவான்
மந்திரித்தநறும்புனலைமணித்தசும்பினமைத்திருத்தித்
சந்திசெய்வானவர்நீங்குஞ்செவ்வியினிற்றனிவேந்தன்
முந்துறப்போய்த்தன்னியல்பின்முதுமரக்காட்டகம்புகுந்து. ௬௧

கரியுழுவைமரையுளியங்கவையமுயல்கவரியுழை
யரிபரிசல்லியம்வருடையவைமுதலபல்லபலவுஞ்
சரிகுடரினுடல்பதறித்தலைத்தலைவீழ்ந்துயிர்விளியப்
புரிதருவேட்டையினிளைத்துப்போந்தனனவ்வாச்சிரமம். ௬௨

கடுவினையநீர்வேட்கைகவற்றவறல்கிடையாமைப்
புடைவருவான்றனைநோக்கிப்பூரித்துமந்திரித்த
குடமெனவெய்யாததனைக்கொணர்மதியென்றவன்கொணர
விடவிழியங்காடுவதுமெண்ணுமற்கைச்சொண்டான். ௬௩

அதுதெரிந்துமந்திரித்தவறல்பருகல்பருகலெனக்
கதுமெனயான்புகுமுன்னங்கருமவசத்தான்மடுத்தான்
மதுமலர்த்தார்மனுவேந்தேமங்கைகலாடனக்கமைத்த
திதுமடுத்தாய்நின்வயிற்றிற்கருப்பமியைந்ததுவெனலும். ௬௪

படிதுளக்காதெழுப்புயத்திற்பரித்தயுவனுசுவனு
முடிதுளக்கியான்முடிகமுறையுளிசெங்கோலோச்சி
மிடிதுளக்குங்கான்முளையேவேண்டுமெனக்களிகூர்ந்து
கடிதுளிக்குந்தேங்கிளவிகட்டுரைக்குமமையத்தில். ௬௫

பருகாதபுனலகும்பிமுடைநாற்றம்பயின்றிருக்கு
மருவாருங்குழலியர்தம்யோனிவழிவாராது
திருவாழுமணிமருமச்செல்வன்மலருந்தியினு
லுருவாகிவந்தனமென்றுள்ளுமயன்றருக்கவிய. ௬௬

வெண்புனலுஞ்செம்புனலும்விரவாமலொருதூணின்
மண்புகழவந்தனமென்றிறுமாக்குமாயவனும்
விண்புகழுநினைப்போலவிளங்குமுயர்திலையிடத்தி
னண்புறுமத்திணைமுழுதாய்நண்ணிலமென்றழுக்கறுப்ப. ௬௭

தரையளித்துப்புகழ்பெருக்கித்தரியலரைத்தெறுநுந்தை
யரையர்குலந்தனைத்தோளினளித்தருளுமுதற்கடவுள்
புரையமணிமார்பகழ்ந்துபூத்தனைநீமன்னவனுந்
திரையுமணிக்கடலுலகினுயிர்வாழுஞ்செயலொழிந்தான். ௬௮

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குலத்தினுவன்றிநின்னைக்கொடுத்துயிர்விளிதரானு
நலத்தினுலுயர்ந்தநுந்தைநகைவலம்புரியையொத்தா
னிலத்திடையரசர்சென்னிமித்தலுமிதித்துநீயும்
வலத்தினியுயர்தலானும்வலம்புரிமணியையொத்தாய். ௬௯

அற்றைநாளண்டம்விள்ளவழுதனையதுகேட்டங்க
ணுற்றயன்பதினாறாட்டைப்பருவநிற்குதவிப்போகக்
கொற்றமார்குலிசத்தோன்றல்கூறுகிற்காப்பார்யாரே
தெற்றெனமொழிமோவென்றுசெப்பலுந்தாதாவென்றாய். ௭௦

ஆதலின்மாந்தாதாவென்றறைதரப்பட்டுஞாலந்
தீதறுசெங்கோலோச்சிச்செல்வனாய்வாழுநின்னைத்
தாதையுந்தாயுந்தானேயாகிநிற்றந்தவேந்தன்
காதலிற்காணப்போந்தான்காண்டியென்றியம்பிப்பின்னும். ௭௧

ஐயனேநுந்தைமார்பமகழ்ந்துநீபிறந்தநீரா
னெய்தியவெய்யபாவமிரித்திடுங்கழுவாய்வாய்ப்பப்
பொய்யறுமேன்மைசான்றபுண்ணியவரைப்பிற்போந்து
செய்யபொற்சடையான்பூசைசெய்திடவேண்டுமென்றான். ௭௨

என்னுடைக்குரவநன்றேயியம்பினையெறிநீர்க்கங்கைப்
பொன்னவிர்சடையான்பூசைபோற்றுதற்குரியர்யாவ
ரன்னவன்பூசையெந்தவாற்றினாற்புரிவதென்று
மன்னவன்கடாவவாசான்மயரறவிறுக்குமன்றே. ௭௩

பரவுமான்மார்த்தமோடுபரார்த்தமென்றிரண்டாம்பூசை
மருவியெல்லாருஞ்செய்தற்குரியதான்மார்த்தபூசை
யிருமையுமுரியவாகுமெழிற்சிவதீக்கைசேர்விப்
பிரர்தமக்காகமங்கள்பேணுறும்வழியாலென்றான். ௭௪

இன்னணம்விதந்துகூறுங்குரவனையிறைஞ்சியேத்தி
யன்னணம்பூசையாற்றுமார்வஞ்சென்றீர்பபவேகி
மின்னணங்கெழில்சேர்மாடவியன்றிருக்காஞ்சிமூதூர்ப்
பொன்னணங்கிவருந்தோளான்புகுந்தனன்மகிழ்ச்சிபூப்ப. ௭௫

அந்தணர்பயின்றுவாழவம்பொன்மாளிகைகளாக்கிக்
கந்தமார்தடங்கடொட்டுக்கடிமலர்ப்பொதும்பர்வைத்துப்
பந்தநோயறுக்குமுக்கட்பரன்பணிபலவுமாற்றுஞ்
சிந்தையினுவகைபொங்கத்திருத்தகமுடித்தபின்னர். ௭௬

இட்டசித்தியினீராடியெம்பிரான்கச்சபேசத்
தெட்டுருவுடையபெம்மானிலிங்கமொன்றிருவியங்க
ணுட்டவழார்வம்பொங்கவுறுமுறைவழாதுபூசை
பெட்டன்னியற்றிக்கண்ணீர்பெருக்கினன்பழிச்சிநின்றான். ௭௭

ஆயிடைவானிலண்ணலருளினோர்வாக்குநுந்தை
தூயவான்றுறக்கம்புக்கான்றுகளறுபயனீபெற்றாய்
காயும்வேலரசவென்றுகாதுறவெழுதலோடு
நாயகன்கருணைபோற்றிநயத்தகுவாழ்க்கைபெற்றான். ௭௮

இவ்வகையினுமாங்கணெண்ணிலவரங்கள்பெற்றோ
ரவ்வெலாமுற்றக்கூறலெம்மனோரளவைத்தேயோ
வெவ்வநோய்ப்பிறவினாறுமித்தகுமந்தர்வேதித்
தெய்வதவரைப்பின்வைகப்பெறுநரேசிவத்தைச்சேர்வார். ௭௯

ஒளிவளரந்தர்வேதிச்சிறப்பெடுத்துரைத்தல்செய்தாங்
களியுறுதண்டவேந்தாற்காமைமாங்காஞ்சிதன்னைத்
தெளிமதியணிந்தவேணிச்சிவனருள்வாய்ந்தசீர்த்தி
வளர்கலிகாலன்முன்போல்வளநகராக்கல்சொல்வாம். ௮௦

அந்தருவேதிப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௭௮௭.

---

## 67. நகரேற்றுப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆறுசூடியவேணிநாதரமர்ந்தகச்சிநகர்த்தலை
வீறுதோற்றவதிந்துகாவலவிளைத்தவேந்தர்களெண்ணிலார்
கூறுமன்னவர்தம்முளோராகுலமன்னவன்குறுகார்தமை
யீறுசெய்திடுதண்டனென்பவனேகவாணைசெலுத்துநாள். ௧

ஒருதினந்தனில்வேட்டையாடியவுன்னியில்வயின்முற்றுறுங்
கருமநன்குமுடித்தபின்புகமழ்ந்தவுண்டிநுகர்ந்துபூ
மருவிலாவியகுஞ்சியம்பொனமணிக்கயிற்றினிறுக்கியாத்
தரையின்வார்கடர்ககச்சுவீக்கியடிககிருங்கழல்சேர்த்தனன். ௨

வில்லுமம்புமிலங்குவேலுமிளிர்ந்தவாள்களுமாழியு
மொல்லையோடியொறுககுநாயுமவலைக்குலங்களுமூரியும
பல்லியங்களுமெல்லையிலலனபௌவமென்னவளைந்துற
வல்லியம்புரைமன்னராதியர்வந்துவாய்தனெரிந்தனர் ௩

வேதவேதியரங்கையாம்விரைசூழ்ந்தகஞ்சம்விரிந்திடச்
சோதிநீண்முடியேந்துவேந்தர்துணைக்கைமாமலர்கூம்பிட
மாதரானனவம்புயங்கண்மலர்ந்துநாணிவணங்கிடப்
போதுவெங்கணையாளிமிஞ்சுபுழுங்குபொற்பினனேகுவான். ௪

ஒருதிசைக்கடலொருதிசைககடலோடுசேர்குவதொப்புறக்
கரிசறுததிடுகாஞ்சிமாநகர்கடிதுநீங்கியோர்கானினை
யரசர்சூழ்தருதண்டனேகியதன்புறத்தினிலெங்கணும்
புரசைமாலகரிதேர்கண்மற்றுமிரீஇப்புகுந்தனனுள்ளரோ. ௫

செற்றிமான்குலம்வைகுமெல்லைதெரிந்துவம்மினெனச்சொலி
யொற்றர்தம்மைவிடுப்பவன்னவரோடியெங்கணுநோக்கிவந்
தற்றமின்றியுறந்தசூழலுரைப்பவவ்வுழியேகினன்
வெற்றிவார்சிலைநாரியேற்றினன்வெய்யவாளிதெரிந்தனன். ௬

கலைகளாதிதிரண்டுசெற்றியகானமுற்றியடுத்தனர்
வலைவளாவினரொடியெறிந்தனர்வாரொழுக்கினரொய்யெனக்
குலைகுலாவுசுணங்கனேவினர்குரையியங்களியம்பினர்
சிலைவலாருருமென்னவார்த்தனர்சென்றுமாக்களெழுப்பினர். ௭

மானெழுந்தனவல்லியங்கண்மறங்கொதிப்பவெழுந்தன
யானைபாய்ந்தனவெண்குபாய்ந்தனயாளிபாய்ந்தனவார்ப்பொடு
கானமேதிபெயர்ந்தபல்கவயங்களன்றுபெயர்ந்தன
வேனைமாக்களுமெங்குமெங்குமெழுந்தெழுந்தகுதித்தன. ௮

வில்வளைத்தனர்வாளிதொட்டனர்வேலெறிந்தனர்கூற்றெனப்
பல்வகுப்புறுசூலமோக்கினர்பாசம்வீசினர்பற்பல
மல்வளைக்குலம்வாங்கிவிட்டனர்வச்சிரத்தடியோச்சினார்
சொல்விளைத்திடுவாள்கள்கொண்டுதுணிக்கலுற்றனர்மீளிகள், ௯

கால்குறைப்பனசென்னியீர்வனகாதிறுப்பனநீண்டுதாழ்
வால்குறைப்பனகண்கள்சூல்வனமார்புகீழ்வனவன்மைசா
லோல்கிழிப்பனதுண்டம்வீழ்ப்பனசோரிவீழ்ப்பனதுண்ணென
மேலெழுந்துகுதிக்குமாக்களின்மீளியோர்விடுமாய்தமே. ௧௦

இரிந்துவீழ்வனசீறிமுன்னரெதிர்ந்துவீழ்வனவோவெனப்
பரிந்துவீழ்வனவாடிவீழ்வனபாய்ந்துவீழ்வனகண்ணினீர்
சொரிந்துவீழ்வனவேங்கிவீழ்வனசுற்றிவீழ்வனநீள்குடர்
சரிந்துவீழ்வனமீளியாய்தமடர்ந்துசாடியமானினம். ௧௧

வாலடித்துமயங்கிமாய்வனவாய்பிளந்துயிர்மாய்வன
கால்துதைந்துகறங்கிமாய்வனகண்சுழன்றுயிர்மாய்வன
சாலநாக்கள்கடித்துமாய்வனதலைதிரித்துயிர்மாய்வன
கோலமெய்கள்பதைத்துமாய்வனகுன்றிமண்விழுமாக்களே. ௧௨

வேறு.

பல்லியமெங்குமொலித்திடப்பற்பலநாய்கள்வளைத்திட
வில்லிடைமீளிகளெய்தகோன்மெய்யுருவுஞ்சிலமாக்குல
மொல்லையெதிர்ப்படுதம்மினத்தொன்றனையொன்றிதுவேகொலா
மல்லல்விளைத்ததெனச்சினவடலொடுபற்றியடர்ப்பன. ௧௩

மருண்டெழுகின்றவயப்புலிவந்தெதிர்மான்கலைவெளவில
வெருண்டெழுசிங்கமதக்கயம்வீத்திலவேனவுமின்னவே
தெருண்டொருமும்மைமலங்களுஞ்சீறியமாதவரொத்தன
விருண்டுவளம்படுகானிடையிரிதருமத்தகுழாக்குலம். ௧௪

அம்புதைவெம்புலிதம்மெதிரார்ந்தகிலுத்தநெடுந்தருத்
தம்பழமானிடநேர்வதுதன்னைமுன்னேக்கியலைத்திடும்
வெம்பகைமானிடர்போன்மெனவெகுண்டுபுடைத்துநிலத்தினிற்
பம்பவுகுத்துயிரொய்யெனப்பாறுவவெங்கணுமெங்கணும். ௧௫

கைம்மலிவேடுவளர்த்திடுங்காளையர்வாளிதுளைத்தலு
மொய்ம்மகண்மாக்குலமையெனமூர்ச்சனையாயினசேணிடை
மெய்ம்மலிசோரியலைத்தெழவீழ்வனகண்டுவனத்துவாழ்
மைம்மலிகண்ணியரோவெனமாழ்கியிரங்குகின்றார்சிலர். ௧௬

உளியமுமேதியும்யானையுமுருமொலிசெய்கருமான்களு
நெளியநெடுங்கணைகீழ்ந்தபுண்ணெருப்புறழ்சோரிலைத்துக
வ[illegible]னிரிந்துகுழாங்கொடுமண்டியதிர்ப்பனகோன்றிரு
விளைவதுகாட்டுகெய்த்தோர்மழைவீசுமுகிற்குலமொத்தன. ௧௭

வலையறநூறிவிரைந்துசெல்வன்றிகண்மன்னவனேவிய
கொலைகெழுவாளிதுளைத்துவிழ்கொள்கைதமாதுகுலத்தவர்க்
குலைவுறுபேரிடருற்றழித்தம்முயிருய்திறநாடுவோ
ரலைகடல்வைப்பினிலொய்யெனவழிவுறுபெற்றிதெளிக்குமால்.

அரசெனவோர்பெயர்பெற்றதனரியசெயற்கையையுந்தொழிற்
புரவுசெயாதுவிலங்கெலாம்பொன்றவிளித்துநுகர்ந்திடும்
பரிசுநினைந்துவெகுண்டெனப்பாழியிரும்புயமன்னவன்
விரவுமடங்கலனைத்தையும்வெங்கணைதூண்டியிறுத்தனன். க௯

கவளமளித்துயிர்போற்றமைக்காத்தருள்பாகனையுங்கொலுந்
தவறினவென்றுமுனிந்தெனத்தந்தியனைத்துமடித்தன
னிவறிமறைந்துவதிந்துபாய்ந்தெவ்வெவையுங்கொலைசெய்துறு
மவ்வமுறுவீரம்வெறுத்தெனவடல்கெழுவேங்கைசெகுத்தனன். உ0

இன்பமளிப்பனபோலுடலெங்கணுநக்கியிறும்படி
துன்பமளிப்பனவாமெனச்சூழ்கவயங்கள்குமைத்தனன்
வன்பினிறுங்கொலையேபுரிமறலியினூர்தியினங்களென்
றன்பறுவன்கருமேதிகளாவியழுங்கவிளித்தனன். உக

மேலுமருந்திறல்வேட்டையின்மேயினனாடவிலங்குகள்
சாலவுயிர்க்கும்வித்தாகெனத்தப்பவிடுப்பதுபோற்கமஞ்
சூலுடைப்பன்மிருகங்களுஞ்சூழிளம்பருவத்தவு
மாலுறுநோயுடைமாக்களும்வன்கொலைசெய்திலன்விட்டனன். உஉ

கலிநிலைத்துறை.

இன்னவாறுவளர்ந்தெழுவேட்டைமுடித்தபின்
மன்னர்மன்னன்வளம்பதிகெய்தியவெண்ணினா
னன்னவேட்டையினாடியிளைத்தவயர்ப்பினாற்
றுன்னிநீர்நசைமிக்குவருத்தந்துவன்றினான். உ௩

வேட்டைமீதிலெழுந்தமறக்கனல்வெய்தெனக்
கூட்டுண்டாலெனநாவினிலூறுகுளிர்ச்சியும்
வாட்டமுற்றதுவாயும்வறன்றதுவாலொளி
யீட்டுமூரல்கரிந்தகுழிந்தனவேர்விழி. உ௪

இருந்துநீர்நசைகண்டவர்சிற்சிலர்திக்கெலா
மிரிந்துநேடினரீர்ம்புனல்காணலர்மீண்டனர்
வருந்துவேந்தனுமென்மெலவேகுழிமாதவம்
பொருந்துபார்க்கவநன்முனிவைகிடம்புக்கனன். உ௫

ஆயகாலையருங்குசையாதிகொணர்ந்துறப்
போயமாதவன்மீண்டிலனாகப்பொலங்கொடித்
தூயபன்னிவிருந்துதுனைந்துதொகுத்தனண்
மேயமன்னனுயங்குவருத்தம்விளிந்ததே. உ௬

தேமொழிக்குயிலன்னவள்செய்தவிருந்தினு
னாமநீர்நசைநீங்கியபின்புவிநாயகன்
றூமநீள்குழல்கட்டெழில்கண்மலர்சாத்தினான்
காமநீர்நசையுள்ளங்கவற்றவெதும்பவான். உ௭

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பற்பலவைகளூறும்பருகிடப்பட்டுவிம்மித்
தற்பெருவயிறுவாட்டத்தரிக்கிலதாகிச்சீதப்
பொற்பமர்வதனத்திங்கள்பொருக்கெனவெளிக்கான்றிட்ட
விற்பொலியிருளேயென்னவிளங்கியகுழலின்சீரும். ௨௮

வெருள்படத்தன்னைநாளும்விளித்திடும்பகைமைநோக்கி
யிருளினந்தொடர்ந்துதாக்கவிளம்பிறைக்குழவியோடிப்
பொருள்படுதனக்குத்தாயாம்புணரியிற்சேறலேய்ப்பச்
சுருள்படுகுழல்கணப்பட்சுடர்ந்தவாணுதலின்சீரும். ௨௯

போக்குறுபுரிசைமூன்றும்பொடிபடுத்தருளும்பெம்மான்
றீக்கொடும்பகழிகோப்பவாசுகித்திருநாண்வீக்கு
மேக்குயரிமயவில்லுநாணுறவிழிகளென்னு
மேக்குலநாணின்றெய்யும்புருவவிலிலங்குசீரும். ௩௦

பொருந்துபோர்க்களத்திற்போந்தும்பொருவலார்விலக்கித்தப்பும்
பெருந்தவருடையவாளிபீடறவாவந்தூங்க
விருந்துழியிருந்தவாறேயிளைஞர்தம்முயிரைத்தப்பா
தருந்திமீட்டுமிழாவாகுமயில்விழிக்கணையின்சீரும் ௩௧

தொழினனிதிருந்தும்வண்ணஞ்சுடர்ந்துவில்லுமிழ்பொன்மாமைக்
கழிநிறககுமிழ்ம்பூமுன்னர்ப்படைத்துக்கைபழகிப்பின்னர்
வழிமதுப்பிலிற்றிச்சீர்க்கும்வட்டவாய்க்கமலப்புத்தே
ளிழிவறவருந்திச்செய்தவெழில்குலாமூக்கின்சீரும். ௩௨

சேயிதழ்த்துவருமூரற்றெள்ளொளிமணியுஞ்செவ்வாய்ப்
பாயிதழாம்பற்போதும்படர்விழிக்குவளைப்பூவு
மாயிருங்குழைசேர்காதுவள்ளையுங்கவினப்பூத்த
தோயுநீர்நிலையேயென்னச்சுடர்கவுட்டுணையின்சீரும். ௩௩

எண்ணிலாருயிருமுண்ணப்பட்டுறைவிடமாமாற்றூற்
கண்ணெனவொருபேர்வாய்ந்தகடுங்கொலைவிழிவேலோடி
விண்ணமுமழியாவண்ணம்வெய்யகூர்முகத்திலிட்ட
திண்ணியதடையாய்வைகுந்தேசிகச்செவியின்சீரும். ௩௪

வளங்கெழுகூந்தலென்னும்வார்மணிக்கலாபமின்ன
வுளங்கவர்பன்னியென்னவொளிர்ந்தபூம்பசியமஞ்ஞை
துளங்குறுகுலிகப்பட்டின்றுணிநிகர்கோபம்வவ்வி
விளங்கியாங்கழகுபூத்துவில்லிடுமதரச்சீரும். ௩௫

ஒள்ளியவதனத்திங்களுடனமர்கலவியாற்றுங்
கள்ளிவர்குமுதமென்னக்கதிர்த்தவாயழகுந்திங்கட்
டெள்ளியவமிழ்தந்துள்ளித்தெறித்துவீழ்திவலையாம்ப
னள்ளிடைவிறந்தாலன்னநகைமணியொளிருஞ்சீரும். ௩௬

பெற்றவர்குணங்கடத்தம்பிள்ளைபால்விரவுமென்னு
மற்றமிலுரைவாயாகவமிழ்தொடுநஞ்சுகாலு
மெற்றுநீர்த்தரங்கவேலையின்றெழுவதனத்திங்கள்
சொற்றணியமிழ்தோடுண்கட்கடுவிடங்கொழிக்குஞ்சீரும். ௩௭

இளிவருயோனியாக்கையிறையிடத்திருப்பநாணித்
தெளிநிதிக்கஞ்சமீண்டுத்திருமுகமென்னமாறி
யொளிதரவளையுமவ்வாறுணர்ந்ததனருகுபோந்து
களிவருசிறப்பின்வைகியனையவொண்கழுத்தின்சீரும். ௫௮

முக்கணனெரித்தஞான்றுமுனைத்தவேள்கொடியிலேற்று
மிக்கசீர்மகரமீனும்வெஞ்சிலைக்கரும்புந்தப்பித்
தொக்கசீரிவள்பாற்சேமத்துணையொடுஞ்சரணமாகப்
புக்கினிதமர்ந்தாலென்னக்கூர்ப்பரம்புயத்தின்சீரும். ௫௯

ஆதனமாகிநாளுமயன்றனைப்பரித்துந்திங்கட்
கேதமுற்றஃகாவண்ணமீந்திலனென்றுநீத்துப்
பேதைதன்கரமாய்க்கஞ்சம்பெருந்தவப்பணிகளாற்றி
மாதர்வெண்மதிக்குக்கூம்பாவளமைபெற்றிலகுஞ்சீரும். ௬0

கயத்தினுளெழுந்துபூத்தகடிமலர்க்கமலந்தாமே
வியத்தகுகரங்களென்றுவிழைதகவிளக்கவந்தப்
பயத்துறுகளிற்றுமீன்கள்பத்தியிற்செறிந்துநின்று
நயத்தகவிளங்கியாங்குநலங்கெழுவிரலின்சீரும். ௬௧

அதிர்த்துவண்டுளருங்கூந்தலரக்கெறியரிக்கட்பன்னி
யெதிர்த்துவந்திசைவாதாடுமிருங்கிளிவாயைப்பற்றி
விதிர்த்திடவொடித்துவென்றவெற்றியைத்தெரிப்பான்கையிற்
கதிர்த்தநீள்விரல்வைத்தென்னக்கவினியவுகிரின்சீரும். ௬௨

வண்சிறைச்சகோரப்புட்போன்மதியமிழ்துண்ணவேட்டுத்
தண்செறிவதனநோக்கிச்சந்திரனெனக்கிட்டெய்தி
யொண்சிறைநேமிப்புள்ளுத்துணையொடுமுறைவதேய்ப்பக்
கண்செறிதலைமேனோக்கிக்கதிர்த்தபூண்முலையின்சீரும். ௬௩

மாலினைச்சுமக்கலாற்றாதுடைநதெனவடமுந்தீம்பால்
வேலைவார்திரையுமின்னன்மடிவரைவயிறுய்மேவி
யாலியவனப்புமன்னனைஃதறிந்தணைந்தவற்றின்
மேல்விழிவளர்ந்தகாட்சிவீழ்மயிரொழுங்கின்சீரும். ௬௪

கவினதிநீத்தம்வீசுங்கதிர்த்திரைமடிகளாகக்
குவிமுலைமொக்குளாகக்கொட்புறுசுழியிற்றோன்றிப்
புவிநிறையுயிரையெல்லாம்புகுத்தினுந்தூர்த்தல்செல்லா.
திவறிவிண்ணுயிரும்வாங்கவிடங்கொளுமுந்திச்சீரும். ௬௫

முடிமுலைமுரசமல்குன்முழுக்குடைமுகம்வில்வார்த்தை
வடிகணைமேனிகைகான்மதர்விழிநகைமால்யானை
நெடியபூங்கூந்தலாக்கிநெடுந்தகைப்பெருமாற்கஞ்சிக்
கொடியவேளுருவுமாறுங்கொள்கைநேர்மருங்குற்சீரும். ௬௬

அடர்சிறைப்பசியமஞ்ஞையச்சமுற்றணுகல்செல்லா
விடமிதென்றியலுநாசியெனப்படுங்காமரூபி
வடிவமுநோக்கியங்கண்வாளராக்கவற்சியின்றிப்
படம்விரித்தமர்ந்தகாட்சிபடைத்தகலல்குற்சீரும். ௬௭

கொழுமடன்மலர்களார்ந்தகொடியகம்புரையுமல்குல்
வழிமதக்களிநல்யானைமத்தகத்தியற்றும்வேதன்
செழுவுமத்தகத்துக்கேய்ந்ததிரண்மணிக்கரமுமாங்குப்
பழுதறவகுத்தாலன்னபட்டொளிக்குரங்கின்சீரும். ௪௯

கலம்படுபாவையல்குற்கதிர்மணிப்பணியையஞ்சி
நலம்படுதன்பாற்றஞ்சநண்ணியகணைக்காலென்னுங்
குலம்படுவரான்மேற்பாந்தள்குறுகிடிற்றுணிப்பவுன்னி
வலம்படுமலவன்முன்னுய்வதிங்கெனமுழந்தாட்சீரும். ௪௬

வேட்டவர்முடியிலேறுமேன்மையானிகர்க்குமேனும்
பாட்டளிமூசியூறுபடுத்திடவாடலானு
நாட்டங்கள்புதைக்குங்கங்குனகைமுகங்கூம்பலானுந்
தோட்டலர்க்கமலந்தாழ்க்குந்துணையடிக்கமலச்சீரும். ௫0

மாந்தளிர்க்குலமீதென்னமதிப்பவர்க்கஃதேயாயுந்
தேந்தளிர்ச்செயலையென்னச்சிந்திப்பார்க்கஃதேயாயுங்
காந்திகொள்கனகமென்னக்கருதுவார்க்கஃதேயாயும்
பூந்தழைக்கடுக்கைஞானப்பொருணிகர்மேனிச்சீரும். ௫௧

இருளெலாங்குழுமிநீண்டதெனமருளளசமாகக்
கருமுகிற்குழாத்தைப்பற்றிக்கண்டநாட்டுவெற்றுந்தீங்கட்
டிருமலர்ப்புத்தேளந்தச்செல்லிடைத்தடித்தைவாங்கி
யுருவெனச்செய்தாலென்னவுருவளர்நுடக்கச்சீரும். ௫௨

ஓங்கியவிருள்கால்சீக்குமொளியுமிழ்கனகக்குன்ற
மீங்கிவையென்றுகொம்மையிளமுலைப்பாரநோக்கி
வேங்கையம்போதுபோர்த்துவிராவிதின்றெளிர்வதேய்ப்பக்
கோங்கனமுலையிற்பூத்தகோமளத்திதலைச்சீரும். ௫௩

தனித்தனிகண்களென்னுந்தடங்கையான்மொண்டுகொண்டு
மனத்திடையமையாக்காதல்வளர்தலாற்றண்டினென்பான்
கனைத்துவண்டிமிருங்கூந்தற்கற்புடைப்பன்னியுள்ளும்
பனித்துறவலிந்துசெங்கைபற்றினனீர்தல்செய்தான். ௫௪

துன்றியவருத்தமோம்பித்தொலையுயிர்நிறுவிக்காத்த
நன்றியுநோக்கான்கற்புநலிவிக்கும்பழிபாவங்க
ளொன்றையுநோக்கானேற்குமுத்தமத்தலத்தார்மேன்மை
யென்றியுநோக்கானந்தோவிதியினையெவரேவெல்வார். ௫௫

அடங்கருஞ்சீற்றத்துப்பினரியினத்துயர்ந்தவேற்று
மடங்கலொன்றண்மிப்பற்றுமடப்பிடியென்னநெஞ்சி
னிடங்கொளாவெருட்சியீண்டியிருசரண்கரந்தள்ளாடித்
தடங்கணீர்சொரிந்துபன்னிதளர்ந்துடல்பதறுமெல்லை. ௫௬

தருப்பைகளாதிகொண்டுசார்தருமுனிவன்கண்டா
னெருப்பெனவெகுளிதுள்ளநீண்டுவார்புருவங்கோட
வுருப்பொலிவிழிகள்சேப்பவுலகெலாம்வெருவவேதத்
திருப்பொலிபவளச்செவ்வாய்துடிப்பமற்றிதனைச்சொன்னான். ௫௭

நலிவறுகற்பினுளைநச்சியதண்டாவின்னே
யலியுருவாகநீமற்றவாவிமேற்செல்லுகின்னே
மெலிவறவிலக்காவிட்டவமைச்சனும்வேடனுக
வொலிகெழுசெல்வமெல்லாமொழிகவென்றுறத்தான்சாபம். ருஅ

கொங்கெரிவனைக்கப்பட்டகுஞ்சரக்குழாமைக்கென்னச்
சிந்தையிற்றுயரநீடித்திருத்தகுமுனிவன்றாளில்
வந்தனைபுரிந்துசிந்துமேதனுமன்னன்றானு
மெந்தைநீபொறுத்தல்வேண்டுமென்றனரிரத்தலோடும். ருகூ

விழைந்தவிப்பிழையானீயிர்விழைந்துறைதாஞ்சிவைப்பு
மளந்தறிவருஞ்சீர்த்தீர்த்தஞ்சிவாலயமன்றியெல்லாம்
வளர்ந்தபநெடுநாட்காடாய்மன்னிமற்றதனைக்காப்பா
னிளந்தனித்திங்கள்சூடுமெம்பிரானருளினாலே. கூ௦

விறற்கலிகாலன்சோனாட்டவதரித்தீண்டுமேவுந்
திறற்படையவனைக்காணிற்றீருமிச்சாபமென்றவ்
வறப்பெருமுனிவனில்லாளெரியுடனங்கணீங்கி
யுறற்கரும்பனிசூழ்பொற்கோட்டோங்கலையடைந்தானன்றே. கூக

வலியினாற்பிறர்தாரத்தைவவ்வினரும்மையிம்மை
யலியுருவாவரென்னும்பழமொழியவலங்கூரப்
பொலிவருமற்றைநாளேயலியுருப்பூண்டான்மன்ன
னலிவுசெய்வேடயாக்கைநண்ணினனமைச்சன்மன்னே. கூஉ

வேள்வியுந்தவமுங்தூயவிருந்துமீகையுமேதக்க
கேள்வியுந்திருவும்வாய்மைக்கிளர்ச்சியுநன்மைசான்ற
தாள்வினைத்திறமுமென்றுந்தணப்புறுக்காஞ்சிதானு
நீள்விரைப்பொதும்பர்மல்குநெடுவனமாயிற்றம்மா. கூரு

வேறு.

கடியிணங்கியகாவுங்கமலவாவிகண்முற்றும்
படருமொண்புனல்யாறும்பறவைவெண்மணற்குன்றுங்
கொடியிணங்கியமாடக்குமரிமேனிலவைப்பு
மடமடங்கியராடும்வளமொடுங்கினமாதோ. கூச

பந்தமீர்கலைதேரும்பட்டிமண்டபமோடு
முந்திவானவர்வைகுமூரிமண்டபமன்ன
ரந்திநண்பகல்காலையமருமண்டபமெங்கு
மைந்தரண்மிநெருங்கும்வனப்பிறந்தனமன்னே. கூரு

பாடலோம்பினமாதர்பண்பினுடவர்தம்மோ
டேடலோம்பினவவருமுருகிவந்தடிதாழ்ந்து
கூடலோம்பினகூடுங்கோதிலின்பப்பெருக்கி
னீடலோம்பினவெங்குநிரந்தபள்ளியிடங்கள். கூகூ

அட்டில்வாய்ப்புகைவீந்தவரிவைமார்குழலேற்று
மட்டுலாம்புகைவீந்தமாடமாளிகையூட்டி
முட்டிவார்புகைவீந்தமுறையினருதிச்செந்தீப்
பட்டபூம்புகைவீந்தபைம்பொன்மாமனையெங்கும். கூஎ

வரவெதிர்ப்பவர்மாண்பும்வரைவுசெய்பவர்மாண்பும்
புரவுபூணுநர்மாண்பும்புகழ்விளைக்குநர்மாண்பு
மிரவுதீர்ப்பவர்மாண்புமியலுமாதவர்மாண்பும்
பரவுபத்திமைமாண்பும்பலவுமாறினமன்றே. சுஅ

விழாவிழுந்தனதக்கைவெம்புதண்ணுமைபம்பை
முழாவிழுந்தனதேவர்முனிவர்மானுடர்கூடுங்
குழாமிழுந்தனசின்னங்கோடுதீங்குழல்வீணை
யெழாலிழுந்தனவென்பமறுகுவீதிகளெல்லாம். சுகூ

வேதமோதுநயப்பும்வேள்விநல்வினையாற்றி
யேதமீருநயப்புமிறைவனின்னருள்கூருங்
காதைகேட்குநயப்புங்கண்ணுதற்பெருமான்பொற்
பாதமேத்துநயப்பும்பரிந்தவேதியர்வீதி. எ0

வெற்றியானைகள்போரின்வெகுளமூட்டும்வனப்பும்
பொற்றநீண்மணித்தேர்கள்பொருதவுந்துவனப்புங்
கற்றவைங்கதிமாக்கள்கலாம்விளைக்கும்வனப்பு
மற்றுமற்றனவீரமன்னர்வாழ்மணிவீதி. எக

மதலையிற்பொருள்வந்தவாங்குமோதைவியப்பு
மெதிரிரும்பொருள்வங்கமேற்றியுய்க்கும்வியப்பும்
பதியினுள்ளவர்கொள்ளப்பாத்துவிற்கும்வியப்புங்
கதுவுமற்றைவியப்புங்கழன்றநாய்கர்தெருக்கள். எஉ

பகடுபோற்றுமிசைப்பும்பண்ணையிற்பொலிபைங்கூ
ழகடுவாய்ந்தமகத்திறைக்குமன்பும்விருத்தி
னிகலில்காட்சியர்தம்மையினிதுபேணுஞ்சிறப்பு
மகலநீங்கினபின்னோரமர்ந்துவாழ்திருவீதி. எங

வேறு.

வெண்ணிலாவிளம்பசும்பிறைக்குழவியின்விரிசுடர்ச்சடைக்கற்றை
யண்ணலாருமையுடனமர்கச்சிமாநகர்வயினமர்கின்றோ
ருண்ணிலாஞ்சிவமுறுவதோர்ந்தாயிடைத்தானுமோர்தவமாற்ற
நண்ணிறுலென்வெழுந்ததுவிரைகுலாய்நறைபொழிமுதுகானம். எச

கடுத்துழாவியகருமிடற்றிறைவர்தங்கழறொழுபெருங்காத
றொடுத்தகொள்கையினித்தலுங்காஞ்சியந்தொல்லைமாநகர்வாழ்க்கை
விடுத்திடாதமால்செயலறிந்தவன்றனித்தெய்வதமெனமேவி
யடுத்ததானுமங்கணைந்ததேபோலுமிக்கடர்ந்தெழுபெருங்கானம். எரு

எழுந்ததம்வலிகாளியாலழுங்குவித்திடுதலினிகல்கொண்டு
கொழுந்துவெண்மதிமிலைச்சினார்திருநகர்குலைப்பமீட்டுடன்றோங்கி
யழுந்துபட்டபல்கடல்களும்வளைந்ததுமாகும்பன்னிறப்போதும்
விழுந்துவண்டினமுழக்கவாய்விள்ளமேனிமிர்ந்தெழுகருங்கானம். எசு

கரிதிளைத்துவாழிடந்தொறுங்கரிகளைகருதலர்சிரங்கோட்டும்
பரிதிளைத்துவாழிடந்தொறும்பரிகளைபயிலியகலைகோட்டும்
பெரியமேதிவாழிடந்தொறுமேதியேபிறங்கிவாழ்ந்தனவம்மா
வுரியதத்தமதினம்பிரிவிடமெனவுறவுகொண்டிடுமாபோல். எஎ

அரசுவீற்றிருந்தாண்டமாளிகைதொறுமரசுவீற்றிருந்தருளுங்
கரிசில்காட்சியிற்கணிகள்வாழிடக்தொறுங்கணிகளெண்ணிலவாழுந்
தரைபராவுசீர்த்தளிதொறுஞ்சம்புவைச்சம்புவேதொழுதேத்தும்
விரிதுழாயணியரிபயிலிடந்தொறுமரியினம்விராய்போற்றும். எஅ

கொடிநிலாயெழுந்தாடுகோபுரந்தொறுங்கொடிநிலாயசைந்தாடுந்
தொடருமன்பர்மெய்ப்பணிவளரிடந்தொறுஞ்சுடர்மணிப்பணிவாழும்
விடுகதிர்ப்பொலங்காஞ்சிவைப்பிடந்தொறும்விரைத்தகாஞ்சிகணீடும்
படருமம்புலிதவழுமேடைகடொறும்பாயுமம்புலிமல்கும். எகூ

இருண்டகார்விடமயின்றவர்க்கலரெடுத்துதவயாவருமின்மை
தெருண்டுதாங்களேயுதவுவானனேந்தெனச்சிவபிரான்றளிச்சுற்றி
னுருண்டகாய்பசுங்கூவிளமுல்லையொண்குமிழ்மகிழ்வழைகூந்தன்
மருண்டதீங்கனிகொன்றையாதிகளெலாமன்னிநின்றலரூழ்க்கும். அ0

தங்கண்மெய்ப்படுமுறுப்பினைமேதகத்தழீஇயதுதனைநோக்கிப்
பொங்குநட்புமேல்கொண்டனேந்தாலெனப்பொருவிலாவணந்தோறுங்
கொங்குவிம்முபூங்குங்குமஞ்சந்தனங்கோழரையகில்வாச
மெங்குமொய்த்தெழுங்கப்புரமிலவங்கமேலமாதிகள்சூழும். அக

காடெலாமரசாட்சிசெய்தாமரைக்கண்ணனைப்புதுக்காறு
நீடுதோரணம்வைத்தெனநிரைபடநிலைஇயபன்மரந்தோறு
மூடுபோந்திணர்ப்பசுங்கொடிபடருமவ்வும்பணுங்கரசெய்தும்
பீடுபோன்மலர்ப்பூவைகணிலவிடும்பெட்புறவிடந்தோறும். அஉ

எழில்செய்தம்முடையுறுப்புநேருறுப்புடையேழையர்தமைக்காண
விழையுங்காதலிற்புரைகிளைத்தாலெனவியன்மனைத்தலைதோறும்
வழியுமும்மதக்களிற்றொடுபிடிகளும்வடந்திகழரிமாவு
முழையும்வைகலுநுழைவனபயில்வனவுழிதருவனமன்றே. அங

துளிவிராவியதேனைமாரியிற்பொலஞ்சுடர்விடுதிருமேனி
யளியினட்டுபுகுராங்குசாலைகயினிலையறுவையாமேலொற்றி
நளிமலர்த்திரடேஉய்நறும்பழவுணாநல்கிநீண்மாக்காலுந்
தளிதொறுஞ்சிவலிங்கபூசனைதினந்தகைபெறப்புரிகிற்கும். அச

படியின்மேதகுமாயிடைமுன்குலாம்பல்லியத்தொகைபோல
நெடியயானைகளுலம்பியசும்மையுநிரைபடுமரியேற்றி
னிடியினார்த்தெழுமுழக்கமும்வேய்ங்கைகளிரங்குமோதையுமல்கி
விடியனண்பகன்மாலையெக்காலமும்விராயெழுமிடந்தோறும். அரு

கொம்பினூழ்த்தலர்மலர்களினிழிந்துவார்குலநதியெனவோடும்
வம்பறுதபூந்தேறலைப்புனலெனமடுத்துளர்மக்கண்மாக்க
ளம்பொனாலயத்தூணினுண்பாவையையாடவரெனச்சால
நம்பிநோக்கியநோக்குமாறுவதனலந்தெரித்திடுமோபோல். அசு

நீண்டவேய்நரான்றுக்கபன்முத்தமுநெடும்பகையரிதாக்க
மாண்டயானையின்மத்தகங்கீழ்ந்துகுமணிகளுந்தெருத்தோறுங்
காண்டகக்கிடந்திமைப்பனகலவியிற்கன்னியர்முலைக்கோட்டுப்
பூண்டநித்திலம்பரிந்துவீழ்ந்தவிரொளிபொங்குமத்திறங்காட்டும்.

எம்பிரான்றிருநகரெழிறபவடர்ந்திடுவதென்னைநம்ப
னம்பொன்வார்கரத்தழலும்வெங்கனல்படர்ந்தழித்திடவெழுந்தென்னப்
பம்புநீள்பசுங்கழைக்குலமுரிஞ்சவுற்பவித்தவொள்ளழலோடி
யும்பரோங்குகானழித்துறப்புகுந்தஃதொழுக்குதேறலிற்சாம்பும். ௮௮

இன்னவாறெலாந்துறெழுவனம்படவிருநகர்த்தனித்தெய்வக்
கன்னிநோக்கினளருந்துயருழந்தனள்கம்பைவைப்பினில்வேணிச்
சென்னியாருமையுடன்றனித்துறைதலிற்செவ்விபெற்றிலளாகி
நன்னர்வெள்ளியங்கயிலைமால்வரைத்தலைநண்ணினளிடர்தீர்வாள். ௮௯

அங்கண்வள்ளலாரடியிணைதொழுதெழுந்தணுகினின்றுரைசெய்யுந்
திங்கள்வேய்ந்தபொற்புரிசடைக்கடவுளோதிருமலிநகர்க்காஞ்சி
பொங்குமாதவத்தொருமுனிசபித்தலாற்பொருக்கெனவளங்குன்றி
யெங்குநீடியநெடிபடுகோன்பொதிந்திடும்பையுற்றதுமன்னோ. ௯0

வெள்ளையோதிமக்குழாங்களுமின்னனைமிளிர்ந்தமெய்மடவாரு
முள்ளமீக்கொளுங்களிப்பினிலாட்டயருருகெழுதடந்தோறுங்
கள்ளுலாஞ்சினைக்கான்வளர்கோழியுங்கலுழிமும்மதவெள்ளங்
கொள்ளைவண்டினங்கூட்டுணுங்குஞ்சரக்குழாங்களுந்துளைந்தாடும். ௯௧

தேறல்வார்ந்தெனமதுரமிக்கசும்பியதிவவியாழிசைப்பாட்டு
நாறுபூங்குழன்மகளிர்களிசையுடனடவியகுரற்பாட்டும்
வேறுவேறுசூழிடந்தொறுஞ்சுவாகதம்விரிசிறைமணிப்பூவை
யூறுதீஞ்சுவைக்குயிலினமிழற்றியவோங்குபாட்டிசைமல்கும். ௯௨

கோதைவார்குழற்கூட்டியநறும்புகைகுலாவியவிடந்தோறுஞ்
சீதநித்திலமுகும்பணையுரிஞ்சியசெழுங்கனல்வளைந்தேறிப்
போதளாமகில்சந்தனமெரித்தெழுபூம்புகைக்கொழுந்தூரு
மாதரார்நடங்குயின்றமேலரங்கெலாமயிலினநடமாடும். ௯௩

மருந்துபோல்வரும்விருந்தினையெதிர்கொளும்வயின்றொறுமதவேழம்
பொருந்துவாலுளைமடங்கல்வெங்குடாவடிபுலிமரையுழையாதி
திருந்துவேறிருங்கானகின்றொரீஇச்செற்றிவந்தவைதம்மைப்
பரிந்துதத்தமதினமெனவெதிர்கொளும்பகட்டினமுதலாய. ௯௪

பரத்தைமாரொடுங்கிழத்தியர்தம்மொடும்பாழியம்புயமைந்தர்
கருத்துமேதகவாட்டயர்ந்தின்புறுகடிமலர்ப்பொழிறோறும்
பெருத்துநீள்கரப்பிடியுடன்வேழமும்பெட்டைகளுடன்மானை
வருத்தும்வாலுளைமடங்கலுமளவளாய்மதன்கலைமுறைதேற்றும். ௯௫

இளமகார்விளையாடியதெருத்தொறுமிழிமதக்களிறீன்ற
களபநின்றுலாயாட்டயர்தருமுளக்கனிவொடுநற்றாயர்
வளநிலாவியவுணச்செழுஞ்சிறார்களைவாய்புகுத்தகந்தோறு
மளவின்மாக்குலந்தத்தம்மழவினையயிற்றுவகுளகாதி. ௯௬

பந்தர்போகிமென்னிழல்செயும்வீதியும்பண்ணவர்பலர்வாழ்க்கை
நந்துமன்றமும்பொதியிலுஞ்சதுக்கமுநனிமரனிழல்செய்வ
வந்திலோங்கிவிண்ணுடியகொடிநிரையமன்றமாளிகையாரஞ்
சிந்துவேயினங்கிளைத்துவானளந்துநின்றுவெதிரண்மல்கி, ௯௭

பொன்னும்வெள்ளியுநவமணித்திரள்களும்புயலெனக்கொடுப்போர்க
ணன்னரங்கைநீரொழுக்கியபெருவெள்ளநிறைந்தகல்விடமூற்று
மின்னும்வாளெயிற்றடல்வலியரியினம்வேட்டஞ்செய்துயிர்சாய்க்குங்
கொன்னும்வாரணத்தொகுதிநெய்த்தோருராய்க்குளமெனநிறைநிற்கும்.

காட்டினூடகங்குயிற்றுமப்பொழுதின்கழறொழுதுடன்கூடி
யாட்டமேவுவெம்பேய்க்கணநீயமரணிகரெனவாங்குக்
கூட்டம்வாய்ந்துநின்கோயில்காப்புறுவபோற்குழிச்சுருட்குஞ்சி
மோட்டிரும்பெருமூக்குஃடயலகைகண்முழங்கியாட்டயர்நிற்கும். ௯௯

குருகுதாக்கலாற்பதைபதைத்துயிர்தபுங்கோளரிச்செழுந்தோலும்
பெருகுவீரியமடங்கருக்குறவுயிர்பிரிகடைமலைத்தோலும்
பொருதுவார்மதக்களிற்றினந்தாக்கிடப்பொன்றுபுன்புலித்தோலு
மொருவவெங்கணுநின்னுடைப்போர்வைகளுணங்கிறலெனமல்கும்.

மாந்தரென்பவரொருவருமின்றிமையாந்தவங்கர்நோக்கி
யேந்துமார்பகத்தணியெனவணிந்தபையெழிலராவினமெல்லாம்
போந்துநின்னுடைவரைப்பெனுமுரிமையாற்பொற்பவெங்கணுமல்கிக்
காந்துபன்மணிப்பஃறலைவிரித்தொளிக்கதிர்விளக்கிடுநாளும். ௧0௧

மிளிருமங்கியுந்தருப்பையுஞ்சமிதையும்வேதியர்தெருக்காட்டுங்
களிறுங்கானலந்தேர்களும்புரவியுங்காவலர்தெருக்காட்டும்
வளருந்தேன்களும்புழுகுங்கத்தூரியும்வணிகர்தந்தெருக்காட்டும்
பிளிறுங்கான்கருமேதியும்பெற்றமும்பின்னவர்தெருக்காட்டும். ௧0௨

உடுத்திடாதபல்கலைதினஞ்சூழ்தருங்கற்றவருயர்நாவிற்
படுத்திடாதபல்கவிக்குலம்பயிற்றுறும்பண்புடைப்பெரியோராற்
றொடுத்திடாதபல்கடாவிடைதொடுத்திடுந்தோகையன்னவர்நெஞ்சி
னடுத்திடாதவண்கற்புமிக்கணைத்திடுமனையநீள்வளமன்றே. ௧0௩

பாயும்வேங்கைகள்பாய்ந்திடாவேங்கையிற்பயிலும்வார்மதநீரிற்
றோயும்வேழங்கடோய்ந்திடாவேழமுன்றுவன்றுமாருயிர்மாழ்கக்
காயுநாகங்கள்காய்ந்திடாநாகத்திற்களுலுமெங்கணுஞ்சென்று
மேயுஞ்சேவினமேய்ந்திடாச்சேவுழைமேவுமாலவணைந்தாய். ௧0௪

திருகுகோட்டவன்கலைமுழக்கல்லதுசெழுங்கலைமுழக்கில்லை
பெருகுபூப்புறமாண்குலமல்லதுபெருமையாண்குலமில்லை
யிருவும்வலலியாற்சிறைபடுமெழிலினலாலெழுஞ்சிறையெகினில்லை
குருகுமாப்பயிலில்லமலலாலவட்குடிகள்வாழிலமில்லை. ௧0௫

மணங்குலாவியகிலுத்தமானுடமலான்மற்றைமானுடமில்லை
யணங்குபூங்குரவுயிர்த்தபெண்மகவலாலருமகவினமில்லை
பிணங்களார்பெருவாய்க்கணமல்லதுபெரியவர்கணமில்லை
யிணங்குவண்டின்வாய்ச்செவ்வழியல்லதங்கெய்துசெவ்வழியில்லை.

கலுழிவார்மதக்கமழ்புனல்களிற்றினமாட்டிடக்கருப்பூர
நிலவுசாந்துகுங்குமமுதல்விரையெலாநெடுமரமெடுத்தேந்த
விலகுசாமரைமானமாவீசவேயினமணித்திறைநல்க
வொலிகுலாவியநெடுவனமாயிடையரசுசெய்துறைநிற்கும். ௧0௭

தீயதீர்க்கும்வெண்பூதியுத்தூளனஞ்செய்துவற்கலைசூழ்ந்து
பாயவொள்ளழனுப்பண்விற்றிருந்துபல்வளமெலாந்துறந்தங்கண்
மேயபன்மரமுகுத்தமென்சருகுகள்விரவுகாற்றினையுண்டு
தூயகாஞ்சியுமருந்தவமுயல்வதுசூழ்ந்தகானிடைமாதோ. ௧0௮

இன்னவாயபல்பெருந்துயருற்றுளேனிறைவநீயறியாப்போன்
மன்னுகிற்றியான்களைகணில்லவெனமாழ்குவதழகேயோ
கன்னிபாகவென்றிரந்துநின்றியம்பியகாஞ்சிமாநகர்த்தெய்வந்
தன்னைநோக்கினன்குறுநகைமுகிழ்த்தனன்றம்பிரானிதுசாற்றும்.

கொண்டவெந்துயரொழியினிவனம்படுகுலநகர்த்திருக்காஞ்சி
பண்டுபோல்வளம்படுத்தநம்மாணையிற்பனிமலர்த்தொடைமோலி
யண்டர்கோனவண்வருவனீசெலகெனவருள்விடைகொடுத்தேவித்
திண்டிறற்படைவலாரியைத்திருவுளஞ்செய்தனன்செயலோடும். ௧௧0

கலிவிருத்தம்.

மங்கையர்சாமரைவீசமணிக்கேழ்
பொங்கியமெல்லணைமேற்பொலிபுத்தே
டிங்களிலாவியசெஞ்சடையோன்மு
னங்கைதலைக்கண்முகிழ்த்தடைவுற்றான். ௧௧௧

ஐந்தினுமெட்டினுமாரவணங்கிச்
சிந்தையினன்புதிளைப்பவெழுந்து
முந்துறநிற்றலுமுக்கணநோக்கி
மைந்தபுவிக்கண்வயங்குமனுப்பால். ௧௧௨

உதித்துவளர்ந்துயர்காஞ்சியைமுன்போற்
புதிக்கிவழாவகைபோற்றெனலோடு
மதிக்கணயர்ந்துபின்மாநகர்மேலாக்
கதிப்பதுதேர்ந்துகவற்சியினீங்கி. ௧௧௩

உண்ணிறைகாதலுளத்தினையீர்ப்ப
வண்ணலையேத்தியருள்விடைபெற்று
மண்ணரசாண்மனுமங்கைவயிற்றில்
விண்ணரசாள்பவன்மேவினனன்றே. ௧௧௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொருந்துசீர்க்கருப்பநீடிப்பொலிதலும்புனைவேய்வென்ற
வருந்திறற்றோளுமாலினழகியவயிறுந்தம்முட்
பெருந்தனிப்பருப்புஞ்சாய்ந்தபெற்றியுமாற்றிக்கொண்டாங்
கிருந்தனமெலிந்துவீங்கியிளமயிற்சாயலாட்கே. ௧௧௫

செழுங்கலிகாலனென்னுஞ்செங்கதிர்மண்மேற்றீய
வழுங்கவந்துயிர்க்குங்காலமடுத்தலாலினையகஞ்சக்
கொழுங்கதிர்முகையும்விள்ளுமெனக்குழீஇச்சுரும்பர்மொய்த்தாங்
கெழுங்குடககொங்கையுச்சிகறுத்தெழில்படைத்தமாதோ. ௧௧௬

கறங்குவெண்டிரைசூழ்வேலைக்கடல்வளைமண்ணையெல்லா
மறங்கொணூன்முறையிற்றாங்கவரும்பெறற்கருவிற்றானே
பிறங்குதோள்பழகுமாறுபெய்வபோற்புகையேறுண்ட
நிறங்கிளர்மண்ணையுண்ணுநீலையாநிறைந்திட்டதன்றே. ௧௧௭

கலிவிருத்தம்.

சேர்த்தசூல்பெண்மகளேகொறீதுதீ
ரோர்த்தவாண்மகன்கொலென்றீண்டுமோர்வத்தாற்
பார்த்திடவுள்ளூறப்படர்கின்றாலெனக்
கூர்த்தவேற்குலவிழிகுழிந்தவென்பவே. ககஅ

தடங்கொளும்வயிற்றினிற்றவிர்ந்தகான்முளை
யிடங்கொளவளர்தருமியல்புபோன்மணி
வடங்கிளர்முலைகளின்வாசத்தீம்பய
மடங்கருங்கருவிருந்தரும்பிமிக்கதே. ககசு

அணியினுமணியருமகவொன்றேயெனத்
திணிநிலந்தெளிவுறத்தெரிப்பதேய்ப்பவுட்
டணிவறவளர்மகத்தளர்விளலணி
பிணிமலர்களுமொரூஉம்பெற்றிவாய்ந்ததே. க௨0

இன்னணங்கருக்குறியிலங்கத்தீதுதிர்
மன்னர்நாடலைவாநவையில்கோள்களுந்
துன்னியவோரையுந்துலங்குயோகமு
மென்னவுநலம்பெறவியைந்துநோக்குற. க௨க

மறப்பெருந்தீயனமாழ்கிச்சாம்புற
வறப்பெருந்தூயனவலங்கிமேலிடத்
திறப்பெரும்பகையெலாந்தெருமந்தாழ்தர
வுறப்பருங்கிளையெலாமுவகைபொங்கிட. க௨௨

சிறைபம்மரசர்தந்திகைப்புநீங்குறக்
கறைகொடாதுலகஞ்சிலவருடங்காமுற
மறையவர்கவிமுதனமாந்தர்வான்பொரு
ணிறையநொண்டனர்கொடுநிரப்புநீவுற. க௨௩

பிறந்தனனிறைமகன்பிழைத்தவேந்தர்மேன்
மறந்திகழ்வேலுடைமன்னர்மன்னெனச்
சிறந்தநற்றாதையுஞ்செய்வசெய்தன
னறந்திகழ்விழாதெருத்தோறுமார்ந்தவே. க௨௪

கொச்சகக்கலிப்பா.

திருத்துமவயவந்திருத்திச்சிலதியர்வாய்புகுத்துவன
வருத்தியொடும்வாய்புகுததியரிசனத்தண்விழுதாதி
யுருத்தகையத்திமிர்ந்தாட்டியொளிர்நீற்றுக்காப்பணியக்
குருத்தகையுமிளமதியின்கொழுந்துபோல்வளர்கின்றான். க௨௫

கொழுங்கனிகவிசும்பாளக்கொற்றவவம்மெனுமமரர்க்
கழுங்குமணிப்புனற்காஞ்சியணிதிருத்தியல்லாலங்
கெழுங்கருத்தின்றெனவவரையெதிர்நோக்கிமறுப்பதுபோற்
செழுங்கமலமுகம்திமிர்த்துச்செங்கீரையாடினன். க௨சு

எம்முடையவலைப்பட்டோரிவ்வாறேயலைவரென
மம்மருலகினைத்தெளிக்குமாண்புபோன்மழைக்கூந்தற்
கொம்மைமுலைமடவார்கள்கொழுங்கனகவடமூக்கிச்
செம்மைமணித்தொட்டிலினிற்றாலாட்டக்களிசிறந்தான். க௨எ

உயங்குநிரப்பினர்தமக்குமுயர்ந்தவர்க்குங்கவிகளுக்கும்
வயங்கிளருங்கொடைகொடுப்பமெலியாமைவலியடைக்கும்
பயங்கதுவப்புடைத்தாற்றல்பயிற்றுவபோலொளிதுளும்பித்
தயங்குமிருகரமலராற்சப்பாணிகொட்டினான். ௧௨௮

எல்லுமிழுந்தனதுமுகமெனுஞ்சோமநாயகனு
மெல்லியலார்வாய்க்குமுதவிளங்கிழைப்பூட்கிழத்தியரும்
புல்லியிறுமாப்பனபோற்பொற்றமுலைக்கிடைந்தொசியும்
வல்லியிடைமடமாதர்வாய்முத்தங்கொளவளித்தான். ௧௨௯

பெருநிலத்திலெவரெதனைப்பெட்பினுமற்றஃதுதவுந்
தருநிகர்த்ததனதியல்பைத்தண்டாதுதெரிப்பதுபோல்
வருகவருகெனவிளிக்குமங்கையரானனமலர்த்தித்
திருவளர்கிண்கிணியொலிப்பத்திரிந்துவிளையாடினான். ௧௩௦

பைங்கிரணமுகுத்துலகிற்பயிர்வளர்ப்போய்வருகவிவன்
பொங்கொளியானினக்குயர்ந்தானுனக்குமொளிபுணர்த்தருளுஞ்
செங்கதிரோன்மரபுடையான்றெவ்வடுகோக்காண்டியென
மங்கையரொக்கலையிருவிமதிவிளிப்பமகிழ்கூர்ந்தான். ௧௩௧

அற்றமில்யானரசாள்போதனைவரும்பொன்னவிர்மணிசூழ்
பொற்றமனைவயினன்றிப்புணரும்விளையாட்டானு
மற்றைமனைவயினிருத்தல்வழுவென்றுசிதைப்பதுபோற்
சிற்றிலெலாஞ்சிறுமடவார்சினந்தலறச்சிதைத்திட்டான். ௧௩௨

அலகில்புகழ்த்தன்புயத்தையணைசெவ்விபார்த்திருநீர்
நிலவரைப்பின்வந்தொருசார்நிற்குமொருகலைமகளை
மலர்மகளைச்சயமகளைவருகவெனவறைவதுபோற்
றிலகமெனவுயர்சிறுவன்சிறுபறைகண்முழக்கினான். ௧௩௩

பருத்தமணிப்பொலஞ்சகட்டுப்பாழியந்தேர்பற்பலவுங்
கருத்திசையுந்திசையுருவக்கடவியமருழந்துபகை
வருத்துவதற்கிதுவுமொருவலியென்னமறுகுதொறுந்
திருத்தகுபொற்கூவிரத்தசிறுமணித்தேருருட்டினான். ௧௩௪

இவ்வண்ணம்விளையாடுமிளம்பருவத்தியல்பொழிந்த
வவ்வெல்லையுலகமெலாமதிசயிப்பவிழாவெடுத்துச்
செவ்வண்ணக்குருமுன்னர்ச்செழுங்கலைகள்பயில்விப்பார்
பௌவங்கொண்முரசதிரப்பள்ளியினில்வைத்தார்கள். ௧௩௫

அடல்வலித்திண்மழுப்படையானயன்றலையொன்றுகிரினிற்கொய்
திடறியநாண்முதற்றனக்கோரிடமிறந்ததெனும்பரிவு
கடலனையபடைத்தானைக்கலிகாலனுவகத்தைத்
தடமனையாக்கொண்டொழிந்தாடவளமலர்ச்சேக்கையினாள். ௧௩௬

நிழலுயிர்க்குமணிக்கச்சுநிரம்பவிடைத்தலம்வீக்கிக்
கழலுயிர்க்குகோன்றாளான்கதிர்ப்பலகைகாந்தகம்வெவ்
வழலுயிர்க்கும்வேலாதிப்படைத்தொழிலுமடையார்நெஞ்
சுழலுயிர்க்குங்களிறுதியூர்தொழிலுந்தொடங்கினான். ௧௩௭

கயிற்கழலானெவர்யாதுகண்ணினுந்தாழாதளிக்குஞ்
செயற்புதுமைதனைநோக்கிச்செயிர்த்திடலுமமர்க்களத்தி
லுயிர்ப்பலிவேட்டொருமலையுமொவ்வாதபுயமலையிற்
சயப்பெருஞ்சூர்மடக்கொடியுந்தறுகணும்வீற்றிருந்தாள். ௧௩௮

உரியதிருப்பருவத்தினுபநயனச்சடங்கியற்றி
யரிலறுக்குமறைபயிலக்குசனுபாச்சிரமத்
தெரிதவமுமிலங்கிலைவேலிருந்தாதையுய்ப்பவவண்
வரிகழற்காற்கலிகாலன்மறையோதிவளர்நாளில். ௧௩௯

விண்ணுலகந்தடந்தோளின்மேதகவைத்தருள்வேந்தன்
மண்ணுலகினுயிர்த்தனயான்மறுவேந்தாயவ்வுலகி
னண்ணியரசாளுதற்கேகடப்பான்போலுலகமெலாங்
கண்ணிறைநீர்சொரியவுடல்கழித்துமனுவிண்புகுந்தான். ௧௪0

நம்முடையமகற்றழுவுநகைமணிப்பூணயிராணி
விம்முமுலைபுணர்வதுநும்மேதகைகொண்டென்னக்
கொம்மெனப்போமிறைவனைப்பின்றுறுகிவிலக்குறுவாள்போ
லம்மலர்ப்பூங்குழன்மாதுமழன்மூழ்கியுடன்போந்தாள். ௧௪௧

தந்தைதாயிருவர்களுந்தாரணியின்வாழ்வொழிந்து
சுந்தரஞ்சேர்விண்புகுதத்துவன்றியெழுந்தரியலர்கள்
சிந்துமணிப்புனற்பொன்னிச்சோணுடுதெவ்வுதவி
மந்திரிகளரசின்றிமனந்தளருமவ்வேலை. ௧௪௨

கவலாதிர்மனுபயந்தகான்முலைதானுளன்கண்டீ
ரவமாறுங்களிற்றரசைத்தளையவிழ்த்துவிடுமினஃ
துவராழிப்புவிவியப்பக்கொணருமெனவுயர்விசும்பிற்
சிவவாய்மைமொழியொன்றுதிகழ்ந்தெழுந்ததுகேளா. ௧௪௩

விம்மாந்துபகைபுலம்பவேரோடுமிரித்துலகிற்
றம்மாவித்துணைவேந்தன்சக்கரஞ்சென்றிடுநாளிற்
செம்மாந்துகளிதூங்கிச்சிவபெருமானருள்வழுத்தி
யம்மார்ந்தகடக்களிற்றையலங்கரித்துவிடுத்தார்கள். ௧௪௪

மணியிருப்பாற்கலகலப்பமதசலங்கள்சலசலப்ப
வணிபலவுங்கதிர்கதிர்ப்பவடையலர்கள்விதிர்விதிர்ப்பத்
திணியுலகம்விதுவிதுப்பத்தேவர்களுங்குதுகுதுப்பப்
பணிலமுதலியமியம்பப்படர்ந்ததுவெங்கதக்களிறு. ௧௪௫

வீடணுகும்பெருங்காதன்மீக்கொண்டவினையொப்புக்
கூடினவர்குருத்தேடிக்கொட்புறல்போற்றிசைதிசைபோய்
நாடுமவர்குருப்போர்லநடிப்பவரைவிலக்குதல்போ
லீடிலெதிர்ப்படுமெரசர்யாவரையும்விடுத்தேகும். ௧௪௬

விரைவிலிலைப்புரைகிளைத்துவிறல்வேழங்குசாபன்
புரையறுசீராச்சிரமம்புகுந்தாங்குவீற்றிருந்த
வரையர்குலத்திருமகனையண்முதலுமுடன்புயிலும்
கரையுமறைமுனிவர்சிறூர்கையகன்றஞ்சினரிரிந்தார். ௧௪௭

வெண்ணிறக்குஞ்சரங்கடவும்விறமையங்குசந்தனது
தண்மலர்க்கைத்தலையொன்றித்தயங்குதல்போற்கிடந்தொளிரு
மொண்ணிறவங்குசவரியாலோச்சியிவர்வான்முயலுந்
திண்ணியமன்னனைவணங்கித்தெறுகரிமேற்பரித்ததே. ௧௪௭

அண்ணன்மதக்களியானையார்ங்கண்ணிமுடிவேந்தைப்
புண்ணியஞ்செய்தன்னெருத்தமிசைத்தாங்கும்பொறையாற்றி
யெண்வகைமாதிரந்தாங்குமினக்கரிகள்பொறைநீவி
யுண்ணிலவுங்களிதூங்கவுதவிவழங்கியதன்றே. ௧௪௯

கருமேகமிசைவிடியற்காலையெழுஞ்செங்கதிர்போ
லொருவேழமிசைத்தோன்றுமொன்னலர்சூளாமணித
ளிருபாதந்தொழுதிபத்தின்பின்னணைந்தவெல்லோருங்
குருநாட்பங்கயமலர்க்கைகூப்பிமுடிகோட்டினர். ௫௦

நுந்தைபணிகேட்டேங்கணுன்பணியுக்கேட்பவிவண்
வந்தனமென்றேத்துதல்போல்வயிர்வளைவேய்ங்குழல்வீணை
துந்துபிதண்ணுமைமுழவந்தொகுமுருடுதகுணிச்ச
மெந்தவகையியங்களுமுன்னியம்பியவேழ்கடலழுங்க. ௫௧

மைவண்ணக்கரடமதமலைவணங்கிப்பிடரேற்றுஞ்
செவ்வண்ணமலர்முகத்தோன்செம்மாந்துகளிப்புறலும்
பௌவங்கொள்புவியகத்தோர்பயின்மகிழ்ச்சித்தலைநின்று
ரெவ்வண்ணமிறையானனவ்வண்ணமுலகாமால். ௫௨

கண்டவர்கண்முகவனசக்கடிமலருமகமலரும்
விண்டலர்ந்துகளிதூங்கிவிளங்கியதுமொருபுகழோ
தண்டரளப்பூண்மார்பிற்றார்வேந்தனிருள்சீத்து
மண்டலமெலாம்விளக்குமிரவிமருமானென்னில். ௫௩

தொழுந்தகைமைப்பேரமைச்சர்தொல்லுலகம்புரிதவத்தின்
கொழுந்தனையசெம்பியர்தங்குலவிளக்கைப்பகைவெருவ
வெழுந்தசினக்களிற்றெருத்தமிசைநின்றுமிழிச்சினர்
செழுந்தரளமணித்தொங்கன்முடிகவிக்குந்திறம்புரிவார். ௫௪

பாயினவிண்ணவர்தத்தம்பதியிருந்தாங்கிருந்தரசன்
மாயிருமண்மகட்புணரும்வளநோக்கவமைப்பார்போற்
சேயிரவிமுதலானதேவர்பதிமேனிழற்ற
வாயிடையேவிதியுளிப்பொன்னலங்கொளிமண்டபஞ்செய்தார். ௫௫

மின்னசும்புமிழைமடவார்வெகுண்டுறப்பாற்றமைத்தெறுதன்
மன்னவன்முன்முறையிடுவான்வந்தனபோற்கனிவாழை
துன்னுபசுங்கருமிளநீர்தொகுங்கமுகுமுதலாய
பொன்னவிர்தூண்டொறுநிறைத்துப்பொற்பணியலங்கரித்தார். ௫௬

புண்டவழ்வேற்படைத்தங்களிறைவன்பொற்பினைநோக்க
வண்டர்குலமண்மையினிலண்மிநெருங்கியதேய்ப்பக்
கண்டவழச்சித்திரித்தகாமருபட்டாதிகளான்
மண்டபமெங்கணுமலங்கிவளங்கொழிப்பவிதானித்தார். ௫௭

நறும்பூவுமலர்த்தாதுநகையொளிர்பொற்சுண்ணமொடு
புறம்போதச்சிந்தியகிற்புகைபுகைத்துவிண்ணவரு
மிறும்பூதுகொளவுள்ளாலெழிலியகம்பலம்விரித்திட்
டுறும்போகநிலமுமதற்கொவ்வாமைக்கவின்செய்தார். ௧௫௮

ஊற்றிருந்துகவின்றுளும்புமுருகெழுமண்டபமென்னு
மேற்றமலிமகன்மார்பிலிலங்குமணிப்பணியென்ன
நாற்றிசையுமதிசயிப்பநாப்பணவமணித்திரளால்
வீற்றிருக்குஞ்செழுந்தவிசுவிற்பயிலக்குயிற்றினர். ௧௫௯

கடக்களிற்றைக்கண்கட்டிக்காவலனைக்கொணர்பாக்கு
விடுத்தனர்களமைச்சரெனுமிகுமொழியேவிறல்வேந்தற்
கடுத்தமணிமுடிசூட்டவிடுமுடங்கலாக்கொண்டு
தொடுத்தவிழாவணிகாணயாவருந்தொக்காரன்றே. ௧௬௦

காட்டகத்துமிறைமகற்குக்கறைவாங்குந்திறமேய்ப்பப்
பாட்டளிசூழ்மலர்ச்சூதப்பசுந்தழையுந்தருப்பைகளு
மீட்டமுறுசமிதைகளுமேனையவுங்கைக்கொண்டு
நாட்டுமறையந்தணர்களலங்கிளரத்திரண்டணைந்தார். ௧௬௧

ஐயனிருதோண்மணந்தவரமகளிர்பிரிவாற்றா
தொய்யின்முலைவேற்றுருவாய்த்தொககுருகிலிறுத்தனபோன்
மொய்யிழைசூழ்பொற்கரகமூரிமணிக்கும்பங்கள்
பையவிதியுளிநிறுவும்பாங்கரெலாநிறுவினர். ௧௬௨

தன்னுடையவிற்றையாகித்தமனியவானுலகாண்ட
மன்னனெனுமுரிமையினன்மழைமேகம்வான்கங்கை
துன்னியதீர்த்தங்கொணர்ந்தாற்றுணையமதக்கரியெருத்தின்
மின்னுமணிக்குடத்துவருவிரைப்புனல்பெய்தருச்சித்தார். ௧௬௩

மடங்கனெடும்பிடர்ப்பிதிரமன்னுமணித்திரள்குயின்ற
விடங்கொளுமாதனம்பூசையியற்றியதற்கெழில்செய்தாங்
கடங்கருந்துப்பயிலிலைவேலண்ணலைமேலிவர்வித்துத்
தடங்கெழுதெய்வக்கலசத்தண்விரைநீராட்டினர். ௧௬௪

மெல்லியநுண்ணிழைத்துகிலான்மெய்யீரம்புலர்த்தியபி
னெல்லுமிழுங்கறைக்கண்டத்தடிகடிருநீறன்றி
யெல்லுமிழுமணிசிறவாதென்பார்போன்முன்னுதலின்
வில்லுமிழ்நீறணிந்தணிகண்மெய்முழுதுமலங்கரித்தார். ௧௬௫

கோள்பலவுமிறைமகற்குக்கோளுறுமாறொருகாலைத்
தாள்பிறழத்தங்கிடினுந்தங்குமெனநினைந்தவற்றை
வாள்பயிலமுறைபிணித்துவைத்தனபோன்மணிகுயின்ற
நீள்பசும்பொற்கதிர்மோலிநிலம்வியப்பமுடிகவித்தார். ௧௬௬

அனையசெழுங்கோள்பிணிப்பினகன்றுவிசும்படையாமற்
புனைகழற்கால்வளவர்பிரான்புகழ்வளைந்துகாப்பதென
நினைவரியபெருங்காட்சிநீடுமொளிமணிக்காம்பின்
சனைகதிர்முத்தவிர்கவிகைகவின்றுளும்பமேற்கவித்தார். ௧௬௭

திருமுகமுந்தடங்காமுஞ்செழுங்கழலுமெனுங்கமல
மருமலருளுயர்ந்ததனில்வாழ்க்கையுறவுயர்ச்சிதெரிந்
திருபுறமுந்துணையன்னமிடைதெரியாதலைவதுபோற்
குருநிலவியொளியுகுக்குங்கோமளச்சாமரையசைத்தார். கசுஅ

கண்டவர்களதிசயிப்பக்கதிர்த்தெழுந்தவிறைபுயத்து
விண்டலருமலர்த்தொடையல்விரைகமழுமதுநசையான்
மண்டிவருந்தேனினமும்வரிச்சுரும்புமகற்றுவபோற்
றண்டாளவடஞ்சூழ்ந்தசாந்தாற்றிமருங்கலைத்தார். கசுகூ

பழுதில்காகங்கடொறும்பாவித்ததெய்வதத்தின்
செழுவளமைதன்னிடத்திற்செறிந்ததிறன்றெரிப்பதுபோ
லொழுகிமையாடாதுயிர்மேலோங்குமருளுக்குதவி
யெழுதரியதிருவடிவினிறைமகனும்வீற்றிருந்தான். கஎ0

மனுவேந்தனுயிர்நீங்கிவானணையுமன்றுமுதன்
முனிவாயதுயர்கூர்ந்தமுண்டகப்பூந்தனிச்சேக்கைக்
கனிவாய்ச்செந்திருமாதுங்கலிகாலப்பெருவளவன்
றனியார்பம்புணர்ந்தின்பசாகரத்தினாழ்ந்தினள். கஎக

பணிவேந்தன்பொறையொழிந்துபஃறலையுமயர்வுயிர்த்தான்
றணியாதபசியொழிந்தாமெனவமரர்தளர்வகன்றார்
மணிமோலிப்பகையரசர்மனத்தருக்குமுழுதவிந்த
பிணியாவுமொழிந்துலகம்பேருவகையெய்தியதால். கஎஉ

கலிநிலைத் துறை.

புரசைமால்களிற்றுடனெளிதரப்பொதிகொணரா
வரசர்முன்சொரிகையுறையனைத்துமந்தணரும்
பரசுநால்வகைக்கவிகளும்பாணருங்கவர்ந்தார்
முரசமார்த்ததன்னவர்கலிமுடிபறைநிகர. கஎந

பூண்டொறுந்தமதலர்விழிபூத்தமைதெரியா
ரீண்டிமெய்யெலாம்விழிகளாயிருந்திலவென்றெண்ணிக்
காண்டொறும்பிரான்வலாரியென்றியாவருங்கரைந்தா
ராண்டமன்னனுமறிந்தனரோவெனவயிர்த்தான். கஎச

உலகிலீண்டியகலியினைத்துரந்துசென்றேப்பி
விலகுகாவலாய்த்திசையினும்விண்ணினும்பரந்து
நிலவலுற்றதுநெறிமுறையரசுபூண்டிறைவன்
குலவுமற்றைநாளவனுழைக்கொழித்தெழும்புகழே. கஎரு

இன்னவாறுமண்மகளினைமணந்தபின்னிறைஞ்சி
மன்னர்மன்னநின்மரபுளோரரசுவீற்றிருந்த
பொன்னளாவியவிருக்கையிற்புகுதுகவென்று
நன்னர்மந்திரக்கிழவர்கணவின்றனர்கேளா. கஎசு

புரவிதேர்கரிபண்ணுகபுரவலர்யாரு
முரவுவாய்ந்ததம்மூர்தியிற்சூழ்ந்துடனுறுக
விரவலாளர்களிருநிதிபெறுகவென்றேவிக்
குரவன்சேவடிபணிந்தருள்கூர்விடைகொண்டான். கஎஎ

சங்கமாதிகண்முழங்கவார்கொடிநிரைததையப்
பொங்குதானைகள்புவிநெளிதரப்புடைசூழத்
திங்கள்வாணுதன்மங்கையர்திருநடம்புரிய
வெங்களிற்றணியெருத்தமேல்கொண்டுசென்றணைந்தான். ௧௭௮

அரும்புவிண்டலர்கயங்களுமலர்சொரிபொழிலுங்
கரும்புஞ்செந்நெலுங்கதலியுங்கஞலியபணையு
மருங்குபம்பியவளம்புனற்பொன்னிநாடெய்தி
நெருங்குமாளிகைத்தன்னுடைநெடுநகர்புகுந்தான். ௧௭௯

பந்தர்தோரணம்பூரணகுடம்பலகொடிக
ளெந்தவெண்ணிலவளங்களுநிரம்பியேர்வயங்கு
மந்தண்மாநகர்வீதிகளளவிலகடந்து
முந்தையோர்பயிலகோயிலினடைந்தனன்முறையால். ௧௮௦

அரசுவீற்றிருந்தாலயத்தெம்பிராற்கான
வரிசையாவையுமூர்தொறும்வழாவகைநடத்திப்
புரிசைசூழ்ந்தபொன்னகர்செலுத்தரசினும்பொலியக்
கரிசெலாமறுத்தாண்டனன்கலைகளுயுலகம். ௧௮௧

வணங்குமன்னவர்தமக்கெலாந்தனதுவண்குடைக்கீ
ழிணங்குமண்டலம்பாதலித்தருளினனிறைஞ்சா
தணங்குபோர்க்களத்தேற்றவர்தமகுமுன்னுண்ட
கணங்கொள்கற்பகநாட்டினைகைகொளவிடுத்தான். ௧௮௨

காழிலாவறுப்பத்துநான்கெனுங்கலையானும்
வாழிவென்றுவென்றலைகடல்வரைப்பெலாநாட்டுங்
கேழில்வாகையமதலையுங்கிளர்மறைமுறையான்
வேழ்வியாற்றியயூபமும்விறந்தனவநேகம். ௧௮௩

வாழுநாளொருகாலத்துக்காவிரிமலிநீ
ராழியாமெனநாடெலாம்பரத்தலுமலகில்
சூழியானைவேன்மன்னவர்யாரையுந்தொகுத்துப்
பாழிநீள்கரைபடுத்துநீரொழுங்குறப்பணித்தான். ௧௮௪

கயிலைநாயகனருளியவாணையைக்கருதிப்
பயிலுங்காஞ்சியைக்காடுகொன்றிருநகர்படுப்ப
வியலும்வாஞ்சையிற்போதுவானுழையரையேவிச்
சயமிலாவியதானையைத்தருகெனக்கிளந்தான். ௧௮௫

ஒருகைமார்பகம்பிணித்துமற்றொருகைவாய்புதையா
வருளும்வாய்மொழியஞ்செவிநிறைத்தவவ்வியவர்
விரைவினேகினர்விறற்கழல்வேந்தனுமெழுந்து
திருவளர்பயிறமணியகோயிலிற்சென்றான். ௧௮௬

விசும்பினின்றிழிவேந்தனைத்தாதியர்விழைவாற்
பசும்பொற்பீடிகையிருவினர்பணிகுலாம்விரைநீர்
தசும்பினேந்தினராட்டினர்தணத்தனரீர
மசும்புசந்தனக்கலவைமெய்யழகுறவணிந்தார். ௧௮௭

50

சூடுமேழிற்சுவையுமார்கால்வகையுண்டி
யோடுவாளரித்தடங்கணிஞனுயிரனொண்கேழ்
பாடுதங்குபொற்கலத்தினிற்பண்பொடூமட்ட
வாடுநீள்கொடிக்கொற்றவனுகர்ந்தணியணிவான். கஅஅ

கலிவிருத்தம்.

கருமுகிற்குலமெனக்கருதிவந்துமின்
மருவிலின்றிமைப்பனமானப்பொங்குநெய்
முருகவிழ்சிகையினை முடித்துவில்லிடும்
பொருவறுகாஞ்சனப்புரியிணையாத்தனன். கஅகூ

பந்தியிற்செறித்தபன்மணியின்கோவையைக்
கந்தரம்வாங்கியகாமர்வில்லென
மந்தரமனையதோண்மன்னர்மன்னனச்
சுந்தரச்சிகழிகைசூழ்ந்திட்டானரோ. ககூ0

திருமகடனதெனச்சினந்துவெற்றிகொ
ளொருமகடனதெனுமுலங்கொடோளினன்
பெருமழைதுவற்றியபெற்றிபோலவட்
குருமலரலங்கறேன்சொழிப்பவேய்ந்தனன். ககூக

மாதராருரியினைவாங்கும்வல்லையி
னீதுதானெனமனத்தெண்ணினன்பொரப்
போதளாஞ்சிகழிகைமறையப்பொன்குலாஞ்
சீதவான்மணிமுடிசென்னியேற்றினன். ககூஉ

ஈட்டியசெழும்பிரதாபவெல்லினல்
வாட்டமுற்றடைந்தவிண்மணியைத்தன்குலச்
சேட்டொளிக்கதிரெனத்தாங்குஞ்செய்கைபோ
லோட்டொளிப்பட்டமொண்குளத்தில்வீக்கினன். ககூ௩

அழகெனுந்தேன்வழிந்தொழுகுமானனச்
செழுமணித்தாமரைச்செய்யபூவின்மேல்
விழுமியதிருமகள்வீற்றிருந்தென
வொழுகொளித்திலதமுமாங்குறுத்தினன். ககூச

சுந்தரவுருவினற்றேற்றவேள்விட
வந்திடுமவன்கொடிமருங்குநண்ணுபு
மந்தணமிசைப்பதுமானக்காதினிற்
கொங்தொளிமகரகுண்டலங்கொளுத்தினன். ககூரு

காரிகைமடந்தையர்கருங்கட்கூர்ங்கணை
போரியன்றெய்வனபொறுப்பவச்சிரச்
சீரியகவயமேற்சேர்த்திட்டாலென
வேரியலங்கதந்தோளிலேற்றினன். ககூசா

இருந்திறற்றன்பிரதாபமெங்கணும்
பரந்ததுவளைத்தமைதெரிக்கும்பான்மையி
னுரந்தழைதோளினனிர்ந்தசெம்மணி
நிரந்தபொற்கடகங்கையிலவேற்றினன். ககூஎ

உருவினிற்சிறியராயுற்றுநோக்குழிப்
பெரியராந்தவத்தினிற்பெரியமாந்தர்போ
லுருவினிற்சிறியவாயுலகெலாம்பெறும்
பெருவிலைமோதிரம்பிறங்கவிட்டனன். க௯அ

மின்னுறழ்வேணியாற்கடிமைதோற்றுவான்
றன்னுடைக்குலத்தவர்தரித்தவார்த்தொடைப்
பொன்னரிமாலையும்பூவின்மாலையும்
பின்னியமார்பினிற்பிணையச்சாத்தினன். க௯௯

துளிக்குநெய்க்கருங்குழற்றோகைமாருயிர்
விளிக்குமென்றலகுலைமறைத்தமேதகு
பளிக்குவெள்ளுடையின்மேற்பசும்பொனம்பரங்
களிக்கும்வேன்மன்னவன்கவினச்சுற்றினன். ௨௦௦

மறக்கொடுந்தானைகண்மலிந்துமுற்றினும்
புறக்கொடைகண்டலாற்போரினீங்கலாத்
திறற்குரித்தொழின்மையைச்செப்பிநின்றென
நிறக்கருங்கழலொலிநிகழ்த்தககட்டினன். ௨௦௧

மற்றையவணிகளும்வயங்கமெய்ப்படுத்
துற்றவச்சூழலையாருவிமற்றொரு
பொற்றபூஞ்சூழலிற்புக்குவேதியர்க்
கற்றுநல்கூர்ந்தவர்ககம்பொன்வீசினன். ௨௦௨

இழைகளுமணிகளுமெண்ணில்பொன்களும்
மழைநிகர்களத்தவர்மகிழுங்கோயிலுக்
குழையரைககூய்க்கொடுத்துற்றுச்சங்கொலி
தழைவுறக்கோயின்முன்வாயில்சார்ந்தனன். ௨௦௩

ஏவலருரைத்தலாலேற்றுவல்லையிற்
காவலர்தொகுதியுங்களிறுந்தேர்களும்
வாவுமாத்திரள்களுமள்ளரீட்டமுந்
தாவருமமைச்சருந்தைந்தபாங்கரும். ௨௦௪

இளையரும்பாணருமேனையோர்களு
மளவிலர்துவன்றினராங்குநோக்கின
னொளியுமிழ்பருயவல்லொருத்தல்யானைமேற்
களிமயின்முருகனிற்காணவேறினன். ௨௦௫

கலிநிலைத்துறை.

சழங்கலின்புகழ்மதியெனைச்சமர்வினைத்தலைக்கும
பழங்கண்டீர்மதியெனப்படர்ந்தொளிர்பணிக்கிரணம்
வழங்குவெண்மதிவிடாதுடன்றொடர்வதுமனக்
குழங்கன்மாலைசூழ்முடிமிசைக்குரூஉக்குடைநிழற்ற. ௨௦௬

பருப்புவாய்ந்துசேர்ந்தொழுகியபனைக்கைநெருக்கு
மருப்புவாய்ந்தெழுமாசுவாவெனுமணிதயங்கும்
பொருப்புவாய்ந்திருபுறத்தும்வெள்ளருவிதுள்ளியபோல்
விருப்புவாய்ந்துநின்றிரட்டுசாமரையுடைவிளங்க. ௨௦௭

அசும்பூங்கதிர்ப்பொலங்கலனொளியினல்யாக்கை
பசும்பொன்மாநிறம்படைத்தகைமாவிறும்பர்கள்சூ
ழிசும்பின்மேருவினிலங்குமத்திறம்பொரவெழுந்து
விசும்புதைவரும்புலிக்கொடிவயங்கிமுன்மேவ. ௨0௮

இடுகுசூழ்மணித்தேர்களெண்ணிலகிளரொளியிற்
புடையெலாநெரிதரக்களிறவற்றுடைப்புறத்தி
னைடையவாம்பரியவற்றுடைமருங்கெலாமடரப்
படைகள்யாவையுமவற்றுடைப்பாங்கரிற்பரவ. ௨0௯

இயங்களாதியதழங்கொலியிடிக்குரல்காட்டக்
கயங்களூற்றியகடமழைத்தாரையைக்காட்ட
வியங்கியாநென்மாதரார்மின்னினைக்காட்டத்
தயங்குபன்னிறமுகில்பொருங்குழாத்தொடுஞ்சார்ந்தான். ௨௧0

முத்தினூர்தியுங்கவிகையுமூரியங்கொடியும்
பத்தியாய்மிடைந்தெங்கணும்பகலுருக்கரந்த
மத்தயானையின்மன்னனையிரவிமற்றென்றே
தத்துநீர்ப்புவிக்கமையுமென்றெழிப்பதுதகைய. ௨௧௧

மகரதோரணம்பூரணகும்பங்கண்மலிந்து
சிகரமாளிகைசெற்றியதிருமகளுறைதன்
னகரவீதியிற்பகுந்தனனடததலுங்காணுந்
தகரவார்குழற்றையலாரிவையிவைசெய்வார். ௨௧௨

தாள்வரிந்தபொற்கழலினன்றன்னொளிக்கஞ்சி
வாளுலாங்கணார்வாழ்மனையுட்புகுந்தொளிக்குங்
கேளலார்பிரதாபத்தைக்கெழிஇக்கொணர்ந்திறுத்தாங்
காளும்வேந்தன்முன்னரக்குநீர்சூழ்த்திமண்கவிழ்ப்பார். ௨௧௩

பரந்தமன்னவன்புகழினைப்பயந்திலந்தோறுங்
கரந்தவேற்றவர்புகழையுங்கவர்ந்தனர்கொணர்ந்தாங்
குரந்தவாக்களிற்றடியின்கீழ்ப்படுத்தொழிப்பார்போ
னிரந்துமண்ணெலாமறைதரவெண்பொரிநிறைப்பார். ௨௧௪

வண்டுசூழ்பசுந்தொழாய்த்தொடையன்றுமார்பகத்திற்
கொண்டதீர்ஞ்செழுஞ்சாந்தணியாதலாற்குனிகோ
தண்டவார்சிலையானலனிவன்றடக்கையிலவேல்
கண்டலாலுமைகான்முளைபோலுமென்றறைவார். ௨௧௫

கோழியான்குறுகாருயிர்குழைதரச்செலுத்து
மாழியானெனவிருதெழுந்தார்த்தலாலிவனை
வாழிவேளெனமதித்துமோகாஞ்சியிற்றவத்தாற்
காழினீங்குமாலென்றுமோவென்றனர்கரைவார். ௨௧௬

வேட்டயாவையுமிரக்குமுன்வீசிடுந்திறத்தாற்
கோட்டந்தீர்மனப்பெருந்தகைதவத்தினுற்குழைந்து
வாட்டமுற்றலால்வரங்கொடாவானவர்தம்மா
லீட்டரும்புகழ்படைத்தவேற்றமரனேயென்பார். ௨௧௭

முருகவேள்களிறூரவம்முருகனைத்தணவாத்
திருவில்வீசியகலாவமாமஞ்ஞைபின்சேறல்
பொருவவேலவன்குஞ்சரத்திம்பரோர்பொலங்கொம்
புருவனுள்குழலலையமாலகொண்டுடன்படர்வான். ௨௧௮

கொழுதுதேனிமிர்தொடையலங்கோனவனழகு
முழுதுங்காணியதம்மெதிர்முன்னவெங்களிற்றுக்
கெழுதுதொய்யிலைக்கரும்பிதோவென்றுகாட்டுநர்போற்
பழுதிலாமணிக்கஞ்சுகநிற்பர்கள்பல்லார். ௨௧௯

இரும்புபாய்ந்துபுண்ணிணங்கியமத்தகந்தமது
பெரும்பொன்மேகலையல்குன்மத்தகத்தெழில்பெருமை
சுரும்புமூசியகடகரிக்குணர்த்துவார்துணைய
விரும்புநீவியுமிழ்ந்தனர்வெறியராய்நிற்பார். ௨௨௦

களிறுதேர்பரிமுதலியவேண்டினர்கவாக்
குளிறுவார்முரசிறைக்குநங்குருமணிக்கச்சோ
டொளிறுவாள்வளைகலைகவர்ந்துதவிடாதேகும்
வெளிறுமாத்திரையிருந்ததெம்விதிப்பயனென்பார். ௨௨௧

வள்ளல்காமருக்குருவுடன்மதனிருந்தானே
லுள்ளமாழ்குவனெனநினைப்புகழ்ந்தனமுதற்கே
புள்ளவார்தொடைப்புயத்தவப்போர்மதன்வெகுண்டு
கள்ளவார்கணைதொடுத்தனன்காண்மதியென்பார். ௨௨௨

தீயமன்னவனுறினுமாடவர்க்கலாற்றீங்கு
பாயமேகலைமாதருக்கியற்றிடான்பழிதீர்
தூயனாகியுமெங்களைத்துயர்செயலழகோ
காயும்வேலவகடைக்கணித்தருளெனக்கசிவார். ௨௨௩

நடையினானினைநகைத்திடுநங்கள்பான்மறலிக்
கொடையினாலுயர்குமரனைக்கொணர்ந்தெமதுளங்க
ளுடையுமாறுகண்டாய்தகுந்தகுமுனக்கென்னாப்
புடையுலாவியகுஞ்சரநோக்கினர்புகல்வார். ௨௨௪

மறலியாடியமன்னரைமறலிகையாடுந்
திறல்செய்வானெழிலேறுக்குமுனொழிதியேற்சினவி
யறலின்வார்மதக்கவுளினயலர்முலைக்கோட்டால்
விறலிலாவகைவேறுநின்கோட்டினையென்பார். ௨௨௫

பிடிகளாமெனத்தம்மையேபெட்டருகணைந்த
கொடியபோர்சவட்டாசுவாக்கொழுந்துளைக்கரத்தாற்
றொடிகுலாவியதோளினைக்கரும்பெனச்சுழிப்ப
வடிகள்பாலிடவெடுப்பதாமெனவகங்களிப்பார். ௨௨௬

அலகிலாதபல்லுயிர்களும்விம்மிதமடைய
வுலகெலாங்குளிர்செய்யுமிக்காவலர்க்குவமை
விலகுதன்னுடைவனப்பினால்வினையினைமுளத்தி
லிலகுகாமவெங்கருப்பிடவிசைவதோவென்பார். ௨௨௭

கண்கதிர்ப்பொலந்தாரினன்காமவேளுடற்ற
வினையுநம்முகநோக்கலனிவன்றிருக்காஞ்சி
வனமழித்தெழில்புரிந்தலான்மடந்தையர்ப்பாரா
நினைவுபூண்டுயர்விரதநேர்ந்தான்கொலோவென்பார். ௨௨௮

வட்டவெண்குடைமதிக்குடையாகுமன்னவனும்
பட்டவேளுருப்படைத்தவனுமெனப்படர்ந்து
மொட்டுலாமுலைக்கணைபுயக்கருப்புவின்முறையாம்
பெட்டுநின்கரத்தணைப்பதுபெருமவென்றணைவார். ௨௨௯

இருளுலாங்குழன்மாதர்கள்பலருமிவ்வாறு
மருளுலாமதன்கணைக்கிலக்காயினர்வழுத்தத்
தெருளுலாந்திறன்மன்னவன்றிண்களிறுகைத்துப்
பொருளுலாந்தனதணிநகர்கடந்தனன்போந்தான். ௨௩௦

கதிகொள்சேனையின்முழக்கினைக்காரெனக்கருதி
வதியின்பாங்கமரிலஞ்சியோதிமங்கள்வான்புகுவ
துதிகொளிந்திரன்புவியினிலரசுசெய்தோற்ற
நிதிகொள்வானவர்க்குரைத்திடப்போவதுநிகர்ப்ப.' ௨௩௧

பொன்னிமாமனையாடனைப்புணர்ந்திடாதிகந்த
தென்னையோமனக்குறிப்பினையறிதுமென்றெண்ணிக்
கொன்னும்வார்கடல்குறுகினனெனப்படைக்குழாத்தோ
டன்னமாபூங்காவிரிகுறுகியங்ககன்றான். ௨௩௨

நாடும்பற்பலகானமுநகரமுங்கடவா
வோடையானையினொருத்தடைமன்னவனடைந்தா
னீடுமன்பர்களுளத்தினுஞ்சிரத்தினுநிருத்த
மாடுமெண்ணலார்காஞ்சிமாநகரணித்தாக. ௨௩௩

கொச்சகக்கலிப்பா.

பொன்னாடர்கோன்வருவானெனப்பெருமான்புகன்றமொழி
முன்னேபெற்றுறுங்காஞ்சிமொய்குழற்றெய்வதமின்னு
மென்னேவந்திலனென்றுதனைவானத்திடைதுருவத்
தன்னார்கைத்தலநிமிர்த்தாற்போன்றதளிர்வனங்கண்டான். ௨௩௪

பரவுபெருமானருளாற்காஞ்சிவளம்பயிற்றவரும்
வரமுணர்ந்தவ்வயின்முன்னேதனைக்காணவந்திருக்கு
மரமகளிர்காண்டலுநின்றாட்டயர்வதெனவளிபாய்
குரவமலர்க்கொடிபலவுங்குழைந்துநுடங்குவகண்டான். ௨௩௫

தமதுருவமொருகாலைத்தழீஇக்கொண்டநெடுவிசும்பி
னமரர்களுயகன்வந்தானெனத்தனைக்கண்டார்வமொடு
குமரிமயிற்குலமுமிருள்கூர்நிறத்தகுயிற்குலமு
மிமிழிசையுநாடகமுமெங்கணுமீட்டுவகண்டான். ௨௩௬

இந்திரன்வந்தடவியெலாமிறுக்குமெனவிறைமாற்றந்
தந்ததுணர்ந்தெனக்காடுசினஞ்செய்துதானாருஞ்
சுந்தரவாகனமாகிச்சுலவுகருமுகிலினத்தை
யந்தரத்தினியங்குதொறுமடர்ந்துநெருக்குவகண்டான். ௨௩௭

விடமுருக்கும்பணப்பாந்தள்விமலர்திருமார்பகத்துப்
படவரவத்தொடுமுறவுபாராட்டிப்பிலவழியே
யிடமுடைத்தம்பாதலத்துக்கேகுவபோற்றனைநோக்கித்
தடநெடும்புற்றளைகடொறுஞ்சார்ந்துகரப்பனகண்டான். ௨௩௮

ஆளவருந்தனைநோக்கியழிவுதமக்குற்றதென
வூளையிடுகின்றனபோலொளியுமிழ்மண்டலமறைய
நீளுமிருட்கானகத்துநிரந்தமலர்த்தருமுழுதுங்
காளகமென்கருப்போதைகாட்டியசைவனகண்டான். ௨௩௯

இலகுமரக்கொளிபடைத்தபின்னருந்தீர்ந்துளவணிந்த
தலைவனவன்றமைநிகர்ப்பத்தாங்களுமங்குயர்தவத்தா
னிலவுமரக்குருவாய்ந்துநிற்பனபோற்பூவையெலாங்
குலவியகோங்குமிழ்தாதிற்குளித்தொளிருங்கவின்கண்டான்.

ஓங்குபுளினத்தரிகளுருத்தழித்தகரிக்கோடு
தாங்குபொலம்பூங்கடுக்கைபிறைதவழுஞ்சடைத்தேவை
வீங்கியவன்பாற்றொழுதுமேவரியதவமுஞற்றி
யாங்கண்ணுயர்சாரூபமடைந்தவர்போல்வனகண்டான். ௨௪௧

வனமழிப்பவடைந்திடுந்தன்வரவறிந்துமுன்னாகச்
சினமொடுதம்முடற்றேமேசிதைத்திறப்பதெனவிலங்கி
னினமுழுதுமொன்றோடொன்றிகலியிருஞ்சமர்விளையா
வனலுறழுநெய்த்தோர்கான்றுவிளிவனகண்டான். ௨௪௨

••அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இவ்வகைவளங்கணோக்கிவனம்புகுமெல்லையேழு
பௌவமென்றயிர்க்குந்தானைப்படரொலிகேட்டலோடு
மௌவியவேடராகியணங்கியசிந்துமேதன்
றெவ்வடுதிறன்மாமேதனிருவருஞ்சீற்றங்கொண்டார் ௨௪௩

நம்முடைவனத்தஞ்சாதுநண்ணியபடைகளெல்லா
மிம்மெனுமுன்னர்க்கோறுமெனத்தெழித்தெழுந்துவல்லே
தம்மினத்தவரைக்கூவத்தலைத்தலைநின்றவாண்மைத்
தெம்முனையடுவோர்வேடர்திரண்டனரொல்லைமாதோ. ௨௪௪

காட்டினிற்சரிக்கும்வேழக்கணங்கள்கண்டனையர்தோற்றத்
தீட்டுவன்புலியேறன்னபாய்த்துளரெதிரொன்றின்றி
மாட்டுதற்றிறத்திற்சிங்கவலியினரெவர்க்குமுட்கு
மூட்டுறும்வெகுளித்தீயான்மூரியஞ்சரபமன்னர். ௨௪௫

விளைத்திடும்வேட்டைதண்டாவினையினான்மடங்கலூனுங்
களிற்றுடற்புலாலும்வேங்கைக்காழ்படுநிணமுநீருங்
குளித்தொளிர்வேலும்வாளுங்கோலகளும்வளையுந்தண்டுந்
திளைத்தகையினராய்முன்னர்ச்சென்றனர்செருவின்மூண்டார். ௨௪௬

சிலையினைநோக்கினர்கடெரிகணைநோக்கினர்கண்
மலையெனத்திரண்டதிண்டோள்புடைத்துவாய்மடித்துத்தின்றூ
ரலர்முகவுரோமங்கையிற்றிருக்கினாழற்கண்சேந்தார்
கொலைமுகக்கூற்றமென்னக்கொம்மெனத்துள்ளிப்பாய்ந்தார். ௨௪௭

துடியினமார்ப்பக்காலிற்றொகெழலார்ப்பவாளி
னிடியெனவுலம்பியார்த்தாரெழுமொலிகேட்டலோடுங்
கடலெனமுழக்கம்யாதுகாண்கெனமன்னன்கூற
வடுவறுமொற்றரோடிவந்தனர்புளிஞரென்றார். உசஅ

படையொடுதலைவர்தம்மைப்பற்றினிர்தம்மினென்று
விடுதலுமவரும்விட்டார்த்தேகினர்விளைந்தபூச
லிடைபடுமாமுந்நூறுமெறிந்தெறிந்திரண்டுகாதங்
கடிகையினகற்றினார்கள்கணிச்சியிற்காலாண்மாக்கள். உசகூ

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திரிந்ததாடியரிறுக்குகச்சினர்வரிந்ததிண்கழலினர்மறஞ்
சொரிந்தவாய்தவகையரவுமேந்துமிருதோளர்சாலிகைகொண்மெய்யினர்
புரிந்துபோரிலிடையாதவாற்றலினர்பொள்ளெனக்கடவுளேத்தினு
ரிரிந்துகூற்றுமுளமஞ்சநாணொலியெழப்பினர்கணைதெரிந்தனர். உ௫௦

கங்கர்கொல்லர்கருநாடர்மாகதர்கடாரர்குச்சரர்கலிங்கர்கள்
கொங்கர்சீனர்குருநாடரொட்டியர்குலிங்கர்கொங்கணர்விதேகர்கள்
வங்கர்மாளவர்தெலுங்கர்பல்லவர்மராடர்பப்பரவர்கன்னட்
ரங்கர்சிங்களர்களாதியோருமுடனார்த்தெழுந்தனரொருங்கரோ.. உ௫க

தேர்களூர்ந்தனர்மதத்தயானைகள்செலுத்தினர்பரிகளூந்தினர்
காரெனப்படைவழங்கினர்படைகளன்றுவேடருய்வழங்கினு
ரார்களற்றமலிதூசுமற்றகலினங்களற்றவிசிகச்சுடன்
வார்களற்றவினநாடொணுவகைமலைந்துளாரிருதிறத்தரும். உ௫உ

கூம்புடைப்பெரியதேருடைந்தனகுழாங்கொள்குஞ்சரமலிந்தன
வாம்பரித்திரள்விழுந்தமள்ளர்கண்மலங்கிவீழ்ந்துசிலர்மாய்ந்தனர்
தோம்படைத்தமறவேடருஞ்சிலர்துடித்துவீழ்ந்தனர்பெரும்பிண
மாம்பறந்தலையினேரிகங்கமலகைக்குலம்பிறவுமார்ந்தன. உ௫௩

கரமிழந்துரமிழந்துகாறுடையிழந்துகண்சிரமிழந்துசெங்
குதிருபொங்கவயமள்ளரெண்ணிலருடைந்துகொட்குமமையந்தனிற்
பெரிதுவெஞ்சமர்விளைந்ததோர்ந்துபிறைமாமருப்புடையொருத்தன்மால்
கரியையூர்ந்துகலிகாலனுங்கடிதினேகினனவர்கள்கண்டனர். உ௫ச

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறங்கிடந்திமைக்கும்வேந்தைக்காண்டலுமளவாவீரத்
திறங்கிடந்திமைக்குஞ்சீற்றந்தீர்ந்துநின்வரவுநோக்கி
யிறங்கிடந்திமைக்கும்பூணாய்நெடிதிவணுறைந்தேஞ்சாப
மறங்கிடந்திமைக்குங்காஞ்சிவளம்படப்புரத்தியென்றார். உ௫௫

கச்சிமாநகரைமுன்போற்கவின்பெறத்திருத்துகின்றா
மச்சிவபுரத்துக்காறுகாட்டுமினுங்கணுள்ள
வெச்செழுவளமுஞ்சொன்மினென்றிறையியம்பலோடு
நச்சியவுளத்தாற்போற்றிநவிற்றுவான்சிந்துமேதன். உ௫௬

அண்ணலங்கருணைத்தோற்றத்தருந்தவரிருவர்நாளு
நண்ணிவாழ்ந்திருக்கின்றார்களுசியினுயிர்க்குங்காலா
லெண்ணுமூன்றியோசனைக்குளிடைப்படுமுயிரையெல்லாந்
துண்ணெனவீர்த்துத்தின்றுதுளக்குமோர்பூதமுண்டால். உ௫எ

வனப்பினிற்சிறந்தபெண்மைவடிவுளளொருவனுள்ளா
னெனப்பிறபலவுஞ்சொல்லுமேல்வையிலலியாந்தண்ட
னனப்பொலிநடையோசிங்கத்தணிநடையோவென்றுள்ளக்
கனற்படைமன்னன்முன்னர்க்கடிதுவந்தடைந்தான்மன்னோ. உருஅ

மன்னனைக்காண்டலோடும்வன்னியிற்பஞ்சிட்டென்னக்
கொன்னும்வாய்முனிவன்சாபந்தீர்ந்துமுன்னுருவங்கொண்டான்
றன்னிகர்சிந்துமேதன்றனுந்தொல்லுருவம்பெற்றான்
பொன்னவிரொளிஞ்னும்புந்தியின்மகிழ்ச்சிபூத்தான். உருகூ

அவரொடுமளவளாவியணிநகர்க்காஞ்சிபுக்குக்
கவலைதீர்கருப்பத்தானவதியெனுங்காளிதன்னைத்
தவலருவிதியிற்பூசித்தவடருந்தனிவாள்கைக்கொண்
டிவறிநின்றுயிர்ப்பசினீர்சகும்பூதமுன்னெதிர்தலோடும். உகூ0

அஞ்சியப்பூதம்யான்வாழ்வரைப்பினிலடைந்திட்டென்னை
நஞ்செனவழன்றுகோறலொன்றுகொளினக்கென்றோத
வெஞ்சலில்லையமெல்லாம்யானரசளிக்குங்காலை
வஞ்சநின்னனையோர்க்கெங்கண்வாழ்விடமெனவப்பூதம். உகூக

மாயிருந்திறலோயன்னதாகமானுடமாண்டொன்றற்
காயிரம்பலிதாவென்னப்பத்துநூறவரையீவே
னீயவைகோடிமற்றுநீடுயிரலைத்தியாயிற்
காயெரிவாளினீர்வல்காண்டியென்றுறுத்துநீக்கி. உகூஉ

முரிதிரைசுருட்டுந்தெண்ணீர்முருகவிழ்கம்பைமூழ்கி
யெரியவிர்ந்தனையசெங்கேழிணர்விரிமாவின்மூலத்
தரியயன்பரசிக்காணாவண்ணலைப்பூசையாற்றி
யுரியபேரின்பவெள்ளமூற்றெழத்தொழுதுபோந்து. உகூ௩

செவ்விசேர்காமக்கோட்டத்திருத்தலம்புகுந்துகண்டோ
ரௌவியமிரிக்குமஞ்சதீர்த்தநீராடியாங்குக்
கொவ்வைவாயுமையைப்போற்றிக்கோமளையருளால்யாரு
மிவ்வெனவறியாமேன்மையெழிலறச்சாலைகண்டான். உகூச

மங்கலநகர்முன்போலவளம்பெறக்காண்பான்முன்னச்
சங்கரிவளர்த்தநாலெண்டருமசாலைகளும்பொன்னாற்
பொங்கொளிமணியாற்செயதுபுதுக்குபுபின்னர்மாசித்
திங்கள்சேர்மகத்திற்கமபந்திருநகர்நாப்பணட்டான். உகூரு

நூல்வழிவீதிபோக்கிநொச்சிவிண்ணுரிஞ்சக்கண்டு
மேல்வளருலகநாணமேதகுநகராமாக்கி
நால்வகைவருணந்தோறுநான்குமூவாயிரத்த
சால்புறுகுடிகளேற்றித்தாபித்தான்பிறவுமன்னோ. உகூகூ

திருவநீணகரினட்டுந்தேசிகக்கொடிகளோங்கித்
துருவனூர்பிணித்துச்சுற்றுஞ்சூத்திரந்தட்பக்கொட்கு
முருவவான்கோளுநாளுமசைவறவும்பர்நிற்பப்
பெருநகர்ப்புதுமைநோக்குமபெட்பொடுநின்றன்மான. உகூஎ

பாங்கரினுலவுந்தோறும்பதாகையினுதியைமேல்கொண்
டோங்கியகிரணம்பற்றக்கீழுறுகிரணமூலந்
தாங்கவிண்சுடர்களுப்பட்டயங்குவகழையிற்கோத்துத்
தூங்கியகயிற்றினேறும்பொருநர்கடுணையுமாதோ. ௨௬௮

கொடியலைந்தெறியுங்காற்றாற்கொட்புறுவளியாதாரக்
கடிபடுநாகநாடுகம்பியாநிற்குந்தோற்றம்
வடிவினிற்சிறந்தகாஞ்சிகீழுறவதியநாமெய்ப்
படிமிசைவதிவதென்னும்பயத்தின்மெய்விதிர்ப்பதேய்க்கும். ௨௬௯

கங்கைநீர்த்திவலைதூவக்கற்பகம்வாசம்வீசத்
திங்களுங்கதிருங்கீழாச்சென்றுறவுயர்ந்தசெம்பொன்
பொங்குமேனிலையின்மைந்தர்பூவையரோடும்புலவி
யங்கண்வானமரரென்னவரும்பெறற்போகந்துய்ப்பார். ௨௭0

கரிசறுகம்பையாடிக்கற்பகக்காவுளாடி
வருபெருந்தேவர்மாந்தர்வேற்றுமையறியமாட்டார்
சுரர்கடம்மிருக்கையென்றுமாந்தர்சூழ்மாடஞ்சேர்வார்
நரர்கடம்மிடமென்றும்பர்நயந்துறைமாடஞ்சேர்வார். ௨௭௧

நகருடைவளப்புநோக்கநாடியோநயந்துவேட்ட
தகவுறவளிக்குமாவின்றனிமுதலிறைவன்பாத
மகனுறுமன்பிற்போற்றமுன்னியோவறியோநாளும்
புகழ்பெறுமுகுந்தனுதிப்புலவராங்கணையுந்தோற்றம். ௨௭௨

கணங்கொளுங்கற்பநாட்டுக்கன்னியர்குழலிற்காஞ்சி
யணங்கனார்கூந்தலூட்டுமகிற்புகைநிவந்துசூழ்ந்து
மணங்கமழ்கின்றநீர்மைமதித்திடாரியற்கைவாச
மிணங்கியதென்றன்னோரையேத்துவரறியவல்லார். ௨௭௩

வேள்வியிலுண்ணப்புக்கவேந்துதன்மீட்சிநோக்கி
வாழ்வதோகொடுப்போர்கையின்வண்மையைக்கவரநன்கு
சூழ்வதோவறிதறேற்றேஞ்சுடர்மணிச்சிகரம்விண்ணம்
போழ்வளம்படைத்தமாடப்பொருப்பினிற்றவழுமேகம். ௨௭௪

முலையெலாங்கிள்ளுக்கொள்ளாமொய்குழன்மடவாரில்லை
தலையெலாம்புலவிமாதர்தாள்படாகொழுநரில்லை
கலையெலாங்கற்றுவல்லாககவிபடுபுலவரில்லை
சிலையெலாந்துவளவெய்யாத்திறல்படுவீரரில்லை. ௨௭௫

மின்னுகனகமேருமீமிசைக்கொடியைநாட்டி
மன்னனாயுலகமெல்லாமலரடிப்படுத்துநீடும்
பொன்னுலகிறைவன்றானேபுதுக்கினனென்னிலந்தக்
கொன்னுடைநகரின்காமர்கூறலாம்படியதேயோ. ௨௭௬

இமையவர்துயின்றாரேனுமெழின்மணிமுரசந்துஞ்சா
வமைவுடைக்காஞ்சிவைப்பினரும்பெறற்காமநோக்கி
னுமையொடுங்கம்பவாணர்க்கொலிவிழாநடாத்திப்பாரின்
சுமைபொறுத்தினிதுவாழ்ந்தான்றொடுகழற்கலிகாற்சோழன்.

அன்றினாவிவல்லேயழிதகமுறுவல்கோட்டி
வென்றிகொண்டுலசங்காக்கும்விறற்கலிகாலனங்காண்
மன்றலங்காஞ்சிமூதூர்மத்தியினட்டுந்துணை
யின்றுமெவ்வுலகுங்கச்சிக்கல்லெனவிசைக்குமாலே. உஎஅ

இருவினைப்பிறவிமுற்றுமிரித்தருள்கொழித்துமுத்திப்
பெருநலமினிதுநல்கும்பிரமாண்டபுராணந்தன்னின்
மருமலர்ப்பொகுட்டுவாழ்க்கைவானவன்சனற்குமாரற்
கருளியகாதைமற்றிங்கறைந்தனம்பிறவுஞ்சொல்வாம். உஎகூ

நகரேற்றுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௯0கூகூ

# 68. தீர்த்தவிசேடப்படலம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உரைபயில்காஞ்சிநகர்வயிற்றரங்கமொண்மணிநித்திலக்குவையும்
வரிவளைத்திரளும்பவளநீள்கொடியுமாழையுந்திரைத்தயலொதுக்கும்
விரைகமழ்தீர்த்தமெண்ணிலவவற்றுண்மேம்படச்சிறந்தமூன்றுளவாற்
புரைதபுமவற்றின்வளங்கெழுமேன்மைமுறையுளிப்புகன்றிடப்படுமோல்.

வண்டடைகிடந்துசெவ்வழிபாடுமதுமலர்ப்பொகுட்டுவீற்றிருக்குங்
குண்டிகைக்கரத்தோன்மகவினைமுடித்துக்குளிர்புனலாடுவான்விளிப்ப
வண்டரும்வியப்பவளப்பருந்தீர்த்தமனைத்தும்வந்திறுத்தகாரணத்தாற்
றெண்டிரைவரைப்பின்மேம்படுசிறப்பிற்றிகழ்ந்ததுசாறுவதீர்த்தம்.

அத்தகுதிருத்தத்தீம்புனன்மகஞ்செயந்தத்திறைடுறுந்தவத்தோர்
சத்தியவுலகிற்சார்ந்துதண்மலரோன்கற்பம்வாழ்ந்திருப்பர்கள்ளயின்றோர்
பத்திசெய்குரவன்மனைபிறர்மனையைப்பற்றினோர்தந்தையைக்குருவை
மெய்த்தகட்போரைப்பிழைத்தவரிவருமாடுறின்வினைகடிந்துய்வார்.

இறந்தவர்க்காங்குச்செழும்புனலிறைப்பிற்பிதிர்க்குலமின்பமீக்கொள்ளு
மறந்திகழ்வியமங்கழ்த்தினெனன்றனந்தமாகுமிப்பெருந்தகுதடத்தின்
மறந்தபுமுனிவர்கடவுளர்மனிதர்யாவருமாசிமாமதியில்
விறந்துசென்றெறிநீர்குடைந்துதத்தமதுமேதகுமிருக்கையிற்சேர்வார்.

கும்பமாமதியின்வைகறையணைந்திக்குளிர்புனல்விதியுளிதோய்ந்து
பம்புநான்மறையோர்கேென்றனபசும்பொன்பத்தியினளித்தொருமாவிற்
கம்பரைத்தொழுவோர்புனல்படிந்ததனூற்கரிசெலாமிரியமாதவராய்ச்
செம்பொனன்கொடையாற்செல்வராய்க்கம்பர்தெரிசனததாற்கதியடைவார்.

வீங்குநீர்ப்புவியினீண்டவான்பரப்பின்மேதகுந்துறக்காட்டகத்தி
னீங்கிதற்கிணையாந்தீர்த்தமொன்றேனுமின்மையால்யாவரும்பழிச்ச
வோங்கியதீர்த்தர்ாசநற்பெயரான்விளங்குமிவ்வொண்புனல்படிந்தோர்
தீங்குதீர்ந்துயர்ந்தகதிபெறுங்கதையுஞ்சிலவெடுத்தறிந்தவாபுகல்வாம்.

கலித்திலத்துறை.

உலகினிற்கொடுங்கோலெலாமொருபுடையொதுக்கி
நிலவுவெண்குடைக்குளிர்நிழநிசைதொறுநிரப்பிக்
குலவிவீற்றிருந்தாசுசெய்மனுகுலத்துதித்த
தலைமைபூண்டபெயர்பார்த்திவன்றுன்மிகனென்பான். அ

விளிந்ததன்னுடைத்தாதைவெம்பசியினீர்நசையி
னுளைந்துயாவுறுஞ்செயலறிந்ததுவிரைந்தொழிப்பா
னளிந்ததீம்பழத்தேறலவார்ந்தளியினமுரலுங்
குளிர்ந்தபூம்பொழிலுடுத்தசீர்க்காஞ்சியைக்குறுகி. அ

வள்ளவாய்ச்செழுங்கமலத்துவண்டுபாண்மிழற்றுந்
தெள்ளுதீம்புனலத்திருச்சறுவதீர்த்தத்தி
னுள்ளுமாதவர்க்கமிழ்தெனவுளத்திருந்துணர்த்துந்
துள்ளுமான்மறிக்கையினார்த்தொழுதுநீராடி. கூ

சந்திமுற்றுறப்புரிந்துதன்றாதையைக்குறித்துக்
கந்தநீர்க்கடன்முதலியபிதிர்க்குலங்களிப்ப
வந்திலாற்றியந்தணர்தமக்கருநிதியார்த்திக்
கொந்துலாமலர்மாவடிக்குழகனைவணங்கி. க0

தடாதபேரொளித்தாமரைநாயகன்றடந்தேர்
வடாதுமாதிரமணுகியகாலைமாசொன்று
மடாதவோரையுநாளுமுற்றமைந்தனநாளிற்
கெடாதமெய்த்தவமுனிவரர்கிளந்திடும்வழியான். கக

மருவினார்தமக்கிருண்மலக்குறும்பெலாமடித்துக்
கருணைகூர்மணுவீச்சரப்பெயரினாற்கடுக்கைக்
குருநிலாமலர்த்தொங்கலானருட்குறிநிறுவித்
தெருளுமாகமமுறையுளிப்பூசனைசெய்திருந்தான். கஉ

தனையனின்னணம்வழிபடுந்தவறிலாப்பயத்தா
லினையுநோயுழந்தாற்றருந்தாதையெத்துயருந்
துனையநீத்துமும்மலத்தொடுதொல்லையேசூழ்ந்த
வினையுமாற்றினன்மெய்யருளினைத்தலைப்பட்டான். கங

ஆயகாலையந்தரத்தொருமொழிநினையளித்த
தூயதாதைநற்கதியினைத்துயரலாந்துமித்து
மேயினானெனவெழுதலும்வெற்றிவேலரச
னேயதன்பரிவொழிந்தனனின்பமீக்கூர்ந்தான். கச

மீட்டுமண்ணலார்பூசனைமேதகவாற்றி
மோட்டுநீர்ப்புவிமுழுவதும்புரந்தபின்றானுங்
காட்டினூடகநடித்தருள்கம்பர்பேரருளா
லீட்டருஞ்சிவவீட்டினையிறுதியிலடைந்தான். கரு

அமரரச்சுறவயிற்படைவிதிர்த்துமூவுலகுங்
குமரிவெண்குடைநிழல்செயக்குலவிவீற்றிருந்த
தமனியப்பெயர்த்தானவனுயிர்த்திடுந்தனய
னிமிர்பெரும்புகழ்மாண்டகநிகழ்பிரகலாதன். கசு

நுந்தையாருயிர்விரகினானெடியினிற்குடித்து
வந்துமுற்றியகொலைப்பழிமாற்றுகென்றுரைக்கும்
மைந்தன்மாலிகைத்துளவினான்றன்னொடும்படர்ந்து
நந்துமுத்துயிர்நறும்பணைக்காஞ்சியைநண்ணி. கஎ

கண்டகாலையேகாழ்படும்வல்வினைத்தொடக்கு
விண்டுபோதரும்விரைகுலாஞ்சாறுவதீர்த்தத்
தெண்டிரைப்புனலாடினன்றென்புலத்தவர்க்கு
மண்டுமன்பினற்செய்கடன்மரபுளிவகுத்தான். கஅ

மருட்சிமிழ்ப்பறவரமருளிரணியீச்சரப்பே
ரருட்சிவகுறியிருவினைஞற்றினன்பூசை
தெருட்சிவக்கதிதந்தையைச்செலுத்தினன்ருனும்
வெருட்சிதந்தவன்கொலைப்பழிவீட்டிமேதக்கான். கக

கலிவிருத்தம்.

கழுதொடுகொட்டிடைநடிக்குங்கண்ணுதற்
ருெழுதெரிவளர்த்துளத்தூய்மைமேம்படும்
விழுமறைகுலத்தினிற்பிறந்தொர்வேதியன்
பழுதுறுபாதகக்குழிசியாயினன். உ௦

முத்தவிர்முறுவலுமுலையுங்காண்டொறும்
பித்தினனும்மதுப்பிலிற்றித்தாதுகுந்
தொத்தலர்மலர்தொறுந்துன்னும்வண்டுபோன்
மெய்த்தசீர்ப்பிறர்மனைவிழைந்துமேவுநாள். உக

தகவுறும்பிறர்க்குரித்தையன்மாரிணை
முகிழ்முலைத்தடத்திடைமுயங்கிச்செல்லுறு
மிகவருந்தவற்றினையேங்குநீருடை
யகலிடம்புரக்கும்வேலரசன்கேட்டனன். உஉ

கேட்டலும்வெள்ளொளிகிளரநக்குமென்
ருேட்டலர்த்தாமரைசுடர்ந்துசேர்ந்தென
நாட்டமிக்கெரியுகநயந்துதன்னிரு
மாட்டமருநுழையரைவலலையேவியே. உ௩

வளமருள்வயலகளுமணிபெய்பேழையுங்
களமருங்கனகமுங்காமர்பொன்மனை
யுளமருவியவெலாவுறுப்பும்வவ்விக்கொண்
டளமருமாறுறுத்தகற்றினரோ. உச

நலம்படுவாழ்க்கைநல்லறிவுதன்மனத்
திலம்படுமாறுபோலிலம்பட்டேங்கினன்
புலம்படுமாயிடைத்தணந்துபுன்புலைக்
குலம்படுமொருத்திதன்கொங்கைதோய்ந்தனன். உரு

சுந்தரமகளிர்தோடோயுமுந்தைநாட்
புந்திதீண்டவும்பொருப்புலையைப்புல்கலா
லுந்துமூழ்வினைமறைத்தருத்துமூர்விடை
யந்தணன்விரகையாரளக்கவல்லரே. உசு

நவையழுக்குடைநனிநாறமெய்யெலாங்
குவைபிணப்புலான்முடைகொழிக்குமாதினைச்
சுவையமிழ்தினுமிகத்துய்த்துச்சான்றவ
ரவ்வநகமைந்தரையளித்துவாழுநாள். உஎ

பாவமிக்குயர்தலாற்பஞ்சிற்றீங்கர்
வீவருநோயினுன்மெலியமைந்தருங்
காவியங்கண்ணியுங்கருத்துவேறுபட்
டோவியவன்பினுலோம்பலோம்பினர். உ அ

அருளியும்வெருண்டுநோயறுத்துடங்குநின்
றொருவருந்துணைவராயுய்த்தளிப்பவ
ரிருவருமறிகலாவிறைவரேயலான்
மருவியமைந்தருமனையுமல்லரே. உ கூ

செல்லலேயுழந்தினிச்செய்வதென்னெனு
மல்லலிற்கவலைகொண்டங்கணீங்கினன்
கொல்லருங்கொடும்பிணிப்பசியைக்கொல்லிய
வெல்லையில்பதிதொறுமிரந்துசெல்லுவான். ௩0

மறிபுனற்றடந்தொறுமெழுந்தவாளைமீன்
செறிமலர்ப்பொழிற்சினையலைப்பச்சிந்திய
நறைகமழ்காஞ்சியைநெறியினண்ணினு
னிறுதியுமாங்கவற்கிறுததாகலும். ௩க

தொன்றுதான்செய்வினைத்தொடர்பினுற்கொலோ
வன்றியேதன்குலத்தந்தணாளர்க
ணன்றுசெயறவினைநலத்தினுற்கொலோ
சென்றனன்சாறுவதீர்த்தப்பாங்கரின். ௩உ

முறுகியநீர்நசைமுருக்கநாவெலாம்
வறலவத்திருத்தடத்திறங்கிவார்புன
னிறையவாய்மடுத்துநீள்கரையிற்போந்தவட்
பொறையுடற்பாதகப்புக்கினீங்கினன். ௩௩

இழித்தகுகரியவுமிலங்குமேருவி
னுழித்தலைப்படினொளிவிளங்கும்பொன்னிறங்
கொழித்திடுமாறுபோற்குலவுமத்தடஞ்
செழித்தநீர்மேன்மையாற்றேவனுயினன். ௩௪

பண்ணவர்நயமொழிபகரத்தெய்வத
விண்ணிழிவிமானமேல்கொண்டுவிண்மிசை
யண்ணலமுலகெலாமழகுநோக்குபு
கண்ணுதலுலகினைக்கைகொண்டானரோ. ௩௫

கலிநிலைத்துறை.

தக்கதொல்புகழயோத்தியிற்றனிக்குடைநிழற்று
மிக்குவாகுவின்மரபுளானிரணியநாபன்
றொக்கதானவர்செருக்கடந்திந்திரன்றுணையாத்
திக்கெலாந்தொழத்திண்புவிபுரந்துவாழ்நாளில். ௩௬

அன்னவன்மனைக்கிழத்தியரிருவருளன்னக்
கன்னிமென்னடைக்கலாவதிகலாதரற்பயந்தா
ணன்மகப்பெறுநவில்பதுமாவதிமாழ்கிப்
பன்னுமாற்றவள்பழிப்புரையழுதழுதுரைத்தாள். ௩௭

கேட்டமன்னவனின்மொழிளெந்துஙன்கருளிக்
கோட்டமின்றிவாழ்காலேயிற்கற்பகக்கொழும்பூந்
தோட்டலங்கலந்தோளிறைவிளிப்பவண்கனக
நாட்டடைந்தனனவுணரைநாமறச்செகுத்தான். ௩௮

வாகைநல்கியகோன்றனைமார்புறத்தழுவி
யோகையால்வரங்கொள்கெனவினவியொண்சிறைய
தோகைநேர்பதுமாவதிமகப்பெறுதோற்ற
நாகர்கோன்றரப்பெற்றனன்விடைகொடுநடந்தான். ௩௯

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விண்ணினின்றிழியும்வேந்தன்மேவருநெறிக்கண்மாந்தர்
கண்ணிணைகடங்காச்செங்கேழ்க்கதிரொளிப்பரிதித்திண்டேர்ப்
பண்ணமைபுரவிதூண்டும்பாகனேநோக்கியேயே
திண்ணியகுறங்கிலானென்றவமதிசெய்துநக்கான். ௪௦

அறங்கிளரருணப்பாகனஃதறிந்தழலிற்சீறிக்
குறங்கிலனென்னவெள்ளிக்குறுநகைவிளைத்தாய்வைத்த
பறங்கிளர்வேலினுய்நின்மைந்தனுமூருவின்றிப்
பிறங்குகவென்னச்சாபம்பேதுறநல்கினனே. ௪௧

வீடருஞ்சாபத்தீர்வுவேண்டுமுனெழுமானீர்க்கு
மாடுபொன்மணித்தேர்செய்ததினகறலும்வாளாசென்று
நீடியகழற்கால்வேந்தனெடுநகரயோத்திசார்ந்தான்
கோடியநுதலினளுங்குறங்கிலாமகனேப்பெற்றாள். ௪௨

முரணியவயவர்ஞாட்பின்மொய்யமர்கடந்தவேந்த
னிரணியபாதஞ்சேர்த்தியிரணியபாதனென்னத்
தரணியோர்வியப்பநாமஞ்சாத்தினன்காதன்மைந்தன்
சரணிலானென்னுமுள்ளக்கவலையிற்றங்குநாளில். ௪௩

மடந்தபும்வாமதேவமாமுனிமொழியுட்கொண்டு
குடம்புரைகுவவுக்கொங்கைக்கோற்றொடிமனேயுமற்றைக்
கடும்புமங்கொருங்குபோதக்கான்முளையோடுநண்ணி
விடம்பயின்மிடற்றுப்புத்தேண்மேவருங்காஞ்சிசேர்ந்தான். ௪௪

அத்தலேமாவின்மூலத்தனிமுதலடிகள்போற்றித்
தத்துநீர்ச்சறுவதீர்த்தத்தடம்புனல்விதியினடிப்
பத்திராரேசமேயபகவனைவழிபாடாற்றி
யித்திறத்தையொன்பானளியல்புளியொழுகினனே. ௪௫

வருவழிநாளும்போந்துவார்திரைச்சறுவதீர்த்தப்
பெருகுநீர்குடையுமேல்வைப்பிறைமுடிச்சடையார்முஞ்சித்
திருவரைமறைச்சிறுன்போற்சென்றுநீராடுமைந்தன்
கரைமிசைவைத்தபொற்கால்கவர்ந்துகொண்டோடலுற்றார்.

அனைவருங்கள்வன்கள்வனெனத்தொடர்ந்தனுகலோடுங்
கனைகுரற்றிருநீர்தோயும்புதலவனுங்கால்கள்பெற்றுத்
துனைவொடுகரைக்கணேறித்தொடர்ந்துடனேடிச்சென்றான்
முனைவரும்பத்திராரக்கோயிலுண்முடுகிப்புக்கார். ௪௭

யாவருந்தொடர்ந்துசென்றூர்யாங்கணுந்துருவிக்காணு
ரோவறுமொளிப்பொற்கால்களொருபுடைதிகழக்கண்டா
ராவயின்மைந்தன்றானுமடியிணைபெற்றதோர்ந்தான்
காவலனோக்கிநோக்கிக்கழியவுமகிழ்ச்சிபூத்தான். சுஅ

வெருட்சியும்வியப்புமெய்திவிமலனார்விளையாட்டென்னுந்
தெருட்சியனாகியையர்திருவருட்பெருமைநோக்கி
மருட்சிதீர்வரங்கள்பெற்றுவளநகரணைந்துவாழ்ந்தா
னருட்செழுஞ்சறுவதீர்த்தப்பெருமையாரளக்கவல்லார். சுகூ

நித்திலத்திரளும்பூவுநிரந்தரம்வான்றிவார்ந்து
தத்துநீர்த்தரங்கக்கையாற்றடங்கரைக்கச்சபேச
வத்தனைவழிபாடாற்றுந்தடமுளததனையிட்ட
சித்தியென்றுரைப்பரிட்டசித்திமிக்குதவுநீரால். ருo

விருத்துவண்டுளருந்தோட்டுவிரிமலர்க்கமலம்பூத்து
மருத்தகுமனையதீர்த்தம்விருச்சிகமதியிற்சேர்ந்த
வுருத்திகழ்பரிதிச்செங்கேழும்பனுக்குரியவாரத்
தருத்தியிற்படியுநற்பேறனைத்தினுமிககதாமால். ருக

பண்டையவுகங்கடம்மிற்பாருளோர்கண்ணிற்காண
வண்டரங்நாளினெய்தியரும்புனலாடிச்செல்வார்
மிண்டியகலியிற்காணுமரபினன்மேவியங்நீர்
மண்டியவன்பிற்றோய்ந்துமகிழ்ச்சிமீக்கூர்ந்துசெல்வார். ருஉ

இன்னணமிமைக்குமோலியந்தரத்திமையாராடி
மன்னியதத்தம்வாழ்க்கைவைப்பினைச்செலுமோர்காலத்
தன்னமேக்குயர்த்தபுத்தேளமர்ந்துவாழுலகின்வைகுந்
தன்னேரொருவன்விச்சாதரனவணின்றும்போந்தான். ருங

திரைதவழிட்டசித்தித்தீர்த்தநீராடித்தெய்வ
விரைகமழ்கொன்றைமாலைவிகிர்தனைக்கச்சபேசத்
தரியயன்பரசுமுககணமலனைவணங்கிப்போற்றி
யுரியதன்னிருக்கைநண்ணவும்பரினெழுந்துசென்றான். ருச

புரிமணியிமைக்குமோலிபொழிகதிர்ப்பரிதிவட்டஞ்
சொரிகதிர்மழுங்கிச்சாம்பச்சுடர்ந்துபேரொளியைககால
விருவிசும்பறுத்துப்போதுமிடைவழிநனைந்ததூசி
னுருகெழுமுத்தம்போலுமுறைகழன்றுககதன்றே. ருரு

கழன்றுகுதிவலைபன்னாட்காரினம்வழங்கல்செல்லா
தழன்றவெஞ்சுரத்துநீண்டவரசினைப்பற்றிவாடி
யுழன்றநெஞ்சரக்கனுச்சிவிழுந்ததாலுலவைநீந்து
நிழன்றிடாவ்ரசுஞ்சேர்ப்பநிகழ்த்துமுற்றவத்தின்பேற்றால். ருசு

விழுத்துளிவிழுதலோடும்விட்டினன்றெருக்கசெல்லல்
கழித்தனன்கவலைவேலைகடந்தனன்பாவகருப்பை
பழித்தனன்கொடியபாலைபழிச்சினன்றவத்தின்பேற்றைத்
தெழித்தனன்மகிழ்ச்சிபொங்கிச்சிரித்தனன்றுயரநோக்கி,

வருந்துளிமழையதென்னில்வாய்மடுத்திடினுமின்ன
பெருந்துயரிரித்திட்டின்பம்பெருக்கிடாதமரர்நாட்டு
மருந்தெனினுகரினல்லால்வளந்தராதிதனுக்கென்னே
திருந்தியவேதுவென்றுசெல்லுலாம்விசும்பைப்பார்த்தான். ௫௮

ஆயிடைமுன்னுகின்றவமரனைக்கண்டுநீரிற்
றோயிடைதுளிப்பநோக்கியிதுவெனத்துணிந்துநெஞ்சிற்
பாயபேருவகைபொங்சப்படர்தரும்விஞ்சைவல்ல
தூயவன்றன்னையன்புதோன்றுறவிளித்திட்டானே. ௫௯

அழைத்தலுமருளினோக்கியெதிர்முகமாகின்ற
தழைத்தபேரொளியினானைத்தாண்மலரிறைஞ்சித்தாழ்ந்து
முழுத்தசீர்க்காதலவிம்மமுறைமுறைபழிச்சியுச்சி
செழுத்தடங்கைகள்கூப்பித்தினைதநிதுசெப்புகின்றான். ௬0

வருத்தியபசியினாலும்வார்புனல்வேட்கையாலுங்
கருத்துநொந்தழுங்கிச்சாலக்கவலுவேன்றுயரையெல்லா
முருத்திடுமருந்தாய்நின்னையுஞ்சனுய்ததளித்தியான்முன்
னருத்தியின்வருந்தியீட்டுமருந்தவப்பேறுமாதோ. ௬௧

களைகணாயென்னைக்காத்தகருணையங்கடலேசெல்லல்
விளையுநோயரக்கயாக்கைவிண்டுநின்கூறைசான்ற
துளியினாற்றூயேனாகித்தொலலையிற்பாவந்தீர்ந்தேன்
றளிமழைக்குலகமாறுத்தருவதுமுண்டுகொல்லோ. ௬௨

பாட்டளிமுரலாக்கற்புப்பனிமலரலங்கலோதிச்
சூட்டுமின்னனையார்த்தோயுஞ்சுரருணீயாரைநீதோய்
தோட்டலர்தீர்த்தம்யாதுதுரிசினேனரககணுக
வீட்டியபாவம்யாதிங்கியம்பெனவியம்புவானால். ௬௩

எரிபடுபஞ்சியென்னவினையுநோயரக்கயாக்கை
பரியும்வல்வினையினோடும்பாற்றியபண்பினோய்சேள்
புரிமுறுக்கவிழ்ந்தகஞ்சப்பொகுட்டினோனினிதுவைகும்
விரிபுகழுலகின்வாழ்விச்சாதரப்புலவன்யானே. ௬௪

உள்ளலருவகைவிம்மவுற்றியான்படிந்ததீர்த்தந்
தொள்ளைமிக்கலர்ந்தநெஞ்சிற்றுரிசினோர்க்கெய்தொணாத
தெள்ளுசீர்க்காஞ்சிமூதூர்த்திருத்தகுவரைப்பினோங்கும்
வெள்ளநீரிட்டசித்திவிரைகமழ்திருத்தமாமால். ௬௫

முதுத்துயர்ப்படுத்துச்சாலமுனிதருமரக்கயாக்கை
கதுவியல்லாந்துநெஞ்சங்கனன்றுமிக்கழுங்குநீதான்
பொதுளியமலர்ப்பூங்காவும்பொய்கையுமருங்குசூழ்ந்த
மதுரையென்றுலகமெல்லாம்வழங்குமாநகரிலுள்ளாய். ௬௬

துறந்தவர்தமையுங்கையாற்றொட்டிடினார்வம்பூட்டி
நிறைந்தவெந்துயரிற்றட்குநீள்பொருள்கவர்ந்துகொள்வா
னறந்திகழ்மறைநூலவல்லவந்தணர்ச்செகுத்தாயந்த
மறந்திகழ்பாவத்தன்னால்வல்வினையரக்கனானாய். ௬௭

52

இருபதினாறழுமைஞ்ஞூற்றாண்டுகளெண்ணில்காலங்
கருமுகிறிவலைகாலாக்கடுஞ்சுரத்தவலங்கூர்ந்தா
யொருவருநெடியபாவமுஞற்றியகொடியையேனும்
பெருகுநீரிட்டசித்திமேன்மையாற்பிழைத்தாயன்றே. ௬௮

இந்திடந்தனக்குநேரேயானெழவெனையுமன்றிக்
கந்தமென்றிவலைதூசிற்கழன்றுகத்தவங்கள்சால
முந்தைநீசெய்தாயன்றிமுயன்றுமீதெய்தற்பாற்றோ
வந்தமெய்த்தீர்த்தமெல்லாப்பாவமுமறுக்குமாலோ. ௬௯

ஆதலாற்பண்டையிட்டுமறன்கடைமுழுதுந்தேய்த்து
வேதனையரக்கமெய்யும்விளித்ததோர்துளியேயம்மா
வோதுமத்திருத்தமேன்மையுரைப்பதற்கெளிதோவென்னக்
காதரமகன்றவிஞ்சைக்கடவுளாதரத்திற்கூறி. ௭௦

திருத்தகுசிரகத்தேந்திச்செழித்ததன்பதியினுய்ப்பா
னருத்தியிற்கொணர்ந்தவிட்டசித்திநீரருளியுண்மோ
மருத்தகற்பசுமென்றோட்டுமாலிகைக்குவவுக்கோட்டுப்
பெருத்ததோளமரனாகப்பெறுவையென்றியம்பிப்போனான். ௭௧

பண்டைவல்வினையுந்துன்பும்பாற்றியவிழுமியோனு
முண்டனனிட்டசித்தியொண்புனறெய்வமேனி
கொண்டனன்விமானமூர்ந்துகுறுகினாகநாட்டைத்
தொண்டையங்கனிவாயாரிற்றுளைந்தனன்போகவெள்ளம். ௭௨

கொங்கவிழ்மலர்மென்கோட்டுக்குளிர்நிழற்கற்பகப்பூம்
பொங்கரினடிச்சேர்ந்தும்புதுமணப்போதுபூத்த
கங்கையினறுநீர்தோய்ந்துங்கடலமிழ்தினிதுதுய்த்து
மங்குளநுகர்ச்சியெல்லாமடைவினினுகர்ந்தபின்னர். ௭௩

விடுசுடர்முத்தந்தத்தும்விரிதிரைத்தரங்கவேலைத்
தொடுகடல்வரைப்பிற்றோன்றிச்சுந்தரம்பழுத்தகாஞ்சி
நெடுநகர்க்கரசனாகிநீதியினுயிர்களோம்பிக்
கடுநுகர்களத்தேகம்பர்கழலிணைநீழல்சேர்ந்தான். ௭௪

அரிமதர்மழைக்கண்மாதராடலின்முரசுகேட்டுச்
சொரிமுகின்முழக்கென்றார்த்துத்தோகைகணடஞ்செய்யும்
விரிமலர்க்காவுசூழ்ந்துமேதகுவளம்விண்ணாடும்
பரவுமுச்சயினியென்னும்பட்டினத்தொருவன்மாதோ. ௭௫

ஒருவருந்தொலைப்பாலாலொறுத்திடுங்குட்டவெந்நோய்
விரவியமெய்யன்காணாவிழியினனுடலமெங்கு
மருவருப்புடையபுண்ணனவைதொறும்புழுக்கடோன்றித்
தருமலருகுவதென்னச்சரிந்துகவருந்திவாடி. ௭௬

தருக்கிவாழ்தனதுதேயந்தணந்தனன்பெயர்ந்தூழ்த்தெய்வம்
பெருக்கியநோயினோடும்பிறருடைத்தேயத்தோர்பான்
மருக்கிளர்மரத்தின்பாங்கர்வதிந்துசெந்நெருப்பிற்சீறி
நெருக்கியபசியான்மாழ்கிநெட்டுயிர்த்தாழ்ந்துநின்றான். ௭௭

விழியிணையுறைக்கும்புண்ணீர்மெய்யெலாமண்ணுச்செய்யக்
கழிபவுநெஞ்சுபுண்ணுய்க்கரைதரக்கண்டம்விம்ம
வழுதிடும்வேலைகம்பரணிவிழாச்சேவைசெய்வான்
செழுவியச்சிறூதூர்செல்லுவார்நெறியிற்கண்டார். எஅ

காண்டலுமிரங்கியண்மிக்கரைந்தினியழாதியென்று
வேண்டியவுணவுநல்கிவிழுப்பசிமுழுதுமோப்பி
யீண்டியகுளிர்ச்சியுள்ளத்தேய்ந்தயர்வுயிர்த்தபின்னர்
மாண்டதோர்தண்டுபற்றிவம்மெனக்கொண்டுசென்றார். எகூ

நவ்விபோல்விழியிஞர்களுடசங்குயிற்றுமாடம்
பௌவநீர்படிந்துமேகம்பரந்துகண்படுத்துச்செல்லுஞ்
செவ்விசால்கன்னிகாப்பைச்சென்றனரிறைவற்போற்ற
வௌவியமிரிக்குங்கச்சபாலயத்தணையும்போது. அ0

எழுந்தநீர்நசைநாவாட்டவிரந்தனன்மெல்லவுய்ப்ப
வழுந்துபட்டலர்கள்பூத்துவெள்ளனத்தார்ப்புமல்கித்
தொழுந்தகையவர்க்குப்பாவத்தொகுதிகடுவரநீவுஞ்
செழும்புகழிட்டசித்தித்தீர்த்தநீர்பருகினனே. அக

பருகியபின்னர்நீராற்பையத்தன்முகத்தைநீவ
விருளறவிழிகள்வில்லிட்டிலங்கினவங்நீர்தோய்ந்த
கரமெலாங்குட்டமாறிக்கவின்றனநோக்கிவல்லே
வரமலியிட்டசித்திவார்புனன்முழுதுந்தோய்ந்தான். அஉ

குட்டமுஞ்சீயும்புண்ணுங்குருதியும்புழுவுந்துன்னப்
பட்டபுல்லுருவமெல்லாம்படரொளிப்பிழம்புகால
வட்டொளிமுறுவற்செவ்வாயங்கலார்மனமையாப்பக்
கட்டழகெறிக்குமேனிக்காமறகுங்காமனானன். அங

கண்டவர்வியந்துமொய்ப்பக்கரைத்தலைபிவர்ந்துசால
வண்டர்நாயகனாண்டவருளினைநோக்கிக்கண்கள்
வெண்டரளங்கள்காலமெய்யெலாம்புளகம்போர்ப்ப
மண்டியவன்புபொங்கமனங்கரைந்தவசனானன். அச

எண்ணியவரங்கணல்குமிட்டசித்தீசர்முன்பு
நண்ணிவீழ்ந்தெழுந்துநின்றுநாத்தழும்பேறவாழ்த்திக்
கண்ணனைமுதலோர்பூசைகண்டசீர்க்கச்சபேசத
தண்ணலைவணங்கியின்பவார்கலிதிளைத்துவாழ்ந்தான். அரு

அன்றுபோலாறுதிங்களத்தடவியதிபூண்டு
சென்றுநீராடிப்பெம்மான்சேவடிக்கமலம்போற்றித்
துன்றுபேரன்பினேன்றதிருத்தொண்டுபுரியமேருக்
குன்றவார்சிலையினானுங்குளிர்பெருங்கருணைகூர்ந்து. அசு

நலத்தகுமுணவுநாளுநல்குபுசிலநாட்செல்ல
நிலத்தினைப்புரக்குஞ்செங்கோனெறியளித்தருளலோடு
மலர்த்தலைக்கற்பநாட்டினமரர்கள்பெருமானென்ன
மலைத்திடுசிறப்புவாய்ப்பமனுநெறிவேந்தனுகி, அஎ

ஒளியுமிழ்கவிகைவேய்ந்தவெள்ளியதாளஞ்சிந்தக்
களிஞெமிருடலமெல்லாம்வெள்ளொளிகளுற்றத்தேனோ
டளிமுரான்மாலைமன்னரருங்கறைகுவவியண்மி
நளிமணிமுடியிற்றேய்த்துநறுமலர்ப்பாதஞ்சேப்ப அஅ

கதிர்மணிக்குழையுந்தோடுங்காதொடுசுவலிற்றுழ
முதிர்மணிப்பூண்களெல்லாமுரஞ்சொளிகான்றுமின்ன
வெதிரியமன்னருட்கியிறப்பவெக்கழுத்தந்தோற்றி
யதிர்கயிற்கழன்மற்றம்மவண்மிளுர்க்காவிநல்க. அசூ

மண்கணைமுழவம்பேரியார்விசிமுரசுதக்கை
பண்கனிவீணையாதிபடர்முகின்முழக்கங்காட்டப்
பெண்கனிமடவாராட்டம்பிறங்கொளிமின்னுக்காட்டத்
தண்கனிகுழலிற்சிந்துந்தளிமதுமழையைக்காட்ட. சூ0

வெளிறுவேனயனமாதர்வெள்ளொளிகவரிவீசக்
குளிறுவார்முரசமன்னர்குடந்தமுற்றிருபானிற்ப
வொளிறுவேற்றனைக்கூட்டமொண்கழலிறைஞ்சிப்போதக்
களிறுமான்குலத்திறேடுகடலெனப்புறததிலார்ப்ப. சூக

விரசிநானிலத்தினுள்ளோர்யாருமித்தகையவெள்வேற்
புரசைமால்களிநல்யானைப்புரவலன்மன்னுகென்னுப்
பரசிமெய்த்தெய்வம்போற்றப்பாரெலாமகிழ்ச்சிதுள்ள
வரசவேற்றரிமான்றாங்குமணையிருந்தரசுசெய்தான். சூஉ

அன்னமென்னடையைவென்றவணிநடைமனைவிமார்தம்
பொன்னவிர்சுணங்குபூத்தபுணர்முலைத்தடத்தின்மூழ்கிக்
கன்னலுமமிழ்துங்கைப்பககலவியிற்றேறன்மாந்தி
நன்னெறிமைந்தரீன்றுநயத்தகநெடுநாள்வாழ்ந்தான். சூரு

மாயிருஞாலம்போற்றுமதிமுடிவள்ளலார்தங்
கோயிலகண்முதியவெல்லாங்கோமளந்தழையவாக்கி
மீயுயரமரர்மெட்பவிழாமுதலெவையுமாற்றிச்
சேயரையாவினர்தந்திருவடிநீழல்சேர்ந்தான். சூச

ஓசனையெல்லைக்கப்பாலுறினுமெய்ம்முடையால்யாரு
நாசியைப்புதைக்குந்தீயோனல்வகைப்பயனுமிவ்வா
றுசிலனுகித்துய்ப்பவருளியவிட்டசித்தித்
தேசுசால்பெருமைவேறுஞ்செப்புதல்வேண்டுமேயோ. சூரு

வேறு.

தள்ளாமகிழ்ச்சிதலைசிறப்பப்பெடையோடாடித்தண்கமலக்
கள்ளார்மலர்ப்பூம்பொகுட்டணையிற்கணங்கேழ்சுரும்பரிசைமிழற்றப்
புள்ளார்ந்துறங்குந்தடமுடுத்துப்பொலிகாம்பீலியெனுந்தேயத்
துள்ளான்சோமயாசியெனவோங்கும்பெயராளொருமறையோன். சூசு

சிந்தைமுழுதுமிடங்கொண்டுசெருக்குவிளைத்துத்துயர்பெருக்கு
முந்தைமலநோய்க்கிழங்ககழ்ந்துமுடியாவின்பப்பெருவீட்டி
னுந்துமறைதான்முதற்பலவுமுறைமுதோதித்தவத்தெளிந்தா
னந்தண்மறையோர்குழுகாப்பவணலங்குந்திலதமெனச்சிறந்தான். சூஎ

தொல்லையியற்றுந்தீவினையின்றொடர்பாலறியாமையின்வேதம்
வல்லமறையோர்குலத்தொருவன்வாள்காளழுங்கவுயிர்செகுத்தான்
கொல்லும்பெரியகொடும்பாவங்கொம்மென்றுருக்கொண்டுள்ளகமிக்
கல்லலெனடுநீர்க்கடலழுந்தவாவியழுங்கத்தொடர்ந்ததுவே. கூஅ

வஞ்சிவிருத்தம்.

பெட்குமாந்தரிற்பின்செலு
முட்கும்வண்ணமுருத்திடுங்
தட்குமெற்றுந்தணங்கெதிர்
கொட்கும்ண்மிக்குனித்தெழும். கூகூ

போர்க்குவம்மெனப்போந்துநின்
றூர்க்குந்தோள்புடைத்தையென
வீர்க்குமெய்யனமுய்தியென்
றோர்க்குநெஞ்சமுகத்தெறும். க00

அன்னபல்பிணியாக்கலான்
மன்னுமாலைமடுத்திடுங்
கன்னலென்னக்கருத்துடைந்
தின்னணமல்கியிரங்கினன். க0க

பெரியதானங்கள்பேணியு
மரியநோன்புகளாற்றியும்
பரியும்வல்வினைப்பாவநோ
யிரியல்கண்டிலனேங்கினன். க0உ

ஏர்த்தவெண்மதியீர்ஞ்சடை
மூர்த்தியாருண்முற்றுறுந்
தீர்த்தயாத்திரைசெய்வலென்
றோர்த்துளந்தனிலுன்னினன். க0ந

ஓசைதிக்கினுலாவுறுங்
காசியாதியுகாமர்சீர்
மாசிலாத்தலம்வல்விரைந்
தேசிலன்பொடுமெய்தினன். க0ச

அங்கங்குள்ளவரும்புனற்
பொங்குதீர்த்தம்புகுந்துதோய்ந்
துங்குங்கோடரிக்கண்ணியோர்
பங்கினரைப்பணிந்தனன். க0ரு

அறமுமங்கங்கியற்றினன்
மறலும்வல்வினைப்பாவநோய்
பிறிவிலாமையிற்பேதுறீஇ
யுறையுந்தன்பதியுற்றனன். க0சு

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிலபகல்வதிந்துகழிந்தபின்னருகாற்சிறகர்வண்டிவர்ந்துமேன்மிதிப்ப
வலர்முகநெகிழ்க்துகட்புனல்சொரியுமம்புயத்தடம்புடையுடுத்து
மலர்தலையுலகினகர்க்கெலாமுதற்றாய்நால்வகைப்பயன்களும்பயக்கு
மொலிபுகழ்க்காஞ்சிவளநகர்க்கேகவுளநீதிடையாய்ந்துமுன்னினனால்.

கன்னலுங்கமுகுங்கதலியுந்தெங்குங்கஞலியகழனிசூழ்காஞ்சிப்
பொன்னகர்தனிற்போய்த்தீர்த்தநீராடப்புந்தியின்முன்னுதலோடும்
வன்னியும்விடமுமறலியுமொருங்கோர்வடிவுகொண்டெதிர்ந்தனவுருக்கொண்
டின்னலிற்றொடக்குங்கொடியவல்வினைநோயிமைக்குமுனஞ்சிநீங்கியதே.

பார்த்தனனகன்றபாவவல்வினையைப்பருவருங்கவற்சிமுற்றொழிந்தான்
வார்த்தடங்கொங்கைமடந்தையர்நடிக்குமாடமாளிகைதொறுமணிநீர்க்
கார்த்திரடவழுங்காஞ்சிமாநகரைக்கருதமுற்பிறப்பினிலீட்டுஞ்
சீர்த்தநல்வினைவந்தடுத்ததென்றுளத்திற்றிளைத்தெழுமகிழ்ச்சிமீக்கூர்ந்தான்.

மேதகுமணியுங்கனகமுந்துகிலும்வேண்டுவதழீஇக்கொடுமற்றை
யேதமிலுறையுள்பொருணிலமாதியாவையுமைந்தர்பாலிருவி
மாதர்வாண்முகத்துத்தன்மனைக்குரியமடவரலோடுமங்ககன்று
சீதநீர்ப்பொதும்பர்முகிலினம்பிணிக்குஞ்சிவபுரத்தெல்லையைச்சார்ந்தான்.

கச்சிமாநகரின்வளமெலாநோக்கிக்கரையறுகாதன்மீக்கூர
வச்சிவபுரத்தின்வயங்குறுமெண்ணிலலைபுனற்றிருத்தமுமாடி
நச்செயிற்றரவப்பூட்பொலந்தடந்தோணம்பனுரினிதுவீற்றிருக்கு
மெச்சிவாலயமும்புகுந்தினிதேத்தியிறைஞ்சிமெய்யன்பினிற்றிளைத்தான்.

வீங்கிருட்பிழம்புமுழுதும்வாய்மடுத்துவிரிகதிர்க்கற்றைகள்பரப்பி
யோங்கொளிகஞற்றுமுருகெழுபரிதியும்பனுக்குரியவாரத்தி
லாங்கணுற்பயனுமாடுநரெவர்க்குமைதுறவென்றுமுய்த்தளிக்குந்
தேங்குமவண்டரங்கத்தெளிபுனலிட்டசிததியின்விதியுளிப்படிந்தான்.

ஆம்பலங்கிழத்திவாயிதழ்த்தேறலவிர்கதிர்க்கையினன்முகந்து
தேம்படுமலர்வாய்மடுத்துளங்களிக்குந்தெளிமதிப்பண்ணவனுளிற்
காம்புறழ்நெடுந்தோளுமைமுலைச்சுவடுகம்பனுரணியமூவுலகு
நாம்படப்பரந்ததெய்வவான்கம்பைநறுஞ்சிவகங்கைநீர்தோய்ந்தான்.

கோட்டுமாமலைகள்குங்குமக்களபக்குவிமுலையாகவேபடைத்த
மோட்டுநீருடுக்கைப்பூதலமடந்தைகட்டினின்முகிழ்த்தவனுளிற்
பாட்டருச்சுரும்பர்த்தொடலையங்கூந்தற்பார்ப்பதிதோழிதொட்டருளுந்
தோட்டதாமரையின்மங்கலதீர்த்தச்சுவைப்புனல்கரிசறத்துளைந்தான்.

வரிவளையுகுத்தமணிவடந்துயலுமுரோணிதன்வனமுலைதிளைத்து
விரிகதிர்க்கிரணவிதுவுயிர்த்தெடுத்தமேதகைக்கடவுள்வாரத்திற்
பெரியதிண்கரைகொன்றழுங்குவார்தரங்கம்பிணைந்துலாமிந்திரதீர்த்த
மெரியசைந்தனையமலர்குலாஞ்சங்கதீர்த்தநீரிடத்துமாட்டயர்ந்தான்.

துடியிடைக்கருங்கட்டுவரிதழ்ச்செவ்வாய்த்தோகையர்மணிமுலைத்தடத்துப்
படிதருந்துறக்கப்பண்ணவர்க்கறிவுபயிற்றுறுங்குரவன்வாரத்திற்
கடிகமழ்கமலக்காடலர்காயாரோகணக்கதிர்மணிச்சயத்திற்
செடியுடற்பிறவிதுமித்தருள்சூலதீர்த்தநீர்த்தடத்தினுங்குளித்தான்.

இருடிரண்டனையவெறுழுடற்பனைத்தோளிளமதிங்கர்பிறழெயிற்று
மருடிரண்டனையமனத்துவாளவுணர்மந்திரக்கடவுணன்னுளிற்
றெருடிரண்டனையதேர்ந்தமெய்யடியார்தேனெனவமிழ்தெனப்பழிச்சு
மருடிரண்டனையதீஞ்சுவைப்பஞ்சதீர்த்தநீரண்ணினுற்றுளைந்தான்.

மகத்தினையடுக்கின்மணித்திரையுததிமருங்குடுத்தகன்றகாணிலத்தின்
மிகத்தழைவளங்கண்முழுவதுஞ்சிதைக்கும்வெந்திறற்சங்கிருரிகாளி
னகத்திடைநினேக்கிற்கண்ணுறிற்றீண்டினுடுறிற்றேத்திரம்புரியிற்
பகைத்தமும்மலமும்பாழ்படச்சினக்குந்தீர்த்தாசத்தினிற்படிந்தான்.

இன்னணமேழுநாளினுமுறையாலிரும்புனற்றடங்களிற்படிந்து
கன்னிமாவடியின்முளைத்தெழுந்தருளுங்கம்பனார்சேவடிப்போது
மன்னுபேரன்பின்வணங்கினனெடுநாள்வதிவுழிமனைவிதன்னேடு
மன்னவன்றனக்குப்புவிமிசைவாழ்நாளுலப்புறுமிறுதிவந்தடுப்ப.

கீற்றிளம்பிறையுந்தெள்ளுதீம்புனலுங்கேழ்த்தபொன்னிதழியுமரவு
நாற்றுசெஞ்சடைமேலேற்றியபெருமானங்கையோடங்கெழுந்தருளிப்
போற்றுமவ்விருவர்செவியினுஞ்சிவவென்றுயர்மனுப்புகறலுமன்னோர்
நீற்றுவல்வினேயராகியானந்தநிருமலமுத்தியையடைந்தார்.

கலிவிருத்தம்.

விற்பிறங்கியவேணியினார்முனங்
கற்பவாதியில்வையகங்காமுறச்
சொற்பிறங்கியசூலத்தகழ்ந்ததோர்
பொற்பிறங்கியபூநதியுண்டரோ. கஉக

நம்பியுன்னுநர்நாம்படுபாவநோய்
கம்பமுற்றுக்கழன்றிடச்செய்தலால்
வம்புலாவுமவ்வார்புனற்பூநதி
கம்பையென்றொருகாரணப்பேர்பெறும். கஉஉ

தேன்றதும்பியசெந்தளிர்மாவடித்
தோன்றுமைம்முகச்சுந்தரர்க்கல்லது
கான்றதைந்தவக்கம்பையின்மேன்மைதா
ஞன்றவர்க்குமளப்பரிதாகுமே. கஉங

கச்சிமாநகரேயன்றுகம்பனார்
வைச்சதீம்புனல்வார்நதிக்கம்பையா
லச்சமுய்க்குமரும்பவநோய்தப
முச்சகங்களுமொய்யணிவாய்ந்தவே. கஉச

தாமரைத்தடங்கண்ணனுந்தாதளாம்
பூமகிழ்ந்தமர்பூவையுமாதியோர்
காமர்நீரொருகாற்படிபேற்றினுற்
றேமறத்தம்பதங்களிற்றுன்னினர். கஉரு

ஓதநீர்முழுதுண்டபெருந்தவ
ஞதிமாதவர்யாவருமாட்டயர்ந்
தேத்தம்வீழ்த்தபெருந்தகவெய்தினர்
தீதிலாதவச்செய்தவத்தாருளும். கஉசா

வேறு.

காசிபர்கவுதமர்கவுசிகர்பரத்து
வாசருந்தமிழ்மாதவரென்னு
மாசிலரைவருமைந்துமுகத்தினு
மீசரிடத்திற்செவியறிவுற்றார். கஉஎ

மன்றறதும்புமணிப்புனறோய்ந்தொளிர்
கொன்றைபுனைந்தபிரானடிகும்பிட்
டன்றியடற்கெழுகூற்றுவனைச்சுற
வென்றனனுண்மிருகண்டுவின்மைந்தன். ௧௨௮

சீதமளாவியதீம்புனலாடிமெய்
நாதரையேத்துநயந்துகவேத
கேதுவெனும்பெயராலுமுருக்கிளர்
மேதியையூர்விறலான்றனைவென்றான். ௧௨௯

வேறு.

விரிபூமெல்லணைவேதனுரண
னெரிவேலிந்திரனாதிவிண்ணவர்
மருவார்கொன்றைமலைந்தவேணியா
ரருளானன்றியணைந்துமுற்றுபு. ௧௩௦

நிரையான்மேகமுறங்குநீண்முடி
வரையால்வேலைகடைந்தவைகலிற்
றிரைமேல்வந்துசினந்துதீவிடம்
விரையாவாவிவிளிப்பமுன்னலும். ௧௩௧

கண்டார்நெஞ்சுகலங்கிமாழ்கினர்
விண்டார்செய்யுமுயற்சிவேதனை
கொண்டாருய்திகுறித்திலாரனூர்
தண்டாராயுயிர்சாம்புமவ்வுழி. ௧௩௨

ஊனோடாவியொறுக்குமிவ்விடர்
தானீர்நீவுவிர்தாவில்கச்சியிற்
போனீராயிடினென்றுபொள்ளென
வானூடோர்மொழிவந்தெழுந்ததால். ௧௩௩

கேட்டார்நெஞ்சுகிளர்க்குமோகைய
ரோட்டோடேகினருற்றுநண்ணினர்
சூட்டார்சென்னியதோகைதோடுதோண்
டாட்டார்பூம்பொழிலார்ந்தகாஞ்சியின். ௧௩௪

பிணிநோய்பேய்கள்பெயர்ப்பவார்த்தெனத்
தணியாதோசைதழங்குகம்பையின்
மணிநீராடினர்மாவடிததலைப்
பணிவாழ்வேணியர்பாதமேத்தினர். ௧௩௫

தாழாதோங்கியெழுந்துதாவிமண்
பாழாநீறுபடுப்பமுற்றிய
காழார்நஞ்சுகனற்றுவெந்துயர்
போழாவாழ்க்கைபொருந்தியுய்ந்தனர். ௧௩௬

வேறு.

ஏதமிலறத்துறையெவையும்பாத்தருள்
வேதமாகமங்கலைவிதங்கண்மற்றவும்
போதமேலானவர்வழியிற்பூதல
மீதெலாம்பரப்பியங்கிமேலவன். ௧௩௭

ஆயுளோரெட்டிறுமளவின்மற்றிவற்
கேயவாழ்நாளினியிறக்குமேயெனத்
தாயொடுதந்தையுந்தளர்ந்துகட்புனல்
பாயநின்றழுங்கியபரிவுநோக்கினன். ௧௩௫

இருமுதுகுரவர்களினைந்துநெஞ்சகங்
கரையநின்றரற்றலாற்கண்ணிலகூற்றுவன்
சுரியெரிக்குஞ்சியன்சுழலுங்கண்ணனாய்
வெருவரவருந்திறம்விலக்கலாகுமோ. ௧௩௬

வெந்துளம்புழுங்கிவிம்மாந்துமிக்கழுஞ்
சிந்தைவெங்கவற்சியைச்சிதைமினீயிர்பூம்
பைந்துணர்க்கடுக்கையம்பகவற்போற்றியா
னந்தமில்வாழ்க்கைபெற்றமைவல்காண்பிரால். ௧௪௦

கரந்தையஞ்சடைமுடிக்கடவுளாரெதிர்
சிரந்தனைவணக்கியுட்டினைக்குமன்பொடு
மிரந்திடலாயுளுங்கதியும்யாவையு
மரந்தைதீர்த்தொய்யெனவருள்வதுண்மையே.

சுடர்மதிப்பிளவொளிர்சடிலத்தோன்றலா
ரடியிணைப்பூசனையாற்றியுய்ந்திட
விடைகொடுத்தருளியரென்றுமென்பத
முடியுறவணங்கினனருளின்முன்னினன். ௧௪௨

பங்கயவாவியும்பணிவிராவிய
பொங்கருமலர்ப்புதுமணங்கள்விம்மிய
மங்கலசிவபுரவரைப்பிற்போந்தவ
னங்குளவளமெலாமன்பினேக்கினன். ௧௪௩

கரையறுகாதலிற்கரைகொன்றூர்த்திடுந்
திரைகுலாங்கம்பைநீர்த்தீர்த்தந்தோய்ந்தெழீஇ
வரையொருசிலையெனவாங்குங்கம்பனார்
புரையறுசேவடிப்போதுபோற்றினன். ௧௪௪

நித்தலுங்கம்பைநீர்தோய்ந்துநீறணிந்
தத்தனார்கண்மணியாரப்பூண்டுபூங்
கொத்தவிழ்மாவடிக்குழகர்பூசனை
பத்தியின்விதிப்படிபயின்றுவைகுநாள். ௧௪௫

பெருகியவுழுவலாற்பெட்டுச்செய்திடுந்
திருமலிபூசனைமகிழ்ந்துதெய்வத
மருமலர்மாவடிமுளைத்தவள்ளலார்
முருகவிழ்குழலொடுமுன்னர்த்தோன்றினர். ௧௪௬

அஞ்சலைநீயெனவருளியேற்றெதிர்
வெஞ்சமமறலியைவிலக்கிமற்றவற்
கெஞ்சலில்கருணையாலிகலினர்க்கெலா
நஞ்சுறழ்படைத்கொருமுதன்மைநல்குவான், ௧௪௭

அருங்கணநாதர்விண்ணவர்களாதியோ
ரொருங்கிவண்வருகெனவுன்னுமுன்னவர்
பெருங்கடல்வளைந்தெனப்பிறங்குகாஞ்சியின்
மருங்குறமுற்றினர்மனைவிமாரொடும். கசஅ

ஏவியவியவருமேகித்தேங்கமழ்
பூவியல்கற்பகத்திழையும்போக்கறு
மாவினில்வரும்பொருளைந்துமற்றவுங்
காவினரவ்வுழிக்கடுகிமீண்டபின். கசக

விரைகமழ்மாவடிமூளைத்தவேதிய
ருரைகெழுநந்தியெம்பிரானையொள்ளிய
கரகநீர்விதியுளியாட்டிக்காமருந்
திருமலிமுதன்மையிற்றிருந்தவைத்தனர். கரு௦

மருத்தெனும்விண்ணவனுயிர்த்தமாணிழைப்
பெருத்ததோட்சுயசையென்றுரைக்கும்பெண்டகைத்
திருத்தகுமணிநகைக்கருங்கட்செல்வியை
யருத்திசெய்மன்றனீராற்றினல்கியே. கருக

வரியளியிமிழ்மதமுகத்துவள்ளல்செவ்
வெரியிவர்கூரயிலேந்தலென்னுமவ்
வருண்மலிமைந்தரோடொருவனும்படி
யுரியதம்மகன்மையுமுதவினாரரோ. கருஉ

கண்ணன்வெண்டாமரைக்கடவுளேமுதல்
விண்ணவர்கணங்கணநாதர்வெவ்வினை
மண்ணியமுனிவரர்மற்றுளோரெலா
மண்ணலாரருளினலடியிற்றாழ்ந்தனர். கருங

கொங்தொளிமணித்திரைகொழிக்குங்கம்பையி
னங்கினீராடியிவ்வரியபேறுறு
நந்தியங்கடவுளநம்பனாரடி
சிந்தையினிருவிமெய்கிளைத்துவாழ்ந்தனன். கருச

வளநிதிவேண்டியும்வாழ்க்கைவேண்டியுங்
களைகணுயுலகெலாங்காக்கவேண்டியு
மளமருபிறவியையறுக்கவேண்டியு
மளவிலரப்புனலாடியுய்ந்தவர். கருரு

இத்தகுகம்பையுமிட்டசித்தியுந்
தத்துவெண்டிரைப்புனற்சறுவதீர்த்தமுந்
தொத்தலர்மாநிழற்சூழல்வைகிய
வுத்தமன்விழிகண்மூன்றென்னவோங்குமால். கருசா

மற்றுமங்குள்ளனவரம்பிறீர்த்தங்கள்
பற்றமைசேய்நதிபாலியாதிய
வற்றநீத்தருள்வனவவற்றின்மேன்மையை
யிற்றெனயாவரேயெண்ணுநீர்மையூர். கருஎ

ஆடுகோர்தீவினையனுக்கிப்பேரின்ப
வீடருடீர்த்தநீர்விசேடம்விண்டமைம்
பாடமைதிருநகர்படைத்தபன்னிரு
பீடுறுபெரும்பெயர்ப்பெருமைபேசுவாம். கருஅ

தீர்த்தவிசேடப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஉஉச.

# 69. பன்னிருநாமப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அணிகெழுமலையுண்மேலாமவிரொளிமேருவென்ன
மணியொளிர்சூட்டராவுள்வாசுகிப்பாந்தளென்னத்
துணிபுனனதியுட்பாவந்துரக்கும்வான்கங்கையென்னத்
தணிவறுசுவையுள்வானிற்றலைப்படுமமிழ்தமென்ன க

இருளறுமொளிகடம்முளிலங்குசெம்பரிதியென்ன
மருமலர்க்கூந்தலாருண்மால்வரைப்பிராட்டியென்ன
வருள்சிவனடியார்தம்முளச்சுதக்கடவுளென்னப்
பெருகியமனிதர்தம்முட்பிறங்கியமறையோரென்ன. உ

விடலருந்தலங்கடம்முள்விழையுமாயாமமென்ன
வடர்புகழறங்கடம்முளாருயிர்செகாமையென்ன
நடலைதீர்கல்விதம்முண்ஞானநூற்கல்வியென்னச்
சுடரழல்வேள்விதம்முட்சூழ்பரிமேதமென்ன. ௩

பொருந்துறவேட்டவற்றுட்போக்கருமவெறுக்கையென்ன
வரந்தைதீர்தானந்தம்முளபயநற்றானமென்னத்
திருந்துமந்திரத்துட்காயத்திரியெனுமனுவேயென்ன
வரந்தருநோன்புதம்முள்வளர்சிவநிசியேயென்ன. ௪

துன்னியமிருகந்தம்முட்டேயவான்றேனுவென்ன
மன்னியமதிகடம்முண்மார்கழித்திங்களென்ன
நன்னர்நெஞ்சுவப்பநல்குந்தானமேற்பவருணன்ற
பொன்னவிர்சடையார்க்கன்புபூண்டசீரடியாரென்ன. ரு

திரைகடல்வரைப்பின்முக்கட்செல்வனுரினிதுவைகும்
புரைதபுநகர்கட்கெல்லாமேம்படுபொற்பிற்றுமாற்
றரைமிசைப்பொதும்பரூற்றுந்தண்ணறுத்தெருக்கடோறும்
விரைசெலனதிகளென்னவிராய்த்தவழ்காஞ்சிமூதூர். சு

காயெரிமழுமானேந்துங்கடவுளார்க்கரங்கமாகி
மாயிருஞாலம்போற்றவயங்குமக்கச்சிமூதூர்க்
காயிரநாமமெய்துமூழிதோறவற்றுண்மேலாம்
பாயசீர்நிலைபெற்றோங்கும்பன்னிருபெயர்கண்மாதோ. எ

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உருக்காஞ்சிமுப்புவனசாரங்காமபீடமுயர்தபோமயமும்மூர்த்திவாச
மிருக்காலுந்துண்டீரபுரம்வாழ்வெய்துமிலயசித்துப்பிரமபுரமிருண்டநெஞ்சிற்
றிருக்கீரும்விண்டுபுரமருளானந்தசிவபுரமேசகலசித்திகரமேயுள்ளப்
பருக்காழைத்தபுங்கன்னிகாப்பென்றோதப்பட்டனபன்னிருதிருப்பேராகுமாலோ.

முழங்குமறையாகமநூல்வடிவமாகிமூலமுதன்முழுவதுஞ்செங்கனகமாகிச்
செழுங்கனிபூத்தளிர்கணவமணிகளாகிச்சேர்ந்தவர்க்குநாற்பயனுமளிப்பதாகி
வழங்கிரவிமண்டலத்தின்காறுமோங்கவளர்ந்துநிழல்பிரியாதவண்மைத்தாய [மால்.
தழங்குபுகழ்த்திருக்காஞ்சிநிலைபெறெய்துந்தன்மையினாற்காஞ்சியெனும்பெயரிற்று

கலிவிருத்தம்.

பண்ணறாதமெல்லிசைபயிற்றுறும்
வண்ணவண்டினம்வந்துமுற்றுறத்
தண்ணறாவுகுந்தமனியச்செழுங்
கண்ணகன்றபூங்கமலவாழ்க்கையான். ௧௦

ஆதிநாளையிலகிலலோகமு
மேதமில்படைப்பெய்தவார்குழன்
மாதொர்பாகனார்வனசமென்கழற்
போதுநெஞ்சிரீஇப்போதநோற்றனன். ௧௧

அலகில்காலமற்றருந்தவஞ்செய
நிலவும்வானதிநீருநாகமு
மிலகுசெஞ்சடையிறைவனார்தவங்
குலவுவேதன்முன்குறுகியோதுவார். ௧௨

பாட்டளிக்குலம்பயின்றுசுற்றுமென்
றோட்டலர்த்தலைத்தோன்றுமந்தணன்
வெட்டதோர்ந்தனமேதகும்படைப்
பீட்டமிங்குனக்கெய்துறுதுகாண். ௧௩

மற்றைவைப்பினில்வருந்திப்பல்பகற்
பெற்றிடும்பலதருமப்பேறெலாஞ்
சற்றிருந்தொருதருமமாற்றுறின்
முற்றுமந்தருவேதிமுன்னியே. ௧௪

அன்னசூழலினன்பர்போற்றிட
மன்னுநந்தமைவழாதுபூசைசெய்
தின்னறீர்படைப்பெய்துகென்றொரு
கன்னிபாகனார்கரந்துபோதலும். ௧௫

வள்ளலாருள்வழங்கப்பெற்றன
மெள்ளரும்படைப்பின்றுமுற்றின
நள்ளுமுத்தியுநண்ணினுமெனா
வுள்ளமீக்கொளுமுவகையாழியான். ௧௬

வெருவிவாளைகண்மேககெழுந்துவிண்
ணுருவவெண்டிரையுந்திதோய்தரு
பெருகுநீர்த்தடம்பிறங்குமாங்கணைந்
தருள்வழிச்சிவபூசையாற்றியே. ௧௭

கருணைகூர்தருங்கம்பநாயக
ரருள்கிடைத்துலகனைத்துமாக்கிடும்
பெருவலித்திறம்பெற்றுநீடினன்
மருமலர்த்தலைவாழ்க்கையாளனே. ௧௮

ஆசில்கவ்வெனுமயனஞ்சித்திடு
மாசில்சீர்மையினனுமாநகர்
காசிலாப்புகழ்க்காஞ்சியாயதாற்
பேசுகாரணம்பிறவுமுள்ளவே. ௧௯

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கற்பமுடிவின்முச்சகத்தின்சாரமுழுதுங்கசிந்துருகி
யற்புமுதிர்விற்றெழுதெழுவார்க்கருளானந்தப்பெருவாழ்வு
பொற்பவுதவும்பெருமாட்டிபொலம்பூட்காமக்கண்ணிமகிழ்
சிற்பந்திகழ்பீடத்தினெதிர்வித்தாயடங்கிச்செறிந்ததுவே. ௨௦

மற்றைக்கற்பத்ததினின்றுஞ்சிறிதுவாங்கிவண்டினங்கண்
முற்றமதுநுண்டுளிதுவற்றுமுருகுநாறியிதழ்துறுமிப்
பொற்றமலர்ப்பூஞ்சேக்கையினன்புவனம்படைத்தகாரணத்தா
லற்றமறுஞ்சீர்முப்புவனசாரமெனும்பேரணிந்ததுவே. ௨௧

கொச்சகக்கலிப்பா.

முன்னையோர்கற்பத்தின்முழங்குமறைநூற்கேள்வி
துன்னியநற்குலந்தழைப்பதோன்றினன்செழுங்கலையிற்
றன்னிகர்வேறில்லாதான்றவத்தினுக்கோர்ரணனன்
மன்னியசீர்மாவிரதனெனும்பெயரானொருமறையோன். ௨௨

முறுகுபெரும்பசிக்கனலைமூட்டிமுறைபிறழ்விக்கும்
வறுமையெனுங்கொடுங்கொலையவன்மீனற்கோட்பட்டா
னறுதியிலாத்துயிர்க்கடலினழுந்தினன்செல்வமெனு
முறுகரைசேர்புணைகாண்பானுன்னியுளந்துணிந்தெழுந்தான். ௨௩

மங்குன்மதிதவழநந்தறுமணிமாடவரங்குந்தொறும்
பங்கயக்கண்மடமாதர்பயின்றடுஞ்சிலம்போதை
பொங்குமுகிலினமுழங்கும்பொருவிலொலிதனக்கெதிருங்
கங்கைநதிபுறஞ்சூழ்ந்தகாசிநகர்சென்றணைந்தான். ௨௪

முருகுவிரிமலர்க்குவையுமொய்யொளியமணிக்குவையும்
பெருகியவெள்வளைத்திரளும்பிறங்கியவோதிமத்திரளுந்
திருமலிபல்சனகருழுவுஞ்செறிவொழியாக்கங்கைநதி
யுருகெழுநீர்படிந்தாடியோங்குமிருந்தவம்புரிந்தான். ௨௫

பட்டினிவிட்டுடல்வாடிப்பலநாளுந்தவமுயல
மட்டவிழுமிதழிநறுமலர்மாலைத்திரள்வளைத்துக்
கட்டுசடைப்பெருமானுங்வீற்றிருக்குங்காசிநக
ரட்டொளிமெல்லிதழ்த்துவர்வாயணங்கெதிர்நின்றருள்செய்யும்.

என்பெழுந்தயாக்கையினேடிங்கிருந்துதவமுளுற்று
மன்புடையாய்விழைந்ததெவனறைதியாலெனலோடும்
பொன்பிறங்குசுணங்கலர்ந்தபூண்முலைச்சிற்றிடையன்னை
யின்பமுறுநாற்பயனுமெனக்கருளாயென்றிரந்தான். ௨௭

ஈங்கடைந்தோருயற்கழிவின்முத்தியினெய்துவதன்றி
யோங்கியநாற்பயனுமொருங்குறுவதிலையென்றருள
வீங்குபுகழ்நாற்பயனுமுடங்களித்தென்மெனிவகற்றும்
பாங்குபெறுதலத்துறுவலென்றனனப்பதிதணந்தான். ௨௮

கதுவியபேரன்பினொடுஞ்சென்றணைந்துகதிர்க்கற்றை
விதுவணிந்தமணிமாடமேனிலையின்மடமாதர்
புதுவதணிந்தாட்டயரும்பொற்புவிளங்கியவீதி
மதுரைமூதலைந்தலத்துமன்னியருந்தவமுயன்றான். ௨௰௯

அவ்வவமாநகர்த்தெய்வமெதிர்தோன்றியருட்காசித்
தெய்வதம்போலுரைத்திடலுந்திகைத்தவுளத்தினனாகி
யெவ்வமறுநாற்பயனுமொருங்கீயுந்தலமொன்று
கௌவைநெடுங்கடல்வரைப்பினில்லைகொலோவெனக்கவன்றான்.

ஆற்றுமருந்தவமுயற்சியொழிந்தகத்தைவளைந்துருக்கி
நீற்றுமழற்றுயரோடுநெறிச்செல்வானெதிர்தோன்று
மூற்றிருக்கும்பசுந்தேறலொழுகவிளந்தளிர்துவன்றி
நாற்றமிகுஞ்சண்பகப்பூஞ்சோலையினைநண்ணினான். ௩௰௧

குயிலினத்தான்மொழிமிழற்றிக்குளிர்காலால்வியராற்றி
மயிலினத்தானடமாடிமலர்நிழலான்மெய்வருடிக்
கயலனையவிழிமடவார்போலநறுங்காவகமுஞ்
செயல்புரியவாங்கொருசார்திருந்தவிருந்தயர்வுயிர்த்தான். ௩௰௨

வழிச்சென்றவயர்வனைத்துமலர்ப்பொதும்பர்க்குளிர்நிழலா
னொழித்துறையுமேல்வையின்முன்னுஞற்றியமெய்த்தவப்பேற்றாற்
கொழித்தெழுந்தோர்மொழிவானிற்கோதறுபற்பலவளமுஞ்
செழித்ததிருக்காஞ்சியினைச்சேறியெனச்செவிமடுத்தான். ௩௰௩

ஆராதபெருங்காலகத்தரும்பமுகத்துவிழி
நீராரச்சென்னிமிசைநெடுங்கரங்கள்குவிந்தேறப்
பாராரத்திசைநோக்கிப்பணிந்துபருவரனீங்கிப்
பேராதவுவகையுளம்பிணைந்தெழுந்துசென்றணைந்தான். ௩௰௪

கருப்புவனமிடைகழனிபுடையுடுத்துக்கடிகுலவுந்
திருப்புவனசாரத்தைச்சென்றணைந்துபெருந்தவத்தோ
னருப்புவனசங்கவற்றுமலர்முலைபாலமர்ந்தசிலைப்
பொருப்புவனமலர்க்கரத்தார்தளிகடொறும்போற்றிசைத்தான்.

விடங்கலுழுங்கூரிலைவேல்விழியுமையாளொளிர்தரள
வடங்குலவுமுலைச்சுவடும்வளைத்தழும்புமணிந்தருளு
மடங்கலரூர்செற்றபிரானருள்போற்பன்மலரு
முடங்கல்ருங்கம்பைநதியுருகெழுநீராடினான். ௩௰௬

தேங்கிவலைதுளித்துமலர்செறிந்துநறுங்கனிதுவன்று
மாந்தருவினடிமுளைத்தவள்ளலார்திருப்பதமு
மேந்துமுலைத்திருக்காமக்கண்ணியிருசேவடிமென்
பூந்தளிருமுப்பொழுதும்போற்றிசைத்துவைகினான். ௩௰௭

சின்னாள்சென்றிமௌவிற்றிருக்காஞ்சிநகர்த்தெய்வ
முன்னாகிநாற்பயனுமொருங்களிப்பவுளமுருக்கு
மின்னாதபரிவனைத்துமிரித்தொருங்குநாற்பயனும்
பொன்னாடர்நறுமொதுப்பப்போதநுகர்ந்தின்புற்றான். ௩௰௮

இவ்வாறுகாமுற்றாற்பயனுமொருங்கீந்த
வவ்வாய்மையாற்காமபீடமெனவலங்கியதாற்
செவ்வாய்மைக்காசிமுதற்றிருத்தருமூவிருநகரு
மொவ்வாதமேன்மையதாயோங்குபுகழ்த்திருக்காஞ்சி. ௩௯

கலிவிருத்தம்.

வண்டாயிரமேவியுழக்கிவளைந்து
தண்டாதொடுதேறறளிர்ப்பதுகர்ந்து
பண்டாழிசைபாடமுறுக்குவிரிந்த
வெண்டாமரைநாண்மலர்வட்டணையும்பன். ௪௰

போழ்பான்மதிவேணிபுனைந்தவர்பொற்ப
வாழ்பாடளிமாவளர்கின்றதளிக்குக்
கீழ்பாலிமையோரிறையன்புகிளர்ப்ப
ஆழ்பாறுயர்பூசைபுரிந்தநகர்ப்பால். ௪௧

வாடாமலர்மாலைமுடிக்கணிவானோர்
கோடாநெறிமாதவர்மற்றவர்கூடக்
கடார்சடையார்கழனைக்குளநாடி
யீடார்பரிமேதமியற்றுதலானன். ௪௨

ஓராருயிரீருடலொப்பவிணங்குஞ்
சீரார்தனைநீவியுஞற்றுதிறம்பொன்
வாரார்முலைவாணுதன்மைத்தநெடுங்க
ணேரார்கலைவாணியுமெய்த்துவெகுண்டு. ௪௩

உரியாளவள்ளாயுடனுற்றிடுகாயத்
திரிமாதொடுதேனினமொய்த்திசைபாடும்
விரிபூவணைவேதியனச்சுறமேவி
யெரிவேள்வியைமாயவிறுப்பதுதேரா. ௪௪

எழிலுந்திருவும்பெருவீடுமிறைஞ்சி
வழிநின்றவர்தங்களினுளும்வழங்குஞ்
செழுநுண்பிலவம்பிகைசேவடியன்பிற்
றொழுதங்கருள்கொண்டனள்போதறனைந்து. ௪௫

விண்ணத்தமர்வானவர்வீறுசழங்க
மண்ணிற்பொலிமானுடர்சாலமலங்கப்
பண்ணைகருரன்மாமலராதிகள்பம்பி
யெண்ணற்கருநீர்வீடிவாகியெழுந்தாள். ௪௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருமணியிமைக்குங்கோட்டுச்சிலம்புகள்பெயர்த்துவீசி
யிருநிலமகிழ்ந்துமோதியெண்டிசைக்களிறுமுட்கப்
பெருகொலியெழுப்பிப்பொன்னும்பிரசமென்மலருஞ்சந்து
மருவிவல்விரைந்துவாணிவாநதிகுறுகலோடும். ௪௭

குருக்கிளர்மாழைமாடங்குழுமியகாஞ்சிமூது
ரிருக்கைகொண்டவரெல்லோருமெழிற்பரிமேதமாற்று
முருக்கிளர்வேள்விச்சாலையுறைந்தவரோடுநோக்கிப்
பொருக்கெனவச்சம்பூத்துப்பொருமியவுளத்தரானார். ௪௮

சுரிகுழற்காளிதன்னுற்ருேற்றுமுன்னிரியல்போன
விரிகடலழிப்பமீட்டுமேவியதொன்ருேமுன்போற்
புரிமணிக்கம்பைகம்பரேவலாற்போந்ததொன்ருே
வருபுனல்வெள்ளமென்னமலங்குவரங்கோர்சாரார். சகூ

இல்லிடைப்புகுவார்மீட்டுமெரிமணிவீதிசெல்வார்
கல்லணிமாடமேடைகதழ்ந்தனரிவர்ந்துபார்ப்பா
ரல்லசெய்வெள்ளநீத்தமண்மையினிறுத்ததென்று
வொல்லையினிழிவாருய்தியோர்ப்பரான்மற்ருேர்சாரார். ருo

கன்ருெடுபசுக்கடாம்புகண்பரிந்தீர்த்துக்கொண்டு
பொன்றிரண்மணிகள்வெளவிப்பொள்ளெனவிரியல்போகித்
தோன்றுதொட்டிருந்துவாழுஞ்சுடர்மணிமனையுமற்று
மின்றுமுற்றழியுமேயென்றினைவரான்மற்ருேர்சாரார். ருக

மலையெனத்திரைகள்வீசிவையகமூன்றுமுட்கத்
தலைவருவெள்ளந்தன்னைத்தடங்கணுற்காணுந்தோறு
மலைசிறைக்கலுழன்கண்டவணன்மிடற்றரவுபோல
வுலையுநெஞ்சினர்களாகியுணங்குவர்மற்ருேர்சாரார். ருஉ

உறுசுவைகொழிப்பவட்டவுணவினையிடையினீத்து
முறுகியகாதல்பொங்கமுயங்குறுகலவியின்பச்
செறிவினையிடையினீத்துந்திகைத்துடல்பதைத்துவாடி
யிறுமுயிராளர்போலவிருப்பரான்மற்ருேர்சாரார். ருங

சேலனநெடியகண்ணீர்செங்கரநெரித்துப்பல்கா
லாலிலைவயிறுநோவப்பிசைவதினுவதென்னே
பாலகன்றன்னையேந்திவெளிக்கொளீர்பதியைவிட்டுச்
சாலவுமுய்தற்கென்றுசாற்றுவர்மற்ருேர்சாரார். ருச

அகிலமும்படைக்கவல்லவலரணைக்கிழவனீங்குத்
தகலுறுவேள்வியாற்றுந்தன்மையினிருக்குமாற்ரு
லுகலுறவெழுந்தவெள்ளமோங்குமிந்நகரினுள்ளே
புகலுருதொதுக்குமென்றுபுகலுவர்மற்ருேர்சாரார். ருரு

அன்னதுகேட்டிலீரோவம்புயக்கடவுண்மாட்டே
துன்னியசீற்றங்கொண்டுதுணைமுலைக்கலைமானன்றே
நன்னதிவடிவுதாங்கிநண்ணுதலுற்ருளந்தோ
வென்னினிப்புகலுமாறென்றேங்குவர்மற்ருேர்சாரார். ருசு

குங்குமக்களபந்தோய்ந்தகுவிமுலைக்கிடைதள்ளாடு
மங்கைவெண்கமலத்தோட்டுவாணிதன்கொழுநன்மீது
பொங்கியசீற்றங்கொண்டுபோந்ததுமழகிதென்று
செங்கரமறித்துச்சாலத்திகைப்பரான்மற்ருேர்சாரார். ருஎ

குலவுமோர்மனையைநீத்துமாற்றவள்கூடவைக
லலைவுறுவேள்வியாற்றுமயன்றவறுடையனல்லாற்
கலைமகடவற்ருளென்றுகழறுதற்கிடனின்றென்று
வுலைவுறுநெஞ்சின்வெம்பியுரைப்பரான்மற்ருேர்சாரார். ருஅ

வாள்விரிகனகமோலிமறையவன்கயவன்போல
வேள்வியொன்றியற்றப்புக்குமேதகுகாஞ்சியெல்லாந்
தாள்வினைதவிர்ந்துநைந்துதளர்ந்தழிகிற்பமாறு
மூள்வினைபுரிந்தானென்றுமொழிவரான்மற்றோர்சாரார். ௫௯

கடையுகவெள்ளம்வென்றகாஞ்சிமற்றெவர்களாலு
மிடையினிலழிக்கலாமேயீங்குறுமிடறும்வேலை
விடமிடறணிந்தபெம்மான்விலக்குவனையமின்றென்
றடைவுறுதேற்றந்தன்னுலறைவரான்மற்றோர்சாரார். ௬௦

செய்திடுந்தொழிலுமந்தச்செய்தொழிறன்னைநாடி
வெய்துவந்தடையுமூறும்வேறுவேறாய்ந்துபாரா
தைதொருவேள்வியாற்றலாயினனினைந்தானென்று
வைதுபூஞ்சேக்கையானைவெறுப்பரான்மற்றோர்சாரார். ௬௧

இன்னணநகர்சோகாக்குமேல்வையினளிகண்மூசித்
துன்னியதாதுமாந்துந்தோட்டலர்க்கமலத்தோன்ற
லென்னினிச்செய்யலாவதென்றுளமிரங்கியாய்ந்து
கன்னியந்துளவினன்றன்கழலிணைவணங்கிச்சொல்வான். ௬௨

முரிதிரைக்கடல்சூழ்வையமுழுவதுங்காக்குநீயே
விரிபுனனீத்தநீத்தென்மேதகுவேள்விகாத்திட்
டுரியசீர்ப்பயனைநல்கென்றுள்ளமுமுகமுஞ்சாம்பும்
பரிவொடுநின்றுபல்காற்பழிச்சினனுரைத்தல்செய்தான். ௬௩

முள்ளரைப்பசியதண்டான்முருகுகொப்புளிக்குந்தேற
லள்ளிதழ்க்கமலவாழ்க்கையணங்குவீற்றிருக்குமார்ப
னள்ளலர்க்கச்சம்பூக்குநகைசிறிதரும்பிவேறொன்
றுள்ளலைநீத்தம்யானேயொழிப்பலென்றதற்குநேர்ந்தான். ௬௪

உட்டுளையெயிறுதோறுமுருகெழுகாரிவாரு
நெட்டரவணையினீங்கிமொய்யெனநேரேபோந்து
மட்டலர்கமலச்செல்விமணிமுலைக்களிறுபாயப்
பட்டலர்துளவத்தண்டார்ப்பசுமுகில்படுத்ததன்றே. ௬௫

வெள்ளியஞ்சிலம்புமேலோர்விழுப்பெருநீலக்குன்றம்
வெள்ளிடையடைத்துநீண்டுவிலங்குறககிடந்தாலென்னக்
கள்ளலர்துளவமார்பன்காமருசேடன்மேலாற்
பள்ளிகொண்டிருக்குந்தன்மைபடர்நதிவாணிகண்டாள். ௬௬

கண்டகண்ணெருப்புத்துள்ளக்கனன்றுபேரண்டமெல்லாம்
விண்டிடத்தெழிததோர்பாங்கர்விலகிமேற்சேறலோடும்
வண்டுளர்கமலைவைகுமார்பினன்மீட்டுமீட்டு
மிண்டினன்றடுத்துமாற்றுமெலிவினைமலரோன்கண்டான். ௬௭

அழிபுனனெடியோன்றட்பவகலுமென்றுன்னியுன்னிக்
கழிமகிழ்பூத்தவுள்ளக்கருத்தெலாம்வெறியனாகி
விழியிணைகண்ணீர்வாரவெம்பிமிக்கழுங்கிததுன்பச்
சுழிபெருங்கடலுண்மூழ்கித்தொலைவரும்வெருட்சிகொண்டான்.

பலகினைந்தாவதென்னைபாற்கடல்கடைந்தஞான்று
குலவுபல்லுயிருமஞ்சக்கொதித்தெழுங்காளமேந்தி
யுலகெலாமுய்யவுண்டவோங்கியகருணையாள
னிலவியதிருவேகம்பநிமலனுண்டெனவெழுந்தான். சுகூ

உடைநனிசழுங்கித்தட்பவுத்தராசங்கஞ்சோரச்
சுடர்மணிவடமுநாலுந்துயலுறீஇமார்பிற்பின்ன
முடிபடுசிகைதள்ளாடிமுகந்தொறுமுகப்பவோடிக்
கொடிமுகிலுரிஞ்சுமாடக்கோயிலுட்சென்றுபுக்கான். எ0

அடியவர்க்கெய்ப்பின்வைப்பாயமர்ந்தருளமலத்தேவை
யிடரினுக்கெதிரேதோன்றியினிதருள்கருணைவாழ்வை
மடல்விழ்கடுக்கைவேய்ந்தமாவடிக்குழகன்றன்னைப்
படர்வினையிடும்பைமுற்றும்பாற்றுவானைநேரேகண்டான். எக

மறந்திடுந்துயரன்பொங்கிவார்புனற்கண்ணன்வேதஞ்
சிறந்திடுநாவனுச்சிகூம்புசெங்கையனாகி
நிறந்துரையொன்றவீழ்ந்துநெடிதுளந்திளைத்துநின்று
விறந்தபூஞ்சடிலக்கற்றைவேந்தினையிரக்கலுற்றான். எஉ

வரம்பினிற்கடவாவேலைவையகமழிப்பவந்த
விரும்புனல்சடிலத்தேற்றாயிமையவர்வரைப்பினோடும்
பெரும்புவியஞ்சப்போந்தபிரளயமுழுதுமோப்பி
யரந்தைதீர்த்தருளிக்காஞ்சியணிநகர்புரந்தாயன்றே. எங

அன்றுபோலிரங்கியின்றுமடியனேனுற்றும்வேள்வி
பொன்றவார்த்தெழுந்துபொங்கிப்பொருதிரைதிசையிற்போக்கிக்
கன்றியெவ்வுயிருமஞ்சிககலங்குறக்கதழ்ந்துமுற்று
மன்றலங்கூந்தலவாணிவார்நதிதடுக்கவென்றான். எச

இரந்தவர்வறியராகாதீண்டியவிழைவுமுற்றப்
புரந்தருள்கருணைவள்ளல்புதுநிலாவணிந்தபெம்மான்
பரந்தவெண்ணிலவுகாலப்பணிநகைவறிதுகாட்டிச்
சுரந்துமட்டொழுகுங்கஞ்சத்தோன்றலுக்கருளிச்செய்யும். எரு

விளரியாழ்மிழற்றிப்பாடிவிழுப்பொறிச்சிறகர்த்தும்பி
யுளருமென்றோட்டுக்கஞ்சப்பொகுட்டணையும்பாமேலாய்
வளர்பிறைநுதலாள்காமக்கண்ணியைவழிபாடாற்றித்
தளர்வறுதவங்கள்செய்துதண்ணருள்கோடியென்றான். எசு

உணங்கியவுள்ளம்பொங்குறவகையிற்றழைப்பமாற்றார்க்
கணங்குறுத்தருளுஞ்சூலத்தங்கையெம்பெருமான்பாதம்
வணங்கினன்விடைகொண்டேகிமறைமுடிவின்னுங்காணாக்
குணங்களைக்கடந்தஞானக்குமரியைச்சரணஞ்சார்ந்து. எஎ

உடைதிரைசுருட்டுந்தெண்ணீரொலிகெழுதெய்வக்கம்பை
யடைகரைமருங்குஞ்செய்யவழலவிர்ந்தனையசெங்கேழ்
மிடைதளிரொருமாநீழலிடத்தும்வெம்பவநோயெல்லாம்
விடைகொளும்பஞ்சதீர்த்தவிரிபுனற்கரையின்கண்ணும். எஅ

வெம்பியகாமக்காட்டைவேரறப்பறித்துவீடே
நம்பியசனகாதிநற்றவமுனிவரோடு
மம்பிகைபாதநெஞ்சத்தழுத்திமெய்யன்புநீடிக்
கம்பமற்றிருந்துமாதோகரிசறநோற்றிட்டானே. எசு

எழுதியவோவமென்னவிருந்திருந்தவத்தின்மூண்ட
செழுவியதிறத்தைநோக்கித்திருவுளமகிழ்ந்துகண்ணி
ஞெழுகியகருணைபாயவொளிர்நகைவதனம்பூப்ப
முழுவதும்பயந்தநங்கைமுன்னெழுந்தருளலோடும். அ0

எழுந்தனன்கரங்களுச்சியேற்றினன்றாணிமீது
விழுந்தனன்கவலைமுற்றும்வீட்டினனின்பவெள்ளத்
தழுந்தினனுடிப்பாடியார்த்தனன்கண்கடோறும்
பொழிந்தனன்றாநீர்வெள்ளம்போர்த்தனன்புளகமேனி. அக

அலங்கலங்குழலுமன்பர்க்கருள்பொழிவிழியும்வில்விட்
டிலங்கியமுகமுமேற்போர்க்கீத்தருள்கரமுமும்மை
மலங்கெடவருளுந்தாளும்வடிவெலாநோக்கிநோக்கிப்
புலங்களிசிறப்பப்பல்காற்போற்றிநின்றிரக்கலுற்றான். அஉ

வைத்தவேறடற்றுண்மூழ்கமலைந்திடுநெடியவாட்கட்
கத்திகைமாலையோதிக்கருணையங்கடலேயிந்நாண்
முத்தணிந்தெழுந்துவீங்குமுகிழ்முலைக்கலைமானீங்குப்
பைத்தநீர்நதியாய்ப்போதும்படர்ச்சியைத்தவிர்த்தலவேண்டும்.

ஒருகணந்தாழ்க்கிலம்மாவொலிகெழுகடலிற்றோன்றுங்
கருவிடநுகர்ந்தகண்டர்கழலிணைகருதியாற்றுந்
திருமலிவேள்வியோடுந்திண்ணியமதில்சூழ்காஞ்சிப்
பெருநகரழிக்கும்வலலேபேணியெற்காக்கவென்றான். அ௩

இறுநுசுப்பிரங்கிவாடவெழுந்துவெண்டரளம்பூண்டு
நறுவிரைக்களபந்தோய்ந்தநகிற்றுணைச்சுவடுமாவின்
முறுகியகாதல்பொங்கமூளத்தவர்க்கணிந்தநங்கை
குறுநகைமுகிழ்த்துநோக்கிக்குளிர்மொழியருளிச்செய்யும். அ௪

அஞ்சலையுலகமீன்றவலரணைக்கிழவகேண்மோ
நஞ்செனவெகுண்டுசீறிநன்னதியாகிப்போதும்
வஞ்சிநுண்மருங்குலாளைமகிழ்விநீயாற்றுவேள்வி
யெஞ்சலின்றினிதுமுற்றுமேகுதிவிரைவினென்றாள். அ௫

அருடலைக்கொண்டுதாழ்ந்தங்ககன்றுவல்விரைந்துபோந்து
மருடலைக்கொண்டுசென்றவாணியையண்மிநல்ல
பொருடலைக்கொண்டசொல்லான்மகிழ்வித்துப்பொருந்தக்கொண்டு
தெருடலைக்கொண்டவேள்விசீர்மையின்முடித்திட்டானே. அ௭

பிறைநுதல்வாணிநீத்தப்பெருக்கினைத்தவிர்ப்பச்செய்யு
நறைமலர்ப்பொகுட்டுமேலானற்றவம்வளர்ந்தவாற்று
லிறையினிலிடும்பையோப்புந்தபோமயமென்னுநாம
மறைபுனற்பழனக்காஞ்சியணிநகரணிந்ததன்றே. அஅ

கலிவிருத்தம்.

அற்பகவெயிலுமிழவிர்நவமணிகுயில்
விற்படுமுடியினர்விண்ணவர்முனிவருங்
கற்படுசிறையரிகடவுளரிறைவனு
முற்படுமொருதினங்குழுமினர்மொழிவார். அகூ

வெள்ளியபெருகொளிவிரிகயிலையைமுதற்
பள்ளியினமர்வுறும்பண்ணவர்மூவரு
மெள்ளருந்தரிசனமோருழியெங்களுக்
கொள்ளிதினருளவுறுற்றதுமென்னு. கூ0

வரியளியினமுரன்மதுவுமிழ்நறுமலர்
விரியணைமிசையுறைவேதியனிருகழ
லுரியதம்மகமலருறநினைந்தனைவரு
மரிறபுதவநனியாற்றுதலுற்றார். கூக

எண்ணறுநாளிவரின்னணமுயறலுந்
தண்ணியநறுமணத்தாதவிழ்தாமரை
வண்ணமென்மலரணைவானவன்முன்னுற
வெண்ணிறவேற்றனமேல்கொடுவந்தான். கூஉ

செழுமறைவேதியனெதிருறச்சேறலும்
விழுமியதவநவிலனைவரும்வெய்தெனக்
கழுமமினெஞ்சகங்களிவரத்தெளிதரு
முழுமறையோதினர்முன்னுறத்தொழுதார். கூ௩

எந்துநும்மனமுயல்வெனவினவியமறை
யந்தணன்முகமலரலர்தரமொழிதர
வெந்தைநின்னெடுமரியரனையுமோரிடைச்
சுந்தரப்பதமலர்தொழமுயல்கின்றாம். கூச

அத்தகுமுறுபயன்முற்றுறவாம்வகை
யெத்திறமருளுதியென்றலுமலரவன்
கொத்துறுமவர்களுமுடன்வரக்கொடுபுகுந்
துத்தியவரவணையும்பனைச்சேர்ந்தான். கூரு

வேறு.

கொடியிடைப்பணைமுலைக்கோலமாமக
ளடியிணைவருடநெட்டரவப்பள்ளியிற்
கடியவிழ்தாமரைக்கண்வளர்ந்திடு
நெடியவன்பதமலர்நிலத்திற்றாழ்ந்தனன். கூசா

நெட்டராவணையினின்றெழுந்துநெஞ்சகம்
பெட்டசீர்விழைவொடும்பெரிதுவந்துநீ
சட்டவானவரொடுஞ்சார்ந்ததென்னெனு
மட்டலர்ந்துளவினன்மகிழச்சொல்லுவான். கூஎ

என்னையுநினையுமற்றேறுயர்த்தநம்
முன்னையுமொருவயிற்காணும்வாஞ்சையின்
முன்னியவிவரொடேமுற்றயானுமிங்
கன்னதன்பொருட்டுவந்தடைந்ததென்றனன். கூஅ

இவளொளிக்கவுத்துவந்திளைக்குமார்பின
னுவகையனாயினனுவணப்புள்ளிவர்ந்
தவரொடுமவ்வயினகன்றுசென்றனன்
கவரொளிக்கற்றையங்கயிலைவெற்பினை. ௯௯

தேத்துளிததும்பியதெய்வக்கொன்றையு
மாத்தியுங்கங்கையுமளவளாவிய
தூத்திரட்சடையரைத்தொழுதற்கவ்வயி
னேத்தருங்கோயிலுள்வாயிலெய்தினான். ௧௦௦

நவ்விபோல்விழியெறிநயனமாதிடம்
வௌவியபுராணர்தம்வாய்தல்காத்திடு
மௌவியமகன்றநெஞ்சண்ணனந்திதான்
செவ்வியின்றொழிகெனச்செப்பமீண்டனன். ௧௦௧

இளமதியயர்வுறவெற்றுதெண்டிரை
வளநதிவேணியார்வனசமென்கழ
றளர்வறக்காணுவான்றவிர்ந்துமற்றவ
ணளவறுபெருந்தவமாற்றலுற்றனன். ௧௦௨

கனைகுரல்வண்டினங்களுலிக்கூட்டுணும்
வனைபுகழ்த்தாமரைவள்ளலாதியோ
ரனைவரும்வேறுவேறங்கண்வைகுபு
தனைநிகரருந்தவஞ்சாலவாற்றினார். ௧௦௩

கொம்பொருபாகரைக்குறித்துநெஞ்சினை
யைம்பொறிவழிச்செலாதடக்கிநோற்றுழி
வம்பவிழ்மதசலமூறிவார்ந்திழி
தும்பிமாமுகத்தவன்றோன்றினானரோ. ௧௦௪

ஆயிரம்பரிதியொன்றாகித்தோன்றியாங்
கேயபேரொளிவிடுமுருவினெந்தையை
மாயிருங்களிகொளநோக்கிவல்லையிற்
றூயதாட்டுணைமலர்தொழுதுபோற்றினார். ௧௦௫

மங்கையோர்பாகரைக்காணும்வாஞ்சையிற்
பொங்கியவருந்தவம்பூண்டுவைகினே
மங்கவர்மதலையாநின்னையன்பினா
லிங்கியாந்தொழப்பயனெளிதினெய்தினாம். ௧௦௬

த்ந்தையுமகனும்வேறன்மைசாற்றுவா
ரெந்தைநின்றரிசனமேறுயர்த்திடு
நுந்தைதன்றரிசனநுதலின்வேறிலை
யந்தணவெனத்துதியறைதன்மேயினார். ௧௦௭

விழுத்தவமுடையரைமெய்யருட்கட
லழுத்திடுமொருமருப்பண்ணற்குஞ்சரம்
வழுத்தியதுதிக்குளமகிழ்ந்துமாறிலா
முழுத்தபேரருளினான்மொழியுமென்பவே. ௧௦௮

அருந்திறற்சூற்படையகி ரநாயகர்
கருந்தடங்கண்ணியுந்தாமுங்காஞ்சியிற்
றிருந்தியகம்பைநீர்க்கரையிற்றேனினம்
விருந்துணுமாவடிமேவிவைகினர். க0கூ

அத்தகுதபோமயங்கரையண்மிடின்
மெய்த்தவமாற்றிநீர்விழைந்தயானையுங்
கைத்தலக்கனியெனக்கூடுங்காண்மினென்
றுத்தமக்களபமங்கொளித்துப்போந்ததே. கக0

வழங்கியவருடலைக்கொண்டுவார்கழ
றழங்கியதிருவடிதாழ்ந்தெழுந்துபோய்ப்
பழங்கனிந்துகும்பொழிற்பாங்கர்வண்டின
முழங்குறுகாஞ்சிமாநகரமுற்றினர். கக்க

செஃறவழ்தொறுஞ்செறிதிமிரஞ்சிப்பநற்
கஃறிவளொளிவிடுமாடக்காஞ்சியிற்
பஃறளிதொறுந்தொறும்படர்ந்துநாதனர்
வெஃறவழ்சிலம்படிவிழைந்துபோற்றினர். ககஉ

கறங்கிமுத்தெறிந்துவன்கரைகொன்றார்த்தெழு
மறங்கிளருடைதிரைவார்ந்துலாவிய
வறங்கிளர்பயனெலாமருளுங்கம்பைநீர்
பிறங்குபேரன்புளம்பெருகமூழ்கினர். கக௩

மழைத்திரளகடுகீண்டெழுந்துவார்ந்துபோய்க்
குழைத்தபூஞ்சினையெலாங்குரங்கக்காய்படுந்
தழைத்தவோர்மாவடிதன்னிற்றோன்றிய
வுழைத்தடங்கையினர்திருமுனுற்றனர். ககச

நோக்கியமலர்விழிபெரிதுநுண்டுளி
வாக்கமென்மலர்க்கரங்கூம்பமாறிலாத
தேக்கியவின்புளந்திளைப்பயாவருங்
காக்குநாயகரிருகழலிற்றாழ்ந்தனர். ககடு

ஏலவார்குழலிவீற்றிருக்கும்பாகரைக்
கோலவார்சடையரைக்கும்பிட்டஞ்சுரும்
பாலவார்மதுவுமிழம்புயத்தவன்
சாலமாமறைகளாற்சரண்பழிச்சினன். கககூ

சீரியமறைத்துதிக்கிரங்கித்தேனினங்
காரளிமுழக்கறாக்காமர்மாவடிப்
பூரணர்தாமரைப்பொகுட்டுமேவிய
வாரணன்காணவங்கருளித்தோன்றியே. ககள

சிறையளிதேனினஞ்செற்றித்தாதளைஇ
நறைநுகர்ந்தெதிரெடுத்தென்னநல்லிசை
முறைமுறைபயில்வுறுமுண்டகத்தினோய்
நிறைவரங்கோடிநீயெனநிகழ்த்தினர். ககஅ

இளர்ந்திடுமுலவகையுங்கெழுமிமீமிசை
வளர்ந்திடுபத்தியுமனங்கொளாதெழத்
தளர்ந்திடுமொழியினன்ருழ்ந்துவண்டின
முளர்ந்துணுமதமலரும்பனேதுவான். ககக௯

பிள்ளைவெண்மதியமும்பிரசக்கொன்றையும்
வள்ளெயிற்றரவமுமிலேந்தவார்சடை
யள்ளிலேச்சூற்புடையமலநாயக
வெள்ளருநினதருள்கிடைப்பவிவ்வுழி. கஉ0

பெருகியவானவரோடுபெட்டுநின்
றிருமுனர்ப்பரிமகஞ்செய்வன்மற்றவண்
வருவதுவேண்டுமென்றிரப்பவார்கட
லிருள்விடமயின்றவரிசைந்திட்டாரரோ. கஉக

கீற்றிளம்பிறையவிர்கேழ்த்தசெஞ்சடை
நீற்றணிதிகழ்ந்தமெய்நிமலரேற்றெதிர்
கூற்றுயிர்குடித்ததாள்குறித்துநூலவழி
யாற்றினன்பரிமகமயனுமென்பவே. கஉஉ

முறுகியமணப்புகைப்படலேமொய்த்துவா
னறுமலர்க்கற்பகநனேகள்வாட்டுறு
மறைநெறிவேள்வியின்வயங்குசெஞ்சடைப்
பிறையணிகூத்தனர்பிறங்கித்தோன்றினர். கஉ௩

விம்மிதந்தலேகொளவிழிகணீருக
விம்மெனுமுனனெழுந்திறைஞ்சிவாழ்ந்தன
ரம்மலர்ப்பொகுட்டின்மேலயனுமார்பிடைச்
செம்மலர்த்திருவமர்செல்வத்தோன்றலும். கஉச

மற்றைவானவர்களுமறுவிலாத்தவ
முற்றுமாதவர்களுமொருங்குமூவர்தம்
பொற்றமாமரையடிப்போதுதாழ்ந்தெழுந்
தற்றமில்விழைவவணுரமுற்றினர். கஉ௫

அன்பருக்கருள்புரிந்தமலநாயகர்
பொன்பொதியிளமுலேப்பூவைதன்னெடு
மின்பழங்கனிந்துதேனிறைகருமாவடி
முன்புபோல்வைகினர்முகிழ்த்தகாதலால். கஉ௬

பாற்றரும்பவத்தொடர்பாறவல்வினே
நிற்றிடமழுப்படைநிமலநாயகர்
போற்றரும்பதமலர்போற்றியன்பிஞ
லாற்றருவேள்விசெய்தயனிருந்தனன். கஉஎ

பாவியவுத்தரவேதிப்பாங்கரிற்
பூவலர்துளவிஞன்பொற்பவைகினன்
ருவிலப்பரிமகச்சாலேவேதிதான்
மேவருமத்திவெற்பென்னவோங்குமே. கஉஅ

இருவருநாடொணுவிறைவரோடமேற்
றிருவருமின்னணம்வதியுமேதுவான்
மருமலிகாஞ்சிமும்மூர்த்திவாசமென்
ஞெருபெயர்படைத்ததாலுலகுபோற்றவே. கஉகூ

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

துள்ளிவீழ்தருமாலேவெள்ளருவி துளேத்தநெட்டறைப்பெருங்குழியிடத்துப், புள்ளாருதமென்சினேப்பொழிலுகுத்த போதுசாலவும்போர்ந்தகாரணத்தாற், பள்ளமீதெனவறிந்திடாதியலும் பனேக்கைவேழம்வீழ்த்துலம்பிமுன்னரக்கன், றெள்ளுருதுவந்தெடுத்திசையெழூப்புஞ் செய்கைகாட்டுமெக்கயிலேமால்வரையின். கங0

தேய்ந்தவெண்மதிக்குழவிதான்வளர்ந்து செழிப்பமுன்னிமந்தாகினிநறுநீர், தோய்ந்துதுன்னியசெஞ்சடைவனத்துச் சூட்ட ராவினந்தழல்விடங்கொழித்துக், காய்ந்துவன்படம்விரிக்கும்வெந்நிழலிற் கதுவிவைகலுமருந்தவமுயலு, மாய்ந்தமெல்லிதழ்த்தொடரியகடுக்கை யலங்கல்சூழ்ந்தெழிலசும்பியமுடியார். கங்க

மாண்டவின்னிசைச்சுரும்பினமுரன்று மணங்குலாவுசெம்மட்டுவார்ந்தொழுக, வீண்டுமெல்லிதழ்மலர்த்தொடைசெருகு மிருட்சுருங்குழலிறைவிதன்னேடும், காண்டகுங்கதிர்க்குடைமிசைநிழற்றக் கவின்றசாமரையிருபுறமிரட்டப், பூண்டகாதலிற்பொலந்தவிசிவர்ந்து பொற்பமுன்னெருநாளினிதிருந்தார். கஙஉ

அண்டம்யாவையும்படைத்தளித்தழிக்கு மாற்றல்வல்லசீர்நந்திவேதண்டனெ, மண்டுமாதவப்பிருங்கிதுண்டீரன் மற்றுமல்கியபெருங்கணநாதர், கொண்டல்வெள்ளெனக்கறுத்துவெண்புணரி கொதித்தெழுந்தவல்விடநுகர்ந்திருண்ட, கண்டர்சேவடிக்கமலநாண்மலரைக் கசிந்துபோற்றிநின்றன்பினிற்றிளேத்தார். கஙங

அரிபரந்திருண்டகன்றுநெட்டிலேவே லம்பலேத்துநீண்டண்டஞ்செவிக்குழையைச், சரியமோதுமைவிழிச்சியைமுதலாஞ் சத்திமாதர்களெண்ணிலார்குழுமிக், கரியகண்டர்தம்மருங்குவீற்றிருக்குங் காமர்வாண்முகமலர்ப்பசுங்கொடிதன், பரிபுரச்செழுஞ்சீறடிக்கமலம் பணிந்துபோற்றிநின்றின்புமீக்கிளேத்தார். கஙச

போற்றியின்னணநின்றிடுமேல்வைபோக்கருந்தவம்வல்லதுண்டீரனாற்றுமுன்னேவல்வினேப்பயன்றெடரவறிவுமீவேறுபட்டாதவனுருப்பமாற்றுபூஞ்சினேமலர்ப்பொழிற்றெய்வமாலதிப்பெயர்மாதராள்கனகக்கோற்றெழிப்பசும்பணேபுரைநெடுந்தோட்கோதைமீதுதன்மனஞ்செலவிடுத்தான்.

வணங்குநுண்ணிடைவருத்திமேலெழுந்து மகர்த்தபூண்முலேமாலதித்திருப்பே, ரணங்குமாயிடைப்புகுமுகம்புரிந்தே யார்வமீகளெளக்கட்கடைவிடுத்தா, ளிணங்குமாரனுந்தன்வலிகாட்டி யிடையிடைஇனெய்துழியெழுந்தமெய்யுணர்வா, லுணங்கரும்புகழாளன்மற்றவள்பா லுற்றநெஞ்சினேயொய்யெனமீட்டான். கஙரு

என்னேசெய்தனனன்றுநன்றிதுகாறீட்டுமேன்மையுந்தவங்களுமிறப்பவன்னமென்னடைப்பிராட்டியினேடுமமருமண்ணலார்திருமுனிவ்வாறுகொன்னுதீவினேயீட்டியவஞ்சக்கொடியனேற்கினியுய்வகையாதென்றுன்னியுன்னிநெக்குருகிவெய்துயிராவுளமெலாம்பதைபதைத்துமிக்கழிவான்.

உடக்குதன்னுடனின்றுபோரன்பினும்பர்நாயகர்சேவடிபாசு
மடங்கடிந்தமெய்யடியரைநோக்கிமதியினுனுறுந்தன்னையேபழிக்கும்
விடங்கொதித்தெனவந்ததீவினையைவெருவுமோவருகவற்சியிற்றளையும்
படங்கவின்றவாளரவணிந்தவரைப்பரசியுய்துமென்றுளந்துணிக்தெழுந்தான்.

அன்னையேயிகர்குருமனைக்கிழத்தியலர்முலைத்தடந்தோய்ந்துசெம்மாக்கு
மின்னுபூங்கதிர்த்திங்களுக்கிரங்கும்வித்தகாவிரிநீர்கடலெழுந்து
முன்னுதீவிடந்திருமிடற்றடக்கிமுறைதிறம்பியவானவர்க்கெல்லா
நன்னர்வான்பதமளித்தருள்கருணைநாதவென்னையுங்காப்பதுன்கடனே.

என்றுபல்வகைத்துதியெடுத்தியம்பியிறைஞ்சிநின்றிருகரஞ்சிரங்கு
வியத், துன்றுமென்பெலாநெக்குநெகதடையத்துணைக்கணீர்மழைத்தா
ரையிற்பொழியக், கன்றுமுள்ளகங்கரைபுரண்டெழுந்தகாதன்மெய்யரு
ட்டிறத்தினிற்றிளைத்தான், குன்றவில்லியார்திருவுளமிரங்கிக்குளிர்ந்தவா
ணகைமுகத்தராயருள்வார். கசo

இன்னலுற்றுமிக்கஞ்சலைகேட்டியிலங்குவேற்படையரசர்தங்குலத்துத்
துன்னுபூங்குழன்மாலதியொடுநீதோன்றியொன்னலர்வணங்குதுண்டீர
மன்னனாகிமற்றிவண்முலைப்போகமணந்துகாஞ்சியின்வதிந்தரசியற்றிப்
பின்னர்நம்மருளாலிவணெய்தப்பெறுவையாலெனத்திருவருள்புரிந்தார்.

அருளும்வாய்மொழிகேட்டலுநடுங்கியண்ணலார் மருங்கருட்பணி
யுரிமை, மருவிவாழ்தரும்பேறும்வந்தடுத்தமண்ணின்மானுடப்பிறவியு
நோக்கித், தெருளுருதுளங்கலங்கியென்னினிமேற் செய்வதென்றுசோ
காந்துநாயகனார், சரணையேபுரந்தருளுமென்றெண்ணிக்கசிந்துதாழ்ந்த
னன் புறவிடைகொண்டான். கசஉ

அல்லழுத்தியதெனவிருண்டொழுகு மஞ்சிலோதிமென்மலர்முக
நெடுங்கட், கல்லழுத்தியகுதமபைநான்றெருதிற்கதிர்க்குஞ்செஞ்செவி
மாதொடெண்டிசையுஞ், சொல்லழுத்திநாற்பயன்களுமெவர்க்குஞ்சுரக்
குங்காஞ்சியம்பெரும்பெயர்த்தலத்து, மல்லழுத்தியமணிவரைத் தடந்
தோண்மதுகைமன்னர்தங்குலத்துவந்துதித்தான். கசங

குழவிவெண்மதிபோன்மெனவளர்ந்துகோதிலாதபல் கலைளும்பயி
ன்று, மழலைமென்மொழிமாலதிமாதைமணந்துகாஞ்சியைக்காவல் பூண்
டிகலி, யழலுமன்னவரனைவருப்பணிப்பவடுநெடும்படைவிதிர்த்தரட்ட
டக்கி, நிழலசெய்வேண்மதிகுடைமிசைகவிப்ப நீதிவாய்மையாலரசு
செய்திருந்தான். கசச

சுணங்குபூத்தெழுந்தொளிவடந்தழுவித்தொய்யின்மேற் பரித்தமு
தமுள்பொதிந்து, வணங்குநுண்ணிடைக்கொடியினைச்சினந்துமதர்த்தபூ
ண்முலைமாலதிப்பெயரி, ணைங்குமெல்லிதழ்க்குமுதவாய்த்தேறலாரமா
ந்தியின்பப்பெருங்கடலி, னிணங்கிவாழ்ந்துபின்னிறையவரருளாலிலங்
குவெள்ளியம்பொருப்பினைச்சேர்ந்தான், கசரு

எற்றுதெண்டிரைவேலைசூழ்ஞாலமேந்துதோளிணைபரித்திகல்கடந்து
முற்றுசீர்த்தியன்வயங்குதுண்டீரன்முழுத்தகேள்வியனுண்டகாரணத்தாற்
கற்றைவார்சடைத்தெய்வநாயகரேகம்பநாயகர்காக்குநாயகர்வாழ் .
பொற்றமாநகர்க்காஞ்சிதுண்டீரபுரமெனும்பெயர்பூண்டதுமாதோ.

கலிவிருத்தம்.

தொடைவாய்ந்தபசுந்துளவன்முதலா
முடிவானவர்யாருமுடிந்தொழியுங்
கடைநாளூறுகாலையிலெங்குமிகப்
படராழியெழுந்துபரந்ததுவே. கசஎ

மாலாரணன்மற்றுளவானவருஞ்
சாலாவினைமாட்டியதாபதருங்
கோலாகலமாகிவருங்குரைநீ
ராலாகலநோக்கியயர்ந்தனரே. கசஅ

அந்தோவினியென்செயலாவதெனச்
சிந்தாகுலமுற்றனர்திசகுவிராய
முந்தார்பெருநீர்க்கடன்மூழ்குமுன
நந்தாதபயக்கடனண்ணினரால். கசகூ

கழுமக்கருமக்கடுவன்பிறவி
யெழுமைக்கடனின்றுமெடுத்தருளாஞ்
செழுமைக்கரைசேரவிடுந்தருளும்
விழுமக்குளிர்காஞ்சியைமேவினரே. கருo

கம்பாநதியின்கரைமீதுநறை
வம்பாரிணர்மாவின்வதிந்தருளுங்
கொம்போர்புடையார்குளிர்பசுஞ்சரண
வம்போருகமன்பொடிறைஞ்சினரே. கருக

புரமூன்றுமொருங்குபொடித்தருளும்
பரமாவுலகங்களபதைப்பமவழூ
மூராவார்கடலோபயியுயகொளுவாய்
வரதாவென்வணபின்வழுத்திடலும். கருஉ

மொழியுந்துதிகேட்டருண்முககண்ணு
ரழியுந்துயரோப்புதுமென்றருளிற்
குழிவந்தவர்மருங்குளிர்பபவமிழ்
திழியுஞ்சுவைமென்மொழியீந்தருளி. கருங

செழுவண்டுமுரன்றுதிளைப்பமதுப்
பொழியுந்தொடைமேவியதழிலபூத்தகுழன்
மழையுண்விழிமாதொளிர்கவினிதனை
யெழுவேலையடக்கெனவேவினரே. கருச

அயில்கண்டனகூர்விழியவ்வடிவின்
மயிலகண்டனசாயன்மடந்தைவிடம்
பயில்கண்டர்பதந்தொழுதாழிபனி
வெயில்கண்டெனவாடமுன்மேவினளே. கருரு

முன்னூற்றுமுருக்கமுயன்றருளும்
வன்னித்திரள்கால்படைமங்கையினைக்
கன்னிககடல்கண்டுகலங்கியவ
டன்னைத்தொழுதுய்ந்துதணிந்ததுவே. கருசா

இலயப்புனலவெள்ளமெழாதுதணிந்
துலையப்புரியுத்தமிமீண்டருளா
லலையப்பணிவார்திருமுன்னமர்பூ
வலயத்தவர்போற்றவதிந்தனளே. கருஎ

வெருவிப்பருவந்தவிணோரெவருங்
கருணைச்செயல்கண்டுகளித்தனர்நோ
யொருவித்தனிமாவடியும்பர்பிரா
னிருபொற்கழலேததியிறைஞ்சினரால். கருஅ

எற்றித்திரைபாயிலயப்புனலை
வெற்றித்திறல்காட்டிவிலகத்தலாற்
றெருத்துப்பொழில்சூழ்நகர்தானிலய
சித்துப்பெயர்வாய்ந்துதிகழ்ந்ததுவே. கருகூ

கலிநிலைத்துறை.

பண்டுழாவியபாட்டிசைபயிற்றுதீங்குரல்
வண்டுபாய்ந்துபாய்ந்துழக்கும்மன்மலர்ப்பொகுட்டோனும்
விண்டுதேததுளிதுவழுற்மேதகுமணங்கமழ்ந்த
தண்டுழாய்த்தொடையுலவருந்தடம்புயத்தவனும். கசுo

பண்டையோர்திவர்பாவைநீர்பெருக்கிடைத்தம்முட்
கண்டியாரையெனவொருவனமற்றொருவனைக்கடாவி
மிண்டியான்முதலயான்முதலென்றனர்வெகுண்டு
மண்டுபோரிடைமூண்டனர்பாதிரமயங்க. கசுக

முழங்கவார்த்தெழுந்திருவருமுறைமுறைபடைகள்
வழங்குநாப்பணெவ்வுயிர்க்குமவ்வவிணைப்பவத்தொடக்கி
னழுங்குறுத்தருளண்ணலாரற்புதவடிவா
யொழுங்குகொண்டபலலண்டமுமுறநிமிர்ந்தனரால். கசுஉ

முதிர்செழுஞ்சுடர்ச்சோதியாய்முளைத்திடையெழுந்த
வெதிராறுந்திருவடிவிடையிகலினர்வழங்குங்
கதிர்படைக்கலமுழுவதுமெய்தினகாப்ப
வதிரும்வெஞ்சமர்தணந்தனரற்புதமுகிழ்த்தார். கசுங

அண்டகோளகைமுழுவதுமயிரொளியகம்பக்
கொண்டபோழ்துவ்வடிவினையடிமுடிகுறுகிக்
கண்டுமீளுதுமெனக்கலாய்முரணினர்கடுகி
மண்டுகாதலிற்றுருவுவான்புகுந்தனர்மாதோ. கசுச

மருப்புவாய்ந்தவலவெறுழிபாழ்மாதிரக்கயமும்
பொருப்புமேனவுமதிர்வுறப்புவிமுழுதகழ்ந்து
திருப்பொன்மார்பினன்றேடினன்றிருவடிகாணான்
விருப்புமாய்ந்தனன்வெள்கினன்றளர்வொடுமீண்டான். கசுரு

மின்னளாவியவிரிசிறைப்பவளம்வீழ்துவர்வா
யன்னவாகிவிண்ணிவந்தெழுமம்புயப்புலவன்
கன்னிபாகனார்கதிர்முடிகண்ணுறக்கடுப்பின்
முன்னிதேடினன்காண்கிலன்முயற்சியுந்தளர்ந்தான். கசுசு

வன்னவொண்சிறைமுரிந்துடன்முழுவதும்வருந்தி
நன்னர்நெஞ்சகத்தெழுந்ததோருக்கமுநலிந்தா
னென்னமாயவனடியிணைகாண்பனேயினியா
னென்னசெய்வலென்றுழந்துழந்திடர்ப்படுமேல்வை. கசுஎ

துதிசெய்வார்மனக்கோயில்கொண்டருளியதூயோர்
மதிநிலாந்திருமுடியினின்றிழிந்துமுன்னணுகும்
பொதிநுண்டாதுறைத்தலர்ந்துசெந்தேன்பொழிந்திலகும்
புதியகாட்பொலந்தாழையம்போதினைக்கண்டான். கசுஅ

முண்டகத்தினைக்கடாயினன்முடிவில்பல்லுகத்தா
னண்டர்கோன்முடிநின்றிழிந்தனைவதுகேட்டான்
கொண்டவோகையனிவன்றிருமுடியினைக்குறுகிக்
கண்டுளோனென்றோர்பொய்க்கரிபோக்கெனக்கரைந்தான். கசுகூ

இரந்திரந்துநைந்தேங்கியாருயிரெலாந்தளர
வரந்தையுற்றதுநோக்கியுற்றுகெனவிசைந்த
சுரந்தநுண்டுளித்தேன்கொழிதோட்டலரோடும்
பரந்தவெண்கடற்பாயலான்மருங்குறப்படர்ந்தான். கஎ௦

கள்ளறுதசெந்தாமரைப்புதுமலர்கடுக்கும்
வள்ளலார்திருச்சேவடிகாணவல்லாத
புள்ளவாவியதுளவணிபுயத்தகேளென்று
வுள்ளமீக்கொளுங்களிப்பினுலுரைத்தன்மேயினனுல். கஎக

அரவம்பூண்டுபொன்னம்பலத்தருணடங்குயிற்றுங்
குரவனார்தமதினங்கதிர்க்கூன்மதிக்குழவி
பரவுநீண்முடிகண்டனனென்றனன்பரவி
வருவதோர்ந்தெவருரைக்குநர்மம்மர்கோட்பட்டார். கஎஉ

போழும்போவெனுங்கண்ணியோர்புடையினர்முடியைக்
கேழும்போருகன்கண்டனனெனக்கிளர்ந்தெழுந்து
சூழும்போதியிற்கண்டுயிறுளவணிந்தவன்முன்
றூழும்போதுமோர்பொய்க்கரிசாற்றியதம்மா. கஎ௩

கோட்டமுற்றுரைகிளத்தலுங்குரைபுனல்பொதிந்த
நீட்டுவேணியார்தோன்றிமுன்னெருப்பெழச்சினவி
யோட்டைநெஞ்சினைபொய்க்கரியுரைத்தனைமலர்நீ
யீட்டுபூசனைக்காகலையெமக்கெனவிகந்தார். கஎச

மறைகளோதியுமறைப்பொருடெள்ளியுமனத்துக்
கறையையோம்பலைபொய்யுரைகரைந்தனைமுகடி
நிறையுமாருயிர்படைக்குநின்பதமுநீள்வாழ்வு
மிறையினீங்குதியெனவயன்றன்னையுமிகந்தார். கஎ௫

கள்ளலங்கியகடிமலர்ப்பொகுட்டணைப்புலவ
னள்ளிவார்கையினழிமதக்குஞ்சரமயின்ற
வெள்ளிலங்கனிவீழ்தரப்பதமிழந்திழிப்புண்
டுள்ளமிக்குடைந்தலக்கணீருவரியிற்படிந்தான். கஎசு

சட்டவான்பதந்தனையிழந்தியாவருமிழிக்கப்
பட்டுளேனினியெவன்செயற்பாலதென்றெண்ணிக்
கட்டவெந்துயர்களைதருங்காஞ்சிமாநகரைப்
பெட்டவேட்கையினெய்தினான்றன்பதம்பெறுவான். கஎஎ

ஓட்டலார்புரமுருத்தவனேகம்பந்தொழுது
சிட்டர்போற்றுறுங்கச்சபாலயத்தினைச்சேர்ந்து
வட்டவாய்ச்செழுங்கமலமுங்குமுதமுமலரு
மிட்டசித்திவெண்டிரைப்புனலினிதுதோயந்தனனால். கஎஅ

பற்றுவெந்துயர்நரகிடைப்படுத்தும்வல்வினையை
முற்றுநீற்றிடுங்கச்சபாலயத்தமர்முதல்வர்
பொற்றதாமரைத்தாளிணைபோற்றினன்பழிச்சி
யற்றவைம்பொறியொடுமுயன்றருந்தவம்புரிந்தான். கஎகூ

காலமெண்ணிலவருந்தவமாற்றுறுங்காலை
யாலமுண்டவர்திருவுளமிரங்கியங்கெதிர்நின்
றேலவின்னருள்புரிதரப்பேற்றிளமதியக்
கோலவேணியார்திருமுன்புகுலாவிவாழ்ந்தனனே. கஅ0

நாறுதாமரைச்சேக்கையான்றன்பதநாடி
யேறுயர்த்தவரருள்கிடைத்திருந்தகாரணத்தாற்
பேறுதந்தருள்பிரமமாபுரமெனுநாம
மீறுகண்டிடாக்காஞ்சிமாநகரமெய்தியதே. கஅக

கலிவிருத்தம்.

மற்றோர்காலத்துவார்மதுத்தாமரைப்
பொற்றபூம்பொகுட்டண்ணலம்புங்கவன்
முற்றுமாக்குமுதற்றொழிலபல்குதற்
குற்றசூழ்ச்சியவனெனவுன்னினான். கஅஉ

வம்புநாறுமணிக்கலுழிக்கடக்
கம்பமால்வெண்கதக்களிறூர்தரு
மம்பொன்மோலிவலாரியையாதியா
மும்பராரவர்தம்மொடுசாவியே. கஅங

ஒற்றையாழியந்தேரவனுள்ளுறப்
பற்றியீர்க்கும்பசுஞ்சினைப்பூம்பொழில்
சுற்றுமல்குந்தபோமயத்தொன்னக
ரற்றமில்லதோரன்பொடுமேகினான். கஅச

பரக்குநீர்நதிக்கம்பைபடிந்துபோந்
தரக்குவார்தளிர்க்கொக்கடிவைகிய
கரக்குன்றீருரிக்கண்ணுதலாற்பதஞ்
சுரக்குமோகைதுளும்புறப்போற்றினான். கஅரு

கொங்குலாம்பொழிற்புண்ணியகோடிமு
னங்கண்வைகியருமறையாற்றினாற்
புங்கவானவர்புங்கவர்சூழ்தரத்
துங்கவாம்பரிவேள்விதொடங்கினான். கஅசு

விடுத்தகொய்யுளைவெய்யமாயாவியென்
றெடுத்தியம்புமவுணனிறையின்வந்
தடுத்துவெளவியலையெறிசுத்தநீர்
மடுத்தவேலைகரந்தவண்ணைகலும். கஅஎ

கலணைவாம்பரிகாண்கிலனெய்யெனப்
புலனழிந்தனன்புந்திதிகைத்தன
னுலையுநெஞ்சமுருகினன்மாவடித்
தலைவர்சேவடிதஞ்சமென்றணமினன். சஅஅ

ஊற்றுகட்புனல்வார்ந்தொளிருந்திரு
நீற்றுமெய்யிடைவண்டனிலாவுறப்
போற்றிநின்றபொற்றாமரையண்ணன்முன்
னேற்றின்மேலவாதோன்றியியம்புவார். கஅகூ

முச்சகங்கண்முகிழ்க்குமுளரியோ
மெச்சகங்களுந்ததமியல்பினல்
லைவச்சநம்மொருபாகிவடிவமா
மெச்சனீர்ந்துளவத்தொடைமாயவன். ககூ0

கன்னியந்துளவக்கடிமார்பினன்
மன்னுமைங்கதிவாம்பரியைகொணர்ந்
துன்னவாவைநிரப்புவனாங்குவன்
றன்னைவேண்டுகெனவருடந்துபின். ககூக

அரவப்பள்ளியினனையழைத்தவன்
பரவக்கண்ணருடந்தயன்பாயபரிக்
கரவைக்கண்டுகொணர்ந்துகடிமகப்
புரவைகொள்கெனப்பூமகள்கேள்வனும். ககூ

வணங்கிமீண்டுமலர்த்தவிசொன்றினே
யுணங்கலவெம்பரியொய்யெனமீட்டிவ
ணிணங்குநின்மகங்காப்பலென்றேற்றவ
ரணங்கமாவினைத்தேடுவானயினன். ககூங

எங்குநேடினன்காண்கிலனேசுழிப்
பொங்குசுத்தப்புனற்கடலுள்ளுறத்
மையறிந்தன

ககூச

ஏற்றெதிர்ந்தவவுணனையின்னுயிர்
பாற்றினன்பரிபற்றினன்வேலைமேற்
றோற்றினன்மலர்த்தோன்றறுயர்க்கடன்
மாற்றினன்பரிமாவைவழங்கினன். ககூரு

ஏறுமலராளிசதமக
னெண்ணில்வானவர்யாவருநோக்கியே
யுண்ணிலாவியவோகையின்மாயனைப்
பண்ணினலிசைபாடிப்பழிச்சினர். ககூசு

படர்துவர்க்கொடிப்பாற்கடலன்றெழுந்
துடலுநஞ்சமுதுண்டருள்காரணர்
தொடலைமென்குழற்றேனுகையுடன்மகிழ்ந்
தடலராவணையாற்கருள்செய்வரால். ௧௯௭

கருடவூர்திக்கருடு
குருதிவாற்படைத்தானவற்கொன்றொரீஇ
யுருவவாம்பரிபற்றியுதவிநா
மருளுமேவலினின்றனையாதலால். ௧௯௮

நாற்றக்கஞ்சநறும்பொகுட்டண்ணலு
ஞற்றப்புக்கமகத்தவிப்பாகநீ
யேற்றிடடுத்தரவேதியிருத்தியென்
றூற்றத்தேமொழியோதியருளினர். ௧௯௯

தயங்குசெஞ்சடையாரருட்டாங்கியங்
கியங்கிவேள்வியினின்னவிப்பாகமேற்
றுயங்குசிற்றிடைப்பொண்டிருமாதொடும்
வயங்குமுத்தரவேதிவதிந்தனன். ௨௦௦

ஆங்கணன்னணங்கம்பரருளினாற்
பூங்கள்தார்துளவப்புயலவைகலா
லோங்குவிண்டுபுரமெனவோர்பெயர்
தீங்குதீர்திருக்காஞ்சிபுனைந்ததே. ௨௦௧

மல்லல்வைகுண்டவான்பதம்வேட்டரி
யல்லலர்ந்தகளத்தரையவ்வுழிப்
புல்லுமன்பொடுபூசித்தலானுமச்
செல்வமாப்பெயர்பெற்றதச்சீர்நகர். ௨௦௨

கலிநிலைத்துறை.

மருளுமைவகைமலப்பெருந்தொடக்கினைக்கடந்து
தெருளுமானந்தச்சுடர்பபிழம்பாய்வினைத்தீமை
யொருவினாரகவிளக்கதாயிருசுடருயிர்வான்
பெருகுகாலழலபுனனிலமாயபேரொளிதான். ௨௦௩

மலக்கணத்திறற்சிமிழ்ப்புண்டுமயங்குமாருயிரை
யலக்கணீந்தெடுத்தாளமிக்கலர்ந்தபேரருளா
னலக்குமாமறைமாவடிநறுநிழன்முளைத்து
விலக்கருப்புகழேகம்பனெனப்பெயர்மேவி. ௨௦௪

தூயவைந்தொழிலுயிர்க்கெலாமியற்றிமின்றுறுத்த
பாயமேகலைவழிபடப்பரிந்துவீற்றிருக்கு
மாயசீர்மையாலகிலமும்புகழ்திருக்காஞ்சி
மேயதாற்சிவபுரமெனுமேதகுநாமம். ௨௦௫

வேறு.

கறங்குதிரைப்பெருங்கடலிற்கதிர்பரப்பிமுளைத்துலகி
லறங்களெலாந்தழைத்தோங்கவழங்குமழற்கதிர்மரபின்
மறங்குலவும்பகைவெருவவாள்விதிர்க்குந்திறல்வேந்தன்
பிறங்கியசூரியச்சோதியெனத்திகழும்பெயருடையான். ௨௦௬

மழலைமென்குதலைச்செவ்வாய்த்தளர்நடைமகப்பேறின்றிக்
கழிறுயர்நாளுங்கூர்ந்துகதியிடைத்தப்பாதுய்க்கும்
விழைதருமகப்பேறில்லாவாழ்வுமேதக்கதேயென்
றழல்படுமெழுகுபோலவகமெலாமுருகிநைந்தான். ௨௦௭

ஆரணநாடியின்னுமளவிடற்கரியமுக்கட்
பூரணரினிதுவைகும்பொற்பினதாகித்தன்றன்
சீரணிகுலத்துக்கெல்லாந்திருத்தகுமுதன்மைத்தாய
வேரணிபரிதித்தெய்வத்திருங்கழலபோற்றலுற்றான். ௨௦௮

பண்டருசுரும்புமூசிப்பாடமொட்டவிழ்ந்துவாசத்
தண்டுளித்தேறல்வார்ந்துததைந்தசெங்குவளைப்போதான்
மிண்டியபொறிகள்செற்றுமேதகவழிபாடாற்றி
மண்டியகிரணப்புத்தேண்மந்திரங்கணித்தல்செய்தான். ௨௦௯

மங்கருங்காதன்மல்கவின்னணம்வழிபாடாற்றித்
திங்களீராறுசெல்லச்செறியிருட்படலம்வாரி
துங்குசெங்கிரணக்கற்றைநொறிலுளைமான்றேர்ப்புத்தேள்
பொங்கியகருணைதன்னாற்புதல்வர்ப்பேறளித்திட்டானே. ௨௧௦

தேவியரிருவர்தம்முட்டிருவளர்யசோவதிப்பேர்ப்
பாவைதன்வயிற்றுநீண்டபனிக்கடலுடுக்கைவையத்
தேவரும்புகழத்தக்கவிராச்சியவர்த்தனப்பேர்
மேவருங்காளைவந்துவிழுத்தகத்தோன்றினானே. ௨௧௧

பொருதிரைப்புணரிவையம்புகழ்சுதரிசனப்பேரான்
குருமணிக்கடகமுன்கைக்குவிமுலைப்பருமவல்குற்
கருநெறிக்கூந்தற்செவ்வாய்க்கலாவதியென்னுநாம
மருவியமாதர்நல்லாள்வயிற்றில்வந்துதயமானான். ௧௧௨

தத்தொலித்தரங்கவேலைத்தாரணிமுழுதுமூடி
மைத்தவல்லிருள்சீத்தோங்குமிளங்கதிர்மதியமபோல
நித்தலும்வளர்ந்துமைந்தரிருவருநிகரிலாத
புத்தெழிற்பெருககம்வாய்ந்துபுகர்தபவிளங்கினாரே. ௨௧௩

தளர்நடைப்பருவந்தீர்ந்துதபனியமாடத்தாடி
வளமலிவீதியெய்திமகாரிளத்தோடுமாடிக்
குளநதிமலர்ப்பூஞ்சோலைகுன்றினும்விளையாட்டாடி
யிளமழவேற்றுபோல்வாரின்னணஞ்செல்லுநாளில். ௨௧௪

மருவியவிளமைக்கேற்றமடமையாலரசமைந்த
ரிருவருந்தம்முண்மாறுண்டேரியுகச்சினந்துவல்லே
யொருவனையொருவன்றாக்கியுலப்பருநிதியந்துஞ்சுங்
குருமணிமாடக்கொற்றக்கோயிலுட்சென்றாராக. ௨௧௫

கருநெறிச்சுரிமென்கூந்தற்கலாவதிமாதுநோக்கி
யொருவரும்பொறாமைபொங்கவுளத்தெழும்வெகுட்சிதுள்ள
விருநெடுங்கயற்கண்சேப்பவிராசவர்த்தனனைச்சால
வெருவுறப்பகைஞர்போன்றுவெய்தெனச்சீறினாளே. ௨௧௬

மாற்றலர்தடந்தோட்கொற்றவலியெலாமிமைக்குமுன்னர்க்
காற்றுநெட்டிலைவேற்றங்கைகதிர்விடுசனகக்குன்றந்
தோற்றிடவிறுமாந்தோங்கித்தொய்யின்மேற்பரித்தகொங்கைக்
கோற்றொடிவேற்றுத்தாய்க்கங்குடன்படுங்குறிப்பினின்றான். உகஎ

இழைகவழ்ந்தொளிருந்தொய்யிலேந்திளங்கொங்கைநல்லா
ளழலெனச்சிவந்தவாறுமதற்குடன்பட்டானுகி
முழவுறழ்குவவுத்தோளானருண்முனிந்திருந்தவாறு
மழவிளமடங்கலன்னான்மதித்தனன்கவற்சிகொண்டான். உகஅ

பொருமியுள்ளழுங்கிவேவப்பூம்புனல்விழிகள்காலத்
திருநுதல்வியர்வுகாட்டச்சீறடிநடைதள்ளாட
வுருவெழில்வேறுகாட்டவொளிர்முகங்குவிந்துவாட
கருணையிற்பெரியநற்றாய்தன்புடைகடிதுபோந்தான். உககூ

இருவருங்கலாய்த்தேமந்தவேதுவானினக்குமாற்று
ளுருகெழச்சினந்தாளெந்தையதற்குடன்பட்டான்மன்ற
மருவியிங்கிருக்ககில்லேன்மறுதுநீயருளினேகிப்
பெருகியவரங்கள்பெற்றுப்பின்னிவண்வருவனென்றான். உஉ0

கேட்டலுமிரங்கிநொந்துகெழுமுபேரார்வங்கூரக்
கோட்டமினற்றாய்வலலேகொங்கையினணைத்துப்புல்லி
வாட்டடங்கண்ணீராட்டிமங்கலம்புகன்றுகூறி
வேட்டவாறெய்துகென்றுவிடைதரப்பெற்றுமீண்டான். உஉக

தந்தையுந்தாயும்வைகுந்தன்னுடைநகரநீத்துக்
கந்தரந்தவழுந்தோறுங்கணநிரைச்சினையான்மோதும்
பந்தியினுயர்ந்தசோலைப்பாரியாத்திரமென்றோதுஞ்
சுந்தரவரைப்பிற்றீர்க்கதவன்றனைத்துன்னிக்கண்டான். உஉஉ

முன்னைநற்றவத்தின்பேற்றான்முழுத்தபேரறிவுசான்ற
வின்னமெய்க்குரவன்றன்னையெய்துறப்பெற்றேனென்று
கொள்ளைவிழுவைகைபொங்கக்குதுகுதுத்தன்புநீடிப்
பொன்னடிப்போதுதாழ்ந்துபோற்றெடுத்தெதிரேநின்றான். உஉங

பூண்டமெய்க்காதலபொங்கப்புளகங்கண்மெய்யிற்போர்ப்ப
மாண்டசீர்வழிபாடாற்றுமன்னவகுமரன்றன்னைக்
காண்டகுவிஞ்சையெல்லாங்கரிசறவுணர்ந்துமேன்மை
யீண்டியகுரவன்றீர்க்கதவனென்பானேகினேனே. உஉச

ஆங்கவன்வரவுமுற்றுமருட்கணாலறிந்துபின்னர்
வீங்கியகருணைப்பார்வைவிழுததகப்பெரிதுநல்கி
யோங்கியமகிழ்ச்சிகூரவுடலெலாந்தைவந்திட்டுத்
தாங்குநின்கவற்சியெல்லாந்தணமதியென்றுகூறி. உஉரு

பூதலத்தவரும்விண்ணிற்புலவரும்வியக்கத்தக்க
மேதகுசித்தியெட்டும்விளங்குகநினக்குச்சிங்க
வாதனத்தினிதுவைகியவனிகாத்தருளுநுந்தை
நீதியினடவுஞ்செய்கோலரசுநிற்சேர்கவென்றான். உஉசு

தவழ்மழையுமிழ்ந்ததெண்ணீர்தடையின்றிப்புவியில்வீழ்ந்தாங்
கவமறகோற்றுவல்லவாரியனருளலோடுங்
கவிழ்மதக்களிநல்யானைக்காவலன்மைந்தன்முன்னே
இவருறுசித்தியெட்டுந்தோன்றிமற்றிதனைக்கூறும். ௨௨௭

கவனவெங்கலினமாவுங்கமழ்மதக்கலுழித்தோலுங்
குவிதலைத்தேருமற்றுங்கோயின்முன்னெங்குஞ்சூழத்
தவளவொள்ளொளிகான்மாலைத்தனிக்குடைநிழற்றச்சிங்க
வவிர்மணித்தவிசின்மன்னியரசுசெய்திருக்கும்போது. ௨௨௮

தருக்கினைறத்தினீதிதவறுறுதுயிர்கட்கெல்லாம்
வெருக்கொளவிடுக்கணொன்றும்விளைத்திடாதிருப்பாயாகி
செருக்குநின்மாட்டுநீங்காதிருத்துமல்லாயினுன்னைப்
பொருக்கெனவிடுத்துநீப்பேமறிகெனப்புகன்றமாதோ. ௨௨௯

நீயிரிங்குரைத்தவாறேநெறியிடைப்பணியேனாகி
மாயிருஞாலமோம்பிவைகுவேனென்றுநேர்ந்து
பாயமெய்ச்சித்தியெல்லாம்பரிவொடுந்தழுவிக்கொண்டு
தூயவாரியன்பொற்பாதந்தொழுதனன்விடைகொண்டேகி. ௨௩௦

காரெனமுழங்குந்தானக்கடுங்களிற்றரசன்மைந்தன்
பாரிபாத்திரத்தினீங்கிப்படர்நெறிவிரைந்துநீந்தி
வேரியுமலருந்தாதும்விரைகமழ்பொதும்பர்சூழ்ந்து
சீரிதினோங்குந்தங்கள்செழும்பதிமருங்குசார்ந்தான். ௨௩௧

மாதவன்றன்னையன்மிமருவருஞ்சித்திபெற்று
மேதகவணையுமைந்தன்விழுத்தகுவரவுகேட்டுக்
காதலுங்களிப்பும்பொங்கக்கதிர்மணிநெடுவேற்றந்தை
யாதரித்தெதிர்கொண்டெய்தியணைத்துடன்கொண்டுபுக்கான்.

கோயிலினணைந்துசிங்கக்குருமணித்தவிசிலேற்றிப்
பாய்பரியரசர்போற்றப்பாவைநீருலகங்காக்கு
மேயசீரரசுநல்கிவெற்புறழ்தடந்தோள்வைத்து
மாயிரும்புவியின்பாரமகன்புயத்தேற்றினானே. ௨௩௩

கரிசறுகுரவன்றந்தகாமருவரத்தின்பேற்றாற்
பரசுறுசித்தியோடும்படர்புகழ்த்தந்தைநல்கு
மரசுகைக்கொண்டுமன்னருங்கறையளப்பவீறித்
துரிசறுமனுநூலாற்றிற்றொடுகடலுலகுகாத்தான். ௨௩௪

எண்ணருஞ்சித்தியெட்டுமினிதுறவெய்தும்பேற்றா
னண்ணுறும்பகையொன்றின்றிநிலத்தகுமேன்மைவாய்ந்து
கண்ணுதலடியிற்றாழுங்கருத்தினர்தம்பாற்சேரும்
புண்ணியமென்னநாளும்பொருவறுசெல்வங்கூர்ந்தான். ௨௩௫

தணிப்பருஞ்செல்வநோக்கித்தருக்கினன்செருக்குமிக்கான்
கணிப்பருஞ்சித்தியெட்டுங்கழறியவுறுதிவிட்டான்
மணிப்பெருவேலைசூழ்ந்தவையகத்தியாவரம்மா
வணிப்பெருஞ்செல்வமெய்தினதற்படுமிம்மரெய்தார், ௨௩௬

மேவருமறனிற்றப்பிவிழுப்பெருங்கவற்சிசான்ற
பாவமும்பழியுமாற்றிப்பலவுயிர்க்கலக்கணேய்த்துத்
தேவரைமுனிவர்தம்மைச்சிந்தையிற்கலக்கங்காட்டி
யோவியநீதிச்சாகாடுருகெழவுகைத்தலோடும். உகஎ

விளங்குமெண்சித்திநோக்கிவிதியிலாயுயிர்களெல்லாந்
துளங்குறக்கொடுங்கோலோச்சித்துயரிடைப்படுத்தாயெங்கள்
வளங்கெழுமொழியையிந்நாண்மறந்தனைசேறும்யாமென்
றுளங்கொளவெறுத்துக்கூறியொய்யெனவிடுத்துப்போந்த. உகஅ

ஆலையிற்படுத்தவேழத்தருஞ்சுவைச்சாறுபோலக்
கோலவண்சித்திமுற்றுநீங்கலுங்குறுகும்வேனில்
வேலையின்முன்னர்பபோதுமெலவிலையுமுத்துவீழ்த்த
சோலையின்வெறியனாகித்துயர்ப்பெருங்கடலிற்றாழ்ந்தான். உகசு

என்னினிச்செய்யுமாறென்றிரங்கிமாழாந்துதேர்ந்து
முன்னமக்கருளிச்செய்தமுனிவனையின்னும்வேண்டின்
மன்னுமெண்சித்திமீட்டும்வருமெனத்துணிந்துவலலே
தன்னகர்வரைப்பினின்றுஞ்சார்ந்தனன்குரவன்றன்பால். உ௨0

தொழுதெழுந்தாடிப்பாடிச்சொல்லுவாநெறியினின்றும்
வழுவினேன்மொழிந்தமாற்றமறந்தனேனுதலானே
செழுவியசித்தியெட்டுந்தீர்ந்தனசிறியேனசெய்த
பிழைபொறுத்தருளவேண்டும்பெரியவவென்றுநின்றான். உ௨க

அருளுறுகுரவன்கேளாவஞ்செவிபுதைத்துதீவி
லுருகியசெம்புபெய்தாங்குரைசெவியேற்றுகின்றாய்
திருவிலிமுகடியென்னைசெய்தனையறிவிலாயென்
றிருசெவிமுழுதுங்கைப்பவாயுறையியம்பிச்சொல்வான். உ௨உ

மருவலர்க்கிடியேறன்னாய்வையகமிறும்பூதெய்த
வொருவியசித்திமீட்டுமுற்றிடவிழைநதாயாகி
லருவெனவுருவுமன்னவருவுருவெனைநின்ற
கருணையெம்பெருமான்வைகுங்காஞ்சியாநகரமெய்தி. உ௨௩

மறைநெறியொழுக்கமோம்பிவதிந்திருந்தீர்த்தமாடிக்
கறைகெழுபிறவிவேலைகடத்திடுங்காமக்கண்ணி
யிறைவிபொற்பாதமபோற்றியிறைஞ்சுதிசித்தியெல்லா
நிறைதரப்பெறுவாயென்றுநிகழ்த்தனைவிடைதந்தானே. உ௨௪

புறவின்யகொண்டுதாழ்ந்துபொருக்கெனநெறிக்கொண்டேகி
நிறைமலிமணியிற்செயதநீள்கொடிமாடந்தோறு
நறைவிரிசூந்தனல்லார்நாடகம்பயிற்றலோவா
வறமலிகாஞ்சிமூதூரகநகர்கண்ணுற்றானே. உ௨௫

கம்பைநீர்தோய்ந்தேகம்பர்கழலிணைப்போதுபோற்றி
யும்பருமாடலோவாவோங்குலகாணிதீர்த்தப்
பைம்புனல்படிந்துகாமக்கண்ணிதன்பாதந்தாழ்ந்து
செம்பொருட்டுதிகளோரச்செய்தனன்செல்லுங்காலை உ௨௬

முப்புரம்பொடித்தமுக்கண்முதல்வரையிறுகப்புல்லிச்
செப்பனமுலையான்மார்பிற்றிருவடையாளம்வைத்த
துப்புறழ்தொண்டைச்செவ்வாய்ச்சுடர்வடிநெடுவேலுண்கண்
மைப்படுகுழலாள்சாலத்திருவுளமகிழ்ச்சிகூர்ந்து. உசஎ

இளமரக்காவுவாங்கியேர்குடியிருக்குங்காஞ்சி
வளநகர்த்தெய்வந்தன்னைவழங்கெனவழங்கலோடும்
பளகறுத்தருளுங்காஞ்சிப்பதிப்பெருந்தெய்வமுன்னின்
றளிமுரலலங்கலாற்குச்சித்திகளருளிற்றன்றே. உசஅ

தலைவருசித்தியெட்டும்பண்டுபோற்சார்தலோடு
மிலைமுதலுகுத்துச்சாலவிலம்படுபொதும்பர்மீட்டு
மலரொடுதளிருந்தாதுந்துவன்றுபுவளமிக்காங்குத்
தொலைவருமாக்கம்வாய்ந்துதோன்றினனரசர்கோமான். உசகூ

காதரமிரிக்குங்காமக்கண்ணிதனருளாலவேந்தன்
றீதறுசித்தியெட்டுந்திருத்தசப்பெற்றவாற்றான்
மேதகுசருவசித்திகரமெனவிளங்குநாம
மாதர்வண்மதில்சூழ்காஞ்சிமாநகர்பூண்டதன்றே. உருo

பூவலர்தனிமாமூலப்புதுநிழற்புராணரோடு
நாவியங்கூந்தற்காமக்கண்ணியைநாளும்போற்றி
யாவயினின்னும்பல்லோரணவருஞ்சித்தியெல்லா
மேவரப்பெறுதலானும்விளங்கியதனையநாமம். உருக

கலிவிருத்தம்.

முள்ளரைச்செழுமுண்டகனேர்சிரங்
கிள்ளுங்கூருகிர்க்கேழ்கிளர்செங்கையெம்
வள்ளலாரொருகற்பத்துவானளாம்
வெள்ளியங்கிரிமீமிசைவைகுழி. உருஉ

வாளைவென்றுமதர்த்துக்குடங்கைபுரி
னீளும்வேள்விழிநித்திலவெண்ணகைத்
தாளமென்முலைப்பார்ப்பதித்தையலைக்
காளியென்றுகரைந்துவிளித்தனர். உருங

கருணைநாயகிகாளியென்றோதிய
வுரைசெவித்துளையேறலுமொய்யெனப்
பொருமியுள்ளம்புழுங்கித்தவம்புரிந்
தருளினலவ்வுருத்தனைநீக்கினள். உருச

கோங்கைவென்றகுவிமுலையாள்வயி
னீங்கிவேறுறுநீலுருவாயிடை
யோங்கியாயிரங்கால்கரமொண்முகந்
தாங்கியச்சுறத்தையலென்றுயதே. உருரு

அன்னகன்னிபடுக்கற்குலவரை
மன்னனீன்றருண்மாதுநல்லாளிரு
பொன்னஞ்சீறடிபோற்றியெழுந்துநின்
றென்னைசெய்பணியென்றனக்கென்றலும். உருசு

விமலநாயகிநோக்கிவியந்துகீ
சமரினேற்றுத்தறுகணவுணர்தங்
குமரியாவிகுடித்துச்சகமிசை
யமலுமின்னன்முழுதுமகற்றியே. உ௫எ

தொழுதகுந்திருத்துர்க்கையென்றோர்பெயர்
தழுவிவையகந்தாணமலரேத்திட
வழுவில்காஞ்சிவளம்பதிகாவல்கொண்
டழிவிலந்நகர்வைகென்றருளினாள். உ௫அ

அருளும்வண்ணமவுணரையாவியுண்
டிருளுமென்மலர்ச்சோலைகளீண்டிய
தெருளுலாந்திருக்காஞ்சியைக்காவல்பூண்
டொருமையன்பிலுறைந்தனள்கன்னியே. உ௫௯

அன்னைகாளிமவாக்கையிற்றோன்றிய
கன்னிகாத்தருள்காரணத்தாற்றிருக்
கன்னிகாப்பெனுநாமங்கைக்கொண்டதா
லின்னமாமிமகன்றுறைக்காஞ்சியே. உ௬0

பன்னுமாநகர்பன்னிருபேர்பெறுந்
தன்மைகூறினஞ்சாற்றுமப்பேர்செவி
துன்னலால்வினைசுட்டொருவேதிய
னன்னர்வான்பதநண்ணியதோதுவாம். உ௬க

வேறு.

தரையகம்புகழ்செழுங்கல்விசான்றவன்
கரைமறைமுழுவதுங்கண்டநாவினன்
புரைதபுகௌசிகமரபிற்பூத்தவ
னுரைதருமேதையோரந்தணனே. உ௬உ

செழுக்குலமரபின்வந்துயிர்த்தசீர்த்தியும்
வழுக்கறுகலையெலாம்வல்லவாண்மையு
மொழுக்குறுமேன்மையுமுன்னியுன்னிமிக்
கழுக்குறுமனத்தனுய்த்தருக்கினனரோ. உ௬௩

பெரியவர்தம்மையும்பேணுகின்றில
னுரியவர்தம்மையுமோம்புகின்றலன்
விரிகலைபயின்றவர்க்காணின்வேழமே
லரியெனமீச்செலுமறனில்சிந்தையான். உ௬௪

அல்லதையாமெனவறைந்துகாட்டியு
மில்லதென்றுள்ளதையெடுத்துத்தள்ளியும்
வல்லவர்தம்மையுமருட்டிவாதினால்
வெல்லுநரில்லெனமேம்பட்டோங்கினான். உ௬௫

இன்னணம்வென்றிகொண்டியங்குநாளையிற்
பன்னுபல்கலைகளும்பயின்றநாவினர்
துன்னியகேள்வியர்தூயவந்தணர்
மன்னவைக்களத்திடைவந்துமுற்றினார். உ௬௬

வரும்பெரியவர்தமைவாதின்வென்றழித்
தரும்பியமடமையிற்றருக்கியங்கணோர்
துரும்பெனவிகழ்ந்துநெஞ்சுளேயச்சொல்லியே
யிரும்புகழ்படத்தனையுயர்த்தியம்பலும். உசுஎ

இருபுருவங்களுநெற்றியேறமுன்
மருமலர்க்கண்ணிணைவயங்கிச்சேப்பமிக்
குருவவாரதரமுந்துடிப்பவூங்குவர்
வெருவராதவன்றனைவெகுண்டுசொல்லுவார். உசுஅ

நூலுணர்பெரியவர்நொடிகலார்நனி
மாலுறுபித்தரிவ்வாறுசெப்புவா
ரோலுமாறுரைக்கலாவிழுதைநீதுயர்
சாலும்வல்லரக்கனாய்த்தளர்கவென்றனர். உசுகூ

வடுவறுநாவினர்கொதித்துவல்லையி
லிடுமொழிச்சாபந்தன்செவியினேறலும்
வெடிபடுமுருமொலிகேட்டுவேதனை
படுமரவெனவுளம்பதறிநைந்துபின் உஎ0

நீர்திறம்வேண்டுதுமென்றுசென்றவர்
வார்தருகழலிடைவணங்கிநாயினேன்
கார்தருமனத்தினாற்கழறினேனிவ
ணீர்தருசாபநீத்தருளுகென்றனன். உஎக

தளர்ந்துநொந்தடியிணைதாழ்ந்துவேண்டலும்
வளர்ந்தெழுங்கருணையாற்காஞ்சிவைப்பினைக்
கிளர்ந்திடும்பன்னிருபெயருங்கேட்கினன்
றளர்ந்தருஞ்சாபமென்றுரைத்துப்போயினர். உஎஉ

ஆவயின்வெருக்கொளுமரக்கனாகிநீர்
வாவியிற்சோலையின்மன்றினெங்கணு
மேவரிதாகிவெள்ளிடைதிரிந்தழிந்
தோவறுகறங்கெனவுழலுமேல்வையின். உஎங

செந்தழறண்ணெனச்செகுக்குஞ்சாபமுன்
வந்தநாட்டூர்வவர்வகுத்துரைப்புழி
யெந்தவாழ்வுந்தருங்காஞ்சியென்மொருரு
மந்திரஞ்செவியுறுமல்லற்பேற்றினால். உஎச

இசையெனுநாடகமகளேயீண்டிய
திசையெலாநடஞ்செயவிடுத்துத்தேசுசால்
வசையறுகாஞ்சியின்மருங்குகானினோர்
பசைநிழலாலிணேப்பற்றிவைகினான். உஎரு

முழங்கிசைச்சுரும்பினமுரலுந்தேமலர்ப்
பழங்கனிந்துகுமரப்பசியகானிடை
வழங்குநர்தமைநெறிமறுத்துநெஞ்சகஞ்
சுழங்குறப்பழங்கணிற்றாழ்த்துச்செல்லுநாள். உஎசு

வேறு.

கருமச்சிறைமுற் றுமறுத்தருள்காட்டிடும்
பெருமைச்செறிகாஞ்சியான்கழல்பேணினான்
அருமைச்செழுமாமறையாய்ந்தறிகேள்வியாளி
றருமச்சுருதிப்பெயர்தாங்குமொர்வேதியன். ௨௭௭

நடக்கும்பொழுதுங்கமழ்சேக்கைநலத்தகக்
கிடக்கும்பொழுதும்பலசாலுங்கிளர்ந்தற
மெடுக்குந்திருக்காஞ்சியினீராறுநாமமு
மடக்கும்பொறிநெஞ்சினழுத்திவிளம்புவான். ௨௭௮

அன்னானொருநாள்வளரவ்வனமெய்தினா
னென்னாரெனவாதவன்வெப்பமுடற்றலு
மின்னாமையுழக்குமரக்சனிருக்குமம்
மன்னாலமரத்தடிநீழலின்வைகினான். ௨௭௯

தண்ணங்குளிர்நீழலின்வெம்மைதணந்துயர்
கண்ணன்கடிமாமலர்நான்முகன்காண்கிலா
வண்ணன்கழல்சிந்தையில்வைத்துவளம்பதி
யெண்ணுந்திருநாமமிராறுமியம்பினான். ௨௮௦

கண்டிங்கனியுங்கமழ்தேனும்விராயென
மண்டுஞ்சுவைநாமமிராறுமரத்தின்மேல்
கொண்டங்கமுலர்ந்துகுழைந்தவரக்கன்றன்
மிண்டுந்துயர்விள்ளவகஞ்செவிமேயவே. ௨௮௧

பெயர்சென்றுசெவித்துளையிற்பெரிதேறலு
மயர்முற்றுமகன்றுமுதுக்குறைவாய்ந்தனன்
றுயருற்றவரக்கவுருத்தொகுசாபவெவ்
வயர்வைத்தணிவித்துவகைக்கடலாடினான். ௨௮௨

கணித்தோதியகாஞ்சியினாமகன்மந்திர
பிணித்தாவயின்முன்னுறவிட்டருள்பெற்றிபோன்
மணித்தாழ்விழுதூன்றியவால்வயினின்றிழிந்
தணித்தாகநடந்தருளான்றனையண்மினான். ௨௮௩

தொழுதார்வினைதூளிபடுத்தருடேசீர்
முழுநான்மறைமுற்றியநாவினனீர்ங்கழ
லழுதார்வமொடாரவணங்கியெழுந்தனன்
பழுதோவியமெய்ப்புகழ்கொண்டுபேழிச்சினான். ௨௮௪

குழியும்விழியும்பிறழ்கூரெயிறுங்குலைந்
திழிபுன்மயிருங்கரியோர்முகமுந்தசை
யழியும்வடிவும்மெதிர்கண்டவரஞ்சமுன்
வழிபாடுசெய்வானைமருட்கையினோக்கியே. ௨௮௫

வெருவுந்திறலாக்கையைமேதகுவந்தனை
புரியுந்தனியன்பினையார்புகலாயெனத்
திரியுந்திரியிஞ்சிகடந்தருள்சேவக
ரருளன்றியிலாமறையாளன்வினாயினான். ௨௮௬

நந்தாதபெரும்புகழானவிலென்றலுஞ்
சிந்தாகுலமூற்றுமிறித்தடிசேர்ந்தவ
னைந்தேனடியேனெனைவோசையுளத்தெழ
வெந்தாயிதுகேளெனவங்கணிசைக்குமே. உ௮௭

பீடார்தருவேதசன்மாவெனும்பேரினேன்
கோடாதவுளத்தவர்தங்குழுவிற்புகா
வாடாதெதிர்வாதினிகழ்ந்திறமாத்தலின்
வீடாதவரக்கவுருத்தனையேயினேன். உ௮௮

அவ்வாறுவருந்துயரத்தனையுங்கணத்
திவ்வாறுபுகுந்தெழிலார்திருக்காஞ்சியின்
செவ்வாய்மையிரும்பெயர்செப்பியொழித்தனை
யுவ்வாறடியேன்செயலென்றுரையாடினான். உ௮௯

கருமேனியனின்னகரைந்தமைகேட்டலும்
பெருகோகைநெடுங்கடலிற்பெரிதாடினான்
முருகார்பொழில்விண்டுபுரப்பெயர்மொய்யரு
டருமாறுநினைந்துதழைத்தனனுள்ளமே. உ௯0

இருவோர்களுமிங்ஙனமின்புறுமேல்வைபிற்
றருவீந்தபொலந்தொடைமோலியர்தாம்பலர்
திருவான்றவிமானமொடுஞ்செறிவுற்றனர்
மருவார்ந்தவனத்திடைவந்தனர்முற்றினர். உ௯௧

விழுநீர்மையன்வேதசன்மாவெனும்வேதிய
னொழிபாதவிடம்பையரக்கவுருத்தனைக்
கழியாமிகுகாமர்பிணைந்துசதிர்த்திடுஞ்
செழுமேனியின்வானவனாய்த்திகழ்வுற்றனன். உ௯௨

பெடையோடுமணிக்குயில்பின்னியிணங்குறு
மடல்வாயவிழ்பூம்பொழில்வாங்கியகாஞ்சியி
னெடுநாமமிராறுநிகழ்த்தியவேதிய
னடிநீண்முடிசூடினனங்கருள்பெற்றனன். உ௯௩

அரமங்கையர்சாமரைபாங்கரசைத்திடச்
சுரர்தூத்தநலங்கெழுசெய்கைதொடங்கிட
விரியுங்கிரணத்தவிமானமிவர்ந்தெழீஇப்
பரவும்புலவோர்பதிசென்றுபுகுந்தரோ. உ௯௪

வள்ளத்தைநிகர்த்தமுணிக்குருமாமுலைக்
கள்ளக்கருங்கட்கடவுண்மடவாரொளி
துள்ளூற்றவிதழ்ப்பவளச்சுவைவார்மது
வள்ளிப்பருகிப்பெருவாழ்வினமர்ந்தனன். உ௯௫

மல்கும்பவநூறிமெய்வாழ்வுவழங்குமிவ்
வல்கும்பெயர்பீழையறத்திமையார்பதி
நல்குந்திறமற்புதமேகொனயந்தினி
யொல்கும்புயலூர்திகணித்ததுரைக்குவாம். உ௯௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தண்ணந்தரளக்குடைநிழற்றத்தயங்குமணிச்சாமரையிரட்டச்
சுண்ணந்தைந்தமலர்க்கூந்தற்றோகையனையார்கடங்குயிற்ற
வண்ணந்தழைத்தவிசைவீணைவல்லோரமிழ்தமெனப்பாட
விண்ணந்தளிர்ப்புவரியணைமேன்மேவியரசுசெயுந்திறலோன். ௨௯௭

அன்னம்பொருவுமகளிரையமெல்லமிழ்தார்சாயற்பெண்ணரசின்
பொன்னம்பிதிரிற்சுணங்கலர்ந்துபூரித்தெழுந்தமுலைக்களிறும்
வன்னம்பிதிருமணிப்பருமம்வயங்குநிதம்பத்தடந்தேருங்
கொன்னம்பழுத்தவிழிப்படையுஞ்சமரம்புரியக்கோட்பட்டான். ௨௯௮

குவளைக்கருங்கட்டுணைசேப்பக்கொழிக்கும்பசுந்தெள்ளமிழ்தொழுக்கும்
பவளக்கடிகையிதழ்விளர்ப்பப்பணைத்துத்துணைத்துச்சுணங்கலர்ந்த
தவளத்தரளமுலைநெருங்கத்தடவுநிதம்பக்கடல்பொங்கக்
கவளக்களிறும்பிடியுமெனவற்றநோக்கிக்கலந்தனரால். ௨௯௯

நீலநிறைந்தமழைத்தடங்கட்சுரமாமகளிர்நெடுங்கழுத்துக்
கோலநிறைந்துதழைத்தோங்கக்குரைவெண்கடலிற்கொதித்தெழுந்த
வாலநிறைந்ததிருமிடற்றோரடித்தாமரையிற்கருத்திருத்துஞ்
சீலநிறைந்தகௌதமனாரனையகளவைத்தெரிந்தருளி. ௩00

இரும்புகுழைக்குங்கற்பின்வலியெளிதிற்குழைத்தாய்நெடியபசுங்
கரும்புகுழைக்குமதன்கணைக்குக்கலங்கும்புலையாயோனிதனை
விரும்பிமுறையிற்பிறழ்ந்தனையான்மிளிருநினதுமெய்முழுது
மரும்பும்பலயோனிகடழுவியலக்கணுறுவாயெனச்சபித்தார். ௩0௧

செல்லறபமுக்குறும்பெறிந்துதெருளானந்தக்கடற்குளிக்கு
மல்லற்றவத்துக்கௌதமனார்வகுத்தசாபந்தொடக்குதலு
மல்லற்கடற்கோர்விருந்தாகியைஞ்ஞூற்றிரட்டியோனியுடற்
புல்லிப்பருவந்துயிர்சாம்பிப்பொலிவுமாழ்கியறிவழிந்தான். ௩0௨

தூண்டாவிளக்கினெழில்கொழிக்குஞ்சுரமாமகளிர்கடாவிற்றப்
பூண்டாங்கிளமென்முலைச்சசிதன்புடைவீற்றிருப்பப்புத்தேளி
ரீண்டாவேவற்பணிகேட்பவெறும்மான்றவிசினரசிருப்பு
வேண்டானுணுத்தலைக்கொண்டான்மெலிந்தான்மேருவரையடைந்தான்.

ஆண்டுவளமொய்த்தெழில்பரப்பியலங்கியொருநூற்றோசனைக்
ணீண்டுகுளிர்ந்துவெண்டரங்கநிரையிற்றவழுந்தடம்பொய்கை
பூண்டவிசைமென்சுரும்பினங்கள்பொழிதேன்மடுத்துத்தாதருந்து
மாண்டகனகச்செழுக்கமலமணிமொட்டகத்திற்கரந்திருந்தான். ௩0௪

புங்கமறையோன்மனைமுலையைப்புணர்ந்தவிழைவுதணியாதக்
கொங்கைநிகர்வதிதுவென்றுகுறித்துக்கலந்துவாழ்வான்போற்
பொங்குநறுந்தாமரைமுகிழ்க்கட்பொள்ளென்றொளித்தங்கவணிருப்பத்
திங்கணெடுவானவர்காணார்துண்ணென்றயிர்ப்புற்றுள்ளந்திகைத்தார். ௩0௫

வரியுங்கழற்காலரசின்றிப்புல்லெலென்றழுங்கும்வானாடர்
சுரிசங்கலறிவயிறுளைந்துதோற்றும்புதுநித்திலமுறுவற்
புரிமென்கூந்தற்சசியோடும்பொருக்கென்றேகிவினையனைத்து
மிரியுந்தவத்தான்மேம்பட்டவெறும்சால்குரவன்றனைக்கண்டார். ௩0௬

கடிக்கற்பகமென்மலர்மாரிகமழச்சொரிந்தனரிமையோர்தம்
முடிக்கட்புனைந்துபணிந்தெழுந்துமுறையிற்பழிச்சியிடும்பையெவர்
மிடிக்குங்கருணையருட்குருவேயிறைவாவெழுந்தோள்வலனுயிரைக்
குடிக்கும்படையான்றனைக்காணேம்யாங்களுனையென்றார். ௬௦௭

தேவகுரவனதுகேளாச்செங்கேழ்ச்சலடிப்புறைமோலி
மூவர்முதல்வரடிபோற்றியறிவினடிமூதவிசும்பு
காவலரசன்முனிமனையைக்காமுற்றிழுக்கியஞருழக்கும்
பாவகாரியாய்க்கரந்துபயிலுந்திறந்தேர்ந்துரைசெய்வான். ௬௦௮

ஒலிவிலுருக்குந்தாளமணியொரலியல்வயங்குந்தடம்புயத்திர்
வலியினுயர்ந்தவிறைமுனிவன்மனையைவிழைந்துகொடுஞ்சாப
நலியப்பல்யோனியனுகிநகைகான்மேருவரைத்தடத்து
மெலிபாகமலமுகிழ்கரந்தான்மேவிக்கொணர்துமெனவெழுந்து. ௬௦௯

விரிக்குங்கிரணமணிமோலிவிண்ணோர்தனதுபுடைவரப்போ
யடுத்துவிடுப்பகளினமுகையகத்துக்கரந்தபுருகூதன்
றொடுத்தசமழ்ப்புள்ளகமலைப்பத்துனைவின்வெளிக்கொண்டன்பினொடு
மடுத்தகருணைக்குரவனிருமலர்த்தாள்பணிந்துவேண்டினன். ௬௧௦

வந்துபணிந்தநாகநகர்மகவான்றனைக்கொண்டருட்குரவன்
கந்தமலிந்தமலர்த்திரளுங்கதிருமணியும்பொலங்குவையு
முந்திநெடுங்கோட்டகத்தொதுக்கியொலிந்தசினைக்கோழரையகிலுஞ்
சந்தும்பெயர்க்கும்பிரயாகைத்தடநீர்த்திருத்தமருங்கணைந்தான். ௬௧௧

அரக்குவிரிந்தநெடுஞ்சலடித்தடிகளடிகளுறநினைந்திப்
பரக்கும்புனலால்விதியாற்றுற்படியென்றுரைத்தானுரைத்தாற்குச்
சுரக்குமதுநுண்டுளிதுவற்றுஞ்சுடர்ப்பூந்தருக்கற்பகநாடு
புரக்குந்தடவுப்புயத்தானுமவ்வாறங்கட்புனல்படிந்தான். ௬௧௨

சுலவுந்தரங்கமெடுத்தெறியுஞ்சுடர்வெண்பணிலம்வயல்கடொறுங்
கலவும்பெருநீர்த்தடநதியிற்களிப்புற்றாடிக்கரையெழலு
நிலவுங்கொடியபெரும்பாவந்தணந்தான்வடிவினிகழ்குறிகள்
பலவுந்தணவாத்திறநோக்கிப்பொன்னேனிதனைப்பணித்தருள்வான்.

கண்டார்நகைக்கவிளதடம்பிற்களுலும்யோனிதணப்பதற்கு
மண்டார்கலிசூழ்நிலவரைப்பின்மருந்துவேறென்றிலைபால
முண்டார்வதியுங்காஞ்சிநகருறும்பேர்கணிக்கற்பாலையெனக்
கொண்டாங்கவனுக்கிராறுதிருப்பெயருஞ்செவியிற்கூறினனல். ௬௧௪

அருளிற்புகுத்துந்திருக்காஞ்சிப்பெயராறிரண்டுங்கணித்தோதித்
தெருளுய்த்தருளுமேகம்பநாதர்செழுந்தாளகத்திருவி
மருளிற்றணந்தபெரும்பேற்றான்மாறுயோனியாயிரமு
முறுவத்தடங்கணெனப்பொலியக்கண்டாலுவகைக்கடற்றினைத்தான்:

இணங்குகாஞ்சிநகர்மேன்மையெண்ணுதொறும்போரற்புதனாய்
வணங்கியிமையோராயிரங்கண்மகவானென்றயோற்றிசைப்பச்
சுணங்குபூத்தமணிமுலையார்பழிச்சத்துறக்கமெய்தி
யணங்குமடங்கற்றவிசேறியரசுபுரிந்துவாழ்ந்தனனல். ௬௧௬

ஊற்றுமதநீரசும்புமுகத்தொளிர்கோட்டபிசைவுதப்பாகன்
சாற்றிவலகிட்டெய்தரும்பேறெய்துக்கிறஞ்சாற்றினுமியயாற்
கூற்றகடுங்கவேற்றெதிர்ந்தகுறுகாவரசர்மிடன்முழுதும்
காற்றுமயில்வேலொருவேந்தன்கணித்துவரம்பெற்றதுமுரைப்பாம்.

வேறு.

தவளமருப்பினவொழுகுபணைக்கையதறுகண்முகத்தநெடுங்
கவளமதக்களிறுற்றுமுழக்கொலிகருமுகிலஞ்சவெழுஞ்
சுவணபுரத்திடைமிகுபுகழ்துற்றதனஞ்சயனென்றொருவ
னுவணமுயர்த்தவனிகர்மிடல்பெற்றுளனெளிறுமணிக்கழலான். கஉஅ

இகன்மறமன்னர்கண்முழுதுமுடைந்தனரிளகுவனம்புகுதத்
திகழெரிசிந்துபல்படைகள்சொரிந்தவர்தேயமொருங்குதழீஇ
யகனிலமின்புறமகவினையாதியறங்கள்வளர்த்தறனூற்
றொருகுமுறைமுற்றுறவுலகுபுரந்தருடொழிறலேன்றிடுநாள். கஉகூ

தீதுறுபண்டையுஞற்றியவூழ்வினைசென்றுதொடக்குதலிற்
கோதிலமைச்சருரைக்குநலங்கள்கொளாதுபகற்பொழுது
சூதுவினைக்கண்முயன்றுகழித்திருடன்னுமிராப்பொழுதுங்
காதன்மடந்தையர்காமருதோணலமுண்டுகழித்தனனே. கஉ0

மல்லலொருங்குதபும்படையாகியசூதினும்வாலொளிகான்
முல்லையரும்புநிகர்க்குநகைக்கருமொய்குழன்மாதரினு
மொல்லுமனத்தினனாதலின்வேலையுடுத்தநெடும்புவியிற்
செல்லுறுகாவலுறங்குநர்கைப்பொருள்செத்தொழிவுற்றதரோ. கஉக

அரசுரிமைத்தொழிலிகவுபெறத்தனியடல்வலிசூதினிலும்
விரைசெறிகுங்குமமுலையினரினபினும்வீழ்வகைகண்டுபகைப்
புரசைமதக்கரியரசர்கள்வென்றிகொள்பொழுதிஃதாமெனவே
யுரைசெயுமுன்னெதிர்படைகொடுமுற்றினரொலிகடல்சூழ்ந்ததென.

கவனவயப்பரியுந்தினர்தேர்கள்கடாவினர்வார்மழையிற்
றவழ்மதவும்பலுகைத்தனர்வீரர்கடங்களையேயினர்கூற்
றிவர்நுதிவாளிதொடுத்தனராழியெறிந்தனர்வெங்கனலி
யவிர்முனைநாந்தகமோச்சினரார்த்தனராடமர்செய்தனரே. கஉங

மாற்றலர்வந்துவளைந்தமர்செய்யமறங்கனியச்சினவிக்
கூற்றெனவார்த்துமலிந்ததனுதுகொடும்படைதன்னொடுநே
ரேற்றுநெடும்பிணமெங்குநெருங்கவெறிந்தமராடல்புரிந்
தாற்றலனுகியுடைந்துவிடுத்தனனவ்வயினீங்கினனே. கஉச

வேறு.

கோற்றொடிமனைவிதன்னையரதனகூடமென்னு
மாற்றல்சாலரணக்காப்பின்வைத்துநல்லமைச்சன்றன்னைப்
போற்றுகென்றிருவிப்புந்திவிழைந்தவைபெறுவான்பொற்பின்
மாற்றருமதுகைவேந்தன்வடதிசைநோக்கிச்செல்வான். கஉரு

புரிமுறுக்குடைந்துசெந்தேன்பொழிசெழுங்கமலமேறி
வரிவளையலறியின்றமணிக்குவைகிலவுகால
வரிவையர்செவ்வாயென்னவாம்பன்மொட்டவிழுமோடை
செறிதருபழனஞ்சூழ்ந்தவெகோர்ப்பலகோட்டுப்புற்றுன். கஉசு

தவவளரேனல்காவற்றடங்கருங்குவளைக்கண்ணார்
கவணையினெச்சுகின்றகதிர்மணிக்குலங்கள்வானின்
றவிரொளிமீன்களுக்காங்கலங்கிவீழ்சாரற்குன்றத்
தவலையகுராம்பைச்சீறூரொண்பதிபலகொட்புற்றான். ௧௨௭

ஏந்திளமுலைநலாரினிளவனநடைகள்கற்கும்
பூந்துணர்நாகச்சோலைப்புறமெலாமதலையீட்டந்
தாந்திரைவிலங்கியுய்த்துத்தரும்பெருவளங்களோங்குந்
நீந்துறைநெய்தல்வேலிச்செழும்பதிபலகொட்புற்றான். ௧௨௮

ஆய்களிற்றினங்கணீர்வேட்டலமரலெய்திப்பாய்கர்த்
தோய்கயநேடித்தத்தந்துணையொடுமறுகியோடுங்
காய்கடமியங்குவோரைக்கலங்கணுருறுத்துவௌவி
மாய்தரும்பசிதீர்மாக்கள்வாழ்பதிபலகொட்புற்றான். ௧௨௯

அவரையுந்துவரங்காடுமெரில்படுவரகுமற்று
மிவர்வளம்பெருக்கமான்களிணங்குதமினத்தோடாடிக்
கவிழ்சினைக்குருந்தினீழற்கண்படைகொள்ளும்பாடி
தவமலிநெடியகானத்தனிநகர்பலகொட்புற்றான். ௧௩௦

நெடிபடுகானிலங்கோர்நெடுவதிபடருமேல்வைக்
கொடிபடுநகரமாதிக்கொருவளங்கவர்ந்துதன்பான்
முடிவருங்கவற்சிவைத்தபகைஞர்போன்மொய்த்தவெம்மை
மடிவரும்பகலோனுச்சிவந்தனனுலகல்லாப்ப. ௧௩௧

கலிநிலைத்துறை.

பில்குபேரொளிக்கதிர்க்கையாற்பிறங்குசெங்கதிரோன்
புல்குசீர்மணக்கலவியாற்பொள்வழிந்தனபோன்
மல்குவாரிதழ்வாடினவயின்வயிற்கதிர்க்கும்
பல்குவாண்மணிநித்திலப்பழனமென்கமலம். ௧௩௨

இரவினீங்குதன்செயலையோரேழைதோட்புணரக்
கரவினீங்கியதெனக்கனன்றுறங்கியகமலம்
மருமலர்ப்பதந்தைவந்துமணப்பவன்மானப்
பரிதிவானவன்கதிர்க்கையாற்பனிப்புனல்சுவற்றும். ௧௩௩

நெறியியங்குநர்தமக்குநீர்வேட்கையைத்தணப்பச்
செறிபுனற்றடந்தெளிந்தனபோற்செழுந்தடத்துப்
பிறிவரும்பசும்பாசியும்பிரிந்துநீரகத்து
ளறிவுகூர்பொழுதாணவமெனவடங்கியதே. ௧௩௪

மேற்பிறங்கியபாதிநீர்வெம்மையுந்தன்கீழ்ப்
பாற்பரந்திடுபாதிநீர்பனியுமாந்தடங்க
ளுற்பழங்கவிக்கவுணியர்நலக்கவோர்புறத்தி
னேற்பநீறணிபாண்டியனுடலமேய்த்தனவே. ௧௩௫

அள்ளலாங்கதிர்ச்சூட்டினையஞ்சிமீனுதி
யுள்ளுலாய்க்கரந்துறையநன்றோம்புநீர்நிலைகள்
கொள்ளையாட்டயர்கொடியகோலரசனைக்காணிற்
றெள்ளியோர்வளமொளித்துவாழ்செயறெளித்தனவே. ௧௩௬

மடமையோப்புஇலார்சிலரிழிஞர்வாலறிவங்
குடையர்போற்றமைத்தோற்றிமாணுக்கரையுலேத்தாங்
கடருநீர்நசைமான்கனேயறலெனமருட்டி
யிடரினேய்த்தனவிடந்தொறும்பரந்துவெண்டேர்கள். ௩௩௭

குளிர்தபுஞ்சுடருச்சியிற்குறுகுமப்பதத்திற்
றெளியும்வெண்பளிக்கறைக்குலந்தன்னிடைச்சேர்ந்த
வொளிரும்வன்னம்பற்றுதசிருருத்திடும்வெயிலாற்
றளர்வுகொண்டுதனூக்கமுற்றொழிந்ததுதகையும். ௩௩௮

சுடர்ந்துதன்வயிற்றேன்றழல்சுற்றெலாங்கதுவக்
கிடந்தவாதவன்மணிச்சிலேகிளர்வெயிற்பிழம்புக்
குடைந்துமற்றிதினுயங்கலிற்சாதனன்றென்னப்
படர்ந்தசெந்தழற்குளித்திடும்பரிசுதேற்றினவே. ௩௩௯

முருகுநாறுபொன்னிதழியார்முண்டகப்பதத்தி
னுருவுமாருயிர்பருவத்தின்மீளவுற்றிடல்போற்
பரிதிவானவனுச்சமாம்பதத்துமென்மலர்ப்பூந்
தருவினீங்கியநிழலெலாந்தருவடியடைந்த. ௩௪௦

வயங்குவெங்கதிருச்சமாம்பொழுதுநீள்வழியி
னியங்குமாந்தர்போன்மரத்தடியெய்தியங்கிருந்து
தயங்குசெங்கதிர்சாய்தலுந்தணத்தலானிழலு
முயங்குவெப்பினுக்குடைந்துளந்தளர்ந்தவொத்ததுவே. ௩௪௧

கொழிக்கும்வெம்மைகூருச்சியிலடியிடைக்குறுகிச்
செழிக்குமேனேயபொழுதுசேணகற்சிசெய்நீழ
லழிக்குநோய்படும்பொழுதடுத்தண்மியத்துயர்நோ
யொழிக்குமேல்வையினீங்குதம்மொக்கலேபோன்ற. ௩௪௨

அழற்கொழுந்துகாலவிரொளிப்பரிதியங்கடவுள்
கிழக்குவந்தெழக்குடாதுபோய்க்கிடந்துமேற்றிசையின்
வழிக்கொண்டேகுழிற்குணதுசெல்வாநிழற்கணங்க
ளுழக்கும்வெப்புடைச்சுடரொடும்பகைத்தவொத்தனவால். ௩௪௩

நிலவுபற்பலபொருளுடனீழலும்விகாரங்
குலவலாலுயிர்போன்றனகுளிர்புனனீழ
லலேவிலாமையெஞ்ஞான்றுமோரமைதியற்றிடலா
விலேயசூற்படையிறைவரேநிகர்த்ததுமாதோ. ௩௪௪

உரியதன்மனேக்கிழத்தியாமொள்ளிதழ்க்கமல
மிரியவென்றிகொண்முகமலரேய்ந்துளாரென்ன
விரிகதிர்ச்சுடருற்றலும்வெதும்பியச்சூட்டைப்
பரியுநீள்குடைமீமிசைப்பற்றினர்பதிகர். ௩௪௫

பொங்குபேரொளிக்கதிரவன்பொறிவெயிற்றழன்மற்
றங்கண்மாநிலத்துயிரெலாமைதுறத்துயிற்றி
யங்கிகாரியந்துயிலெனவறையுமாகமதாற்
றங்கவான்பொருள்புலப்படத்தோற்றியதன்றே. ௩௪௬

தன்னையுள்பொதிந்தோம்புகெட்டெல்வெயிற்றழுமை
யின்னலெய்துவதொழிப்பமேற்போர்த்தமையிழைய
மன்னுமாக்கையின்மணிப்புனன்மாக்தர்யாவருக்குத்
துன்னுவேர்வையாயெங்கணுந்தோன்றிவார்த்ததுவே. ௬௱௪௭

இரவிகான்றவெந்தழற்பிழம்பிணர்த்தகற்பகத்தின்
குரவநாறியவுலகினுங்குலாவுமேலங்கண்
விரவிவாழ்தருவில்லுகுமணிப்பகமோவிச்
சுரர்கள்யாவரும்வெயுரிலாரெனச்சொலப்படாரே. ௬௱௪௮

வெயில்பரப்பியவெப்பொடுவிரவிமென்காற்றுக்
குயினுழைந்தெழுமாடமுங்குளிர்ந்தகாவணமும்
பயின்மரப்பனிப்பொதும்பரும்பாய்ந்தழறறியதாற்
சயவெரித்துணையெனப்புதுக்கினும்றகைய. ௬௱௪௯

தரையும்வெம்பினதண்ணறுவடைகிழிந்தொழுகும்
வரையும்வெம்பினமல்கியமணலொடுபுணரித்
திரையும்வெம்பினதீங்குளிர்பயிற்றுபூஞ்சோலை
நிரையும்வெம்பினநெருப்பெனவுடற்றியவெயிலால். ௬௱௫௰

கன்னிபாகனர்கங்கைநீர்சடையிலேற்றதுவும்
பொன்னளாவியமார்பினான் புணரிவீழ்ந்ததுவு
மன்னமூர்பவனீர்ம்புனலலரின்மேயதுவு
மின்னநண்பகலின்னலுக்குடைந்தமைபோலும். ௬௱௫௧

இனையவாறுநண்பகற்பொழுதிறுத்தலுமரசன்
றனையவோர்குளிர்மரத்தடிச்சூழலைத்துன்னி
நினைவினற்பலவெண்ணிநெஞ்சுளைந்தனனிருந்தா
னனையவேல்வையிற்சாய்ந்தனனவிர்கதிர்ச்சுடரோன். ௬௱௫௨

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வேய்தருபணைத்தோண்மாதர்வீங்கிளமுலைகள்கீழாச்
சாய்தொறுமிளைஞர்க்கார்வத்தழற்பிழம்பாறுமாபோற்
காய்தருபரிதிமேலைக்கடல்விழத்தாழுந்தோறும்
பாய்தருகிரணக்கற்றைப்படாவெயிலாறிற்றன்றே. ௬௱௫௩

தேங்கமழ்கமலச்செவ்விச்செழும்பொகுட்டளவளாவி
யோங்கியதொழுதியன்னமுயர்மரச்சேக்கைநோக்கி
நீங்கினபரிதிவட்டநீங்குறுமாற்றுற்றம்மைத்
தாங்கியகமலங்கூம்புந்தன்மைதேர்ந்தொழிந்தான்மான. ௬௱௫௪

முள்ளரைக்கமலங்கைமுகிழ்முலைவருடிமெல்லென்
வள்ளிதழ்த்தேறன்மாந்திமணியுருக்கலந்தவாற்று
வள்ளொளிநறுந்தாதென்னுவன்குங்குமவளறுதோய்ந்த
தெள்ளொளிபோலுமெல்லைத்தினகரன்மேனிசேந்தான். ௬௱௫௫

மேற்றிசைவரைப்பின்மூழ்கிச்செவ்விருட்செறிவுந்தோர்
தோற்றுவெம்பனியுந்தோலைவுணருந்தொலையவெம்போ
ராற்றுவான்வடிவிற்செக்கேழ்கலைம்வியெழுந்தபோது
மாற்றினைபாகன்கஞ்சைபடுங்தேர்தலைவன்னைய. ௬௱௫௬

வங்தெதிரவுணர்தங்கண்மணியிறத்திட்டுவாங்கும்
கொங்தொளிக்குருதிதோய்ந்தகூர்நுதியிட்டிபோலும்
கந்தமிக்கரும்புக்கஞ்சக்கடிமலர்மணக்தகேள்வன்
றிங்தியகிரணக்கற்றைசெக்கிறம்படைத்ததோற்றம். ௧௫௭

வளர்மலைக்கொக்கைதோய்ந்துவாவிவாய்க்குநீர்மாந்திக்
களிவரமணந்தகேண்மைக்கதிரவன்றனைத்தல்காணூட
வளமாலூற்றுத்தென்றிக்கணங்குமெய்ப்பசலைபூத்தாங்
கொளிநிறமழுங்கிப்பொற்கென்றொளிர்வெயிலபாந்ததன்றே.

சுடர்வெயில்புவியினீங்கிச்சூளிகைமாடம்பற்றி
மடலவிழ்சோலைவாவிமலைகளினெறிக்குங்காட்சி
கடனுறுதன்னைகல்குங்கனைகதிர்ச்செல்வன்யாண்டுப்
படர்தருகின்றானென்றுபார்ப்பமேவிவர்ந்ததொக்கும். ௧௫௯

துணிகதிர்க்கற்றைதுற்ற சுடரவன்விசும்பினீங்கி
மணிவெயிலெறிக்கும்வேலைமுகட்டினில்வயங்குந்தோற்ற
மணிமுதன்போர்செய்காலை மண்மலிவெளிமிக்கார்ப்பக்
குணில்பொருமுரசந்தீயிற்காய்த்திடுங்கொள்கைபோலும். ௧௬௰

அன்மருள்பரவைமுந்நீரார்கலிக்கரியபாந்தண்
மென்மெலவிழுங்கப்பட்டுவிரிகதிர்ப்பிழம்புகாலும்
பொன்மலிகொடிஞ்சித்திண்டேர்ப்போக்கரும்பரிதிப்புத்தேள்
பன்மணிக்கரங்கள்கூப்பிப்பைப்பையமறைந்துபுக்கான். ௧௬௧

இவ்வணம்பகலோன்சாய்ந்தவேல்வையிலெழுந்துவேந்தன்
றெவ்வர்கண்மூட்டிவிட்டகவலைத்தீசிந்தைவாட்ட
வெளவியமனத்தவானவாளியும்புலியுமெண்கு
நவ்வியுமல்லான்மாந்தர்நடப்பருநெறிச்செல்வேலை. ௧௬௨

வரைநிகர்தடந்தோட்காதன்மவுணனைத்தணந்துவைகு
நிரைவளைத்தொடிக்கையார்க்குநெருப்புமாய்மணந்தார்க்கெல்லாம்
விரைகமழமுதுமாகிமேவியதுயிர்களெல்லாந்
தரைமிசையிட்டுங்கணுடிச்சார்தருமருள்கூர்மாலை. ௧௬௩

தற்பகையாயதண்ணீர்தனக்கெலாமரசனாகி
நிற்பவனிவனுமென்னுநினைவினும்பொருதுவெல்வான்
விற்படுதழல்களெல்லாமேற்றிசைத்தலைவன்மீது
முற்படவிறுத்தாலென்னமுகிழ்த்ததுசெக்கர்வானம். ௧௬௪

பொத்திமேற்றிசையின்மல்கும்புகழிருளிரிக்கப்போது
முத்தமன்றெனுநுதிக்கிளைங்குவெங்திமிரம்பின்னர்
மொய்த்துவந்தடாவண்ணமுனிதரவழியிற்காவல்
வைத்ததன்றெளியேபோன்றும்வாய்ந்ததுசெக்கர்வானம். ௧௬௫

புட்டில்வார்விரலின்வீக்கிப்போகுயர்கருப்புவில்லு
வட்டமாவளையவாங்கிமாரவேடனைத்தார்தம்மேல்
விட்டிடக்கூர்செய்தாங்குமற்றவன்விசிகமாய
மட்டவிழ்தோட்டிக்கஞ்சமலரொலரங்குவிந்ததன்றே. ௧௬௬

வினைவயிற்றணந்தகேள்வர்விலாழியம்பரித்தேரூர்ந்து
மனைவயிற்புகுதலோடுமகிழ்ச்சிகூர்மடநலார்தந்
தனைநிகரமிழ்தமூறுந்தரளவெண்முருவற்கஞ்சி
நனையுகவுடைந்தாலென்னமலர்ந்தனநறியமுல்லை. ௱௬௭

மோட்டிளமுலையினார்க்குமூரியங்களிறனார்க்குஞ்
சேட்டிருங்கலவிப்பூசல்செய்விப்பான்கருப்புவார்விற்
கோட்டுவேள்படையெழுச்சியார்ப்பெனகுளிர்ப்பூஞ்சோலை
யீட்டுபுன்குடம்பைதோறுமிரட்டினதுழனிபுட்கள். ௱௬௮

தோமறுபரிதிவட்டந்தொடுகடல்குளித்தமாலை
வீமலிதொடையன்மார்பர்ப்பிரிந்தமெல்லியலார்தங்கள்
காமருவதனஞ்சாலக்கூம்பிவான்கவிகளெல்லாந்
தாமரையென்றுகூறுந்தனிப்பொருள்விளக்கிற்றம்மா. ௱௬௯

கடலிடைக்குளிப்பான்போன்றுகரந்துபல்லுருவுகொண்டு
வடவரையனையதோளார்மலர்முகத்தெழிலைவௌவப்
படரொளிப்பரிதிப்புத்தேள்பயில்வதுபோலச்சேர்த்துத்
தடநெடுமனைகடோறுந்தகைந்தனவிளக்கினீட்டம். ௱௭௰

அனையபுன்மாலைக்காலத்தியல்புளியாற்றுமந்தி
வினைதபுகடன்கண்முற்றிமேவருநடவைநீந்து
நனைமலரளங்கற்றோளானன்னிமித்தங்கள்காணூஉ
வினையவைபயப்பதென்னேயீண்டெனச்செல்லும்போது. ௱௭௧

ஒற்றையந்திகிரித்தேரோனவுணர்காட்டுருத்துமூட்டப்
பற்றியசெக்கர்வானப்படரெரிப்பிழம்புகான்ற
கற்றையம்படலைக்கூட்டக்கருப்புகைமண்டிவிம்மி
முற்றியதிறனேயென்னமொய்த்ததுதிமிரவீக்கம். ௱௭௨

கொண்கரைக்களவிற்சேர்வோர்கொழுநரைப்பிழைத்துச்செல்வோர்
கண்கழல்வளையாய்க்கூகைகள்ளுநர்முதலோர்க்கெல்லா
மெண்கழியுவகைகாட்டியேனையோர்க்கிடுக்கண்காட்டி
வண்கழலரசனேவவல்லிருளிறுத்ததன்றால். ௱௭௩

விழிப்பினுமிமைத்தற்கண்ணும்வேறுபாடின்றித்துன்னுங்
கழிப்பருங்கொடியகங்குற்கருகிருட்போதுசெல்ல
லழித்தடிபெயர்க்கலாற்றானுண்மையான்வலிந்துபோகி
வழித்தடந்தப்பியாரும்வழங்கருங்கடத்திற்புக்கான். ௱௭௪

துன்னருவனத்துச்செல்வான்றொடர்ந்தெரிவளைக்கப்பட்டுப்
பன்னிருபடப்பாம்பொன்றுபதைபதைத்தழுங்கக்கண்டா
னன்னதற்கிரங்கிவல்லேமந்தரவலியாலந்த
வன்னியின்வெப்பமாற்றிவாளராவுய்யச்செய்தான். ௱௭௫

உய்வித்தவேந்துதன்னையுரகவேந்தினிதுநோக்கி
கவ்வைக்கோர்புணையாய்த்தோன்றுங்களைகணேயெயிறுதோறு
மைவைத்தநஞ்சுகாலுவலியினேன்றனையுமுய்யச்
செய்வித்தவுதவிக்கென்னேசெய்தக்கதென்றுகூறும். ௱௭௬

கலிவிருத்தம்.

எவ்வுயிராயினுமிடுக்கட்பட்டுழி
யவ்வுயிர்காப்பதேயறமென்றோர்ந்தனை
செவ்வியவென்றுநன்முகமன்செப்புபு
கௌவைநோய்களையுமாறிதுவுஞ்சொல்லுமே. ௧௭௭

வரையிரண்டெனத்திரண்மணிப்பொற்றோளினுய்
குரையெறுழ்த்தழலினுற்கோட்பட்டேய்ந்தயான்
றரையகம்புகழ்திருசங்கசூடனென்
றுரைதருபெயரினேனுயர்ந்தகேள்வியேன். ௧௭௮

அரந்தைநோய்முழுவதுமனுக்கிமேதகு
வரந்தருகாஞ்சிவண்பிலத்துவாய்தலி
லுரந்தகுகாவல்கொண்டுலகுபாம்பென
விருந்தமாபதுமன்மற்றெனக்குத்தோழனே. ௧௭௯

ஆங்கவன்செவியறிவுறுப்பவாழிபோ
லோங்குநீர்க்காஞ்சியினிராறுநாமமும்
பாங்குறக்கணித்தெறுழ்ப்பறவைகோப்பகை
நீங்கியெங்கணுந்திரியாற்றனீடினேன். ௧௮௦

இற்றைநாளிங்கொருபிலத்தினேந்திய
முற்றிலாமுகிழ்முலைநாககன்னிதன்
பொற்றதோட்புணர்ச்சியாற்புந்திசாம்பியப்
பற்றுடைப்பெயர்களைக்கணித்தல்பாற்றினேன். ௧௮௧

பாற்றியவறன்கடைதொடக்கப்பாயெரிக்
கூற்றின்வாய்க்கவன்றனேன்குழையுமேல்வையிற்
போற்றுமப்பெயர்களைப்புந்தியெண்ணலான்
மாற்றினேனத்துயர்மின்னின்மன்னனே. ௧௮௨

சித்திகள்வேண்டினுஞ்செல்லறீர்பர
முத்தியேவேண்டினுமுசுவண்டுலாந்
தொத்தலர்த்தாரினுய்துனையநல்குமா
லத்தகுகாஞ்சியின்பெயரிராறுமே. ௧௮௩

மும்மையினிகழ்பவுமுறையிற்றேர்ந்துள
செம்மையேனுதலிற்செம்மனின்னுள
விம்மனேயெய்த்தனன்வெருவலின்னினி
யம்மனுப்பெயர்செவியறிவுறுப்பலே. ௧௮௪

மேதகுபத்தியின்விழைந்தர்நமங்க
ளோதுழிநான்கெனுமுருபுகூட்டுபு
பேதமில்சத்தியமாதியாப்பிணித்
தீதுதீர்நமோந்தமாச்செய்துசெப்புக. ௧௮௫

முள்ளரைக்காம்பிவர்முளரியுற்பலங்
கள்ளலைத்தொழுகுசெங்குமுதங்காஞ்சன
வள்ளிதழ்ச்சண்பகமறுகுவாலரி
யென்[illegible]பாறயி[illegible]தெனின்பர்ளிதம். ௧௮௬

கொளத்தகுமேனவுங்கொண்டுநூன்முறை
யளப்பருஞ்சித்தியின்பொருட்டங்காகுதி
விளைத்திடும்பத்தினுக்கொள்றுமேவர
வளப்படுமெப்பெயர்மனுக்களபன்னியே. ௧௮௭

திருத்தகுகாஞ்சியந்தேத்தலாலொரு
வரைப்பினுஞ்செய்பயன்வல்லைமுற்றுறு
குருப்பொலிமணிமுடிக்கொற்றவேந்தவம்
மருப்பொழிற்கச்சியிற்கணித்துவைகுதி. ௧௮௮

முன்னியவிழைவெலாமுற்றுமாலெனப்
பன்னிருபெயரும்பன்னிரண்டுவாயினு
மன்னவன்செஞ்செவியுறைத்துவாளராத்
தன்னுடைப்பிலத்தினைச்சார்ந்ததென்பவே. ௧௮௯

ஆங்குவேன்மணிப்புயத்தரசனுள்ளகத்
தோங்கியவுவகையானுடலஞ்சாலவும்
வீங்கினன்றுயரெலாம்விளியநீத்தொரு
டாங்கரினிருந்தயர்வுயிர்க்கும்பாணியின். ௧௯0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தெள்ளுசீர்க்காஞ்சிகாமஞ்செவியறிவுறுத்தப்பட்ட
கள்ளவிழ்மலர்ப்பூந்தொங்கற்காவலன்முகத்திற்றுள்ளு
மள்ளொளிவனப்புவெளவவையெனத்தோன்றியாங்கு
வெள்ளொளிக்கதிர்ப்பூந்திங்களெழுந்ததுவிசும்புசேர்ப்ப. ௧௯௧

கோட்டுமாநேமிக்குன்றங்குருமணிகுயின்றவாழிச்
சூட்டெனநெவட்டோன்றுஞ்சுடர்மதிகுழிசியென்னப்
பூட்டியவார்களாயப்பொழிநிலாத்திங்கள்கான்ற
சேட்டொளிக்கிரணக்கூட்டந்திசைதொறும்பரந்தவம்மா. ௧௯௨

மையிருட்போர்வைநீக்கிவார்கதிர்க்கரத்தாற்றிங்கள்
பையமென்புணரியல்குற்பன்முறைநீவிக்குன்றச்
செய்யபொன்முலைதைவந்துதிளைத்தலானணியதங்கு
வையகமடந்தைசாலவிளர்த்தனணிலாவின்மாதோ. ௧௯௩

களித்ததன்வேழமூர்ந்துகணைபொழிகருப்புவில்வே
ளிளைத்தல்கண்டதனைவைகற்கிணங்குபாசறைக்கணேய்த்துத்
தளைத்ததுபோலுமெங்குந்தணந்துகார்த்திமிரவீக்க
மிளித்திரண்முரலுஞ்சோலையகங்குடிகொண்டதோற்றம். ௧௯௪

தேந்துணர்க்கற்பத்தண்டார்த்தேவர்கள்பலகாலண்மிக்
காந்துதண்கலைவெண்டிங்கட்கடவுண்மாட்டள்ளிக்கொண்டு
போந்தொறுஞ்சிந்தாநின்றபுதுச்சுதைப்புள்ளிபோன்ற
வாய்ந்தொளிவிசும்பிற்பூத்துவயங்கியவுடுவின்கூட்டம். ௧௯௫

சீரியமதியைநோக்கித்தேவர்போலமிழ்தம்யாமு
மாரியவாக்குகென்னுநீரமகளிரெல்லா
மேரியல்பவளச்செவ்வாய்திறந்தனரென்னப்பொங்கும்
வேரியங்குமுதக்குப்பைவிரிந்தநீர்நிலைகடோறும். ௧௯௬

தடுத்துவிண்ணவாள்ளாமைத்தள்ளியவவுணாாய்த்தம்
கடுத்துமற்றெமக்குஞ்சாலவாாமிழ்தருளலின்பாற்
றொடுற்தவன்புடையார்க்கின்னேசொல்லெனவிராந்தான்மான
மடுத்தலையாம்பரேறும்வண்டுபாய்க்கிசைத்ததாவோ. ௧௯௭

மலையெனத்திரண்டதோளும்வார்கிழித்தெழுந்தண்ணூந்த
முலைகளுமிறுகமாந்தர்முயங்குமாறெய்துமாரன்
சிலைபடுநாணிஞைதெழித்துமிக்கெழுந்ததேபோ
லிலைபடுபொதும்பரோங்குமெழுந்ததுசுரும்பாார்ப்பு. ௧௯௮

செந்தழல்சான்றுவேட்டசெல்வனைப்பிழைத்தமாதர்
பைந்துகின்மெய்யிற்போர்த்துப்பன்மரப்பத்திநீழ
னங்கெழின்மாடநீழற்பற்றினர்நடந்தார்வீழ்ந்த
மைந்தனைக்கலவிப்போரான்வணக்கியவயின்கடோறும் ௧௯௯

கறைகெழுவிசும்பிற்றிங்கட்கலையமிழ்தினிதுமாந்து
நிறைமணிமோலித்தேவர்நிரந்தாமழுக்காறெய்த
மறுவறுவதனத்திங்கள்வாக்குதெள்ளமிழ்தமுண்டா
ரிறுநுசுப்பந்லாருமிளைஞருந்தம்முட்கூடி. ௨00

இத்தகுவனப்புமல்கவிடையிராவிறுத்தலோடு
மத்தகுகானம்வைகுமடல்கெழுதனிவேற்காளை
மைத்தபூஞ்சோலைக்காஞ்சிவளநகர்நோக்கிவல்லே
மொய்த்தெழுமகிழ்ச்சிபொங்கமுன்னினனதர்கடோர்ந்து. ௨0௧

காவதஞ்சிலசெல்காலைக்கனியிதழ்ப்பவளசெவ்வா
யாவியங்கூந்தன்மாதராழுங்கியுள்வெதும்பிச்சேரிப்
பாவையர்நுகர்ச்சிமுற்றிப்படர்தருங்கணவர்மாட்டு
மேவியதுனியின்வைகும்விடியல்வைகறைவந்தன்றே. ௨0௨

கலிவிருத்தம்.

சரியையாதியபுரிதருமமைந்தர்க
ளெரிசடைக்கட்வுளைத்தொழுதின்பார்ந்தன
ருருவிலிக்குடைந்தமைந்தர்களுமூடிய
வரிமதர்மழைக்கணார்ப்பணிந்தின்பார்ந்தனர். ௨0௩

ஆற்றல்வேண்டுகொலாமரனையன்பிறைற்
போற்றியிம்மனுப்புகல்கென்னல்போன்றமுன்
சாற்றியமந்திரந்தன்னைக்கார்க்குரீஇ
வீற்றுவீற்றுவிருந்துனாத்தன்மேயின. ௨0௪

ப்ரவைவையகமடிப்படுப்பவெவ்வவன்
வரவறிந்துள்ளகங்கவன்றுமம்மர்நோய்
விரவலாற்சழுங்கியதென்னமென்மெல
விரவுசெய்கதிரொளிமழுங்கிற்றென்பவே. ௨0௫

காதலர்க்கடுத்ததுகாதன்மாதர்க்கும்
போதவுற்றிடுமெனல்புதுக்கிறலெனச்
சீதவெண்மதியொளிதேய்ந்துவீதொறு
மாதர்வில்லுடுக்களுமழுங்கித்தோய்ந்தன. ௨0௬

தணிவருங்காரிருள்சாலவாய்மடுத்
துணவுளத்ததுநிறைந்தொளியைவீத்தென
மணிநிறைமாளிகைவயின்றெருவேற்றிய
வணிநிறைவிளக்கெலாம்விளக்கமற்றன. ௪0௭

எய்துமுனுருயிரிகப்புறுவகை
யைதுபோய்த்தாமரையணங்கையாற்றெனு
வெய்யவன்விடுப்பமுன்மேவினாலெனச்
செய்யசீரருணன்முன்றிகழத்தோன்றினான். ௪0௮

இனையதோர்வைகறைப்பாணியெய்தலுந்
துனைவுகொண்டாறுசெஃறோன்றல்செய்திடும்
வினையெலாமேதகுவிழைவினாற்றினான்
றனைநிகர்காலையுஞ்சார்ந்ததென்பவே. ௪0௯

வடதிசைப்படர்ந்தருள்வாக்கின்மன்னரங்
கிடனுடைப்பொய்கையினிழிந்தையாற்றுநீர்த்
தடமிசையெழுந்தமைதகையமேற்றிசைக்
கடல்விழுசுடர்குணகடலிற்பூத்ததே. ௪௧0

வாக்கினுக்கரையரையாற்றுவாவிநீர்
மேக்கெழக்கண்டமெய்யன்பர்போன்மெனப்
பூக்கமலத்தொகைபொலிந்தவாம்பல்க
டக்குணப்பரமதத்தவரிற்றேம்பின. ௪௧௧

ஆறுசென்றுயங்கினையயர்வுயிர்த்தரு
ளீறிலாயுண்டிதுவென்றுபானுமுன்
வேறுவேறந்தணர்விருந்துசெய்வபோற்
கூறுமந்திரத்துநீர்குடங்கையேந்தினர். ௪௧௨

மண்ணெலாமலர்ப்பொழின்மணஞ்சுலாவின
விண்ணெலாம்வேள்வியின்புகைவிராவின
கண்ணெலாங்கண்ணுதல்கழலிலேறின
வெண்ணெலாமவனடியிணையிற்றாழ்ந்தன. ௪௧௩

ஏடுசூழ்தாமரையீர்ந்தடந்தொறுந்
தோடுசூழ்சிறையனந்தொழுதிசென்றன
பாடுசூழவற்றெழில்பார்ப்பயோன்மனைப்
பீடுசூழன்னமுங்குடையப்போந்தன. ௪௧௪

இன்னபல்வளஞ்செறிகாலையெல்லையின்
மன்னவனெழுந்துபன்மலையுங்கானமுங்
கன்னலங்கழனியுங்கடந்துசார்ந்தனன்
றுன்னியமலர்ப்பொழிற்காஞ்சித்தொன்னகர். ௪௧௫

கருத்தொகைதுமித்தருள்காமக்கோட்டத்தை
யருத்தியினண்மியாங்காற்றப்போற்றுபு
மருத்தபூங்குழலுமைமாதையுள்ளகத்
திருத்தினன்கணித்தனனிசாதுரமரும். ௬

இறைவிதன்னேவலாலினைத்தழும்பொழி
வறைகமழ்காஞ்சிமாநகரத்தெய்வத
நிறைபெறுமாக்கடோயுனேனவும்
பெறுமெனவருளதும்பெற்றநீக்குபு. ௪௧௭

பொற்றதன்னுட்டிடைப்புகுந்துபேரொடு
முற்றியபகைஞரைமுருக்கியெங்கணும்
வெற்றியந்திகிரிசென்றுருவவீற்றிருக்
தற்றமிலரசுசெய்தவனிகாத்தனன். ௪௧௮

விண்ணவர்வியத்தகும்விண்டுமாபுரத்
தண்ணலந்திருப்பெயரலகிட்டின்னண
மெண்ணியவெண்ணியாங்கெய்தினேரின்று
மெண்ணிலாவற்றுடைப்பெருமையென்சொல்கேன். ௪௧௯

கன்னிகாப்பணிந்தவப்பெயருட்காஞ்சியென்
றென்னருமேதகவியம்புகற்பெயர்
தன்னையோர்வேதியன்கேட்டுத்தாவொரீஇ
புன்னரும்பேறுபெற்றதுவுமோதுவாம். ௪௨௦

கொச்சகப்பா.

அலங்கன்மணிப்புனற்றடஞ்சூழயோத்திநகர்வாழ்க்கையினு
னலங்கதுவும்பலகலையுநான்மறையுமுழுதுணர்ந்தா
னிலங்குபுகழ்த்தனியொழுக்கினெச்சன்மாவெனுமறையோன்
மலங்குதுயர்க்கடலழுத்துநல்குரவால்வறுந்தினன். ௪௨௧

கரந்தறியாவிழுத்தகையோர்கண்ணுற்றுவிதியாற்று
னிரந்துகடும்பொடும்பசிதீர்ந்தின்னுயிரோம்பினன்வருநாட்
சுரந்தபொருள்வேட்கையினுற்சுலாயெங்குமாறின்றிப்
பரந்தபொருளீட்டியுந்தன்பாழார்வந்தணிந்திலனுய். ௪௨௨

காண்டகுசீர்வளம்படைத்தகாசிநகர்சென்றெய்தி
யாண்டிருந்துபலவருட்டமலைசுருட்டிமணிகொழித்து
வேண்டுவரந்தருகங்கைவிரைப்புனலாடுநர்மாட்டு
மாண்டகுபஃறானங்கள்வைகறுெறும்விழைந்தேற்றும். ௪௨௩

பரிதியைவெங்கொலையரவம்பற்றுதினத்தாற்றுநர்த
மிருளிரிக்குமாதானமேற்றுநிதிமல்குதலாற்
பெருகியதன்பொருளார்வம்பெரிதுமமைந்தோங்கியதன்
றிருநகரஞ்செல்பாக்குத்திரணிதியோடவணீங்கி. ௪௨௪

பலகக்ரமிடைகடந்தோர்பழுவமுடுத்திறந்திடுங்கா
னிலவியவாழ்நாளுலப்பநிலமிசைவீழ்ந்துடல்விடுத்துக்
குலவுபஃறுனங்களேற்றகொடும்பாவத்தா
லலகிறுயர்க்காகரமாயரக்கவுருச்சிமிழ்ப்புண்டான். ௪௨௫

வருந்திகனியீட்டியுமல்வான்பொருளாற்பயன்யாதும்
பொருந்தினுலைவிறந்தபொழுதுமொருகதியிலான்
திருந்தியவிக்கதைகேட்டுேஞ்சிலரன்றேமுறைதிரும்பிப்
பெருந்தகைமீத்தவப்பொருள்கள்பெருக்குவாரென்னினைந்தோ.

உருக்கியுயிர்நனிகவற்றுமுண்புனல்வேட்கையஞ்சால
வெருக்கொள்பசித்தழற்பிணியும்விராயுடறத்துயர்வசமாய்
நெருப்புறழ்வெஞ்சுரத்தொருசார்நிற்குமொருதடம்போதித்
தருத்தனைச்சேர்ந்தவ்வரக்கன்றளர்ந்தினைந்துவதியுநாள். ௪௨௭

கலிநிலைத்துறை.

சுரும்புதூவழிமிழற்றமென்மலர்மதுத்துளிக்கு
மரும்புவாய்ந்தபூம்பொதும்பரின்புறமெலாமடுத்துக்
கரும்புஞ்செந்நெலுங்கதலியும்பூகமுங்காட்டும்
பெரும்புனற்பணைமதுரையிற்பேணுவாழ்க்கையினன். ௪௨௮

நாட்டமூன்றுடைகம்பனார்நளினமெல்லடிக்கே
கோட்டுசென்னியன்குறும்புசெய்மலப்பகைமுழுதும்
வாட்டுபீமசன்மாவெனுமறையவன்மைந்தன்
சேட்டிரும்புகழ்ச்சோமசன்மாவெனுந்திலதன். ௪௨௯

புரங்கடந்தவர்பூணிளவனமுலையோடுந்
தரங்கவார்புனற்கம்பையின்றடங்கரையமரு
மரங்கமாளிகைக்காஞ்சிமாநகர்த்தலையமலு
மிரங்குவெண்டிரைத்தீர்த்தங்களாடவெண்ணினனல். ௪௩0

கடங்கவிழ்க்கும்வாரணமுகக்கடவுளையிதழ்க
ளுடங்கவிழ்க்குமென்கடம்பணியொருவனைவேள்விச்
சடங்கவிழ்க்கவோர்வீரனைத்தந்தருளரவம்
படங்கவிக்கும்வார்சடையரையுமையொடும்பணிந்தான். ௪௩௧

கற்புமேதகுமனைவியுங்காமர்மைந்தர்களும்
பொற்பவோதுமாணுக்கரும்போக்கில்சுற்றமுமாம்
பற்பலாரொடுநியதிபூண்டப்பதிநீங்கி
யற்புமாமனங்களிகொளவாறுசென்றனனே. ௪௩௨

செல்லும்வைகலுளொருதினஞ்செல்லவிற்றுளையும்
வல்லரக்கன்வைகழற்கடம்வழங்கிடுமேல்வை
வில்லொழுக்கியவெய்யவன்வெங்கதிருடற்ற
வல்லலுற்றனனவ்வரசடியினைச்சார்ந்தான். ௪௩௩

நெருங்குபல்வளப்பெருக்கமுநிலையுதவிலவாய்ச்
சுருங்குங்காலையும்விருந்தினைப்புறந்தருந்துகடீர்
பெருங்குணத்தரினரசுகாணீழல்பெட்டிறைகொண்
டொருங்குவந்ததன்சுற்றமோடயர்வுயிர்த்தனனே. ௪௩௪

வருத்தநீங்கியங்கிருப்புழிமுணித்திரைகொழிக்கு
மருத்தபூந்தடமருங்குகால்வளைத்தகாஞ்சியைச்சென்
றருத்தியோடுமேகம்பர்தமடியிணைதொழுது
திருத்தகுஞ்சிலர்மறையவர்மீண்டனர்சென்றூர். ௪௩௫

அடுப்பவண்மியவந்தணர்தம்மைநேர்நோக்கிக்
கெடுத்தவைம்பொறிச்சோமசன்மாகிளர்ந்தெழுந்து
மடுத்தகாதலின்வரவெதிர்கொண்டுபூந்தவிசு
கொடுத்துமேவிரீஇயளவளாய்க்குழைந்தகங்களித்து. ௪௩௬

எங்கிருந்திவட்போந்தனிரெங்கணேகுதிரென்
றங்கண்வேதியர்தங்களைவினாயினனவரும்
கொங்கிணர்ப்பொழிற்காஞ்சியைக்குறுகினம்போற்றித்
தங்குமெம்பதிபோதுவான்சார்ந்தனமென்றார். ௪௩௭

அளறுபாய்மதக்கலுழிநீராறுபாய்முகத்துக்
களிறுவாரிதிமடுத்தெழுங்கருமுகில்சமழ்ப்பப்
பிளிறுமோதைசூழ்காஞ்சியம்பெரும்பதியின்று
மொளிறுநெஞ்சினிரெவ்வளவிற்றெனவுரைத்தான். ௪௩௮

அளவையிற்றெனமொழிந்தவரகறலுமாங்கு
வளமைபெற்றசீர்க்காஞ்சியென்றவர்முனம்வகுத்த
கிளவிபோய்ச்செவிநுழைதலுங்கெழுமுவல்லரக்க
விளிவிலாக்கையைவிடுத்தனனரசின்மேலிருந்தான். ௪௩௯

மற்றுரைத்தவக்காஞ்சியின்கேள்வியால்வாசந்
துற்றகற்பகத்தோட்டலர்த்தொடையன்மார்பலையக்
கற்றையங்கதிரொளியுடன்முழுவதுங்கனலப்
பொற்றவானவனாயினன்புவியெலாம்வியப்ப. ௪௪௦

நிழலின்வைகியசோமசன்மாவைநேர்குறுகிக்
கழலிற்றாய்ந்திருகட்பனியுகக்கரைந்தியம்பு
மொழிதள்ளாடவின்றுதிபலமுழக்கியுள்ளகத்துக்
கழிபெருங்களியெழக்கரமுகிழ்த்தெதிர்நின்றான். ௪௪௧

யாரைநீயெனவினவியவிருபிறப்பாள
னோருமாறுதன்செய்திகளுவந்தெடுத்துரைப்பான்
சீருலாமறைக்குலத்தினென்காசியிற்சிவணி
யாரவான்பொருளறம்பிழைத்தீட்டிமீண்டிறந்தேன். ௪௪௨

இறந்தவிக்கடத்தெரியெனப்பெருந்துயரலைப்ப
வுறந்தசாகைநெட்டரசினையுறைந்திருந்தனன்மற்
றறந்தழைத்தநின்வரவினாலமரனாய்ப்பொலிந்தேன்
சிறந்தவேதியவிதற்கெவனேதுசெப்பென்றான். ௪௪௩

செப்புமென்மொழியமிழ்தெனச்செவித்துளைநிறைப்ப
வொப்பில்சோமசன்மாவெனுமுத்தமன்மகிழ்ந்து
துப்புநேர்சடையாருள்வாரியிற்றுளைந்தங்
கெய்ப்புநீவியபண்ணவனின்புறக்கிளப்பான். ௪௪௪

சுருட்டுவெண்டிரைத்தொகுதிகள்சுடர்வளைக்குலங்கொண்
டுருட்டிவார்கரையொதுக்குநீர்க்கங்கைசூழ்காசிப்
பொருட்குவைகியபொருவறுபுண்ணியப்பேற்றா
லிருட்டனுக்குநற்காஞ்சியென்றிரும்பெயர்கேட்டாய். ௪௪௫

அனையகேள்வியாலரும்பயன்பெற்றனையென்னா
நனைமலர்ப்பொழினனந்தலைப்புரிசைசூழ்காஞ்சி
புனைபெரும்புகழ்புகழ்ந்திடுமெல்லைவானின்றாங்
கனைகதிர்ப்பொலங்கடவுளர்விமானம்வந்தன்றே. ௪௪௬

விம்முவால்வளைதெழித்தெழவிமானமேல்கொண்டு
கொம்மைவார்முலையரம்பையர்குழீஇமுறைபழிச்ச
மும்மைவையகமுழுவதுமுகமலர்மலர
விம்மென்முன்புபோயெய்தினனிமையவருலகம். ௪௪௭

அனைத்துநோக்கியற்புதத்தனயகங்களிதுளும்பும்
வினைத்தொடக்கறுஞ்சோமசன்மாவெனுமிக்கோன்
றனைத்தொடர்ந்தபல்சனத்தொடுமாவயிற்றணந்து
கனைத்துவண்டிமிர்சோலைசூழ்காசியையடைந்தான். ௪௪௮

சங்குமிப்பியுந்தண்டுறைதொறுமணிகொழிக்குங்
கங்கைவார்நதிதோய்ந்துசெய்கடனெலாமுடித்துத்
துங்கவேற்படைத்தோன்றலைச்சூர்தபவுயிர்த்த
பங்கநீத்தருள்விச்சுவநாதனைப்பணிந்தான். ௪௪௯

அங்கணீங்கிவந்தண்மினனன்னமுங்குருகும்
பங்கயத்தடம்போதெலாம்பள்ளிகொண்டுறங்கும்
கொங்குவிம்மியகுளிர்புனலிலஞ்சிகளுடுத்த
மங்குல்வான்றொடுமாளிகைக்காஞ்சிமாநகரம். ௪௫௦

விழியுமுள்ளமும்வேசையர்போற்றிறைகொள்ளுங்
கழிபெருஞ்சிறப்பணிநகர்க்கவினெதிர்நோக்கிப்
பொழியுமன்பினன்போந்தனன்புகர்துமித்தின்ப
வழியினுய்த்திடுஞ்சாறுவதீர்த்தத்தின்மருங்கு ௪௫௧

ஆங்குநான்முறைமயிர்வினையாற்றிவார்தரங்கம்
வீங்குவெள்ளநீர்த்தீர்த்தமேவரப்படிந்தாடி
யோங்குபிண்ட * மீடாதியசெய்கடனுஞற்றித்
தேங்குலாவியதெய்வதவேகம்பஞ்சேர்ந்தான். ௪௫௨

மட்டுவார்திழிமலர்ப்பசுவுமாவடிமுளைத்த
வட்டமூர்த்தியாரணிமலர்ச்சேவடிதாழ்ந்து
பெட்டகாதலினென்பெலாம்பெரிதுநெக்குருகி
முட்டுமானந்தவெள்ளத்தின்முழுகியொன்றானன். ௪௫௩

மற்றுமுள்ளபன்மணிநறுந்தீர்த்தநீராடிப்
பற்றுகாதலினாலயம்பலவுஞ்சென்றிறைஞ்சி
யற்றந்தீரடியாரொடுமளவளாய்வதிந்து
சுற்றமோடுமெய்வீட்டினைத்துன்னினானன்றே. ௪௫௪

உன்னுவார்வினையோசனைக்கப்புறத்தொதுக்கு
மன்னுசீர்ப்பெயர்முகத்தினாற்காஞ்சிமாநகரந்
துன்னுமேன்மையிற்சிறிதெடுத்துரைத்தனந்துகட
ரன்னமாநகர்மூர்த்தியின்பெருமைமற்றறைவாம். ௪௫௫

பன்னிருநாமப்படல முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - [illegible]

---

* சடு - இதேல்.

70· 
# இருபத்தெண்டளிப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருமலர்ப்பசும்பொதும்பரிற்பண்பயில்வரியளிமுரன்றுடும்
பொருவிகந்தசீர்க்காஞ்சிநீடெல்லையுளாகமபுராணங்கள்
சுருதிநூலெடுத்தியம்பிடப்பட்டனதொழுபவர்தமக்கெல்லா
மிருமைவாழ்வருள்கடவுளிருக்கைகளெண்ணிறந்தனவோங்கும். க

செப்பரும்புகழ்பூண்டமற்றவற்றினுட்சிறகாமுளவான
முப்பதிற்றுமூன்றிரட்டியபத்துநூறெனப்படுமுறைசான்ற
வப்பெருந்தகுதளிகளுட்பனிவரையணங்குபூண்முலைதோய்ந்த
துப்புவார்சடையண்ணலார்தளிகளெட்டிரட்டியாயிரஞ்சூழல். உ

காமக்கோட்டத்தினிருந்தறம்புரிந்தருள்காமகோக்குடைமென்பூந்
தாமப்பூங்குழலம்பிகைக்குரியநற்சத்திகளமர்கின்ற
வேமக்கோயில்களைந்துறழாயிரமெரிதவழ்சுடராழி
நாமத்திண்படைநாயகனிருக்கைமுந்நான்குபத்துறழ்நூறே. ங

உலகெலாந்தருநான்முகற்கொருபதினாயிரத்தெழுநூறு
விலகுமுக்குடைவானவற்கொன்பதினாயிரத்தெழுநூற்
றலைமைசால்புகழ்ப்புத்தனுக்கெட்டுறழாயிரஞ்சகம்போற்றக்
குலவுகொற்றவைவயிரவன்சாத்தனுக்கொவ்வோராயிரங்கோயில். ச

வயங்குநெட்டிலைவேற்படைப்பண்ணவன்வாணிலாப்பிறைக்கோட்டா
னுயங்கவெம்பகைமுடித்தருளைங்கரத்தொருமுதலுயர்வானத்
தியங்குசெங்கதிரிருக்கைகள்வேறுவேறைந்நூறெனச்சொல்வர்
தயங்குமேதகையனந்தன்வாழ்மந்திரஞ்சாற்றிலொன்றுழிநூறே. ரு

வேறு.

ஆரிருளறுக்குமின்னவறுபத்தாறுயிரத்த
சீரியதளிகளுள்ளுந்திருவிழாச்சிறப்பின்மல்கு
மேரியல்விரைப்புநாலாயிரத்துநானூற்றுநாற்பத்
தீரொருநான்குமன்னுமென்மனோர்புலவர்மன்னே. சா

அவற்றுணூற்றெட்டுமேலாமவற்றினுங்காமற்காய்ந்த
சிவச்சுடர்க்கினியவைப்பினிருபதுசிறந்துமன்னு
முவப்புறவமிழ்தம்விண்ணோர்க்கூட்டியதிருமால்வைப்பி
னவைதொகையிரியநூறுநாலிரண்டதிகமாமால். எ

கருணைகூர்திருவேகம்பங்கச்சபாலயங்காரோணம்
பரவுமேற்றளியோடிந்திராலயம்பணாதரீசங்
தருவுடுத்துயர்மணீசநான்முகசங்கரஞ்சீர்
விரவியசுரகரீசமேதகுபரசிராமம். அ

உருத்திரனகர்மாகாளம்வராகமோத்தூர்மாற்பேறு
விரித்தசிரனேகபேசம்வேதநூபுரமயானங்
கருத்தபுகடம்பைமன்னுமவீராட்டகாசமென்னத்
தெரித்திடுமிவைநாலைந்துஞ்சிவபிரான்றளிகளாமால். கூ

நடைமலையோங்கல்வெஃகாநகைநிலாத்துண்டமேன்மை
யடைநிராகாரமட்டபுசஞ்சகாளாங்கந்திமை
யிடையுமூரகமேர்தங்கும்பாடகமிவையோரெட்டுங்
குடையெனப்பறம்புதாங்குங்குரிசிலுக்கினியதானம். ௧௦

இருபதுமெட்டுமோயவிவற்றினுந்திருவேகம்பம்
பருவரலிரிக்குங்கச்சபாலயந்திருக்காரோணம்
பொருவருமூன்றுமேலாய்ப்பொலிவுறுமிவற்றினுள்ளுந்
திருவளர்கம்பமேன்மையிற்றெனத்தெரிக்கொணுதால். ௧௧

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுடர்மணியிமைக்குஞ்சூட்டரா்முடியிற்சுமையெனக்கிடந்தபூதலத்தி
னெடுவெயிறகழ்ந்துபாதலங்காறுநிரந்துமேற்பொங்கிவெண்மணிகள்
படுதிரைக்கரத்தாற்கரைமிசையெறியும்பகீரதியொருபுறத்துடுத்த
விடமக்ல்காசித்திருநகர்வரைப்பின்விச்சுவநாயகனெனவும். ௧௨

குடவளைக்குலங்கள்வயிறுளைந்தலறிக்குரூஉமணிதுறைதொறுமுயிர்க்குந்
தடநதித்தீர்த்தமருங்குடுத்தோங்கித்தணப்பரும்பிறவிநோய்மருந்தாய்க்
கடவுளர்முனிவர்சித்தர்சாரணருங்களலினர்நிததலும்போற்றப்
படுமதில்வளைந்தசெழும்பிரயாகைப்பதிவயின்மகேச்சுரனெனவும். ௧௩

மூண்டபேரன்பின்விதியுளிப்படிந்துமுழுகுநர்தங்களுக்கன்றித்
தீண்டிடப்பெற்றோர்நோக்கினர்கேட்டார்செப்பினர்பருகினர்தமக்கு
மீண்டியசெல்லலறக்கடைதுமித்திட்டிமையவர்குழாமழுக்கறுப்பக்
காண்டகுசிறப்புமேதகவளிக்குங்கங்கையிற்பிதாமகனெனவும். ௧௪

நீட்டுவேர்ஞ்சடையர்வெண்பொடிதிமிர்ந்தநிலாத்தவழ்மேனியர்மலங்க
ளோட்டுகண்டிகையரஞ்செழுத்துரைக்குநாவினரொழுக்கருமுனிவர்
கோட்டியகருப்புச்சிலையவன்றொடுக்குங்கொழுமலர்க்கடுங்கணைமதுகை
வாட்டினர்வதியுநைமிசவரைப்பிற்றேவதேவப்பிரானெனவும். ௧௫

தொக்கமென்றோட்டுக்கடிமலர்க்கற்பச்சோலைகள்புடைதழீஇயுயர்ந்த
நக்கபூணிமையார்வாழிடம்வெள்ளிநாடெனத்தூனியுருமாற
வுக்கவெண்மணிகள்வயின்றொறுங்குவவியுமிழ்கதிர்க்கற்றைவிண்ணிவக்கு
மிக்கசீர்வேரற்கான்பொலிவஞ்சந்தனில்விமலேச்சுரனெனவும். ௧௬

மடலவிழ்நறும்பூஞ்சினைமிசைச்சேவன்மாங்குயில்பயிலவுமணையா
துடலபெரும்புலவிதணிவருந்திறத்தாலவயினயன்மரத்தொதுங்கும்
பெடையினைத்தொடர்ந்துபுலவியினீக்கிச்சிறகராற்பின்னியின்பாரும்
கடிமலர்ப்பொதும்பர்க்காடுசூழ்தரும்புட்கர்த்தினின்மாகந்தனெனவும்.

கொள்ளிவண்டினங்க ளிவர்ந்துகூட்டுண்ணக் கொழுமடல்கிழிந்து தேனொழுக்கும், வெள்ளைவண்டோட்டுக் கமலமீப்பயின்று மேதகுவாணிகொமலன்னத், தெள்ளொளிவிரிக்குஞ் சிறையனங்குலவுந் தெளிபுனற்றடத்துவெண்டரங்க, மள்ளிமுத்திறைக்கு மணிப்பிரமாச மதிற்சிபூடணனெனவும். ௧௮

வரைநடந்தனையநடைமதக்களிறும்வாரிதியலையெழுந்தனைய
புரையறுகலினவாம்பரித்திரளுமபொலஞ்சுடர்த்தேர்களுங்கடவி
யரையர்கள்குழுமிபெரியெனச்சினவியடுபடைவழங்குபுநெய்த்தோர்
திரையெழப்பொருதபெருந்திறற்குருக்கேத்திரத்தினிற்றாணுவேயெனவும்.

வட்டவெண்பாறைநடுப்புறத்தெய்திமதமலைசேவகங்கொள்ள
வுட்டலைப்பொதிந்தகறையுடைமதியென்றும்பரினிராகுவந்தண்மித்
தொட்டுமீண்டகலுஞ்சாரலங்குடுமிச்சுடர்விரிமணிவரையடுத்த
மட்டவிழ்பொழில்சூழ்மகேந்திரவரைப்பின்மாவிரதப்பிரானெனவும்.

மணிமருணிறத்துத்தும்பியுந்தேனும்வண்சிறைஞிமிறுமொய்த்திமிரப்
பிணிமலரவிழ்த்துப்பிரசமவார்ந்திழியும்பெருஞ்சினைமீமிசையிவர்ந்து
துணிகதிர்த்தடித்துத்திசைதொறுமிமைப்பதோன்றுமைமழைமுகிலேறக்கி
யணிமயிலகவும்பொதும்பர்சூழட்டகாசத்தின்மாதேவனெனவும். ௨௧

மடமயிலனையார்துடுமெனப்பாய்ந்துவார்புனல்குடைந்தனராட
வெடியெழுவாளைவிசும்பிடைத்தாவிவிண்ணவர்கற்பகப்பொதும்பர்ச்
சுடர்மணியிழைகள்புலியவர்கவரத்துதைந்துதைந்துகுத்துடன்வீழுந்
தடநெடுந்தடஞ்சூழ்சங்குகன்னத்திற்சாற்றுமாதேசனேயெனவும். ௨௨

கட்டளைப்பரியும்பருமவெங்களிறுங்கதிர்மணித்தேர்களுநெரிய
முட்டியபகைஞர்முடித்தலைதிருகுமொய்ம்பொறிதுவன்றிவெண்கிரண
வட்டவான்மதியும்பரிதியுமுரிஞ்சிமணியுருத்தேய்ந்துதேய்ந்தொழியத்
தட்டறவெழுந்தபுரிசையுச்சயினிதன்னின்மாகாளனேயெனவும். ௨௩

குழவிவெண்மதியும்பொருதிறற்சிலையும்புறங்கொடுத்திரியும்வாணுதலார்
பழலைமென்கிளவிமருதமாகிளளைமருட்டியவிளிமொழிபயிற்றி
முழவுகளியம்பவொத்தியதாளமுறைபிறழாவகைநடிக்கும்
விழவறாவளத்தவீதிசூழ்தருகோகன்னத்தின்மாபலனெனவும். ௨௪

அருத்தியின்வணங்குமுழுவலன்புடையார்க்கறககடையெரிக்குவைதுற்ற
மருத்தியினனுக்கித்திருவருள்சுரந்துபடர்ந்தனபடர்ந்தவாறுதவி
மருத்தபொன்னலங்கலிந்திரன்முதலோர்வழிபடுமிறைமையுயத்தருளு
முருத்திரகோடிநகரின்மாகாயவுத்தமசிவபிரானெனவும். ௨௫

கொங்தொளிமணிகள்வரன்றிவாரருவிக்குவட்டினத்திவர்ந்துவானெடிய
மந்திகண்மறலியெதிரெதிருகளமருங்கிருந்துலாவியகல்லாப்
பைந்தலைப்பார்ப்புமெழுந்துதாய்பபிழைத்துப்படரருவிடரினுக்கழுங்கும்
சந்தனங்கமழுஞ்சாரன்மாகூடந்தன்னிடையதோர்க்கடனெனவும். ௨௬

அகினறுந்தூமமடுத்துநெய்த்தொழுகியம்பொன்வாய்மகரமீன்கொளுத்தித்
தகரமும்புதுப்பூந்தொங்கலுநாறித்தடங்கடல்குடித்துவானெழுந்த
முகிலெனக்கறுத்தவணர்நெடுங்கூந்தன்முதல்வியைமகளெனவுயிர்த்து
புகழ்வளரிமையமடுத்தகேதாரப்பொருப்பிலீசானனேயெனவும். ௨௭

முடங்கியவறுகான்மூசுவண்டரற்றமுண்டகமாம்பலொண்குவளை
யுடங்குமேய்ந்துழக்கிப்படர்மருபபெருமையுலாத்தரவெரீஇயெழுவாளை
குடம்புரைசெருத்தன்முட்டலுஞ்சுரந்துகுவிமுலைசுரநதபாலாறு
மிடம்படுதடத்தசருவமாநகரின்மத்திமகேசனேயெனவும். ௨௮

பாம்பினைக்கவற்றிப்பைத்தெழுந்தரங்கப்பாவையினகன்றபேரல்குற்
காம்புறழ்பணைத்தோட்கன்னியரோச்சுங்கதிர்மணிக்கந்துகம்வருத்தத்
தேம்படுபொதும்பர்ச்சிறைக்கிளிபூவைசெங்நெலுங்கன்னலும்பிணைந்த
பூம்பணைசேக்குந்தலேச்சுரமென்னும்புரத்தின்மாலிங்கமேயெனவும்,

ஒறறையஞ்சகட்டிப்பொலங்கதிர்க்கொடிஞ்சியொளிர்மணிக்கூவிரத்தடந்தேர்க்
கற்றைவெங்கிரணப்பரிதிவானவற்குக்ககனவானெறிப்படருயங்கன்
முற்றுநன்கொழியக்காலெறிவன்போன்மொய்த்தெழுந்தாடுநீள்கொடியள்
செற்றியமதில்சூழருடதவரைப்பினருடவர்த்தனச்சிவனெனவும். கூ0

மங்குல்வானளப்பவெழுந்தென்வொழுகிவார்ந்தநெட்டிலைப்பசுமடற்பூந்
தெங்கின்முப்புடைக்காய்சிந்துவகமுகிற்செறிமணிப்பாளைகடுமித்துத்
துங்கமெல்லடையகதலிகள்சாடித்துடுமெனவிழுந்தடந்தோறுஞ்
சங்கினமிரியும்வயிரவமென்னுந்தலத்தினில்வயிரவனெனவும். கூக

மாங்குயிற்குலங்கள்வார்தளிர்கொழுதிமகிழ்ந்துகூக்குரல்பயில்பொதும்பாப்
பூங்கிளிகிடையினேதுகான்மறைநுண்பொருளுணர்ந்தடுத்தபூவையினைத்
தேங்கிசைமொழியாற்றெளித்திடுஞ்சிறப்புத்திளைத்துலகங்களோரேழும்
வீங்கியபுகழ்சேருருத்திராலயத்தினுருத்திரமேதகையெனவும். கூஉ

களிமதக்கரடக்கவுட்டுணைப்பணைக்கைக்கதழ்நடைத்திரண்மருப்பொருத்தல்
வெளிறபமுருக்கியெழுதலுஞ்சனங்கள்வீதியினியங்கன்மினன்னுக்
குளிறுவார்முரசிற்சாற்றிடுமுழக்கதித்தலுங்குலாவுறுசிறப்பி
ன்ளிதவழ்சுவணபுரத்திடைச்சகத்திராக்கவுத்தமப்பிரானெனவும்.

வடிகணைதுரந்துவேலினைச்சீறிமதர்த்துமைதோய்ந்தடல்பயின்று
நெடியசெஞ்செவியிற்புகுந்துலாய்மீளுநீணடவாட்டடங்கண்மங்கையர்க
ளடிமலர்க்கமலத்துட்டினருத்தவலத்தகம்வழுக்குபொன்வீதிக்
கடிநகரிடபவரைப்பிடையிடபத்துவசமுக்கட்பிரானெனவும். கூச

மாறடுசீற்றத்தேழுயர்வேழமணிக்கவுண்முதலியமூன்று
மூறியமதமுநாடகங்குயிற்றுமொளிநகைமடந்தையர்சூட்டித் [ச்
தேறலொண்மதுவுமழையெனப்பொழிவதிரண்டுசென்றுறெனவொழுகி
சாறயர்வீதிதொறுங்கமழ்தேவதாருவிற்றேவனேயெனவும். கூ௫

பெருவரைக்குலங்கள் பெயர்ந்தெனத்திரையும் பிறங்கொலித்திரையுடன்விண்ணத், துருவியவடுக்கற்களிறெனக்கராங்க ளுருகெழப்பிணைந்துலாய்த்திரியும், குருமணிககிடங்கு புடையுடுத்தெதிர்ந்தோர் குடுமிகைக்கொண்டொளிபரப்பும், கருவியபுரிசை யோங்கியமருவாங் கலத்தினிற்சண்டீசனெனவும். கூசா

அண்டர்நாட்டளப்பவெழுந்தெனகிவந்தவாடகப்பசும்பொன்மேனிலைக
டண்டளிர்க்குலமுமாலையும்பொரியுந்தமனியச்சுண்ணமுமணியு
மண்டியதூபதீபமுநிரைநீர்மங்கலகரகமுந்தாங்கிக்
கண்டவர்வியப்பப்பெருங்கவின்கொழிகுங்கனகலத்துக்கிரனெனவும்.

கொடுங்கனிவாழைநெட்டிளந்தாடுறுக்கொழுமிடறொடியமுத்தலைக்கு
நெடுங்கயத்தெழுந்துமுட்டியவாளைகீர்சுருங்கிரும்பணைவிழுந்து
படுங்களிச்சுரும்பரோலமிட்டாற்றப்பனிமலர்முதலொடுஞ்சாய்த்து
நடுங்கஞருழக்கும்பத்திரகன்னநன்னகர்தனிற்சிவனெனவும். கூஅ

சுருள்விரிமலர்ப்பைந்துணர்ப்பொழில்வருக்கைஞாங்குமுட்புறக்கனிகீழ்ந்திட்
டுருகெழுதடவுச்சுளைகள்சூன்றெடுத்தங்கூடியமந்தியைபருத்திப்
பெருகியகளிம்புத்தலைவரக்கடுவன்பிணைந்தபோன்பிறைற்றழுவு
மருவுசீர்க்காளாஞ்சனமெனுந்தலத்தின்மகிழ்நீலகண்டனேயெனவும்.

மாடகமுறுக்கித்திவவுயாழெழூப்புமதுரவின்னிசையுமின்மணிப்பொற்
பாடகத்தளிர்மெல்லடிநலார்மிழற்றும்பண்கனியிசையுமற்றவர்க
ளாடகவிற்றுநூபுரத்திசையுநயத்தகலித்தலுங்களுலு
மாடகவீதிச்சிகண்டநகரினமர்விமலேசனேயெனவும். ௪௦

விலகிவில்லுமிழுங்கதிர்மணிவரன்றிவியன்பொலங்குவட்டினந்தகர்த்துக்
குலவியமிருககுலமிரிந்தோடக்குரைத்துமென்சினைப்பசுங்கோட்டுப்
பலவுநெட்டிலையகதலியுமகிலும்வேரறப்பறித்துவீழருவி
சலசலமுழங்குஞ்சங்கநல்வரையிற்சத்தநாதப்பிரானெனவும். ௪௧

கோற்றொடித்தளிர்க்கைக்கழங்குமம்மனையுங்குருமணிப்பந்தும்பைங்கமுகி
னேற்றியதரளவூசலுமாடியிளமுலைமடந்தையர்பாட [ஞ்
லூற்றெழுபசுந்தேனுறைக்கும்வார்பொதும்பருறைகிளிகேட்டிசைபயிலு
சாற்றருவளஞ்சேர்ச்சோமநாகரந்தனிற்புரசாதனனெனவும். ௪௨

அள்ளொளித்தரளக்குவைபெயர்த்தழுங்கியலைதவழ்தெள்ளுநீர்ப்பரப்பிற்
றுள்ளிமேலெழுந்தசிறுகயலகவர்ந்துதோலடித்தூச்சிறைத்துவர்வாய்
வெள்ளையோதிமங்கள்பார்ப்பினையருத்திவிரிமலர்ப்பொகுட்டினுட்சேக்கும்
புள்ளவாமிலஞ்சிபுடைவளைபுரச்சந்திரத்திடைச்சங்கரனெனவும். ௪௩

இரங்குதேன்ஞிமிறுதேறல்வாய்மடுத்துண்டினர்மலர்த்தாதுதோய்ந்தாடு
மரங்கண்மேற்படாந்துகவிழ்சினைத்தாழ்ந்தவாரபசுங்கொடித்திரள்பிணைத்துக்
குரங்குகளிவர்வுற்றூசலாட்டலருங்கொழுமடற்படப்பைசூழ்ந்தழகுக்
கரங்கமாய்ப்பொலிந்தமேதகுமரிச்சந்திரவரைப்பிடையரனெனவும்.

ஊறுநீர்மிகுத்துச்செறுத்தொறுங்கலிங்கினொழுகியோட்டந்துநீள்கழனி
நாறுகள்வளர்த்துப்பசும்பயிர்விளைத்துநாகிளங்கதலிகளோம்பித்
தாறுபாய்கமுகுந்தாழையுந்தளிர்ப்பத்தலையளிசெய்துசென்றுலாவு
மேறுசீர்படைத்துவிளங்குகாமீரவிருக்கையில்விசயனேயெனவும். ௪௫

தேனினமுரல்வதிவவியாழாகத்தீங்குயில்கூவுவமுழவாக்
கானிமிர்பசியபூஞ்சினைக்கிளிகள்காண்பவராகமாமயில்கண்
மானனவிழியாரெனநடங்குயிற்றும்வார்பொழிலுடுத்துவிண்ணகரந்
தானமர்வளஞ்சேர்கோடிதர்மாவிற்றகைபெறுகோடீசனெனவும். ௪௬

தவளவெண்மருப்புக்குஞ்சரக்குழுவுந்தாவுமான்குலமும்பைங்கிளியு
மிவர்தினைக்குரல்கள்கவர்வனபெயர்ப்பவிதணிவர்ந்தருப்பிளமுலையார்
கவலையினேச்சுமவிர்மணிபலவுங்கதிருடுவெனவிசும்பொளிருந்
தவலரும்பிரமகிரியெனும்வரைப்பிற்றனித்திரியம்பகனெனவும். ௪௭

பொன்னுநன்மணியுமறுவையுமேனைப்பொருள்களுங்குவவிநான்முறையா
ணன்னர்நெஞ்சுவப்பத்தானமீத்தொழுக்குநறும்புனல்வீதியாறொழுகிக்
கன்னலுஞ்செந்நெற்கானமுங்கமுகுங்கதலியும்படப்பணைவளர்க்கு
மின்னலம்பிறவிக்கிழங்ககழ்திரிசந்தியிற்றிரியம்பகனெனவும். ௪௮

ஒலிதழல்கதிர்க்கும்வேள்வியினெழுந்தவுறுபுகைப்படலையினொழுக்கா
லிலகொளிபரப்புமிழைகளுந்தளிருமிளநறுக்கொப்புளித்துமிழு
மலர்களுங்கருகமாகநாட்டமலுமவளஞ்சினைக்கற்பகப்பொதும்பர்
பொலிவுறுங்கிருதபுரத்தினில்விண்ணும்புகழ்திரியம்பகனெனவும். ௪௯

மணிபலவிமைக்குமடுக்கலங்குவடுசிந்தவால்வெடிக்கும்வன்மடங்க
றணிவருஞ்சீற்றங்கட்கடை துளிப்பக்கதழ்ந்துதாய்த்தடக்கைமால்யானை
திணிபடுகுவவுமத்தகங்கிழிததுத்திவவொளிநித்திலஞ்சிதர்க்கும்
பிணிவரவறியாததிருப்பருப்பதத்தின்மல்லிகார்ச்சுனப்பிரமானெனவும்.

பரிதிவானவனை வெண்ணிலாமதியைப்படர்தருங்கொண்டலங்குழாத்தைக்
குருதிவாயுமிழப்படைத்தசைந்தாடுங்கொடிநிரைநிவந்தபொன்மாடப்
பருமணிக்குலங்கள்பாயிருள்பருகிப்பகலெனவிரவெலாங்கதிர்க்குந்
தெருள்வளர்சித்தவடமெனும்பதியிற்சித்தநாதப்பிரானெனவும். ௬௧

வாக்குதெள்ளமுதோதீஞ்சுவைக்கரும்போவடித்ததெண்டேறலோவென்ன
வ்ாக்கியமதுரப்பாடலோடாடுமெல்நலாரவிநயத்திறத்தை
நோக்குதோறிடைந்தவிசும்பரமாதர்பொருமையானெந்தனருறங்காத்
தேக்குசீர்வீதித்திரிபுராந்தகத்திற்றிரிபுராந்தகப்பிரானெனவும். ௬௨

புன்புலைக்குலத்தோருலகமரொழுக்கம்புறந்தராவிழுதையரேனு
மன்பினராகியொருபொழுதடுதேதுப்போற்றுவராயிடினவர்க்கும்
வன்பழமலங்கண்முழுவதுந்துமிததுமாலயற்கறிவருமுத்தி
யின்பருளிராசமகேந்திரவரைப்பினிலங்குமார்க்கண்டேசனெனவும். ௬௩

தாதவிழ்மலருஞ்செழுங்கனித்திரளுஞ்சலசலவெனப்புனலுகமென்
போதவிழ்ந்தன்னக்குருகினமோம்பிபபொழிகதிர்நித்திலங்கொழிக்குஞ்
சீதளநறுநீர்நிலையினினறெழுந்தசேலினம்பசும்பொழிற்சினைகண்
மோதுகாளேசத்திருநகர்வரைப்பின்முத்திநாதப்பிரானெனவும். ௬௪

காதளவோடிமணிக்குழையிடறிக்கருவரிசெவ்வரிபடர்ந்து
போதெனப்பொலிந்ததிருமுகத்துழலும்பொருகயற்கண்ணிணுலிளைஞர்
மாதர்மெல்லுயிரையுண்டுமீட்டுமிழாமடநலார்வண்டலாட்டயரும்
வீதுதைபொதும்பர்ப்பட்டசவரைப்பின்வீரபத்திரப்பிரானெனவும்.

இலம்பகமிலைந்தநறுங்குழன்மடவாரரங்குதோறீண்டினர்நடிக்குஞ்
சிலம்பொலியெழலுங்கடன்மடுத்தெழுந்தசெல்லினமுழக்கமென்றுவந்து
குலம்படுதோகையயிலினமெழுந்துகுழாங்குழாமாய்நடங்குயிற்று
மலம்புதேம்பொழில்சூலம்புரவரைப்பினருட்பிரமேசனேயெனவும்.

விழைதருமிளங்காறண்மையுமணமும்விரவிவந்துலாவுமாபடுத்த
புழைவழிநுழைந்துபானிலாமதியம்பூவணைக்கலவிசெய்துறங்கு
மழைமதாத்தடங்கண்மங்கையர்வதனவனபபெலாங்கவர்ந்துகொண்டிறப்பத்
தழைமணிமாடமோங்கிலேசத்தலத்தினிற்சருவனேயெனவும். ௬௭

உரைதடுமாறவென்புநெக்குருகவுடலெலாமென்மயிர்பொடிப்ப
விருவிழியுறைப்பவுள்ளகங்குளிர்ப்பவிணைக்கரஞ்சிரமிசைமுகிழ்ப்பப்
பெருகியவன்பிற்பணிந்தெழுந்தேத்தும்பீடுயரடியவர்க்கெல்லா
வரமுமுய்த்தருளுஞ்சங்கமேசத்தின்வயங்குசீர்நிவிர்த்தனேயெனவும்.

கோங்குறழ்முலையார்புறந்தனர்தணப்பக்கொம்மெனவாடவர்பற்றி
வாங்கியபருமவடங்கள்கண்பரிந்துசொரிந்தபன்மணிக்குலனுமிர்ந்து
பாங்கெலாமிரவியொளிதபவிமைக்கும்பருவரைமாளிகைவிசும்பி
னோங்கியசெப்பிரேசத்துத்திரிசூலாங்கவும்பர்கள்பிரானென்னவும். ௬௯

கொடுங்கதிர்ச்சாலிகுறைக்குநர்பின்றைத்ததும்பியதண்ணுமைவெருவி
நெடுஞ்சிறகாலகிமிர்தலைநாரைபீலியிற்பிளிறிநீள்கோட்டுத்
தடஞ்சினைப்பொதும்பர்க்குடம்பையிற்சேக்குந்தண்பணைபுடையுடுத்தகன்ற
விடம்படுவளத்தவெழிற்காவீரத்தினிதமாகபாலியேயெனவும். ௬௰

விடுசுடரிமைக்குமணிபலகுயின்றுவில்லுகும்பொலங்கதிர்மோலிக்
கடவுளர்குழாங்கள்கடிகமழ்வானக்கற்பகக்கொழுந்துணர்ச்செழுந்தேன்
மடலவிழ்மலர்கடேய்த்தொழுதிறைஞ்சிவந்தனைபுரிந்தருள்வாய்ந்த
கொடுமலமிரிக்குமேமலிங்கத்திற்குடிகொளுங்காளனேயெனவும். ௬௧

முருந்துறழ்முறுவற்றொண்டையங்கனிவாய்முகிழிளமுலைமயிற்சாயற்
றிருந்தியவன்னநடைமடமாதர்சீறடியூட்டுசெம்பஞ்சி
பொருந்தியசுவட்டுக்கோலஞ்சித்திரித்தாற்போன்மெனதொளிர்மனைதோறும்
விருந்தயர்சிறப்புமிக்கமாகேசநகர்வயிற்றீர்த்தனேயெனவும். ௬௨

நவிறருமமைநூலரிறபவோதிநலப்பொருடெளிந்தவந்தணர்செ
யவிபுடுவேள்விக்கைந்துமீத்தருளவானிளம்படர்தொறுஞ்செருத்தற்
குவிமுலைசுரந்துபொழிநறுந்தீம்பாலகுரைநதியெனத்தெருவொழுகுஞ்
சவிமணிமாடக்கராகளநகரந்தன்னிடைநகுலனேயெனவும். ௬௩

வெள்ளைநோக்களிக்கும்பிள்ளைமைப்பருவமிளிர்நகைமழலைமென்கிளவி
யொள்ளிழைமடவாரமுதமுதிரங்கவொளிர்மணிசிற்றின்மேற்கடவுந்
துள்ளுமான்சிறுதேர்மகாரினந்தம்முட்டொககமருடற்றுதனோக்கி
நள்ளலர்பனிக்குந்திறலமரேசநகர்வயிற்குமாரனேயெனவும். ௬௪

கருமுசுக்கனலியெதிரெதிருகளக்கவிழ்சினைமலங்கிமிக்குகுத்த
பெருகுதீஞ்சுவையமாங்கனிவருக்கைப்பெருங்கனிவாழைமென்கனிக
ளிருவிலாப்புடையும்வீங்கவாய்மடுத்தூண்டிளங்கருமேதிகண்படுக்குந்
தருநிரைப்பொதும்பாமொய்த்தெழுஞ்சததநதியெனுந்தலநதிமனெனவும். ௬௫

பொங்கொளித்தரளம்புறங்கொடுத்திரியப்பொழிகதிவானகைத்துவாவாய்
மங்கையர்குடைந்துதுளைதிலாலவமதுமலாக்குழன்மான்மதச்சாந்துங்
கொங்கைபங்குவட்டுக்குங்குமக்களியுங்குலாவியோசனைபலகமழும்
பங்கயவாவியுடுத்ததேவிகைப்பொற்பதிவயினுமாபதியெனவும. ௬௬

தீட்டுமோவியர்தங்கருத்தினுக்கடங்காச்சிற்றிடைப்பணைமுலைமடவார்
கூட்டரக்கணிந்தசீறடிப்பதுமங்குரற்றலைவண்டினம்பொங்கச்
சூட்டினரிரப்பப்புலவிதீர்ந்தணையிற்றுணைவரைப்பின்னிவேள்பகைவம
வாட்டுமொளிகைமிக்கோங்கியவெழினேபாளத்திற்பசுபதியெனவும். ௬௭

அறநெறிதிறம்பர்தரும்பொருட்பனுவலாரணமுள்ளவாதெளிந்து
முறுகியகழுமமூட்டுமுககுறும்பின்முதறுமித்திடைதெரியாத
பிறவிவேரறுக்குமுழுவலன்புடையார்பேணியெஞ்ஞான்றுமேத்தெடுக்குந்
தறையகம்புகழுமருட்சலலிங்கந்தனிற்சலப்பிரியனேயெனவும். ௬௮

துடிமருண்மருங்குற்பாரந்தபேரல்குற்றுணைமுலைத்தூநகைமடவா
ரிடிமருளியங்களியம்பநாடகங்களியற்றவார்கூந்தலின்வீழ்ந்து
வடிமலருகுத்ததேறலுந்தாதும்வயின்வயின்கிடந்தொளிர்வீதிக்
கடிமணங்கமழுங்கன்னிகாரத்திற்கணுத்தியக்கப்பிரானெனவும். ௬௯

வளர்சினைக்கொழும்பூங்கற்பகப்பொதும்பர்மணித்தழைபுழைக்கையின்வாங்கி
யளறுபட்டொழுகுமதக்கவுட்செறிந்தவளிக்குலமோச்சிவாய்மடுத்துக்
களகளமுழங்குங்குஞ்சரத்தொழுதிமுழைதொறுங்கண்படைகொள்ளும்
பளகறுமயிலைத்திருப்பருப்பதத்திற்பதமருள்களுதிபனெனவும். ௭0

அழுந்துபட்டழுங்குமழுவநீர்ப்புணரியலங்கொளிநித்திலக்குவையுங்
கெழுந்துகொள்பவளக்கொடிகளும்வளையுங்கோட்சுறக்குப்பையும்வரன்றி
யெழுந்தெழுந்தடங்குந்தடந்திரைக்கரத்தாலெறிந்தமருடற்றுநீள்புரிசைச்
செழுந்தனியிலங்கைத்திருத்தலவரைப்பிற்சம்புகேசச்சிவனெனவும்.

உரவுநீர்நரலையெல்லையினடங்கலூறியவூற்றுநீர்முழுதுஞ்
சுருசுருவெனவாய்மடுத்தபூந்தமரர்துன்றியவுலகெலாங்கருக
விரவிமேனிமிர்ந்தகனற்கொழுந்தழற்றவிரியொளிதிசைதிசைகனற்றும்
பெருகியவடவாமுகத்தினிற்கருணைபிறங்கியவனலனேயெனவும். ௭௨

அலந்தலந்தருள்வேட்டிரந்துநின்றேத்துமன்பருமளியிமிர்ந்தூது
மலர்ந்தபூந்தொடையலுடுத்தணிந்திறைஞ்சுமாந்தரும்வழுத்துபுதீஞ்சொற்
கலந்தபாத்தொடலைகுயிற்றிநன்கணியுங்கவிகளுங்குழாங்கொடுபோற்றப்
பொலிந்தபூதேசதலத்திடைவரங்கள்பொழிபற்பபூடனேயெனவும். ௭௩

பிணைந்தபைந்துளவநறுந்தொடைமார்பன்பின்மொழிந்தேவல்கேட்டுவப்ப
வணைந்தவர்தமக்குத்தண்ணருள்கொழித்துபபிறவிதோறுங்கவரீட்டுந்
தணந்துறுவினைவேரகழ்ந்துபேரின்பச்சலதியினழுத்தும்வான்கருணை
மணந்தகோடீசவயங்கொளித்தலத்துமன்னியசிரேட்டனேயெனவும்.

அஞ்சிறையமிழ்தத்தீஞ்சுவைப்பாடலறுபதநீலமொட்டவிழ்க்கும்
பைஞ்சுனைகுடைந்துமரவுரியுடுத்துப்பளிக்குவெண்ணீறுமெய்திமிர்ந்து
துஞ்சலுமுபிர்ப்புங்கடந்தபேரின்பத்துறைபடிமுனிவரர்வாழ்க்கை
பெஞ்சுறுப்புட்பகிரிநெடுவரைப்பிலிந்திரநாதனேயெனவும். ௭௫

திண்ணியவண்டமுகட்டினுக்கிவருந்திருத்தகுமால்பெனநிவந்த
வெண்ணிலாவரையுமுரஞ்சொலிதழங்கியீண்டியகண்டிரந்துகுக்குந்
தண்ணியதரளக்குவையொளிகளுற்றத்தவளமால்வரையெனத்தயங்கும்
புண்ணியம்பொலிந்தகந்தமாதனநற்பொருப்பினிற்பூர்ப்புவனெனவும்.

கொங்கொளிமணியுந்தமனியத்திரளுங்கோழரைச்சந்தனக்குறடுங்
கந்தமிகுயிர்க்குங்காழகிற்றுணியுங்கையரிக்கொண்டுவீழருவி
மைந்துடைத்திசையெண்கரிகளுநடுகுமண்டுபேரோதையினெழுகு
மந்தரநிவந்தவேமகூடத்தினமர்விருபாக்கனேயெனவும். ௭௭

அட்டொளிப்பவளப்பரவைநீர்ப்புணரிகடுகிண்டெழுங்கன்றசுடரும்
வட்டவெண்மதியுந்தாரகைக்கணமும்வானெறிவந்துதன்னடியின்
மூட்டமேக்கெழுந்துவையகமூன்றுமுனிதுயர்ப்படுத்திறுமாக்கு
மட்டுமிழ்சோலைமருங்குகால்வளைந்தவிந்தத்தின்வாராகனெனவும். ௭௮

சுண்ணமுமலருந்துறைதொறுமொதுங்கத்துடுமெனப்பாய்ந்துநீராடி
விண்ணவர்சிகரமாளிகைக்கிறக்கும்விளங்கிழைமாதரார்பின்றைத்
தண்ணறுங்கயத்திலோதிமவர்தந்தாட்சிலம்பொலிகவர்ந்தேகுங்
கண்ணகன்சவுராட்டிரக்கவினகரிற்சோமநாதப்பிரானெனவும். ௭௯

வேளையாட்பழிக்கும்பேரெழிலுருவமெல்லியன்மாதரார்தொடுத்த
பாளைவாய்கமுகினெடுமடற்பசும்பொனூசலைப்பட்டவின்றெழுந்த
வாளைமீனுதைந்துபரிந்துகீழ்வீழ்க்கும்வார்பொழில்படர்ந்துவானகத்துத்
தேளைமீப்பரிக்குஞ்சிறப்புவாய்சித்தர்காப்பிற்சித்தேசனெனவும். ௮௰

கறங்குவெண்டிரைகள்பிணங்குராய்த்தவழுங்கருங்கடன்மருங்குடுத்தகன்ற
வறங்குலாம்புவியினிருட்பகையொதுக்கியலங்கொளிக்கற்றைகால்பரப்ப
நிறங்கிளர்பரிதிவட்டமுமமிழ்தநிலாமதிக்கடவுளுமுடுவும்
பிறங்குமாகாயப்பெருநிலவரைப்பிற்றாரகாலிங்கமேயெனவும். ௮௧

பப்பிதழ்க்கமலப்பொகுட்டுள்வீற்றிருந்துபார்முதலுலகெலாந்தோற்றுந்
துப்பமர்கடவுடொடுகடற்பாயற்றுழாய்த்தொடைச்செம்மலேமுதலாஞ்
செப்பருந்திறலார்க்கல்லதுபிறராற்செலப்படாதாகியெஞ்ஞான்று
மொப்பருவளத்தானோங்குபாதாளத்தாடகேசப்பரனெனவும். ௮௨

தண்டுளிநறுந்தேன்வெள்ளநீர்படிந்துதமனியந்தகர்த்தெனமிளிரு
நுண்டுகட்கலவைதிமிர்ந்துமெல்லிதழூணுகர்ந்துதம்பேட்டொடுங்களித்துக்
கண்டெனமதுரவின்னிசைமிழற்றிக்கடிமலர்ச்சேக்கைகடோறும்
வண்டுகண்படுக்கும்வளம்பொழிற்றீர்க்காராமத்துப்பீமேசனெனவும்.

கருமலப்பகைஞன்வியங்கொளுமாட்டுக்கடுவினைத்தூதர்களலைப்ப
வெருவியுள்ளுடைந்துசெடியுடனிகளவிழுத்தொடக்குழந்துசோர்ந்து
குருமலர்ப்படையான்கொளுத்துவெங்காமத்தழற்குளியாதசீரடியார்
மருவியேத்தெடுக்குநிரந்தரவரைப்பின்மன்னியசீதளனெனவும். ௮௪

மேகம்வந்துறங்கும்விரிதலைப்பாளைவிரைகுலாய்நித்திலமுகுக்கும்
பூகமென்பொதும்பர்ச்சூழலின்மறையிற்புல்லியவிளிமொழிமடவார்
பாகடுசெருக்கிற்களிறனார்வரவுபார்த்தொருசிறைத்தனிநிற்கு
மாகர்போற்றிசைக்குஞ்சாகளவரைப்பின்வளர்கபர்த்தீசனேயெனவும்.

காந்துபொன்றகர்த்தபராகமேற்சிதர்ந்தகாட்சியிற்றிதலைபூத்தலர்ந்த
வேந்திளமுலையார்கந்துகம்புடைக்குமேர்குலாமாட்டினைநோக்கிப்
பூந்துணர்ப்பொதும்பர்மந்தியுநரந்தப்புதுக்கனிப்பந்தடித்தாடுந்
தேந்தவழிடபவனிப்பெருந்தலத்திற்றிருசியேசப்பிரானெனவும். ௮௬

குளைபுனற்றரங்கங்குரூஉமணிகொழித்துக்குளிர்மலரலைக்குநீளிலஞ்சிக்
களையகங்கவின்றவிணர்ப்பசுங்காஞ்சிக்கடிமலர்கருங்குயில்குடையத்
தளையுகுநிலச்செழுந்துகளுளர்காறகர்ப்பமீப்பொங்கியெண்டிசையும்
விளைகமழ்ந்தொளிருஞ்சுசீந்திரவரைப்பின்விசுவசாக்கிப்பிரானெனவும்.

அஞ்சனவரைகடளைத்தெனக்கூடத்தருந்தொடர்த்தொடக்கியவேகக்
குஞ்சரமுழக்குக்கெதிரெதிர்மறலிக்கொடிநிரைமாடமேற்றவழு
மஞ்சினமுழக்குமணிநெடுவீதிவயின்வயின்மணிமுழாவுரப்பப்
பஞ்சின்மெல்லடியார்நாடகங்குயிற்றும்படிகையிற்பரமேசனெனவும்.

நறவுகொப்புளிக்குந்தாளதாமரையினறிதழ்கிழிதரவுகளு
மிறவுகொப்புளிக்குந்தீர்த்தநீராடியிலங்குவெண்ணீறுமெய்தோய்ந்து
துறவுகொப்புளிக்குமனங்கொளாவன்பிற்றுன்னியேத்தெடுக்குமாதவத்தோ
ருறவுகொப்புளிக்குமொண்மைசால்ககுலாச்சிரமத்திற்ககுவேசனெனவும்.

துண்டவான்மதியிற்சுடர்ந்தவானுதலார் துவன்றினர்கொழுகனைச்சோலை
வண்டலாட்டயர்ந்தவயின்வயினவர்தமணிமுலைச்சாந்தமுந்தொடியுங்
கொண்டனோர்கூந்தற்றொடலையுங்கிடந்துகுறுகியவிளைஞரைத்தணத்தல்
கண்டிடாவியப்பிற்கவின்றசீகண்டிதனிற்சிவசங்கரனெனவும். ௯௰

சங்கினமுயிர்த்தநித்திலம்வரன்றித்தமணியங்கொழித்துவார்ந்தொழுகிக் [ம்
கொங்கலர்ப்பொதும்பர்ச்சுண்ணமுந்தளிருங்குலாய்த்துறைதொறுமெழில்கஞற்று
பொங்குவெண்டரங்கமுகலியாறடிக்கட்போர்ப்பநீண்முடிக்கண்வான்செழுநீர்க்
கங்கைபோத்தொளிர்தென்கயிலைமால்வரையிற்காளத்திநாதனேயெனவும். ௯௧

குளிர்புனற்சாலிப்பசும்பயிர்க்கிளைத்தகொழுங்கலைகட்பவந்தணையு
மிளிநறுங்கிளவியுழத்தியர்வாக்குமிளநறுந்தேறல்வாய்மடுத்த
களமர்கள்வரோடளவளாய்ப்பொதும்பர்க்கடிநிழற்பயின்றுபண்பயிற்றும்
வளவயலுடுத்துவயங்குபாசூரின்வாசிலிங்கப்பிரானெனவும். ௯௨

உடுவணிகுடுமிப்பெருவரைக்கரிகளொலிகெழுநறும்புனற்பழன
நெடுவயற்கருப்பங்காடழுத்தருந்திநிறைமலர்ப்பூந்தடமுழக்கித்
தொடுகடன்முகந்தகருமுகிறவழுந்துறுடைக்கானகத்துறங்கும்
வடுவறுதவத்தோர்வழுத்துசீராலங்காட்டினில்வடேச்சுரனென்னவும்.

காந்தளஞ்சிலம்பிற்சரிக்குமால்யானைக்கதிர்மணிக்கோடுகொண்டெறிந்து
தேந்துணர்த்தருக்கண்மலர்மணிகனகத்திரள்சுழித்துந்திவார்கரைக
டாந்திரைக்குலத்தாலிடித்திரைத்தொழுகுந்தடம்புனற்பாலியின்மருங்கு
வாய்ந்தசீர்விரிஞ்சைமாநகர்வரைப்பின்மார்க்கசகாயனேயெனவும். ௯௪

நறுந்தழையுடுக்கைநிதம்பமால்யானைநகைமருப்பீர்ந்தகோற்றொடிக்கை
மறந்தழைபடைக்கட்கொடிச்சியரிளமைமகளிர்கஞணங்குவாலறைக்க
ணிறந்தழைதினைகள்கொறிப்பமுன்றூவிநெடுஞ்சிறைமஞ்ஞைபைங்கிளிகள்
புறந்தருநீர்மைபிறங்கியபூர்வாசலத்தின்மாசம்புவேயெனவும். ௯௫

முடைபயில்கயவாய்க்கூருகிர்த்தடந்தாண்மொய்யெறுழ்க்கொடுவரிப்புலியு
மடைந்திறந்தொழுகுங்கலுழிமும்மதத்துமணிமருப்பொருத்தலுமறலி
யிடைதராதுடற்றுஞாட்பிடைக்கிடந்தவெரிமணிதசர்ந்தநுண்பொடிபோய்த்
தடையவிண்கதிர்க்குந்திருக்கழுக்குன்றிற்சந்திரசேகரனெனவும். ௯௬

மோழலங்கருமாக்குழுவுமொய்க்கிடையாழுவுமாத்திரள்கஞமெதிர்ந்து
கேழலர்ப்பொதும்பாச்சினந்தமருடற்றக்கிளர்ந்தபேரோதையைவெரீஇயச்
சூழலினுறங்குந்திருகுகோட்டிரலைத்தொழுதிமிக்கிரியல்போயொளிக்கு
மேழலங்குலகமிறைஞ்சணுமலையினத்திகிரீசனேயெனவும். ௯௭

சூழித்தோற்குலமுங்கலினவாம்பரியுந்தூண்டிவந்தரையர்கணெரிய
மூழித்தேந்தொடையுங்கனகமுமீணியுமுழுவதுமணிந்துவானளக்கு
மாழித்தேருருளுமகன்மணிவீதியகமெலாமலங்குவெண்ணீற்றுப்
பூழித்தோளடியார்போற்றுமாரூரிற்புற்றினந்தீசனேயெனவும். ௯௮

அள்ளிதழ்க்கமலம்பூத்தரக்கெறிந்தவகவிதழ்க்குமுதம்வாய்நெகிழ்ந்து
வள்ளைகள்படர்ந்துகயலினம்பிறழ்ந்துவாளைமீன்றூவிமுத்தலங்கித்
தெள்ளிசைச்சுரும்பருளாந்துநோக்குநர்தஞ்சிந்தையைக்கவர்ந்துகொள்கயங்க
ணள்ளுவெண்காட்டுநகர்வயிற்பூத்திப்பிரியநற்பெருந்தகையெனவும்.

கொங்கொளித்தாளக்குருஉமணியிமைக்குங்கொழிதிரைக்கடன்முகட்டொளிருஞ்
செந்துவர்க்கொடிகள்வேட்டவரெளிதிற்கவர்தரச்சேணிவந்தோங்குங்
கந்தமாதனத்துக்கவிழ்சினைக்கோட்டுக்காழகிற்றருத்தொறும்படருஞ்
சுந்தரம்பொலிந்தசேதுவிலிராமேச்சுரத்தனிச்செம்மலேயெனவும். ௧௦௦

அழிபுனற்புணரிகுறையவாய்மடுத்துண்டார்த்தொளிவிறப்பமின்கான்று
பொழிமழைத்துளியும்புரிமுறுக்குடைந்தபூஞ்சினைமலர்த்திரளுகுக்குங்
கழிமதுத்துளியும்வேற்றுமைதெரியாக்காவுவிண்ணிவந்துபல்வளனுந்
தழுவியவழுவூரெனுந்திருப்பதியிற்சம்புநாதப்பிரானெனவும். ௧௦௧

ஏதமல்கிருண்முற்றிரித்துவிட்டிருத்துமிருவினையொப்புவாய்பருவ
மேதகவடுத்தமாதவத்திறத்தோர்விரைமலர்க்கருங்குழற்செவ்வாய்ப்
போதனநெடுங்கண்மனைவிபொன்னிலமும்பொருக்கெனவகத்தினிற்றுறந்து
சாதலினிறைஞ்சும்வியாக்கிரவனத்திற்கருணைசெய்பர்க்கனேயென்வும்.

தேம்புதுண்மருங்குற்சிதாரிநெடுங்கட்டிதலைவெம்முலைமடமாத
ரோம்பியகலவிப்பூசலிற்கோவையொளிவடங்கண்பரிந்துக்க
தேம்பரிந்துயர்ந்தபல்வகைமணியுஞ்சுடர்ந்துவானுடுவெனமருளப்
பூம்பசுங்கிரணமாடமோங்காதிபுரிவயிற்சிவபிரானெனவும். ௧௦௩

சங்கினமுழங்கும்பொய்கையம்புனலிற்றளிர்க்கையிற்சங்கினமுழங்கப்
பொங்கரிவிழியாராடலுமெழுந்தபூந்திரையாங்கவருகுத்த
குங்குமச்சேறுமான்மதச்சாந்துங்குப்பையாய்த்துகள்படுந்துறைகண்
மங்கலம்பொலியக்கழூஉந்திருப்பவளவனத்திற்சோமனேயெனவும். ௧௦௪

இளவனத்தொழுதியிறவுதேர்ந்தருந்துமீர்ம்புனற்செழும்பணைதோறுங்
களமர்கள்விளைக்கும்பசும்பயிர்க்கிளைத்தகடிமலர்க்கொழுங்களைமுழுது
முளர்சுரும்போதியுழத்தியர்களைந்தங்கோச்சியகுப்பைநீண்மலையின்
வளர்திருமல்லநகர்வயிற்சோமபூடணவள்ளலேயெனவும். ௧௦௫

மாழைவாண்முகத்துமடநலார்தகரமணிக்குழன்மடுக்கும்வார்புகையும்
பூழைவாய்திறப்பமிக்கெழுங்கமழூட்டுபொன்மாளிகைப்புகையுங்
காழிலூணமைக்குமட்டில்வாய்ப்புகையுங்கஞலிவிண்ணிவந்துமாமேருச்
சூழும்வாள்கரக்கும்பூதிகாத்துவாரப்பதிவயிற்றூர்ச்சடியெனவும். ௧௦௬

ஆலைபாய்களமர்திரட்டியதிரளையள்ளிவாய்மடுத்துணுங்கடுவன்
சோலைவாய்ச்சிலதரிருலழித்தமைத்ததூக்குடத்தேறலும்பருகி
மாலைவாய்மாடமேனிலத்திவர்ந்துமந்தியையிறுகுறத்தழுவி
யேலவான்கலவியின்பமீத்திளைக்குமதுரையிற்சுபகனேயெனவும். ௧௦௭

தாளதாமரையின்வயிறுளைந்தலறிச்சங்கினங்கருவுயிர்தடத்து
வாளைபாய்ந்தெழுந்துபன்முறையலைப்பமலங்கிவானின்றுமண்ணுக்க
கோளெலாம்பொய்தன்மடந்தையருகுத்தகுருஉச்சுடர்மணியொடும்விரவி
நாளுமேர்பிறங்குங்காவுசூழ்நாகேச்சரத்துநாகேச்சரனெனவும். ௧௦௮

நெருப்பவிர்ந்தனையநெட்டிதழ்க்காந்தணிரைநிரைமலர்ந்ததாழ்வரையி
னுருப்பொலிந்தெழுந்தபசும்பொழிற்றருவினொண்மலர்மடைதிறந்தொழுகு
மருப்பெருந்தேறன்மணிபலவரன்றிவயங்குவீழருவியோடிழியுந்
திருப்பொலிகுவட்டுத்திருச்சிராப்பள்ளிவரைப்பினிற்சிலேசனேயெனவும். ௧௦௯

உடைதிரைகறங்குமோதையின்வெருவியும்பரினெழுந்தகெட்டுடன்மீன்
கடவுளர்படிமந்தாகினிவிழுந்துகங்கைநீர்த்திரையினும்பயந்து
வெடியெழுந்தண்டமுகட்டினைப்பொதிர்த்துமேக்குறவுருவியப்புறத்து
நெடுவனத்துகளுந்தடம்படுமயூரகிருத்தத்தில்வாகீசனெனவும். ௧௧0

பெருகுவெங்கரடக்கடம்பொழியொருத்தல்பிளிறியபேரொலியவியக்
குருமணிச்சிகரமாளிகைதோறுங்குரைத்தெழுங்கடிவினைத்திறத்துத்
திருமலிமுரசத்திரளுமிழோதைதிரைகடற்சும்மையோடிகலு
மருமணவீதிபொழுகுசித்திதியின்வளரகத்தீசனேயெனவும். ௧௧௧

கோற்றொடிகறங்கமேகலையலம்பக்குழற்கருவண்டினமொலிப்பக்
காற்றலைச்சிலம்புசிலம்பவேர்பொடிப்பக்கன்னியர்சிவிறியினிறைய
வேற்றனர்தம்முண்மறலிமிக்கொழுக்குமீர்ம்பனிக்குங்குமச்சேறு
மாற்றருவீதிமணங்கமழ்சத்திவனத்தினிற்சுபவுவேயெனவும். ௧௧௨

தூம்புபட்டுகேந்துபலவரைதழுவிச்சுடர்மணித்திரணரன்றுகுக்குங்
காம்பினங்குழையக்கவிழ்கடாங்கமழுங்கையினலைவாய்குபுவிடுத்தங்
காம்பலாட்டயருமருவியங்குவட்டினவிர்மணித்தோகைமாமயில்க
டாம்பயின்றாடறணந்துருக்காரிசயிலத்துவாலீசனெனவும். ௧௧௩

மந்திகளுகளுஞ்சந்தனப்பொழிலின்மாதவர்தேர்தொறுங்கேட்டுக்
கொந்தலர்ச்சினையிற்பைங்கிளிகிளக்குங்குளிர்மொழிச்செந்தமிழ்முழுது
மந்தரர்பயின்றுவழங்கலாலமரருலகமுஞ்செந்தமிழ்நாடாய்ச்
சுந்தரம்பொலியுந்தூமணிப்பொதியவரையிற்சிபத்திரனெனவும். ௧௧௪

சேடுவாய்ரவச்செழுமணிவரன்றித்தேங்கிருட்பொதும்பரினகத்துத்
தோடுசூழ்விளக்கினுறுத்திமென்மலருஞ்சுண்ணமுந்துதைந்துவாரந்தொழுகி
யாடும்வாளரிக்கணங்கலார்கூந்தலணிந்துலாங்குகநதிக்கரையிற்
பீடுவாய்திருவோத்தூர்வயினத்தியாபகேசப்பிரானெனவும். ௧௧௫

கயின்மணிக்குழையுங்கதிர்த்தபொற்றேடுங்காம்புறழ்தோளினூன்றலைந்து
வெயிலுமிழ்ந்திலங்கும்வார்செவிமடவார்மிழற்றுதீங்கிளவிகடேர்ந்த
புயலுகள்பொதும்பர்ப்புதுமலர்ச்சாகைப்பூவைகள்கிள்ளைபைப்பயிற்று
முயர்மகாப்பிரபைநகர்வயிற்செகலாபப்பெயருத்தமனெனவும். ௧௧௬

பலியினுலைழற்றும்பசிப்பிணியிரவும்படரொளிமன்றுகாட்சியிறு
னலியவேமுறுக்குமாணவவிரவுநகைமணிமாளிகைப்பொருப்பா
லொலியிருட்பிழம்புதூங்குகாரிரவுமோம்பிமெய்யருண்மயமாகி
யிலகுறும்புண்டரீகமாபுரத்திலேமசபாபதியெனவும். ௧௧௭

கடலெனமுழங்குமுரிதிரைப்பணிப்பூங்கயமெடுத்தோச்சும்வால்வளையின்
சுடர்மணித்தொகையும்பகடுபோக்கியநெற்றூற்றலின்வேறுபட்டொதுங்கி
யடர்தருசெங்கென்முத்தமும்வயின்றேறவிரொளிவிண்ணகங்காறும்
படர்பரமேசமங்கலவரைப்பிற்பஞ்சநதீசனேயெனவும். ௧௧௮

பொறிவரிச்சுரும்பர்புரிமுறுக்குடைத்துப்புதுநறுப்பருகியாட்டயருந்
துறுமலர்ப்பொதும்பர்சுடர்வெயிறுமியப்பொதுளலாற்றூங்குபேரிருளைப்
பறைதரவொதுக்கிப்பாயொளிகதிர்க்கும்பன்மணிமாளிகையுடைத்தா
யிறைமைபெற்றோங்குங்கச்சியேகம்பத்தேகம்பநாதனேயெனவும். ௧௧௯

சிறந்தெடுத்துரைக்குமினைய நூற்றிருவாற்றலத்துளுஞ்சிறந்ததாற்பாவ
மறந்தபழுருக்கிமுத்திவீடெளிதின்வழங்குசீர்க்காஞ்சிமாநகர
நிறந்தழைமதியமலைத்தவரவ்வத்தலங்களினிகழ்தரப்பரித்த
வறந்தழைபெயருளதிகமாயோங்குமேகம்பநாதனென்றருட்பேர். கஉ௦

எண்ணியதெதுமற்றஃதலால்வேறென்றெய்துறுதெழில்வளரேனைப்
புண்ணியதலத்துவதிந்தருள் புனிதமூர்த்தியைப்போற்றுவார்தமக்குக்
கண்ணியதலத்துநால்வகைப்பொருளுங்கணத்தின்வந்தெய்துறுங்காஞ்சி
யண்ணலந்தலத்துமுளைத்தவேகம்பநாதனையன்பினேத்துநர்க்கு. கஉக

வைத்தவேற்றடக்கைவள்ளல்வார்கம்பைமணிப்புனனதிக்கரைமருங்கு
பத்திவாய்ந்திறைஞ்சியேகம்பநாதப்பவனிடைக்குருமொழிகேட்டுத்
தத்துநீர்வரைப்பின்மேதகுங்காஞ்சித்தனிநகர்காவல்பூண்டின்ப
முத்தியீத்தருளுங்குமரகோட்டத்தின்முகிழ்த்தபேரருளின்வீற்றிருந்தான். கஉஉ

இளநறுந்தளிர்கடுவென்றிமட்டுகுக்குமிணர்ப்பசுமாவடியமர்ந்த
வளவிடற்கரியார்பெருமையையொருவர்க்களவிடலாகுமேயிமைக்கு
மொளிமணிகுயின்றசிகரமாளிகைகளோங்கியகச்சபாலயத்துச்
களைகணுயருளுங்கச்சபாலயர்தமேன்மையைக்கட்டுரைத்திடுவாம். கஉங

கலிவிருத்தம்.

பின்னுதிரைவார்ந்தொலிபிறங்குபுனல்வெள்ளம்
பன்னகமெருக்கிதழிபாசறுகுதிங்க
ளன்னவெவையுங்கலவியாரழகுதோற்றி
மின்னுகமிலைத்தமுடிவேணியவர்மேனாள். கஉச

புலத்துயர்சிறப்பருண்மறைப்பனுவல்பூத்த
நலத்தகுமனக்கொடியினுனுமெறுழ்நாகக்
குலத்தையறமோதுமுவணக்கொடியினுனும்
வலத்தினுமிடத்தினும்வரக்கருணைசெய்தார். கஉரு

வெந்தபொடிபூசிமிளிருந்தமதுமெய்யின்
வந்தவிருதேவருண்மலர்த்தவிசினுனுக்
கந்தமில்படைப்புமாவத்துயிலினுற்கு
மைந்துடையகாவலும்வழங்கினர்மறைந்தார். கஉசா

தேக்கமலவட்டவணைசேக்குமறையாள
னாக்குதல்புரிந்துமொளிதுன்றுமுலகங்க
ளாக்கும்விரகெய்திலனிதாவதெவனென்னு
மாக்கவலையுற்றனன்மதித்திதுதணிந்தான். கஉஎ

வஞ்சிபுரையுஞ்சிறுமருங்குறளர்வெய்த
விஞ்சியெழுபூண்முலைவெளம்புயமினுளோ
டிஞ்சியுமலர்ப்பொழிலுமெங்கணுமிவர்ந்து
மஞ்சிதவழ்காஞ்சிவளமாநகரணைந்தான். கஉஅ

காலையுநடுப்பகலுங்காய்பரிதிமாய்ந்த
மாலையுமிறைஞ்சுநர்வழுத்துதுதியோதை
வேலையொலிமிக்கவியவிம்மியெழுகச்ச
பாலயநுழைந்துபடர்பேருவகைபூத்தான். கஉகூ

தத்துதிரைவீசுதரளந்திவளுமிட்ட
சித்திரநறுநீர்முறைதிளைத்தினிதுதோய்ந்து
பத்தியினழற்கையரனாரடிபணிந்து
மெய்த்தலமுயற்சியின்வியத்தகவிருந்தான். ௧௩0

மாசறுதவம்பலபுரிந்துவழியாற்செய்
பூசனையுவந்துபுரமூன்றுமொருபோதினீ
றேசவிருமூரள்கொடுசிந்தியருள்பாவ
நாசருமைமாதொடுநலக்கவெதிர்போந்து. ௧௩௧

அடக்கருமகிழ்ச்சியினெழுந்தடிவணங்கி
நடிக்குமலர்மெல்லிணைநரைக்குடுமியானைக்
கடைக்கண்மலர்பொங்குகருணைக்கடலழுத்திப்
படைக்குமெறுழும்பிரமனன்பதமுநல்கி. ௧௩௨

மைபவிரியக்கிளரும்வாணகையரும்ப
ஐயுமிடைநங்கைமுகநாண்மலரைநோக்கி
வெய்யபடைநோக்கிவிரைநீரினபிடேகஞ்
செய்திவனைமேதகவிருத்துமெனச்செப்பி. ௧௩௩

சங்கினமுழங்கவிசையாழ்தலைமயங்கக்
கொங்கலர்பொழிந்தமரர்கூடிமகிழ்தூங்க
மங்கலவிழுக்கலசவாசநறுநீரா
லங்கவன்முடித்தலையினாட்டியருள்செய்து. ௧௩௪

ஏசில்புவிக்கும்பரினெண்கோடிசிவலோக
வாசினகருக்கடியிற்கோடியறுநான்கி
யோசனையிற்சத்தியவுலோகமியைவித்துப்
பேசருவளத்தொடுபிறங்கவண்வைத்தார். ௧௩௫

இன்னணமலர்க்கடவுள்பூசனையியற்றி
மன்னுபதமெய்தலின்வயங்குபிரமேச
னன்னர்பிரமாபுரமெனப்பெயர்நடந்த
மின்னுசடையார்க்கும்வியன்காஞ்சிநகருக்கும். ௧௩௬

கலிநிலைத்துறை.

மணமல்கியகற்பகமாலைமணந்ததிண்டோட்
டிணிமல்குபடைக்குலிசத்திறன்மன்னனோர்நாட்
கணமல்கியவிண்ணவர்கைதொழுதேத்தவொண்கே
ழணிமல்கயிராவதமூர்ந்துலாப்போதலுற்றான். ௧௪௭

அவ்வேலையருந்தவமாற்றியரட்டுயிர்க்கும்
வெவ்வாய்மலவாளரவைத்தபவீட்டுமேலோன்
செவ்வாய்மைமிகுந்துருவாசனலர்ந்தசீர்த்தி
யெவ்வாய்நிரம்புமருந்தவனங்கணுற்றான். ௧௩அ

மறுவாய்ந்தமனத்தினனாகிமதித்திலாத
விறுமாப்பினைநோக்கியெழுந்துவெகுட்சிதுள்ளத்
தெறுதீத்திரள்சிந்துமலர்க்கணனாகிவல்லே
யுறுசாபமுறுத்தினனெய்யெனநீங்கினனால். ௧௩௯

நிறைவாய்மொழியந்தணனிட்டருள்சாபநீரா
லிறைவாய்ந்தவனீடறுசெல்வமெலாமுலந்து
குறைவாய்ந்துகல்கூர்ந்துளைந்துகுழைந்துசாலப்
பிறைவேய்ந்தபிரானடிபோற்றுபுபெட்டிரந்தான். கசO

காலன்றபமென்கழலாலுதைகண்டுவேலை
யாலங்களம்வைத்தமரர்க்கருள்செய்தபெம்மான்
கோலந்தழைமங்கையொர்கூறுகுலாவநின்றச்
சீலந்தழையிந்திரன்முன்னிதுசெப்புகிற்கும். கசக

துன்னுதவர்நெஞ்சுதுயக்குறுகொற்றவெள்வேன்
மன்னுமறுவற்றவருந்தவவாய்மைபூண்ட
கொன்னுர்துருவாசனங்கூற்றினெர்கூறுகண்டா
யன்னுனிடுசாபமற்றின்றினகன்றிடாதால். கசஉ

வேறு.

விண்ணத்துயர்மந்தரவெற்பெனுமத்துநிறீஇத்
தண்ணித்திலவேலைகடைந்தமிழ்தந்தனைநொண்
டுண்ணத்தெறுசாபமுலக்குமவ்வொள்ளமிழ்துங்
கண்ணற்கலதியாவரினுங்கடையப்படாதால். கசங

நம்மானையினுகணைநாரணனைக்கொடுபோய்
விம்மோதையினுர்கலிவெள்ளமிழ்தங்கடையென்
றெம்மானருள்செய்தலுமேத்தியிறைஞ்சியேகி
யம்மாலையணைந்தவனுற்றதறைந்துநின்றான். கசச

வலனுருயிரட்டதிறற்படைமன்னன்வந்து
சொலும்வாய்மொழிகேட்டலுமோகைதுளும்பிவல்லே
கலவாருளமஞ்சுகதிர்த்திகிரிப்படையான்
சிலைதாங்குமுபாயமென்னென்றுசிந்தித்தறிந்தான். கசரு

மோட்டாமையுருக்கொடுகாஞ்சியின்முன்னிவண்டின்
பாட்டார்மலரிட்டசித்திப்பகுநீர்படிந்து
சேட்டாரணவாகமநூன்முறைதேவதேவன்
றாட்டாமரைதாழ்ந்தெறும்பெற்றமுதங்கடைந்தான். கசசு

திருமால்கமடத்துருவாய்ச்செயிர்தீர்ந்தவன்பிற்
பெருமானடிபோற்றுமச்சூழல்பிணிகரும்வெங்நோ
யொருவாவருளுய்த்தருள்கச்சபேசப்பெயர்பெற்
றிருமாநிலமேத்தவிலங்கியதென்றுமாதோ. கசஎ

எக்காமமுநன்கருளிட்டசித்தித்தடாக
மெய்க்காமருதீர்த்தமுமேதகுபூசையாற்று
மக்கூர்மவராத்துயிலான்படிந்தாடுநீராற்
பொய்க்காழ்தபுகூர்மகுண்டப்பெயர்பூண்டதன்றே. கசஅ.

கலிவிருத்தம்.

குருதியம்பிழம்பிற்குளித்தாலெனப்
பெருகுசேயொளிபில்குசெழுங்கதி
ருருவவேழ்பரியொண்மணித்தோச்செழும்
பரிதிவானவனுக்குப்படர்ந்தனன். கசகூ

அலவன்பேட்டெனம்புயச்சேக்கைமேற்
குலவிக்கண்படைகொள்ளுதொறுந்துயி
லுலேயவித்திலவொண்மணிவெண்டிரை
யலேசெயிட்டசித்திப்புனலாடினுன். கரு௦

ஆலமுண்டவடிகளடிகளேச்
சீலமல்குதிறத்தினருச்சியா
வாலுமன்பினனுயிரமாண்டவட்
சாலுமெய்த்தவமாற்றித்தவிர்ந்தனன். கருக

வன்பருக்குமறைந்தருள்வள்ளலார்
பொன்பிறங்குபுணர்முலேமாதுட
னன்புசெய்யுமவன்முன்னணேந்தரு
ளின்புபொங்கவரம்பலவீகுவார். கருஉ

தோடுகொண்டசுரர்க்குமிமைத்துமிக்
காடவாட்கணலங்கியிருட்பகை
சாடுகின்றதம்மெய்யொளிதன்னிலோர்
கோடிகூற்ெருருகூறுகொடுத்தனர். கருஙு

ஏர்த்தகாலம்பகுப்பதற்கேதுவாய்ச்
சீர்த்ததேவர்க்குமுன்னவனுய்த்திருச்
சார்த்தும்வேதவடிவாய்த்தமக்குமோர்
மூர்த்தியாம்வரமும்முகந்தீத்தனர். கருச

தந்தபல்வாத்தோடுதண்டாவகை
யந்தில்வாழவும்பெற்றவட்டன்னடி
வந்திப்பார்க்குவரந்தானளிப்பவு
மெந்தையாரருளாலெய்தினனரோ. கருரு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருள்கால்சீத்துச்செக்கரொளியெறிக்குங்கிரணச்செழும்பரிதி
பொருள்கால்யாத்தநான்முறையாலிவ்வாறிறைஞ்சிப்போற்றுதலான்
மருள்காலனுக்கிக்கதியருளுமார்த்தாண்டேசத்திருப்பெயருந்
தெருள்காலுளத்தோர்க்கள்ளுறுந்தேவரிறைவரினிதீணிந்தார். கருசு

தூங்குதடக்கையொருகோட்டுத்துணைத்தாள்வேழப்பெருமானுங்
கோங்குநிகர்த்தமுலேபாகர்கொழுந்தாட்கமலம்பூசித்துப்
பாங்கிலவுணப்படைசவுட்டிப்பரவுவார்க்குவரமருளி
யாங்கமகிழ்வாலேஞ்சந்திப்பிள்ளேயெனவங்கினிதமர்ந்தான். கருஎ

செவ்வாய்மழலேத்தேன்றுளிக்குந்தேவியொருபாலிடங்கொண்ட
கைவாரணத்தினுரியானைக்கழற்ருட்கமலம்போற்றிசைத்து
மைவானனேயகருமேனிவயங்கச்சிலம்புகலகலப்ப
வெவ்வாய்ஞமலிப்பரியூருமிறையுமங்கண்வீற்றிருந்தான். கருஅ

தவளமுறுவற்கவுரியுருத்தன்னிலுயிர்த்தகன்னியுமைக்
குவளேக்களத்தார்தமைப்போற்றிக்கொடுந்தானவரைச்சினந்திறுத்துத்
துவள்சிற்றிடைப்பூண்முலேக்காமக்கண்ணிதுணேத்தாடினமிறைஞ்சித்
திவளுமணிகள்கிடந்தொளிரத்தெய்வவரைப்பினினிதமர்ந்தாள். கருசு

கருணைகொழித்துப்பிணிதூக்குங்கச்சபேசப்பெருமானார்
பெருமைசிறிதிங்கெடுத்துரைத்தாமுழுதும்பேசவல்லுநரார்
பருவமுகில்கள்கிடந்துறங்கும்பணிப்பூம்பொழில்சூழ்காரோணத்
தருளானந்தப்பெருவாழ்வின்பெருமையுரைத்தெம்பவமீறப்பாம். ௧௬0

வேறு.

மன்னுயிர்த்தொகுதியாவுமறுகிமாழாந்துசாம்ப
முன்னொருகற்பததந்தமுன்னலுமதனையஞ்சிப்
பொன்னவிர்மருமத்தானும்புரைமறைப்பனுவலானு
மென்னினியுய்யுமாறென்றெண்ணினர்துணிவுகண்டார். ௧௬௧

கழைசுழிகளிநல்யானைக்களகளமுழக்குநீல
மழைமுகின்முழக்குந்தம்முண்மாறுகொண்டுலம்புஞ்சோலை
யிழைவளர்முலைமினார்களீண்டினர்நாளும்பொய்தல்
விழைதருங்காமபீடவியனகர்துனைந்துசார்ந்தார். ௧௬௨

கூவிளமரத்தின்மாட்டுங்கோழரைப்பலாசின்பாங்குத்
தீவியசங்கதீர்த்தங்குண்டிகாதீர்த்தந்தொட்டு
மூவர்கண்முதல்வன்றன்னைமுறையுளிவழிபாடாற்றித்
தாவறுதவங்களேணற்றுத்தணப்புறுவன்புசெய்தார். ௧௬௩

பூசனைக்கிரங்கிமுக்கட்பூரணரெதிரேதோன்றி
யாசுநீரஞ்சல்வேண்டாவம்மினென்றவரைக்கையால்
வாசமிக்குயிர்த்தகொன்றைமலர்ச்செழுந்தொடலைபூண்ட
பூசறுமணித்தூணன்னபுயங்களினேற்றிக்கொண்டார். ௧௬௪

இலவிதழுமையாள்பாகரியக்கியவாணையாற்றன்
மலைபலசிதறுமாறும்வாரிதிபுரளுமாறு
முலகுமுற்றழியுமாறுமுயிர்த்தொகையொடுங்குமாறும்
விலகிவில்லுமிழும்பூணார்நோக்கிவிம்மிதத்தரானார். ௧௬௫

செயிர்படுகடைநாளெல்லைதீர்தலுஞ்செறிந்தவெண்ணி
லுயிர்களுக்குயிராயோங்கியுலகெலாமருளிற்றூங்கி
மயர்துமித்தின்பநல்கும்வள்ளலார்தோளினின்று
மயர்வொழிந்திளிதுவைகுமவர்தமையிறக்கிவிட்டார். ௧௬௬

மறுவலுமுலகமெல்லாமன்னுதற்பொருட்டன்னோர்க்குக்
கறைகபுபடைப்புக்காப்புத்தொழின்மையுங்கருணைசெய்தா
ரிறைவரிவ்வாறுதேரிளிலேற்றலாலனையவைப்புப்
பிறவிநோயனுக்குங்காயாரோகணப்பெயர்பூண்டன்றே. ௧௬௭

கழுதுகண்படுக்குநீலக்காரிருளிரவினூடுந்
தொழுதகையெம்பிரானார்தூமணியுருவந்தீண்டும்
பழுதிலார்க்கனையபேற்றூற்பவந்தருமலநோய்நீங்கி
முழுதுமொர்வடிவாய்த்தோன்றிமூதுலகலைத்ததம்மா. ௧௬௮

மறந்தனதானமுற்றுமயங்கினதவங்களீட்ட
மிறந்தனவிரக்கநீர்மையிழந்தனமறையினீதி
பிறந்தனகொடுமையாவும்பிறங்கினபாவக்குப்பை
யிறந்தனவல்லவெல்லாம்வெருவினவுயிர்கண்மாதோ. ௧௬௯

ஒழுக்கமிவ்வாறுசாலவுணங்கலுநோக்கிவல்லே
கழுக்கடைபடையார்நெற்றிக்கண்ணினவ்வடிவைநீற்றி
விழுக்குருநீற்றைச்செய்யமேனியிற்றிமிர்ந்துகொண்டா
ரழுகசுறுத்துலகமெல்லாமருட்பெருங்கடலின்மூழ்க. கஎ0

பஞ்சியின்மிதிக்குங்காலும்பனிக்குநூபுரமென்பாத
வஞ்சிநுண்ணிடையார்காமமயக்கறுமுனிவரெல்லாம்
பஞ்சமுத்திரையினேடுமெத்தகுபளிக்குப்பூதி
விஞ்சமெய்யணிந்துவையம்வியக்குமாவிரதரானுர். கஎக

காளகமிடற்றுமுக்கட்கதிர்மதிவேணிநாதர்
வாளுமிழனையபூதிமணியுருவயங்கப்பூசிக்
கோளறுயோகபீடத்திருந்தருள்கோலவைப்புக்
காளுநற்பெயர்மற்றம்மமாவனமாகுமன்றே. கஎ௨

பின்பராக்கிடக்கைமாயன்பேரறிவுடையனுகி
யன்புமீக்கிளேப்பவிலலத்தடியிலாயிரமாண்டாரா
வின்பமேவடிவாய்த்தோன்றுமிலிங்கததிற்பூசையாற்றி
யென்புநெக்குருகமுன்னின்றேத்தினுன்மறைநூல்கொண்டு,

நினைப்பதேவாயிலாகநெஞ்சகங்கோயிலகொள்ளு
மனத்துமர்ய்நிறைந்தசோதியமலனுர்திருமான்முன்னர்க்
கனைத்துவண்டுளர்ந்துமூசிக்கமழ்நறுத்தேறன்மாந்துஞ்
சுனைக்கருநீலவாட்கட்டோகையோடினிதுதோன்றி. கஎ௪

திருவருட்பார்வைநல்கிச்செயிர்தபவுலகமூன்றுங்
கருணையிற்புரககுங்காவற்கருந்தொழிலளிததுவார்ந்து
பொருதிரைசுருட்டும்வேலைப்புணரிநீர்ப்பரப்பிற்றேன்று
மருமலர்க்கமலமாதைச்சத்தியாமணப்பநல்கி. கஎரு

சத்தியவுலகிற்கொட்டுக்கோடியோசனையின்மேலா
லத்தனுர்சிவலோகத்துக்கவையிரட்டிபின்கீழாகத்
தொத்தொளிமணிகள்பம்பிச்சுடரும்வைகுண்டலோக
மொய்ததசீர்முகிழ்ப்பவாக்கிமுழுமணித்தவிசினேற்றி. கஎசு

விரைகுலாங்கங்கைநீரான்மேதகவபிடேகித்துப்
புரைகுலாமதிகாரங்கள்போதவுயத்தருளிச்சூழ்ந்த
நிரைகுலாந்தேவரெலலாநிரந்தடிவணங்கச்செய்தந்
திரைகுலாந்தெய்வமாயைதன்னையுமுதவினுரால. கஎஎ

மாதர்வாள்விழியிற்கொட்கும்வண்டுளத்துளவத்தண்டார்
மாதவன்றெழுதிவ்வாறுவளங்கதிபெற்றவாற்றுன்
மாதுளங்கனிகடேர்ந்துமந்திகளுகளுஞ்சோலை
மாதர்வண்காஞ்சிவிண்டுபுரமெனும்வழககிற்றுமால். கஎஅ

அன்னவன்பூசையாற்றுமருட்சிவக்குறிக்குநாம
மின்னுசார்ங்கீசனென்னவையகமூன்றுமோது
மின்னதாலிறைவர்காயாரோகணப்பெருமையிப்பான்
மின்னுமேற்றளியின்வைகும்விமலர்தம்பெருமைவிள்வாம். கஎகூ

கலித்திலைத்துறை.

நிலவுவாணகைமடந்தையர்சித்தலும்பொதும்பர்க்
கலவமாமயிலுடைகங்கண்டுசண்களிக்கு
மலகிலாதசீர்க்கன்னிகாப்பணிநகர்வரைப்பி
னிலையவேற்படைக்கடவுளாரிருக்கையின்மேனாள். ௧௮௦

பொற்றதாமரைக்கிழவனும்புலோமசைமடந்தை
முற்றிலாவிளமுகிழ்முலைதிளைக்குமன்னவனுங்
கற்றைவார்சடைமுனிவருங்கடவுளர்பலரு
மற்றுளோர்களுமவன்றொருவேள்விபாற்றினரால. ௧௮௧

விரைக்குந்தீம்புகைவிண்ணெலாம்பரவவாகுதிக
ணிரைக்கும்வேள்விசெய்சாலையினிரந்தவர்பலவு
முரைக்கும்வார்த்தையிலொருமுதன்மாயவனென்றும
பரைக்குநாயகனேயென்றுமபன்னினர்கலாய்த்தார். ௧௮௨

கணங்கொடார்த்துவட்காமொனககதககலாம்விளைத்துப்
பிணங்குபெற்றிமைநோக்கியப்பிணக்கினைததவிர்ப்பத்
துணங்கையாடிவன்பேய்க்கணந்துவன்றவெஞ்சூர்மே
னிணங்கொள்வேற்படைவிடுத்தவன்கருணையினிகழ்த்தும.

பெருகுமாமறைப்பொருளெலாம்பிழைதபவுணர்ந்துந்
திருகுநெஞ்சினர்போற்கலாம்விளைக்கும்புனறிறத்தீர்
பொருதலீரிதுகேண்மினம்பொருவருந்தலைவன்
மருவலார்புரமனலினுககூட்டியவள்ளல. ௧௮௪

அறிவனாகிமற்றறிந்திடப்படுபவனாகிச
செறியுமண்டகோடிகளெலாஞ்செறிபவனாகிப
பிறிவிலாதவைந்தொழிலையுமபேதுறுதெவர்ககு
நெறியினாற்றுறுதிருமலருகுமவ்வீசன். ௧௮௫

ஈசன்மாட்டிளமகவெனப்பிறப்பவனிணர்ப்பூக
காசைபோனிறமேனியானரன்கடைககணிபபத
தேசுலாவிமைந்தொழிலினுளொருதொழிலசெலுத்தி
மாசுதீர்ந்தவனானந்தவடிவினின்மறைவான். ௧௮௬

ஆதலாலரனரியெனுமவர்க்குவேற்றுமையின்
றோதுமாறுநீர்காணவுமுகக்குவலென்று
தீதிலாதமால்வருமென்னச்சிந்தையிற்படர்ந்தான்
காதன்மீக்கொளவாங்கவன்கதழ்ந்துமுன்னணைந்தான். ௧௮௭

பித்தர்போலிவர்பிதற்றியதிஃதுமற்றிதுயான்
வித்தகம்பெறநொடிந்ததென்றுள்ளவாவிளம்பி
மைத்தமேனியாய்மழைக்களத்திறைவனைமனத்திற்
பத்தியாற்படர்ந்தாங்கவனுகெனப்பணித்தான். ௧௮௮

நன்றுநாயகவெனவுளநலக்கவானந்தத
தொன்றிவேறறக்கலந்துமேன்முகமுறவிருந்து
மன்றுளார்திருவருளினான்மான்மழுமுதலாம்
வென்றயேரொளிச்சிவவடிவெய்திமேதக்கான். ௧௮௯

கண்டயாவரும்விம்மிதக்களிப்புமீக்கிளைப்ப
மண்டிவீழ்விழிவார்புனற்குளித்தனர்மம்மர்
கொண்டசிந்தையைத்தணந்தனர்குரூஉமதிமிலைத்த
வண்டநாயகர்தலைமையேதலைமையென்றறிந்தார். ௧௬௦

அட்டரூபமுந்திருவுருவாகவாழ்ந்தருளு
மட்டுவார்குழன்மலைமகள்கொழுநரம்மாலே
விட்டிடாததந்திருவுருவாகவீற்றிருந்தார்
கட்டுமாமலமுயிர்க்கெலாங்களைதருகருத்தான். ௧௬௧

கூற்றைவென்றவரின்னணமமர்ந்தகொள்கையினு
லேற்றமாய்த்திருமேற்றளியெனப்பெயர்போய
தாற்றல்சாலயில்வேற்படையண்ணலார்சிவமாய்த
தோற்றிமாயவனிருந்தவத்துகளிலாத்தானம். ௧௬௨

இறைவன்மாலெனுமதத்திறைெறாழ்மனவிரும்பு
மறியுமாறுமிக்கமாவிடுமத்திகையாகு
மறவனூர்திருமேற்றளியரும்புகழிதுவா
னெறிகொளிந்திராலயத்துமாவிமலர்சீருரைப்பாம். ௧௬௩

தரளமாலிகைதூக்கியதனிக்குடைநிழற்ற
வரவவல்குலாரிருபுறங்கவரிகாலசைப்ப
விரவுபன்மணித்தவிசின்வீற்றிருந்துவிண்ணுடு
புரவுபூண்டதோட்பொலங்கதிர்த்தாரினுன்பேருள். ௧௬௪

மல்லலோங்கியவிந்திரபதம்பெறமதித்துச்
செல்லருதுகண்படுக்குமென்சினைப்பொழிற்றளிர்த்த
பல்லவங்கள்வாய்க்கொழுதுகோகிலங்கள்பண்பயிலுஞ்
சொல்லருங்கவின்காஞ்சியைத்துனைந்துசென்றடைந்தான். ௧௬௫

உழுந்துமாத்திரைநீர்முகந்துண்ணினும்பவநோய்
விழுந்துசேணிடையிரிதரமெய்ப்பயன்விளைக்கு
மழுந்துபட்டகம்பாநதியாடியேகம்பக்
கொழுந்துவெண்மதிமிலைச்சியகோனடிபுணிந்தான். ௧௬௬

நெட்டராப்பயிலுலகமுநெடுங்கணிற்காணக
குட்டவாவியொன்றகழ்ந்துமற்றதனிடைக்கொழுந்தேன்
மட்டுவார்ந்துவண்டினங்குலாமாமையங்கமல
வட்டவாய்மலர்மலர்தரவிருமித்தான்மன்னே. ௧௬௭

ஆண்டையாயிரமத்தடத்திரும்புனலாடு
மாண்டபேரொளித்தமணியவனசத்தினூ
நீண்டசெஞ்சடைநிமலரைப்பூசனையாற்றி
யீண்டுமாமறைத்துதிபலவன்பினேத்தெடுத்தான். ௧௬௮

போற்றுமன்பினுக்கிரங்கிமின்பொதிந்தசெஞ்சடைமேற்
கீற்றிளம்பிறைமிலைச்சியகேழ்கிளர்புனித
நீற்றுமேனியார்நிரைவளைமுன்கைமென்சாயற்
கூற்றம்வென்றகட்குமரியோடெதிரெழுந்தருளி. ௧௬௯

கருணைநோக்களித்தொளிர்முடிக்கடவுளர்க்கிறையாத்
திருநிலாமமராவதிவயிற்செழுங்கமலத்
தொருவனூற்சசியுடனபிடேகநீராட்டிக்
குருநிலாமுடிசூட்டினர்வரங்களுங்கொடுத்து. ௨0௦

அண்ணன்மால்களிற்றிந்திரற்கரசினையளித்து
வண்ணமாலிகைச்சடைமுடிவள்ளலார்மகிழு
மெண்ணில்சீர்வளரத்தலமிந்திராலயமென்
றுண்ணிலாவுபேரன்பினருரைத்திடப்படுமால். ௨0௧

கருத்திரப்பினையருளுமக்காமர்பூந்தலத்தி
னுருத்திரப்பெயர்வள்ளலாரொளிர்சரண்மீட்டும்
விருத்திரப்பெயரானுயிர்விளித்தமாசறவத்
தருத்திமீப்பதிவலாரிபூசனைபுரிந்தனனால். ௨0௨

கந்தவார்பொழிலசூழ்ந்துதண்ணெனக்குளிர்களுற்று
மிந்திராலயத்திறைவர்தம்பெருமையீதிப்பாற்
பந்தநீத்தருள்பணுதரேச்சுரப்பதியமர்ந்த
வந்தமாதியிலாதவர்பெருமைமற்றறைவாம். ௨0௩

வேறு.

பைத்தெழுந்தார்க்கும்படர்திரைப்பாற்கடற்பாயல்கெழீஇ
நித்தலும்வாட்கண்படுக்குநெளியுடற்பாப்பணையான்
றத்தொளிகாலுந்திநாண்மலர்த்தாமரைமேன்முகிழ்த்துக்
கொத்துறையையமெலாந்தருங்குண்டிகைக்கையவனே. ௨0௪

எத்திசைவாழ்நரும்விம்மிதம்பூப்பவெழில்பரப்புஞ்
சத்தியலோகவரைப்பினத்தாணிதனிற்கிரண
மொய்த்தவிராதனமேற்சனகாதிமுனிவரெலாம்
பத்தியிற்சூழ்தரவீற்றிருந்தான்பலர்போற்றறவே. ௨0௫

ஆங்கவன்மேவருசேவைசெய்வானங்கடுத்தணுகித்
தூங்குகைநாற்பெருங்கோட்டயிராவதந்தூண்டிறையும்
வீங்கியசீர்ப்புலவோர்முதலோரும்விழுந்திறைஞ்சி
யோங்கியபேரருள்பெற்றொருபாங்கரிருந்தனரே. ௨0௬

பாற்றருந்துப்புடைக்காலிறையோனும்படர்ந்துதன்ற
னாற்றலினையதருக்குடனம்புயத்தான்மலர்த்தாள்
போற்றியன்னனருளேவலினாற்பொலந்தாரலங்க
லேற்றியதோட்புலவோரொடுமெங்கணிருந்தனனே. ௨0௭

தருக்கியமாணின்மைநோக்கியிவனித்தருக்கையின்னே
முருக்குவல்யானெனமுன்னியம்போருகமுன்னவனம்
மருக்கிளர்தார்வளிவேந்தனைவாண்முகம்பார்த்தினது
திருக்கினராற்றலொன்றேமிக்கதாமென்றுசெப்பினனே. ௨0௮

குய்யம்வைத்தோதியநான்முகத்தான்மனக்கோளறியான்
வையகம்போற்றுமதுகையினுன்மகிழ்கூர்ந்திறைவா
மெய்யுரையாடினையாலெனதாற்றலேமேம்படுத்தற்
கையமின்றேயெனத்தானுந்தனுற்றல்கொண்டாடினனே. ௨0௯

தற்புகழ்கேட்டுளத்தீண்டும்பொருமைதலைவராலும்
விற்படுமாமணிற்சூட்டழற்காரிவெண்கூரெயிற்றுப்
பொறபிதிர்நேர்பொறிப்பேழ்வாய்ப்புணர்க்கவைநாவிரிபை
யெற்படுவ்ராருடற்சேடன்முறுவலித்தெள்ளினனே. ௨௧0

எள்ளியவாறுநன்றேயெறுழ்யாதுமிலாய்க்கெனவே
வெள்ளொளிகாலுடற்சேடனைக்காலிறையோன்வெகுளத
தள்ளருமாண்வலிச்சேடனுஞ்சாலத்தழன்றுருப்ப
நள்ளமலர்போலிருவோர்க்கும்வெம்போர்நனிமூண்டதுவே. ௨௧௧

மூண்டவெம்போர்தணியாமையினுங்கவர்முண்டகத்தி
னுண்டகைசேவடிதாழ்ந்தடியேமெறுழாற்றலினுண்
மாண்டதுதேர்ந்துரைவாணிதன்கேள்வவெனப்பழிச்சி
வேண்டலுநான்முகனுரதன்மேல்விழிபோக்கினனே. ௨௧௨

ஏரியபருதுகுடைந்துசெந்தேனுண்டெறிந்திருந்து
காரளிமூசுவண்டாமரைத்தோன்றல்கருத்தறிந்து
சீரியபூதிதிமிரந்தொளிகாலுந்திருவுருவி
னாரதமாமுனிமற்றவர்க்கீதுநவின்றிடுமே. ௨௧௩

எற்றிருவீருமினியிகலாதிர்பொன்மேருவரை
தோற்றியவாயிரங்கோடுஞ்சுடர்ப்படத்தாற்பொதிக
வாற்றலஞ்சேடனவற்றைப்பெயர்க்கவடல்வளியிச்
சாற்றியவாற்றிறறெரித்தும்வலியெனச்சாற்றினனே. ௨௧௪

மற்றிதுபுரிதுமென்னுமனத்தெழுங்காதலீர்ப்பப்
பொற்றபலடுக்கல்சூழ்ந்தபொன்னெடுங்கிரியையண்மிச்
செற்றியசிகரமெல்லாஞ்சிக்கெனப்பொதிந்தான்சேடன்
கற்றையங்கதிர்கால்சூட்டுக்கணமணிப்பணங்கடம்மால். ௨௧௫

இறுகுறப்பொதிந்துபற்றியெறுழொடுகிடக்குஞ்சேடன்
பொறிஞெமிர்படங்கணீக்கப்பொள்ளென்வெழுந்துவீங்கி
நெறுநெறுநெறுவென்றண்டநெரிதரவோடியாடி
யுறுவலிமுழுதுங்காட்டியுடன்றனன்வாயுதேவன். ௨௧௬

ஒருபகலளவிற்பன்னூற்றனவென்னப்பல்காற்
பரிதியங்கடவுண்மேருப்பருவரைசூழுமந்தப்
பெருவரைதாமுஞ்சூழப்பெட்டனபோன்றுவேலைக்
குருமணிநீருஞ்சுற்றுங்குரைவளிகொட்குநீரால். ௨௧௭

எழுந்தனவரைகள்விண்ணத்திழிந்தனதாருமண்ணி
னழிந்தனவுலகமோட்டையாயினவண்டமாண்மை
கழிந்ததிக்கயங்கிடிக்கிற்கதுவினதுய்யிற்கொண்மூ
வொழிந்தனமகிழ்ச்சியார்க்குமுற்றனதுயரமெல்லாம். ௨௧௮

எறுழ்வலிப்பவனப்புத்தேட்கின்றுணையாகிப்போருக்
குறுவபோலுலவைத்தோன்றலுடன்கெழீஇப்பிறங்கற்கோடும்
பறவையும்விலங்குநீண்டபாரைமாமரமுமற்று
மறிதருஞ்சுழலுமோடுமேலையும்பின்வாங்கிநீங்கும். ௨௧௯

மேக்கெழும்புழுதித்தூளான்விழுத்தகின்மாசேறுண்ண
நோக்கமிக்கிமைத்தல்சாலமெய்யொளிநொய்துசாம்பத்
தாக்கியபவனவேகந்தனிற்றிருக்கண்ணிவாடப்
பூக்குலமாந்தரொத்தார்பொருவரும்புலவரம்மா. ௨௨௦

இவ்வகையுடன்றுஞ்சேடனைத்துமெய்துளும்பானாகிச்
செவ்வனங்கிடப்பநோக்கிச்சிந்தனையழுங்கிமாழாந்
தெவ்வெவ்வுயிரினின்றுமியங்குயிர்ப்பனைத்தும்வாங்கற்
கௌவியமனத்தினெண்ணியடல்வளிமுயறலோடும். ௨௨௧

அரும்பியமுறுவனல்லாராடகப்பசும்பொற்கொங்கைக்
குரும்பைகாலுழக்கவிள்ளுங்கொழுமலர்க்கற்பத்தண்டார்ப்
பெரும்புயக்குவட்டுவிண்ணோர்பெரிதுளம்வெருவிவீணா
நரம்புளர்முனிவன்றன்னைநயந்தனரிரத்தல்செய்தார். ௨௨௨

எவ்வமெய்தாதிர்நீவிரெனச்சுரர்தம்மைத்தேற்றி
யௌவியமனுக்கிநோற்றவருந்தவமுனிவன்வல்லே
செவ்வியமணிகால்யாத்ததிவ்வியாழுறையைநீவிப்
பௌவவாயமுதமென்னப்படுநரம்புளர்ந்தான்மன்னோ. ௨௨௩

இன்னிசைசெவிகடோறுமிவாதலுமரவச்செம்மல்
பன்னருமகிழ்ச்சிபொங்கப்பரவசப்பட்டுத்தன்றன்
சென்னியொன்றசையாநிற்பச்செவ்விகண்டுலவைத்தோன்ற
லந்நெடுந்தலைக்கீழ்க்கோட்டையெனப்பறித்துவீழ்த்தான்.

உலவையங்குரிசிறன்பாலுற்றதுவெற்றியென்னுங்
கலகலமுழங்கியாருங்கையெறிந்தசதியாடப்
பலமணிசுடருஞ்சூட்டுப்பல்பொறிச்சேடனம்மா
வலர்மனத்தெழுச்சிசாம்பச்சமழ்ப்பெனும்புணரியாழ்ந்தான்.

பரிபவப்பட்டவாற்றாற்பாற்றருமதுகைகுன்றி
யிருநிலந்தாங்கவல்லாதெய்த்தனனதனைநோக்கி
வரியளிமுரலும்வாடாவலர்த்துழாய்ப்படலைமாலை
முருகுதொப்புளிகுமார்பின்முகின்மணிவண்ணன்சொல்லும்.

கடவுள்முனிவன்குய்யகருத்தினான்படிவீணை
தடவலுமிசைக்கோட்பட்டுத்தனித்தலைதுளக்கியிவ்வா
றிடருழந்துயங்கிச்சான்றவெறுழ்வலிமுழுதுந்தேய்ந்தாய்
சுடர்மணிச்சூட்டுத்தோன்றறொலைவலிபெறுமாகேட்டி. ௨௨௭

மணிகிடந்திமைக்கும்வீதிவயின்வயின்மகளிர்நீத்த
வணிகிடந்திமைக்குங்காஞ்சித்திருநகரண்மியன்பர்
பணிகிடந்திமைக்கும்பாதப்பரமனார்பூசையாற்றிப்
பிணிகிடந்திமைக்குமுள்ளப்பேதுறலோம்பலென்றான். ௨௨௮

கடலமிழ்தருத்தியாங்குக்காஞ்சியென்றுரைத்தலோடுங்
கெடலருங்கவற்சிநீங்கிக்கேழ்கிளர்சேடன்றன்னைச்
சுடர்மணியணையாகக்கொண்டுதுணைவிழிவளராநிற்கு
மடல்கெழுதிகிரிப்புத்தேளடிபணிந்தாறுசென்றான். ௨௨௯

கொழித்தெழுமுழவினேதைகுளிறுகார்முழக்கந்தோற்றச்
செழித்தபொன்னரங்கதேறித்தேமொழிமடவார்மின்னே
பழித்தநுண்ணுசிப்புவாடப்பரிபுரஞ்சிலம்பவாடும்
விழித்துணைக்கடங்காகாமர்வியனகர்க்காஞ்சிபுக்கான். ௨௬௦

அருவுருவகன்றசோதியமலனேவிதிவழாமை
பெருகியபூசையாற்றிப்பிறங்கொளிக்கவிகையாகக்
குருமணிபடங்கடம்மாற்குளிரமேற்கவித்துநாளுந்
திருவளர்பாதப்போதிற்சிந்தனையொருக்கிநின்றான். ௨௬௧

அன்பினுக்கெளியாராகுமண்ணலாரெதிரேதோன்றித்
துன்பினித்தவிர்தியென்றுதொன்னிலந்தாங்கவல்ல
வன்புதந்தருளப்பெற்றுவணங்கினன்விடைகொண்டேகி
யின்புமீக்கிளைப்பமுன்புபோலிருநிலம்பரித்துவாழ்ந்தான். ௨௬௨

முடித்திடுமேதுகைவல்லமுதன்மையாப்பெற்றேனு
முடித்திடும்பொருளுமந்தமுடிபொருண்முடியுங்காலை
யிடைத்தொகுந்துயருமாகுமின்பமுந்தூக்கிப்பாரா
தெடுத்திடின்முடியாவேதனெண்ணமுற்றுதவாற்றால். ௨௬௩

பற்றியவன்புநீடப்பணிபணங்கவித்தலாலங்
கற்றலம்பணாதரேசமெனத்திருநாமம்பூணும்
அற்றமின்மணீசவைப்பினமர்ந்தருள்கொழித்துப்பாச
முற்றும்விட்டிரியநல்குமுதல்வர்தம்பெருமைவிள்வாம். ௨௬௪

எழுசீர்க்கழிநெடிலாசியவிருத்தம்.

மாதவமுதிர்ந்தகாசிபமுனிவன்மனைவியர்பலருளுஞ்சிறந்த
மேதகுமடவாரதிதியேதிதியேவினதைகத்துருவெனநால்வ
ரோதியவிவருளதிதிதன்புதலவரும்பர்களும்பர்நாட்டுறைவார்
தீதறுதிதிதன்மைந்தர்களவுணர்சீர்வளர்பாதலத்துறைவார். ௨௬௫

பத்தினிவினதைமக்களுளருணன்பரிதியந்தேர்கடாம்பாகன்
றுத்திவாளரவப்பெரும்பகைக்கலுழன்றுழாய்த்தொடைமாயவனூர்தி
கத்துருவுயிர்த்தபணிகளுளனந்தன்காசினிபரிப்பவனுய
வித்திறநோக்கிந்தானுமோராற்றலெய்துவான்வாசுகியெனீபான். ௨௬௬

வயிறுளைந்துயிர்த்துக்குவிமுலைத்தீம்பால்வாய்மடுத்தின்னருள்புரிந்த
கயிரவநகவற்றுஞ்செந்துவர்க்கனிவாய்க்கத்துருமலரடிவணங்கி
யயர்வறுத்தருளுமவள்வியங்கொளப்பெற்றவ்வயினகன்றுமாதவத்தா
னுயரியசீர்த்தித்தந்தைதன்பாதமோய்யெனப்பணிந்துநின்றிரந்தான்.

அயிராரித்தறல்வார்த்தொலிபுனலொழுகுமரும்புகழ்ப்பாலிநீணதியால்
வயல்வளஞ்சிறக்குங்காஞ்சிமாநகரின்மதிக்கொழுந்தொளிர்பொலஞ்சடிலக்
குயின்மொழிபாகர்குரைகழன்மலர்த்தாள்கோதுகுபதியின்வணங்கிச்
செயிர்தபுவரங்கள்பெறுகெனுமுனிவன்திருத்தகுவிடையும்பெற்றெழுந்தான். ௨௬௮

நறுமணங்கமழுங்காழகிற்றுணியுநாறுபூஞ்சந்தனக்குறடும்
வெறிகமழ்நானக்கொடிகளுமலரும்வெயிலுமிழ்பலவகைமணியு
முறுபுனற்பரப்பினுந்திவந்திடந்தோறுதுக்குசேயாறொருபுறத்துச்
செறுவளம்விளைத்துத்தெழிக்குந்தண்டீரத்திருநகர்விரைந்துசென்றணைந்தான்.

மிடல்கெழுபகைஞர்புரிசைமூன்றிறப்பவிலகிவில்லுமிழ்கைமுகிழ்த்த
சடைமுடிக்கூத்தர்தாட்டுணைக்கமலந்தணப்புறாக்காதன்மீக்கிளைப்பப்
படுசுடரிமைக்கும்பணமணிவாங்கிப்பணியொடுமருச்சனையாற்றி
யடுபுலக்குறும்புதுமித்தருந்தவஞ்செய்தவ்வுழியிருப்பவக்காலை. உசo

பொலங்குவட்டடுக்கன்மந்தரமெறிந்துபொருதிரைவேலையம்புணரி
கலங்கவான்மருந்துகடைந்தனரெடுப்பக்கருதிவந்திமையவர்பலரு
மிலங்குநூபுரப்பொற்பதமலர்பரசியிறைஞ்சியிவ்வாசுகிதன்னை
யலங்கலசூழ்சடையாய்நாணொவெமக்கிங்கருளெனவிரந்தனராக.

நாடகநவிற்றுநம்பனாருளிச்செல்கெனவிடுத்தலுநகைகா
லாடகப்பசும்பொன்வரன்றிவார்ந்தொழுகுமவிர்மணிப்பூந்திரைதவழ்ந்து
கோடகங்கழுவுங்குரைகடல்கலக்கிகொழுஞ்சுவைப்புத்தமிழ்தெடுத்துப்
பீடகம்பெறுகும்வானவர்க்களித்துப்பிணாகதபேரன்பிஞன்மீண்டு.

தண்டளிர்ச்செயலைப்புதுநிறங்கவற்றுந்தமனியமேனிவாணகைபார்
வண்டலாட்டயருமலர்ப்பொழிலுடுத்து வளங்குளாமத்தகுவரைப்பி
னண்டவாணருகக்குந்தலைவனையிர்தோறமர்ந்தருள்சருணையங்கடலைப்
பண்டுபோன்முயனறுவிதியுளிவழாதுபரிவொடுபூசனைபுரிந்தான். உசங

பொற்பிதிர்சிதர்ந்திட்டெனமிளிர்தலைப்புணர்முலையுமையொருபாக
ரற்பினுக்கிரங்கியெதிரெழுந்தருளிநாவிரண்டரவிற்குமிறையா
கற்பதமளித்துப்புதுமலர்கடுக்கைநறுந்தொடைதிளைமார்பகத்து
விற்பயிலணியாவணிந்திடும்பேறும்பெற்றனன்வியனிலம்வியப்ப. உசச

மணமலிகளபக்குவிமுலைச்சுவட்டுமார்பினர்தமைப்பணிவேந்தன்
பணமணிவாங்கிபருச்சனையாற்றிப்பணிதலான்மணிச்சரப்பெயர்பெற்
றிணர்மலர்ப்பொதும்பர்சூழ்ந்தவநகரமிலங்குமற்றடுத்தமாதவத்தோர்
கணியராய்வரங்களருளுநான்முகசங்கரத்தமரமலர்சீரறைவாம். உசரு

கலிவிருத்தம்.

பண்டொருகற்பத்துப்பதுமச்சேக்கைவா
ழண்டனைத்தவத்திணைணமிகலவரங்
கொண்டவர்தவலருங்கோணையாற்றலர்
மிண்டியதறுகணேமிடைந்தசிங்கையார். உசசு

அத்தகுதானவரமரர்துன்றிய
தொத்தலர்கற்பகச்சூழலாதியா
வெத்திருவுலகமுமினையக்கொட்புறீஇ
ரித்தலுமூறுகணிக்கழ்ந்திசெல்லுவார். உசஎ

கொள்ளைநீர்நதித்திரைகரைந்துவீசிய
வெவ்வெலாத்திசையினுமிலகுகித்திலங்
கொவ்வைவாய்மகளிர்கள்குவவிக்கோவைசெய்
செவ்விவாய்காஞ்சியந்தேத்துச்சென்றனர். உசஅ

கன்னிகாப்பமர்பெருங்கடவுளாதியோ
ரன்னதானவர்வரவறிந்தங்குள்வெரீஇ
வன்னவார்தளிர்மறைமாவின்வள்ளலார்
மூன்னர்வீழ்ந்தெழுந்தனர்முறையிட்டாரரோ. உசகூ

பூணிலாம்வனமுலைபொருதமெய்குழை
வேணியார்திருவுளகசுருணைமீச்செலக்
கோணிலாமதிபுரைகோலவார்நுதல
வாணிலாகைையுமைவதனநோக்கினர். உருo

கள்ளலைத்தொழுதுபூங்காமர்தீங்தொடை
புள்ளலைத்திமிர்புயற்கூந்தற்பார்ப்பதி
யள்ளிலைத்தனிப்படையணங்குகன்னியைத்
துள்ளலுற்றுடல்விழத்துணிமயன்றேயினுள். உருக

வெய்யவெள்வாளுறைகழித்துவீங்குதோ
ளையையேற்றமரியவரட்டராருயி
ரொய்யெனவிறுத்தொருகோடிதீர்த்தந்தொட்
டெய்துமக்குளங்கரையினிதுவாழ்ந்தனள். உருஉ

மற்றொருகற்பத்தின்மலரின்மேலவ
னற்றமின்றுலகெலாம்படைககுமார்வத்தாற்
கொற்றவியகழ்ந்தவக்கோடிதீர்த்ததின்
பொற்றவண்கோட்டருந்தவங்கள்போற்றினன். உருங

உகங்களினூறுவந்துறுதகன்னிகாப்
பகங்குடிகொண்டவேகம்பத்தண்ணலார்
சகங்களையுயிர்த்தவனோடுஞ்சார்ந்தவன்
முகங்களுன்கினுமறைமுகிழ்ப்பநல்கினர். உருச

மருவிரிதன்முகமலரிற்றோன்றிய
வருமறைவழியுலகளைத்துமாககினன்
பொருவறுமப்பதிபூணுமாலரு
டருசதுரானனசங்கரபபெயர். உருரு

தனிச்சதுரானனசங்கரத்துவாழ்
பனிச்சிறுமதிகுடிப்பகவர்சீரிது
வினிச்சுரகரத்தமர்ந்திருண்டவாணவத்
துனிச்சிறைதபும்பிரான்பெருமைசொல்லுவாம். உருசு

தாருணனெனும்பெயரவுணன்றன்விழிப்
பார்வையிற்பட்டவரெவரும்பாறறருஞ்
சூருறுசுரங்கெழீஇத்துயரவேூர்வர
மார்ணன்மாட்டருந்தவத்திற்பெற்றுளான். உருஎ

அச்சுரலோசனவவுணன்றன்னிரு
வெச்செனும்விழியினல்வெகுண்டுநோக்குபு
கச்சமிலுயிரெலாங்கவலவேலைவாய்
நச்சுறழ்சுரத்திடைநலித்துச்செல்லுநாள். உருஅ

பற்றலார்புரம்பொடிபடுத்தசேவகர்
கற்றைவார்குழலொடுகளிக்குங்காஞ்சிசீர்
பெற்றுவான்றருமமாய்ப்பிறங்குபெற்றிமை
யொற்றர்போயுரைத்தலுமங்குப்போந்தனன். உருகூ

கொலைமுகக்கூற்றெனக்கோணையாருயி
ரலைசெயுமவன்வரவறிந்தம்மாநகர்
நிலையுமாலயன்முதலெவருநெஞ்சுளோக்
கிலையசூழ்படையரையிறைஞ்சிவேண்டினர். ௨௬௦

வெருவலிரெனவவர்விதிர்ப்புநீத்தருட்
பரமர்தம்மடியிணைபடர்ந்துமாதவம்
புரிநரவாகனனென்னும்புண்ணிய
வரையனைநோக்கியீதருளிச்செய்வரால. ௨௬௧

இயக்கர்தமதிபமற்றிங்கெம்முள்ளுகம்
வியக்குநின்றவப்பயன்விரைவினல்குதும்
கயக்கமுற்றுயிர்நபவீண்டுக்கண்ணுறும்
பயக்கொடுந்தானவற்பதைப்பகோறியால. ௨௬௨

அன்னதானவன்விழிக்ககப்பட்டாயெனின்
வன்னிவாய்ப்புழுவெனமறுகிச்சாம்புவை
யின்னதாலவன்றிறமிறுக்குஞ்சூழ்ச்சியு
நன்னர்நெஞ்சமைவராநவிற்றகேண்மதி. ௨௬௩

கொண்டலங்கூந்தலுங்குவட்டுக்கொங்கையு
மொண்டளிர்மேனியுமொளிருமூரலுங்
கண்டவரேக்கறுங்காமர்மேதகு
சண்டிகையெனுமடத்தயலைக்காட்டுபு. ௨௬௪

இத்திருமாதினைமணஞ்செய்தீகுவல
கைத்தலம்பற்றெனககரைதிநேர்ந்தவன்
றத்தெரிவிழிகுளிர்தழைப்பநோக்குவ
னத்தகுசெவ்வியினுவிவாங்குதி. ௨௬௫

எனவருள்வழஙகலுமிறைஞ்சியெம்பிரான்
றனதருட்சூழ்ச்சியிற்சார்ந்துபூஞ்சிகைக்
கனல்கொடுத்தருளியகதிர்த்தவாளினு
லனல்விழியவுணனையாவியுண்டனன். ௨௬௬

மின்சுடர்மதிமுடிவிமலர்மன்னற்குக்
கொன்சுடர்தவப்பயன்கொடுத்தளித்தனர்
வென்சுடரத்தகுசூழன்மேயதா
னன்சுரலோசனநாசனப்பெயர். ௨௬௭

விரைப்பொழிலசூழ்ந்தொளிவிளங்குமத்தகு
வரப்பிடையமலனாவணங்கிப்பாங்கரிற்
குரைப்பசுங்குண்டநீர்குளிப்பினவெஞ்சுரப்
புரைப்பெருந்துயரொலாமெளிதிற்போக்குவார். ௨௬௮

துன்னியவினைதபுஞ்சுரகரீசத்துப்
பின்னல்வார்சடையர்தம்பெருமைசொற்றன
மன்னியவேனைவைப்பிடத்தும்வள்ளலார்
நன்னயந்தருளியகதைநடாத்துவாம். ௨௬௯

பாசிராமேச்சரப்பதியின்மேதகு
பாசிராமப்பெயர்ப்பனவன்பூசித்துப்
பாசுமாரன்பினுக்கழற்கைப்பண்ணவர்
யநசுவேலரசர்வேர்பறிப்பநல்கினர். உஎ0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஒருமலர்க்காவுள்வைகியுந்தியங்கமலம்பூத்தோன்
பெருநிலம்படைக்குமாற்றல்பெட்டுநோன்புஞற்றலோடு
முருகுகொப்புளிக்குங்கொன்றைமுதல்வனார்தமதுபாதித்
திருவுருப்பெண்மையாகத்திகழ்ந்தவனென்கிரோதோன்றி. உஎக

மூவகைத்தலைப்பெயெண்மருருத்திரர்முதலோராக
மேவருமுருத்திரப்பேர்விண்ணவர்பலரையீன்று
தாவருமதிகாரங்கடனித்தனிவலகிக்கஞ்சப்
பூவருங்குரிசிற்காக்கும்புரைத்தொழிலருளிச்செய்தார். உஎஉ

வருத்துவெம்பிறவிச்செல்லன்மதிக்குமுளிரியல்போக்கு
முருத்திரர்தம்மைமுக்கணும்பரூருயிரததவாழ்முற்
றிருத்தகுமனையசூழற்றேவருமெடுத்துக்கூறிக்
கருத்தெறுமுருத்திரன்காவெனும்பெயர்கதுவிற்றன்றே. உஎ௩

கடல்புரைதறுகட்சேனையிடமறகசளுலமுற்றிப்
படர்சமமுழக்குமாற்றற்பகைஞர்க்கும்பற்றவொண்ணு
வடர்பொறிமதில்சூழ்புட்பபுரத்திருந்தரசுசெய்யுஞ்
சுடர்மணிக்கழலான்சீர்த்திதொகுந்திடவிரதனென்பான். உஎச

காட்டகத்தமன்றமானின்குறும்பெலாங்காற்றவோர்நான்
வேட்டைசென்றுடுமேல்வைவெரீஇ யொருகலைமான்றப்பி
யோட்டெடுத்திரியப்பின்னர்த்தொடர்ந்தனனோடியெய்த்து
வாட்டுநீர்நசைமீபபொஙகவாய்புலர்ந்தவசனுகி. உஎ௫

உழைபனைவிளித்துவல்லேயொண்புனல்கொணர்தியென்று
விழைவொடுமேவவன்னுன்வெய்துபோய்த்துருவியோர்பாற்
கழியவேற்றுமைப்பட்டுள்ளகயத்துநீர்தீதுநோக்கா
னழிநசைக்கெய்திற்றென்னுமார்வத்தாற்போதந்தீந்தான். உஎசு

செங்நிறக்குருதிதோய்ந்துதீப்பொறிசிதறும்வெள்வேன்
மன்னனுந்தீதுநோக்கான்வாங்கிவாய்மடுத்துச்சென்று
னன்னதேயேதுவாகப்பிணியுழந்தாக்கையெல்லாந்
துன்னியதேசுசாம்பியிருந்தையிற்றோன்றிற்றம்மா. உஎஎ

சந்தமென்மலர்ப்பூந்தொடிகற்சத்தியசீலனென்னு
மந்திரிகுறித்துநோக்கிமருத்துவர்தம்மைக்கொண்டு
வெந்திறன்மருந்துசெயதும்விழுப்பிணிமூலங்காணு
னொந்தபுணமனததனுகிறுவலருங்கவலைகூர்ந்தான். உஎஅ

மற்றவனமளிமேலால்வாள்விழிபடுக்குமேல்வை
முற்றிழையொருமானண்மிமுகமலர்வாடிச்சொல்லும்
வெற்றிவேலமைச்சகேண்மோவிரைகமழலங்கன்மோலிக
கொற்றவனரசசத்தியானைமனத்துக்கோடி. உஎகூ

கைவளர்வேடுசெல்லுமற்றைநாட்கலுழற்கஞ்சிப்
பைவளர்கொடுமாநாகம்பகுபெருவாயிற்கான்ற
மைவளர்நஞ்சுவீழ்ந்துதிரிநதவார்கயத்துநீரை
மொய்வளர்திணிதோண்மன்னன்முகந்துவந்தளிப்பவுண்டான்.

மோட்டுநீருலகவைப்பின்மொய்யிருளிரியல்போக
நீட்டுபூங்கிரணச்செங்கேழ்நெடுந்தகையருளித்தந்த
சேட்டுமாமணியைமோலித்திருவிற்கால்சென்னிக்கைநதாச்
சூட்டினனதனாற்றுன்பிற்றொடக்குண்டான்விளிதலின்றி. ௨௮௧

மருந்தினாகவெந்தமந்திரவலியானாக
திருந்தியமணியானாகசெல்லன்மிக்குழக்குமிந்தப்
பெருந்தழல்விடந்தீராதுபெருகுசீர்க்கச்சிமூதூர்ப்
பொருந்தியமாகாளேசர்பூசனைபயத்தானன்றி. ௨௮௨

எனவுரைத்தணங்குநீங்கவின்றுயிலெழுந்துகண்ட
கனவினையரசன்மாட்டுக்கட்டுரைத்தலுமற்றன்னோன்
றனதுநாடகன்றுவலலேசார்ந்தனன்காமற்காய்ந்த
முனைவனாரினிதுவைகுமும்மூர்த்திவாசப்பேரூர். ௨௮௩

செம்பொனிற்குயின்றமாடத்திருநகர்வனப்புநோக்கிக்
கம்பைநீர்படிந்துகம்பர்கழலடிபணிந்துபோந்து
வம்புலாமலர்தூயும்பர்வழிபடுமாகாளேசத்
தெம்பிரான்பாதபூசைநாடொறுமியற்றிப்போற்ற. ௨௮௪

திங்களங்கண்ணிவேய்ந்தார்திருவுளமிரங்கித்தோன்றிக்
கொங்கிணர்கடுக்கைத்தொங்கற்குரூஉச்சடைமடுவிற்றத்துங்
கங்கையைக்கரத்தாலள்ளியுடலெலாநனைத்துக்காளப்
பொங்கியவேகமுற்றுந்தணித்துயிர்புரத்தல்செய்தார். ௨௮௫

ஓங்கெழிலெறிந்துமேனிபண்டுபோலொளிரவோகை
வீங்கியவுளத்தனாகிமிளிர்நகையுமையாள்பாகர்
தேங்கமழ்மலர்த்தாள்போற்றித்திருவருள்பெற்றுவேந்த
னீங்கருந்தன்றுசிர்த்திநெடுநகர்சென்றுவாழ்ந்தான். ௨௮௬

கலிவிருத்தம்.

பச்சிளங்கொடிமாதொருபால்வளர்
நச்சராவணிநம்பர்நவிற்றிய
பொச்சமின்மறைபோற்றுகுலத்தினு
னெச்சசன்யனெனுமொருபூசுரன். ௨௮௭

மாண்டகல்வியிலாதவழுக்கினு
னுண்டீஇப்பலநாட்டினுங்கொட்புறுப்
பூண்டமுற்றவப்போக்கரும்பேற்றினு
மேலண்டகும்பொதியத்தினையெய்தினன். ௨௮௮

வெந்தநீற்றொளிமெய்த்தவர்சூழ்தர
வந்தில்வைகுமகத்தியமாதவன்
சுந்தரப்பதந்துணையிறைஞ்சுபு
சிந்தையன்புதிளைத்திருந்தானரோ. ௨௮௯

வல்வினைதெறுமாதவனோக்கிநற்
கல்விவேண்டினைசல்விதனக்குநீ
நல்வினைமுன்னவிற்றிலையாதலாற்
செல்வயான்றரச்செல்வதொன்றன்றுகாண் ௨௬௦

காக்குநாயகர்காத்தருள்கச்சியின்
மாக்குலாய்ப்பொழில்சூழ்ந்தவராகத்துப்
போககின்ஞானதானேசனைப்போற்றிடிற்
றேக்குசீர்க்கலைதேர்வையெனறேயினான். ௨௬௧

வணங்கியவ்வருள்பெற்றுவழிக்கொளா
வணங்கனார்பயிலாடலும்பாடலு
மிணங்குவீதியிடந்தொறும்பாரார்
தணங்கள்சூழ்தருகாஞ்சியையண்மினான். ௨௬௨

பொன்னசும்புபொருதிரைகசம்பையி
னன்னர்நீர்படிந்தாடிநறுஞ்சினை
மன்னுமாவடிவள்ளலைவந்தியாத்
துன்னினான்முனிசொற்றவச்சூழலை. ௨௬௩

அங்கண்வைகியவங்கணர்தாண்மலர்
பொங்குகாதலிற்பூசனையாற்றினான்
றுங்கவான்கலையாவுந்துரிசறத்
திங்கள்போலவளர்ந்துசெழித்தனன். ௨௬௪

அறுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தனித்தனிமுதன்மைபேசிச்சமர்புரிநாப்பட்டோன்றுங்
கனற்பொறநுதலார்சென்னிகழலிணைகாணச்சென்று
பனித்தனர்மீண்டஞான்றுபன்றியினுருவுகொண்டோ
னனைத்தரிறுமிப்பாலபூசையாற்றியதனையவைப்பு. ௨௬௫

வேறு.

காதன்மாதினொருவகத்திருவியகடவுளைமுதலானோர்க்
காதிமாமறைபோதுவிதமோதுவிந்திடுமுறையருளசெய்து
மாதொர்பாகனார்பெருகியகருணையினவதிந்தனரச்சூழ
நீதுதீர்த்திருந்தீர்த்தமாய்ப்பொலிந்தசேயாறுசூழ்திருவேர்த்தூர்.

பொதியவிழ்ந்தநெட்டிதழ்மலர்ப்புதுமதுப்பொழிநறுஞ்சினையேறிக்
குதிகொள்வானரம்வருகனகயின்கொழுஞ்சுளைமந்திவாயக்கொடுத்தோம்பு
தகைமணப்பொழினிவந்துவிண்ணணிமுறறுயதீனிநகர்ககாம்பிலி
வதியும்விண்டிசன்மாவெனப்பெயரியமறையவன்றருமைந்தன். ௨௬௭

விளையும்பீட்கருவுமிழ்ந்தநாண்முதலிருவிழியிலான்பதினாருண்
டளவுமமையாவிருந்தவன்மனைமலவணமியத்திருவோததூர்ப்
பிளவுவெண்மதிவேணியார்த்தொழுதறுதிங்கண்மாதலம்பேணி
யிளிவருந்திறன்மூகைமைநீத்தெலாவேதமுமினிதோதி. ௨௬௮

புரிவளைக்குலம்வயிறுளைந்திடந்தொறும்பூசலிட்டரிதீனு
மெரிமணிக்குழைவநிலாத்தவழ்கம்பையினிருங்கரைத்தலைவைகிக்
கரியகண்டரைநினைந்தனன்மூன்றுநாட்கழறுதவமாற்றி
யுரியதன்னிருகண்களும்படலநீத்தொளிபெறும்பயன்பெற்றான். ௨௬௯

ஆகலாலவற்கினித்தோல்வியண்முறு
மேதகவவனேயேவிழைந்துதாங்கன
வோதிலேவிறையையுமும்பர்வேந்தையுங்
காதசார்கேண்மையிற்கலப்பித்தானரோ. ௩௧௦

உம்பலுமன்னதற்கிசைந்தொர்கூற்றினல்
வம்பவிழ்துழாய்த்தொடைமாலையூர்தியாய்
நம்பியக்காஞ்சியிற்றங்கிநண்ணிய
தம்பயிலவ்வரையத்தியோங்கலே. ௩௧௧

அன்னஆர்புலவன்மிக்கழுங்கமுற்றிய
வென்னதிவிலக்கநஞ்சுண்டவித்தகன்
றன்னருளாலரிசயனங்கொண்டதா
னன்னர்வெஃகாவெனநவிற்றுமாநகர். ௩௧௨

கடல்விடமூட்டிமெய்கதுவும்வெப்புநோய்
முடிமதியமிழ்தினன்முனிந்தநாதரை
நெடியவன்றொழுதெதிர்நின்றுவாழ்தரு
மிடமதுசந்திரகண்டமென்பதே. ௩௧௩

தோட்டலர்த்தாமரைச்சுடர்பொற்கோயிலாள்
கோட்டமிலாதிகழ்குறிப்பிற்றோன்றுமா
சேட்டொளிசுகவுத்துவந்திளைக்குமார்பினு
னீட்டொளிமணியுருத்தன்னையேத்தினள். ௩௧௪

திருமகள்குறிப்பினையறிந்துசெங்கண்மா
லிருணிறமேனியோடெய்தியிச்சேயிதழ்
மருமலர்த்தாமரைகுற்றுவார்சடை
நிருமலன்பூசனைநிகழ்த்திநாடொறும். ௩௧௫

ஈண்டியவிருடபவெறிக்கும்பேரொளி
மாண்டசெம்மணித்துவர்வண்ணனுநியங்
நீண்டமால்வைகியநிலயமன்பர்கரு
வேண்டியதருளும்வீராசனத்தளி. ௩௧௬

வயமலியனையனைவணக்கும்போர்த்திறத்
துயர்புருவன்மனென்றுரைக்குமன்னவ
னியம்வலைஞமலிமற்றெவையுஞ்சூழ்வரச்
சயமலீவேட்டையின்மூயன்றுசார்குவான். ௩௧௭

மாதவநிரம்பியமரீசிமாமுனி
மேதகுமாச்சிரமத்தின்மேவியங்
கேதமொன்றின்றியின்புற்றுவைகிய
தீதருவிலங்கெலாமலைத்தல்செய்தனன். ௩௧௮

உடலெலாம்விதிர்ப்பநெட்டுயிர்ப்புவீங்கமிக்
கிடருழந்தங்கவையிரியநோக்கிய
நடலைதீர்முனிவரனலியச்சாபமொன்
றடலரிக்குருளையாகென்றிட்டனன். ௩௧௯

வெருவியுள்ளழுங்கியவ்வேந்தன்வெய்தென
விருமலர்ச்சேவடியிறைஞ்சியென்பிழை
பொருவருதவத்தினைப்பொறுத்தல்வேண்டுமென்
றருள்வரவிரத்தலுமறவன்கூறுவான். ௧௨0

ஏற்றபோர்ப்பார்த்திவரெறுழுமானமுங்
காற்றுவேற்பலைப்புயக்காவன்மன்னவ
போற்றுவீராசனவரைப்பிற்போந்திடி
னாற்றல்சால்சாபம்விட்டகலுமென்றனன். ௧௨௧

அற்றைஞான்றேயரிக்குருளையாகிமுன்
பற்றியவுணர்வெலாம்பாறிச்செந்தழன்
முற்றியதெனப்பசிமுருக்கநொந்துபால்
பெற்றுருதெங்கணும்பெயர்ந்துசுற்றுபு. ௧௨௨

அண்ணலந்துணையெறுழாணினோடரிப்
பெண்ணெதிர்நோக்கியுட்பெருகுகாதலா
லுண்ணியவெனமுலையுதவவுண்டெறுழ்
நண்ணிவார்கடற்கரைசரிக்குநாளினில். ௧௨௩

மல்லல்வீராசனவரைப்பின்மாயவ
னெல்லுமிழ்சேவடியிறைஞ்சும்பத்திமை
வல்லவனொருவன்வந்தெய்தக்காண்டலுங்
கொல்லியவெழுந்ததக்குருளைச்சிங்கமே. ௧௨௪

விதிர்த்திலனாகிவீராசனத்தனை
மதித்தருந்துதிபலவழுத்திநின்றனன்
றுதித்தமையிருசெவித்துளைசென்றேறலுங்
கதித்தெழுஞ்சிங்கநற்கருத்துமேவுபு. ௧௨௫

அன்பனையடிபணிந்திறைஞ்சிமேல்கொடு
தன்பில்வீராசனைச்சூழலெய்தியங்
கின்புறமாயனைவழிபட்டீட்டிய
தன்பெருஞ்சாபநோய்தவிர்ந்துவாழ்ந்தனன் ௧௨௬

அன்னணமடங்கலாயிருந்தவாற்றினாற்
பன்னுசிங்கோதரபவனென்றோர்பெயர்
மன்னினனப்புருவன்மவனென்பவ
னெங்கிலத்தவர்களுமெடுத்தியம்பவே. ௧௨௭

புத்தமிழ்தெடுத்துணப்புலவர்தம்மொடும்
பைத்தபாம்பிமிழ்கொளீஇப்பாரமந்தர
மத்தினாற்கடைந்தநாள்வார்ந்தபாற்கடன்
மொய்தெழுதிரைமிசைமுகிழ்த்தபூமகள். ௧௨௮

எதிர்நயப்பார்வைபீத்தருளவிர்ந்துழாய்க்
கதிர்மணிமோலியான்காதனைக்களித்
ததிரிடைக்கொடியுடையவனைமன்றலின்
விதிமுறைபுணர்ந்தின்பமேவமுன்னினான். ௧௨௯

ஆங்கவடன்றுமெமரர்சூழ்வர
வீங்கியபெரும்புகழ்விண்டுமாபுரத்
தோங்கியவேகம்பதுற்றுக்கம்பனூர்
பூங்கழல்பணிந்தருள்போதப்பெற்றனன். ௧௧௦

கனைடிரற்றிரைநெடுங்கங்கையேமுதன்
மனைவியார்பலரொடும்வந்துநூன்முறை
புனைபுகழ்க்கடவிறைபுனிதப்பொற்பினிற்
றனைநிகர்திருமகடன்னையீந்திட. ௧௧௧

ஓரிருநாற்புறமொளிரவைகுபு
நீருடனேற்றவணிகழ்த்துநலவினை
சீரிதின்முடித்தனன்சிறந்தவவ்விடம்
பாரெலாம்புகழட்டபுயமெனப்படும். ௧௧௨

அற்றைநாட்காஞ்சியினரசுசெய்பவ
னொற்றையங்கவிகையாளுயர்ந்தசீர்த்தியான்
வெற்றிகொளரசரைவெற்றிகொண்டுசீர்
பற்றுதண்டாயினனென்னும்பார்த்திபன். ௧௧௩

திருமறுமார்பனங்கியற்றுஞ்சீர்மணக்
குருமணிப்பந்தரிற்கோணையாற்றினு
விருதிசைத்தலைவருமேனைத்தேவரு
மருவியகுழாத்திடைவந்துவைகினன். ௧௧௪

வழுக்கியஞ்சிறையளிமருங்குவீழ்தர
விழுக்கள்வார்கற்பகமிளிர்பொன்மாலையா
ரழுக்கறுநெஞ்சினனேககவவ்வயி
னொழுக்கறத்தென்றிசையும்பனேதுவான். ௧௧௫

மேவருகொற்றவவெய்யவேற்படைக்
காவலரவைக்களத்தலருசாமரு
தேவர்தமவைக்களஞ்சிவணமேலார்முறை
யாவதன்றெனவெதிரரசன்சொல்லுவான். ௧௧௬

கழியநூன்முறைதெரிகடவுளீர்நும
தழிவுறுதுறக்கநாட்டலதெவ்வூழியு
மொழிவிலாதோங்குமிக்காஞ்சியூர்வயி
னிழிவுயர்வெனும்பகுப்பில்லையில்லையே. ௧௧௭

வண்ணமாறைத்தனிமாவினீழல்வா
ழண்ணலார்திருவருளாணையாலிந்த
வொண்ணகர்க்காஞ்சியின்சாருமொப்பவ
ரெண்ணம்வேறிலையெனவெடுத்தியம்பினன். ௧௧௮

இணர்விரிகடுக்கைபராணையென்றலு
முணர்வின்மேம்படுசுரருரையொன்றுடலர்
மணமுடிகாறும்வைகுற்றுத்தத்தம
தணவரும்பதியினையண்மினாரரோ. ௧௧௯

பின்புதண்டாயினன்பெரிதுமந்தகன்
வன்புறமொழிந்தசொன்மனத்தையீர்தலுந்
துன்புன்மாதவந்தொடங்கியன்றுகொ
லின்புறுதிசைக்கிவரிறைவராயினர். ௧௪௦

மண்டியவருந்தவம்வழாமலாற்றியிங்
கெண்டிசையிறைமையுமெய்துவாமென
வண்டர்களழுக்கறுத்தவலங்கூர்தரத்
திண்டிறற்பெருந்தவமுறையிற்செய்தனன். ௧௪௧

மன்றல்செய்தருளியவரைப்பின்மாதவ
னன்றுமுன்னெதிரெழுந்தருளிநல்கலும்
வென்றிகொளெண்டிசையிறையுமேதக
வொன்றியவுலகமுழுழிற்காத்தனன். ௧௪௨

கலியுகத்தொருகாழறுவேதியன்
குலவுமாய்ச்சியரின்னலங்கூட்டுனு
முலகமுண்டவொளிமணிவண்ணனும்
கலகிலாதமெய்யன்பினனாயினன். ௧௪௩

கண்ணன்முன்பெவருங்களிப்பச்செயு
மெண்ணிலாவிளையாட்டுமெஞ்சாவகை
யுண்ணிணைந்துதியானிததுலகினி
னண்ணிச்செய்வினைநாளுமிகந்தனன். ௧௪௪

அன்னதன்மையறிந்தவன்ஞாதிய
ரென்னைநீபழுதாந்தொழிலேற்றனை
நன்னர்மானயனத்தெதிராடின்மெய்
யென்னலாமிஃதென்றுகிளந்தனர். ௧௪௫

நன்றவ்வாறுநடத்துவலகாண்மினோ
வென்றுவலவில்ராநதேர்தருமோருழிச
சென்றுவைகித்திருமறுமார்பனை
யொன்றுமன்பினுகந்துதியானித்தான். ௧௪௬

வெற்பெடுத்துவிழுநிரையோம்பிய
மற்பிறங்குதோண்மாயவனுங்கவ
னற்பகத்துமழவடிவாயுலாய்ப்
பொற்பவாடல்புரிந்தனனென்பவே. ௧௪௭

நோக்கிநோக்கிநுவலருவிம்மிதந்
தேக்கியெம்பெருமானமர்செப்பிய
வாக்கின்வண்ணமருள்வழங்காயெனக்
காக்குநாயகனுங்கட்டுரைக்குமால். ௧௪௮

கண்ணசன்மனெனும்பெயர்க்காளைநீ
நண்ணியிந்தக்கலிதனினுள்ளையெ
னண்ணன்மால்பிறப்பாமனன்றவர்க்கெலலாந்
தண்ணன்மென்மொழிசாற்றெனவேயினன். ௧௪௯

அருளிச்செய்தகறைந்தனனன்றுபோ
யிருள்புலர்ந்திடுங்காலையலலோர்களு
மருவுமோகையராய்மணிக்கம்பையி
னுருவவார்கரையுற்றுமிடைந்தனர். ௩௫௦

அஞ்சனக்களிறட்டவன்றோன்றியங்
கெஞ்சுறுதுமுன்னுடலெலாஞ்செய
விஞ்சுமன்பினராய்மிடைந்தாரெலாங்
கஞ்சநேரடிகைதொழுதுய்ந்தனர். ௩௫௧

பத்திசெய்தபனவனிரத்தலுங்
கைத்தலத்துக்கமழ்புதுவெண்ணெயோ
டத்தனவ்வுழிவைகினனத்தளி
யெத்திறத்தருமேத்துகாளாங்கமே ௩௫௨

உவரிசூழுலகத்தவர்தாழ்ந்துதங்
கவலைதீருமக்காளாங்கமென்பது
துவர்நெடுஞ்சடையாரடித்தொண்டுசெய்
பவளவண்ணன்பொற்கோயிலின்பாலதே. ௩௫௩

வேறு.

ஊக்கியதொழிற்பயனென்றனந்தமா
வாக்குதல்குறித்துத்தனரியன்சொலும்
போக்கில்சீர்மொழிவழிப்போந்துபேரிசை
தேக்கியதிருமலிகாஞ்சித்தேத்தரோ. ௩௫௪

மாதர்வண்வேள்விசெய்மாவலிப்பெயர்
பேதகைபளித்தமண்விழைந்தளந்தரி
காதலின்வைகுமக்காமருந்தளி
தீதறுத்தருடிரிவிக்கிரமமே. ௩௫௫

தமர்கொலைப்படுதலிற்சமர்செய்யேனென
வமரியதனஞ்சயனவிர்பொற்பாடகக்
கமழ்மலரடித்துணைகமலக்கையினு
லிமிழுறப்பற்றிவீழ்ந்தாற்றியேங்கலும். ௩௫௬

குருவெனவாய்ந்தவன்குழைதராதமா
புரியநூலொன்றுசெய்துரைத்துப்புந்தியிற்
றெருள்கொளீஇமாயவன்சிவனுமதத்தளி
பெருண்மசேர்பாடகப்பெயரினேய்குமால். ௩௫௭

மாதவனுலிருவரைப்புமோதினு
மோதுநாலெழுதளிகளினென்றுயினுங்
காதலின்வணங்கியக்காஞ்சிவாழ்பவர்க்
கீதுகோல்பயனெனயாரளப்பவர். ௩௫௮

எத்தலவரைப்பினுமீட்டுதீவினை
மைத்தவார்கடலெனவளைந்ததாயினு
மத்தகுகாஞ்சியையண்மிவைகுறிற்
றொத்தழற்பஞ்சியிற்றுனையவீயுமே. ௩௫௯

